நோபல் பரிசு பெற்ற

# நில வளம்

நார்வே நாவல்




மூல ஆசிரியர் :
நட்ஹாம்ஸன்

மொழிபெயர்ப்பு :
க. நா. சுப்ரமண்யம் B.A.



வெளியிட்டோர் :
**தமிழ்ச் சுடர் நிலையம்**
**சென்னை-5.**

விற்பனை உரிமை :
**பாரி நிலையம்**
**சென்னை-1.**

 1955 [6—[illegible]

முதற் பதிப்பு 1—1—1955



## இறவாத புகழுடைய நூல்கள்

| தேசம் | பெயர் | | விலை |
|---|---|---|---|
| சீனா | சிங். பிங். மீ. | ... | அச்சில் |
| ருஷ்யா | அன்னாகரீனா | .. | 7 8 0 |
| ,, | புத்துயிர் | ... | 6 0 0 |
| ,, | (யாமா) பலிபீடம் | ... | 6 0 0 |
| ஜெர்மன் | துன்பக்கேணி | ... | 6 0 0 |
| அமெரிக்கா | அவமானச் சின்னம் | ... | 5. 0 0 |
| நார்வே | பசி | ... | 3 12 0 |
| இத்தாலி | அன்னை | ... | 3 12 0 |
| ஸ்வீடிஷ் | விரோதி | ... | 2 0 0 |
| பிரஞ்சு | ரத்த விடுதி | ... | 2 0 0 |
| ஸ்பானிஷ் & ஹங்கேரி | பெண் மனம் | ... | 2 0 0 |
| ஜப்பான் | உயிராசை | ... | 2 0 0 |
| ஜெர்மன் | விஷவித்து | ... | 2 0 0 |
| போலிஷ் & டேனிஷ் | இசைச் செல்வன் | ... | 2 0 0 |
| அரபு | 1001 இரவுகள் | ... | 3 0 0 |
| டட்ரா | பிரிவு | ... | 2 0 0 |
| வங்கம் | பாரதி | .. | 6 0 0 |
| ,, | தாயும் மகளும் | .. | 2 0 0 |
| மராத்தி | பிரயாணி | ... | அச்சில் |
| கன்னடம் | ஸந்தியாராகம் | ... | அச்சில் |
| தமிழ் நாவல் | யுவதி | ... | 3 8 0 |
| சரித்திரம் | கலிங்கத்துப்பரணி | .. | 3 0 0 |
| ,, | நந்திக்கலம்பகம் | .. | 3 0 0 |
| ,, | தஞ்சை வாணன் கோவை | ... | 3 0 0 |
| ,, | யசோதர காவ்யம் | ... | 3 0 0 |
| ,, | மனு நீதி | ... | 6 0 0 |

**விலை ரூபாய் ஆறு**

மாருதி பிரஸ், இராயப்பேட்டை, சென்னை-14.

# இறவாத புகழுடைய நூல்கள்.

நோபல் பரிசு பெற்ற நிலவளம் என்ற நார்வே நாவல் உலகத்திலேயே ஒப்பற்றது.

எட்டு வருஷங்களாக இதை வெளியிட முயற்சி செய்தேன். பல ஆசிரியர்கள் மொழி பெயர்த்துத் தருவதாகச் சொல்லி மூல பாஷைப் பிரதியை வாங்கிச் சென்றுர்கள். பத்து பிரதிகளுக்குமேல் நஷ்டமாகியது. காவியமயமாக, வசன ரூபத்தில் அமைந்துள்ள நில வளத்தைச் சுவை குன்ருது தமிழாக்க மேற் சொன்ன பலரும் தயங்கினர்கள். எனது நண்பரும், பிரபல எழுத்தாளரும் பிறநாட்டு அறிஞர்கள் நூல்களை மொழிபெயர்த்துப் புகழ் பெற்றவருமான உயர்திரு க. நா. சுப்ரமண்யத்திடம் எனது ஆவலைச் சொன்னேன். அவரும் மனமுவந்து ஒரே மாதத்தில் அப்பட்டமாகவும் இலக்கிய மெருகுடனும் மொழி பெயர்த்துத் தந்தார்கள். மூல ஆசிரியரைப் பற்றியோ மொழி பெயர்ப்பின் சிறப்பைப் பற்றியோ, நில வளம் என்ற நாவலைப் பற்றியோ, பேராசிரியர் ரா. ஸ்ரீ. தேசிகரும் உலகை வலமிடும் திரு. சோமலெ அவர்களும் அடுத்த பக்கங்களில் மிகைபடாமற் கூறியுள்ளார்கள். ரஸிகர்களுக்கு அதைவிட அதிகம் அறிமுகம் தேவை இல்லை என்று எண்ணுகிறேன். இறவாத புகழுடைய நூல்களின் வரிசையில் நில வளத்தையும் அன்னா என்கிற சர்வதேசப் புகழ் பெற்ற இத்தாலிய நாவலையும் (இதுவும் நோபல் பரிசு) 1955-ம் ஆண்டு ஜனவரி 1-ல் தமிழ் ரஸிகர்களுக்கு சமர்ப்பிக்கிறேன். ரஸிகர்கள் ஆதரவு உண்டாயின் இது போன்று பல நூல்களை வெளியிடுவேன். தமிழன்னைக்கு நவநவமான அணிகளைச் சாத்தி, அழகு செய்து பார்ப்பதில் பேரார்வம் கொண்டவரும் அன்னை,— நிலவளம் நூல்களைப் புத்தக வடிவாக்கத் தக்க உதவி செய்தவருமான பாரி செல்லப்பா அவர்களையும், பொறுமையோடு அச்சடித்துத் தந்த மாருதி விநாயகத்தையும், ஆசிரியர் ஊதியம்மாத்திரம் பெரிதல்ல நல்ல நாவல் வெளிவர வேண்டும் என்ற ஒரே நோக்கோடு மொழிபெயர்த்து உதவிய க. நா. சு. அவர்கள்பாலும் விமர்சனப் புலவர் ரா. ஸ்ரீ. தேசிகர், ரஸிகமணி, சோமலெ போன்ற பெரியோர்களின் முகவுரை, புகழுரைக்காகவும், என்னுடைய இதய பூர்வமான நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

1—1—1955
சென்னை-5.

அ. கி. கோபாலன்

# விமர்சனப் புலவர்
## பேராசிரியர் ரா. ஸ்ரீ. தேசிகர் M. A.
## அவர்கள் முன்னுரை

சிறு கதை எழுதுவதில் ஒரு பழுத்த அனுபவம் நமக்குக் கிடைத்திருக்கிறது என்பதில் யாதொரு ஐயமுமில்லை. ஆனால் நம்மிடையே பல நாவல்கள் தோன்றினாலும், சிற்சில நாவல்களைத் தவிர அவைகள் ஒரு தக்க உருவம் அமையக் காண்கிலோம். அவைகள் காட்டாறுபோலச் சென்றுகொண்டே இருக்கின்றன; அவைகளாக ஓய்ந்தாலே ஒழிய, வேறு கதி அவைகளுக்கில்லை போலும். ஓர் ஆரம்பம், ஒரு நடுவு, ஒரு முடிவு முதலிய வரம்புகளை அவைகள் கடந்து நிற்கின்றன. பாத்திரங்களோ, பாத்திரங்களின் இயல்பைக் காட்டக்கூடிய கதை அமைப்போ, நிகழ்ச்சிகள் பிறக்கின்ற சூழ்நிலையையோ இவைகள் யாவையும் எழுப்பக்கூடிய உரை நடையோ அமையாததுபற்றி நாம் சற்றுத் துயர் அடையாமலிருக்க முடியாது. பெரும்பாலும் நம்முடைய நாவல்கள் சம்பவங்களையே குறிக்கின்றன. இதற்குக் காரணம் நாவல்களைப் பற்றித் தக்க விமர்சனம் இல்லாததே.

ஆனால் இப்பொழுது இந்தத் துறையில் பாடுபடுகின்றவர்களின் முயற்சிகள் வீணாய்ப் போய்விடுமா?—போகா ஒவ்வொரு அம்சம் ஓரோரிடத்தில் காண்கின்றோம். நாவல்கள் பூர்ண நிலையை அடைய நீண்ட காலமாகும். அதற்காக மனச்சோர்வு அடைய வேண்டியதில்லை. தமிழ் இலக்கியம் முன்னேறிக் கொண்டுதான் இருக்கின்றது. இத்தனை நாவல்களும் இனி அமையப்போகும் அழியா நாவல்களுக்கு முதல்தரமான உரமாகும் என்று சொன்னால் மிகை ஆகாது.

மேற்றிசை நாடுகளில் சிறந்த நாவலாசிரியர்கள் எப்படி நாவல்களை அமைத்திருக்கிறார்கள் என்பதை நாம் ஆராய வேண்டியது முக்கியமாகும். ஆங்கிலம் தெரியாத தமிழ் ஆசிரியர்களுக்கு இத்தகைய இலக்கிய விருந்தை அமைக்க முன்வந்திருக்கிற சுடர் நிலையத்துப் பதிப்பாசிரியர் திரு. அ. கி. கோபால ஐயரின் பெருமுயற்சி மிகவும் போற்றத் தகுந்தது. டால்ஸ்டாய் போன்ற இலக்கியச் சிற்பிகள் எழுப்பிய படைப்புக்களின் வனப்பைப் பருகும்படி செய்திருக்கிறார். பல ஆண்டுகளாக இலக்கியத் துறையில் உழைத்து வருகிற திரு. க. நா. சுப்ரமண்யம் அவர்களைக் கொண்டு நட்ஹாம்ஸன் எழுதிய 'நில வளம்' 'The growth of the soil' என்ற நாவலை தமிழாக்கித் தமிழ் உலகத்திற்கு

அளித்திருக்கிறார். தமிழகம் அதை மிகுந்த மகிழ்ச்சியுடன் ஏற்கும் என்பதில் சந்தேகமில்லை.

ஷாவுக்கு வழிகாட்டியாய்த் திகழ்ந்த இப்சனை ஈன்ற நார்வே நாடு பலநாவலாசிரியர்களையும், நாடக ஆசிரியர்களையும் அளிக்காமற் போகாது. இத்தகைய இலக்கியத் தொட்டிலிலேதான் நுட் ஹாம்ஸன் (Knut Hamsun) என்ற குழந்தை ஆகஸ்டு மாதம் 1859-ஆம் ஆண்டு பிறந்தது. அதுவும் கழனிகளில் வேரூன்றிய வாழ்க்கையைப் பின்பற்றுகிற குடியானவரின் மரபில் தோன்றியது. ஆங்கிலத்தில் இவர் யார் யார் என்ற நூலைத் தயாரித்துக் கொண்டிருக்கும்பொழுது தமக்கும் படிப்பில்லை என்ற தகவலை அந்நூல் நிலையத்தாருக்கு இவர் அறிவித்தாராம். ஆனால் தமது 19-ஆம் ஆண்டிலேயே ஒரு நீண்ட கவிதையையும், ஒரு நாவலையும் இவர் எழுதியதாகத் தெரிகின்றது.

பல துறைகளில் இவர் உத்தியோகம் பார்த்தார். பிள்ளைகளுக்குத் தனிப்படப் பாடங் கற்பித்தார். ஓரிடத்தில் குமாஸ்தாவாக இருந்ததையும் அறிகின்றோம். போஸ்டாபீஸில் இவர் ஒரு வேலைக்கும் அமர்ந்தார். ஆனால் உழவுத் தொழில்தான் இவருடைய உள்ளத்தைக் கவர்ந்தது. இதன் விளைவுதான் **நில வளம்** ஆகும்.

*'பசி' (Hunger) என்ற நாவலை இவர் எழுதி வெளியிட்டார். இது ஒரு நாவலேயானாலும் ஒரு நீண்ட சிறு கதைபோலக் காட்சி அளிக்கின்றது. பல்லாயிரக் கணக்கான நரம்புகளையுடைய வாழ்க்கை யாழில் 'பசி' என்ற ஒரே சுருதிதான் கேட்கின்றது. ஒரே சுருதிகேட்பதுதானே சிறுகதை இலக்கணமுமாகும். அத்தனை அழகாய்க் கதை அமைந்திருக்கிற ஒரு புதிய உரைநடையை இவர் வகுத்துக் கொண்டார். இவருடைய தனித்த மனப் பண்பைத் தாங்கி நிற்கிறது, பசி என்ற நாவல்.

1920-ஆம் ஆண்டு இவருக்கு நோபல் பரிசு அளிக்கப்பட்டது. 'உலகத் திரு உழவுக்கு வந்தனை செய்வீர்' என்ற ஒலிதான் இந் நாவலின் ஒவ்வொரு வரியிலுங் கேட்கின்றது. இந் நூல் பரல் பெர்க்கின் கற்பனையைத் தூண்டியிருக்கக் கூடும். அவருடைய 'நன்னிலம்' 'Good Earth' என்ற நாவலுக்கு இந் நூல் ஒரு பெரும் வித்தாயிருக்கலாம்.

ஸிக்ரிட் உண்செட் (Sigrid undset) எழுதிய கிரிஸ்டின் லவரன்ஸ் டாட்டர் (Kristin Lavransdather) என்ற நாவலை நாம் படித்தோமானால் நார்வேயின் விரிவான வாழ்க்கைச் சித்திரம் நம்முன் விரியக் காண்போம்; அங்குள்ள மலைகள், பனி, இருட்டு, குளிர், பேய்க் காற்று இவைகளினிடையே திரிகிற உணர்ச்சி நமக்கு வருகின்றது. நுட் ஹாம்ஸனின் நில வளமும் அத்தகைய உணர்ச்சியை அளிக்கக் கூடியதே.

---

*பசி. அச்சில்

ஆக்ஸெல் மீது பனிபடர்கின்ற காட்சி ஒன்று போதும் நார்வே நாட்டின் சூழ்நிலையை விளக்கிக் காட்ட.

இப்போது நேரமாகிக் கொண்டிருந்தது. இன்னும் நேரமாகிக் கொண்டே யிருந்தது. பனி மேலும் மேலும் பெய்துகொண் டிருந்தது. ஆக்ஸெல் மேலெல்லாம் பனி பெய்து மூடிவிடுகிற அளவுக்கு வந்துவிட்டது. பனிக்கு என்ன தெரியும்? அவன் முகத்தை எல்லாம் மூடுகிறது. முதலில் பனி உருகுகிறது பிறகு உருகாமல் அப்படியே நின்று விடுகின்றது முகம் ஜில்லிடுகிறது. ஹா! பனியா அது!

இந்தச் சூழ்நிலையில்தான் சம்பவங்கள் நிகழ்கின்றன. ஐஸக் என்பவன் வடக்கே செறிந்த காட்டுப் பிரதேசத்திற்குப் போகின்றான். தன்னந் தனியாய்க் காட்டைத் திருத்திக் கழனிக ளாக ஆக்க முயல்கின்றான். இடையருத—கண் துஞ்சாத அவன் பெரும் முயற்சிகளுக்குமுன் காடுகள் மறைகின்றன—கழனிகள் விரிகின்றன. சகாயத்திற்கு ஒரு பெண் வரமாட்டாளா? என்று எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறான். இங்கர் என்னும் ஒரு பெண் வருகின்றாள். ஐஸக்கிற்குத் தக்க துணை புரிகிறாள் இவளுக்கு அழகில்லை. உதடோ பிளந்த உதடு, ஐஸக்தான் அழகா? இல்லை, ஆனால் இவ்விருவர்களின் பேருழைப்பில் ஒரு தெய்வீக உணர்ச்சி தோன்றுகின்றது.

இங்கருக்குக் குழந்தைகள் பிறக்கின்றன. ஒருதரம் கர்ப்பமா யிருக்கிறபொழுது யாரோ ஒருவர் ஒரு முயலை அவளுக்குக் காண்பித்து விடுகின்றார். குழந்தை பிறக்கிறது—அதுவும் ஒரு பெண் குழந்தை பிறக்கிறது. அதற்கு உதடு பிளவுபட் டிருக்கிறது. அதைக் கொன்றுவிடுகிறாள். இது சர்க்காருக்குத் தெரிகின்றது. இவளுக்குச் சிறைவாசம் ஏற்படுகின்றது. ஐஸக் மீண்டும் தனியாய் உழைக்கின்றான். இவள் சிறையிலிருந்து வருகிறாள்—ஆனால் நகரத்து நாகரிகத்தோடு வருகின்றாள். பிளவு பட்ட உதட்டையும் தைய்த்து இவளை அனுப்பிவிடுகின்றனர். இங்கருக்கு நகரவாசனை அடிக்கடி தோன்றும் ஆனால் நாள் தேயத் தேய அதுவும் இறந்துகொண்டே வருகின்றது.

இவளுடைய மூத்தபையன் படிக்கிறான். இளையவனோ நிலத்தை நம்புகின்றான். இது இவனைக் கை விடுகிறதில்லை. மூத்தவன் படித்ததால் உருவாகவில்லை என்று அவன் தாய் பேசுகிறாள்.

“பாவம் எல்யூஸிஸ்! அவன் ஊதாரி, கையில் கிடைத்ததை எல்லாம் செலவிட்டு விட்டான். நிலத்தில் உழைத்துக்கொண்டு அப்பனுடன் இருந்திருந்தால் சரியாக இருந்திருக்கும். எழுதப் படிக்கக் கற்றுக்கொண்டு வீணாகிவிட்டான் அவன்.”

இவ் வரிகளில் ஆசிரியர் அபிப்பிராயம் தோன்றுமல் இல்லை. இங்கர் பல தவறுகள் செய்கின்றுள். ஆனல் வாழ்க்கையின் அத்தனை அபஸ்வரங்களும் நில மங்கை எழுப்பும் அமர கீதத்தில் மாய்ந்து விடுகின்றன. இந்தச் சுருதியில் கதை சொல்லுகின்றது.

இதில் அநேக ரஸங்களைக் காண்கின்றோம். அச்சம், சீற்றம், அன்பு, வியப்பு முதலிய உணர்ச்சிகளுக்கு ஆசிரியர் தக்க உருக் கொடுக்கின்றுர். இவர் மனித உள்ளத்தில் புகுந்து அதன் ஆழத்தைத் துருவிப் பார்க்கின்றுர். அந்த இதய குகையி லுள்ள மூலை முடுக்கெல்லாம் தேடி உற்று நோக்குகின்றுர். உதாரணமாக, இங்கர் கிராமத்திலிருந்து ஒரு மாட்டைப் பண்ணைக்கு ஓட்டிக்கொண்டு வருகின்றுள். இதைத் திருடி வந்தாளா இவள் என்ற எண்ணம் ஐஸக் மனத்தில் ஓடுகின்றது. இவன் ஒரு குதிரையைக் கொண்டுவருகின்றுன். இவள் மனத்தில் தன் கணவன் அதைத் திருடிவந்தாரோ என்ற சிந்தனை எழுகின்றது. இவர்கள் மனத்தகத்தே ஓடுகின்ற ஓட்டங்கள் குறுக்கோட்டங்கள். உணர்ச்சிப் புயல்கள், எல்லாம் செஞ்சொற் களில் சிறைசெய்யப்படுகின்றன.

குழந்தை உள்ளங்களை நன்கறிகின்றுர். கலியாணமாகாது குழைந்தைகளைப் பெற்ற தாய்மார்களிடம் இவருடைய பரிவும், அன்பும், அனுதாபமும் விரைகின்றன.

கண்களில் நீர் மல்கும்படி சோகச் சித்திரங்களை வரைகின்றுர். இங்கர் சவக்குழியின் பக்கத்தில் நிற்கும் காட்சி நம் மனதைவிட்டு அகலுமோ? ஒலைன் அந்தக் குழந்தையின் சவக்குழியை எது மட்டும் தோண்டியிருக்கிறுள் என்று பார்க்கவந்தாள் இங்கர். ஆடு மாடுகள் மேய்ந்துவிட்டு இன்னும் திரும்பவில்லை. அந்தப் பாதை வழியேதான் வரவேண்டும். அவை வருகிற வரையில் அங்கேயே உட்கார்ந்திருக்கிறுள். அழுதுகொண்டே உட்கார்ந் திருக்கிறுள். கண்களைத் துடைத்துக்கொண்டு சிலுவையைப் பார்க்கிறுள்; பூமியைப் பார்க்கிறுள்; அழுகிறுள். உட்கார்ந் திருக்கிறுள். எழில் நிரம்பிய இயற்கைமடியில் துயில்வோர்களுக்குத் தானே ஆண்டவன் அருள் நோக்கும் கிடைக்கின்றது என்ற கொள்கையில் ஹாம்ஸன் திடநம்பிக்கை உள்ளவர். இயற்கையைத் தொழுவதால் மனிதன் தூய்மை அடைகின்றுன் என்ற தத்து வத்தைப் பல இடங்களில் அமைத்துக் காட்டுகின்றுர். இதில்வரும் பாத்திரங்கள் இயற்கைக் காட்சிகளில் இறைவன் உருவத்தைக் காண்கின்றனர்; அவர்களுக்கு இயற்கை ஒலிகளில் ஆண்டவன் அமரகீதம் கேட்கின்றது.

'ஒவ்வொரு வருஷமும்' வசந்தத்திலும், இலையுதிர் காலத் திலும் சாம்பல் நிற வாத்துக்கள் ஸெல்லன்ராவைத் தாண்டிக் கூட்டமாகப் பறந்து செல்லும். அதிருஷ்டகரமான சகுனம் அது.

வானத்திலே ஒன்றோடொன்று பேசிக்கொண்டுபோகிற அழகான காட்சி ஜன்னிவந்தவன் குரல்போல இருக்கும். அந்த இணையற்ற காக்ஷியை உலகமே ஸ்தம்பித்து நின்று அவை தாண்டிப்போகட்டும் என்று பார்ப்பதுபோல இருக்கும். கீழே நின்று அண்ணாந்து அவற்றைப் பார்த்து அவற்றின் சப்தத்தைக் கேட்கிற மனிதர்களைப் பலஹீனம் பிடித்துக்கொள்ளும். நாலு பெருமூச்சு விட்டு விட்டுத்தான் அவர்கள் மீண்டும் வேலை தொடங்குவார்கள். எட்டாத ஒரு விஷயத்தை யாரோ அவர்களுக்கு விரும்பிச் சொல்ல முன் வந்ததுபோல இருந்தது—வானத்திலிருந்து யாரோ அவர்களுடன் தனிமையில் பேசிவிட்டார்கள். எல்லா சமயங்களிலும் அவர்களைச் சுற்றி ஏராளமான விஷயங்கள் ஆச்சரியகரமாக இருந்தன. கவனிப்பதற்கு மாரிக்காலத்திலே நக்ஷத்திரங்கள் இருந்தன. வடக்குத் தீவுகள் இருந்தன. கடவுளின் வாசஸ்தலத்திலே எதுவோ பற்றித் திகு திகு வென்று பளிச்சிட்டு எரிவது போலிருந்தது. 'அது அடிக்கடி நேராது. அதேபோல இடி சப்தம் கேட்கும் சிலசமயம். சாதாரணமாக இலையுதிர் காலத்தில் மனிதனுக்கும், மிருகத்திற்கும் அந்த சப்தத்தில் குலை நடுங்கும். கடவுளின் குரல் அது. மிருகங்கள் ஒன்றோடொன்று ஒட்டிக் கொண்டு நெருக்கி அடித்துக் கொண்டு நிற்கும் பயந்து போய். தலை தொங்க அவை ஏன் அப்படி நிற்கின்றன? அவை எதிர்பார்ப்பதுதான் என்ன? முடிவு நெருங்கிவிட்டது என்று காத்திருக்கின்றனவா? இடிக் குரல் கேட்டவுடன் மனிதனும் எதை எதிர் பார்க்கிறான்? எதற்காகவோ காத்திருப்பது போன்ற உணர்ச்சி அவனுக்கு ஏற்படுகிறது என்பது உண்மைதானே?'

பூமியின் குடலைக் கிழித்து அங்குள்ள உலோகங்களை எடுத்தவர் அழிந்தனர். உழுதுண்டு வாழ்வோர் உயர்ந்தனர் என்ற கருத்தை ஆசிரியர் அமைத்துக் காட்டியிருக்கிறார். இயற்கையோடு ஒட்டி வாழத் தெரியாதவர்களே அழிவார்கள்.

"இயற்கையோடு ஒட்டி வாழத் தெரியாதவர்களுக்கு, வேகம் வேகம், வேகம். எதற்கெடுத்தாலும் வேகந்தான்! என்ன அவசரமோ இது! வாழ்க்கையை அனுபவிக்கத் தெரியாதவர்கள் வாழ்க்கையைப்பற்றிக் கசந்துகொண்டு என்ன லாபம். இவர்களை இயற்கை நசுக்கி விடுகின்றது. குடியானவ ஐஸக்கிடம் ஹாம்ஸன் ஒரு லட்சிய புருஷனைக் காண்கின்றார்."

'உடல், உள்ளம் எல்லாம் நிலத்தில்தான் அவனுக்கு. நிலத்தில் இடைவிடாது உழைப்பவன் அவன். பழமையின் சின்னம் அவன். எதிர்காலத்து ஒரு ஆதர்சபுருஷன். அங்கு நிலம் வளம் பெறத் தொடங்கிய காலத்துக்கு முந்திய காலத்தவன். அந்த நிலவளத்துக்குக் காரணபூதமானவன் அவன்தான். காட்டிலே வந்து தங்கியவன் அவன். இன்று நேற்றைய மனிதன் அல்ல. தொள்ளாயிரம் வருஷங்களுக்கு முற்பட்டவன். ஆனால் இன்று உயிருள்ள மனிதனே அவன்.'

இவ்வரிகளில் கதையின் பூரண நாதம் ஒலிக்கக் கேட்கின்றோம்.

நாவலின் இறுதி நம் சிந்தையைக் கொள்ளை கொள்ளாமற் போகாது. "க்ணிங்...க்ணிங்" என்று மலைச்சரிவிலிருந்து மாட்டு மணிகள் சப்திக்கின்றன. சப்தம் அருகில் நெருங்குகிறது. மாடுகள் வீடு திரும்பிக்கொண்டிருக்கின்றன. பதினைந்து மாடுகள் நாற்பத்தைந்து ஆடுகள் மற்றும் செம்மறியாடுகள் முதலியன. அறுபது எழுபது பிராணிகள். பால் கறக்கப் பெண்கள் வாளிகளுடன் வருகிறார்கள். லெபல்டின், ஜென்ஸின், ரிபெக்கா மூவரும் காலில் எதுவும் அணியவில்லை. மார்க்கரேவின் மனைவி இங்கர், அவர்களுடன் வரவில்லை. அவள் சமைத்துக்கொண்டிருக்கிறாள். உயரமாகவும் கம்பீரமாகவும் இருக்கிறாள் அவள். அவள் வீடு அது. கடவுளின் கன்னி அவள். இங்கர் வாழ்க்கையில் புயல் வீசியது; சில்நாள் அவள் நகரத்தில் இருந்து நாகரிகமடைந்தாள். உண்மை தான். ஆனால் இப்பொழுது அவள் தன் வீட்டிலிருக்கிறாள். உலகம் பறந்து கிடக்கிறது. அதில் எவ்வளவோ சிறு சிறு புள்ளிகள். இங்கர் அந்தப் புள்ளிகளில் ஒன்று. உலகிலே அவள் ஒரு புள்ளி.

மாலை வருகிறது. இருட்டுகிறது. இந்தத் தமிழ்மொழி பெயர்ப்பைப் படிக்குந்தோறும் மூலத்தைப் படிக்கிற உணர்ச்சி நம் மனத்தகத்தே பாய்கின்றது. திரு. க. நா. சுப்பிரமண்யம் அவர்கள் வழங்கிய இம்மொழி பெயர்ப்பைத் தமிழ் உலகம் இன்புற்றுப் படிக்கும் என்பதில் யாதொரு ஐயமுமில்லை.

திருவள்ளுவர் 'உழவன்' சிறப்பைப்பற்றிக் கூறினார். நிலத்தின்மீது உட்கார்ந்துகொண்டு வறுமையைப்பற்றிப் பேசுகிற அறிவில்லாதவனைக் கண்டு நிலத்தாய் எள்ளி நகைப்பள் என்றும் சொன்னார்.

> 'உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார் மற்றெல்லாம்
> தொழுதுண்டு பின் செல்வர்'

இவர் தூவிய விதை 'உழவன் முருகன்' 'மண்ணாசை' என்ற நூல்களில் சற்று முளைகண்டது. ஆனால் அந்நிய நாட்டில் தான் அது பூத்துக் காய்த்துப் பழமாய்த் திகழ்ந்தது. அத்தகைய பாக்கியம் நம் நாடு புரியவில்லை என்ற ஏக்கம் மனத்தின்மீது படர்ந்தது. ஆம், நில வளம் எந்த இலக்கிய தோட்டத்தில் அது பழுத்தால்தான என்ன? அதை நுகரும்படியான பேறு கிடைத்த வரையில் நான் மகிழ்ச்சி அடைகின்றேன்.

திருவல்லிக்கேணி,
3—12—'54.

ரா. ஸ்ரீ. தேசிகன்.

# உலகம் சுற்றிய தமிழறிஞர்
# சோம. லெக்ஷ்மணன் செட்டியார்
## அவர்கள் புகழுரை

இந்த நூற்றுண்டில் நார்வேயில் தலைசிறந்த எழுத்தாளராக விளங்கியவர் நட் பெடர்சன்; அவருடைய புனை பெயர் நட் ஹாம்சன்.

நட் ஹாம்சன் குடியானவரின் மகன்; அமெரிக்காவில் குற்றேவல் புரிந்தவர்; அமெரிக்கரின் பொருளாசையைத் தாக்கிச் சொற்பொழிவு செய்து புகழ் பெற்றவர்; இரண்டாவது உலகப் போரில் ஜெர்மனிக்கு ஆதரவாகப் பிரசாரம் செய்தவர்.

மனித இயல்பை ஆராய்வதில் நட் ஹாம்சன் ஈடு இணை யற்றவர்; நீளமான சிறு கதைகள் எழுதும் பேராற்றல் படைத்தவர். இவர் பண்ணை வாழ்க்கையைச் சிறப்பித்து 'நில வளம்' என்ற நூலை 1917-ல் எழுதினர்; இந் நூலுக்கு 1920-ல் நோபல் பரிசு வழங்கப்பெற்றது.

'நில வளம்' உலகப் புகழ் வாய்ந்தது. பண்ணை வாழ்க்கையை அடிப்படையாகக் கொண்டு வெளியான நூல்களுக்கு ஆதாரமாக இருப்பது இந்த நாவல்தான். இத்தகைய ஓர் இலக்கியம், நோபல் பரிசு பெற்று 35 ஆண்டுகள் வரை, தமிழில் வெளிவராம லிருந்திருக்கிறது என்பதை அறிந்தபோது வருந்தினேன். இன்று இந்த அறிவுக் களஞ்சியம் தமிழ் மக்களுக்குக் கிடைப்பதை அறிந்து என் மனம் அமைதி அடைகிறது.

நிலவளத்தில் வீண் ஆரவாரம் இல்லை. நார்வேயிலும் ஸ்வீடனிலும் பண்ணை வாழ்க்கை பெருகியிருக்கிறது. அதைத் தெரிவிப்பதே நட் ஹம்சனின் நோக்கம். தொடக்கத்திலேயே அவர், நம்மைப் பண்ணையில் கொண்டுபோய் நிறுத்துகிறர்.

மனித சஞ்சாரம் இல்லாத ஒரு காடு. அங்கே போய் ஒரு தனி மனிதன் தன் வாழ்க்கையைத் தொடங்குகிறன். இன்னல்களை அவன் ஒரு சிறிதும் பொருட்படுத்தவில்லை. வருங்காலத்தில் அவனுக்கு அளவுகடந்த நம்பிக்கை இருக்கிறது. சில ஆண்டுகள் பாடுபடுகிறன். நிலத்தைப் பண்படுத்துகிறன். மழையும் உரியகாலத்தில் பெய்து அவனுக்கு உதவுகிறது. பயன் அடைகிறன். அதன் விளைவாக, நிலத்தைச் சொந்தமாக்கிக் கொள்ளுகிறன். பிறகு குடிசை கட்டுகிறன். குடிசையிலிருந்து சிறிய வீடு. பின்னர், பெரிய வீடு, லாயம், மாட்டுக் கொட்டில்,

களஞ்சியம், களம்—எல்லாம் படிப்படியாக அமைத்து விடுகிறான்; குடும்ப வாழ்க்கையையும் மேற்கொள்கிறான். குழந்தைகளுக்கும் குறைவில்லை. ஆடு, பசு, குதிரை, வண்டி—இப்படி வாழ்க்கை சீரும் சிறப்புமாக இருக்கிறது.

காலம் மாறுகிறது. மழையின்மையால் அவர்கள் துயரப்படுகின்றனர். காட்டெலி களஞ்சியத்தில் புகுந்து தின்று தீர்த்து விடுகிறது. கணவனுக்குத் தெரியாமல் பிள்ளை பெற்று அதைக் கொலை செய்ததால், மனைவி பல ஆண்டு சிறைத் தண்டனை பெறுகிறாள், சிறையில் அவள் எழுதவும் படிக்கவும், நூற்கவும் நெய்யவும், சாயந் தோய்க்கவும், துணி வெட்டவும் கற்றுக் கொள்கிறாள்; பிளவுபட்ட தன் உதடை ஆப்பரேஷன் செய்து கொள்கிறாள்.

ஐந்து ஆண்டுகளில் விடுதலை பெறுகிறாள். மீண்டும் பண்ணை வாழ்வு. சீரும் செழிப்பும், மாவு மில்லும், மரம் அறுக்கும் இயந்திரமும் அங்கு நிறுவப்பட்டுவிட்டன. ஆனால், நகர வாழ்வில் ருசி கண்டவள் சும்மா இருப்பாளா? தந்தி மரம் நடுவதற்கு வந்த கூலி ஆட்களுடன் குடிக்கிறாள்; ஆடுகிறாள்; கணவனின் பணத்தைத் திருடுகிறாள்.

மீண்டும் மாறுதல். ஆனால் பண்ணை வாழ்க்கை தடைப்படவில்லை. அவர்கள் வாய்க்கால் வெட்டி நீர் பாய்ச்சுகிறார்கள். அறுவடை செய்யும் இயந்திரம் வாங்குகிறார்கள். பண்ணை வேலையில் அவர்களுக்கு நிகர் யாருமில்லை என்று அந்த மாவட்டம் எங்கும் அவர்கள் புகழ் பரவிவிட்டது. அவர்கள் இகழ்ச்சியால் மனம் கலங்கவில்லை; புகழ்ச்சியால் ஏமாந்து விடவுமில்லை. தொடர்ந்து தங்கள் அலுவலைச் செய்கிறார்கள். ஒரு பட்டறை ஏற்படுத்திவிட்டார்கள். கொடுக்கிற தெய்வம் கூரையைக் கிழித்துக் கொண்டு கொடுக்கும் அல்லவா? மற்றொரு சிறு பட்டறை அவர்களுக்கு அன்பளிப்பாகக் கிடைக்கிறது. போரடிக்கும் இயந்திரத்தையும் ஒருவன் பரிசாகக் கொண்டுவந்து தருகிறான்.

அடுத்த பண்ணை, வீடு, நிலம், மாட்டுக் கொட்டில்கள், அங்குள்ள கடை—இவற்றையும் வாங்கி விடுகிறார்கள். இவ்வாறு படிப்படியாக வளர்ச்சியடைந்து அவர்கள் ஒரு 'மார்க்ரேவ்' (ஜமீந்தார்) குடும்பம் ஆகிவிடுகின்றனர். அதன் விளைவாக அவர்களது மூத்த மகன் பொன்னும் பொருளும் நிறைந்த அமெரிக்காவுக்குக் கப்பலேறுகிறான். "**கூத்தாட்டு அவைக் குழாத் தற்றே பெருஞ்செல்வம்**" என்ற குறள் கருத்துக்கு இலக்கியமாக அவர்கள் வாழ்க்கை இலங்குகிறது.

இந்த நிகழ்ச்சிகளை மிகச் சுவைபட, படிப்பவரின் ஆர்வம் குறையாமலும், மனம் உருகும்படியும் மிக அழகாக எழுதுகிறார். நட் ஹாம்சன். கிழங்கின் பயணையும் (56—7), கடிகாரத்தின்

தன்மையையும் (63), குழந்தைகளின் மன நிலையையும் (131, 134, 135, 179—180), ஒரு பெண் நல்ல ஆடை அணிந்திருப்பதைப் பார்த்தும் ஏனைய பெண்கள் பொறுமைப்படுவதையும் (173—4) இடையிடையே ஆசிரியர் நன்ருகத் தெரிவிக்கிருர். நகைச் சுவைக்குப் பஞ்சமில்லை. உவமைகளையும் எளிதாகக் கையாளுகிருர். துயரத்தில் இருக்கும் மனிதரின் உள்ளங்களையும் மிக நுட்பமாக ஆராய்ந்து நமக்குக் காட்டுகிருர். கிராம வாழ்க்கைக்கும் நகர நாகரிகத்துக்கும் உள்ள முரண்பாடு சுவை குன்ருமல் படம் பிடித்துக் காட்டப்படுகின்றன.

படித்த பெண்கள் குழந்தையைக் கொல்வதையும் அது பிரமாதமான விஷமமல்ல என்று கருதுவதையும் ஆசிரியர் சுட்டிக் காட்டுகிருர். திருமணமாவதற்கு முன்னர் குழந்தை பெறும் தாய் மாருக்குத் தண்டனை கொடுப்பதுப்பற்றிய மாறுபட்ட கருத்துக்களை ஆசிரியர் திரட்டித் தருகிருர். குற்றவாளிகளைத் தண்டிப்பதை விட அவர்களைச் சீர்திருத்தவே அரசியலார் முயல வேண்டு மென்று அவர் கருதுகிருர்.

ஒரே குற்றத்தை இருவர் செய்கின்றனர். ஒருத்தி எட்டு ஆண்டு தண்டனை அடைகிருள். மற்றவள் விடுதலை செய்யப் படுகிருள். வாழ்க்கையிலும் இதுபோன்ற நிகழ்ச்சிகளை அடிக்கடி காண்கின்ருேம்.

செப்புச் சுரங்கம் எதிர்பார்த்த பலன் தரவில்லை. மர்மா ஸிவெர்ட்டின் உயிலிலிருந்தும் மிகுதியாக ஒன்றும் கிடைக்கவில்லை. ஸ்டார்போர்க் கடையாலும் லாபமில்லை. ஐஸக்கின் குடும்பத்தை வாழவைத்தது நிலம்தான்.

இந்த நாவலில் வரும் பாத்திரங்கள் வாழ்க்கையில் நாம் காணும் சாதாரண மக்களே. ஒட்டுக்கேட்டு ஊர் முழுதும் மறை வான செய்திகளைப் பரப்பும் 'ஒலின்' போன்ற பாத்திரங்கள் நம் நாட்டிலும் இருக்கிருர்கள். என்னுடைய ஊரிலும் ஒலின் போன்ற ஒரு பாத்திரம் இருக்கிருர். மனித இயல்பு உலகெங்கும் ஒரே மாதிரிதான்.

அளவு கடந்த வர்ணனைகள் தமிழ் நாவல்களில் உள்ளன. சுவையும் விறுவிறுப்பும் நிறைந்த இந்த நாவலில் வர்ணனைகள் குறைவாகவும் செய்திகள் மிகுதியாகவும் இருப்பதை வரவேற் கிறேன்.

காதலன், காதலி, வில்லன் என்ற பாத்திரங்கள் இந்த நாவ லிலும் இடம் பெறுகின்றன. ஆனல், பால் உணர்ச்சியைவிட உழைப்பின் உயர்வுக்கே ஆசிரியர் சிறப்பிடம் கொடுத்திருக்கிருர். நாவல் ஆசிரியர் சிலர் தங்களுடைய பாத்திரங்களை மேலான குண முடையவர், கீழான குணமுடையவர் என்று பிரித்துவிடுகிருர்கள். பாத்திரங்களும் மனிதர்கள்தானே என்பதை அவர்கள் உணர்வ

தில்லை. குப்பையிலே குண்டுமணியும் சேற்றிலே செந்தாமரையும் இருப்பதுபோல, தாழ்ந்த குணமுடையவரிடமும் சில நல்ல குணங்கள் இல்லையா? இங்கர், கெய்ஸ்ஸலர் என்னும் பாத்திரங்களை வருணிக்கும்போது அவர்களுடைய நிறை குறைகள் இரண்டையும் நட் ஹாம்சன் குறிப்பிடுவது சிறப்பாகக் கவனிக்கத்தக்கது.

இதுபோன்ற சிறந்த நாவல்கள் தமிழிலும் வெளிவர வேண்டுமென்பது என் விருப்பம். இந்த நாவலில் உழைப்பு—இரக்கம்—பொறுமை — மதப்பற்று — அமைதி — சிந்தனைசக்தி இவற்றின் வடிவமாகக் காட்சி தரும் ஐஸக் போல, ஒவ்வொரு நாவலிலும் ஓரிரு பாத்திரங்களாவது நம் உள்ளத்தில் நிலையான இடம் பெற வேண்டும். நிலவளத்தில் வரும் பாத்திரங்கள் எல்லோரும் தமிழ் நாட்டில் இருப்பவர்களே. ஐஸக், இங்கர், எல்யூஸிஸ், ஸிவெர்ட், ஓலைன் என்ற பெயர்களைப் படிக்கும்போதுதான் ஏதோ வெளி நாட்டுக் கதை என்ற சிந்தனை எழுகிறது. வீட்டிலுள்ள பொருள்களை விற்றுத் தங்கத்தை எடுத்துக்கொண்டும் அமெரிக்காவுக்குச் செல்லும் எல்யூஸிஸ்போல பல்லாயிரக் கணக்கான தமிழர்கள் தங்களுடைய சொத்துக்களை விற்றுப் பணம் சேமித்து பர்மாவுக்கும் மலேயாவுக்கும் இலங்கைக்கும் சென்றிருக்கின்றனர்.

இத்தகைய பாத்திரங்களை—வாழ்வில் நாம் காணும் அன்பர்களை—வருங்காலத்திலாவது தமிழ் நாவல்களில் காண விழைகிறேன். நட்ஹாம்ஸன், சாமர்ஸட் மாகம்போல, நமது நாவலாசிரியர்களும் தாமும் ஒரு பாத்திரமாகி விடவேண்டும்.

இந்த நாவலின் ஆங்கில மொழிபெயர்ப்பை(Growith of the Soil: Knut Hamson) முன்னரே படித்திருக்கிறேன். இந்நூலின் தமிழாக்கம் மிக நன்றாக அமைந்திருக்கிறது என்று துணிந்து கூறுவேன். சரளமான நடையில் தங்குதடையின்றிக் கதையை மொழிபெயர்ப்பாளர் அழகாகச் சொல்லுகிறார். மூலத்தின் சுவை ஒரு சிறிதும் குன்றாது அப்படியே தமிழில் தந்திருக்கிறார் அன்பர் க. நா. சுப்பிரமணியம். ஓரங்க நாடகப் பாணியில் அமைந்திருக்கும் விறுவிறுப்பான நடை; நாவல் முழுவதையும் ஒரே மூச்சில் படிக்க என்னைத் தூண்டிற்று; உங்களையும் தூண்டும் என்பதில் தடையில்லை.

இந்நூலை வெளியிடும் தமிழ்ச் சுடர் நிலையத்தின் உரிமையாளர் திருவாளர் அ. கி. கோபாலன் உழைப்பால் உயர்ந்தவர். சிறந்த நாவல்களைத் தொடர்ந்து வெளியிட்டு வருபவர். டால்ஸ்டாயின் அன்னா கரீனா. புத்துயிர் போன்ற நூல்களைத் தமிழகத்துக்குத் தந்தவர். சர்வதேச நாவல்கள் பலவற்றை நமக்குக் கொடுத்தார். உலகப் புகழ்பெற்ற நாவல்கள் எல்லாவற்றையும் தமிழில் வெளியிடவேண்டுமென்ற பேராசைக்காரர். ஆயிரம் பக்கமுள்ள நூலாக இருந்தாலும் அஞ்சாமல் அச்சுக்குக் கொடுப்பவர், பெரிய நூல்

களை வெளியிடுவதற்கு எவ்வளவு துணிவும் நம்பிக்கையும் வேண்டுமென்பது புத்தக வெளியீட்டு அனுபவம் உடையவர்க்கே தெரியும், எனவே திரு. கோபாலனின் முயற்சி மிகவும் போற்றத்தகும். துணிவு உடையவர்கட்கே வாழ்வில் வெற்றி ஏற்படும்.

எத்தனையோ வகையான நூல்களைப் படிக்கிறோம். புதிய செய்திகளைத் தெரிந்து கொள்வதற்காக நாம் சில நூல்களைப் படிக்கிறோம். பரிட்சைக்காகச் சில நூல்களைப் படிப்பதுண்டு. பட்டம் பெறவோ, வேலை தேடவோ சில நூல்களைப் படித்தாகவேண்டும். ஆனால், மன உற்சாக மடைவதற்காக நாவல்களைப் படிக்கிறோம். அப்போது நாம் பெறுகின்ற இன்பம் தனிச் சிறப்புடையது. ஆகையால் நாவல் விற்பனை எப்போதும் எக்காலத்தும் மிகுதி. இல்லாவிட்டால் பின்வருமாறுபோன்ற செய்தி வழங்குமா?

விக்டர் ஹ்யூகோ என்ற பிரெஞ்சு நாவலாசிரியர் ஒரு புதிய நாவல் எழுதினர். அது வெளியானதும், அது எப்படி விற்பனையாகிறது என்பதை அறிய மிக்க ஆவலாக இருந்தார். ஆகையால் அந்த நாவலை வெளியிட்டவர்களுக்கு ஒரு கடிதம் எழுதினர். அதில் வேறு ஒன்றும் எழுதாமல், "?" என்று ஒரு கேள்விக்குறி மட்டும் போட்டிருந்தார், 'விற்பனை எப்படி?' என்ற பொருளில்.

பிரசுரகர்த்தர்கள். பதிலுக்கு ஒரு கடிதம் எழுதினர்கள். அதில் '!' என்பதாக ஓர் ஆச்சரியக்குறி மாத்திரம் இருந்தது. "ஆச்சரியமான விற்பனை" என்பது பொருள். இலக்கியப் பசி நிறைந்த தமிழ் மக்கள் இவ்வாறு தமிழ் நூல்களைவாங்கி ஆதரிக்க வேண்டும்.

"பிறநாட்டு நல்லறிஞர் சாத்திரங்கள் தமிழ்மொழியிற் பெயர்த்தல் வேண்டும்:
இறவாத புகழுடைய நூல்கள் தமிழ்மொழியில் இயற்றல் வேண்டும்"

என்ற பாரதியாரின் கனவை நனவாக்க முயலுவோரை ஊக்குவிப்பதற்கு இதுவே வழி.

சென்னை,
8—11—'54.

"சோமலெ"

# நில வளம்

## 1

கடல்களைத் தாண்டி காட்டுக்குள் ஓடும் நீண்ட நெடிய பாதையைப் பாதையாக்கிச் செப்பனிட்டது யார்? யாரோ ஒரு மனிதன், அந்தப் பக்கம் வந்த முதல் மனிதன் அப்பாதை வழியே நடந்தான். அவன் வருவதற்கு முன் அங்கே பாதையேயில்லை. அதற்குப் பிறகு, ஏதோ பிராணி அந்த வழியே நடந்திருக்கும்—சதுப்புப் பிரதேசத்தையும், புல் தரையும் கடந்து நடந்திருக்கும்; பாதை தானாகவே ஆழ்ந்து நிலைத்துவிட்டது. பிறகு நாடோடிகளான லாப்களில் சிலர் அந்தப் பாதையிலே நடந்திருப்பார்கள்; அவர்கள் எங்கும் நிலைத்து நிற்காதவர்கள்—இன்று ஓரிடம், நாளை ஓரிடம் என்று தங்கள் மிருகங்களை ஓட்டிக்கொண்டு திரிந்து கொண்டிருப்பார்கள். அகண்ட பிரும்மாண்டமான ஆல்மென்னிங் பிராந்தியத்துப் பாதை இப்படி உண்டானதுதான்—அந்தப் பிரதேசத்து நிலங்களுக்குச் சொந்தக்காரர்கள் யாரும் இல்லை; அந்தப் பரந்த பூமியை ஆள மனிதன் எவனுமில்லை.

அந்த மனிதன் வடக்குநோக்கி மெதுவாக நடந்து வருகிறான். தோளிலே சாக்கு மூட்டை ஒன்றைச் சுமந்து வருகிறான்—அந்தப் பிரதேசத்திலேயே அதுதான் முதல் சாக்கு மூட்டை. அதிலே உணவுப் பொருள்களும், சில அவசியமான ஆயுதங்களும் இருக்கின்றன. அவன் திடசாலி; காட்டாள்; அவன் தாடி சிவந்த இரும்புக் கம்பிகளால் ஆனமாதிரி இருக்கிறது. அவன் கைகளிலும் முகங்களிலும் சிறுசிறு வடுக்கள் இருக்கின்றன—காயங்கள் ஆறிய வடுக்கள்! அந்தக் காயங்கள் எப்படி ஏற்பட்டவை?—உழைப்பினலா? அல்லது சகோதர மனிதர்களுடன் சண்டைபோட்டா? அந்த மனிதன் சிறையிலிருந்து தப்பி வந்தவனுக இருப்பானே? மனிதர் கண்ணில் படாமல் ஒளிந்து ஒளிந்து வருபவனே? அல்லது தனிமை நாடித் தவம்புரியச் செல்லும் ஞானியோ அவன்? எதுவானுல் என்ன? அவன் வருகிறுன்; மெதுவாக நடந்து

வருகிறான். பறவைகளும் மிருகங்களும் மௌனமாக இருக்கின்றன. அவன் தனக்குத்தானே இரண்டொரு வார்த்தைகள் பேசிக் கொள்கிறான். "ஓ! சரி... சரி..." என்று தனக்குத்தானே சொல்லிக் கொள்கிறான். இங்கும் அங்கும், திடலின் மத்தியில் தெரிகிற புல் தரைகளை எல்லாம் அவன் கண்கள் துருவி ஆராய்கின்றன. ஒருசில இடங்களில் தன் தோளிலிருந்து சாக்கு மூட்டையை இறக்கி வைத்துவிட்டு சுற்று வட்டப் பிரதேசத்தை பரீக்ஷித்துப் பார்க்கிறான். எந்த இடமும் அவனுக்குத் திருப்தி அளிக்கிறமாதிரித் தெரியவில்லை. சற்று நேரத்துக்கெல்லாம் திரும்பிவந்து, மூட்டையை மறுபடியும் தோளில் தூக்கிக்கொண்டு மேலே செல்கிறான். அவன் பகல் பூராவும் நடந்துகொண்டேயிருக்கிறான். நேரத்தைச் சூரியனைப் பார்த்துக் கணித்துக் கொள்கிறான். இரவு வருகிறது! கையை மடித்துத் தலையணையாக வைத்துக்கொண்டு புல்தரையில் படுத்து உறங்குகிறான்.

சில மணி நேரங்கள்தான் உறங்குகிறான் அவன். மீண்டும் நடக்கத் தொடங்கிவிடுகிறான். "ஓ! சரி! சரி!" —மீண்டும் வடக்கு நோக்கி நடக்கிறான். சூரியனைப் பார்த்து நேரத்தைக் கணித்துக் கொள்கிறான். பார்லி அடையையும், ஆட்டுப் பாலேடையையும் சாப்பிட்டுவிட்டு, ஓடுகிற அருவித் தண்ணீரை அள்ளிக் குடிக்கிறான். குடித்துவிட்டு, மேலே நடக்கிறான். மறுநாளும் நடக்கிறான். மரங்கள் அடர்ந்த பிரதேசத்திலே பல இடங்கள் சௌகரியமான இடங்களாகத் தோன்றுகின்றன. அவன் என்ன தேடுகிறான்? காணி நிலம் தேடுகிறானா? மனிதர்கள் வாழும் பிரதேசங்களில் வாழ மனமில்லாமல் தனக்கென்று இடந்தேடிக் கொண்டு வந்தவனோ அவன்? அவன் கண்கள்தான் எப்படி அந்த நிலத்தையும் சுற்று வட்டத்தையும் துருவி ஆராய்கின்றன. குன்றுகளின் மேல் ஏறி நின்று நாலு பக்கங்களிலும் கண்களை ஓட்டிக் கவனிக்கிறான் அவன். மீண்டும் இருட்டிவிடுகிறது.

ஒரு பள்ளத்தாக்கின் மேலண்டைப் பக்கமாக நகருகிறான் அவன். மரங்கள் அடர்ந்த பிரதேசம் அது. கொடிகளும் செடிகளும் படர்ந்து தரை பச்சைப் பசேலென்று இருக்கிறது. ஸ்ப்ரூஸ், பைன் மரங்கள் நெருக்கமாக வளர்ந்திருக்கின்றன. இந்தப் பிரதேசத்திலே பலமணி நேரம் நடக்கிறான் அவன். அஸ்தமிக்கிறது. தொலைவில் அருவி ஒன்று சலசலப்பது அவன் காதில் இன்பமாக விழுகிறது. ஒரு குன்றின் சரிவிலே ஏறி நின்று பார்க்கிறான்—

இருள் கவிழத் தொடங்கிவிட்டது. தெற்கே வானம் வெளிரிட்டுத் தெரிகிறது. அவன் அங்கேயே படுத்து உறங்குகிறான்.

காலை வெளிச்சத்திலே நிலத்தின் வளம் நன்கு தெரிகிறது—பச்சையும் பாசியும் கண்ணுக்கெட்டுமட்டும் படர்ந்திருக்கிறது. குன்றின் சரிவிலே அவன் இறங்கி வருகிறான்—காலடியிலே புல் படர்ந்த தரை மெத்தென்று இருக்கிறது. இரண்டு பக்கங்களிலும் புல்லும் பூண்டும், மரமும் செடியும் செழுமையாகத் தழைத்து ஓங்கியிருக்கின்றன. தூரத்திலே, குன்றின் அடிவாரத்திலே, ஒரு அருவி ஓடுகிறது. ஒரு முயல் அதைத் தாண்டி ஓடுகிறது. அவன் திருப்தியுடன் தலையை ஆட்டுகிறான்—ஒரு தாவில் முயல் அந்த அருவியைத் தாண்டி விடுகிறதென்பது அவனுக்குத் திருப்தி யளிக்கிறது. அதைப் பார்த்துக் கொண்டே நடந்த அவன் காலடியிலிருந்து சீறிக்கொண்டு பறக்கிறது ஒரு நாரை. அவன் தலை தானாகவே திருப்தியுடன் ஆடுகிறது. நாரையும் முயலும் வசிக்குமிடம் நல்ல இடம்தான்—சந்தேகம் இல்லை. பில்பெர்ரி, மேகபெர்ரி முதலிய பழங்கள் மலிந்திருக்கின்றன. சிறு சிறு தாவரங்கள் பல ரகமானவை படர்ந்திருக்கின்றன. மாரிப்பச்சை ஏழுமுக நக்ஷத்திரங்களாகப் பூத்திருக்கிறது. இங்குமங்கும், பல இடங்களில் சிறு மண்வெட்டியால் வெட்டிப் பார்க்கிறான் அவன். நிலம் வளமுள்ள நிலம்தான்; ஆயிரம் வருஷத்து எரு அங்கு ஊறியிருக்கிறது. மனிதன் கை படாத நிலம். ஆம்; மீண்டும் மீண்டும் தலையை ஆட்டுகிறான். இருந்து வாழ்வதற்கு இடம் கண்டுபிடித்துவிட்டது பற்றி அவனுக்குப் பரம திருப்தி. அவன் அங்கு இருந்து வாழ்வது என்று தீர்மானித்துவிட்டான். சுற்று வட்டப் பிரதேசத்தையெல்லாம் ஆராய்வதற்கு இரண்டு நாட்கள் ஆகின்றன. ஆனால் ஒவ்வொரு நாளும் மாலையில் அவன் அந்தக் குன்றின் அடிவாரத்துக்கே வந்து சேருகிறான் படுத்துறங்க. பைன் கட்டைகளை அடுக்கி அதன்மேல் படுத்து உறங்குகிறான் அவன். இதுதான் வீடு என்கிற எண்ணம் மனசிலே திடப் படுகிறது—வேறு என்ன வேண்டும்? பைன் படுக்கை! குடை பிடித்ததுபோல மேலே ஒரு பாறை நீட்டிக்கொண்டு நிற்கிறது! வேறு என்ன வேண்டும்?

இடத்தைக் கண்டுபிடிப்பதுதான் மிகவும் சிரமமான காரியம். கண்டுபிடித்துவிட்டான். இதுவரை இந்த நிலம் யாருக்கும் சொந்தமானதில்லை; இப்போது இது அவனுடையது. இப்போது,

இனி, அவனுக்கு வேலை நிறைய இருக்கிறது. ஒரு விநாடிகூட அவனுக்கு ஓய்வு கிடைக்காது. உடனேயே வேலை தொடங்குகிறான் அவன். பர்ச் மரப்பட்டைகளை பச்சை மரங்களிலிருந்து உரிக்கிறான். அந்தப் பட்டைகளை உலர்த்திக் கட்டுகிறான். பெரிய கட்டாகச் சேர்ந்ததும், கனமான சுமையைத் தூக்கிக் கொண்டு, மைல்கணக்காகப் போக்குப் போக்கென்று போய், கிராமத்தில் வீடுகளுக்கு உபயோகமாகும்படிப் பட்டைகளை விற்கிறான். விற்றவுடன், புதுச் சாக்கு மூட்டையில் தேவையான புதுச் சாமன்களைச் சுமந்துகொண்டு, மீண்டும் தன் இடத்துக்குத் திரும்புகிறான். புதுச் சாமான்கள் என்ன? மாவு, பன்றி இறைச்சி, சமைக்க ஒரு பாத்திரம், ஒரு பெரிய மண்வெட்டி—இவைகளைச் சுமந்துகொண்டு முன்பு வந்தவழியே நடந்து, தன்னுடைய நிலமான மலையடிவாரத்துக்கு வந்து சேருகிறான். பிறந்ததே சுமை தூக்கத் தானே? காட்டாள் அவன். அந்தக் காட்டிலே அவன் அழகற்ற நடை பொருத்தமாகத்தான் இருக்கிறது. மீண்டும் சுமையைத் தூக்கிக்கொண்டு கிராமத்துக்குப் போகிறான்; சாக்கு மூட்டையைத் தேவையான சாமான்களால் நிரப்பிக்கொண்டு தன் நிலத்துக்கு நடக்கிறான். மீண்டும் மீண்டும், அந்த நீண்ட பாதையிலே, தூக்க மாட்டாத சுமையைத் தூக்கிக்கொண்டு நடப்பது அவனுக்குப் பிரியமான காரியம்தான் போலும்! தோளிலே சுமையில்லாத வாழ்வும் ஒரு வாழ்வா என்று அவன் நினைப்பதுபோல இருக்கிறது.

ஒருநாள், தோளில் சுமையுடன் மட்டும் வரவில்லை அவன்; மூன்று ஆடுகளையும் கட்டி இழுத்துக்கொண்டு வந்தான். அவனுக்குப் பெருமை தாங்கவில்லை; மாடுகளை யுடையவன் பெருமைப் படுவதுபோல அவன் அந்த ஆடுகளைப் பெருமையுடன் பார்த்தான். அவற்றை அவன் மிகவும் கவனமாகப் போஷித்தான். அதற்குப் பிறகு அந்தப்பக்கமாக ஒரு நாடோடி லாப் வந்தான்; ஆடுகளைப்பார்த்தவுடன் அந்த லாப்புக்குத் தெரிந்துவிட்டது; இந்த மனிதன் இங்கே, இந்த வளமான பூமியைப் பண்படுத்திப் பலன்கண்டு வாழ்வது என்று தீர்மானித்திருக்கிறான் என்று தெரிந்துவிட்டது.

“நிரந்தரமாக இங்கேயே தங்கப்போகிறாயா?”

“ஆம்” என்றான் அவன்.

“உன் பெயர்...”

“ஐஸக். எனக்கு உதவியாக இங்குவந்து வசிக்கக் கூடிய பெண்பிள்ளை யாரையாவது தெரியுமா உனக்கு?”

"தெரியாது, ஆனால் உன் தேவையைப் பற்றிப் பார்த்தவர்களிடம் சொல்லுகிறேன்."

"தெரிவி. என்னிடம் ஆடுமாடுகள்கூட இருக்கின்றன—அவற்றைப் பார்த்துக்கொள்ளத்தான் யாரும் பெண்மணி இல்லை என்று தெரிவி."

அந்த லாப் தன்வழியே சென்றான். ஐஸக்கா? சரி—அவனுடைய தேவையைப்பற்றி அவன் பலரிடம் சொல்லுவான். மலையடிவாரத்திலே வந்து தங்கிய அவன் எதற்கும் பயந்து ஓடிப்போனவன் அல்ல—அப்படியிருந்தால் தன் பெயரைத் தெரிவித்திருப்பானா? அவன் ஒரு உழைப்பாளி—உழைத்து வாழ்க்கை நடத்துகிற திடத்துடன், காட்டைத் திருத்தி நிலத்தைப் பண்படுத்தித் தனதாக்கிக்கொள்ள முயல்கிற உழைப்பாளி. ஆடுகளுக்கு மாரிகாலத்துக்குப் போதுமான இலைகளைப் பொறுக்கி வைக்கிறான் அவன். நிலத்தை உழுது, மண்ணைப் புரட்டிப் புல் பூண்டு இல்லாமல் செப்பனிடுகிறான். தன்னுடைய நிலத்துக்குக் கற்களைப் புரட்டி அடுக்கி எல்லையும், வேலியும் கோலிக் கொள்கிறான். இலையுதிர் காலத்துக்குள்ளே அவன் தனக்கென்று வீடு ஒன்று கட்டிக்கொண்டுவிட்டான். மண் குடிசைதான்; ஆனால் அது பலமான வீடு. நல்ல வீடு. உள்ளே குளிரடக்கமாக இருக்கிறது. புயலும் அதை அசைக்காது—தீயும் அதைத் தொடாது. இதோ அவன் வீடு, உள்ளேபோய் கதவைச் சாத்திக் கொண்டு கவலையில்லாமல் இருக்கலாம் அவன். யாராவது அந்தப் பக்கமாக வந்தால், அவன் தன் வீட்டு வாசலில் நின்றபடியே அவர்களைத் தன் வீட்டிற்கு வரவேற்பான். குடிசையில் இரண்டு அறைகள் இருக்கின்றன. ஒன்று அவனுக்கு; எதிர்க்கோடியில் உள்ள அறை அவனுடைய மிருகங்களுக்கு. குடைபோலக் கவிழ்ந்திருந்த பாறையை ஒட்டிப் பரண்போட்டு, ஆடுகளின் தீவனத்தைச் சேகரித்து வைத்திருந்தான். மனிதனுக்குத் தேவையானதெல்லாம் அந்தக் குடிசைக்குள் இருந்தது—மனிதனுக்கு மட்டுமல்ல—அந்த மனிதனுடைய ஆடுகளுக்குத் தேவையானதும்கூட இருந்தது.

பின் ஒரு நாள், தகப்பனும் பிள்ளையுமாக இரண்டு லாப்கள் அங்கு வந்தார்கள். தங்களுடைய நீண்ட கழிகளை ஊன்றிக் கொண்டு, அங்கு இருந்ததை எல்லாம் பார்த்துக்கொண்டு நின்றார்கள் அவர்கள்—குடிசையையும், பண் செய்த பூமியையும் பார்த்தார்கள். ஆடுகள் துள்ளித்திரியும்போது ஒலித்த மணிகளின் சப்தம் அவர்கள் காதிலே விழுந்தது.

"வணக்கம். இந்த இடம் பிரமாதமான இடம். பிரபுக்கள் வசிக்க லாயக்கானது" என்றார்கள், லாப்களுக்கே இயற்கையான ஒரு பெருமிதப் பேச்சுடன்.

"எனக்கு உதவி செய்ய முன்வரக்கூடிய பெண்பிள்ளை யாரையாவது தெரியுமோ உங்களுக்கு?" என்றான் ஐஸக். அவனுக்கு இப்பவெல்லாம் அதைப்பற்றித்தான் ஞாபகம்.

"பெண்பிள்ளையா? தெரியாது. ஆனால் நான் பார்ப்பவர் களிடம் தெரிவிக்கிறேன்" என்றான் பெரியவன்.

"தெரிவிப்பாயானால் நல்லது. வீடிருக்கிறது, நிலமிருக்கிறது, ஆடு இருக்கிறது, உதவி செய்யப் பெண்பிள்ளைதான் இல்லை என்று தெரிவி."

அவன் கிராமத்துக்குப் போன சமயங்களிலெல்லாம் ஒரு பெண்பிள்ளையைத் தேடினான். கிடைக்கவில்லை. தூரத்திலிருந்து பார்ப்பார்கள்—யாராவது ஒரு விதவை அல்லது வயசான கன்னிப்பெண். ஆனால் துணிந்து அவனுடன் நிர்மானுஷ்யமான அந்தப் பிரதேசத்துக்கு வர யாருக்கும் துணிவு வரவில்லை. ஏன் என்று ஐஸக்குக்குத் தெரியாதா? அப்படிச் சொல்வது தவறு. யார் போய்க் காட்டிலே, தனியாக, ஒரு காட்டாளுக்கு உதவியாக, ஓயாத வேலைகளைச் செய்துகொண்டு, பேசுவதற்குக்கூட அண்டை அயலார் இல்லாமல், தனிமையில் காலம்தள்ள விரும்புவார்கள்? வேறு யாரையாவது பார்க்கவேண்டுமானால் ஒருநாள் பயணம் போகவேண்டும். சரி! அந்த மனிதனாவது பார்ப்பதற்கு அழகாக இருந்தானா? அதுவுமில்லை. அவனைப் பார்க்கவே பயமாக இருந்தது. காட்டாள். அவன் பேசினால் அவன் குரல் பயமுறுத்துவதாக இருந்தது—அவன் கடவுளைக் குறித்துப் பாடினானால், கடவுளே பயந்துகொண்டு போய்விடுவார். அது மனிதனுடைய குரலா? மிருகத்தினுடைய குரல்போல இருந்தது.

என்ன பண்ணுவது? அவன் ஒண்டியாகக் கஷ்டப்படவேண்டியதுதான். மாரிக்காலத்தில் அவன் பெரிய மரத் தொட்டிகள் செய்தான். அவற்றையும் தூக்கிக் கொண்டு போய் கிராமத்திலே விற்றான். அவற்றிற்குப் பதிலாக தன் உணவையும், தேவையான ஆயுதங்களையும் சுமந்துகொண்டு பனி படர்ந்திருந்த பிரதேசத்திலே நடந்து வந்தான். தூக்கமாட்டாத சுமையைத் தூக்குவது சிரமமாகத்தான் இருந்தது. தவிரவும் ஆடுகளைத் தனியாக அங்கு விட்டுவிட்டு அவனால் அதிகநாள் வெளியே இருந்துவிட முடியாது. என்ன செய்வது? அவசியம் நேர்ந்தால் புத்தி தானாகவே கூர்மை

யாகிவிடும்! அவன் மூளையை இதுவரை உபயோகித்ததில்லை—இப்போது அதை உபயோகிக்கக் கற்றுக் கொண்டான். தன் சுமையைத் தூக்கிக்கொண்டு போகுமுன், ஆடுகளை அவிழ்த்து விட்டுவிடுவான்—திரும்புவதற்கு தாமதமானாலும்கூட அவை பட்டினி கிடக்கத் தேவையில்லை; அவை தம்மிஷ்டத்துக்கு மேய லாம். பிறகு ஒரு யுக்தி பண்ணினான். ஒரு பெரிய வாளியில் ஜலம் வந்து விழும்படியாக வைத்தான்—குறிப்பிட்ட ஒரு நேரத்தில் வாளி நிரம்பிவிடும். நிரம்பியதும் அது தானாகவே கவிழும். வாளியில் ஒரு கயிற்றைக்கட்டி தழை தீவனம் சேமித்து வைத் திருந்த பரண் கதவில் மாட்டிவிட்டான். வாளி கவிழ்ந்ததும், பரண் கதவு திறக்கும். உள்ளேயிருந்து மூன்று இலைக் கட்டுகள் ஆடுகளுக்கு முன் விழும். பதினான்கு மணி நேரத்திற்கொருதரம் இந்தமாதிரி இலைக்கட்டு விழும்படியாக ஏற்பாடு செய்துவிட்டான் ஐஸக். இப்பொழுது கவலையில்லாமல் எத்தனை நாட்கள் வேணு மானாலும் அவன் கிராமத்திலே தங்கலாம்—ஆடுகளின் தீனியைப் பற்றிக் கவலைப்பட வேண்டியதில்லை.

இது ஐஸக் கண்டு பிடித்த வழி.

நிஜமாகவே நல்ல வழிதான். இந்த யுக்தியை அவனுக்குக் கடவுள்தான் சொல்லித் தந்திருக்க வேண்டும். அவனுக்கு உதவி செய்ய வேறு யார் இருந்தார்கள்? இலையுதிர் காலத்தின் கடைசிப் பகுதிவரை இந்த யுக்தி பலித்தது. பிறகு பனி பெய்ய ஆரம்பித்து விட்டது. மழை, பனி, பனி, மழை என்று மாற்றி மாற்றி ஆரம் பித்தது. அவனுடைய வாளி யந்திரம் சரிவர வேலை செய்ய வில்லை. பனி விழுந்து வாளியை நிரப்பிவிடும். ஆடுகளின் உணவு சீக்கிரம் விழுந்துவிடும். வாளிக்கு மூடி ஒன்று செய்து போட்டான். கொஞ்ச நாள் சரியாக இருந்தது. பிறகு மாரிக் காலம் வந்தது. ஜலமெல்லாம் பனியாக உரைந்துவிட்டது. வாளி நிரம்புவதேயில்லை.

ஆடுகளும் தீனியில்லாமல் இருக்க வேண்டியதுதான். என்ன செய்வது? மனிதனும் அவசியம் நேர்ந்தால் தீனியில்லாது இருக் கத்தானே வேண்டியதாயிருந்தது!

சிரமமான காலம்! அவனுக்கு உதவி தேவை. ஆனால் உதவி கிடைக்கவில்லை. எப்படியோ நம்பிக்கை இழக்காமல் உழைத்தான் அவன். வீட்டிற்குள் வேலை செய்தான் அவன். இரண்டு கண்ணாடி சதுரங்களைக் கொணர்ந்து வீட்டுச் சுவற்றிலே ஜன்னல் வைத் தான். இப்பொழுது வீட்டுக்குள் வெளிச்சம் தானாகவே வந்து

விட்டது—தீ மூட்டினல்தான் வெளிச்சம் என்பதில்லை. ஜன்னல் வைத்த தினம் அவன் வாழ்க்கையிலேயே ஒரு பிரகாசமான நாள். வீட்டிற்குள் உட்கார்ந்து அவன் நாள் பூராவும் மரத்தொட்டிகள் செய்தான். நாட்கள் நல்ல நாட்களாக, உழைப்பு மிகுந்த நாட்களாகச் செல்லுகின்றன.

அவன் எதுவும் புஸ்தகங்கள் படிக்கிறதில்லை. ஆனல் அவன் சிந்தனைகள் கடவுளிடம் இருக்கின்றன. எளிமையும் தூய்மையும் நிறைந்தவை அவன் சிந்தனைகள்; பயமும் பக்தியும் நிறைந்தவை. வானத்திலே நக்ஷத்திரங்கள், மரங்களினூடே காற்று, தனிமை, மாரிக்காலத்துப் பரந்த பனிப் படலம், பூமியின் வளம், பூமிக்கு மேலுள்ளவற்றின் வன்மை—எல்லாமாகச்சேர்ந்து அவனைக் கடவுளைப்பற்றிச் சிந்திக்கத் தூண்டுகின்றன. பாவிகளின் மத்தியிலே ஒரு பாவி அவன்; அவனுக்குக் கடவுளிடம் பக்தியும் உண்டு, பயமும் உண்டு. கடவுளின் தினம் என்று ஞாயிற்றுக் கிழமைகளில் அவன் குளிக்கிறுன். ஆனல் அன்றும் அவன் தன் வழக்கப்படியே வேலை செய்கிறுன்.

வஸந்தகாலம் வருகிறது. தன் நிலத்தைத் திருத்தி அதில் உருளைக்கிழங்கு விதைத்தான். அவனுடைய ஆடுகள் பெருகுகின்றன. இரண்டு பெண் ஆடுகளும், இரட்டைக் குட்டிகளாக ஈன்றன. இப்போது அவனுக்குச் சொந்தமாக ஏழு ஆடுகள் இருக்கின்றன. அவைகளுக்கு ஒரு பெரிய லாயம் தயார் செய்கிறுன் அவன்—இன்னும் ஆட்டுக் குட்டிகள் பிறந்தாலும் அந்த லாயத்தில் இடம் இருக்கிறது. அந்த லாயத்திலும் ஒரு கண்ணுடி ஜன்னல் வைத்தான், எல்லா வழிகளிலும் அவன் வாழ்வு பிரகாசமாகிக் கொண்டிருக்கிறது.

கடைசியில் உதவியும் வந்தது—தேவையான பெண்பிள்ளை வந்து சேர்ந்தாள். வெகுநேரம் தூரத்தில் நின்று தயங்கினள் அவள்; அங்குமிங்கும் பார்த்தாள், மிரண்டு மிரண்டு. குன்றின் மேலேறிப் பார்த்தாள். கீழே வந்து அவன் குடிசையை அவள் அணுகத் துணிவதற்குமுன், இருட்டவே தொடங்கிவிட்டது. அஸ்தமிக்கும் சமையத்தில் அணுகி வந்தாள் அவள்—பழுப்பு நிறக் கண்கள் படைத்த ஒரு பெரிய பெண். ஆஜானுபாகுவான உருவம். அவளும் நாட்டுக் கட்டைதான். அவள் அணிந்திருந்த

செருப்புகள் லாப்களுடைய செருப்புப்போல இருந்தது. அவள் தோளிலிருந்து ஒரு தோல் பை தொங்கிக் கொண்டிருந்தது. ரொம்பவும் வாலிபம் அல்ல. மிருதுவாகப் பேசினுள். முப்பது வயசுக்குள் தான் இருக்கும் அவளுக்கு.

பயப்படுவானேன் அவள்? பயப்படவேண்டியதேயில்லை. அவனுக்கு வந்தனம் சொல்லி, அவசரமாகச் சொன்னுள் அவள் : "குன்றைக் கடந்து செல்ல வேண்டியிருந்தது. இப்படி வந்தேன்."

"அப்படியா!" என்ருன் அவன். அவள் சொன்னதன் அர்த்தம் புரியவில்லை அவனுக்கு. பாதி வார்த்தைகளை விழுங்கி விடுபவள் மாதிரி, காதிலே விழாதமாதிரி, மெதுவாகப் பேசினுள் அவள். முகத்தையும் திருப்பிக்கொண்டு நின்ருள்.

"ஆம். இங்கே வர நெடுந்தூரம் நடக்க வேண்டியிருக்கிறது."

"தொலைதூரம்தான். குன்றுகளைத் தாண்டியா வருகிருய் நீ?" என்று கேட்டான் அவன்.

"ஆமாம்."

"ஏன்? எதற்காக?" தயங்கினுன் ஐஸக்.

"அங்கேதான் என் ஜனங்கள் இருக்கிருர்கள்."

"உன் ஜனங்கள் அங்கே இருக்கிருர்களா? அவர்களைவிட்டு வந்தாயா? உன் பெயர் என்ன?"

"இங்கர். உன் பெயர்?"

"ஐஸக்"

"ம்......ம்...... நீ இங்கே தனியாக இருக்கிருயா?"

"ஆமாம். என் குடிசையில் என் நிலத்தையும், ஆடுகளையும் பார்த்துக்கொண்டு தனியாகத்தான் இருக்கிறேன்" என்ருன் ஐஸக்.

"வீடும் நிலமும் நன்ருகத்தானிருக்கிறது" என்ருள் இங்கர், அவனுக்குத் திருப்தியாகும்பொருட்டு.

ஐஸக் கெட்டிக்காரனில்லையா? அவன் புரிந்துகொண்டு விட்டான். தன்னைத் தேடிக்கொண்டுதான் அவள் வந்திருக்கிருள் என்பது அவனுக்குப் புரிந்துவிட்டது. வேறு ஒன்றும், எங்கேயும் அவளுக்குக் காரியம் இல்லை. இரண்டு நாட்களுக்குமுன் கிளம்பி, இவ்வளவு தூரம் நடந்து, அவனை நாடித்தான் வந்திருக்கிருள். அவனுக்கு உதவி செய்ய ஒரு பெண்பிள்ளை வேண்டும் என்பதை அவள் கேள்விப்பட்டுத்தான் வந்திருக்கிருள்.

"உள்ளேபோய் உட்கார்ந்து சற்றுக் களைப்பாறேன்."

இருவரும் குடிசைக்குள் போனார்கள். அவள் கொணர்ந்திருந்த உணவைச் சாப்பிட்டார்கள். அவனுடைய ஆடுகளின் பாலைக் குடித்தார்கள். அவள் காபி கொணர்ந்திருந்தாள்; அதைத் தயாரித்துச் சாப்பிட்டார்கள். படுக்கிறவரையில் காபியை வைத்துக் கொண்டு, பேசிக்கொண்டு உட்கார்ந்திருந்தார்கள். இரவில் அவளை தழுவப்போனான் அவன். அவளும் ஆக்ஷேபிக்கவில்லை.

அவள் மறுநாள் போய்விடவில்லை. நாள் பூராவும் இருந்தாள். அவன் வேலைகளில் உதவி செய்தாள். ஆடுகளைப் பால் கறந்து வைத்தாள், பாத்திரங்களையும் பண்டங்களையும் துலக்கி வைத்தாள், குடிசையை உள்ளும் புறமும் நன்கு சுத்தம் செய்து வைத்தாள். அவள் அங்கிருந்து போய்விடுவதாக இல்லை. அவள் பெயர் இங்கர். அவன் பெயர் ஐஸக்.

தனியாக இதுகாறும் வாழ்ந்து வந்த மனிதனுக்கு இப்போது புது வாழ்வு தொடங்கிற்று. உண்மைதான்: இந்த, அவனுடைய மனைவி அழகியல்ல. அவள் பேச்சும் கணீரென்று இல்லை. யாரையும் நிமிர்ந்து பார்க்காமல் முகத்தைத் திருப்பிக்கொண்டு பேசினாள். அதற்குக் காரணம் இருந்தது. அவள் மேலுதடு விகாரமாகப் பிளந்திருந்தது. அதனால் என்ன? அது காரணமாகவேதான் அவளுக்கு இதுவரை கலியாணமாகாமல் இருந்தது போலும். இப்போது அவளாகவே அவனைத் தேடிக்கொண்டு வந்திருந்தாள்! அவளுடைய பிளவுபட்ட உதடுக்கு அவன் நன்றி செலுத்த வேண்டியவன். அப்படிப் பார்க்கப்போனால் அவன்தான் ரொம்ப அழகனோ? இரும்புக் கம்பி தாடியும், கரடுமுரடான தேகமும், முகத்திலே கோபப் பார்வையுமாக இருந்தான் அவன். ஏதோ உடைந்த கண்ணாடியில் தெரிகிற மனித உருவம் அவன். அவனைப் பார்ப்பதற்கே பயமாகத்தான் இருந்தது. அவன் பார்வை பீதி தருவதாக இருந்தது. எப்படித்தான் இங்கர் பயந்து திரும்பி ஓடிவிடாமல் அங்கு வந்து சேர்ந்தாளோ!

அவள் போய்விடவில்லை. அவன் வெளியே எங்கெல்லாமோ சுற்றிவிட்டு வீடு திரும்பும்போதும் அவள் வீட்டிலே இருந்தாள். தன் வீடும், இங்கரும் ஒன்று என்கிற நினைப்பு ஏற்பட்டது அவனுக்கு.

இன்னொருவருக்கு உணவு தேடியாக வேண்டும்—என்றாலும் அதில் நஷ்டமில்லை. அவனுக்கு இப்போது அதிக சுதந்திரம்

இருந்தது. எங்கு போனாலும் உடனே திரும்பிவிட வேண்டும் என்கிற அவசரம்—அவசியம் இல்லை. போய்க் காரியத்தைச் சரிவரக் கவனித்துக்கொண்டு வரலாம். வீட்டுக்கு வெளியே செய்ய வேண்டிய வேலைகள் ஏகமாக இருந்தன. அருவியிருந்தது—பார்ப்பதற்கு ஆனந்தமாக இருந்தது. ஆழமாகவும், அதி வேகமாகவும் பாய்ந்து ஓடிற்று அது. அதை அலக்ஷியம் செய்ய இயலாது. மலைகளின் உச்சியில் பிரும்மாண்டமான ஏரியில் தொடங்குகிற ஆறு அது. ஒருநாள் மீன்பிடிக்கப் போனான் அவன். ஒருநாள் பூராவும் ஆற்றோடு நடந்து சென்று மீன் பிடித்தான். மாலையில் கூடை நிறைய மீன்களுடன் திரும்பினான். அவ்வளவு மீன்களைப் பார்த்து ஆச்சரியப்பட்டாள் இங்கர். அவள் அவ்வளவாக நாகரிக உணவுக்குப் பழக்கமாகாதவள். கைகளைக் கொட்டி "அடேயப்பா! அடேயப்பா!" என்று குழந்தைமாதிரி ஆர்ப்பரித்தாள் அவள். அப்படி அவளும் அசடல்ல. தான் இப்படி ஆர்ப்பரித்து அமர்க்களம் செய்வது அவனுக்குப் பிடித்திருந்தது என்று கடைக்கண்ணால் கவனித்துக் கொண்டாள். "இதுமாதிரி என் ஆயுளில் பார்த்ததேயில்லையே!" என்று மேலும் அமர்க்களம் செய்தாள்.

இங்கர் வந்தது நல்லதாயிற்று—பல விதங்களிலும். அவள் அப்படியாகக் கெட்டிக்காரியல்ல. ஆனால் வீட்டு வேலைகளைத் துப்புறவாகப் பார்த்துக் கொண்டாள். அவளுடைய உறவினர்களிடமிருந்து அவள் தனக்குச் சொந்தமான இரண்டு குட்டிகளுடன் செம்மறியாடுகளைக் கொணர்ந்தாள். அங்கு வேறு என்ன வேண்டும்? ஐஸக்கின் நிலத்திலே வாழ இப்போது பிராணிகளும் மனிதர்களும் வந்துவிட்டார்கள். நாளடைவில் எல்லாம் பெருகி வரும். நிலம் வளர்ந்து கொண்டிருந்தது. நல்ல வேளையில்தான் இங்கர் அங்கு வந்து சேர்ந்தாள். இங்கர் தனக்குத் தேவையான பல சில்லறை சாமான்களையும் கொணர்ந்து அங்கு சேர்த்துக் கொண்டாள்—துணிமணிகள், முகம் பார்க்கும் கண்ணாடி ஒன்று, ஒரு பலவர்ணக் கண்ணாடி மாலை, ஒரு கைராட்டினம், ஒரு சிறிய நூல் தறி. இப்படி சாமான்களைக் கொணர்ந்து அவள் குவித்தாளானால் அந்தச் சிறு குடிசையில் அவர்கள் தங்க இடமே இராது போலிருந்தது. தரையிலிருந்து கூரைவரை நிரம்பி, கதவு வழியாக வெளியே வழியும்போல இருந்ததே! இவற்றைக் கண்டு ஆச்சரியப்பட்டான் ஐஸக். ஆனால் அவன் சுபாவம் மௌனமான சுபாவம். அதிகமாகப் பேசப் பழகாதவன் அவன்.

ஒன்றும் சொல்லாமல் உள்ளுக்கும் வெளிக்கும் போய்ப் போய் வந்துகொண்டிருந்தான். கதவுக்கப்பால் நின்று ஆகாயத்தையும் பூமியையும் மாறிமாறிப் பார்த்தான். மீண்டும் உள்ளே போனுன். அதிர்ஷ்டக்காரன்தான் அவன். அவன் உள்ளத்திலே காதல் பிறந்துவிட்டது. காதல் என்ருல் என்ன? அவளிடம் அவன் மிகவும் நெருங்கிவிட்டான். அதைக் காதல் என்பதா? அல்லது வேறு என்ன என்று சொல்வது?

“இவற்றை எல்லாம் நீ இங்கு கொண்டுவந்து சேர்க்க வேண்டிய அவசியமேயில்லை. இதெல்லாம் இங்கே எதற்கு?” என்ருன் ஐஸக்.

“நான் விரும்பினுல் இன்னும் அதிகமாகக்கூடக் கொணரலாம். என் மாமா ஸிவெர்ட்—அவரைப்பற்றிக் கேள்விப்பட்டிருக்கிருயா?”

“இல்லை.”

“இல்லையா? அவர் பணக்காரர். ஜில்லா பொருளதிகாரி அவர்தான்.”

காதல் என்பது கெட்டிக்காரனையும் அசடனுக்கிவிடும்! தானும் இதற்கெல்லாம் ஏற்றபடி பெரிசாக ஏதாவது செய்ய வேண்டும் என்று ஐஸக்குக்குத் தோன்றியது. “நான் சொல்ல வந்தது என்ன என்ருல்—நீ இன்று உருளைக் கிழங்கு தோண்ட வேண்டாம். நானே மாலையில் செய்துவிடுகிறேன்.” இதைச் சொல்லிவிட்டு அவன் கோடாலியை எடுத்துக்கொண்டு காட்டை நோக்கிப் புறப்பட்டுவிட்டான்.

சற்று தூரத்தில் உள்ள காட்டில் அவன் கோடாலியால் வெட்டுவது இங்கரின் காதில் விழுந்தது, “டக்...டக்...” ஒரு பலசாலியான ஆண்மகனின் வேலை அது. சற்று நேரத்தில் மரம் சாய்கிற சப்தம் கேட்டது. சிறிது நேரம் அந்தச் சப்தத்தைக் கேட்டுக்கொண்டு நின்ருள். பிறகு உருளை விதைத்திருந்த வயலுக்குச் சென்று கிழங்கு தோண்டினுள் இங்கர். ஆம்; காதல் அசடர்களையும் சமர்த்தர்களாக்கி விடுகிறது!

மாலையில் ஐஸக் ஒரு பெரிய மரத்தை வெட்டிச் சதுரமாக்கிக் கயிற்ருல் கட்டி இழுத்துக்கொண்டு வந்து சேர்ந்தான். ஓ! அவள் வெளியே வந்து தான் வெட்டிய அந்த மரத்தைப் பார்க்க வேண்டும் என்பதற்காக அவன் செய்த சந்தடி... “ஹா! ஹூ!” என்று சப்தம் செய்தான். அவள் வந்து பார்த்தாள்.

"ஏன்! நாலு ஆள் செய்கிறவேலையை நீ ஒண்டியாகச் செய்கிருயே! இப்படிச் செய்யலாமா? புத்திசாலித்தனமான காரியமா அது?" என்று கணவனைச் செல்லமாகக் கோபித்துக்கொண்டாள் இங்கர்.

அவன் பதில் சொல்லவில்லை. அவள் இப்படிச் சொல்ல வேண்டும் என்றுதானே அவன் அப்படிப் பாடுபட்டிருந்தான். இதென்ன பிரமாதமான வேலை. பூ! இதைப்போல இரண்டுபங்கு வேலை அவனுல் செய்யமுடியுமே! ஒரு மரத்தை வெட்டிச் சதுரப் படுத்தியதற்குப் பிரமாதமான அமர்க்களமா?

"இதை என்ன செய்யப்போகிருய்?"

"பார்க்கலாம்" என்ருன் ஐஸக். அவள் அங்கிருப்பதையே கவனிக்காதவன்போல, ஆனுல் அவளையே ஓரக்கண்ணுல் பார்த்துக் கொண்டு, அந்த மரத்தைப் வீட்டோரமாக இழுத்துப்போட்டான்.

அவள் உருளைக் கிழங்குகளைத் தோண்டி எடுத்துச் சேர்த்து விட்டாள் என்பதைக் கவனித்ததும் அவனுக்குக் கோபமே வந்தது. ஒரு ஆண்பிள்ளைக்கு சமமாக ஒரு ஆள் வேலையை அவளும் செய்துவிட்டாளே! அது அவனுக்குப் பிடிக்கவில்லை. ஒன்றும் சொல்லாமல் கயிற்றை உருவி எடுத்துக்கொண்டு மீண்டும் கிளம்பினுன்.

"முடியவில்லையா இன்னும்?"

"இல்லை" என்ருன் அலக்ஷியமாக, அழுத்தமாக.

அதேபோல இன்னொரு மரத்தையும் வெட்டிச் சதுரப் படுத்திக் கொண்டு வந்தான். இந்தத் தடவை சப்தமே செய்யாமல் மரத்தைக் கொண்டுவந்து போட்டான்.

அன்று ஆரம்பித்து அந்தக்கோடையில் ஏராளமான மரங்களை வெட்டிச் சதுரப்படுத்திக் கொணர்ந்து சேர்த்து வைத்தான்.

## 2

ஒரு நாள் தன்னுடைய தோல் பையில் உணவுப் பொருள்களை எடுத்து வைத்து கழுத்தில் மாட்டிக்கொண்டு கிளமபினுள் இங்கர். "போய் என் மனிதர்களைப் பார்த்துவிட்டு வருகிறேன். எப்படியிருக்கிருர்களோ, என்னவோ?" என்ருள்.

"உம்......ம்" என்ருன் ஐஸக்.

"பல விஷயங்களைப்பற்றி அவர்களுடன் பேச வேண்டும்."

அவள் கிளம்புவதைப் பார்க்க அவன் வீட்டு வாசல் வரையில்கூட வரவில்லை. கொஞ்சநேரம் கழித்துத்தான் வெளியே வந்தான். அவன் சற்றுக்கூடக் கவலைப்படாதவன் போலத் தாமதமாக வெளியே வந்து பார்த்தபோது, இங்கர் காட்டு ஓரத்தை எட்டிவிட்டாள்.

"ஹூம்" என்று தொண்டையைக் கனைத்து கொண்டான். "நீ திரும்பி வருவாயா! மாட்டாயா?" அப்படிக் கேட்கிற உத்தேசமில்லை அவனுக்கு—ஆனால் கேட்டுவிட்டான்.

"வராமல் என்ன? நிச்சயம் வருவேன்" என்று உரக்கப் பதிலளித்தாள் இங்கர்.

"சரி"

மீண்டும் தனியனானான் ஐஸக். "ஓ...ஓ...சரி...சரி" என்று அவன் தனக்குத்தானே முணுமுணுத்துக் கொண்டான்......... அவனுக்கு உழைக்க உள்ளமும் இருந்தது; தெம்பும் இருந்தது. அவனால் சோம்பலாக இருக்க எப்படி முடியும்? உடனேயே வேலை செய்யத் தொடங்கிவிட்டான். மரங்களை வெட்டிக் குவித்தான். நாள் பூராவும் ஒழியாமல் ஓயாமல், அலுக்காமல் சலிக்காமல் மரம் வெட்டினான். பிறகு மாலையில் ஆடுகளைப் பால் கறந்தான். படுத்தான்.

தனிமை உரைத்தது, எத்தனை சிரமமாக இருந்தது அவனுக்கு! அந்தக் குடிசையின் அழகெல்லாம், வீடு என்கிற தன்மை எல்லாம், எங்கேயோ ஓடி ஒளிந்துகொண்டமாதிரி இருந்தது. தாளமுடியாத மௌனமும், தனிமையும் அது. வீட்டுச் சுவர்கள்கூட அழகாக இல்லை என்று எண்ணினான். சுற்றுமுற்றும் பார்த்தான். கைராட்டினம் அதனுடைய மூலையில் கேட்பாரற்றுக்கிடந்தது. நூல் தறியும் அருகில் கிடந்தது. எழுந்து பார்த்தான்—அவள் தன்னுடைய கண்ணாடி மணிமாலையைக்கூட எடுத்துப் போகவில்லை—வழக்கமாக வைக்கிற இடத்தில் அதனுடைய துணிப் பையில் இருந்தது மணிமாலை. அவளுடைய சாமான்களில் எதையும் எடுத்துகொண்டு போய்விட வில்லை அவள். இருள் கப்பிக்கொண்டதும் அந்தத் தனிமை தன்னைப் பயமுறுத்தியதுபோல இருந்தது அவனுக்கு—ஆனால் கோடைகாலமாதலால் இருட்டுக்கூட அவ்வளவு இருட்டாக இல்லை. உருத்தெரியாத பல உருவங்கள் எழுந்து தன்னைப் பய முறுத்தின என்று எண்ணினான் எளிய மனம் படைத்த ஐஸக். பொழுது விடிய வெகு நேரம் இருக்கும்போதே எழுந்துவிட்டான்.

நக்ஷத்திரங்களைப் பார்த்து மணி இரண்டிருக்கும் என்று எண்ணினான். நாள் பூராவுக்கும் தாங்கும்படியானபடி ஒரு பெரிய கோப்பை கஞ்சியைச் சாப்பிட்டான். பகல் பொழுதை சமைப்பதில் வீணாக்குவானேன்? பகல் பூராவும் மரங்களைக் கோடாலி கொண்டு வெட்டித் தள்ளினான். மாலையில் புது நிலத்தை வெட்டிப் பதனிட்டான்—உருளைக் கிழங்கு விதைக்க வயலைப் பெரிசாக்கினான்.

மூன்று நாட்கள் கோடாலியும் மண் வெட்டியும்தான் அவனுக்குத் துணை. இங்கர் அநேகமாக மறுநாள் வந்துவிடலாம். அவள் வரும்போது வீட்டில் மீன் இருந்தால்.........ஆனால் மீன் பிடிக்க ஆற்றுக்குப்போகும் பாதை வழியேதான் அவள் வரவேண்டும். எதிரிலே அவள் வந்துவிட்டால், தன்னைத் தேடித்தான் அவன் வந்திருக்கிறான் என்று எண்ணிவிடுவாள். அவமானமில்லையா? வேறு சுற்று வழியாக, மலைகளைக் கடந்து, ஆற்றுக்கு மீன் பிடிக்கச் சென்றான். அந்தப் பக்கமாக அவன் அதற்குமுன் போனது கிடையாது. வெண்மையும் பழுப்பும், சிறிதும் பெரிதுமான கற்கள் பல எங்கும் சிதறிக்கிடந்தன. தாம்பிரமும் வேறு என்ன லோகங்களும் கலந்திருந்தனவோ அந்த மண்ணிலும் கல்லிலும். அன்று இரவு மீன்கள் அவன் தூண்டிலில் தாமாகவே வந்து சிக்கின. ஒரு கூடை நிறைய மீன் பிடித்துக் கொணர்ந்தான்—அதை பார்த்து ஆச்சர்யப்படமாட்டாளா இங்கர்? அதிகாலையில் முந்திய மாலை சென்ற வழியே சென்று இரண்டொரு கனமான கற்களைப் பொறுக்கிக் கொணர்ந்தான்—அந்த மண்ணில் தங்கமும் வெள்ளியும் இருந்தாலும் இருக்கும். அவனுக்கு அது எப்படித் தெரியும்? கற்கள் அசாதாரணமான கனமாக இருந்தன. பழுப்புப் புள்ளிகளும், நீலப் புள்ளிகளுமாகப் பார்ப்பதற்கு அழகாக இருந்தன.

இங்கர் இதற்குமுன் வந்திருப்பாளோ? இல்லை. அவள் வரவில்லை. அன்று நாள் பூராவும் அவள் வரவில்லை. அவள் போய் நான்கு நாட்களாகிவிட்டன. ஐஸக் ஆடுகளைக் கறந்தான் முன்பு செய்தது போல உதவி யில்லாமலே தன் காரியங்களைச் செய்யத் தொடங்கினான். கல் பட்டரை ஒன்றுக்குச் சென்று ஒரு சுவர் எழுப்புவதற்குத் தேவையான கற்களைக் கொணர்ந்து அடுக்கினான்—பெரிய பெரிய கற்கள். செய்வதற்குக் காரியங்கள் எத்தனை எத்தனையோ இருந்தன.

ஐந்தாவதுநாள் மாலை படுக்கப்போகும்போது அவன் மனசிலே பயமே தோன்றிவிட்டது—அவள் இனி வரவே மாட்டாளோ!

ஆனால் அந்த ராட்டினமும், தறியும், மணிமாலையும் இருந்தனவே! அவற்றையும் விட்டுவிட்டா போய்விடுவாள்? அந்தக் குடிசையின் தனிமையும் மௌனமும் அந்த நாட்களில்—அதாவது இங்கர் வருவதற்கு முந்திய நாட்களில்—எப்படித்தான் அவனுக்குச் சகித்தனவோ! நிமிஷங்கள் ஊர்ந்தன. சப்தமே இல்லை அங்கு. ஒரு மணி போவது ஒரு யுகமாக இருந்ததே! கடைசியில் வெளியே ஏதோ காலடிச் சப்தம் கேட்கிறமாதிரி இருந்தது. கனவுதான் அது என்று எண்ணினான் அவன்! கனவுதான்! இல்லை. நிஜமாகவே சப்தம் கேட்டது. ஒருவர் செய்கிற சப்தம் அல்ல. "கடவுளே!" என்று தனக்குள் சொல்லிக் கொண்டான். பெருமூச்சுவிட்டான். கடவுள் பெயரும், பெருமூச்சும் ஐஸக்குக்குச் சாதாரணமான விஷயங்கள் அல்ல. மீண்டும் வெளியே சப்தம் கேட்டது. எழுந்து ஓடிப்போய்ப் பார்க்க ஆசைதான் அவனுக்கு. எப்படியோ தன்னையே கட்டுப் படுத்திக்கொண்டு படுத்திருந்தான். ஜன்னலைத் தாண்டி ஏதோ சென்றது; கொம்புள்ள, உயிருள்ள ஒரு பிராணி. கூடவே மனிதனின் காலடிச் சப்தமும் கேட்டது. கனவுதான்! குதித்தெழுந்து வெளியே சென்று பார்த்தான் ஐஸக். கனவுகளையும் கடந்ததொரு காட்சி அது, இங்கர் ஒரு பசுமாட்டை கொட்டகைக்குள் கட்டிக்கொண்டிருந்தாள். "கடவுளா? இது சைத்தானா? என் கண்கள்தான் சரியாக இல்லையா?" என்று கண்ணைக் கசக்கினான் ஐஸக்.

இங்கர் தன்னுடைய மிருதுவான குரலில், புரியாத வார்த்தைகளில், பசுவுடன் கொஞ்சிக் கொஞ்சிப் பேசிக் கொண்டிருந்தாள். அதற்குப் பிறகும்—அந்த மொழிகள் காதில் விழுந்த பிறகும்—அதை நம்ப மறுப்பது எப்படி? அங்கேயே அசையாமல் நின்றான் அவன். அவன் மனசிலே சந்தேகங்கள் என்னவெல்லாமோ எழுந்தன. அவன் மனைவி கெட்டிக்காரிதான். என்னென்ன அதிசயங்களைச் சாதித்து விட்டாள்!—ஆனாலும், இருந்தாலும்... இது மிகமிக அதிகம் இல்லையா!—அதிகமில்லையா? அதிகம்தான். கைராட்டினம், தறி, இவை சரி. மணிமாலை கிடைப்பது சிரமம். திருடிக்கொண்டு வந்திருப்பாளோ! இந்தப் பசுவையும் சொந்தக்காரனுக்குத் தெரியாமல் திருடிக் கொணர்ந்திருந்தாளானால்—தேடிக்கொண்டு உடனேயே சொந்தக்காரன் வந்துவிடமாட்டானா?

கொட்டிலிலிருந்து இங்கர் வெளியே வந்தாள். பெருமிதமாகச் சிரித்துக்கொண்டு சொன்னாள்; "நான்தான். என் பசுவையும் கொணர்ந்துவிட்டேன்"

"உம்......"

"இதனல்,தான் நேரமாகிவிட்டது—பசுவை ஓட்டிக்கொண்டு மெதுவாக வரவேண்டியிருந்தது."

"பசு ஒன்று ஓட்டிக்கொண்டு வந்திருக்கிருயா?"

"ஆமாம்." அவள் குரலில்தான் என்ன பெருமை தொனித்தது! என்னைப் போன்ற பணக்காரி இந்த உலகில் யார் என்று அவள் கேட்பதுபோல இருந்தது. "நான் சொல்வதில் நம்பிக்கை வரவில்லையா உனக்கு?"

ஐஸக்குக்குக் கவலையாகத்தான் இருந்தது. ஆனல் அதைக் காண்பித்துக்கொள்ளவில்லை. "உள்ளே வந்து ஏதாவது சாப்பிடு" என்ருன்.

"பசுவைப் பார்த்தாயா? நல்ல பசு அது. அழகாகவும் இல்லையா?"

"நல்ல பசுதான்." கவலையேயில்லாதவன் கேட்பது மாதிரி, "எங்கிருந்து பிடித்துக்கொண்டு வந்தாய் அதை?" என்று சாதாரணமாகக் கேட்டான்.

"அதன் பெயர் தங்கக் கொம்பு, அந்தச் சுவர் எழுப்பியிருக்கிருயே—அது எதற்காக? நீ உழைத்து உழைத்தே உயிரை விட்டுவிடுவாய்? வா! என் பசுவை வந்து பார்—பாரேன்."

கொட்டிலில் போய்ப் பார்த்தார்கள். ஐஸக் தன் உள் ஆடைகளுடன் இருந்தான். அதனலென்ன? மேலும் கீழுமாக அந்தப் பசுவைப் பரிசோதித்துப் பார்த்தான் ஐஸக். தோளில் உள்ள சுழிகளைப் பார்த்தான். கொம்பைத் தொட்டுப் பார்த்தான். வாலுக்குப் பக்கத்திலிருந்த சுழிகளைப் பார்த்தான். அது நிற்கிற நிலையை நகர்ந்து நின்று பார்த்தான்.

ஜாக்கிரதையாக ஐஸக் கேட்டான்: "இதற்கு வயசென்ன இருக்கும்? தெரியுமோ உனக்கு?"

"தெரியாமல் என்ன? நாலு வயசும் நாலு மாசங்களும் ஆகின்றன சரியாக. அது பிறந்தது முதல் என்னிடமே தீனி தின்று வளர்ந்த பசுவாக்கும்! கன்றுக்குட்டியா யிருக்கும்போது அது எவ்வளவு அழகாக இருக்கும் தெரியுமோ? அதிருக்கட்டும்—அதற்கும் சேர்த்துத் தீனி போட இங்கு......"

இவ்வளவும் சொன்னபிறகு நம்பிக்கை வராமலா போய்விடும்? அவனும் நம்பத் தயாராகத்தானே இருந்தான்? திருட்டு மாடல்ல அது என்று அவனுக்குத் தோன்றிவிட்டது. "தீனிக்கென்ன?

வேண்டுமென்கிற தீனி இருக்கிறது—பயப்படாதே" என்று அவளுக்குப் பதிலளித்தான்.

இருவரும் வீட்டுக்குள் சென்றார்கள். சாப்பிட்டார்கள். காபி போட்டுச் சாப்பிட்டார்கள். பிறகு இருவரும் நெருங்கிப் படுத்துக் கொண்டு பசு என்கிற தத்துவத்தைப் பற்றிப் பொதுவாகவும் தங்கள் பசுவைப் பற்றியும் வாய் ஓயாமல் பேசினார்கள்.

"எனக்கு மிகவும் பிரியமான பசு இது! இரண்டாவது தடவை ஈனப் போகிறது. அதன் பெயர் தங்கக் கொம்பு. அதன் கொம்புகள் தங்கம் மாதிரி இல்லை! தூக்கம் வருகிறதா ஐஸக்?"

"இல்லை."

"இத்தனை நாள் கழித்துப் போனேனே! அது உடனே என்னிடம் வந்துவிட்டது! ஆட்டுக்குட்டி மாதிரி சாதுவாக என்னைத் தொடர்ந்து வந்தது. எதிரில் தெரிகிற மலையுச்சியிலே நேற்றிரவு படுத்திருந்தோம்."

"அப்படியா?"

"இருந்தாலும் கோடையில் அதை அவிழ்த்து விடக்கூடாது. ஓடிப்போய்விடும். பசு ஓடிவிட்டதானால் நஷ்டம்தானே! யாராவது திருடிக்கொண்டு போய்விட்டார்களானால்......!"

ஐஸக் கடைசியாகக் கேட்டேவிட்டான்: "இத்தனை நாளும் இந்தப் பசு எங்கே இருந்தது?"

"அதுதான் சொல்லிக் கொண்டிருக்கிறேனே! பசுவை ஓட்டிக் கொண்டு வந்து விட்டதுபற்றி என் ஜனங்களுக்கு எவ்வளவு வருத்தம் தெரியுமா? என் வீட்டுக் குழந்தைகள் எல்லாம் அதை விட மனசில்லாமல் அழுதன."

இத்தனையும் அவள் கற்பனை செய்து சொல்லிக் கொண்டிருக்கிறாளோ? இராது. அவ்வளவு ஜோடித்துச் சொல்ல அவளுக்குத் தெரியாது. உண்மையாகத்தான் இருக்கும். பசு அவளுடையதேதான். அவன் அதிருஷ்டசாலிதான். அவன் தொட்டது துலங்கிற்று. நிலமும் வீடும் மாடு கன்றும் ஆடுகளும்—அவன் நிலைமை அபிவிருத்தியடைந்து கொண்டிருந்தது. யாரும் இதற்கு மேல் வேண்டும் என்று ஆசைப்படமாட்டார்கள். அப்படி ஆசைப் பட்டால் அது பேராசைதான்! ஓ! அந்த இங்கரை அவன் காதலித்தான். அவளும் பதிலுக்கு அவனிடம் அன்பு வைத்திருந்தாள். செட்டான புள்ளிகள் இருவரும். இயற்கையோடு ஒட்டி வாழ்ந்தார்கள் அவர்கள்—அவர்களுக்கு ஒரு குறைவுமில்லை.

"தூங்கலாமா?" இருவரும் தூங்கினார்கள். காலையில் புதிய தினம் தொடங்கிவிட்டது. செய்வதற்குக் காரியங்கள் இருந்தன. பார்ப்பதற்கு, கவனிப்பதற்கு எத்தனையோ இருந்தன. கஷ்டங்கள் இருந்தன. சுகங்கள் இருந்தன. உழைப்பும் ஊதியமும், துன்பமும் இன்பமும் வாழ்விலே கலந்து கிடந்தன. ஏற்றமும் இருக்கும், தாழ்வும் இருக்கும்—அதுதானே வாழ்க்கை?

ஆமாம்; சதுரப்படுத்திய அந்த மரக் கட்டைகள் விஷயம் என்ன? அவற்றைச் சேர்த்துப் பிணைத்தால் என்ன? கிராமத்தில் ஐஸக் பார்த்திருக்கிறான்—தச்சர்கள் எப்படி மரங்களை, மரப் பலகைகளைப் பிணைக்கிறார்களென்று பார்த்திருக்கிறான். ஞாபகத்தில் வைத்திருக்கிறான். அவனாலும் அதேமாதிரி செய்யமுடியாதா என்ன? ஏன் செய்யக்கூடாது? தவிரவும் அது அவனுக்கு ஒரு சவால். செய்யவே வேண்டும் அவன். அவனுடைய நிலத்தை நம்பி இப்போது ஒரு மனைவி, ஒரு பசு, கொட்டில் நிறைய ஆடு மாடுகள் இருந்தன. இன்னும் குடும்பம் வளரும்; புதுப் புதுத் தேவைகள் தோன்றும். மண் குடிசையிலே இப்போது ஆடுமாடுகளுக்கு மட்டுமே இடம் இருந்தது. மனிதர்களுக்கு இடம் போதவில்லை. அதற்கும் வழி ஏதாவது செய்தேயாக வேண்டும். ஐஸக் செய்வான். செய்வது என்று தீர்மானித்தவுடன், இப்பவே தொடங்கி விடுவதுதான் நல்லது என்றும் தோன்றியது. உருளைக் கிழங்குச் செடிகள் பூத்துக் குலுங்கின. வைக்கோல் போர் போட இன்னும் நாளாகவில்லை. வேறு அவசியமான காரியமும் இல்லை. இங்கரும் இந்த வேலையில் உதவலாம்.

இரவு பாதித் தூக்கத்திலே விழித்துக் கொள்ளுகிறான் ஐஸக். நடந்துவந்த களைப்பு—இங்கர் ஆழ்ந்து தூங்கிக் கொண்டிருக்கிறாள். நேரே மாடு கட்டியிருந்த இடத்துக்குச் சென்றான். பசுவிடம் அசட்டுத்தனமாக ஏதோ அடிமைப்பட்டவன் மாதிரி நடந்து கொள்ளவில்லை ஐஸக். தான்தான் அந்தப் பண்ணைக்கு அதிபதி என்று காட்டுகிற தோரணையிலே அதன் பிடரியில் தட்டிக் கொடுத்தான். மறுபடியும் அதைப் பரிசோதித்துப் பார்த்தான். வேறு யாருடைய பசுவாகவாவது அது இருந்தால் அதன் மேல் எழுதியிருக்கும் என்று எண்ணியவன் போலக் கூர்ந்து கவனித்தான். ஒன்றும் தடயமில்லை. ஐஸக்குக்குத் திருப்திதான். அங்கிருந்து சந்தடி செய்யாமல் நகர்கிறான்.

மரச் சதுரங்கள் அதோ அடுக்கிக் கிடக்கின்றன. உடனேயே வேலையைத் துவக்கி விடுகிறான். மரத்தை எடுத்து

நிறுத்தி வைக்கிறன். கல் சுவரை ஆதாரமாக வைத்து வீட்டை நிர்மாணிக்கத் தொடங்கினன். ஒரு பெரிய முன்னறை; பக்கத்தில் ஒரு சிறிய அறை; தூங்குவதற்கு ஒரு அறை; மரங்களைத் தூக்கி எடுத்து நிறுத்திப் பொறுத்தி வைத்து வீட்டைக் கட்டுவது சிரமமான வேலைதான். மேல் மூச்சு கீழ் மூச்சு வாங்கியது. அதில் கவனமாக இருந்த ஐஸக்குக்கு நேரம் போனதே தெரியவில்லை. புகைபோக்கியிலிருந்து புகை வந்தது. பிறகு இங்கர் வெளியே வந்து காலைச் சாப்பாடு தயார் என்று தெரிவித்தாள்.

“இப்பொழுது என்ன வேலை நடக்கிறது?” என்று கேட்டாள் இங்கர்.

“நீ சீக்கிரம் எழுந்துவிட்டாயே” என்றுன் ஐஸக். வேறு எதுவும் சொல்லவில்லை.

ஓஹோ! ரகசியம்தான்! எல்லாமே ரகசியம்தான்! வாயைத் திறந்து அவளுக ஏதாவது சொல்லி விடுவானு? அவள் அப்படிக் கேட்டுத் தெரிந்துகொள்ள முயன்றது அவனுக்குத் திருப்தியாக இருந்ததுபோலும். அவன் மனசில் இருந்ததைத் தெரிந்து கொள்ள வேண்டும் என்று அவள் துடியாகத் துடித்தாள். கொஞ்சம்தான் சாப்பிட்டான். அன்று மத்தியானம் சாப்பாடு கிடைக்கும். ஆனல் சாப்பிட்ட பிறகும் அவன் உடனே எழுந்து போய்விடவில்லை. எதற்காகவோ காத்திருப்பவன்போல உட்கார்ந்திருந்தான்.

“ம்...... உட்கார்ந்திருந்தால் சரிப்படுமா? அதுவும் இன்று?” என்று சொல்லிக்கொண்டே எழுந்தான். “சோம்பலாக இருக்கக் கூடாது. போய்க் காரியத்தைப் பார்க்கிறேன்.”

“என்ன கட்டுகிறுய்? எதற்கு?” என்றுள் இங்கர்.

பெருமிதமாகப் பதிலளித்தான் ஐஸக். மரவீடு கட்ட ஆரம்பித்துவிட்ட பெரிய மனிதன் அல்லவா அவன்? “பார்த்தால் தெரியவில்லையா?”

“தெரிகிறது! தெரிகிறது!”

“வீடு கட்டுகிறேன்—பெரிசாக—மரவீடாகக் கட்டுகிறேன். தவிர நீ வேறு ஒரு புதுப் பசுவைக் கொண்டுவந்து கட்டியிருக்கிருயே! அதற்கு இருக்க இடம் வேண்டாமா?”

பாவம் இங்கர்! ஐஸக்கைப் போலக் கெட்டிக்காரியா அவள்? இன்னும் ஐஸக்கின் வழிகள் பூராவும் அவளுக்குச் சரிவரப் பிடிபடவில்லை. இங்கர் சொன்னுள்: “மாட்டுக் கொட்டிலா அவ்வளவு பெரிதாகக் கட்டுகிருய்?”

"ஓஹோ-ஹோ!" என்ருன் ஐஸக்.

"அதெல்லாம் இல்லே. முதலில் நாம் இருப்பதற்கு வீடு தான் கட்டுவாய்."

"அப்படியா எண்ணினுய் நீ!" அதைப்பற்றித் தான் அது வரை யோசிக்காதவன் மாதிரி பேசினுன் ஐஸக்.

"ஆமாம். இந்தக் குடிசையில் ஆடுகளும் மாடும் இருக்கலாம். நாம் மரவீட்டில் இருக்கலாம்."

"அந்த யோசனே எனக்குத் தோன்றவில்லேயே!" என்ருன் ஐஸக்.

இங்கருக்கு ஆனந்தம் தாங்கவில்லே. "பார்த்தாயா? என்னுல் கூட ஏதோ கொஞ்சம் உபயோகம் உண்டு" என்ருள்.

"உண்மைதான். இரண்டு மூன்று அறைகள் உள்ள வீடாகக் கட்டினுல்?"

"இரண்டு மூன்று அறைகளா? பணக்காரர்களான மற்ற மனிதர்களேப் போல நாமும் வசிக்கலாம். கட்டினுல் நல்லதுதான். முடியுமா?" என்ருள் இங்கர்.

இருவருமாக உழைத்துப் பாடுபட்டுத்தான் அந்த வீட்டைக் கட்டினுர்கள். மரத்தை இணைத்துச் சேர்த்து வீட்டை நிர்மாணித் தான் ஐஸக், தேர்ந்த தச்சன் மாதிரி. அது மட்டுமல்ல; கணப்புப் போட கற்களேப் பதித்துத் தரை செய்தான். அந்தக் கணப்புத் தரை அவ்வளவாக நன்ருக அமையவில்லே. ஐஸக்குக்கே அது திருப்தி தரவில்லே. இதற்குள் வைக்கோல் போர் போடவேண்டிய நாள் வந்துவிட்டது. வீடு கட்டுவதை நிறுத்திக்கொண்டு வைக் கோல் சேகரம் செய்தான். வெகு தூரம் சென்று புல் பூண்டுகளே வெட்டிக் காயவைத்துக் கட்டுக் கட்டாகக் கொணர்ந்து அடுக்கினுன். ஒரு நாள் மழை பெய்தது. அன்று கிராமத்துக்குப் போக விரும்பினுன் அவன்.

"என்ன வாங்க வேண்டும்?"

"எனக்கே இப்போது தெரியாது. போய்த்தான் தெரியும்?"

கிளம்பினுன். இரண்டு நாட்கள் அவன் திரும்பவில்லே. மூன்ருவது நாள் முதுகில் ஒரு பெரிய இரும்பு அடுப்பைச் சுமந்து கொண்டு திரும்பி வந்தான்—மலேபோல வந்தான்.

"இவ்வளவு பெரிய சுமையை ஒண்டியாக நீ தூக்கி வரலாமா?" என்று கேட்டாள் இங்கர். "இப்படி வேலே செய்தால் என்று என்ன நேருமோ?"

கணப்புக்காகக் கட்டியிருந்த கல் தரையைத் தள்ளிவிட்டு அந்த இடத்தில் இரும்பு அடுப்பை வைத்தான் ஐஸக்.

"எல்லா வீட்டிலுமா இரும்பு அடுப்பு இருக்கிறது? தேவலேயே!" என்று ஆனந்தித்தாள் இங்கர்.

புல்லைக் காய வைத்து வைக்கோல் போர் எழுப்பினுன் ஐஸக். காட்டுப் புல் நிறைய வேண்டும்—நாட்டுப் புல் மாதிரித் தரமுள்ளது அல்ல காட்டுப் புல். ஐஸக் வெகு சிரமப்பட்டு பெரிய பெரிய போர்களாக எழுப்பி வைத்துக்கொள்ள வேண்டியதாயிருந்தது. இப்போதெல்லாம் மழை பெய்கிற நாட்களில்தான் வீடு கட்டுகிற வேலை செய்ய முடிந்தது. எவ்வளவு நாட்களாயின! ஆகஸ்டு மாசத்தில்கூட வீடு கட்டி முடியவில்லை—பாதிதான் ஆயிருந்தது. வைக்கோல் வேண்டியது சேகரித்துப் போர் போட்டாகிவிட்டது. ஸெப்டம்பரில் ஐஸக் சொன்னுன்: "இப்படிச் செய்தால் போதாது. நீ கிராமத்துக்குப் போய் உதவிக்கு ஆள் யாரையாவது கூப்பிட்டு வா." இங்கருக்குச் சில நாட்களாகவே உடல் நலமில்லை. அவள் கிராமத்துக்குப் போகத் தயாரானுள்.

ஆனல் ஐஸக் மனது அதற்குள் மாறிவிட்டது. "வேறு ஆளைக் கூப்பிடுவானேன்? நானே செய்து முடித்து விடுவேன். உதவி தேவையில்லை" என்ருன்—எந்த வேலைக்கும் அஞ்சாத ராக்ஷசனைப்போல.

"ஒண்டியாசச் செய்து முடிக்கக்கூடிய காரியமா இது? முடியாது" என்ருள் இங்கர்.

"இந்த மரங்களைத் தூக்கி நிறுத்திவைக்க எனக்கு உதவி செய் நீ."

அக்டோபர் வரை அவளும் உதவினுள். அதற்குப் பிறகு அவளால் முடியவில்லை, உத்திரங்கள் தூக்கி விடுவதற்கு அவள் உதவி தேவை. ஒருநாள் வீணுகக் கூடாது என்பது ஐஸக்கின் விருப்பம். இங்கருக்கு என்ன கேடு வந்துவிட்டது? சீக்காகப் படுத்து விடுவாளா அவள்? பாலேடை செய்வாள் அவள்; அதைத் தவிர வேறு எந்த வேலையுமே அவளால் இப்பொழுதெல்லாம் செய்யமுடியவில்லை.

"அடுத்த தடவை கிரமத்துக்குப் போகும்போது எனக்கு ஒரு பெரிய கூடை அல்லது பெட்டி வாங்கி வா" என்ருள் இங்கர்.

"எதற்கு?" என்ருன் ஐஸக்.

"எனக்கு வேண்டும். வாங்கி வாயேன்" என்ருள் இங்கர்.

கயிற்றில் கட்டி உத்திரங்களைத் தூக்கிப் போட்டான் ஐஸக். உதவி செய்தாளோ இல்லையோ, இங்கர் தனக்குப் பக்கத்தில் இருப்பதே பெரிய உதவியாக இருந்தது. வேலை சிறிது சிறிதாக நடந்து முன்னேறியது. வீடு அதிக உயரமில்லை. மரங்களும் தேவைக்கு அதிகமான கனம் இருந்தன. அவ்வளவு சிறிய வீட்டுக்கு அத்தனை மரம் தேவையில்லை.

நாட்கள் இனிமையாகவே இருந்தன. மழையும் இல்லை—வெயிலும் இல்லை. இங்கர் தானாகவே உருளைக் கிழங்குகளைத் தோண்டி எடுத்துக் குவித்தாள். மழை தொடங்குமுன் கூரையையும் வேய்ந்து முடித்துவிட்டான் ஐஸக். இன்னமும் ஆடு மாடுகளுடன் ஐஸக்கும் இங்கரும் அந்தச் சின்னக் குடிசையிலே தான் படுத்துறங்கினார்கள். என்னமோ, எப்படியோ, நாட்கள் கழிந்தன; வாழ்க்கை நடந்தது. இருவரும் முணுமுணுக்கவில்லை; கசந்து கொள்ளவில்லை.

மீண்டும் ஒருதரம் கிராமத்துக்குச் சென்று வர ஐஸக் தயாரானான். மிகவும் தாழ்மையுடன் இங்கர் வந்து சொன்னாள்; "எனக்காக ஒரு பெட்டியோ, கூடையோ வாங்கி வருகிறாயா ?" என்றாள்.

"ஜன்னல் கண்ணாடிகள் சில சொல்லியிருக்கிறேன். சில வர்ணம் தீட்டிய கதவுகளும் சொல்லியிருக்கிறேன். அவைகளையும் கொண்டுவரவேண்டுமே!" என்றான் ஐஸக் பெருமிதத்துடன்.

"சரி, அப்படியானால் நான் கேட்டது வேண்டாம் !"

"எதற்கு ? எப்படி ? எதற்கு ?"

"எதற்கா ? உனக்குக் கண்களில்லையா ?" என்றாள் இங்கர்.

சிந்தனையில் ஆழ்ந்தவனாகக் கிளம்பினான் ஐஸக். இரண்டு நாட்களுக்குப் பிறகு, அவன் திரும்பினான். முன்னறைக்கு ஒரு கதவு, ஜன்னல், படுக்கையறைக்கு ஒரு கதவு, இவற்றுடன் கழுத்தில் ஒரு பெரிய பெட்டியைக் கட்டித் தொங்கவிட்டுக்கொண்டு வந்தான். அந்தப் பெட்டியும் காலியாக இல்லை. அதில் தேவையான உணவுப் பொருள்களை வாங்கிப் போட்டிருந்தான்.

"இந்தமாதிரி தூக்கமுடியாத கன சாமான்களைச் சுமந்து சுமந்தே நீ ஒரு நாள் பிராணனை விட்டுவிடுவாய்!" என்றாள் இங்கர்.

"ஓஹோ...ஹோ! அப்படியா ?" என்றான் ஐஸக். அப்படி ஒன்றும் கனமான சாமான்களாகத் தோன்றவில்லை அவனுக்கு. தன் சட்டைப் பையிலிருந்து ஒரு பாட்டில் மருந்தை—அது நாப்தா

எண்ணெய் எடுத்து அவ்விடம் கொடுத்து, "சாப்பிட்டு உடம்பைப் பார்த்துக்கொள்" என்ருன். அந்த ஜன்னல்களும், கதவுகளும் பற்றி அவனுக்கிருந்த பெருமை சொல்லி மாளாது! பழசுதான் அவையெல்லாம்—ஆனல் அவையெல்லாம் புதுசாக வர்ணம் தீட்டிப் பளபளவென்று இருந்தன. சுவரில் படங்கள் அடித்து மாட்டியதுபோல இருந்தது.

புதுக் கட்டிடத்தில் வசிக்கத் தொடங்கினர்கள் அவர்கள் இருவரும். மண் குடிசையை ஆடுகளுக்கும் மாட்டுக்குமென்று விட்டுவிட்டார்கள். பசுவுக்கென்று ஒரு தனி அறை இருந்தது. அது தனிமையில் தவிக்கப் போகிறதே என்று ஒரு ஆட்டுக் குட்டியை மட்டும் அதன் பக்கத்தில் விட்டு வைத்திருந்தார்கள்.

காட்டின் ஓரத்திலே குடியேறி வீடு கட்டத் தொடங்கிய இந்த மனிதர்கள் முன்னேறிக் கொண்டிருக்கிருர்கள். நல்ல ஸ்திதியை எட்டிவிட்டார்கள். அவர்களுக்கே அது ஆச்சரியமாக இருக்கிறது.

## 3

**ப**னி உரையும் வரையில் பூமியில் வேலை செய்தான் ஐஸக். நிலத்திலிருந்து கற்களையும் வேர்களையும் களைந்தெடுத்து அப்புறப் படுத்த வேண்டியிருந்தது. தவிர, பூமியை உழுது விதைக்கச் சமப்படுத்தியாகவேண்டும். பூமியில் பனி உறைந்த பிறகு, நிலத்தில் வேலை செய்வதை நிறுத்திவிட்டு மீண்டும் மரம் வெட்டத் தொடங்கினன். முன்மாதிரி மரங்களை வெட்டிச் சதுரப்படுத்த வில்லை அவன்; விறகுக்காக வெட்டித் தள்ளினன்.

"இத்தனை மரக்கட்டைகளையும் என்ன செய்யப் போகிருய்?" என்று கேட்டாள் இங்கர்.

"ஓ! ஏதாவது உபயோகப்படாமலா போய்விடும்!" என்பான் ஐஸக், அவைபற்றி மனசில் எவ்வித உத்தேசமும் இல்லாதவன் போல. அவன் மனசில் ஒரு திட்டம் இருக்கத்தான் இருந்தது. இல்லாமலில்லை. அவன் கைக்கு எட்டுகிற வகையிலே ஒரு காடே இருந்தது. காட்டு ஓரத்திலிருந்த மரங்களை வெட்டி விறகுக் கென்று விற்ருல், லாபம் உண்டு. காடு திருத்திய நிலம் சாகுபடி செய்யவும் பயன்படும். மாரிக்காலத்தில் வெட்டிய விறகைக் கிராமத்துக்குக் கொண்டுபோக ஏதாவது வழி ஏற்படுத்திக் கொண்டால், நல்ல விற்பனையாகும். ஏனென்ருல் கணப்புகளுக்கு என்றும் விறகு தேவைதானே? நல்ல யோசனை இது. அந்த

யோசனை தோன்றியவுடனே வேலையை நடத்தத் தொடங்கி விட்டான் ஐஸக். நாள் பூராவும் காட்டிலே விறகு வெட்டிப் போட்டான் அவன்.

அவன் விறகு வெட்டிக் கொண்டிருக்கும்போது அடிக்கடி இங்கர் வந்து அவன் வேலை செய்வதைப் பார்ப்பாள். அவன் அவளைக் கவனியாதமாதிரி வேலைசெய்து கொண்டிருப்பான். அவள் அப்படி அங்கு வந்து உட்கார்ந்துகொண்டிருப்பது பிடிக்காதமாதிரிகூட நடந்துகொள்வான். ஆனால் அப்படித் தான் வந்தது அவனுக்குப் பிடித்தேயிருந்தது என்பதை எப்படியோ இங்கர் உணர்ந்திருந்தாள். இருவரும் பேசிக்கொள்வதே ஒரு தனி தினுசாக இருக்கும்.

"இங்கே குளிரக்குளிர வந்து உடல் விறைக்க உட்கார்ந்து கொண்டிருப்பானேன்? வீட்டிலே செய்ய வேலை ஒன்றும் இல்லையோ?" என்கிறான் ஐஸக்.

"எனக்குக் குளிரவுமில்லை; விரைக்கவுமில்லை. ஆனால் நீ இப்படி மூன்று ஆள் வேலையைச் செய்து விடுவதுதான் எனக்குப் பிடிக்கவில்லை" என்கிறாள் இங்கர்.

"ஓஹோ ஹோ!" என்கிறான் ஐஸக். "குளிருகிறது. என் கோட்டை எடுத்து மாட்டிக்கொள்."

"உன் கோட்டை மாட்டிக் கொள்வானேன்? இங்கே உட்கார எனக்கு நேரம் ஏது? தவிரவும், தங்கக்கொம்பு கன்று ஈனுகிற தறுவாயில் இருக்கிறதே! எனக்கு வீட்டில் வேலையில்லையா?" என்கிறாள் இங்கர்.

"ம்...ம். கன்று ஈனப் போகிறதா?"

"தெரியாதமாதிரி கேட்கிறாயே; கன்று போட்டால் என்ன செய்வது? வளர்த்து அதைப் பெரிதாக விடுவதா? அல்லது...?"

"பசுவும் கன்றும் என் கவலை இல்லை. அதையெல்லாம் நீயே பார்த்துக்கொள்" என்கிறான் ஐஸக்.

"அப்படியானால் கன்றை வளர்ப்போம். நமது பண்ணையிலே ஒரு பசு மட்டும் இருந்தால் போதுமா?"

"அடித்துத் தின்பதைவிட இதுவே நல்லது என்று எனக்கும் தோன்றியது" என்கிறான் ஐஸக்.

இப்படித்தான் அவர்கள் சுற்றிவளைத்துப் பேசிக் கொள்வார்கள். தனிமையில் வாழ்கிறார்கள்; ஒருவருக்கொருவர் துணை. பார்க்க அவர்களிருவரும் நன்றாக இல்லை. மிகவும் தாட்டி

யாக, பலசாலிகளாக வளர்ந்து பருத்திருக்கிறார்கள். ஒருவருக்கொருவர் உறுதுணை. அவர்களுடைய ஆடு மாடுகளுக்கு உறுதுணை, அந்தக் கன்னி நிலத்துக்கு உயிர் அளித்துச் சாகுபடி செய்துவருகிற அந்த மனிதர்கள்.

ஒரு நாள் தங்கக்கொம்பு ஈன்றது. அந்தக் காட்டிலே அது ஒரு புனிதமான நாள்—சந்தோஷமான இன்பமான நாள். மாவு கரைத்துத் தந்தார்கள் பசுவுக்கு. ஐஸக்கே நிறையப் போட்டு மாவு கரைத்து வைத்தான். அதுவும் முதுகுவலிக்க சாக்குப் பையில் சுமந்துவந்த மாவு. பசுவின் பக்கத்தில் கிடந்தது கன்று. அதன் வயிறும் சிவப்பாக, தாயினுடையதே போல, அழகாக இருந்தது. உலகில் வந்து பிறப்பது என்கிற அதிசயத்தைச் சாதித்துவிட்டு அந்தக் கன்று திகைத்து மிரள மிரள அழகாக விழித்தது. இன்னும் இரண்டு வருஷங்களில் அதுவே கன்றுகள் ஈனத் தொடங்கிவிடும்.

"இதுவும் வளர்ந்து தாயைப்போலவே நல்ல பசுவாகும். பார்க்கவும் அழகாக இருக்கிறது. இதற்குப் பெயர் என்ன வைப்பது?" என்று கேட்டாள் இங்கர்.

அவளுக்குக் குழந்தை போல ஆனந்தம் பொங்கியது. அவள் கெட்டிக்காரியல்ல. எதற்குமே முடிவுகட்ட அவளுக்குத் தெரியாது.

"பெயரா?" என்றான் ஐஸக். "ஏன்? வெள்ளிக்கொம்பு என்று வைக்கலாம். அதில் என்ன தவறு?"

மீண்டும் பனி பெய்யத் தொடங்கியது. கிராமத்துக்குப் போகும் பாதை சேறு நீங்கி, பனி உருகிச் சரியானதும், ஐஸக் கிராமத்தை நோக்கிக் கிளம்பினான். "என்ன வேலை கிராமத்தில்?" என்று இங்கர் கேட்டதற்கு ஐஸக் பதில் தரவில்லை—ரகசியம் அது. ஆனால் இந்தத் தடவை அவன் திரும்பும்போது என்ன ஆச்சரியம்! —ஒரு குதிரையையும் வண்டியையும் ஓட்டிக்கொண்டு வந்தான். ஆமாம்; வண்டியும் குதிரையும் தான்!

"இதென்ன அசட்டுத்தனம்?" என்றாள் இங்கர். "இதை எங்கே திருடிக் கொணர்ந்தாய்?"

"திருடியா?"

"யாராவது விட்டு விட்டுப் போனதை ஓட்டிக்கொண்டு வந்தாயா?"

"இல்லை, வண்டியும் குதிரையும் வாங்கினேன்—நம்முடையது தான்" என்று சொல்ல ஐஸக்குக்கு ஆசைதான். ஆனால்

உண்மை அதுவல்ல. வாடகை பேசி அவற்றைக் கொணர்ந்திருந்தான் அவன். விறகுக் கட்டையை எடுத்துப்போக அவற்றை ஓட்டி வந்திருந்தான்.

வண்டியிலே விறகுக் கட்டைகளை ஏற்றிக்கொண்டு போனான் ஐஸக். விறகை விற்றுவிட்டு அதற்குப் பதில் உணவு, இறைச்சி, மீன், மாவு எல்லாம் கொணர்ந்தான். வண்டியிலே ஒரு நாள் ஒரு காளையையும் ஏற்றிக்கொண்டு வந்தான்—அதை அவன் ரொம்பவும் மலிவாக வாங்கினான். ஏனென்றால் கிராமத்திலே மனிதர்களுக்கே தீனி போதவில்லை; காளைக்குத் தீனி போட முடியாமல் சிரமப்பட்டு அகப்பட்ட விலைக்கு அதை விற்றுவிட்டார்கள். தோலாக, எலும்பு தெரிய இருந்தது அந்தக் காளை—ஆனால் தீனி போட்டுவிட்டால் சரியாகிவிடும். பண்ணையிலே பசு இருந்தது. நல்லதுதானே?

"இன்னும் என்ன என்ன கொண்டுவரப் போகிறாய்?" என்றாள் இங்கர்.

இன்னும் என்னவெல்லாமோ கொண்டுவந்தான் ஐஸக். பலகைகள் வாங்கி வந்தான்—ஒரு ரம்பம் வாங்கி வந்தான். இயந்திரம் ஒன்று கொண்டுவந்தான்; ரோட்டுக் கல் கொண்டு வந்தான். ஆயுதங்கள்—பண்ணைக்குத் தேவையான இரும்பு ஆயுதங்கள் பல கொணர்ந்தான். விறகுக் கட்டுகளையெல்லாம் கொடுத்துவிட்டு இத்தனையும் கொணர்ந்தான். இங்கருக்குப் பெருமை தாங்கவேயில்லை. தான் பணக்காரி, ஒரு பெரிய பண்ணையின் சொந்தக்காரி என்கிற உணர்ச்சி ஏற்பட்டது அவளுக்கு. "என்ன, இன்னும் கொண்டுவந்து, கொண்டுவந்து சேர்த்துக்கொண்டிருக்கிறாயே! ஆடு மாடு எல்லாம் இருக்கிறது. வேறு என்ன வேண்டும் நமக்கு?"

பல நாட்களுக்கு அவர்களுடைய தேவைகளை எல்லாம் பூர்த்தி செய்யக்கூடிய அளவுக்கு அவர்களிடம் பொருள்கள் சேர்ந்து விட்டன. இப்போது அவர்கள் ஏழைகள் அல்ல. அடுத்த வசந்தத்தில் ஐஸக் வேலையே செய்ய வேண்டியதில்லை. ஒன்றும் செய்வதற்கு இல்லை என்று தோன்றியது. ஆனால் ஐஸக் தன் வேலையை முன்கூட்டியே யோசனைசெய்து வைத்துவிட்டான். விறகுக் கட்டுகளை வண்டியில் போட்டு ஓட்டிக்கொண்டுப் போகும் போது யோசித்து முடிவுகட்டிவிட்டான் அவன். இன்னும் ஒரு பெரியபகுதி நிலத்தை உழுது விதை விதைக்கத் தயார் செய்வான் அவன். இன்னும் மரங்களை வெட்டி விறகுக் கட்டுகளாகக் கட்டிப்

போடுவான். இது இரண்டும் கோடையில் செய்யவேண்டிய வேலை. பனிமழை பெய்யும்போது விறகு கொண்டுபோய் தூரத்துக் கிராமங்களில் விற்கலாம். அழகான திட்டமிட்டிருந்தான் அவன்—அழகாகவும் நடத்தினன்.

பல சமயங்களில் ஐஸக்குக்குத் தங்கக் கொம்பைப்பற்றி மீண்டும், மீண்டும் சந்தேகம் வந்துவிடும். உண்மையிலேயே அந்தப் பசு இங்கருடையதுதானு? இந்த இங்கரைப் போன்ற மனைவி உலகில் வேறு யாருக்காவது வாய்த்திருப்பாளா? அவள் நாட்டுக்கட்டை. அவன் இஷ்டப்படி எல்லாம் அவளை ஆட்டி வைத்தான். இங்கர் ஆக்ஷேபிக்கவில்லை. அது விஷயத்தில் அவனுக்குப் பரமதிருப்திதான். ஆனுல், என்றைக்காவது ஒரு நாள், அந்தப் பசுவின் சொந்தக்காரர்கள் வந்துவிட்டால்—வந்து அதை எடுத்துக்கொண்டு போய்விட்டால் என்ன பண்ணுவது? அதோடு நிற்காமல் வேறு ஏதாவது செய்துவிட்டார்களானுல்? குதிரையையும் வண்டியையும் அவன் ஓட்டிக்கொண்டு வந்தபோது அவள் என்ன கேட்டாள்? "திருடிக்கொண்டு வந்தாயா அல்லது தெருவில் நின்றதை ஓட்டிக்கொண்டு வந்துவிட்டாயா?" என்று கேட்டாளே! அவளை நம்பமுடியுமா? அவளை எப்படி நம்புவது? அவன் இந்தச் சந்தர்ப்பத்தில் என்ன செய்யலாம்? பல தடவைகள் அதுபற்றிச் சிந்தித்துச் சிந்தித்துப் பார்த்தான். அவனே அந்தப் பசுவுக்கென்று ஒரு காளையை ஓட்டிவந்து விட்டான்—அது திருட்டுப் பசுவோ என்னவோ?

குதிரையையும் ஓட்டிக்கொண்டுபோய் விட்டாக வேண்டும். அவனிடமே ஒரு குதிரையும் வண்டியும் இருந்தால்......! அந்தக் குதிரைதான் அவனிடம் எவ்வளவு பிரியமாக இருந்தது!

"குதிரையை ஓட்டித் திருப்பிக் கொடுத்துவிட வேண்டியதுதான். வேறு என்ன செய்வது?" என்றுள் இங்கர். "இவ்வளவு காரியங்கள் நீ செய்துவிட்டாயே? அதுவே பெரிதில்லையா?"

"வஸந்தம் வருகிறது. எனக்கும் ஒரு குதிரை இருந்தால்?"

கடைசி விறகுக் கட்டுகளை வண்டியில் ஏற்றிக்கொண்டு போனுன் ஐஸக். இரண்டு நாள் போயிருந்தான். மூன்ருவது நாள் அவன் கால் நடையாகவே திரும்பி வந்தான்—வண்டியையும் குதிரையையும் உடையவனிடம் விட்டு விட்டு, வீட்டை அணுகும் போது அவன் காதில் ஒரு புதுச் சப்தம் கேட்டது. கவனித்துக் கேட்டான் ஐஸக்...அட கடவுளே! ஒரு குழந்தையின் அழுகுரல் அது. அட! கடவுளே! பாரேன் ஆச்சரியத்தை! என்ன

அதிசயம்? இங்கர் அவனிடம் ஒரு வார்த்தைக்கூடச் சொல்ல வில்லையே?

உள்ளே போனான். முதலில் அவன் கண்ணில் பட்டது அந்த பெரிய பெட்டிதான்—அவன் கழுத்தில் கட்டித் தூக்கி வந்தானே அதே பெட்டிதான்! அதன் நாலு மூலைகளிலும் நாலு கயிறுகளைக் கட்டி உத்திரத்திலிருந்து தொங்கவிட்டிருந்தாள் இங்கர். அது தொட்டில்—அவன் குழந்தையின் வாசஸ்தலம். உடைகள் அலங்கோலமாக இங்கர் நடக்கமாட்டாமல் ஏதோ தள்ளாடித் தள்ளாடி வேலைசெய்து கொண்டிருந்தாள். எப்படியோ மாட்டையும் ஆடுகளையும் கறந்துவிட்டாள். சாதாரண நாள் போலவே வேலையைச் செய்ய முயன்றாள்.

குழந்தை அழுவதை நிறுத்தியது! "பெற்றும் பிழைத்து விட்டாயே!" என்றான் ஐஸக்.

"ஆம். பெற்றுப் பிழைத்தேன்."

"உம்......"

"நீ போன அன்று மாலையே பிறந்துவிட்டது."

"உம்." வேறு எதுவும் சொல்ல ஐஸக்குக்குத் தெரியவில்லை.

"ஆடைகளை எடுத்துவிட்டுத் தொட்டிலையும் மாட்டி விட்டுப் படுத்தேன். ஆனால் அதுகூடச் சரிவரச் செய்ய முடியவில்லை."

"எனக்கு முன்கூட்டியே சொல்வதற்கென்ன?" என்றான் ஐஸக்.

"இன்று பிறக்கும் என்று எனக்கு எப்படித் தெரியும்? பையன்" என்றாள் இங்கர்.

"ஓஹோ? பையனா?"

"அவனுக்கு என்ன பெயர் வைப்பது என்றுதான் எனக்குத் தெரியவில்லை" என்றாள் இங்கர்.

தொட்டிலுக்குள் எட்டிப் பார்த்தான் ஐஸக். முகம் சிவந் திருந்தது. மேலுதடு பிளவுபட்டில்லை. பார்க்க நன்றாக இருப்பது மாதிரித்தான் இருந்தது. தலையிலே மயிர் நிறையவே யிருந்தது. பெட்டியில்தான் படுத்திருந்தான் என்றாலும், ராஜகுமாரன் போலக் கம்பீரமாகத்தான் வீற்றிருந்தான். ஐஸக்குக்கு என்னவோ மயக்கம் வருவதுபோல இருந்தது. பலஹீனமாக இருந்தது. என்ன அதிசயம் இது! பூராவும் கண்டு புரிந்து கொள்ள அந்தக் காட்டாளுக்குத் தெம்பு போதவில்லை. எங்கிருந்து வந்தது இந்தக் குழந்தை—எந்தப் பனிப்படலத்துக்

கப்பாலிருந்து வந்தது? எந்தப் புதிரை விடுவித்து வந்தது இது? வருஷங்கள் ஆகட்டும்—இச்சிறு உருவம் வளர்ந்து பெரியவனுகி மனிதனுகிவிடும்.

"சாப்பிட வாயேன்" என்று அழைத்தாள் இங்கர்.

ஐஸக் மீண்டும் விறகுவெட்டியாகிவிட்டான். நாள் பூராவும் விறகுவெட்டி வெட்டிக் குவித்துக்கொண்டிருக்கிறுன். ரம்பத்தினுல் அவன் வேலே சுலபமாகிறது. மனம் தளராமல் உழைக்கிறுன்; மரக் குவியல் பெருகுகிறது. தெருத்தெருவாக, கிராமம் கிராமமாக, நகரம் நகரமாக அடுக்கும்படியாக மரங்களே அறுத்து வெட்டித் தள்ளுகிறுன். இங்கர் இப்பொழுதெல்லாம் அதிகமாக வீட்டிலே தங்குகிறுள். முன்மாதிரி அவன் வேலே செய்யும்போது வந்து கவனிக்க வருவதில்லே. வேலே செய்வதில் பாதியில் ஐஸக் தான் இப்போது ஏதாவது சாக்கை வைத்துக்கொண்டு அடிக்கடி வீட்டுக்குள் போய்ப் போய் வருகிறுன். வீட்டிலே அந்தப் புது உயிர் என்ன வேடிக்கைகள் எல்லாம் செய்கிறது! ஐஸக் பெரியவன்—அந்தக் குழந்தை இருப்பதையே கவனிக்காத மாதிரித்தான் நடந்து கொள்கிறுன். கைகளேயும் கால்களேயும் விசுக்விசுக்கென்று உதைத்துக்கொண்டு பெட்டியிலே கிடக்கிற அந்தப் பையனே எதற்காகக் கவனிக்கவேண்டும்? பிரியமாக இருப்பதா? எதற்காக? எதனிடம்?......ஆனுல் அது அழும் போது அவன் உள்ளத்தில் சுரீர் என்கிறது. எவ்வளவு சின்னக் குரல்! எப்படி உருக்கமாக அழுகிறது அது!

"அவனேத் தொடாதே! கை எவ்வளவு அழுக்காக இருக்கிறது. தொடாதே!" என்று அவனே அதட்டுகிறுள் இங்கர்.

"அழுக்கா—மரத்தூள் இது" என்கிறுன் ஐஸக். "என்னிடம் கொடு—அந்தப் பயலே. பார் இதோ......ஹா..." என்கிறுன் ஐஸக்.

மே மாத ஆரம்பத்தில் அந்தப் பண்ணேக்கு ஒரு புது ஆசாமி வந்தாள். குன்றுகளேயும் மலேகளேயும் காடுகளேயும் தாண்டி வந்தாள் அந்த ஸ்திரீ. இங்கருக்குத் தூரபந்துவாம் அவள். அவளுக்கு நல்வரவு கூறி வரவேற்றுர்கள் இங்கரும் ஐஸக்கும்.

"வந்து பார்த்துவிட்டுப் போகலாம் என்று வந்தேன்" என்றுள் அவள். "தங்கக் கொம்பு எப்படி யிருக்கிறது பார்க்கலாமே என்றுதான் வந்தேன்."

தன் கையிலிருந்த குழந்தையைப் பார்த்தாள் இங்கர் பெருமையுடன். சின்னக் குரலில் சொல்லுகிறுள்; "இந்தச் சின்னப்

பயல் எப்படி யிருக்கிறுன் என்று கேட்டவர்கள் யாருமே இல்லை. ரொம்பச் சின்னப் பயல் இவன்" என்கிருள்.

"சின்னப்பயல் எப்படி இருக்கிறுன் என்றுதான் தெரிகிறதே! நேர்த்தியான பயல், போனவருஷம் யார் இப்படி எண்ணி யிருப்பார்கள்? எங்கள் இங்கர் கணவனுடனும் குழந்தையுடனும், ஆடு மாடுகளுடனும் நிலம் வீடுவாசலுடனும் குடியும் குடித்தனமு மாக இருப்பாள் என்று யார் நினைத்தார்கள்? நீ அதிருஷ்டக்காரி தான்" என்ருள் வந்தவள்.

"அதில் என் பங்கு என்ன? நான் வந்தேன். வந்தவளைக் கேள்வி கேட்காமல், அடித்துத் துரத்தாமல் ஏற்றுக்கொண்ட வரைப் பாராட்டவேண்டும்" என்ருள் இங்கர்.

"கல்யாணம் ஆகிவிட்டதா? சடங்கு செய்துகொண்டாயா, இல்லையாடி?"

"காலக் கிரமத்தில் சடங்கு முடித்து மாதாகோயிலில் அதுவும் நடத்திவிடலாம்" என்ருள் இங்கர். "முன்னரே செய்திருக்கலாம். ஆனல் ஒழியவில்லை, என்ன ஐஸக்?"

"கல்யாணம்தானே! முறைப்படி முடிக்கலாமே! அவசரம் என்ன?" என்ருன் ஐஸக்.

இங்கர் சொன்னுள்: "ஒலின்! நீ வந்து கொஞ்சம் எங்களுக்கு உதவிளுயானல் நல்லது, ஒலின். உனக்கு வீட்டில் அதிக வேலை யில்லாத சமயத்தில் இங்கு வந்து நீ எனக்கு உதவியாக வந் திருப்பாயா? நீ மாடு கன்றுகளைப் பார்த்துக் கொண்டாயானல், நானும் ஐஸக்கும் மாதா கோயிலுக்கெல்லாம் போய்வருவதற்குச் சரியாக இருக்கும்!"

"சரி. வருகிறேன்" என்ருள் ஒலின்.

"அதனல் உனக்கு ஒன்றும் சிரமம் ஏற்படாது. லாபகரமாக இருக்கும்படி பார்த்துக் கொள்கிருேம்."

"அதைப்பற்றி என்ன? நீயாகப் பார்த்துக் கொடுத்தால் வாங்கிக்கொள்ள ஏழை, நான் இருக்கிறேன்" என்ருள் ஒலின். பிறகு "என்ன—வேறு என்னவோ கட்டிட வேலை நடந்து கொண்டிருக்கிறதே! எதற்காக? கட்டியுள்ளது போதாதோ!"

இங்கருக்குப் பெருமை தாங்கவில்லை. "அதுவா? எனக்குக் கூடத் தெரியாது, பரம ரகசியம். நீ, அதோ, ஐஸக்கைத்தான் கேட்டுக்கொள்ளவேண்டும்."

"கட்டிடமா?" என்கிறான் ஐஸக். "அப்படிப் பெரிசாக ஒன்றும் இல்லை. ஒரு கொட்டகை போடுகிறேன்—அவசியமானால் இருக்கட்டுமே என்று. ஏதோ தங்கக்கொம்பைப்பற்றி நீ விசாரித்தாயே? அதைப்போய்ப் பார்க்கவில்லையா? பார்க்கிறாயா?"

மாட்டுக் கொட்டிலுக்குப் போகிறார்கள். ஒரு பசுவும் கன்றும் ஒரு ரிஷபமும் இருக்கிறது கொட்டிலிலே! வந்தவள் அதை மதித்துத் தலையை ஆட்டுகிறாள். மிருகங்கள் மட்டுமல்ல. கொட்டிலும்கூட நேர்த்தியாக இருப்பதாக அவளுக்குப் படுகிறது. நேர்த்தியாகமட்டுமில்லை—எல்லாம் மிகவும் சுத்தமாகவும் இருக்கிறது. "மாடுகன்றுகளை எங்கள் இங்கர்மாதிரி வேறு யாரும் பார்த்துக்கொள்ளமாட்டார்கள்" என்றாள் ஒலைன்.

ஐஸக் ஒரு கேள்வி கேட்டான்: "இந்தத் தங்கக்கொம்பு உங்கள் வீட்டில்தான் வளர்ந்து வந்ததோ!"

"ஆம்.........கன்று முதலே எங்கள் வீட்டில் வளர்ந்த பசுதான் இது. என் வீட்டில் இல்லை; என் மகள் வீட்டில் வளர்ந்தது அது. இரண்டும் ஒன்றுதான்! அதனுடைய தாய்ப் பசு எங்கள் வீட்டில்தான் இன்னமும் இருக்கிறது" என்றாள் ஒலைன்.

இது மிகவும் திருப்திகரமான செய்தி. ஐஸக்குக்கு முகம் ஆனந்தத்தால் மலர்ந்தது. உள்ளத்திலிருந்த சுமை இறங்கி விட்டமாதிரி இருந்தது. திருட்டுப் பசுவாக இருந்துவிடப் போகிறதே என்று, அவன் அதைக் கொன்றுவிட்டாலும்கூடத் தேவலை என்கிற தீர்மானத்திற்கு வந்திருந்தான். இப்போது அதற்குத் தேவையில்லை—இங்கரைப்பற்றிப் பெருமை தாங்க வில்லை அவனுக்கு.

"இந்த இங்கர் இருக்கிறாளே! அவள் ரொம்பவும் சாமர்த்தியக்காரிதான். எல்லா விஷயங்களையும் நன்கு கவனித்துக் கொள்கிறாள். அவளுக்கு ஈடான பெண்பிள்ளையை நான் கண்டதில்லை. அவள் வருகிற வரையில் இங்கு எதுவும் சரியாக நடைபெறவில்லை. குடும்பம் என்றால் அதில் பொறுப் பேற்க ஒரு பெண் இருந்தால்தான் சரிப்பட்டு வரும்" என்றான் ஐஸக்.

"அது உண்மைதான்" என்றாள் ஒலைன்.

குன்றுகளுக்கப்பாலிருந்து வந்த இந்த ஸ்திரீ—அவள் பெயர் ஒலைன்—அவள் கெட்டிக்காரி என்று தோன்றியது—இரண்டு

நாட்கள் அவர்களுடன் தங்கினாள். சிறிய அறையில் படுத்து உறங்கினாள். அவள் வீடு திரும்பும்போது, ஆட்டு ரோமம் ஒரு கட்டு அவளுக்கு வெகுமதியாக அளித்தாள் இங்கர். அதை அவள் மறைத்துக்கொண்டுபோயிருக்க வேண்டிய அவசியமே யில்லை. ஆனால் அது ஐஸக்கின் கண்ணில் பட்டுவிடாமல் மறைத்துவைத்துக் கொண்டுதான் போனாள் அவள்.

பிறகு குழந்தையும், ஐஸக்கும், அவன் மனைவியும்தான். பழைய பிரபஞ்சமேதான். தினசரி வேலைகளும் சிறிதும் பெரிது மான பல இன்பங்களும் காத்துக்கொண்டிருந்தன. தங்கக் கொம்பு நிறையப் பால் கறந்தது. ஆடுகளும் ஈன்றெடுத்துப் பால் தந்தன. இங்கர் பாலேடைக் கட்டிகள் பல தயார்செய்து, சிவப்பும் வெள்ளையுமாக, அடுக்கி வைத்திருந்தாள். பாலேடைகள் நிறையச் செய்து அதை விற்றுத் துணி நெய்ய ஒரு பெரிய தறி வாங்கவேண்டுமென்பது அவள் திட்டம். ஓ! இங்கருக்கு நூல் நூற்கவும் தெரியுமாம்!

ஐஸக் ஒரு கொட்டகை போட்டான்—அவனும் ஏதோ ஒரு திட்டத்தின்படித்தான் வேலை செய்து வந்தான். மண் குடிசையை ஒட்டி ஒரு புதுக் கொட்டகையை நிர்மாணித்தான் அவன். அதன் சுவர்கள் மரத்தாலானவை. நாலு கண்ணாடி ஜன்னல் ஒன்று அந்தக் கொட்டகைக்கு வெளிச்சம் தந்தது. உறைந்த பனி கரைந்து மண் குழைக்க முடிந்ததும் தரையை மண் அப்பிக் கெட்டிப்படுத்தினான். அவசியமானதை எல்லாம் செய்தான்—அது ஒரு குதிரை லாயம் மாதிரி இருந்தது.

மே மாசக் கடைசி. பனியெல்லாம் கரைந்துவிட்டது. கூரைக்கும் மண் அப்பி, புல் பத்தைகளைப் பரப்பி, கொட்டகை வேலையைப் பூர்த்தி செய்தான். நாள் பூராவுக்கும் போதுமான அளவு சாப்பிட்டு விட்டு, கையிலும் சேர்த்து மூட்டை கட்டிக்கொண்டு, கோடாலி யையும், மண் வெட்டியையும் எடுத்துக்கொண்டு போனான்—கிராமத்துக்குப் போனான்.

"சீட்டித் துணி கிடைத்தால் ஒரு மூன்று கஜம் வாங்கிவா!" என்று சொன்னாள் இங்கர்.

"எதற்கு சீட்டித் துணி?" என்றான் ஐஸக்.

ஐஸக் பலநாள் திரும்பவில்லை. அங்கு திரும்புகிற உத்தேசமே யில்லாமல் போய்விட்டது மாதிரி இருந்தது. காற்று எப்படி அடிக்கிறது என்பதைக் கவனிக்கிற சாக்கில் அடிக்கடி வெளியே வந்து, மேலும் கீழும் பார்த்தாள் இங்கர். இரவு வேளைகளில்

யாராவது வருகிற சப்தம் கேட்கிறதா என்று கவனித்தாள். அவனைத் தேடிக்கொண்டு தன் குழந்தையையும் எடுத்துக் கொண்டு கிளம்பி விடலாமா என்று யோசித்தாள் அவள். அதற்கு அவசியம் ஏற்படவில்லை. கடைசியில் வந்து சேர்ந்தான் அவன். ஒரு குதிரையையும் வண்டியையும் ஓட்டிக்கொண்டு வந்தான்; "ட்ரூ! ட்ரூ!" என்று ஓட்டிக்கொண்டு வந்தான். உரக்கச் சப்தப் படுத்தினான். அந்தக் குதிரைதான் எவ்வளவு அழகாகவும் அடக்கமாகவும் இருந்தது! ரொம்பவும் அமரிக்கையாக வாலை விசிறிக்கொண்டு நின்றது. அதற்கென்று ஐஸக் கட்டிய கொட்டகை அது என்று அறிந்ததுபோல கொட்டகையின் பக்கம் போய் நின்றது. தன் மனைவிக்குத் தெரியவேண்டாமா தான் வாங்கிவந்திருந்த குதிரையின் குணங்கள் என்று எண்ணியவன் போல, ஐஸக் உரக்கக் கூவினான்! "ஹீ! இதோ! இங்கே வா! இந்தக் குதிரையைச் சற்றுப் பிடித்துக் கொள்? வரமாட்டாயா?"

இங்கர் வருகிறாள் வெளியே. "எங்கே குதிரை? என்ன ஐஸக், அதை மீண்டும் வாடகைக்குப் பிடித்துவந்திருக்கிறாயா? இத்தனை நாளும் எங்கே போயிருந்தாய்? ஆறு நாளாகி விட்டதே?" என்றாள் இங்கர்.

"நான் எங்கே போயிருந்தேன் என்று நினைக்கிறாய் நீ! சுற்றிச் சுற்றி அலைந்து என் வண்டியையும் குதிரையையும் வாங்கி வந்தேன். குதிரையைப் பிடித்துக்கொள்" என்றான் ஐஸக்.

"உன் வண்டியா? உன் குதிரையா? வண்டியையும் குதிரையையும் வாங்கி விட்டாயா?"

ஐஸக் பதிலே சொல்லவில்லை, மௌனமாக இருந்துவிட்டான். ஆனால் உள்ளுக்குள் பெருமையால் விம்மிப் பூரித்தான். தான் வாங்கிவந்திருந்த சாமான்களை இறக்கிவைத்தான்—ஒரு ஏரும் கலப்பையும்; ஒரு களைக்கொட்டு; ஆணிகள்; சமையலுக்குத் தேவையான பலவித சாமான்கள்; ஒரு இயந்திரக் கல்; ஒரு மூட்டை தானியம் எல்லாவற்றையும் இறக்கிப் போட்டு விட்டு "பையன் எப்படி இருக்கிறான்?" என்றான்.

"சுகமாக இருக்கிறான். ஆமாம், நான் தறிவாங்க வேண்டுமென்று தவியாகத் தவித்துக்கொண்டிருக்கிறேன். நீ பாட்டுக்கு ஒரு வண்டியையும் குதிரையையும் வாங்கிக் கொண்டு வந்து நிற்கிறாயே!" இதை அவள் விளையாட்டாகத்தான் சொன்னாள்.

அவன் திரும்பி வந்துவிட்டதில் அவளுக்கிருந்த திருப்தி அவள் குரலிலேயே தொனித்தது.

மீண்டும் மௌனம் சாதித்தான் ஐஸக். வெகுநேரம் எதுவும் பேசவில்லை அவன். தன் காரியங்களைக் கவனித்தான். புதிதாகக் கொண்டுவந்த சாமான்களை அததற்கு உரிய இடத்தில் கொண்டுபோய் வைத்தான். அவற்றிற்கெல்லாம் இடம் கண்டு பிடிப்பதுகூட சிரமமாக இருக்கும்போலிருந்தது. குதிரையோடு இங்கர் மெதுவாகப் பேசிக்கொண்டு நின்றாள். அது சமயம் பார்த்து ஐஸக் சொன்னான். "குதிரையும் வண்டியும் இல்லாத பண்ணை பார்த்திருக்கிறாயோ நீ! ஏரும் கலப்பையும் இல்லாத உழவனைத்தான் பார்த்திருக்கிறாயா? நான் ஏன் வாங்கினேன், இந்த வண்டியையும் குதிரையையும் அதில் இருப்பது எல்லாவற்றையும் என்று கேட்கிறாயே நீ? இது சரியா? யோசித்துப்பார்."

இங்கர் தலையையாட்டுகிறாள். முணுமுணுக்கிறாள். "என்னமோ! இந்த மாதிரி மனிதனை நான் பார்த்ததேயில்லை!" என்கிறாள்.

தாழ்மையுடன், சிறியவனாக, நடந்துகொள்ளவில்லை ஐஸக். அவள் பசு கொணர்ந்தாள். அவன் உழைத்துப் பணம்சேர்த்துக் குதிரையும் வண்டியும் கொணர்ந்து விட்டான். "தங்கக் கொம்புக்கு ஈடுதான் என் குதிரை" என்று சொல்வதுபோல இருந்தது அவன் பாவம்.

நிமிர்ந்து, தெம்புள்ளவனாக, நின்றான் அவன். வழக்கத்துக்கு மாறாக, பெருமை பீத்திக்கொண்டு நின்றான். ஏரையும் கலப்பையும் வைத்த இடத்திலிருந்து வேறு இடத்துக்கு மாற்றிவைத்தான். சுவரில் சார்த்திவைத்தான். அவன் கெட்டிக்காரன் இல்லையா? ஒரு பண்ணையை சரிவர நடத்த தெரிந்தவன் அல்லவா அவன்? மற்ற சாமான்களையும் எடுத்துத் தொட்டுத் தொட்டுப் பார்த்து அததற்கு உரியஇடத்தில் வைத்தான்.

'உம், நீ கேட்ட தறியும் வாங்கி வந்துவிட்டால் போகிறது! எனக்கு உடல் நலம் இருந்தால் இதையும் சம்பாதித்துத் தந்து விடுகிறேன். இதோ உனக்குச் சீட்டித் துணியும் வாங்கி வந்திருக்கிறேன். நீலத்தைத் தவிர வேறுகலர் கிடைக்கவில்லை. நீலத்தையே வாங்கிவந்தேன்!" என்றான் ஐஸக்.

எத்தனை சாமான்கள் வாங்கி வந்தான் ஐஸக்! ஏதோ ஒரு பெரிய கடையையே வாங்கிவந்துவிட்ட மாதிரி இருந்தது. அவனுடைய சாமர்த்தியத்துக்கு எல்லையே கிடையாதோ?

இங்கர் சொன்னாள்: “இதெல்லாம் ஒலேன் வந்திருக்கிறபோது வந்திருந்தால் நன்றாக இருக்குமே!”

அவள் பெண்தானே! என்ன டம்பம்! அர்த்தமில்லாத டம்பம்தான் இது. ஒலேன் இதையெல்லாம் பார்த்தால் என்ன, பார்க்காவிட்டால்தான் என்ன? அலக்ஷியமாகச் சிரித்தான் ஐஸக். ஆனால் ஒலேன் இருந்து பார்த்திருந்தாளானால் நன்றாகத்தான் இருந்திருக்கும் என்று ஐஸக்காலும் எண்ணாமல் இருக்க முடியவில்லை.

குழந்தை அழத்தொடங்கியது.

“உள்ளேபோய்க் குழந்தையைப் பார். நான் குதிரையைப் பார்த்துச் கொள்கிறேன்” என்றான் ஐஸக்.

குதிரையை அவிழ்த்து லாயத்தில் கொண்டுபோய்க் கட்டு கிறான். ஆம், தன் குதிரையைத் தன் லாயத்தில் கொண்டுபோய்க் கட்டுகிறான். அதற்குப் புல் வைத்துவிட்டுத் தடவிக்கொடுக்கிறான். ஏதோ குழந்தையை தடவிக்கொடுக்கிறமாதிரித் தடவிக் கொடுக் கிறான். முழுவதும் விலைகொடுத்தா வாங்கி விட்டான், அந்த வண்டியையும் குதிரையையும்? கொஞ்சம் கூடத் தரவில்லை. முழு வதும் கடன்தான். பிரும்மாண்டமான தொகை. ஆனால் கோடை யில் வேலை செய்து அதை அடைத்து விடுவான்! பயப்பட வேண்டியதில்லை. விறகு வெட்டி வெட்டிக் கொடுத்துவிடுவான் அவன். போனவருஷம் உரித்துவைத்த பட்டைக் கட்டுகள் வேறு இருந்தன. அது தவிர அறுத்து சதுரம் செய்த மரங்கள் வேறு இருந்தன. கோடையில் வேலை செய்து கடனை அடைத்து விடலாம்—ஒன்றும் பிரமாதமில்லை. முதலில் இப்படி இருந்தது; பெருமையும் டம்பமும் மனசை நிரப்பியது. ஆனால் அதற்குப் பிறகு பயமாகவும் இருந்தது. எத்தனை நாள் கவலைப்பட்டிருப்பான்? கவலையாவது கவலை—அந்தப் பெரிய கடன் சுமை தீரவேண்டுமே என்று? நிலத்தில் விளைச்சல் நன்றாக இருந்து, அந்தக் கோடையில் அவனாலும் சரியானபடி வேலை செய்ய முடிந்ததானால் எல்லாம் நேராகிவிடும்.

நிலத்திலே நாளுக்குப்பின் நாளாக உழைத்தான் அவன். புது இடத்தைப் பதனிட்டுப் பண்படுத்தினான்; மர வேர்களையும் கற்களையும் அப்புறப்படுத்தினான். ஏர் பிடித்து உழுதான். எரு அடித்தான். வரப்புக் கட்டினான். பெரிய பெரிய கற்களை அப்புறப் படுத்தி மண் வெட்டி கொண்டு ஆழ வெட்டி நிலத்தைச் சீர் செய்தான். கையாலும் காலாலும் பாடுபட்டான். பச்சைப் பசே

லென ரத்தின கம்பளம் விரிக்கும் வியாபாரிபோல, நிலத்தைப் பகுதி பகுதியாகப் பெருக்கி விரித்து விஸ்தரித்தான். அவன் உழவன். உழவு வேலை செய்பவர்களுக்குத் தெரியும்—அந்த உடம்பு வலி. இரண்டு நாள் கழித்து—மழை வருவதுபோலிருந்த சமயம் பார்த்து—விதை விதைத்தான்.

தலைமுறை தலைமுறையாக, மனிதனுடைய நினைவுக்கும் எட்டாத நாட்களிலும், அவன் முன்னோர்கள் இதேமாதிரி நிலத்தை உழுது பண்படுத்தி விதைவிதைத்து வந்திருக்கிறார்கள். ஏதோ தெய்வ வழிபாடு செய்வதுபோல, மழை உண்டாகிற அறிகுறிகள் நிறைந்த மாலை நேரத்திலே, வெண்மையான வாத்துக்கள் பறந்துபோன பிறகு, அவர்கள் விதை விதைப்பார்கள். உருளைக் கிழங்கு விதைப்பது அப்படி அல்ல. அது புதிய விஷயம். அதிலே தெய்வ வழிபாடு எதுவும் இல்லை. குழந்தைகளும் ஸ்திரீகளும் கூட உருளைக் கிழங்கு விதைக்கலாம். பூமிக்கடியில் உற்பத்தியாகும் ஆப்பிள்கள் அவை. அந்நியப் பிரதேசத்திலிருந்து இறக்குமதியான சரக்கு—காபியைப் போல. நல்ல உணவுதான் உருளையும்—ஆனால் அது அங்கு ஊன்றிய நாட்டுச் சரக்கு அல்ல. அதுமாதிரியல்ல தானியம். அது அடிப்படையான உணவு. தானியம் இல்லாவிட்டால் மனிதன் சாகவேண்டியவன்தான்.

தலையில் ஒன்றுமில்லாமல், ஏசுவின் பெயரைச் சொல்லிக் கொண்டு, விதை விதைக்கிறான். தலைமுறை தத்துவமாக வந்து விட்ட ஒரு காரியத்தைச் செய்துகொண்டிருக்கிறான் அவன். அவனைப் பார்த்தால் ஒரு மரத்துக்குக் காலும் கையும் முளைத்த மாதிரி இருக்கிறது! அவன் உள்ளத்தில் குழந்தை போன்றவன். விதைக்கிற விதைகளைப் பயபக்தியுடன் விதைக்கிறான் அவன். பார்! எவ்வளவு சிறிய விதைகள். அவை உயிர் பெற்று உரம் பெற்று முளைத்துப் பயிராகிப் பெரிதாகக் கதிர்விட்டு காய்த்துக் குலுங்கவேண்டும். ஒன்றுக்கு நாலு, ஆயிரம், லக்ஷம் என்று பெருகவேண்டும். உலகில் எங்கு விதை விதைத்தாலும் தத்துவம் இதேதானே! பாலஸ்தீனமானால் என்ன? அமெரிக்காவானால் என்ன? நார்வேயின் பள்ளத்தாக்குகளிலானால் என்ன? இது விரிந்து கிடக்கிற உலகம். இதோ ஐஸக் இந்த உலகில் ஒரு சிறு புள்ளி. முறம் போன்ற தன் கைகளை விசிறி விசிறி விதைகளை விதைக்கிறான்! மேலே வானம் மழை காட்டுகிறது—இருட்டுகிறது.

# 4

**வேலை** அதிகமாக இல்லாத காலம் அது. ஆனால் அந்த சமயத்திலும் அந்த ஸ்திரீ, இங்கரின் உறவினள், ஒலேன் வரவில்லை.

நிலத்திலே இப்போது ஐஸக்குக்கு வேலையில்லை. புல் அறுத்துக் காயப்போட்டு போர் எழுப்பத் தயாராக அரிவாளைத் தீட்டி வைத்திருக்கிறான். இரண்டு சாமரங்கள். வண்டியிலே பலகைகள் பல போட்டு வைக்கோலைக் கொண்டுவரத் தயார் செய்துவிடுகிறான். மாரிக் காலத்தில் பனி வண்டி தயார் செய்வதற்கும் சாமான்களைச் சேகரித்து விட்டான். உபயோகமான பல சாமான்களைச் செய்திருக்கிறான் அவன். அலமாறிகள் கூடச் செய்துவிட்டான். வீட்டுக்குள்ளே சாமான்கள் வைக்க இப்போது இரண்டு அலமாறிகள் இருக்கின்றன. பஞ்சாங்கம் கூட ஒன்று வாங்கி வந்திக்கிறான் அவன். உபயோகப்படாத பாத்திரங்களுக்கும் பண்டங்களுக்கும் மத்தியில் அந்தப் பஞ்சாங்கமும் அலமாறியில் ஏறி உட்கார்ந்திருக்கிறது. அந்த அலமாறிகளைப் பற்றி இங்கர் பட்ட பெருமை சொல்லமுடியாது.

இங்கருக்குச் சுலபமாகவே பெருமையும் திருப்தியும் தோன்றி விடுகின்றன. எந்தச் சின்ன விஷயத்தையும்பற்றி அவளுக்குப் பெருமை அளவுகடந்து இருந்தது. தங்கக் கொம்பைப் பற்றி அவள் எவ்வளவு பெருமைப்பட்டாள்! இப்போது அதைக் கட்டிப் போடுவது கிடையாது. அது இனிமேல் தானாக எங்கேயும் ஓடிப் போய்விடாது—அதனுடைய கன்றும் காளையும் அங்குதானே யிருந்தன! ஆடுகளும்வளர்ந்து பெரியவையாகிவிட்டன; அவற்றின் மடிகள் தரையிலே புரளுகிற அளவுக்குத் தாழ்ந்திருந்தன. நீலச் சீட்டியிலே ஒரு சட்டை தைத்தாள் இங்கர். அதே துணியால் ஒரு குல்லாயும் செய்து குழந்தைக்குப் போட்டாள். அது அவனுடைய பெயர் சூட்டும் திருவிழாவுக்காக. பார்க்க அந்த உடுப்புத் தான் எவ்வளவு அழகாக இருந்தது! அவள் வேலை செய்து கொண்டிக்கும்போது பையன் அவளையே கவனித்துக்கொண்டிருப்பான். ஓ! என்ன அதிசயக் குழந்தை அது! அதற்கு எல்யூஸிஸ் என்று பெயர் வைக்க வேண்டுமென்று அவள் விரும்பினாள். அவளிஷ்டப்படியே பெயர் வைக்கட்டுமே—ஐஸக்குக்கு என்ன ஆக்ஷேபம்? சட்டையும் உடையும் தைத்து முடிந்து விட்டது. ராஜா ராணிகளுக்கு இருப்பது போல, ஒரு கஜம்

ஒண்ணரை கஜம் துணியைப் பின்னால் வால்மர்திரி விட்டிருந்தாள் இங்கர். விலைகொடுத்து வாங்கிய துணிதான் அது. இருந்தாலும் பாதகமில்லை. மூத்த பிள்ளை இல்லையா அவன்?

" நீ ஒரு மணிமாலை வைத்திருந்தாயே! அதையும் அவனுக்குப் போடலாமே!" என்றான் ஐஸக்.

ஓ! இங்கருக்கும் அந்த யோசனை இல்லையா என்ன? தாயல்லவோ அவள்! இங்கர் மௌனம்சாதித்தாள். அவள் உடலும் உள்ளமும் பெருமையால் பூரித்தன. அப்படி ஒன்றும் அதிகமான மணிகள் இல்லை. கழுத்தில் மாலையாகப் போடப் போதாது. குல்லாயில் அந்த மணிகளைத் தைத்து வைத்துவிட்டால் நன்றாகவே இருக்கும். குல்லாயிலே மணிகளை வைத்துத் தைத்தாள்.

ஆனால் இன்னமும் ஒலைனைக் காணவில்லையே!

ஆடு மாடுகளுக்காகத்தான் கவலைப்படவேண்டியிருந்தது. இல்லாவிட்டால் அவர்கள் மூவரும் போய்விடலாம். போய்ப் பையனுக்கு மாதா கோயிலில் உரியபடி நாமகரணம் செய்து கொண்டுவந்துவிடலாம். கல்யாணம் என்கிற சடங்கும் இருந்ததே! அதற்கு ஐஸக்கும் வந்தாகவேண்டும். அதில்லாவிட்டால் இங்கர் மட்டும் தனியே போய் வந்துவிடுவாள்.

"கல்யாணத்தைத் தள்ளிப் போட்டுக்கொள்ளலாமே!" என்றான் ஐஸக். அது சரியென்று இங்கருக்குத் தோன்றவில்லை. எல்யூஸிஸுக்குப் பத்துப் பன்னிரண்டு வயதாகிவிடும், பண்ணையைப் பார்த்துக்கொள்ள அவனுக்குத் தெரிவதற்குள். அது சரிப்பட்டு வராது.

ஆமாம். ஐஸக்தான் ஏதாவது ஒரு யுக்தி செய்து இதற்கு வழி கண்டுபிடிக்கவேண்டும். மூளை இருந்து என்ன பலன்? அதை உபயோகிக்கவேண்டாமா? அவர்களுக்கு இதெல்லாம் என்ன தெரியும்? நடந்ததெப்படியோ நடந்து விட்டது. நாமகரணம் என்கிற சடங்கு போலவே கல்யாணம் என்கிற சடங்கும் முக்கியம் தானே என்னவோ! ஐஸக்குக்கு எப்படித் தெரியும்? உஷ்ணம் தணிந்தது. மழையே பெய்யாமல் உலகமே தவிக்கும்போல் இருந்தது. சைத்தான் மழையின்மையை உண்டாக்கி உலகோரைத் துன்பத்துக்குள்ளாக்கி விடுவான்? மழை வர இன்னும் அதிகமான நாளானால் அவர்களுடைய தானியங்களும் வாடிக் கருகிவிடும். ஆனால் கவலைப்பட்டு லாபம் என்ன? கடவுள் கையில் இருந்தது— அவர்கள் பிழைப்பதும் இறப்பதும். கிராமத்துக்குப் போய் யாரை

யாவது அழைத்து வந்து பண்ணையைப் பார்த்துக்கொள்ளச் சொல்வது என்று யோசித்தான் ஐஸக். கிளம்பத் தயாரானன்—நட நடவென்று நடக்கத் தயாரானன்.

கல்யாணமாம்! நாமகரணமாம்! அதற்கு இவ்வளவு சிரமப் பட்டாக வேண்டுமா? தனிமையில், தனியிடம் தேடி எங்கேயோ வாழ்ந்தவர்கள் சிறு சிறு விஷயங்களுக்கும்கூடக் கஷ்டப்பட வேண்டியதுதான்?

ஆனல் கடைசியில் ஒலேன் வந்து விட்டாள்...

கல்யாணச்சடங்கும், நாமகரணச் சடங்கும் வரிசைக்கிரமத்தில் நடந்தன. முதலில் கல்யாணச் சடங்கை நடத்தினர்கள். குழந்தையின் நாமகரணத்தின் போது அவர்கள் இருவரும் கணவனும் மனைவியுமாக மாதாகோயிலில் மத குருவின் முன் நின்ருர்கள். ஆனல் மழை பெய்யவில்லே; புல் பயிர்கள் வாடின. பச்சைப் பசேலன்றிருந்த நிலமெல்லாம் காய்ந்து கருகிப் பார்க்கக் கண்ருவியாக இருந்தது. என்? ஏன்? கடவுளுக்குத்தான் வெளிச்சம். கடவுள் கையில் இருந்தது நல்லதும் கெட்டதும். எருப் போட்டு உழுது வளர்த்த புல்லே வெட்டினன்—வழக்கத்தில் பாதி கட்டுக் கூடக் காணவில்லே. இத்தனே வருஷங்களாகப் போகாத இடங்களுக்கெல்லாம் போய்க் காட்டுப் புல்லே அறுத்து அடுக்கிக் கட்டிப் போர் போட்டான். வண்டியும் குதிரையும் இருந்ததனல் வெகு தூரம் போயும் வைக்கோல் கொணர முடிந்தது. அந்த வருஷம் அதிகமான புல்லும் வைக்கோலும் தேவை—குதிரை ஒன்று புதுசாக வந்திருந்ததே! அலுக்காமல் சலிக்காமல் போர் போட்டான் ஐஸக். ஜுலே மத்தியில் பயிர்களால் அவ்வருஷம் பலனில்லே என்று தெரிந்து விட்டது. விளேச்சலே இல்லே. எல்லாம் சாவியாகிவிட்டது. அறுத்து மாடு மிருகத்துக்குத் தீனியாகக் கட்டிப்போட வேண்டியதுதான்! உருளேக் கிழங்காவது விளேந்தால்தான்!

உருளேக் கிழங்கைப்பற்றி என்ன? காபியைப்போல அந்நிய நாட்டிலிருந்து வருகிற புதுச் சரக்கு அது. மனிதன் தேவைக்கு அது அவசியமானதல்ல என்று இப்போது அதை நினைப்பது எப்படி? உருளேக்கிழங்கைப்போல உன்னதமான வஸ்து என்ன இருந்தது? மழையோ, மழையில்லேயோ, வெய்யிலோ, வெய்யில் இல்லேயோ—அது வளர்ந்து பெருகியது. சீதோஷ்ண நிலேயைப் பற்றி அது கவலேப்படுவதேயில்லே. எதையும் தாங்கும் சக்தி உண்டு உருளேக்கிழங்கிற்கு. அதை விதைத்துவிட்டால் போதும்—பதின்மடங்காகக் கொழிக்கும். அது திராக்ஷையின்

மதுவைப்போல அல்ல. வேகவைத்துச் சாப்பிடலாம்—அதைச் சுட்டும் சாப்பிடலாம்—வேறு பலவிதங்களிலும்கூட உபயோகப் படுத்தலாம். ரொட்டி செய்ய தானியம் இல்லாவிட்டாலும் பாதகம் இல்லை. ஆனல் உருளைக்கிழங்கு இருந்துவிட்டால் மனிதன் பட்டினி கிடக்க வேண்டியதில்லை. தணலில் போட்டுக் கிழங்கைச் சுட்டு விட்டால், போதுமான உணவாகிவிடும். தண்ணீரில் வேகவைத்துச் சாப்பிட்டுவிட்டால், போதுமான உணவும் ஆகிவிடும்- மாலை உணவும் ஆகிவிடும். எதோடு வேண்டுமானலும் உருளைக்கிழங் கைச் சாப்பிடலாம்—மீனுடன் சாப்பிடலாம், பாலுடன் சாப்பிட லாம். பணக்காரர்கள் வெண்ணெயுடன் சாப்பிடுகிருர்கள். ஏழைகள் உப்புடன் சாப்பிடுகிருர்கள். ஞாயிற்றுக் கிழமைகளில் உருளைக் கிழங்கு சாப்பிடுவது ஒரு விருந்தாக அமைந்துவிடும். தங்கக்கொம் பின் ஆடைபடைத்த இனிமையான பாலுடன் சாப்பிட்டுவிட்டால். அதைவிடச் சிறந்த உணவு, விருந்து எது? என்ன? தேவையான பொருள் உருளைக்கிழங்கு. அதை அலக்ஷியம் செய்யலாமோ? கடவுளின் ஆசிகளுடன் வந்து உலகில் விளைகிற பொருள் அது.

ஆனல் இப்பொழுது இவ்வருஷம் உருளைக்கிழங்குகூடச் சரியாக விளையாதுபோல இருக்கிறது.

நாளில் ஆயிரக்கணக்கான தடவைகள் ஆகாயத்தை அண்ணாந்து அண்ணாந்து பார்த்துக்கொண்டு நின்ருன் ஐஸக். ஆகாயம் நீலமாக இருந்தது. மாலை வேளைகளில் மழை வருகிற மாதிரி இருக்கும்—ஒரு சொட்டு மழைகூடப் பெய்யாமல் மேகங்கள் சிதறிக் கலைந்துவிடும். ஆனல் ஒவ்வொரு நாளும் ஐஸக் நம்பிக்கையுடன் வானத்தை அண்ணாந்து பார்த்தான். இத்தனை நாளும் பெய்யாத மழை இன்ருவது பெய்யாதா என்று ஏங்கி, ஏங்கி நின்ருன். அவனுக்கு நம்பிக்கையூட்டி ஆசை காட்டிய அந்தக் கருமேகம் அரைமணி நேரத்திலே ஓடிப் போய்விடும்.

ஏழு வாரங்களாகப் பெய்யவேண்டிய மழை பெய்யவேயில்லை. உஷ்ணம் தாங்கவில்லை. உருளைக்கிழங்குச் செடிகள் அகாலத்தில் பூக்கவேண்டிய காலத்துக்கு முன்னதாகவே பூத்து விட்டன. இயற்கையாக உள்ள அழகு இல்லை அவற்றில். பச்சைப் பயிர் பச்சையாகவா இருந்தது? வெளுத்து வெளேரென்று ரத்தமற்ற மனிதன் மாதிரி இருந்தது. கோடை காலத்தில் பனிபெய்து உலகம்வெளிரடைந்து போய்விட்டமாதிரி இருந்தது. இதெல்லாம் எப்படி முடியுமோ? பஞ்சாங்கங்கள் முன்மாதிரி நிஜத்தையா

கூறின? மழை என்று அதில் போட்டிருந்தால் மழை பெய்வதில்லை. பஞ்சாங்கம் கூடவா பொய் சொல்லும்! பார்த்துப் பயனில்லை! அன்று மாலை மழை பெய்யும் போல இருந்தது. "கடவுள் சித்தம் அப்படி யிருந்தால் இன்று இரவு மழை பெய்யுமென்று தோன்று கிறது" என்று இங்கரிடம் சொன்னான் ஐஸக்.

"மழை பெய்யும்போல இருக்கிறதா?"

"ஆம். குதிரை கூட மழைக்கு அறிகுறியாகச் சிலிர்க்கிறது. மழை பெய்யும் என்றுதான் தோன்றுகிறது."

இங்கர் கதவுப்பக்கம் திரும்பிப்பார்த்துச் சொன்னான்; "நல்லது, நல்லது. மழை பெய்யும்—பாரேன். எல்லாம் சரியாகி விடும். பார்"

சிறு தூற்றல் தூறியது. பிறகு நின்று விட்டது. இரவுச் சாப்பாட்டை முடித்துக்கொண்டு, இரவு வானத்தை கவனித்துப் பார்த்தான். நிர்மலமாக நீலமாக இருந்தது. ஒரு மேகங்கூட இல்லை.

இங்கரும் வந்து பக்கத்தில் நின்றாள். "இன்னும் ஒரு நாள் வெய்யில் காய்ந்தால் நல்லது தானே! பாசி பூராவும் காய்ந்து உதிர்ந்துவிடும்" அவனுக்கு ஆறுதல் அளிப்பதற்காக இப்படிப் பேசினாள் அவள். ஆனால் இருந்த புல் பாசி எல்லாம் ஏற்கனவே காய்ந்துவிட்டது என்று அவளுக்கும் தெரியும்! அவனுக்கும் தெரியும்!

உலர்ந்த பாசியைக் கூட அந்த வருஷம் விட்டுவைக்கவில்லை ஐஸக். உலர்ந்த பாசி கிடைத்ததை எல்லாம் சேர்த்துச் சேகரித்து வைத்திருந்தான் அவன். வைக்கோல் மாதிரி அதையும் கால் நடைகள் தின்னும். நல்ல உணவுதான். பாசி காய்வதைப்பற்றிப் பேசியதும் ஐஸக்குக்குக் கோபமே வருவதுபோல இருந்தது. "இன்று மழை பெய்யவில்லையானால் நான் அந்தக் காய்ந்த பாசி யைக் கூட சேகரித்து வைக்கமாட்டேன். இனிமேல் மழை பெய்யாது! அது அங்கேயே இருக்கட்டும்" என்றான்.

"ஐஸக்! அப்படி எல்லாம் சொல்லாதே!" என்றாள் இங்கர்.

மறுநாள், அதை அவன் உண்மையிலேயே சேகரிக்கவுமில்லை. அது கிடந்த இடத்திலேயே கிடக்கட்டும் என்று விட்டுவிட்டான். எப்படியும் மழை பெய்து அது வீணாகிவிடப் போவதில்லை. இருந்த இடத்திலேயே இருக்கட்டுமே! அவசியமானால் கிறிஸ்துமஸ்

சமயத்தில் அதை எடுத்துக்கொள்ளலாம்—ஆனல் அதற்குள் காய்ந்து தீய்ந்து போய்விடுமோ அது?

ஐஸக்குக்கு வருத்தமும் துயரமும் ஆழ்ந்தது. மீளாத் துயரம் அது. முன்னெல்லாம் பெருமையுடன் வீட்டு வாசலில் உட்கார்ந்து தன் நிலபுலன்களைப் பார்த்து ஆனந்திப்பான். அதெல்லாம் தன்னுடையது என்று திருப்பித் திருப்பித் தனக்குத்தானே சொல்லிக்கொண்டு பெருமை பீத்திக்கொள்வான். இப்போது பெருமை பீத்திக்கொள்ள என்ன இருந்தது? உருளைக்கிழங்குப் பாத்திகள் பைத்தியக்காரத்தனமாகப் பூத்துக் காய்ந்துகொண்டிருந்தன. பாசியைச் சேமித்து வைத்து என்ன பண்ணுவது? பாசி இருக்கிற இடத்திலேயே இருக்கட்டும். ஓ! இந்த ஐஸக் அப்படி ஒன்றும் அசடனல்ல. அந்தப் பாசியை வீணாக்குவதற்காகவது மழை பெய்யாதா! அப்படியாவது பெய்யட்டுமே மழை?

மறுநாளும் மழை பெய்யும்போலத்தான் இருந்தது! "நீ அந்தப் பாசியைச் சேர்த்து பத்திரப்படுத்தியிருக்கவேண்டும்" என்றாள் இங்கர்.

"எதற்காக?" என்றான், தெரியாமல் ஆச்சரியத்துடன் கேட்பவன் மாதிரி.

"அசட்டுத்தனமாகப் பேசுகிறாயே! மழை பெய்தால் அந்தப் பாசி வீணாகிவிடுமே!"

"இந்த வருஷம் மழை பெய்யப்போவதில்லை. அது தெரியவில்லையா உனக்கு இன்னமும்?"

அப்படியும் இரவில் இருண்ட மேகங்கள் வானத்தைக் கப்பிக்கொண்டதும் ஐஸக்கின் வரண்ட உள்ளத்திலே மீண்டும் நம்பிக்கை பிறந்தது. கண்ணாடி ஜன்னல் வழியாகத் தெரிந்த வானம் இருண்டு கிடந்தது. சிறிது நேரத்துக்கெல்லாம் ஜன்னலில் ஏதோ விழுவதுபோல இருந்தது—மங்கிற்று. இங்கர் விழித்துக்கொண்டு, "தெரியவில்லையா உனக்கு, மழைதான் பெய்கிறது!" என்றாள்.

காற்றுவாடையை மூக்கால் இழுத்தான் ஐஸக். "மழையா? மழையுமில்லை, ஒன்றுமில்லை. நீ என்ன பேசுகிறாய் என்று உனக்கே தெரியவில்லை."

"மழைதான். இல்லை என்று நீ பாசாங்கு செய்கிறாய்!" என்றாள் இங்கர்.

ஐஸக் பாசாங்கு செய்தான்—அவ்வளவுதான். வெறும் பாசாங்கு. பெய்தது மழைதான். அடை மழை பெய்வது போல இருந்தது. ஆமாம். அடை மழையேதான். ஆனால் சிறிது நேரம்தான் பெய்தது. பெய்த மழை பாசியை வீணாக்குவதற்குப் போதுமானது. அதற்குமேல் பெய்யவில்லை. மீண்டும் வானம் நீலமாகிவிட்டது. "பார்த்தாயா? நான் சொன்னேனே! மழையாம் மழை!" என்று குத்திக் காட்டினான் ஐஸக்.

இரவு பெய்த மழையால் உருளைக் கிழங்கு காய்வது நிற்க வில்லை. அது காய்ந்து தீய்ந்துகொண்டுதான் இருந்தது. நாட்கள் சென்றன. வானம் நீலமாகவே இருந்தது. மீண்டும் வேலையில் ஈடுபட்டான் ஐஸக். மாரிக்காலத்துக்கு என்று மர வண்டி—இழு வண்டி—தயார் செய்வதில் ஈடுபட்டான். வேலையே கவனமாக மற்றதெல்லாம் மறந்துவிட்டு கையும் காலும் வலிக்கிறவரையில் உழைத்தான். அவன் மனசிலே ஆத்திரம் மறைந்தது. மீண்டும் அமைதியும் பொறுமையும் வந்து குடியேறின. அட கடவுளே! நடப்பது நடக்கும். கவலைப்படுவானேன்? நாட்கள் சென்றன. பையன் வளர்ந்துகொண்டே வந்தான். இங்கர் பால் கறந் தாள்; பாலேடை செய்து அடுக்கினாள். அதற்கு ஒன்றும் ஆபத்து வந்துவிடவில்லை. சாமர்த்தியம் கொஞ்சமும், துணிவும், உழைப்பதற்குத் தெம்பும் உள்ளவர்கள் அழிந்துவிடவேண்டிய தில்லை. ஒரு வருஷம் உழவு பயன் தராவிட்டால் என்ன? பாதக மில்லை; சமாளித்துக்கொள்ளலாம். தவிரவும், ஐந்து வாரங்களுக்குப் பிறகு மழை பெய்யத் தொடங்கியது. உலகைக் கடவுள் மீண்டும் ஆசிர்வதிக்கத் தொடங்கிவிட்டமாதிரி யிருந்தது. தொடர்ந்து பதினாறு மணிநேரம் அடைமழை பெய்தது. இரண்டு வாரங்களுக்கு முன் அந்த மழை பெய்திருந்தால் ஐஸக் கோபமாக "இப்போது பெய்து என்ன லாபம்?" என்று கேட்டிருப்பான். இப்போது இங்கரிடம் சொன்னான்: "உருளைக்கிழங்கு கொஞ்சமாவது தேறும்" என்றான்.

"பாரேன்!" என்றாள் மிகுந்த நம்பிக்கையுடன் இங்கர். "கடவுள் கருணை. நன்றாகவே விளைந்துவிடும்—பாரேன்"

எல்லாம் சரிப்பட்டுவிடும் போல இருந்தது. தினமும் மழை பெய்தது; நன்றாகவே பெய்தது. அதிசயமாக நிகழ்ந்ததுபோல எல்லாம் மீண்டும் பசுமையாகிவிட்டது. உருளைக் கிழங்குப் பாத்திகள் எப்படியிருக்கின்றன என்று பார்க்க ஐஸக்குக்குத் தைரியம் வரவில்லை. முன்னிலும் அதிகமாகப் பூத்தன உருளைச்

செடிகள். அடியில் எப்படியிருந்ததோ? மேலே சிறுசிறு காய்களாகக் காய்த்திருந்தன. வெட்டிப்பார்க்க ஐஸக்குக்குத் தைரியம் இல்லை. ஒருநாள் இங்கர் ரகசியமாக மண்ணைக்கிளறி செடிக்கடியில் என்ன இருக்கிறது என்று பார்த்தாள். அழகழகாகச் சிறிது சிறிதாக இருபதுமுப்பது உருளைக் கிழங்குகள் காய்த்திருந்தன. சின்னதாகத்தான் இருந்தன கிழங்குகள். "ஆனால் வெட்டியெடுப்பதற்கு இன்னும் ஐந்து வாரங்கள் இருக்கின்றனவே? அதற்குள் பெருத்து விடாதா?" என்றாள் இங்கர். அவள் மேலுதடு பிளந்து விகாரமாகத்தான் இருந்தது. அந்த உதட்டை வைத்துக்கொண்டு அவள் எவ்வளவு ஆறுதலாக வார்த்தைகள் சொல்ல முயன்றுகொண்டிருந்தாள்! அவள் பேசுவது அழகாக இல்லை. பிளந்த உதடு வழியாக உஸ் என்று துருத்திமாதிரி காற்றடித்தது. ஆனால் அவள் மனசிலே இருந்த பரிவு அந்த வார்த்தைகளில் தொனித்தது. அவளில்லாமல் ஐஸக்கால் அந்தக் காட்டிலே, எல்லையற்ற கஷ்டங்களிலே எப்படிச் சமாளித்துக் கொண்டிருக்க முடியும்! எப்போதும் அவள் முகம் சிணுங்குவதில்லை.

ஒருநாள் அவள் ஐஸக்கிடம் சொன்னாள்; "இன்னொரு படுக்கை தயார் செய்தாயானால் தேவலை?"

"ஓஹோ!" என்றான் ஐஸக்.

"அப்படி ஒன்றும் அவசரமில்லை. இருந்தாலும் சொன்னேன்."

உருளைக் கிழங்கு தோண்ட ஆரம்பித்தார்கள். மைக்கேல்மஸ் சமயத்தில் உருளைக்கிழங்கு வழக்கப்படி சேகரமாகி விட்டது. பாதகமில்லை. நல்ல வருஷம், நல்ல விளைச்சல் என்று சொல்லலாம். மழையையோ வெய்யிலையோ லக்ஷியம் பண்ணாத பொருள் உருளைக்கிழங்கு. நல்ல விளைச்சல் என்றுதான் சொல்ல வேண்டும். பாதகமில்லை. ரொம்பவும் நல்ல விளைவு என்றும் சொல்லிவிட முடியாதுதான். ஆனால் எதிர்பார்த்தபடி சர்வ நாசம் ஆகிவிடவில்லை. ஆனால் இந்த மழையில்லாத வருஷத்தில் கணக்குப் பார்த்து என்ன பலன்? அங்கு வந்துபோன ஒரு நாடோடி லாப் அவர்களுடைய உருளைக்கிழங்குகளைப் பார்த்து "நேர்த்தியான கிழங்கு!" என்றான். கிராமத்திலே மக்கள் திணறிக்கொண்டிருக்கிறார்கள் என்றான்.

பனி கரையுமுன், நிலத்திலே ஐஸக்குக்கு இன்னும் சில வாரங்கள் வேலை யிருந்தது. ஆடு மாடுகள் இஷ்டப்படி வெளியே திரிந்து மேய்ந்துகொண்டிருந்தன. அவற்றை அவிழ்த்துவிட்டு விட்டு வேலையைப் பார்க்கச் செல்வது எவ்வளவு திருப்திகரமாக

இருந்தது. அவற்றின் கழுத்து மணிகள் தூரத்திலிருந்து இசையாக அடிக்கடி ஒலித்துக் காற்றில் மிதந்துவரும். அவிழ்த்து விடுவதனால் சில சமயம் அவைகளைத் தேடிப் போகவேண்டிய அவசியமும் வந்துவிடும். அதனாலென்ன? பாசிக் கத்தைகள் அடுக்கி வைத்திருந்ததைப் போய் முட்டும் அந்தக் காளை—குறும்புக்காரக் காளை அது. ஆடுகளோ யதேச்சையாகத் திரிந்தன மேலும் கீழும்; வீட்டுக் கூரை மேலேயே நின்றுகொண்டு அசை போடும் அவை.

கஷ்டங்களுக்கும் குறைவா? பெரிதும் சிறிதுமாக எத்தனையோ!

ஒரு நாள் திடீரென்று ஒரு கூச்சல் கேட்டது. இங்கர் இடுப்பில் குழந்தையை வைத்துக்கொண்டு, வீட்டுக்கு வெளியே நின்றாள். ஐஸக் வந்ததும் கையை நீட்டிக் காட்டினாள். அழகிய பசு வெள்ளிக் கொம்பும் அவர்கள் காளையும் காதல் புரிந்து கொண்டிருந்தன. கையிலிருந்த கோடாலியைக் கீழே போட்டு விட்டு அவற்றை நோக்கி ஓடினான் ஐஸக். ஆனால் அவன் போவதற்குள் காரியம் நடந்துவிட்டது—முடிந்துவிட்டது. "அயோக்கியக் காளை. கன்று ஈன வெள்ளிக் கொம்புக்கு இன்னும் வயதாகவில்லை. இன்னும் ஆறு மாசமாவது ஆக வேண்டும்." என்றான் ஐஸக். இரண்டையும் பிடித்துக் கொட்டிலில் அடைத்தான். என்ன பிரயோஜனம்; நடந்தது நடந்துவிட்டது.

"அதுவும் நல்லதுதான்" என்றாள் இங்கர். "ஒருவிதத்தில் ரொம்பவும் நல்லதுதான். இன்னும் ஆறு மாசங்கள் கழித்து தங்கக் கொம்பும் கன்றுபோடும். இரண்டு பசுவும் ஒரே காலத்தில் கன்று போடுவதைவிட, இது நல்லதுதானே?" என்றாள். ஓ! அந்த இங்கர்! அவளுக்குக் கெட்டிக்காரத்தனம் இல்லையா? இல்லை என்று எப்படிச் சொல்லமுடியும்? அவளாகவேதான் வெள்ளிக் கொம்பையும் காளையையும் அவிழ்த்துவிட்டிருப்பாளோ? இருக்கும், இருக்கும்.

மாரிக்காலமும் வந்தது. இங்கர் நூல் நூற்று, கயிறு திரித்தாள். ஐஸக் வெட்டி வைத்த மரங்களை வண்டியில் ஏற்றி விற்கப் போனான். அவனுடைய விறகு நல்ல காய்ந்த விறகு! வாங்கியிருந்த கடனைக் கொடுத்தாகிவிட்டது. வண்டி குதிரை, ஏர்க் கலப்பை எல்லாம் இனி அவனுடையவைதான்! இங்கருடைய பாலேட்டைக் கட்டிகளை வண்டியில் ஏற்றிக்கொண்டு ஒரு நடை போய்வந்தான். தறியும், நூல்களும், பல வர்ணக்கம்பளி நூல்களும் வாங்கிவந்தான். மாவு முதலிய சமையல் சாமான்களும் வாங்கி

வந்தான். பலகைகள், ஆணிகள் முதலியன கொண்டுவந்தான். ஒரு நாள் ஒரு விளக்கும் வாங்கிவந்தான்.

"அடேயப்பா! விளக்கைப் பார்த்த பிறகுகூட எனக்கு நம்பிக்கைப் படவில்லையே!" என்றாள் இங்கர். ஆனால் அவள் மனசில் ஒரு விளக்கைப் பற்றிய எண்ணம் தோன்றி வெகு நாளாகிறது—அவள் வாயைத் திறந்து சொல்லவில்லை. அவனாகவே வாங்கி வந்துவிட்டான். அன்றே விளக்கை ஏற்றிப் பார்த்தார்கள். சுவர்க்கமே அவர்கள் வீட்டுக்குள் வந்துவிட்டது என்று தோன்றியது. எல்யூஸிஸ் கையைக் கொட்டினான். ஒரு புதுச் சூரியன் வந்துவிட்டது என்று நினைத்திருப்பான் அவன். "எவ்வளவு கவனமாக விளக்கு எரிவதையே பார்க்கிறான், பார்" என்றாள் இங்கர். இரவுகளிலும்கூட இனி விளக்கு வெளிச்சத்தில் இங்கர் நூல் நூற்க முடியும்.

சட்டைகளுக்குத் துணிகள் வாங்கி வந்தான். அழகான புதுச் செருப்பு வாங்கிக் கொடுத்தான் இங்கருக்கு. வர்ணச் சாயம் கேட்டாள்—அவள் நெய்கிற துணிகளுக்குத் தோய்க்க; வாங்கி வந்தான். ஒரு நாள் அவன் ஒரு கடிகாரம் வாங்கி வந்தான். என்ன வாங்கி வந்தான், தெரியுமா? ஒரு கடிகாரம் வாங்கி வந்தான். இங்கருக்குப் பேச்சு வரவில்லை—அவளுக்கு ஆனந்தம் தாங்க முடியவில்லை. கடிகாரத்தைச் சுவரில் மாட்டினான் ஐஸக். நேரம் நிச்சயமாகத் தெரியாது; குத்துமதிப்பாக வைத்தான். சாவி கொடுத்தான். அது மணி அடித்தது. குழந்தை மணிச் சப்தம் கேட்டதும் கண்கள் அகலத் தன் தாயையும் கடிகாரத்தை தையும் மாறி மாறிப் பார்த்தது. "ஆச்சரியம்தான்" என்று சொல்லிக்கொண்டே தன் குழந்தையை வாரிக் கட்டி எடுத்து முத்தமிட்டுக் கொஞ்சினாள். அவளுக்கே ஆனந்தம் தாங்க வில்லையே! கடிகாரத்தைவிடச் சிறந்த சாமான் என்ன? இந்தத் தனிமை நிறைந்த இடத்தில், நீண்ட மாரிக் காலத்தில், நேரம் காட்டிக்கொண்டு, மணி தவறாமல் அடித்துக்கொண்டு இருக்கக் கூடிய கடிகாரத்தைவிட நல்ல பொருள் எது?

கிராமத்துக்குப் போய் விற்க வேண்டியதை எல்லாம் விற்று வாங்கவேண்டியதை யெல்லாம் வாங்கிக் கொண்டு வந்துவிட்டான் ஐஸக். வண்டியை இழுத்துப் போட்டுவிட்டு, விறகு வெட்டத் தொடங்கினான் அவன். அது முடிவில்லாத வேலை—காடு விசால மான காடு. மரங்களுக்குப் பஞ்சமேயில்லை. வெட்டி வெட்டி அடுக்கினான்—மீண்டும் தெருக்கள் தெருக்களாக, வீதிகள் வீதி

களாக, நகரங்கள் நகரங்களாக வேண்டிய மரங்களை அடுக்கிவைத்தான். பரந்த பூமியைத் தனதாக்கிக் கொண்டுவிட்டான் அவன். அவற்றை எல்லாம் உழுது பண் செய்தாகவேண்டும். முன்னெல்லாம்போல அவன் எல்லா மரங்களையும் வெட்டுவதில்லை. உலர்ந்த மரங்களையே வெட்டுகிறான். வேலையும் சுலபம். பச்சை மரங்கள் பின்னர் உபயோகப்படும்.

இங்கர் எதற்காக இன்னொரு படுக்கை கேட்டாள் என்பது ஐஸக்குக்குத் தெரியும். அதையும் அவசரமாகவே செய்து விட்டால்தான் தேவலை. செய்து முடித்தான். ஒரு நாள் மாலை அவன் விறகு வெட்டிவிட்டு வீடு திரும்பும்போது இங்கர் இன்னொரு பிள்ளையைப் பெற்றுவிட்டு, களைப்புடன் படுத்திருந்தாள். பையன்தான்! அந்த இங்கர்! பெருமை தாங்கவில்லை ஐஸக்குக்கு. அன்று காலையில் அவனைக் கிராமத்துக்கு அனுப்ப முயற்சி செய்தாள். "அது வேணும், இது வேணும்" என்றாள். "தவிரவும் குதிரைக்கு வேலை ஏதாவது வேண்டாமா? கட்டிப் போட்டுக் கிடந்தால்......" என்றாள்.

"எனக்கு வேறு வேலை இருக்கிறது" என்று சொல்லிவிட்டு விறகு வெட்டப் போய்விட்டான் ஐஸக். இப்போதுதான் புரிந்தது அவனுக்கு. தனக்குப் பிரவசமாகும்போது அவன் அங்கிருப்பதை அவள் விரும்பவில்லை. ஏன் அப்படி? அவன் இருந்தால் என்ன?

"நீ என்ன செய்யப் போகிறாய் என்று சொல்லக் கூடாதோ?" என்று செல்லமாகக் கேட்டான் ஐஸக்.

"நீ தனியே ஒரு படுக்கை போட்டுக்கொண்டு இனி தனியாகப் படுத்துறங்கு" என்றாள் இங்கர்.

படுக்கைமட்டும் போதுமா? படுக்கை விரிப்புகள் வேண்டாமா? படுக்கையில் விரிக்க அவர்களிடம் ஒரு தோல் மட்டும தான் இருந்தது. அடுத்த இலையுதிர் காலத்தில் இன்னொரு தோல், ஆட்டைக் கொன்று, உரித்து எடுத்துக்கொள்ளலாம். அப்படியும் இரண்டுதோல்கள் இருந்தால்கூடக் கம்பிளியாகிவிடுமா? ரொம்பவும் குளிராக இருந்தது. தனியாகப் படுக்கையில் படுக்க முடியவில்லை. மாட்டுக் கொட்டிலில் வைக்கோலைப் பரப்பிக்கொண்டு மாடுகளோடு போய்ப் படுத்தான் ஐஸக். அவனுக்கு வீடேது? வாசலேது? மாட்டுக் கொட்டிலில் படுக்கவேண்டி யிருந்தது! நல்லது. மே மாசம் நகர்ந்து சென்றது. ஜூன் வரும். பிறகு ஜூலை.

எப்படியோ அவர்கள் காலங் கடத்திவருகிறார்கள். அவர்கள் வாழ்க்கைக்கு என்ன? சிறும் சிறப்புமாகத்தான் இருக்கிறது.

காட்டிலே தனியாகக் குடியேறி தனக்கென்று வீடும் வாசலும், மனைவியும் மக்களும், ஆடும் மாடும் தேடிக்கொண்டு முன்னேறு கிறான் ஐஸக். மூன்று வருஷங்களில் காடழித்து நிலம் பண்செய்து அறுவடை செய்துவிட்டான்—மூன்றே வருஷங்களில். மீண்டும் ஏதோ கட்டிடம் கட்டிக்கொண்டிருக்கிறான். என்ன கட்டிக்கொண்டிருக்கிறான் அவன்? இன்னொரு சார்பு போட்டு இன்னொரு கொட்டகைக்கு ஏற்பாடு செய்கிறான் ஐஸக். வீட்டைக் கட்டி, அதன் சுவரில் சாய்ந்த கொட்டகை. எட்டு அங்குல ஆணிகளை அவன் அடிக்கிற அடியில் வீடே அதிருகிறது. சப்தம் தாங்கவில்லை. அடிக்கடி இங்கர் வெளியே வந்து "இந்தச் சப்தம் தாங்கவில்லையே! குழந்தைகளுக்கும் கெடுதல் இது. கத்து கின்றன" என்றாள்.

"குழந்தைகளை நீ வைத்துக்கொண்டு சமாதானம் செய். பாடு அவர்களுடன் பேசு. கொஞ்ச நேரம்தான். இந்த உத்திரத்தை அடித்துநிறுத்திவிட்டால்போதும். அதன்மேல்தான் சார்பு சாயும். பலமாக இருக்கவேண்டும். மற்றவை எல்லாம் இரண்டங்குல ஆணிகள்தான். எல்யூஸிஸிடம் ஒரு தகரத்தை எடுத்துப் போடு. இந்தச் சப்தம் காதில் விழாதபடி அவனே சப்தம் செய்வானே! பொம்மை வீடு கட்டுகிற மாதிரிதான் மற்றதெல்லாம்—இந்த வேலை முடிந்துவிட்டால்" என்றான் ஐஸக்.

"தட்தட்; தடார் தடார்" என்று ஐஸக் சுத்தி யெடுத்துத் தட்டிச் சப்தம் செய்ததில் ஆச்சரியமே யில்லை. ஒரு தொட்டி நிறைய மீன்கள் இருந்தன. மாவு சாக்கு சாக்காக இருந்தது. என்ன வெல்லாமோ சாமான்கள்—எல்லாம் வேறு இடமில்லாத தால் லாயத்தில் ஆடுமாடுகள் கட்டியிருந்த கொட்டகையில் வைக்கப்பட்டிருந்தன. வெளியே கிடப்பதைவிட நல்லதுதான், ஆனால் பன்றி இறைச்சியில் அதற்குள்ளாகவே லாயத்தின் நாற்றம் ஏறிவிட்டது. சாமான்களுக்கென்று ஒரு கொட்டகை இருந் தால்...? அவசியமான வேலை அது. குழந்தைகளுக்கென்ன? சிறிது நேரத்தில் அந்தச் சப்தம் பழகிவிடும். எல்யூஸிஸ் நோஞ்சான்— எப்போதும் அவனுக்கு உடம்பு ஏதாவது படுத்திக்கொண்டே யிருக்கும். ஆனால் இளையவன் வஸ்தாது. ஜோராகச் சாப்பிடுவான், பலமாக அழுவான். மற்ற நேரம்எல்லாம் தூங்கிக்கொண்டே இருப் பான். குழந்தையா அவன்! அதிசயம் அல்லவா? அவனுக்குப் பெயர் ஸிவெர்ட் என்று வைக்கலாம் என்று இங்கர் சொன்னாள். ஐஸக் ஆக்ஷேபிக்கவில்லை எனினும், ஜாகப் என்று பெயர் வைக்க

லாம் என்று ஆசை அவனுக்கு. சில சமயம் இங்கர் புத்திசாலித் தனமான யோசனைகள் சொல்வாள். அவள் ஊர் மதகுருவின் பெயர் எல்யூஸிஸ்; நல்லபெயர்; மூத்த பையனுக்கு அமைந்து விட்டது. தன் தாய் மாமன் பெயரைச் சுமந்தான் இளையவன். தாய் மாமன் பணக்காரன்; ஜில்லா பொருளதிகாரியாக இருந்தவன். பிள்ளை குட்டியில்லாதவன். பையனுக்கு அவன் பெயரைவைக்க ஆக்ஷேபம் என்ன?

வஸந்தம் வந்தது. புது வருஷ உழவு வேலை தொடங்கியது. விட்ஸன் தினத்துக்குள்ளாகவே விதையெல்லாம் விதைத்தாகி விட்டது. ஒரு குழந்தை மட்டும் இருந்தபோது அதைத் தனியாக விட்டுவிட்டு வந்து தன் கணவனுக்கு இங்கரால் உதவ முடிய வில்லை. ஆனால் இரண்டு குழந்தைகளும், ஒன்றேடொன்று விளையாடின. இங்கரால் தன் கணவனுக்குத் தன்னால் ஆன உதவி செய்யமுடிந்தது. அவளும் பாடுபட்டு உழைத்தாள்; உருளைக் கிழங்கு விதைத்தாள். காரெட், டர்ணிப் முதலியவையும் விதைத்தாள்! அந்த மாதிரி சுருசுருப்பான மனைவி, வேலைசெய்யத் தயாராக இருந்த மனைவி தேடிப் போனாலும் கிடைப்பதரிது. இந்த வேலை மட்டுமா? தறியிலும் உட்கார்ந்து நெய்வாள்; ராட்டினத்தண்டை உட்கார்ந்து நூல் நூற்பாள். மாரிக் காலத்துக்குத் தேவையான கம்பளி உடுப்புக்களைப் பின்னித் திரித்து நெய்தாள் அவள். அது மட்டுமா? அவற்றிற்கு வர்ணம் தோய்த்தாள். தனக்கும் சிறுவர்களுக்கும் சிவப்பும் நீலமுமான ஆடைகள் பல தயாரித்துக் சொண்டாள். தனியாக உட்கார்ந்து பல நாள் வேலை செய்து பல வர்ணங்கள் தோய்த்த படுக்கை விரிப்பு ஒன்று நெய்து ஐஸக்குக்குக் கொடுத்தாள். தேவையான அளவுக்கு நேர்த்தியாக இருந்தது. நேர்த்தியாக இருந்தால் மட்டும் போதுமா? உபயோகமாகவும் இருந்தது.

காட்டிலே வந்து தங்கிய இவர்கள் நிலை உயர்ந்துகொண் டிருக்கிறது. அப்படி ஒன்றும் ஏழைகள் அல்ல அவர்கள். சுகமாக இவ்வளவு வருஷங்கள் வாழ்ந்து விட்டார்கள். இன்னமும் அவர்கள் முன்னேறுவார்கள். இந்த வருஷம் தானியமும் சரியாக விளைந்துவிட்டால், அவர்களைக் கண்டு பலர் பொறாமைப் படு வார்கள். அங்கே என்ன குறைவாக இருந்தது? பெரிய பரண் ஒன்றுதான் குறைவு. அது தவிர தானியமடிக்க ஒரு பெரிய கூடமும் தரையும் தேவைதான். ஆனால் அவையும் நாளடைவில்

வந்துவிடும். நிலத்தை நம்பி, அதில் உழைத்து வாழ்பவன் ஐஸக். என்ன தேவை என்பது அவனுக்கு நன்கு தெரியும். நாளடைவில் தேவைப் படுவதெல்லாம் அங்கு இருக்கும். நாளாகும். ஆகட்டுமே! இப்போது வெள்ளிக் கொம்பு கன்று ஈன்றுவிட்டது. ஆடுகள் குட்டிகள் ஈன்றன. இடம் கொள்ளாத வரையில் அங்கு ஆடுமாடுகள் திரிந்தன. அதேபோல சிறுவன் எல்யூஸிஸ் அங்குமிங்கும் ஓடியாடித் திரிந்து கொண்டிருந்தான். அவன் தானுகவே போய்ப் போய் வருகிருன். இளையவன் ஸிவெர்ட்டுக்கும் நாமகரணம் ஆகிவிட்டது. இங்கர்? இங்கருக்கென்ன? மூன்ருவது குழந்தைபெறத் தயாராகிக் கொண்டிருக்கிருள். குழந்தை பெறுவது அவளுக்கு சர்வ சகஜமான காரியமாகிவிட்டது. குழந்தை பெறுவதில் அவள் செட்டாக இல்லே, பெறுவதுகூடச் சிரமமாக இருந்ததாகத் தெரியவில்லே. அலக்ஷியம் தான் அவளுக்கு. ஆனல் பெற்றுவிட்ட பிறகு அந்தக் குழந்தைகளைப்பற்றி அவளுக்கு அளவற்ற பெருமை. அந்தக் குழந்தைகளுக்குத்தான் என்ன? திடமாகவும் அழகாகவும் இருந்தார்கள். இவ்வளவு நேர்த்தியான குழந்தைகள் வேறு யார் வீட்டில் இருந்தார்கள்! இங்கருக்கு இன்னும் அதிக வயதாகி விடவில்லே. பெற்றுக் கொள்ளுகிற காலத்தில் பெற்றுக் கொள்ள வேண்டியதுதானே! அவள் அழகியல்ல. அழகில்லாத காரணத்தால் அவள் சிறு வயதில் மிகவும் கஷ்டப்பட்டிருக்கிருள். அவள் மேலுதடு விகாரமாகப் பிளவு பட்டிருந்தது என்பதற்காக அவளேக் கேலி செய்த சிறுமிகள் உண்டு. வாலிபர்கள் அவளேக் கண்டு பின்தொடரமாட்டார்கள்—ஒதுங்கிவிடுவார்கள். அவள் நன்ருக நாட்டியமாடுவாள்—நன்ருக வேலே செய்வாள். அழகில்லாத காரணத்தால்—அதை எல்லாம் கூட யாரும் மதிப்பது கிடையாது. வேறு பெண்களேத் தேடி ஓடிவிட்டார்கள் வாலிபர்கள். ஆனல் இப்போது அவள் காலம்—அதாவது அந்தக் காலம் மாறிவிட்டது. அவள் அழகியோ அல்லவோ, எப்போதும் கர்ப்பமாக இருந்தாள். அது போதாதா? அவளுடைய யசமான், கணவன், பார்க்க நன்ருக இல்லேதான். ஆனல் அவனுக்கு உழைக்கத் தெம்பிருந்தது. அவள் தனக்குத் தேவை என்பதை அவன் அங்கீகரித்தான். இங்கர் வரும்வரையில் அவன் எப்படித் தனியாகக் காலம் கழித்தான்? உருளேக் கிழங்கைச் சாப்பிடுவான்—ஆட்டுப் பாலேக் குடிப்பான். சமைக்கத் தெரியுமா அவனுக்கு? தெரியாது. எதையோ வேகவிட்டு, எதையோ பொறித்து, பசியைத் தீர்த்துக்கொள்வான்.

மறுபடியும் மழையில்லை. புது வருஷம் நல்ல வருஷமாகத் தொடங்கவில்லை. ஆஸ் ஆண்டர்ஸ் என்கிற நாடோடி லாப் தன் நாயை ஓட்டிக்கொண்டு வந்தவன் சொன்னான்—கிராமத்தில் எல்லோரும் விதைத்த தானியங்கள் முளைத்துக் கதிர்விடாது என்று அறுத்து மிருகங்களுக்குத் தீவனமாக்கிவிட்டார்கள் என்று சொன்னான்.

"அப்படியா? அப்படியானால் ரொம்பவும் சிரமம்தான்!"

"இருந்தாலும் மீன் ஏராளமாக இருக்கிறது. இந்தத் தட்வை மீன் பிடித்தது அமோகம். உன் மாமா ஸிவெர்ட் புது வீடு கட்டப்போகிறாராம்" என்றான் ஆஸ் ஆண்டர்ஸ்.

"பழைய வீடே பாதகமில்லையே!" என்றாள் இங்கர்.

"உண்மைதான். இருந்தாலும் மருமகளுக்குச் சமமாக இருக்க வேண்டும் என்கிற ஆசையாக இருக்கும்.

"கடவுள் புண்ணியத்திலே என்னவோ எங்களுக்குத் தேவையானது கிடைக்கிறது. என்னைப்பற்றி ஊரில் என்ன சொல்லிக் கொள்கிறார்கள்?" என்று விசாரித்தாள் இங்கர்.

தலையைப் பிரமாதமாக ஆட்டினான் ஆஸ் ஆண்டர்ஸ். ரொம்பவும் பிரமாதமாகப் பேசிக்கொண்டார்கள். எவ்வளவு பெருமையாக என்னென்ன சொல்லிக் கொண்டார்கள் என்று சொல்லிமாளாது என்றான் ஆஸ் ஆண்டர்ஸ். எல்லா லாப்களையும் போல, ஆஸ் ஆண்டர்ஸும் எல்லோருக்கும் திருப்தியாகிற விதத்தில் பேச அறிந்தவன்.

"ஒரு கிண்ணம் பால் சாப்பிடுகிறாயா?" என்று அவனை உபசரித்தாள் இங்கர்.

"எனக்கு எதற்கு? இந்த நாய்க்கு உணவு ஏதாவது கொடுத்தால்......" என்றான் அந்த லாப்.

ஆஸ் ஆண்டர்ஸுக்குப் பால்; நாய்க்கு உணவு—இரண்டுமே கிடைத்தது. திடீரென்று ஆஸ் ஆண்டர்ஸ் தலையைத் தூக்கிச் சாய்த்துக்கொண்டு கவனித்தான். வீட்டிற்குள்ளிருந்து கண கணவென்று மணிச் சப்தம் கேட்டது. "என்ன அது?" என்று கேட்டான்.

பெருமையாகப் பதில் அளித்தாள் இங்கர்: "அது எங்கள் கடிகாரம். மணிக்கு மணி அடித்துக் காட்டும்."

ஆஸ் ஆண்டர்ஸ் சொல்லுகிறான்: "வீடு, மாடு, ஆடு எதுவானாலும் தேவைப்படுவது இங்கிருக்கிறது. தேவை என்று

சொல்ல ஒன்றும் விட்டுவைக்கவில்லை நீங்கள். கடிகாரம்கூட இருக்கிறது."

இங்கருக்குப் பெருமை தாங்கவில்லை. "ஏதோ கடவுளிட்ட பிச்சை" என்றாள் தாழ்மையுடன்.

"மறந்து விட்டேனே. ஒலேன் உன்னை விசாரித்தாள்."

"ஒலேன்?...ம்...எப்படியிருக்கிறாள் அவள்?"

"சௌக்கியமாக இருக்கிறாள். உன் கணவன் எங்கே?"

"வயல்களில் வேலை செய்துகொண்டிருப்பான்—எங்கள் வயல்களில்."

"அந்த வயல்களை அவன் இன்னும் விலைகொடுத்து வாங்கவில்லை என்கிறார்களே!"

"வாங்குவதா? யார் சொல்லுகிறார்கள்?"

"ஊரில் பேச்சு."

"ஆனால் யாரிடமிருந்து வாங்குவது அதை? யாருக்கும் சொந்தமான நிலமல்லவே அது." என்றாள் இங்கர்.

"உண்மைதான்!"

"சொந்த உழைப்பால் விளையச்செய்கிறார்."

"அது சரி. ஆனால் நிலத்தை உனதாக்கிக்கொள்ள சர்க்காருக்குப் பணம் தரவேண்டுமாம்" என்றான் ஆஸ் ஆண்டர்ஸ்.

இங்கருக்குப் புரியவில்லை. "இருக்கலாம். ஆனால் யார் சொன்ன விஷயம் இது? ஒலேன் சொன்னாளா?"

"எனக்கு ஞாபகம் இல்லை" என்றான் ஆஸ் ஆண்டர்ஸ். அவனுடைய கண்கள் அவளைப் பார்க்க மறுக்கின்றன. திருட்டு முழிமுழித்துக்கொண்டு நாலா பக்கமும் பார்க்கிறான் அவன்.

லாப்கள் எல்லோருமே பிச்சை கேட்டார்கள். ஆனால் இந்த ஆஸ் ஆண்டர்ஸ் பிச்சை எதுவும் கேட்கவில்லை. தன் சுங்கானை நிரப்பிப் பற்றவைக்கிறான். அடாடா? என்ன சுங்கான் அது? என்ன நாற்றம்! ஏதோ கிழட்டு மந்திரவாதியினுடைய முகம்போல அவன் முகத்திலே சுருக்கங்கள் நிறைந்திருக்கின்றன.

"அந்தக் குழந்தைகள் உன் குழந்தைகளா என்று கேட்கத் தேவையேயில்லை. உன்மாதிரியே அழகாக இருக்கின்றன" என்றான் ஆஸ் ஆண்டர்ஸ்.

ஆனால் இங்கர் அழகியல்ல. தான் அழகியல்ல என்பது அவளுக்கும் தெரியும். அப்படியும் அவளுடைய தாயுள்ளம் தாவிக் குதித்துக் குதூகலித்தது. தாயுள்ளத்தை அறியாதவனு ஆஸ் ஆண்டர்ஸ்?

“உன் சாக்கு நிரம்பியிருக்கிறதே? இல்லாவிட்டால் அதில் போட ஏதாவது தருவேன்.”

“உனக்கு எதற்குச் சிரமம்?”

இடுப்பில் குழந்தையை எடுத்துக்கொண்டு உள்ளே போனுள் இங்கர். எல்யூஸிஸ் வெளியே ஆஸ் ஆண்டர்ஸுடன் நின்முன். இருவரும் ஒரு விநாடியில் சிநேகிதமாகிவிட்டார்கள். அவன் சாக்கில் என்ன இருக்கிறது என்று பார்க்கிருன் எல்யூஸிஸ். அந்த லாப்பினுடைய நாய் குரைக்கிறது—வாலை ஆட்டுகிறது—பாயத் தயாராக நிற்கிறது. தின்பண்டங்களைப் பொட்டலமாகக் கட்டிக்கொண்டு இங்கர் வருகிருள். ஒரு கூச்சல் போட்டுவிட்டுக் கீழே உட்கார்ந்துவிடுகிருள்.

“என்ன அது? என்ன அது?”

“ஒன்றுமில்லை. முயல்”

“ஐயோ! நான் பார்த்துவிட்டேனே அதை!”

“பையன் அதைக் காட்டச்சொன்னுன். காட்டினேன். காலையில்; என் நாய் அதைத் துரத்திப் பிடித்தது. உள்ளே என்ன என்முன்; காட்டினேன்.”

“இந்தா. இதை எடுத்துக்கொண்டுபோ. போ!” என்முள் இங்கர்.

## 5

ஒரு கெட்ட வருஷம் தனியாக வருவதில்லை. ஐஸக்குக்கு எல்லையில்லாத பெறுமையிருந்தது. என்ன நேர்ந்தாலும் அதை ஏற்று அங்கீகரிக்க அவன் கற்றுக்கொண்டிருந்தான். தானியம் சாவியாகிவிட்டது— காய்ந்து கருகிவிட்டது. வைக்கோல் கூடச் சரியானபடிச் சேரவில்லை. உருளை பாதகமில்லை—எப்படியோ காலந் தள்ளிவிடலாம் என்பதுதான் விஷயம். வெட்டிப்போட்ட விறகு இருந்தது—ஒரு வருஷத்தில் வெட்டிய விறகையும் மரங்களையும் கிராமத்திலே கொண்டுபோய் விற்கலாம். கிராமத்திலே பணம் இருந்தது. அந்த வருஷம் தானியம் தான் விளையவில்லையே

தவிர, மீன்கள் ஏராளமாக அகப்பட்டன. மீன் பிடித்து விற்றுவந்த பணம் கிராமத்திலே நடமாடிக்கொண்டிருந்தது. எல்லோரிடமும் மாரிக்காலத்திற்குத் தேவையான விறகு வாங்கப் பணம் இருந்தது. தவிரவும்—நல்லகாலம் என்றுதான் சொல்லவேண்டும்—தானியம் சரியானபடி பயிராகி விளைந்திருந்தால் அதை அடிப்பது எங்கே—சேமித்து வைப்பது எங்கே? களஞ்சியம்கூட இல்லாமல் தானியம் விதைத்து என்ன பலன்? கடவுள் இருக்கிறர் என்று சொல்வதைத் தவிர வேறென்ன எதைப்பற்றியும் சொல்ல முடியும்?

பல விஷயங்கள்—விளைச்சல் சரியாக இல்லை என்பதைத் தவிர—வேறு பல விஷயங்கள் ஐஸக்கின் மனதைப் பெரிதும் பாதித்தன. இங்கரிடம் அந்தக் கோடையில் ஒரு லாப் சொன்னனே—அது என்ன? நிலத்தை இன்னும் உரியவருக்குப் பணம்கொடுத்து வாங்கவில்லை என்று, அது ஐஸக்கின் மனத்தில் உறுத்தியது. வாங்குவதா? எதற்காக? யாரிடம் விலைபேசி வாங்குவது? நிலம் இருந்தது. காட்டைத் திருத்தி சாகுபடிசெய்து அறுவடைசெய்து அனுபவிப்பது தவரு? இயற்கையுடன் போராடிப் போராடி அவன் தன் உணவைச் சம்பாதித்துச் சாப்பிட்டான்—அதில் தவறு என்ன? அவன் யாரிடமாவது ஏதாவது உதவிகேட்டுக் கெஞ்சினை? தானே, தன் கையால் உழைத்துப் பாடுபட்டு பலனடைந்தான். வீடு கட்டிக்கொண்டான். பெண்டாட்டி தேடிக்கொண்டான்; ஆடு மாடு வாங்கி விருத்தி செய்துகொண்டான். அவனுக்கே யோசனை தான். இதுபற்றி ஜில்லா அதிகாரியிடம், லென்ஸ்மாண்டிடம் போய்க் கேட்கலாம் என்று நினைத்தான். ஆனல் ஒவ்வொரு தடவையும் அவன் கிராமத்துக்குப் போகும்போதும் அதைத் தள்ளிப் போட்டுக்கொண்டே வந்தான். லென்ஸ்மாண்டு நல்லவன் அல்ல—அவனிடம் எதுவும் சாதித்துக்கொள்ளமுடியாது என்று ஊர் ஜனங்கள் சொல்லிக்கொண்டார்கள். தன் பிரச்னையுடன் அவனிடம் போகத் தைரியம் வரவில்லை ஐஸக்குக்கு. தவிரவும் போய் என்ன கேட்பது? தானகவே ஏதாவது இழுத்து விட்டுக்கொள்வானேன்? அனுவசியமான தொந்திரவுதானே? ஐஸக் பேசுவதில் அவ்வளவாக சமர்த்தன் அல்ல.

மாரிக்காலத்தில் ஒரு நாள் ஜில்லா லென்ஸ்மாண்டே அவனைத்தேடி வந்துவிட்டான். அவனுடன் ஒரு குமாஸ்தா. ஒரு பெட்டி நிறைய பத்திரங்களையும் கடிதங்களையும் சுமந்து கொண்டு வந்தான். அந்த லென்ஸ்மாண்டின் பெயர் கெய்ஸ்ஸலர்—அவனே தான் வந்தான். ஐஸக்கின் வீட்டில் நின்று சுற்றிலும் வெகு

தூரம் காடு திருத்தப்பட்டிருப்பதைக் கவனித்தான். தரையெல்லாம் பனி படர்ந்திருந்தது. அந்த நிலம் பூராவும் சாகுபடி செய்யப்பட்ட நிலம் என்று அவன் எண்ணினுனே என்னவோ. கெய்ஸ்ஸலர் சொன்னான்: "அடேயப்பா! பெரிய பண்ணையாகப் பார்த்துக்கொண்டு விட்டாயே! இதற்கெல்லாம் நீ விலை கொடுக்க வேண்டாமா?"

வந்துவிட்டது ஆபத்து. ஐஸக் பதில் சொல்லவில்லை. அவனுக்கு ஒரே நடுக்கம்.

"முதலில் என்னிடம் வந்து நிலத்தை விலைக்கு வாங்கிக் கொண்டு பிறகு உழுது சாகுபடி செய்திருக்க வேண்டும்; காட்டு மரங்களை வெட்டியிருக்க வேண்டும்" என்றான் லென்ஸ்மாண்டு கெய்ஸ்ஸலர்.

"ஆமாம்" என்றான் ஐஸக் பணிவுடன்.

லென்ஸ்மாண்டு கெய்ஸ்ஸலர் மதிப்பு, வரி, சர்க்கார் வரி, எல்லைக்கல், மண், வேலிகள் என்றெல்லாம் பேசினான். விவரமாக, ஐஸக்குக்கும் புரியும்படியாக அவன் விஷயத்தைச் சொன்னதும் ஐஸக் கூட இது நியாயமான விஷயம்தான் என்று எண்ணினான். தன்னுடன் வந்த குமாஸ்தா பக்கம் திரும்பி விளையாட்டாகக் கேட்டான் கெய்ஸ்ஸலர்: "ஸர்வேயர் என்று சொல்லிக் கொள்ளுகிறாயே நீ—எத்தனை நிலம் இவன் சாகுபடி செய்திருக்கிறான் சொல்லு?" என்றான். அவன் பதில் சொல்லும் வரையில் காத்திராமல், தானே குத்துமதிப்பாக அளவைக் குறித்துக் கொண்டான். பிறகு ஐஸக்கைக் கேட்டு விளைச்சல் எத்தனை என்று தெரிந்து கொண்டான்—வைக்கோல் எத்தனை? உருளை எத்தனை மரக்கால்? எல்லாவற்றையும் குறித்துக் கொண்டான். பிறகு எல்லை அளப்பதுபற்றி ஐஸக்கிடம் பேசினான். மார்முட்டும் பனியில் போய் எல்லைக் கல் நட முடியாது—கோடையில்தான் முடியும். ஆனால் கோடையிலும் அவன் வரமுடியாது. காடு, சதுப்பு—இது பற்றி ஐஸக்கின் எண்ணம் என்ன? ஐஸக் பதில் தரவில்லை. ஏது என்ன என்றே அவனுக்குப் புரியவில்லை. கண்ணுக்கெட்டிய வரையில் தன்னுடைய நிலம் என்பதுதான் அவன் பாவனை. ஆனால் லென்ஸ்மாண்டு சொன்னான்: "இதுவரை என்னுடையது என்று நீ வேலி போட்டுக்கொள். ஆனால் எவ்வளவு அதிகமாக நிலம் உனக்கு வேண்டுமோ அவ்வளவு அதிகமாக நீ பணமும் தரவேண்டும்" என்றான்.

"சரி"

"நீ கேட்பதை எல்லாம் சர்க்கார் தந்துவிட மாட்டார்கள். உனக்கு எது தேவை என்று அவர்களுக்குத் தோன்றுகிறதோ அதைத்தான் தருவார்கள்."

"சரி"

வந்திருந்தவர்களுக்குப் பால் கொணர்ந்து தந்தாள் இங்கர். அதைக் குடித்தார்கள். மேலும் கொஞ்சம் கொண்டு வந்தாள். லென்ஸ்மாண்டு நல்லவன் அல்லவா? யார் சொன்னது? எல்யூஸி ஸின் தலையைப் பிடித்து உலுக்கினன். "என்னடா விளையாடு கிருய்?" என்று கேட்டுக்கொண்டு குழந்தையின் கையிலிருந்த கற்களை வாங்கிப் பார்த்தான். "கனமாக இருக்கிறதே! ஏதோ கனிப் பொருள்" என்ருன்.

"குன்றின் சரிவிலே இதைப் போல ஏராளமான கற்களிருக் கின்றன" என்ருன் ஐஸக்.

வந்திருந்த விஷயத்தைத் தொடர்ந்தான் அதிகாரி. "இங்கே யிருந்து தெற்கேயும் மேற்கேயும்தான் உனக்கு அதிகமாக வேண்டும் இல்லையா? தெற்கே இரண்டு பர்லாங்கு போதுமா"

"இரண்டு பர்லாங்கா?" என்ருன் குமாஸ்தா ஸர்வேயர்.

"உன்ளுல் இருநூறு கஜம்கூட உழுது சாகுபடி செய்ய முடியாது" என்ருன் கெய்ஸ்ஸலர்.

"விலை அதற்கு என்ன ஆகும்?" என்ருன் ஐஸக்.

"சொல்ல முடியாது, பல விஷயங்களைப் பொறுத்தது. என் குறிப்பில் குறைவாகவே போடுகிறேன். இங்கு வருவது சிரமம்; வெகு தூரத்துக்கப்பால் வந்திருக்கிருய் நீ!"

"ஆனல் இரண்டு பர்லாங்குகளா?" என்ருன் ஸர்வேயர் மீண்டும்.

கெய்ஸ்ஸலர் குறிப்பு எழுதிக்கொண்டே "மலைப்பக்கம் எதுவரை வேண்டும் உனக்கு?" என்ருன்.

"ஆறுவரையில் வேண்டியதுதான். ஒரு தேக்கம் இருக்கிறது அந்தத் தேக்கம் வரையில்" என்ருன் ஐஸக்.

அதையும் குறித்துக்கொண்டான் லென்ஸ்மாண்டு. "வடக்கே?"

"அதுபற்றிக் கவலையில்லை. சதுப்பு நிலமும், மரங்கள் அதிகமில்லாத காடும்தான் அந்தப் பக்கம்."

வடக்கே ஒரு பர்லாங்கு என்று குறித்துக்கொண்டான் லென்ஸ்மாண்டு. “கிழக்கே?”

“அந்தப் பக்கம் பற்றியும் கவலையில்லை. ஸ்வீடன் வரையில் ஒரே கட்டாந்தரை தான் அது.”

அதையும் குறித்துகொண்டான் லென்ஸ்மாண்டு. சட்டென்று ஏதோ கணக்குப்போட்டான். பிறகு சொன்னான்: “பெரிய பண்ணை தான் இது. கிராமத்திற்கு சமீபத்தில் இருந்தால் நிறையப் பணம் தரவேண்டியிருக்கும். ஒருத்தரிடமும் அவ்வளவு பணம் இராது. இவ்வளவு ஒதுப்புறமான தனிக்காட்டுப் பிரதேசத்தால் நூறு தேலர் நியாயமான விலை என்று எழுதுகிறேன். நீ என்ன நினைக்கிறாய்?” என்று குமாஸ்தா ஸர்வேயரைக் கேட்டான்.

“இனாமாகக் கொடுக்கிறமாதிரித்தான்” என்றான் அவன்.

“நூறு தேலரா? நமக்கு எதற்கு இவ்வளவு பெரிய பண்ணை?” என்றாள் இங்கர்.

“தேவையில்லைதான்” என்றான் ஐஸக்.

குமஸ்தா ஸர்வேயர் அவசர அவசரமாகச் சொன்னான்: “ஆமாம். பெரிய இடத்தை வைத்துக்கொண்டு நீங்கள் என்ன செய்வீர்கள்?”

“உழுது சாகுபடி செய்வார்கள்” என்றான் லென்ஸ்மாண்டு.

குறிப்பு எடுத்துக் கணக்குப்போட்டு முடித்துவிட்டான் கெய்ஸ்ஸலர். மீண்டும் அதே வேலையைத் திருப்பிச் செய்ய அவன் தயாராக இல்லை. குழந்தைகள் சப்தம் போட்டுக்கொண்டிருந்தன. லென்ஸ்மாண்டு திரும்பும்போது மணி இரண்டு. வெகுநேரமாகி விடும்—அல்லது மறுநாள் காலையில் தான் வீடுபோய்ச் சேருவானோ என்னவோ? ஒரு வழியாகத் தீர்ந்தது என்று நூறு தேலர் என்று எழுதிக்கொண்டு, கடிதங்களைத் தன் பைக்குள் திணித்துக் கொண்டான்.

“குதிரையைப் போய் வண்டியில் கட்டு” என்றான் குமஸ்தா விடம். அவன் போனபிறகு ஐஸக்கிடம் சொன்னான்: “நீ இந்த நிலத்தில் உழுதிருக்கிறாய்; பாடு பட்டிருக்கிறாய். உண்மையில் காசில்லாமலே அவர்கள் உனக்கு இனாமாக நிலத்தைத் தந்து பணமும் தரவேண்டும் சர்க்கார். அதை நான் என் குறிப்பில் எழுதி அனுப்புகிறேன். பிறகு என்ன கேட்கிறதோ சர்க்கார்; பார்க்கலாம்.”

ஐஸக் என்ன நினைத்தான் அதைப்பற்றி என்று சொல்ல முடியாது. தன் நிலத்தை நல்ல மதிப்புப் பெறும் என்று தீர்மானித்த லென்ஸ்மாண்டிடம் அவனுக்குத் திருப்திதான். எவ்வளவு கஷ்டப்பட்டு வேலை செய்திருக்கிறான் அவன்! நூறு தேலர் பற்றிக் கவலையில்லை. என்ன பிரமாதம்? நாளடைவில் கொடுத்துவிடலாம். அதுபற்றி அவன் கவலைப்படவில்லை; உழைப்பதற்குத் தெம்பில்லையா அவனுக்கு? காடு திருத்தி, மரம் வெட்டி விற்கலாம். நிலத்தை உழுது பண்படுத்தி சாகுபடி செய்யலாம். என்ன வருமோ என்று கவலைப்பட்டு பீதி அடைகிற மனிதன் அல்ல ஐஸக்—அவன் உழைப்பாளி.

இங்கர் லென்ஸ்மாண்டுக்கு வந்தனம் சொன்னாள்: "எங்களுக்காக சர்க்காரிடம் சொல்லுங்கள்" என்றாள்.

"சரி...சரி. நானே முடிவு செய்கிற விஷயம் இல்லை இது. நான் பார்த்ததையும், என் மதிப்பீட்டையும், என் சிபார்சுகளையும் எழுதலாம்...எழுதுகிறேன். கடைக் குட்டிக்கு வயசு என்ன?

"ஆறு மாசமிருக்கும்."

"பையனா? பெண்ணா?"

அந்த லென்ஸ்மாண்டு கெட்டவனல்ல; சர்வாதிகாரியும் அல்ல; கொடுமை புரிபவனுமல்ல. அவ்வளவாக அழுத்தமும் ஆழமும் இல்லாதவன். பொறுப்புடன் வேலை செய்பவன் அல்ல. குமாஸ்தா பிரேட் ஓல்ஸனை அவன் மதிப்பதில்லை. நியாயமாக அவன் அபிப்பிராயத்தையும் கேட்டுத்தான் அவன் எதுவும் செய்ய வேண்டும்—கெய்ஸ்ஸலர் அப்படிக் கேட்டுச் செய்வதில்லை. குத்து. மதிப்பாக, ஏனோ தானோ என்று செய்து விடுவான் எதையும் ஆனால் ஐஸக்குக்கும் அவன் மனைவிக்கும் இது மிகவும் பெரிய பொறுப்பான விஷயம்—தலைமுறை தலைமுறை என்று அவர்களுக்குப் பின் வருபவர்களையும் பாதிக்கிற பெரிய விஷயம். ஆனால் லென்ஸ்மாண்டு அதுபற்றி அதிகமாக நினைக்கவில்லை. இஷ்டப்படி ஒரு நிமிஷத்துக்குள் ஏதோ முடிவு கட்டிவிட்டான். நல்லவன். இரக்க மனசுள்ளவன். தன் பையிலிருந்து பளபள வென்ற ஒரு புதுக் காசை எடுத்துக் குழந்தை ஸிவெர்ட்டிடம் கொடுத்துவிட்டு வெளியேறினான். மற்றவர்களிடம் விடை பெற்றுக் கொண்டான்.

திடீரென்று வண்டியில் ஏறுமுன்: "இந்தப் பண்ணைக்கு என்ன பெயர் வைத்திருக்கிறாய்?" என்று கேட்டான்.

"பெயரா?'

"ஆம். பெயர்தான். இதற்கென்று ஒரு பெயர் வேண்டாமா?"

அதைப்பற்றி அதுவரை ஒருவரும் சிந்திக்கவில்லை. இங்கரும் ஐஸக்கும் ஒருவரை ஒருவர் பார்த்துக்கொண்டு நின்றனர்.

"ஸெல்லன்ரா?" என்றான் லென்ஸ்மாண்டு. சொந்தமாகக் கற்பனை செய்திருக்க வேண்டும் அவன், அந்தப் பெயரை. அது பெயரா அல்லது......என்ன பெயர் அது? தலையை ஆட்டிவிட்டு மறுபடியும் ஒரு தரம் "ஸெல்லன்ரா!" என்று சொல்லிவிட்டு அவன் கிளம்பிவிட்டான்.

குத்து மதிப்புத்தான். எதுவுமே அவனுக்கு லேசான விஷயம் தான். பெயர், விலை, எல்லைகள்—எல்லாமே அவனுக்கு மிகச் சாதாரண விஷயம்தான்.

சில வாரங்கள் கழித்து ஐஸக் கிராமத்துக்குப் போனபோது, லென்ஸ்மாண்டு கெய்ஸ்ஸலரைப் பற்றி என்னவெல்லாமோ பரா பரியாகக் காதில் விழுந்தது. அவன் கணக்குகளில் ஏதோ பிசகு இருந்ததாம். சர்க்காருக்குத் தரவேண்டிய பணங்களை அவன் சரியாகச் செலுத்தவில்லையாம். மேலதிகாரி அவனைப் பற்றி விசாரித்துக் கொண்டிருந்தானும். இது மாதிரி காரியங்கள் நடப்பதுண்டுதான். சிலர் வாழ்க்கை பூராவும் தட்டித் தடுமாறிக் கொண்டே சென்று விடுவார்கள்—சிலர் நேராக நடப்பார்கள். மோதுதல்கள் ஏற்படும்தான். என்ன செய்வது?

பிறகு ஒரு நாள் ஒரு சுமை விறகை வண்டியில் ஏற்றிக் கொண்டு போய் விற்பனை செய்துவிட்டு வந்தான் ஐஸக். திரும்புகிறபோது வழியில் மரங்கள் அடர்ந்த பிரதேசத்திலிருந்து வெளிப்பட்டுக் கையைக் காட்டினான் லென்ஸ்மாண்டு கெய்ஸ்ஸலர். "நானும் வருகிறேன் உன்னோடு—வரலாமா?" என்றான்.

இருவரும் கொஞ்ச நேரம் மௌனமாக வண்டியில் உட்கார்ந் திருந்தனர். தன் சட்டைப் பைக்குள்ளிருந்து ஒரு புட்டியை எடுத்துக் குடித்தான் கெய்ஸ்ஸலர். ஐஸக் தனக்கு வேண்டாம் என்றான். "இந்தப் பிரயாணம் என் வயிற்றைக் கெடுத்துவிடும்' என்றான் லென்ஸ்மாண்டு.

பிறகு ஐஸக் நிலம் வாங்குவது பற்றிப் பேசத் தொடங்கினான், "என் சிபாரிசுகளையும் குறிப்புகளையும் உடனேயே அனுப்பி விட்டேன். அழுத்தமாகச் சிபாரிசு செய்திருக்கிறேன். ஸெல்லன்ரா என்பது நல்ல பெயர். என் சிபாரிசு செல்லுமானால்

அவர்கள் அந்த நிலத்தை உனக்கு இனமாகவே வழங்கிவிட வேண்டும். அப்படி நேரடியாகச் சொன்னால் சரிப்படாது பாரு. ஆகவே நானே ஒரு விலை சொன்னேன்—ஐம்பது டேலர்.

"ஹோ! ஐம்பதா? நூறு அல்ல?"

நெற்றியைச் சுளுக்கிக் கொண்டு ஒரு நிமிஷம் யோசித்தான் லென்ஸ்மாண்டு, "எனக்கு ஞாபகம் இருக்கிறது. ஐம்பதுதான். ஆம்."

"இப்போது நீங்கள் எங்கே போகிறீர்கள்?" என்று கேட்டான் ஐஸக்.

"வெஸ்டர்போட்டன் போகிறேன்—என் மனைவியின் ஜனங்களைச் சந்திக்க."

"இந்த மாரிக்காலத்தில் பாதை சிரமமான பாதையாயிற்றே!"

"பார்த்துக்கொள்ளலாம். நீயும் கொஞ்சதூரம் என்னோடு வாயேன்."

"சரி. நீங்கள் தனியாகப் போகக்கூடாது!"

ஸெல்லன்ரா பண்ணையில் இரவு தங்கினான் லென்ஸ்மாண்டு. சின்ன அறையில் சாப்பிட்டுவிட்டுப் படுத்து உறங்கினான். காலையில் மீண்டும் புட்டியிலிருந்து குடிக்கத் தொடங்கினான். "என் வயிறு வீணாகிவிடும்" என்று சொல்லிக்கொண்டே குடித்தான். மற்றப்படி வழக்கம்போலவே தான் இருந்தான்—பேசினான்—நடந்துகொண்டான். தன் விஷயங்கள் எதையும்பற்றி அவன் கவலைப்படுவதாகவே தெரியவில்லை. அப்படி ஒன்றும் சிரமமான காலமில்லையோ என்னவோ? ஐஸக் தன் நிலத்தில் பல இடங்கள் இன்னும் உழாமல் இருந்தது என்று காண்பித்தான். அதுபற்றி கெய்ஸ்ஸலர் சொன்னது வேடிக்கையாக இருந்தது: "ஓ! எனக்குத் தெரியுமே! முந்திய தடவை வந்தபோதுகூட நீ இதை முழுதும் உழுது சாகுபடி செய்யவில்லை என்பது எனக்குத் தெரியும். என்னோடு வந்தானே ஸர்வேயர்பிரேட், அவனுக்குத்தான் அது தெரியவில்லை. உருப்படாத பயல் அவன். சர்க்காரிடம் கணக்கு வைத்திருக்கிறார்கள். இவ்வளவு பெரிய நிலத்தில் இவ்வளவு தானா விளைவு என்று அதன்படி விலை மலிவாகப் போடுவார்கள். வைக்கோலும் குறைவு—உருளையும் குறைவு. நல்ல நிலம் அல்ல என்று மதித்து விலை குறைவாகப் போடுவார்கள். உனக்கு லாபகரமாக இருக்கட்டுமே என்றுதான் போட்டேன். பாரேன்—உனக்கு மலிவாகவே கிடைக்கும்.

உன்னைப்போல முப்பத்திரண்டாயிரம் உழைப்பாளிகள் இருந்தால் இந்த நாடு உருப்பட்டுவிடும்!"

லென்ஸ்மாண்டு தலையை ஆட்டிக்கொண்டே இங்கர் பக்கம் திரும்பி "உன் சின்னக் குழந்தைக்கு வயசு என்ன?" என்றான்.

"ஒன்பது மாசமாகிறது."

"பையன் தானே!"

"ஆமாம்."

"நிலம் வாங்குகிற காரியத்தைச் சீக்கிரமே முடித்துவிடு, இந்தப் பக்கத்தில் இன்னொரு மனிதன் நிலம் வாங்கக் காத்திருக்கிறான். உனக்கும் கிராமத்துக்கும் மத்தியில் அவன் வாங்கிவிட்டானானால் உன் நிலத்தின் மதிப்பு ஏறிவிடும். முதலில் நீ வாங்கினாயானால் மலிவாகவே கிடைக்கும். பிறகு மதிப்பு ஏறட்டும்—நல்லதுதானே! காட்டைத் திருத்தி உழத்தொடங்கியது நீதானே முதலில், அதற்குப் பயன் கொஞ்சமாவது வேண்டாமா?" என்றான் ஐஸக்கிடம்.

அவனுடைய புத்திமதிக்கு ஐஸக்கும் இங்கரும் அவனுக்கு நன்றி செலுத்தினார்கள். நீங்களே முடித்துவிடுங்களேன் என்றார்கள். ஆனால் தான் செய்யவேண்டியதை எல்லாம் செய்தாகிவிட்டது என்றான் அவன். இனி சர்க்கார் உத்தரவு போடும். "தவிரவும் நான் இப்போது வெஸ்டர்போட்டன் போகிறேன். அநேகமாகத் திரும்பமாட்டேன்" என்று நேர்மையுடன் சொன்னான் அவன்.

இங்கரிடம் ஒரு ஆர்ப் நாணயம் கொடுத்தான். அவ்வளவு எதற்காக என்றாள் இங்கர். "நேருகிறபோது என் மனைவிக்கு ஏதாவது மாமிசம் கொண்டுபோய்க் கொடு. பாலேடைகூடக் கொண்டுபோய்க் கொடு. என் குழந்தைகளுக்குப் பாலேடை பிடிக்கும்—விலை கொடுத்துவிடுவாள்."

குன்றுகள் ஏறி அவனுடன் வெகுதூரம் சென்றான் ஐஸக். மேலே நடப்பது சுலபமாகவே இருந்தது. பிரியுமுன் அவனிடம் ஒரு தேலர் கொடுத்தான் லென்ஸ்மாண்டு.

லென்ஸ்மாண்டு கெய்ஸ்ஸலர் இப்படியாக அந்த ஊரை விட்டுப் போனான். அவன் திரும்பி வரவில்லை. அவன் போனது ஒன்றும் பிரமாத நஷ்டமில்லை. அயோக்யன் என்றார்கள் சிலர். அவன் கெட்டிக்காரன்தான். நாணயஸ்தன் அல்ல என்றார்கள் சிலர். அனுபவசாலி. ஆனால் பிறருடைய பணத்தையும் தன்

னுடையதைப் போலச் செலவு செய்துவருகிறுன் என்றுர்கள். பின்னர்தான் தெரிந்தது—மேலதிகாரி கோபித்துக் கொண்டதன் பேரில்தான் அவன் ஊரைவிட்டே போய்விட்டான். அம்த்மாண்டு மேலதிகாரி ப்ளெயிம் அவன் கணக்குகளை நேர் செய்து, அவனுல் இத்தனை பாக்கி சேரவேண்டும் என்று கண்டித்து எழுதினுன். ஆனல் அவனுடைய குழந்தை குட்டிகள் மனைவி பற்றி எதுவும் யாரும் நடவடிக்கை எடுக்கவில்லை. சிலநாட்களில் ஸ்வீடனிலிருந்து பணமும் வந்துவிட்டது—கெய்ஸ்ஸலரின் கணக்கை நேர்படுத்துவதற்கு வேண்டிய பணமும் வந்து சேர்ந்துட்டது. கெய்ஸ்ஸலருடைய மனைவியும் மூன்று குழந்தைகளும் ஊரிலே செளகரியமாகவே வாழ்ந்து வந்தார்கள். அவர்களை யாரும் கட்டாயப்படுத்தித் தடுத்து நிறுத்தவில்லை; அவர்களாகவே இஷ்டப்பட்டுத்தான் அங்கே தங்கியிருந்தார்கள்.

லென்ஸ்மாண்டு கெய்ஸ்லர்பற்றி ஐஸக்குக்கும் இங்கருக்கும் ஒரு குறைகூடக் கிடையாது. அவர்களுக்கு நன்மையே செய்தான் அவன். அவனுக்குப் பிறகு வருகிற லென்ஸ்மாண்டு எப்படிப்பட்டவனே, என்ன நடக்குமோ? எல்லாவற்றையும் மீண்டும் தொடங்கவேண்டியதுதானே என்று பயம் ஐஸக்குக்கு.

அம்த்மாண்டு (மேலதிகாரி) அந்த ஜில்லாவுக்கு லென்ஸ்மாண்டாகத் தன் குமாஸ்தா ஒருவனையே அனுப்பி வைத்தான். ஒரு மாஜிஸ்டிரேட்டின் பிள்ளை அவன். வயசு நாற்பதிருக்கும். ஹேயர்தால் என்று பெயர் அவனுக்கு. மேல் படிப்பு படிக்க வசதியில்லாத காரணத்தால் அவன் மேலதிகாரி ஆபீஸில் குமாஸ்தாவாகச் சேர்ந்தான். பதினைந்து வருஷங்களாகக் குமாஸ்தாவாக இருந்துவிட்டு இப்போது ஜில்லா அதிகாரியாக வந்தான். அவனுக்குக் கல்யாணமாகவில்லை. கல்யாணம் செய்துகொண்டால் அவனுடைய வருமானம் போதுமானதில்லை —மனைவியையும் வைத்துக் காப்பாற்ற.

தைரியத்தை வரவழைத்துக்கொண்டு ஐஸக் அவனைப் போய்ப் பார்த்தான்.

"ஸெல்லன்ரா விஷயமா? இதோ கடிதங்கள் வந்துவிட்டன. சர்க்காருக்கு தகவல்கள் பூராவும் வேண்டுமாம்! கெய்ஸ்ஸலர் இதையும் மிகவும் அபூர்த்தியாக விட்டுவிட்டுப் போயிருக்கிறுன். நிலத்தில் என்னென்ன பழங்கள், எத்தனை விளைகின்றன? கனமான மரங்கள் ஏதேனும் உண்டா? கனிப் பொருள்கள் உண்டா? ஆறு, தேக்கம் என்றுல் மீன் பிடிக்கும் உரிமையின்

மதிப்பென்ன? கெய்ஸ்ஸலர் ஏதோ தகவல்கள் சில கொடுத்திருக்கிறான். அவனை நம்பிப் பலன் இல்லை. நான்தான் மீண்டும் வந்து பார்த்து மதிப்பிட்டு விவரமாக எழுதவேண்டும். நானே ஸெல்லன்ரா வந்து பார்க்கிறேன்—மதிப்புப் போடுகிறேன். எத்தனை மைல் இருக்கிறது இங்கிருந்து? எல்லைக்கல் நட்டாக வேண்டும்—ஆமாம், வேலி போட்டாகவேண்டும். அது முக்கியம்.''

"வேலியோ எல்லைக் கல்லோ இந்த நாளில் போடமுடியாது. கோடையில்தான் முடியும்'' என்றான் ஐஸக்.

"எப்படியும் அது செய்தாகவேண்டும். கோடைவரையில் பதிலுக்கு சர்க்கார் காத்திருக்குமா? நானே சீக்கிரம் வருகிறேன். வந்து சர்க்காருக்குத் தகவல் கொடுக்கிறேன். இன்னொரு பண்ணைக்கும் மதிப்புப்போட வேண்டும்.''

"என் பண்ணைக்கும் கிராமத்துக்கும் மத்தியில் உள்ள நிலமா அது?''

"இருக்கலாம். அதுபற்றி நிச்சயமாக எனக்குத் தெரியாது. என் ஆபீஸ் குமாஸ்தா ஸர்வேயரேதான் அது—இன்னொரு நிலம் வாங்க விரும்புவது அவனேதான். அவன் கெய்ஸ்ஸலர் காலத்திலும் இங்கிருந்தவன்தான். நிலம் வாங்கி விடாமல் அவனைக் கெய்ஸ்ஸலர் தடுத்து விட்டானும்—உன்னால் நூறு கஜ நிலம் கூடச் சாகுபடி செய்ய முடியாது என்று. ஆகவே அவன் அம்த்மாண்டுக்கு மனுச் செய்திருக்கிறான். அதைப் பற்றியும் விசாரித்துச் சொல்லச் சொல்லித் தகவல் வந்திருக்கிறது. கெய்ஸ்ஸலர் செய்த காரியத்தை எல்லாம் நான் நேர் படுத்தியாக வேண்டுமே? வருகிறேன்.''

சீக்கிரமே லென்ஸ்மாண்டு ஹேயர்தாலும் அவனுடைய குமாஸ்தா ஸர்வேயர் பிரேடும் ஸெல்லன்ராவுக்கு வந்தார்கள். வழியிலேயே நனைந்து தொப்பலாகி விட்டார்கள். எல்லைக் கல் நடுவதற்குப் பனியிலும் சகதியிலும் நடந்து, மலை மேலும் கீழும் இறங்கி முடிப்பதற்குள் ஹேயர்தாலுக்குப் பாதி உயிர் போய் விட்டது. முதல் நாள் சுருசுருப்பாக ஓடியாடி வேலை செய்த ஹேயர்தால் இரண்டாவது நாள் ஓய்ந்துவிட்டான். பழமா? கனிப் பொருளா? அதெல்லாம் இருக்கிறதா இல்லையா என்று யார் போய்ப் பார்ப்பது! ஏதோ போட்டால் போகிறது!

எத்தனையோ விஷயங்களைப் பற்றிக் கேள்வி கேட்டிருந்தது சர்க்கார். எது எத்தனையிருந்தால் என்ன விலை என்று

மதிப்பிடும் கணக்குப் புள்ளிகள் இருந்தன போலும்! மரம் ஒன்றைப்பற்றி மட்டுமே கணிசமாக, நியாயமாக எதுவும் கணக்குப் போட முடிந்தது. அதுகூடப் பண்ணைக்குத் தேவை யான மரம் இருந்ததே தவிர வியாபாரத்துக்கு எங்கிருந்தது? பண்ணைக்கே போதுமோ போதாதோ! அப்படி மரம் இருந்தாலும் விற்க எவ்வளவு மைல்கள் யாரால் கொண்டுபோக முடியும்? ஐஸக்கால் முடிந்தால் அதைப் பற்றிச் சர்க்கார் கவலைப் படுவானேன்? தோள் வலிக்கத் தூக்கிப் போகிறவன் அவன் தானே!

கெய்ஸ்ஸலருடைய குறிப்புகள் தரமானவைதான். அவற்றை மீறி எதுவும் சொல்லிவிட முடியாது! அதில் தப்புக்கள் காண முயலுகிறான் புது லென்ஸ்மாண்டு—அவனால் முடியவில்லை. அடிக்கடி தன் குமாஸ்தா ஸர்வேயரைக் கேட்டுப் பதில் வாங்கிக் கொள்ளுகிறான் இந்த லென்ஸ்மாண்டு. அப்படிச் செய்யமாட்டான் கெய்ஸ்ஸலர். தவிரவும் இந்த ஸர்வேயரே அங்கு நிலம் வாங்குவ தாக இருக்கிறானே—நிலத்தின் மதிப்பை அதிகமாகச் சொல்லி விடுவானா அவன்?

"விலை என்ன சொல்லலாம்?" என்று தன் ஸர்வேயரைக் கேட்டான் லென்ஸ்மாண்டு.

"ஐம்பது தேலர் கேட்கலாம்—அதற்குமேல் கேட்பது நியாயமில்லை" என்றான் ஸர்வேயர் மேதாவி.

சர்க்காருக்கு உகந்த பாஷையில் எழுதினான் புது லென்ஸ் மாண்டு. விஷயம் ஒன்றேதான். கெய்ஸ்ஸலர் எழுதியது இது: "விவசாயி வருஷாவருஷம் வரி வேறு கொடுக்கவேண்டும். ஐம்பது தேலருக்கு மேல் இந்தப் பண்ணைக்காக அவனால் தரமுடியாது. இதைப் பத்து வருஷங்களில், வருஷத்துக்கு ஐந்தாகக் கொடுக்கலாம். இதை சர்க்கார் ஏற்றுக் கொண்டால் நிலம் அவனுடையதாகிவிடும். ஏற்காவிட்டால் நிலத்தையும் பிடுங்கிக் கொள்ளலாம். இதுவரை அவன் பட்டிருக்கிற பாட்டையும் வீணாக்கிவிடலாம்." ஹேய்ர்தால் எழுதியது இது: "தாழ்மை யுடன் அவன் சர்க்காரைக் கேட்டுக் கொள்ளுகிறான்; இந்த நிலத்தைத் தனக்கே உரியதாகக் கொடுக்கவேண்டுமென்று விண்ணப்பித்துக்கொள்கிறான். இது காறும் தனக்கு எதுவும் உரிமையில்லாவிட்டாலும் கூட அவன் உழைத்து, காடு திருத்தி, பண்படுத்தி, ஏதோ சொற்பப் பலன் கண்டிருக்கிறான். ஐம்பது

தேலர் விலைக்கு இதைத் தனக்குச் சாஸனம் செய்து தரப் பிரார்த்திக்கிறான். இந்த விலையைச் சர்க்கார் அளிக்கிற தவணைகளில் தந்துவிட அவன் இசைகிறான்."

தன்னால் முடிந்ததைச் செய்வதாகச் சொன்னான் லென்ஸ்மாண்டு ஹேயர்தால். "நிலத்தை உனக்குச் சாஸனம் செய்துதர முயலுகிறேன்" என்றான்.

## 6

பெரிய காளையை விற்று விடுவது என்று தீர்மானமாகி விட்டது. அது பிரும்மாண்டமாக வளர்ந்துவிட்டது. அதற்குத் தீனி போட்டே கட்டாது. அதைக் கிராமத்தில் கொண்டுபோய் விற்றுவிட்டு, வேறு ஒரு சிறிய ஒரு வயசுக் காளையை வாங்கிவர வேண்டும்.

இது இங்கருடைய யோசனைதான். அன்று ஐஸக் அங்கு தங்குவதில் இங்கருக்கு இஷ்டமில்லை. உடனேயே அவனைக் கிராமத்துக்குக் கிளப்பிவிடவேண்டுமென்று அவள் யோசிக்கிறாள்.

"நீ போவதாகஇருந்தால், இன்றே போய்ப்பார். காளையும் இப்போது பார்க்க நன்றாக இருக்கிறது. இன்னும் அதிக நாளானால் எப்படி இருக்குமோ? இந்தச் சமயத்தில் விற்றால் நல்ல விலை போகும். இன்றே அதைக் கிராமத்திற்கு ஓட்டிக் கொண்டு போ. இப்போது கிராமத்தில் பணம் புழங்கிக்கொண்டிருக்கிற சமயம்—கொண்டுபோய் விற்றுவிடு" என்று அவனைக் கிளப்பினாள் இங்கர்.

"சரி" என்கிறான் ஐஸக்.

"காளை போகிற வழியில் மூர்க்கமாக ஏதாவது விஷமம் செய்யாமல் இருக்கவேண்டும்."

ஐஸக் எதுவும் பதில் சொல்லவில்லை.

"ஒரு வாரமாக, சுதந்திரமாகத் திரிந்துகொண்டுதான் இருக்கிறது. ஒன்றும் விஷமம் செய்யாது!"

ஐஸக் இதற்கும் பதில் சொல்லவில்லை. ஒரு பெரிய கத்தியை எடுத்து இடுப்பில் சொருகிக்கொண்டு, காளையை ஓட்டிக்கொண்டு கிளம்பினான்.

பெரிய காளைதான் அது. அதனுடைய தோல் பளபளவென்று சுத்தமாக இருந்தது. பார்ப்பதற்கு பயங்கரமாக

இருந்தது. அது முதுகைச் சிலிர்த்துக் கொண்டு ஆடிஅசைந்து நடப்பதே நன்ருக, கம்பீரமாக இருந்தது. அது இருந்த காம்பீர் யத்துக்கு உயரம் குறைவுதான். அது ரயில்வே என்ஜின் மாதிரி எதிர்ப்பட்டதை எல்லாம் மோதித் தள்ளிக் கொண்டு நடந்தது. பெரிய கழுத்து — விகாரமாகக் கூட இருந்தது — அந்தக் கழுத்திலே ஒரு யானை பலம் இருந்தது.

"அது மிரண்டு உன் மேலேயே பாய்ந்துவிடப் போகிறது" என்ருள் இங்கர்.

"அப்படி வந்தால் அதை நானே கொன்று மாமிசத்தைத் தூக்கிப் போய் விற்று வருகிறேன். வேறு என்ன செய்வது?" என்ருன் ஐஸக், சிறிது யோசித்துவிட்டு.

இங்கர் வாசற்படியிலேயே உட்கார்ந்து விட்டாள். ஐஸக் இருக்கும் வரையில் அவள் உட்கார விரும்பவில்லை. அவனும் காளையும் போன பிற்பாடு அம்மாடி என்று உட்கார்ந்தாள். அவள் முகம் இடுப்பு வலியால் சிவந்திருந்தது. முனகினுள். சிறுவன் எல்யூஸிஸுக்குப் பேச்சு கொஞ்சம் கொஞ்சம் வந்தது. அவன் கேட்கிருன்: "அம்மாவுக்கு உடம்பு சரியாயில்லையா? வலிக்கிறதா?" "ஆமாம். வலிக்கிறது" — தன் சிறு கைகளை இடுப்பில் இரண்டு பக்கமும் வைத்துக்கொண்டு அம்மா மாதிரியே அழுத்திக் கொண்டு நெளிந்து அம்மா அப்பா என்று முனகுகிருன் பையன். குழந்தை ஸிவெர்ட் தூங்கிக் கொண்டிருக்கிருன்.

இங்கர் தன் பிள்ளையை உள்ளே கொண்டுபோய் விட்டு அவன் விளையாடுவதற்கு இரண்டொரு சாமான்களைத் தருகிருள். அவன் தானுகவே விளையாடுகிருன். தான் போய்ப் படுக்கிருள். பிரசவ காலம் வந்துவிட்டது. அவளுக்கு நினைவு தப்பிவிடவில்லை. எல்யூஸிஸை ஒரு கண்ணுல் பார்த்துக் கொள்ளுகிருள். கடிகா ரத்தையும் பார்க்கிருள். அவள் வாய்விட்டுக் கத்தவில்லை; அதிகமாக முனகக்கூட இல்லை. வயிற்றிலே போராட்டம் நடக்கிறது—அவள் அரையிலிருந்து ஒரு சுமை நழுவி இறங்கு கிறது. அதே விநாடி வெளியே ஒரு புதுக்குரல் கேட்கிறது— அதிசயமான, இன்பகரமான ஒரு குரல். பாவம்! எவ்வளவு பலஹீனமாகக் கத்துகிறது அது! இப்போது சும்மா படுத் திருக்க முடியவில்லை. அவளால்— எழுந்து குனிந்து பார்க்கிருள். அது என்ன அது? அவள் முகம்வெளிறிடுகிறது. பாவமற்ற ஒரு தோற்றம் படருகிறது! பெரிதாக முனகுகிருள் அவள்.

அசாதாரணமான பயங்கரமான முனகல். யாரோ மென்னியைப் பிடிப்பதுபோல இருக்கிறது.

மறுபடியும் படுக்கையில் சாய்கிறாள். ஒரு நிமிஷம்தான் செல்லுகிறது. அவளால் படுத்திருக்க முடியவில்லை. படுக்கையில் புதுக் குழந்தையின் குரல் விடாது கேட்கிறது. அழுகிறது குழந்தை. மீண்டும் எழுந்து பார்க்கிறாள் இங்கர். இப்படியும் இருக்குமோ? கடவுளே! சதி செய்து விட்டாயே? அதுவும் பெண் குழந்தை! பெண்ணுக்கு இது!

ஐஸக் கிளம்பி ஒரு மணி நேரம்கூட ஆகவில்லை. இரண்டு மைல் நடந்திருப்பானோ என்னவோ! பத்து நிமிஷங்களுக்குள்ளாகவே இங்கர் பெற்று எடுத்தாள்; பெற்று எடுத்த பெண்ணைக் கொன்றுவிட்டாள்......

ஐஸக் மூன்றாவது நாள் திரும்பி வந்தான்—அரைப் பட்டினியான ஒரு வயசுக் காளை ஒன்றை ஓட்டிக்கொண்டு வந்தான். அந்தக் காளையால் நடக்கக்கூட முடியவில்லை. வெகு சிரமப் பட்டுத்தான் ஓட்டிக்கொண்டு வந்திருந்தான்.

"எப்படி இருந்தது எல்லாம்?" என்று விசாரித்தாள் இங்கர். அவளைப் பார்த்தாலே தெரிந்தது—அவள் துக்கமாக இருந்தாள்—உடம்பும் சரியாக இல்லை.

ஐஸக் சரியாகவே காரியங்களைச் சாதித்து வந்திருந்தான்—வழக்கம்போல. ஆமாம். கடைசி இரண்டு மைல்களும் அந்தக் காளை மிரண்டுவிட்டது. கட்டுக்கடங்கவே யில்லை. அதைக் கட்டிப் போட்டுவிட்டு கிராமத்திலிருந்து உதவிக்கு ஆள் அழைத்து வர வேண்டியதாகிவிட்டது. அவன் வருவதற்குள் கட்டவிழ்த்துக்கொண்டு ஓடிவிட்டது. தேடிப் பிடிக்க மிகச் சிரமமாகிவிட்டது. எப்படியோ சமாளித்து விட்டான். நகரில் உள்ள கசாப்புக் கடைக்காக மாடு வாங்குகிற ஒரு வியாபாரியிடம் அந்தக் காளையை நல்ல விலைக்கு விற்றுவிட்டான். "இதோ புதுக்காளை. குழந்தைகள் வந்து பார்க்கட்டும்" என்றான் ஐஸக்.

மாடு ஒன்று புதிது வந்திருக்கிறது என்றால் பண்ணையிலே விசேஷம்தானே! இங்கரே வந்து புதுக் காளையைப் பார்த்தாள். உடம்பெல்லாம் தொட்டுத் தொட்டுப் பார்த்தாள். என்ன விலை என்று கேட்டாள். சிறுவன் ஸிவெர்ட் அதன் முதுகில் ஏறி உட்கார்ந்துகொண்டு சிரித்தான். "ஆனால் பெரிய பழைய காளை இல்லாதது என்னவோ போலத்தான் இருக்கிறது! எவ்வளவு

நேர்த்தியான காளை அது? அதைக் கொல்லுகிறவர்கள் அதிகமாகத் துன்புறுத்திக் கொல்லமாட்டார்கள் என்று நம்புகிறேன்" என்றாள் இங்கர்.

நிலத்திலே வேலை, அதுவும் இந்த சமயம், நிறைய இருந்தது. ஆடு மாடுகளை அவிழ்த்து விட்டுவிட்டார்கள். காலிக் கொட்டிலில் தொட்டிகளிலும் சட்டிகளிலும் உருளைக் கிழங்குகள் முளை விட்டுக் கொண்டிருந்தன. போன வருஷத்தைவிட இந்த வருஷம் அதிக மாகத் தானியம் விதைத்தான் ஐஸக். ஆகவேண்டுவன எல்லா வற்றையும் முறையாகச் செய்தான். காரெட், டர்ணிப் முதலிய வற்றுக்குப் பாத்தி தயார் செய்தான்—இங்கர் அவற்றை விதைத்தாள். முன்போலவே மீண்டும் வாழ்க்கை தொடங்கியது.

முதலில் சில நாட்கள் ஒரு மூட்டை வைக்கோலை வயிற்றில் கட்டிக்கொண்டு நடனமாடினாள் இங்கர். கொஞ்சம் கொஞ்சமாக வைக்கோலைப் பிடுங்கிவிட்டாள். கடைசியில் ஒரு நாள் ஐஸக் ஆச்சரியத்துடன் அதைக் கவனித்து என்ன ஆச்சு என்று விசாரித்தான்.

"ஏன்? ஒன்றும் பிறக்கவில்லையா? நீ கர்ப்ப முற்றிருப்பதாக நான் நினைத்தேனே!"

"இல்லை. இந்தத் தடவை ஒன்றுமில்லை"

"ஓ! ஏன்? எப்படி ஒன்றுமில்லாமல் போயிற்று?"

"கடவுள் சித்தம். அதைத் தவிர வேறு என்ன தெரியும் நமக்கு? ஐஸக்! நமது பண்ணை வயல்கள் பூராவும் உழுது விதை விதைக்க எத்தனை நாளாகும்?"

ஐஸக் "ஆமாம். ஆமாம். ஆனால்......பிரசவமாயிற்று; ஆனால் குழந்தை உயிருடனில்லை என்கிறாயா?"

"ஆமாம். அதுதான்"

"உனக்கு உடம்புக்கு ஒன்றுமில்லையே அது காரணமாக"

"இல்லை, ஐஸக். நம் பண்ணையில் பன்றி வைத்துக் கொண்டால் நன்றாக இருக்கும் என்று ரொம்ப நாளாக எனக்கு யோசனை"

இப்படிப் பேசிக் கொண்டிருந்த விஷயத்தை மாற்ற ஐஸக்குக் குத் தெரியாது. சிறிது நேரம் மௌனமாக இருந்து விட்டுப் பிறகு சொன்னான்: "ஆம். பன்றி வைத்துக் கொள்ளலாம். நான்கூட நினைத்ததுண்டு. ஒவ்வொரு வஸந்த காலத்திலும் ஞாபகம் வரும் எனக்கு. முதலில் உருளை நிறைய விளையட்டும்.

தானியமும் மற்றதும் அதிகம் விளைந்தால் பன்றியும் வைத்துக் கொள்ளலாம்—சிரமமாக இராது. இப்போது பன்றிக்கு உணவு போட நம்மிடம் உணவு போதாது. இந்த வருஷம் எப்படி யாகிறதோ பார்க்கலாம்.''

“பன்றிகள் இருந்தால் நன்றாக இருக்கும்” என்றாள் இங்கர்.

“ஆமாம். சரி.”

நாட்கள் செல்லுகின்றன. மழை வருகிறது. நிலமும் புல் தரையும் பசுமையாக, காணக் குளுமையாக இருக்கின்றன. இந்த வருஷம் பாதகமில்லை. பயப்பட வேண்டியதில்லை. எல்லாம் சரியாக வந்துவிடும். பெரியதும் சிறியதுமாக எத்தனையோ விஷயங்கள், முறைப்படி கவனத்துக்கு வருகின்றன. உணவு, உறக்கம், உழைப்பு! ஞாயிற்றுக்கிழமைகளில் முகம் கழுவி, தலை வாரிக் கொள்கிறார்கள். சிவப்புப் புதுச்சட்டை போட்டுக் கொண்டு ஐஸக் உட்கார்ந்திருக்கிறான்—அந்தச் சட்டையை நூற்று, நெய்து, சாயந்தோய்த்துத் தந்தது இங்கர். பிறகு ஒரு சம்பவம். ஒரு நாள் மாலை மற்ற ஆடுகளும் ஆட்டுக் குட்டிகளும் திரும்பி வருகின்றன—ஒரே ஒரு குட்டி வரவில்லை. ஏதோ வெடிப்பில் காலை விட்டு விட்டு எடுக்க முடியாமல் தவிக்கிறது. குட்டி மட்டுமில்லை—அதன் தாய் ஆடும் வரவில்லை என்று கவனிக்கிறாள் இங்கர். ஐஸக் ஆட்டையும் ஆட்டுக் குட்டியையும் தேடிக் கொண்டு கிளம்புகிறான். ஞாயிற்றுக் கிழமையானதனால் அவசியமான வேலை எதுவும் தடைப்பட்டு விடவில்லை—அதுபற்றி ஐஸக்குக்குச் சந்தோஷம்தான். அங்கு மிங்கும் தேடுகிறான்—மூலைக்கு மூலை எவ்வளவு தூரம் இருக்கிறது! வீட்டிலே ஆட்டையும் குட்டியையும் காணோமே என்று எல் லோருக்கும் கவலையாக இருக்கிறது. கொஞ்சமாக வார்த்தை சொல்லித் தன் குழந்தைகளைத் தேற்றுகிறாள் தாய். இரண்டு ஆடுகளைக் காணவில்லை; குழந்தைகள் சமர்த்தாக இருந்தால் தான் அவை அகப்படும். ஆட்டையும் குட்டியையும் பற்றி— குழந்தைகளுள்பட எல்லோருக்குமே கவலைதான். அந்தச் சிறு சமூகத்திற்குப் பொதுவான விஷயம் அது! ஏதோ அசாதாரணமான ஒரு சம்பவம் நடந்து விட்டது என்று பசுக் களுக்குக் கூடத் தெரிகிறது. அவையும் குரல் கொடுத்து அந்தச் சம்பவத்திலே பங்கெடுத்துக் கொள்கின்றன. ஏனென்றால் இங்கர் அடிக்கடி 'வீட்டுக்கு வெளியே போய் நின்றுகொண்டு “மே! மே!” என்று கத்திப் பார்க்கிறாள். இருட்டுகிற சமயம்

ஆகிவிட்டது. காடுகளிலே இருட்டியேவிட்டது. நடுக்காட்டில் ஒரு தவிர்க்க முடியாத துர்ப்பாக்கியம் அது. ஒரு ஆடும் ஆட்டுக் குட்டியும் காணமற் போய்விட்டதானல் ஏழை அவன் என்ன செய்வான்?' "மே! மே!" என்று குரல் கொடுப்பதை நிறுத்திவிட்டு இங்கர் "ஐஸக்! ஐஸக்!" என்று உரக்கத் தன்னுல் முடிந்தமட்டும் பலக்கக் கூவுகிருள். பதில் இல்லை. ஐஸக் ரொம்ப தூரம் சென்று விட்டான் போலும்.

என்ன நேர்ந்திருக்கும்? ஆடும் ஆட்டுக் குட்டியும் என்ன ஆகியிருக்கும்? ஏதாவது கரடிகிரடி அடித்துப் போட்டிருக்குமோ? ஸ்வீடன், பின்லாந்து - பிரதேசங்களிலிருந்து ஓநாய்கள் வந்து தின்று விட்டிருக்குமோ? இரண்டுமில்லை, நல்ல வேளையாக. ஒரு பிளவுபட்ட கல்லிலே காலைமாட்டி ஒடித்துக்கொண்டுவிட்டது ஆடு. அதன் கால், தொடை, மடி எல்லாம் காயங்கள். ஆட்டுக் குட்டி அதைச் சுற்றிச் சுற்றி வருகிறது. அது மாட்டிக்கொண்டு வெகுநேரம் ஆகியிருக்க வேண்டும்—ஏனென்ருல் எட்டிய வரையில் புல்லை எல்லாம் அடிவரையில் மேய்ந்து விட்டிருக்கிறது ஆடு. அதை விடுவிக்கிருன் ஐஸக். நொண்டிக்கொண்டே போய்ப் புல்லைத் தின்கிறது ஆடு. தாவி ஓடிப்போய் தாயின் மடியை முட்டிப் பால் குடிக்கிறது குட்டி. நல்லதுதான். காயங்களுடன் மடியில் பால் கனமும் சேர்ந்துகொண்டால் சிரமந்தானே!

எவ்வளவு ஆழமான எக்கச்சக்கமான பிளவு! கொடிய பள்ளம் அது! வேறு எந்த ஆட்டின் காலையும் அது முறிக்கா வண்ணம், அதைக் கல்லைப்போட்டு மூடிக் கெட்டித்துவிடுகிருன் ஐஸக். பிறகு தன் தோள்பட்டை வாரை எடுத்து, மடி கனத்துத் தொங்காமல் தூக்கிக் கட்டிவிடுகிருன். ஆட்டுக்குட்டி குதித்துக் குதித்துக்கொண்டு அவனைப் பின்தொடர்கிறது.

பிறகு—சிம்புவைத்துக் கட்டி தார் பிளாஸ்திரி போடுகிருன் ஆட்டுக்கு. சில நாட்களில் ஆடு மெதுவாகப் பாதத்தை ஊன்றுகிறது. ஒடிந்த கால் பொருந்தி சரி ஆகத்தொடங்கி விடுகிறது. ஆம். எல்லாமே நாளடைவில் சரியாகிவிடும்—மீண்டும் ஏதாவது நடக்கும்வரையில்—ஏதாவது அசம்பாவிதமாக நேருகிறவரையில்.

தினசரி வாழ்க்கை தெரிந்ததுதான். காட்டிலே குடியேறியவர் களுக்கு முக்கியமான எல்லையற்ற சிறு சிறு விஷயங்கள் நடைபெறுகின்றன. சிறு காரியங்கள் என்று அவற்றை எப்படிச் சொல்வது—முக்கியமானவை; நடைபெருவிட்டால் ஆபத்தாகக்

கூடப் போய்விடும். குடும்பத்தின் சந்தோஷமும், உணவும், அமைதியும், வளர்ச்சியும் அவற்றைப் பொறுத்தே இருக்கின்றன.

மாரிக்காலத்துக்கு முன், வேலைகள் அதிகமானவை அவசிய மானவை இல்லாதபோது, ஐஸக் சில பெரிய மரங்களை வெட்டிச் சதுரப்படுத்துகிறான். எதற்காக அந்த மரங்களைத் தயார் செய்கிறான் அவன்? காரணம் ஏதாவதிருக்கும்—ஆனால் முதலில் வாய் திறந்து சொல்லிவிடமாட்டான் ஐஸக். அது தவிர பல பல பெரிய பெரிய கற்களைத் தேடிக்கொணர்ந்து சேர்க்கிறான். அவற்றை ஒழுங்காக வைத்துச் சுவர் எழுப்புகிறான். ஒரு வருஷத்துக்கு முந்தி என்றால் இங்கர் வந்து நின்றுகொண்டு இது எதற்கு, அது எதற்கு என்று கேட்டுத் தொண தொணத்து விடுவாள். தன் புருஷன் செய்கிற காரியங்கள் அத்தனையையும் பற்றி விசாரிப்பாள். இப்போது அப்படியில்லை. அவள் தன் காரியத்தைக் கவனிப்பதில் இருக்கிறாள். கேள்விகள் கேட்ப தில்லை. எப்போதும்போல சுருசுருப்பாகவேதான் இருக்கிறாள். ஆனால் வேலை செய்யும்போது தனக்குத்தானே பாடிக்கொள்கிறாள் —அது புதுப் பழக்கம். தன் மகன் எல்யூஸிஸ்-க்கு மாலைப் பிரார்த்தனை கீதம் சொல்லித் தருகிறாள்—அதுவும் புதுப் பழக்கம் தான். அவள் தன்னை எந்தக் கேள்வியும் கேட்பதில்லை என்பது ஐஸக்குக்கு உறுத்துகிறது. அவள் கேள்விகளும் அவளுடைய ஆச்சரியமும் பார்வையும்தான் அவனுக்கு ஊக்கமளித்துக்கொண் டிருந்தன. அவனை அத்தனை காரியங்களும் சாதிக்கத் தூண்டியது அவள்தானே! ஆனால் இப்பொழுதோ அவள் தன் காரியத்தைக் கவனிக்கிறாள். அவன் காரியங்கள் எதிலும் எந்த விதமான ஆர்வமும் காட்டுவதில்லை. ஏதாவது சொன்னால் எதற்காக இப்படி உயிரைக் கொடுத்து உழைக்கிறாய் என்பாள்— அதற்குமேல் என்ன ஏது என்று விசாரிப்பதுகூட இல்லை. "போனதடவை பிரசவமாய், குழந்தை இறந்துவிட்டது. அவள் மனசில் சுமையாக இருக்கிறது. அவள் முன்போல் இல்லை" என்று தனக்குத்தானே சொல்லிக்கொள்கிறான் ஐஸக்.

ஒலைன் அவர்களைப் பார்க்க மீண்டும் வருகிறாள். எல்லாம் முன்போல இருந்தால் அவளை முழு மனசுடன் வரவேற்றிருப் பார்கள். ஆனால் இப்போது அப்படியில்லையே! முதலிலிருந்தே இங்கர் அவளிடம் விரோதம் பாராட்டுகிறாள்; என்ன, ஏன் என்பது தெரியவில்லை. அவள் விரோதி என்று இங்கர் நினைக் கிறாள் என்பது அவள் நடந்து கொள்வதிலிருந்து தெரிகிறது.

தெளிவாக அர்த்தம் தொனிக்கும்படியாக ஒலேன் சொல்லு கிருள்: "நான் சரியான சமயத்தில் வருவேன் என்று எதிர்ப் பார்த்தேன்."

"என்ன சமயம் அது?"

"என்! மூன்ருவது குழந்தைக்கு நாமகரணச் சடங்குக்கு வரலாம் என்று எண்ணி வந்தேன்" என்ருள் ஒலேன்.

"இல்லே" என்ருள் இங்கர் சுருக்கமாக. "நீ சிரமப்பட்டிருக்க வேண்டியதில்லே."

"ஹோ! அப்படியா?"

ஒலேன் மூத்த குழந்தைகள் இரண்டையும் பற்றிப் புகழ்ந்து பேசுகிருள். நேர்த்தியாக வளர்ந்து பெரியவர்களாகி விட்டார்கள் அவர்கள். ஐஸக் மேலும் அதிக நிலம் உழுது பண் படுத்தி யிருக்கிருன். ஏதோ கட்டிட வேலே நடக்கிற மாதிரி யிருக்கிறது! அவர்கள் செல்வம் பெருகுகிறது—முடிவில்லாமல் பெருகட்டும். நல்லது. இது போல அந்தப் பிரதேசத்திலே வேறு பண்ணேயே யில்லே என்கிருள் ஒலேன். "இப்போது என்ன கட்டுகிருன்?"

"நீயே கேளு அவனே. எனக்குத் தெரியாது" என்ருள் இங்கர்.

"எதற்கு? எனக்குத் தெரிந்து என்ன ஆகவேண்டும்? நீங்கள் எப்படி யிருக்கிறீர்கள் பார்த்து விட்டுப் போவோம் என்று வந்தேன். நன்ருக இருப்பது பற்றிச் சந்தோஷம்தான். தங்கக் கொம்பு எப்படி இருக்கிறது? கேட்க வேண்டுமா? நன்ருக இருக்க வேண்டிய மாதிரித்தான் இருக்கும்!"

கொஞ்ச நேரம் வம்பளந்து கொண்டிருந்தார்கள் இருவரும். இங்கரின் கோபம் மறைந்து விட்டது. திடீரென்று கடிகாரம் மணி அடிக்கிறது. கண்களில் நீர் துளிக்க ஒலேன் அதை நிமிர்ந்து பார்க்கிருள். அவள் ஆயுளில் அந்த மாதிரிக் கண்டதுமில்லே—கேட்டதுமில்லே. மாதா கோயில் மணி மாதிரி இருக்கிறது—இயேசு மாதிரி இருக்கிறது என்று புகழ்கிருள். இங்கர் தான் பணக்காரி, தரும புத்தியுள்ளவள் என்கிற பெருமிதத்துடன் தன் ஏழை உறவினளிடம் பரிவு கொள்ளுகிருள். "அடுத்த அறைக்கு வந்து என் தறியைப் பார்" என்கிருள்.

ஒலேன் நாள் பூராவும் தங்குகிருள். அவள் ஐஸக்கை நேரடியாகவே வெகுவாகப் புகழ்கிருள். "சுற்று வட்டத்தி

லுள்ளதை எல்லாம் நீ வாங்கி விட்டாயாமே! காசு கொடுக்காமல் இனமாகக் கிடைத்திராதோ? இதில் நீ உழைத்திருக்கிற மாதிரி யார் உழைக்கப் போகிறார்கள்?" என்றாள்.

தன்னை யாராவது புகழ வேண்டும் என்கிற தாகம் ஐஸக்குக்கு. ஒலேனின் புகழ் உரைகள் அவனுக்குத் திருப்தி யளிக்கின்றன. தான் மனிதன், ஆண் மகன், திடசாலி என்று நம்பிக்கையும் பெருமிதமும் தோன்றுகின்றன அவனுக்கு. "சர்க்காரிடமிருந்து வாங்குகிறேன்" என்றான் ஐஸக்.

"ஆம். ஆனால் சர்க்காருக்கு உன் பணம்தான் தேவையா? தாராளமாக விட்டுத்தரக் கூடாதோ சர்க்கார்? இப்போது என்ன கட்டிக்கொண்டிருக்கிறாய்?"

"எனக்கே தெரியாது. பெரிசாக ஒன்றுமில்லை."

"உன் பண்ணை பெருகுகிறது. உன் நிலம் வளருகிறது. அவசியமில்லாததெல்லாம்கூடக் கட்டுகிறாய் நீ! வீட்டுக் கதவு களுக்கு வர்ணம் வைத்திருக்கிறாய். சுவரிலே கடிகாரம் மாட்டி யிருக்கிறாய்! பெரிய புது மாளிகை கட்டுகிறாய் நீ என்று நினைக்கிறேன்."

"என்ன அசட்டுப் பேச்சுப் பேசுகிறாய் நீ!.........புது மாளிகையா" என்கிறான் ஐஸக். இப்படிச் சொல்கிறானே தவிர உள்ளூற அவனுக்குத் திருப்திதான்! "வந்திருக்கிற விருந்தாளிக்கு ஏதாவது பாலேடை கொடேன்" என்கிறான்.

"இல்லையே! பாலேடை கொஞ்சம்கூட இல்லை. ஆயிடுத்து" என்றாள் இங்கர்.

"அசட்டுப் பேச்சில்லை அது" என்கிறாள் ஒலேன் அவசர அவசரமாக. "நான் ஏழை, எளியவள். பணக்காரர்களின் வழிகள் எனக்கு எப்படித் தெரியும்? கேட்டுத் தெரிந்துகொள்ளலாம் என்று எண்ணுகிறேன். அவ்வளவுதான். புது மாளிகையில்லா விட்டால்......அது என்ன? பெரிய களஞ்சியமா? அப்படித்தான் இருக்கும். தானியம் சேமித்து வைக்க ஒரு களஞ்சியம் தேவை தானே! தேனும் பாலும் ஓடுகிறது உன் பண்ணையிலே— களஞ்சியம் அவசியம்தான்" என்றாள் ஒலேன்.

"அந்தப் பக்கத்திலெல்லாம் விளைச்சல் எப்படி? மற்றப்படி விசேஷம் என்ன?" என்று விசாரிக்கிறான் ஐஸக்.

"எப்போதும் போலத்தான் இருக்கிறது. கடவுள் இந்தத் தடவையும் வெய்யிலை அனுப்பி எல்லாவற்றையும் பொசுக்கிவிடா

மலிருக்க வேண்டும்! கடவுள் கையில் இருக்கிறது எல்லாம். இருந்தாலும் இந்த வருஷம் மோசமில்லே. பயிர்கள் தழைத்திருக் கின்றன. ஆனல் எங்கள் பக்கத்தில் உன் பண்ணேக்கு ஒப்பாக ஒரு பண்ணேகூட இல்லே. அது உண்மை" என்ருள் ஒலேன்.

தன் உறவினர்களேப்பற்றி விசாரிக்கிருள் இங்கர்—முக்யமாக மாமா ஸிவெர்ட்டைப் பற்றி. குடும்பத்திலே அவன் பெரியவன்—பணக்காரன். அவனிடம் பல மீன் பிடிக்கும் படகுகள் இருக்கின்றன. அவனிடம் பலர் கூலிக்கு வேலே பார்க்கிருர்கள். அவனுடைய வருமானத்தை அவன் எப்படிச் செலவிடுகிருன் என்பதே ஆச்சரியம்தான்! பெண்கள் இருவரும் மாமா ஸிவெர்ட்டைப் பற்றிப் பேசத் தொடங்கியதும், ஐஸக் மீண்டும் சின்னவனுகிவிட்டான். அவன் காரியங்கள் பின்னுக்குப் போய் விடுகின்றன. அவனே யாரும் இப்போது ஒரு கேள்வியும் கேட்க வில்லே. ஆனல் கடைசியில் அவனுகவே சொல்லுகிருன்: "உண்மையில் களஞ்சியமும், தானியம் அடிப்பதற்கு ஒரு களமும் தான் தயார் செய்துகொண்டிருக்கிறேன்" என்று சொல்லுகிருன்.

"நான் அப்படித்தான் நினேத்தேன். புத்தி யுள்ளவர்கள், கெட்டிக்காரர்கள், வாழ்வில் கருத்துள்ளவர்கள் இப்படித்தான் செய்வார்கள். முன் யோசனேயும் பின் யோசனேயும் இந்த வாழ்வுக்கு மிகமிக அவசியம். நீயாக யோசித்து ஏற்பாடு செய்து கொள்ளாத விஷயம் இங்கு இந்தப் பண்ணேயில் ஏது? பானே சட்டி முதற்கொண்டு உன் முன்யோசனேயின் விளேவுதானே! களமும் களஞ்சியமும் என்ரு சொன்னுய்?" என்று அடுக்கினுள் ஒலேன்.

ஐஸக் ஒரு குழந்தை. ஒலேனுடைய புகழ்ச்சியான வார்த்தை களால் அவன் தலே சுற்றுகிறது. என்ன சொல்லுகிருேம் என்று அறியாமலே சொல்லுகிருன்: "என் புது மாளிகையிலே களமும் களஞ்சியமும் அவசியம் இடம்பெறும். அப்படித்தான் என் உத்தேசம்."

ஒலேன் தலேயை ஆட்டுகிருள்: "நல்லது. களமும், களஞ்சியமும் மிகமிக அவசியம்."

"நிலத்தில் பாடுபட்டு விதைத்து, அறுவடை செய்து களமும் களஞ்சியமும் இல்லாது போனல் என்ன பயன்?"

"எது தேவை, எது தேவையில்லே என்பதை உன்னேப்போல அறிந்தவர் யார்?"

இங்கருக்குத் திடீரென்று மீண்டும் கோபம் வந்து விடுகிறது. தன் புருஷனும், ஒலினும் பேசிக் கொண்டிருக்கிற பேச்சு அவளுக்குப் பிடிக்கவேயில்லை. அவள் குறுக்கிடுகிறாள் பேச்சிலே: "பாலேடையா கொடுக்கவேண்டும்? பாலேடை மீன் மாதிரி ஆற்றிலே துள்ளிக் கொண்டிருக்கும். பிடித்துக் கொடுக்கலாமே!"

ஒலின் சமாதானப்படுத்த முனைகிறாள் "இங்கர்! குழந்தாய்! எனக்கு எதற்குப் பாலேடையும் பாலும் வெண்ணெயும்? அதைப் பற்றிக் கவலைப்படாதே நீ. நான் ஏழை எளியவள். அண்டிப் பிழைப்பவள்.........எனக்கு எதற்கு? இதெல்லாம் வேண்டாம்" என்கிறாள்.

ஐஸக் சிறிது நேரம் பேசாமல் உட்கார்ந்திருக்கிறான். பிறகு எழுந்திருக்கிறான். "பகலில் இப்படி உட்கார்ந்திருந்தால் சரிப்பட்டு வருமா? சுவருக்குக் கல் கொண்டுவந்து சேர்க்கவேண்டும்."

"ஆம். அந்தச் சுவருக்கு நிறையக் கல் வேண்டுமே—இல்லையா?"

"எத்தனை கொணர்ந்தாலும் போதவில்லை" என்கிறான் ஐஸக்.

ஐஸக் போன பிற்பாடு, சிறிது நேரம் இரண்டு ஸ்திரீகளும் சாதாரணமாகப் பேசிக்கொண்டிருக்கிறார்கள். மணிக் கணக்காக அதையும் இதையும் பற்றிப் பேசிக்கொண்டு உட்கார்ந்திருக்கிறார்கள். மாலையில் ஒலின் அவர்களுடைய ஆடு மாடுகளைப் பார்வையிடுகிறாள்—பசுக்கள், ஒரு காளை, ஆடுகளும், ஆட்டுக் குட்டிகளும். "நீ பணக்காரிதான்" என்கிறாள் ஒலின். கடவுளைப் பிரார்த்திக்கிற மாதிரிக் கண்களை ஆகாயத்தை நோக்கித் திருப்புகிறாள்.

ஒலின் அன்றிரவு அங்கு தங்குகிறாள். மறுநாள் காலையில் அவள் கிளம்பிவிடுகிறாள். மறுபடியும் அவள் கையில் ஒரு மூட்டை இருக்கிறது. ஐஸக் கல் வெட்டிக்கொண்டிருக்கிறான். ஒலின் அந்தப் பக்கம் போகாமல் வேறு பக்கமாகப் போகிறாள்—தன் மூட்டையை ஐஸக் பார்த்துவிடப் போகிறானே என்று!

இரண்டு மணி நேரம் கழித்து ஒலின் திரும்புகிறாள். வீட்டுக்குள் வந்ததும் வாராததுமாக, "ஐஸக் எங்கே" என்று கேட்கிறாள்.

இங்கர் வீட்டை அலம்பிச் சுத்தப்படுத்திக் கொண்டிருக்கிறாள். ஐஸக்கைத் தாண்டித்தானே ஒலின் போயிருக்கவேண்டும்?

குழந்தைகளும் அவனுடன்தான் இருக்கவேண்டும். இங்கர் எதையோ ஊஹித்தறிந்துகொண்டு தடுமாறுகிருள்—திண்டாடுகிருள்.

"ஐஸக்கா? அவனிடம் என்ன வேலை உனக்கு?"

"அவனிடமா? ஒன்றுமில்லை. போய் வருகிறேன் என்று சொல்லாமல் போகலாமா என்று வந்தேன்."

மௌனம். உட்கார் என்று இங்கர் சொல்லாமலேயே உட்காருகிருள் ஒலைன்—அங்கிருந்து நகர இஷ்டமில்லாதவள் போல உட்காருகிருள். ஏதோ விஷயம் இருக்கிறது என்று சொல்லுகிறவள்போல உட்காருகிருள்.

இங்கரால் தன்னைக் கட்டுப்படுத்திக்கொள்ள முடியவில்லை. அவள் முகத்தில் கோபமும் பயமும் மாறிமாறித்தோன்றுகின்றன. கடைசியில் அவள் சொல்லுகிருள்: "ஆஸ் ஆண்டர்ஸ் மூலம் நீ அனுப்பினுயே—அதைப் பார்த்தேன்! எனக்கென்று நல்ல வெகுமதிதான் அனுப்பினுய்!"

"என்ன? ஏது?"

"அந்த முயல்."

"எனக்குப் புரியவில்லை. நீ என்ன சொல்லுகிருய்?" என்று மெதுவாகக் கேட்டாள் ஒலைன்.

"நீ அனுப்பவில்லை அதை என்று பொய் சொல்லாதே!" இங்கரின் கண்கள் பொறி கக்கின. "இதோ இந்தக் கரண்டியால் உன் கண்ணைத் தோண்டிவிடுவேன். ஆமாம். உன் மண்டையை உடைத்துவிடுவேன்."

•

அடித்தாளா? ஆமாம். அடி அடி என்று இங்கர் ஒலைனை அடித்தாள். முதல் அடி விழுந்ததும் ஒலைன் கீழே விழுந்துவிடாமல் சமாளித்துக்கொண்டு கூவினுள். "அடி பெண்ணே! என்ன செய்கிருயென்று தெரிந்துகொண்டு செய். உன் விஷயம் பூராவும் எனக்குத் தெரியும்." இங்கர் மீண்டும் மீண்டும் கையாலும் கரண்டியாலும் அவளை அடிக்கிருள். ஒலைன் கீழே விழுந்ததும் அவள்மீது ஏறி இரண்டு முழங் கால்களையும் ஊன்றி மண்டி போட்டுக்கொண்டு மீண்டும் அடிக்கிருள்.

"என்னைக் கொல்லவா பார்க்கிருய்?" என்று கதறினுள் ஒலைன். பிளவுபட்ட உதட்டுடன் அந்தத் திடகாத்திரமான இங்கர் அவள் மேல் ஏறி விழுந்து அந்தப் பெரிய கரண்டியால் அவளை அடித்துத் தீர்த்து விட்டாள். ஒலைன் மேலெல்லாம் காயம்.

ரத்தம் ஓடியது. ஆனால் ஒலேன் அழவில்லை—உரக்கச் சப்தம் செய்யவில்லை. "என்னையும் கொன்றுவிடப் பார்க்கிறாயா! என்னையுமா?"

"ஆம். கொன்று விடுகிறேன்" என்கிறாள். "பார். உன்னைக் கொல்லாவிட்டால் பார்!" அதுதான் தெரிந்து விட்டது. இங்கரின் ரகசியம் ஒலேனுக்குத் தெரிந்து விட்டது. இனி என்ன ஆனால் என்ன? "உன் அழகு முகத்தை திருகி எடுத்து விடுகிறேன்."

"அழகு முகம் என்று என்னைக் கேலியா செய்கிறாய்? உன் முகத்தைக் கண்ணாடியில் பார். கடவுளே அதை எப்படி அடையாளப் படுத்தியிருக்கிறார் பார்" என்றாள் ஒலேன்.

ஒலேன் ஓயவில்லை. இங்கருக்குக் களைப்பும் ஆயாசமும் மேலிட்டது. அப்படியும் ஓய்ந்து விடவில்லை இங்கர். "உன்னைத் தீர்த்து விடுகிறேன் பார். இரு, இந்தக் கரண்டி போதாது. கத்தி ஒன்றைக் கொணர்ந்து உன்னை வெட்டி விடுகிறேன்." கத்தி தேடுபவள் போல எழுந்திருக்கிறாள்.

ஆனால் அவளுடைய ஆத்திரம் கொஞ்சம் கொஞ்சமாகத் தணியத் தொடங்கி விட்டது. அடிப்பதை நிறுத்தி விட்டு, வாய்க்கு வந்தபடி யெல்லாம் திட்டுகிறாள் இங்கர். ஒலேன் எழுந்து மீண்டும் முன் உட்கார்ந்திருந்த இடத்தில் உட்காருகிறாள். அவள் முகம் சிவந்து நீலமாக இருக்கிறது. உடம்பு முகமெல்லாம் ஏராளமான ரத்தக் காயங்கள். அவள் உதடுகள் வீங்கிப் பெரிதாகி யிருக்கின்றன. மயிரைக் கோதி விட்டுக் கொள்கிறாள். காறி உமிழ்கிறாள். தன் ஆடைகளைச் சரிப்படுத்திக் கொள்கிறாள். "சே! பிசாசே!" என்கிறாள்.

"காட்டிலே போய்த் தோண்டிப் பார்த்துக் கொண்டுவந்திருக்கிறாய் நீ?" என்று கூவினாள் இங்கர். "அதுதானே விஷயம்! என் குழந்தையின் சவத்தை அதைப் புதைத்த இடத்தைத் தோண்டி நீ பார்த்து விட்டாய். அதே சமயம் உனக்கும் ஒரு சவக் குழி தோண்டிக் கொண்டிருக்கக் கூடாதோ நீ?"

"இரு, இரு" என்றாள் ஒலேன். அவள் கண்களிலே வஞ்சம் தீர்க்கும் ஆசை பள பளத்தது. "இப்போது நான் எதுவும் பேச விரும்பவில்லை. நீயே பேசி ஓய். ஆனால் உன் கணவன் கட்டுகிற மாளிகையிலே வாழ முடியாது நீ! மணி அடிக்கிற கடிகாரம் இனி உனக்கு மணி அடிக்காது. பாரேன். செய்கிறேனா இல்லையா பார்!"

"அதெல்லாம் என்னிடமிருந்து உன்னால் பறிக்க முடியாது!"

"பாரேன். ஒலேனால் என்ன செய்ய முடியுமென்று பாரு. நீயே தெரிந்து கொள்வாய்."

இப்படியே அவர்கள் வெகு நேரம் விவாதிக்கிறார்கள் ஒலேன் அடிக்கவில்லை. ஆத்திரமாகப் பேசவில்லை. மெதுவாக, தணிந்த குரலில் பேசுகிறாள். அவள் கசப்பிலே, ம்ருதுத் தன்மையிலே ஒரு எல்லையற்ற பயங்கரம் தெளிவாகத் தெரிகிறது. "எனக்குக் கொடுத்த மூட்டை எங்கே என்கிறாயா? அதைக் காட்டிலே பத்திரமாக வைத்திருக்கிறேன். அதைத் திருப்பித் தந்து விடுகிறேன். உன் சாமான் எதுவும் எனக்கு வேண்டாம்."

"அப்படியா? நான் அதைத் திருடியிருப்பேன் என்று நினைக்கிறாயா நீ?"

"நீ என்ன செய்தாய் என்பது உனக்குத் தெரியும்."

அதைப்பற்றிக் கொஞ்ச நேரம் விவாதம் நடக்கிறது. அந்தக் கம்பிளி வெட்டிய ஆட்டைக் காட்டுகிறேன் என்றாள் இங்கர். அந்த ஆடு எப்படி வந்ததோ? என்றாள் ஒலேன்.

தன் பண்ணையில் எதுவும் திருட்டுச் சொத்து கிடையாது என்கிறாள் இங்கர். "ஜாக்கிறதை. ஜாக்கிறதையாக வயைத் திற. என்ன பேசுகிறோம் என்று அறிந்து பேசு. அல்லது...அவ்வளவு தான்!" என்று பயமுறுத்துகிறாள் இங்கர்.

"ஹா! ஹா!" என்று சிரிக்கிறாள் ஒலேன். ஒலேனை யாராலும் அடக்கமுடியாது. அவள் பேச்சு தடைப்படவே தடைப்படாது. "என் வாயா? உன் வாயையும் மேலுதட்டையும் பார்த்துக் கொள்ளேன். ஹா! ஹா!" இங்கரின் பிளவுபட்ட உதட்டைச் சுட்டிக்காட்டி, மனிதனும் கடவுளிடம் வெறுக்கிற விஷயம் அது என்றாள்.

இங்கர் ஆத்திரமாகப்பதில் அளிக்கிறாள். ஒலேன்பருமனானவள்; நாய் மாதிரிப் பருமன் என்கிறாள் இங்கர் "நாய்! நாய்! நாயே! நீ ஒரு முயலை என்னிடம் அனுப்பி வைத்தாய். அதற்கு நான் உனக்கு பிரதி செய்யாமல் விடுவேனா?"

"முயலா? மறுபடியும் முயலைப்பற்றிப் பேசுகிறாயே! அது குற்றம் என்கிறாய். இல்லை. அது என் குற்றமல்ல—நான் செய்ததல்ல. அதை நீ நம்பமாட்டாய். ஆனால் அந்த முயல் எப்படியிருந்தது?"

"எப்படி இருந்ததா? முயல் எப்படியிருக்கும்?"

"உன் மாதிரி. உன் மேலு தடுமாதிரியிருக்கும். தெரிந்ததா?"

"ஓடு, வெளியே! ஓடு. சீ ஓடு!" என்று கத்தினுள் இங்கர். நீதான் நான் கர்ப்பமாக இருக்கும்போது ஆஸ் ஆண்டர்ஸை அந்த முயலுடன் அனுப்பினுய்! உன்னைச் சிறைக்குள் தள்ளச் செய்கிறேன் பார்."

"சிறையா? சிறையென்று சொன்னுய்!"

"உனக்குப் பொருமை தாங்கவில்லை. என் பண்ணையையும் என் புருஷனையும், என் குழந்தைகளையும் பார்த்துப் பொருமைப் படுகிறுய் நீ!" என்ருள் இங்கர். "ஐஸக்கை நான் வந்தடைந்தது முதல் உனக்கு ஒரு இரவு கூடத் தூக்கம் வரவில்லை. கடவுளே! நான் உனக்கு என்ன தீங்கு செய்தேன்? உன் குழந்தைகள் சரிவர நடந்துகொண்டு முன்னுக்கு வராவிட்டால் அதற்கு நானு பிணை? உன் பொல்லாத மனசு காரணம்தான்—உன் குழந்தைகள் உருப்படவில்லை—என் குழந்தைகள் வளர்ந்து பல முள்ளவர் களாகவும், நேரான உழைப்பாளிகளாகவும் பெரியவர்களாவது உனக்குப் பிடிக்கவில்லை. உன் குழந்தைகளைவிட என் குழந்தைகள் அழகாக இருப்பது பார்த்துப் பொறுமுகிறுய் நீ!"

ஒலினுக்குத் தன் பிள்ளை குட்டிகளைப்பற்றி யாராவது இளக்காரமாகப் பேசினுல் கோபம் வந்துவிடும். அவள் பல தடவை தாயானவள். தன் குழந்தைகள் எப்படியானுல் என்ன?—அவை அவள் குழந்தைகள்—அவற்றிடம் அளவு கடந்த பெருமை அவளுக்கு. அவற்றின் குற்றங் குறைகளை ஒளித்துப் பிரமாதமாக அவர்களைப்பற்றிப் பேசுவாள் ஒலின். அவர்கள் செய்யாத காரியங்களையும் செய்து சாதித்ததாகப் பீத்திக் கொள்வாள்.

"என்ன சொல்லுகிறுய் நீ?" என்று சீறினுள் ஒலின். "வெட்கம் இல்லை உனக்கு? என் குழந்தைகளுக்கு என்ன? உன் குழந்தைகளுக்கு எந்த விதத்தில் அவை மட்டம்? என் குழந்தைகளைப் பற்றியா இப்படிப் பேசுகிறுய் நீ! ஆண்டவன் அருளிய தேவ மலர்கள் அவை. வாழ்ந்து பெரியவர்களாகி அவர்கள் கௌரவதையாக வாழ்கிறுர்கள். அவர்களைப்பற்றிப் பேச உனக்கு வாயேது?"

"லிஸேயை எதற்காகச் சிறைக்கு அனுப்பினுர்கள்?" என்கிறுள் இங்கர் விடாமல்.

"பாவம்! பரம சாது என் லிஸே! மலர்போல மனம் உள்ளவள். யாரோ செய்த குற்றத்துக்கு அவள் பழியானுள். இப்போது

அவள் பெர்கன் நகரில் இருக்கிருள். எப்படியிருக்கிருள் தெரியுமா? உனக்குச் சொன்ஞல்தான் தெரியுமா? கழிவடை நீ!"

"நில்ஸைப்பற்றி ஊரில் என்ன சொல்லிக்கொண்டார்கள்?"

"உன்ஞேடு அதெல்லாம் பற்றி நான் பேசுவானேன்?...... உன் பெண்ணைப் புதைத்திருக்கிருயே! அதை எப்படிக் கொன்ருய் நீ? கழுத்தைத் திருகியா?"

"போ! ஓடு வெளியே!" என்று கத்திக்கொண்டே ஒலேன்மேல் பாய்ந்தாள் இங்கர்.

ஒலேன் அசையவில்லே. எழுந்திருக்கக்கூட இல்லே. அவள் அசையாமல் உட்கார்ந்திருந்தது இங்கருக்கு மேலும் மேலும் ஆத்திர மூட்டியது. "கத்தி எடுத்து வரேன், இரு" என்ருள்.

"வேண்டாம். நான் போகிறேன். உன்னே என்ன என்று சொல்வது? உன் உறவினள் ஒருத்தியை வீட்டை விட்டுத் துரத்துகிருயே?.........நல்லதற்கா இது! ஆனுல் நான் பேசிப் பயன் என்ன?"

"வேறு ஒன்றும் செய்ய வேண்டாம் நீ! போய்விடு!"

ஆனுல் ஒலேன் போகவில்லே. மீண்டும் இருவரும் ஒருவரை ஒருவர் காரசாரமாகத் திட்டிக் கொள்கிருர்கள். கடிகாரம் அரை மணி அடிக்கிறது, அதைப் பார்த்து அலக்ஷியமாகச் சிரிக்கிருள் ஒலேன். இங்கரைப் பார்க்கிருள். இங்கருக்கு மீண்டும் கோபம் வருகிறது. இருவரும் கடைசியில் கொஞ்சம் கொஞ்சமாகத் தணிகிருர்கள். ஒலேன் கிளம்பத் தயாராகிருள். "என் வழி நீண்ட வழி—வெகு நாள் பயணம் இருக்கிறது. கிளம்ப நேரமும் ஆகிவிட்டது. போகும் வழியில் உணவுக்கு........."

இங்கர் பதில் சொல்லவில்லே. கோபம் தீர்ந்து புத்தி தெளிந்து விட்டது அவளுக்கு. ஒலேனே முகத்தைக் கழுவச் சொல்லுகிருள். ஒரு பேஸினில் தண்ணீர் ஊற்றித் தருகிருள். இரத்தம எங்கே கட்டியிருக்கிறது, காய்ந்திருக்கிறது என்று ஒலேனுக்குத் தெரியவில்லே. இங்கர் சிறிது நேரம் சும்மா நிற்கிருள். பிறகு எங்கெங்கே ஜலம் விட்டு அலம்பிக் கொள்ளவேண்டும் என்று சுட்டிக் காட்டுகிருள்.

"அங்கே. இங்கே கூட—கண்ணுக்கு மேலே. இந்தக் கண் இல்லே—அந்தக் கண்ணுக்கு மேலே. நான் காட்டுவது தெரியவில்லேயா?"

"கண் தெரிந்தால்தானே!" என்கிருள் ஒலேன்.

"வாய்ப் பக்கமாக நன்ருக அடிபட்டிருக்கிறது. ஜலத்தை நிறைய விட்டு அலம்பேன். ஜலம் என்ன செய்யும்?"

கடைசியில் இங்கரே ஒலேனுடைய காயங்களை எல்லாம் அலம்பி விடுகிருள். ஒரு துண்டைத் தருகிருள், துடைத்துக் கொள்ள.

"நான் என்ன சொல்ல வந்தேனென்ருல் ஐஸக்கும் குழந்தைகளும்—இதைப் பற்றி எப்படி என்ன, நினைக்கிருர்கள்?" என்ருள் ஒலேன்.

"அவனுக்குத் தெரிந்து விட்டதா?" என்ருள் இங்கர்.

"தெரிந்து விட்டதாவாது? என்னேடு வந்து அவனும் பார்த்தான்!"

"என்ன சொன்னுன்?"

"அவன் என்ன சொல்லுவான்? மனசு கஷ்டப் பட்டுக் கொண்டு சும்மாயிருந்து விட்டான்" என்ருள் ஒலேன்.

மௌனம்.

"உன் குற்றம்தான் இதெல்லாம்" என்ருள் இங்கர் அழுது கொண்டே.

"என் குற்றமா? எப்படி?"

"நான் ஆஸ் ஆண்டர்ஸைக் கேட்கிறேன்."

"கேளேன்."

இருவரும் நடந்துபோனதைப் பற்றி அமைதியாகப் பேசுகிருர்கள். ஒலேன் மனசில் கபடு சூது வஞ்சம் என்கிற ஞாபகம் எதுவும் இருப்பதாகத் தெரியவில்லை. ஒலேன் சாமர்த்தியக்காரி, அவளால் சமயத்துக்கு தக்கமாதிரி பேச முடியும். அனுதாபத்துடன் பேசுகிறவள் மாதிரிப் பேசுகிருள்—விஷயம் வெளிவந்து விட்டால் ஐஸக்கும் குழந்தைகளும் எவ்வளவு கஷ்டப்படுவார்கள்!

"ஆமாம்" என்ருள் இங்கர். மீண்டும் அழத் தொடங்கினுள் அவள். "இரவு பகலாக அதுதான் என் சிந்தனே." ஒலேன் தான் வந்து உதவுவதாகக் கூறுகிருள். இங்கர் சிறைக்குப் போக நேர்ந்தால் பண்ணையையும் குழந்தைகளையும் தான் வந்து பார்த்துக் கொள்வதாகச் சொல்லுகிருள்.

இங்கர் அழுகையை நிறுத்தி விட்டுச் சொல்லுகிருள்: "வேண்டாம். உனக்கு என் குழந்தைகளைப் பிடிக்கவில்லை."

"பிடிக்கவில்லையா? நீ இப்படிச் சொல்லலாமா?"

"ம்......எனக்குத்தான் தெரிகிறதே!"

"எனக்கு உலகில் பிடித்த விஷயம், குழந்தைகள் தான்."

"உன் குழந்தைகள் விஷயத்தில் அது சரி. என் குழந்தைகள் விஷயத்தில் நீ சரியாக இருக்க மாட்டாய்! பிரசவத்துக்கு முன் நீ அவன் மூலம் அந்த முயலை அனுப்பியதை நினைக்கும்போது... நீ மகா கொடுமைக்காரி."

"நானா?" என்றாள் ஒலேன். "என்னையா சொல்லுகிறாய்?"

"ஆமாம், உன்னைத்தான். உன்னையேதான் சொல்லுகிறேன்" என்றாள் இங்கர் அழுது கொண்டே. "நீ மகா கொடுமைக்காரி. என்னைக் கண்டால் பொறாமை உனக்கு. உன்னை நான் நம்பவே மாட்டேன். இங்கு நானில்லாத சமயத்தில் திருடவும் தொடங்கி விடுவாய்! பாலேடைகளை எல்லாம் எடுத்து உன் மக்களுக்கு அனுப்பி விடுவாய்!......"

"என்னைப் பற்றி இப்படி நினைக்கிறாயே! நீ தான் கொடுமைக் காரி" என்கிறாள் ஒலேன்.

இங்கர் அழுகிறாள், கண்களைத் துடைத்துக் கொள்கிறாள். நடு நடுவே ஆத்திரமாக இரண்டு வார்த்தைகள் சொல்லுகிறாள். அவளைக் கட்டாயப் படுத்தவில்லை ஒலேன். எங்கிருந்தால் என்ன அவளுக்கு? தன் பிள்ளை நில்ஸுடன் போயிருந்து விடுகிறாள்! அவளுக்காகத் தானே சொன்னாள்! இங்கர் சிறைக்குப் போய் விட்டால், ஐஸக்கும் சின்னஞ் சிறு குழந்தைகளும் கஷ்டப்பட மாட்டார்களோ? பண்ணையில் தனியாக ஐஸக் என்ன பண்ணு வான்? ஒலேன் இருந்தால் வீட்டைச் சரிவரப் பார்த்துக் கொள்ளு வாள். "யோசித்துப் பார்" என்றாள் ஒலேன்.

இங்கர் தோற்று விட்டாள். அவள் அழுகிறாள். தலையை ஆட்டுகிறாள். குனிந்து பார்க்கிறாள். தூக்கத்தில் நடப்பவள் போல எழுந்து ஒலேனுக்கு ஒரு உணவுப் பொட்டலம் கட்டித் தருகிறாள். அதைக் கையில் வாங்கிக் கொண்டே ஒலேன் "எனக்காக உனக்கெதற்கு இவ்வளவு சிரமம்?" என்கிறாள்.

"அதிக தூரம் போகணுமே நீ! சாப்பிடாமல் என்ன செய்வாய்?" என்கிறாள் இங்கர்.

ஒலேன் போன பிறகு, இங்கர் சந்தடி செய்யாமல் வெளியே வருகிறாள். நாலா பக்கமும் பார்க்கிறாள், கவனிக்கிறாள். கல் பட்டறையிலிருந்து சப்தமேயில்லை. போய் தூரத்தில் நின்று பார்க்கிறாள். குழந்தைகள் சிறு கற்களை வைத்துக் கொண்டு

விளையாடிக் கொண்டிருக்கின்றன. முழங்கால் மேல் கடப் பாறையைச் சார்த்திக் கொண்டு ஐஸக் உட்கார்ந்திருக்கிறான். அவன் உட்கார்ந்திருக்கிறான்—நிச்சலமாக உட்கார்ந்திருக்கிறான்.

இங்கர் காட்டுப் பக்கம் மெதுவாகச் சந்தடி செய்யாமல் போகிறாள். அங்கே ஒரு இடத்தில் அவள் சிறிய சிலுவை ஒன்றை நட்டிருந்தாள். அது கீழே விழுந்து கிடக்கிறது. பூமியையும் சமீபத்தில் யாரோ தோண்டி யிருக்கிறார்கள்! கையால் அந்த இடத்தைச் சமன் செய்து மீண்டும் சிலுவையை நடுகிறாள் இங்கர். பிறகு அதையே பார்த்துக் கொண்டு உட்காருகிறாள்.

ஒலின் அந்தக் குழந்தையின் சவக் குழியை எது மட்டும் தோண்டியிருக்கிறாள் என்று பார்க்க வந்தாள் இங்கர். ஆடு மாடுகள் மேய்ந்துவிட்டு இன்னும் திரும்பவில்லை. அந்தப் பாதை வழியேதான் வரவேண்டும். அவை வருகிற வரையில் அங்கேயே உட்கார்ந்திருக்கிறாள்; அழுது கொண்டே உட்கார்ந்திருக்கிறாள். கண்களைத் துடைத்துக் கொண்டு சிலுவையைப் பார்க்கிறாள். பூமியைப் பார்க்கிறாள். அழுகிறாள். உட்கார்ந்திருக்கிறாள்.

## 7

நாட்கள் செல்லுகின்றன.

நிலம் வளம் பெறுகிறது. இந்த நாட்களில் அதன் விளைச்சல் சக்தி வலுப் பெறுகிறது. மண்ணில் சூரிய வெளிச்சமும் மழையும் மாறி மாறி விழுந்து அதற்கு உரம் ஏற்றுகின்றன. பயிர்கள் பசேலென்றிருக்கின்றன. வைக்கோல் சேகரித்துப் போரடிப்பது அநேகமாக முடிந்து விட்டது. தேவைக்கும் அதிகமாகவே போர் போட்டு விட்டான் ஐஸக். இனி மேல் வைக்கோல் போரடிக்க அந்தப் பெரிய பண்ணையிலே இடம் கிடையாது. ஆடு மாடுகள் அதிகரித்துக் கொண்டிருக்கிற பண்ணையிலே வைக்கோல் தேவைக்கும் அதிகமாக இல்லா விட்டால் எப்படிக் கட்டி வரும்? கண்ட இடத்திலெல்லாம் வைக்கோல் காலில் மிதி படுகிறது. இங்கர் முழு மனசோடு மீண்டும் வேலை செய்கிறாள்; பண்ணையில் எல்லாக் காரியங்களிலும் ஐஸக்குக்கு உதவுகிறாள், இரவு பகல் பாராமல் அதிகாலை முதல் இரவு வெகு நேரம் வரை உழைக்கிறாள். தூறல், மழை என்று தொடங்கி விட்டால் போதும்—மற்ற வேலைகளைக் கவனிக்க முடியாது என்கிற

காரணத்தினுல் களத்துக்கும் களஞ்சியத்துக்கும் கூரை போடு வதில் கவனம் செலுத்துகிருன் ஐஸக். தென்னண்டைப் பக்கத்து சுவர் வேலேயும் சிறிது சிறிதாக நடக்கிறது. களம் தயாராகி விட்டால் அதில்கூட இப்பசத்தியாக வைக்கோல் சேகரித்து வைக்கலாம். வேலே சுரு சுருப்பாகவே நடந்து கொண்டிருக்கிறது. அவர்கள் சமாளித்து முன்னேறி விடு வார்கள்; பயப்படத் தேவையேயில்லே.

அந்தப் பெரிய துரதிருஷ்டம்! அவர்களுடைய அந்த மகத் தான துர்ப் பாக்கியம்! நடந்ததென்னவோ நடந்து விட்டது. அதன் காரணமாக என்ன வந்தாலும் அனுபவித்துத்தானே தீர வேண்டும். வருவது வந்தே தீரும். நல்ல காரியங்களின் பலன்கள் அவ்வளவாகத் தெரிவதில்லே. கெட்ட காரியங்களின் பலன்கள் சுள்ளென்று உரைக்கின்றன—தெள்ளென இன்ருே நாளேயோ தெரியத் தொடங்கி விடும். முதலிலிருந்தே ஐஸக் அதைப் பற்றி அசட்டுத் தனமாக நடந்து கொள்ளவில்லே. பிரமாதமாக அதைப்பற்றி வாய் கிழியப் பேசி இங்கரைக் கடிந்து கொள்ளவும் இல்லே. மிகவும் சாதாரணமாகக் கேட்டான்: "ஏன் அப்படி அதைக் கொன்றுவிட்டாய்?" இங்கர் இதற்குப் பதில் சொல்லவில்லே. சிறிது நேரம் கழித்துக் கேட்டான்: "அதைக் கழுத்தை நெறித்தா கொன்ருய்? அப்படியா?"

"ஆமாம்" என்ருள் இங்கர்.

"அப்படிச் செய்திருக்கக் கூடாது."

"இப்போது தெரிகிறது" என்ருள் இங்கர்.

"அப்படிச் செய்ய உனக்கு எப்படி மனம் வந்தது என்று தான் எனக்குத் தெரியவில்லே"

"அது என் மாதிரியே இருந்தது."

"எனக்குப் புரியவில்லே" என்ருன் ஐஸக்.

"என் மேலுதடு மாதிரியே பிளவு பட்டிருந்தது அதன் மேலுதடும்."

சிறிது நேரம் யோசித்தான் ஐஸக். "சரிதான்" என்ருன்.

அந்தச் சந்தர்ப்பத்தில் இருவரும் வேறு எதுவும் அதைப் பற்றிப் பேசவில்லே. நாட்கள் அமைதியாக ஒன்றன் பின் ஒன்ருகக் கழிந்தன. பண்ணேயிலே வேலே ஏராளமாக இருந்தது. அந்த வருஷம் விளேச்சலும் அதிகம். செய்கிற காரியங்களில் கவனத்திலே இந்த விஷயம் அவர்கள் மனசில் அதிகமாக

உறுத்தக் கூட இல்லை. ஆனால் அது பின்னால் பதுங்கியிருந்தது. வானத்திலே தொங்கும் இடி மின்னல் போல அவர்கள் மேலே தொங்கியிருந்தது. அந்தப் பண்ணை பூராவுமே அந்தக் காரியமும் அதன் பயன்களும் பரவி நிற்பது போல ஒரு பிரமை இருந்தது. ஒலேன் அது பற்றி வம்பளக்காமல் இருந்துவிடமாட்டாள். அவள் மௌனமாக இருப்பாள் என்று எதிர்பார்க்க முடியாது. விஷயம் வெளியே சிறுகச் சிறுகப் பரவி விடும். ஒலேன் சொல்லா விட்டாலும் கூட எப்படியும் விஷயம் வெளி வந்தே தீரும். ஊமையான சாக்ஷிகள் கூடக் கடைசியில் உண்மையை ஊரறியச் சொல்லிவிடும். வீட்டின் சுவர்கள், அந்தச் சிறுசவக் குழியைச் சுற்றியிருந்த மரங்கள்—எல்லாமே கதையை உரக்கச்சொல்லிவிடும். ஆஸ் ஆண்டர்ஸ் என்கிற லாப் தன் முயலைப் பற்றிப் பலரிடம் சொல்லுவான். இங்கரே, துயரம் தாங்காமல், ரகசியத்தைக் காப்பாற்ற மாட்டாமல், யாரிடமாவது சொல்லிவிட மாட்டாளா? அவர்கள் எது நேர்ந்தாலும் வரவேற்கத் தயாராகவேதான் இருந்தார்கள்.

ஐஸக் அந்த விஷயத்தைப் பெரிது படுத்தி அமர்க்களப் படுத்தவில்லை—அமர்க்களப் படுத்தி என்ன லாபம்? அசட்டுத் தனமாக நடந்து கொண்டு என்ன லாபம்! இப்பொழுது அவனுக்குப் புரிந்தது—இங்கர் ஏன் தனிமையில், பண்ணையில் வேறு யாரும் இல்லாத போது பிரசவிக்க விரும்பினாள் என்பது அவனுக்குப் புரிந்தது. பிறக்கும் குழந்தைக்கும் உதடு பிளவு பட்டு விகாரமாக, தன் உதடு போலவே இருந்து விடப் போகிறதே என்று பயந்து பயந்து பெற்றிருக்கிறாள் அவள். பாவம்! மூன்று தடவை இந்த அவஸ்தைப்பட்டிருக்கிறாள் அவள். பாவம்! இங்கர்! அவளிடம் ஐஸக்குக்கு அனுதாபம் பூர்ணமாக இருந்தது. அந்த ஆஸ் ஆண்டர்ஸ் என்கிற லாப் முயலுடன் வந்தது பற்றி அவனும் கேட்டறிந்து கொண்டான்—அதற்கு மேல் இங்கர் செய்தது எதுவும் பிசகு என்று அவனுக்குத் தோன்றவில்லை. கர்ப்பமாக இருக்கும்போது முயலைப் பார்த்தால் பிறக்கிற குழந்தை பிளந்த மேலுதடுடன் பிறக்காமல் வேறு எப்படிப் பிறக்கும்? பாவம், இங்கர்! இங்கரிடம் அவனுக்கு அதிகமாகப் புதுசாகக் காதல் பிறப்பது போல இருந்தது. இங்கரும் அவனிடம் வழக்கத்தை விட அதிகமாகவே பிரியமாக இருந்தாள். காட்டாள் அவன்; மரந் தூக்கி; நாஸூக்கில்லாதவன்—அதனாலென்ன? அவளைத் தன் காதலில் வைத்துப் பூட்டிக் காப்பாற்ற வேண்டும் என்று

அளவு கடந்த ஆசை இருந்தது அவனுக்கு. இங்கர் மட்டும் என்ன? அவளும் காட்டாள்தான். அவள் லாப்கள் மாதிரி ஜோடு தரித்திருந்தாள். ஆனால் லாப்கள் மாதிரிச் சின்னவள் அல்ல அவள். எவ்வளவு அழகாக, பிரும்மாண்டமாக இருந்தாள் அவள்! கோடை வந்துவிட்டது. காலில் எதுவும் அணியாமல், முழங்கால் வரை தெரியும்படியாகத் தான் வீட்டிலே நடமாடிக் கொண்டிருந்தாள் அவள். அவளுடைய கால்களைவிட்டுத் தன் கண்களைத் திருப்ப மாட்டாமல் தவித்தான் ஐஸக். காதல் நிறைந்த கண்கள் அவன் கண்கள்!

அவள் வாய் சதா பிரார்த்தனை கீதங்களை முணு முணுத்துக் கொண்டே யிருந்தது. எல்யூஸிஸுக்குத் தனக்குத் தெரிந்த பிரார்த்தனை கீதங்கள் அத்தனையையும் சொல்லித் தந்தாள். ஆனால் என்ன பிரார்த்தனை செய்து என்ன பலன்? அவள் மனசிலே எந்த லாப்பையும் கண்டால் வெறுப்பும் கசப்பும் ஏறிவிட்டது. பண்ணைக்கு வந்த லாப்களிடம் அவள் வெளிப்படை யாகவே சொன்னாள். வேறு யாராவது மறுபடியும் ஒரு முயலை அனுப்பியிருக்கலாம். யார் சொல்ல முடியும்? லாப்களா? இங்கு வராதீர்கள். போங்கள்! போங்கள்!

"முயலா? ஏது முயல்?"

"ஓ! தெரியாதா. ஆஸ் ஆண்டர்ஸ் என்பவன் இங்கு வந்து என்ன செய்தான் தெரியாதா?"

"தெரியாதே!"

"நானே சொல்கிறேன்—அதில் என்ன தப்பு? நான் கர்ப்பமாக இருக்கும்போது என் கண்முன் ஒரு முயலைக் காட்டினான்."

"அட பாவமே! என்ன பொல்லாத்தனம்! என்ன நடந்தது?"

"என்ன நடந்தது பிறகு என்பதைப்பற்றி உனக்கென்ன? நீயும் லாப்தானே? போய்விடு. உண்ணுவதற்கு இதோ உணவு இருக்கிறது. போய்விடு. இனி இந்தப் பக்கம் திரும்பாதே!"

"கொஞ்சம் தோல் இருந்தால் கொடேன்—என் செருப்பைத் தைக்க உதவும்."

"கிடையாது. இன்னும் இங்கு ஏதாவது பேசிக்கொண்டு நின்றாயானால் உதை கிடைக்கும்!" என்றாள் இங்கர்.

பிச்சை கேட்கும்போது லாப் எவனும் தாழ்மையாகத்தான் கேட்பான். இல்லை என்று யாராவது சொல்லிவிட்டால்

அவனுக்குக் கோபம் வந்துவிடும். ஆத்திரமாகப் பேசுவான். சில சமயம் பயமுறுத்தக்கூடப் பயமுறுத்துவான். ஒரு சமயம் ஸெல்லன்ராப் பண்ணைப் பக்கமாக நாலு லாப்கள் வந்தார்கள். ஒரு ஆணும், பெண்ணும், அவர்களுடைய குழந்தைகள் இருவரும். குழந்தைகள் பிச்சை கேட்க வீட்டுவரை போனார்கள்—வீட்டில் யாரும் இல்லை என்று சொன்னார்கள். நால்வரும் அவர்களுடைய பஷையில் பேசிக்கொண்டு சிறிது நேரம் நின்றார்கள். பிறகு அந்த ஆண்பிள்ளை வீட்டுக்குள் போனான். அவன் திரும்பி வராததனால் அவனைத் தொடர்ந்து அவன் மனைவியும் போனாள். பிறகு குழந்தைகளும் போனார்கள். அவர்கள் வீட்டுக்குள் எட்டிப் பார்க்கும்போது சுவரிலிருந்த கடிகாரம் அடிக்கத் தொடங்கியது. ஆச்சரியத்துடன் அந்த லாப் குடும்பம் அந்தச் சப்தத்தைக் கேட்டுக்கொண்டு நின்றது.

குன்றின் சரிவில் ஏதோ காரியமாக இருந்த இங்கர் திரும்பி வந்தாள். வீட்டு வாசற் படியில் லாப்களைப் பார்த்ததும் கோபம் வந்தது அவளுக்கு—அதுவும் முன்பின் அந்தப் பக்கம் வராத புது லாப்கள் அவர்கள். இங்கே உங்களுக்கு என்ன வேலை என்று அவர்களைக் கேட்டாள். "எதற்காக உள்ளே வருகிறீர்கள்? வீட்டில் ஒருவருமில்லை என்று தெரியவில்லையா?"

"ம்...ம்..." என்றான் அந்த லாப் மனிதன்.

"போ வெளியே. உன் வழியைப் பார்த்துக்கொண்டு போ" என்றாள் இங்கர் அதட்டலாக.

மனசில்லாமலே மெதுவாக நகருகிறார்கள் அந்த லாப்கள். "உங்கள் கடிகாரம் அடித்தது. அதைக் கேட்டுக்கொண்டு நின்றோம். என்ன அழகான சப்தம் அது!" என்றான் அந்த லாப்.

"ரொட்டி கொஞ்சம் இருந்தால் கொடேன்" என்று கேட்டாள் அவன் மனைவி.

"எங்கிருந்து வருகிறீர்கள் நீங்கள்?" என்று கேட்டாள் இங்கர்.

"அதோ அந்த காட்டுக்கும் அப்பாலிருந்து. இரவு பூராவும் நடந்து வந்தோம்."

"எங்கே போகிறீர்கள்?"

"மலைகளைக் கடந்து"

அவர்களுக்குக் கொஞ்சம் உணவு கட்டிக் கொடுத்தாள் இங்கர். அதை வாங்கிக்கொண்டு அந்த லாப் ஸ்திரீ மேலும்

கெஞ்சினுள்—பழைய குல்லாய், கம்பிளிச் சட்டை, பாலேடைக்கட்டி ஏதாவதிருந்தால் கொடு என்று கெஞ்சினுள். இங்கருக்கு அவசரம்—ஐஸக்கும் குழந்தைகளும் அவளுக்காகக் காத்திருப்பார்கள் வயலில். "போ! போங்கள்!" என்று விரட்டினுள்.

புகழ்ச்சி பயன் தருமா என்று பார்த்தாள் அந்த ஸ்திரீ: "வீடும் வயலுமாக மஹாராணி மாதிரி இருக்கே அம்மணி. ஆடுமாடு—உனக்கு என்ன குறைச்சல்."

"என்ன குறைவு? உனக்குக் கடவுள் குறைவே வைக்க மாட்டார். பழைய ஜோடு, செருப்பு இருந்தால் கொடு அம்மணி" என்ருன் அந்த லாப்.

இங்கர் வீட்டுக் கதவைச் சாத்திவிட்டுக் கிளம்பினுள். அந்த லாப் கெஞ்சினுன் ஏதாவது கொடு என்று. காது கேட்காதது போலப் போனுள் இங்கர். உடனே "முயல் வேண்டுமா அம்மா உனக்கு? அதுதான் வேண்டுமோ?" என்ருன். காதில் போட்டுக்கொள்ளாமலே போய்விட்டாள் இங்கர்.

அந்த லாப் "முயல் வேண்டுமா?" என்று தெரிந்தே கேட்டானு? தெரியாமல் கேட்டானு? சாதாரணமாகக் கேட்டிருக்கலாம். அல்லது குறும்புத்தனமாக, விஷயம் தெரிந்து, கிண்டலாகக் கேட்டிருக்கலாம். எப்படிக் கேட்டிருந்தால் என்ன? வரப்போகிற ஒரு காரியத்துக்கு அறிகுறி அது என்று அதை ஏற்றுக்கொண்டாள் இங்கர்.

நாட்கள் சென்று கொண்டிருந்தன. அவர்கள் அதிகமாகக் கவலைப்படவில்லை. வருவது வந்தே தீரும். அனுபவிக்க வேண்டியதை அனுபவித்தே தீர வேண்டும். வேறு வழி கிடையாது என்று அறிந்தவர்கள் அவர்கள். தங்கள் காரியங்களை முறைப்படி செவ்வனே பார்த்துக்கொண்டு எது வந்தாலும் வரவேற்கத் தயாராக இருந்தார்கள். காட்டு மிருகங்களைப்போல ஒருவரை ஒருவர் ஒருங்கி ஒட்டிக்கொண்டு வாழ்ந்தார்கள் அவர்கள். சாப்பிட்டார்கள்; தூங்கினுர்கள். வருஷம் முடிந்துகொண்டிருந்தது. புது உருளைக் கிழங்கு நேர்த்தியாகவும், பெரிதாகவும் இருந்தது. அதிக நாள் ஆவதற்கு முன் அதைச் சேகரித்து விடலாம். ஏன் இன்னும் வரவேண்டிய கஷ்டம் வரவில்லை? வராமலே இராது. மெள்ளத்தான் வரும் போலும். ஆகஸ்டு முடியப் போகிறது—ஸெப்டம்பரும் வந்துவிடும். மாரிக் காலமும் இப்படியே கழிந்துவிடுமோ? மிகவும் ஜாக்கிரதையாகவே இருந்தார்கள் அவர்கள். இங்கர் சிறைக்குப் போகத் தன்னைத் தயார்

செய்து கொண்டாள். இரவில் அவள் தன் கணவனுடன் மிகவும் நெருக்கமாக ஒட்டிக் கொண்டாள்—இன்னும் ஒரு நாள் கழிந்தது, எவ்விதமான துயரமும் இல்லாமல் என்று. இப்படியே நாட்கள் ஒன்றன் பின் ஒன்றுகச் சென்றன. அக்டோபரில் ஒரு நாள்—உதவிக்கு ஒரு ஆளுடன், கையில் ஒரு பையுடன், வந்தான் லென்ஸ் மாண்டு. குற்றத்தை விசாரித்துச் சட்டத்தை நிலைநாட்ட வந்தான் அவன்.

விசாரணை செய்வதற்கு நேரம் பிடித்தது. இங்கரைக் கூப்பிட்டுத் தனியாக விசாரித்தார்கள். அவள் எதையும் மறுக்க வில்லை. காட்டில் அந்தச் சிறிய சவக் குழியை தோண்டிப் பார்த்தார்கள். சிறுமியின் உடலைப் பரீக்ஷை செய்து பார்க்க நகருக்கு அனுப்பினார்கள். அந்தத் தன் பெண்ணுக்கு அலங்கார மாகத் தன்னுடைய மணிக் குல்லாயை அணிவித்திருந்தாள் இங்கர்; அதன் மேல் எல்யூஸிஸினுடைய போர்வையைப் போர்த் தியிருந்தாள்.

ஐஸக்குக்குப் பேசுவது கஷ்டமாக இருந்தது. ஆனால் இந்தச் சந்தர்ப்பத்தில் பேசாதிருப்பது எப்படி? "கஷ்டமெல்லாம் சேர்ந்து வந்துவிட்டது நமக்கு. முன்னே சொன்னேன் பாரு. இப்படிச் செய்திருக்கக்கூடாது நீ!"

"கூடாதுதான்."

"எப்படிச் செய்தாய்?"

இங்கர் பதில் சொல்லவில்லை.

"சின்னக் குழந்தையைக் கொல்ல உனக்கு எப்படி மனம் வந்தது?"

"பார்ப்பதற்கு என் மேலுதடு மாதிரியே இருந்தது. அவளும் என் மாதிரிக் கஷ்டப்படாதிருக்கட்டும் என்று கழுத்தைத் திருகி விட்டேன்."

ஐஸக் தன் தலையை மெதுவாக ஆட்டினான்.

"ஒரு விநாடிக்கெல்லாம் அதன் அழுகை நின்றுவிட்டது. மூச்சும் நின்றுவிட்டது."

ஐஸக் சிறிது நேரம் மௌனமாக இருந்தான். "சரி......சரி இப்போது அதைப்பற்றிப் பேசி என்ன லாபம்?"

"அதற்குத் தங்க நிறமான தலை மயிர் இருந்தது" என்று அழுது கொண்டே சொன்னாள் இங்கர். "உச்சியில் பத்து மயிர் இருந்தது."

மீண்டும் மௌனமானார்கள் இருவரும்.

காலம் முன் போலவே சென்றது. இங்கரைச் சிறையில் தள்ளிப் பூட்டவில்லை. சட்டம் கனிவு நிறைந்த சட்டம்தான். மற்ற எல்லாரிடமும் பேசுகிற மாதிரியே அவளிடமும் பேசினான் லென்ஸ்மாண்டு ஹேயர்தால். ஆனால் "இந்த மாதிரியெல்லாம் நடப்பது பரிதாபகரமான விஷயம்" என்றான். தன்னைப் பற்றி யார் இதைச் சொன்னது என்று கேட்டாள் இங்கர். தனி மனிதர் யாருமில்லை; பராபரியாகப் பலர் சொன்னதுதான் காதில் விழுந்து அதிகாரிகள் விசாரணைக்கு அவசியமாயிற்று என்றான் லென்ஸ் மாண்டு. அவளே கூட யாரோ சில லாப்களிடம் ஏதோ சொல்ல வில்லையா அதைப் பற்றி?

இங்கர்! ஆம், ஆம்! அவள் சில லாப்களிடம் சொன்னது உண்மைதான். ஆஸ் ஆண்டர்ஸ் என்கிற லாப் அவள் கர்ப்ப மாக இருக்கும்போது ஒரு முயலைக் கொண்டு வந்து காட்டி அவள் வயிற்றிலிருந்த குழந்தைக்கு பிளந்த மேலுதடு வரும்படிச் செய்து விட்டான் என்று இங்கரே சொன்னதுண்டு. அந்த முயலை ஆஸ் ஆண்டர்ஸ் மூலம் அனுப்பியது யார்? ஒலைன் தானே? —அது பற்றி லென்ஸ்மாண்டுக்கு ஒன்றும் தெரியாது. ஆனால் முயலைப் பற்றிய அந்த அசட்டுக் குருட்டு நம்பிக்கையை எல்லாம் அவன் விசாரணைக் குறிப்புகளில் சேர்க்க அவன் தயாராக இல்லை.

"அசட்டு நம்பிக்கையா? நான் பிறக்கு முன் என் தாயார் ஒரு முயலைப் பார்த்தாள். அதனால்தான் என் மேல் உதடு இப்படி இருக்கிறது" என்றாள் இங்கர்.

களம் கூரை வேய்ந்து தயாராகி விட்டது. பிரும்மாண்டமான களம் அது. இரண்டு பக்கங்களிலும் வைக்கோல் வைக்கப் பரண்கள். நடுவில் தானியம் அடிக்கக் கடினமான தரை. பண்ணையில் சேர்த்து வைத்திருந்த வைக்கோல் பூராவுக்குமே அந்தக் களத்தில் இடம் இருந்தது. பயிரை அறுத்து, கட்டுக் கட்டாகக் காயப் போட்டு, களத்தில் கொணர்ந்து அடித்தார்கள். இங்கர் காரெட், டர்னிப் இவற்றைச் சேகரித்துக் கொணர்ந்து சேர்த்தாள். அறுவடையாகி விட்டது. எல்லாம் நல்லபடியாகத் தான் இருந்தது—அவர்களுக்குத் தேவைக்கு அதிகமாகவே எல்லாம் இருந்தது. புது வயலில் உழுது பண் படுத்தப் பாடு பட்டான் ஐஸக்—பனி வந்து உறையு முன் செய்தால்தான் அடுத்த வருஷத்து நில வளம் அதிகரிக்கும். ஐஸக் உழவன்தானே. புதுப் புது இடத்தில் உழுது பண் செய்து பண்ணையைப் பெரி

தாக்க வேண்டும்தானே! நவம்பரில் ஒரு நாள் இங்கர் சொன்னாள்: "இப்போது இருந்தால் அவளுக்கு ஆறு மாசமாகி யிருக்கும். நம்மை எல்லாம் தெரிந்து கொள்ள ஆரம்பித்திருப்பாள்!"

"அதைப் பற்றிப் பேசிப் பயன் இல்லை" என்றான் ஐஸக்.

மாரிக் காலமும் வந்தது. புதுக் களத்தில் தானியத்தை அடித்துப் பொறுக்கிச் சேர்த்தார்கள். இங்கரும் ஒரு ஆண் பிள்ளைசெய்கிற வேலை செய்தாள், ஐஸக்குக்கு உதவியாக. குழந்தைகள் வைக்கோல் பரண்களில் ஆனந்தமாக விளையாடிக்கொண்டிருந்தன. தானியம் நன்றாக முற்றி விளைந்திருந்தது. நல்ல விளைச்சல்தான். புது வருஷத்தின் ஆரம்பத்தில், பாதைகளிலிருந்து பனி உருகி விலகியதும், ஐஸக் விறகுக் கட்டுகளைத் தன் வண்டியில் ஏற்றிக்கொண்டு கிராமத்துக்குப் போனான். அவன் விறகுக்குக் கிராக்கி யிருந்தது. கோடையில் வெட்டிக் காய்ந்த விறகு அல்லவா? நல்ல விலைக்கு விற்றான். தங்கக் கொம்பினுடைய காளைக் கன்றையும் ஒரு பெரிய பாலேடைக் கட்டியையும் கெய்ஸ்ஸலரின் மனைவிக்குக் கொண்டுபோய்க் கொடுப்பது என்று தீர்மானித்தான் ஐஸக்—இங்கரும் ஆமோதித்தாள். அதை நன்றியுடன் வாங்கிக்கொண்ட கெய்ஸ்ஸலரின் மனைவி அதற்கு விலை என்ன தரவேண்டும் என்று விசாரித்தாள்.

"ஒன்றும் வேண்டாம்" என்றான் ஐஸக். "முந்தியே அதன் விலையைக் கெய்ஸ்ஸலர் கொடுத்துவிட்டார்" என்றான்.

"அவரைக் கடவுள் காப்பாற்றட்டும், கொடுத்தாரா!" என்றாள் கெய்ஸ்ஸலரின் மனைவி சந்தோஷத்துடன். எல்யூஸிஸுக்கும், ஸிவெர்ட்டுக்கும் பல சாமான்கள் கொடுத்தாள் அவள்—கேக்குகள், படப் புத்தகங்கள், விளையாட்டுப் பொம்மைகள் முதலியன கொடுத்தனுப்பினாள். ஐஸக் திரும்பிவந்து இவற்றைக் காட்டியபோது, இங்கர் முகத்தைத் திருப்பிக்கொண்டு அழுதாள்.

"என்ன அது? ஏன்?" என்றான் ஐஸக்.

"ஒன்றுமில்லை" என்று தயங்கினாள் இங்கர். "அவள் இப்போது இருந்தால் ஒரு வயசாகியிருக்கும். இதெல்லாவற்றையும் பார்ப்பாளே!" என்று மீண்டும் அழுதாள் இங்கர்.

"அது சரி. இருந்தாலும்—நீதானே சொன்னாய்—அவள் மேலுதடு பிளந்திருந்தது என்று" என்று ஆறுதலாகச் சொன்னான் ஐஸக். "அதெப்படியானாலும் நீ செய்த தவறுக்குப் பிராயச்சித்தம் அவ்வளவு கடினமாக இராது. பார்க்கலாம்.

கெய்ஸ்ஸலர் எங்கிருக்கிறுன் என்று விசாரித்துக் கொண்டு வந்தேன்.''

இங்கர் நிமிர்ந்து பார்த்தாள்: "கெய்ஸ்ஸலரால் நமக்கு உதவி செய்ய முடியுமா?"

"அது நிச்சயமாக எனக்குத் தெரியாது."

பிறகு தானியத்தை அரைப்பதற்குக் கொண்டு போனுன் ஐஸக். அரைத்துத் திருப்பிக் கொணர்ந்தான். மறுபடியும் விறகு வெட்டிப் போட்டான். அடுத்த மாரிக் காலத்துக்கு வேண்டுமே! ஒரு வேலை இல்லாவிட்டால் இன்னெரு வேலை இருந்து கொண்டே யிருந்தது. அந்தந்த மாதத்திற்கும் சீதோஷ்ண நிலைக்கும் ஏற்றபடி அவன் வேலை செய்தான். வயலிலிருந்து காட்டுக்கும், காட்டிலிருந்து வீட்டுக்குமாக அவன் அடிக்கடி நகர்ந்து வேலைசெய்தான். அவன் வந்து அங்கு தங்கி இப்போது ஆறு வருஷங்களாகின்றன. இங்கர் வந்து ஐந்து வருஷங்களாகின்றன. அப்படியே நீடித்திருக்குமாயின் எவ்வளவோ நன்ருக இருந்திருக்கும். நீடிக்கக் கொடுத்து வைக்கவில்லை. சட்டப்படி இங்கரைக் கைது செய்து விடுவார்கள். இங்கர் தன் தறியில் இடைவிடாது வேலை செய்தாள். ஆடுமாடுகளைச் சரிவரப் பார்த்துக்கொண்டாள். அடிக்கடி அவள் பிரார்த்தனை கீதங்களைப் பாடினுள்! என்ன பரிதாபகரமாகப் பாடினுள் அவள்! நாக்கற்ற மணி செய்கிற சப்தம் போல இருந்தது அவள் பாட்டு.

மீண்டும் புாதைகள் சரிப்பட்டதும், கிராமத்துக்கு அவளை அழைத்துப்போய் விசாரித்தார்கள். ஐஸக் அவளுடன் போக முடியவில்லை. அங்கு தனியாக இருக்கும்போது ஸ்வீடனுக்குப் போய்க் கெய்ஸ்ஸலரைக் கூப்பிட்டு வந்தால் தேவலை என்று தோன்றிற்று அவனுக்கு. ஸெல்லன்ரா ஜனங்களுக்கு அந்த லென்ஸ்மாண்டு பல விதங்களில் உதவினுன்—இப்போதும் அவனுல் உதவி செய்ய முடியும் என்று எண்ணினுன் ஐஸக். ஆனுல் இங்கர் திரும்பிவந்து, தான் தெரிந்து கொண்டதையும், விசாரணையைப் பற்றியும் சொன்னுள். நியாயப்படி, சட்டப்படி அவளுக்கு ஆயுள் தண்டனை விதிக்கலாமாம்; பாரா ஒன்று... ஆனுல்......அவள் கூண்டில் நின்று எதையும் மறைக்காமல் சொல்லவிட்டாள். அவளுக்கெதிராகச் சாக்ஷி சொல்ல வந்த இருவர்கூடப் பரிதாபமாக அவளைப் பார்த்தனர். நீதிபதி ரொம்பவும் இரக்கமான மனசுள்ளவர். அவர் தன் பெண்ணைக் கேள்வி கேட்பது போல அவளைக் கேள்விகள் கேட்டார்—

பரிவுடன், அனுதாபத்துடன். ஆனால் சட்டம் தெரிந்தவர்களுக்கு சமமாக அவளால் பேச முடியுமா? எத்தனை விஷயங்களை அவர்கள் மனசில் உருவேற்றி யிருந்தார்கள்? பாரா ஒன்று, இரண்டு, மூன்று என்று கடகட வென்று மனப்பாடமாகச் சொல்லு கிறார்களே அவர்கள்! சட்டமறிந்தவர்கள் இந்தக் குடியானவர் களைப் பற்றிய மட்டில் ரொம்பப் பெரியவர்கள்தான். ஆனால் அறிவும் படிப்பும் அதிகம் என்பதற்காக அவர்கள் மனிதர்கள் இல்லை என்று ஏற்பட்டு விடாதே! அவர்களும் இதயமுள்ளவர்கள் தானே! நீதி ஸ்தலத்தைப்பற்றி இங்கருக்கு ஒரு குறையுமில்லை. அவர்கள் அவள் விஷயத்தில் மிகவும் அனுதாபத்துடனேயே நடந்து கொண்டார்கள். ஆஸ் ஆண்டர்ஸின் முயலைப்பற்றி அவள் எதுவும் சொல்லவில்லை. தன் பெண் பிளந்த மேலுதடுடன் வாழ்க்கை நடத்தக் கஷ்டப்படுவாள் என்று கொன்றுவிட்டதாகச் சொன்னளாம். அதற்கு நீதிபதி தலையை ஆட்டிவிட்டுக் கேட்டாராம் "நீ உன்...... உன்னைப்பற்றியே சிந்தித்துப் பார். உனக்கும் மேலுதடு பிளந்துதான் இருக்கிறது. நீ சுகமாக இல்லையா?"

"சுகமாகவே இருக்கிறேன், கடவுள் தயவில்" என்று பதில் அளித்தாளாம் இங்கர். ஆனால் அந்தப் பிளந்த மேலுதட்டினால் அவள் இளவயசில் ரகசியத்தில் பிறர் அறியாமல் பட்ட கஷ்டங்களை எல்லாம் எடுத்துச் சொல்லவில்லை அவள்.

ஆனால் நீதிபதிக்கு விஷயம் புரிந்திருக்கவேண்டும். அவருக்கே ஒரு கால் கோணல்—அவரால் நாட்டியம் ஆட முடியாது. அவர் சொன்னர்: "தண்டனையைப் பற்றி, எனக்கே தெரியவில்லை. சட்டப்படி உனக்கு ஆயுள் தண்டனை விதிக்க வேண்டும். என்னல் சொல்ல முடியவில்லை. இரண்டாம் பக்ஷம், முன்றும் பக்ஷம் என்று பத்துப் பதினைந்து வருஷ தண்டனை விதிக்கலாம். இன்னும் குறைவாக எட்டு ஒன்பது வருஷம் விதிக்கலாம். இந்த மாதிரிக் குற்றங்களைப்பற்றி ஒரு கமிஷன் விசாரணை செய்கிறது. அது முடியும்வரை முடிவான தீர்ப்பு சொல்லப் போவதில்லை நான். பார்க்கலாம். நம்பிக்கை இழக்க வேண்டாம்" என்றார் நீதிபதி.

இங்கர் மனசில் ஒரு ஏக்கத்துடன், சிறைவாசத்தை ஏற்கத் தயாராக, ஸெல்லன்ரா திரும்பினாள். நீதிபதி தீர்ப்புச் சொல்லும் வரையில் அவளைச் சிறையில் அடைக்கவேண்டியது அவசியம் என்று அவர்கள் நினைக்கவில்லை. இரண்டு மாதங்கள் சென்றன.

ஒருநாள் மாலை, மீன் பிடித்துக்கொண்டு ஐஸக் திரும்பும்போது லென்ஸ்மாண்டும் வேறு ஒரு ஆளும் ஸெல்லன்ரா வந்து போனது தெரிந்தது. இங்கர் சந்தோஷமாகவே இருந்தாள். ஐஸக் கொண்டுவந்த மீன் கொஞ்சம்தான் என்றாலும், அது நிறைய இருந்ததுபோலப் பேசினாள் இங்கர்.

"என்ன சொல்ல வந்தேனென்றால்......இங்கு யாராவது வந்துவிட்டுப் போனார்களா?" என்று கேட்டான் ஐஸக்.

"யார் வருவார்கள்? யாரை எதிரபார்க்கிறாய் நீ?"

"வெளியே பூட்ஸ் போட்ட காலடிச் சுவடு தெரிகிறதே என்று கேட்டேன்."

"யாருமில்லை. லென்ஸ்மாண்டும் அவன் குமாஸ்தாவும் வந்தார்கள்."

"எதற்கு?"

"எதற்கு வருவார்கள்?"

"உன்னை அழைத்துப்போகவா?

"அதற்கில்லை. நீதிபதியின் தீர்ப்பைத்தெரிவிக்க வந்தார்கள். கடவுள் என்னிடம் கருணை காட்டுகிறார். தீர்ப்பு நான் எதிர் பார்த்த மாதிரிக் கடினமாக இல்லை"

"ஹா! அப்படியா! அதிக வருஷமில்லையா?"

"இல்லை. சில வருஷங்கள்தான்."

"எத்தனை வருஷங்கள்?"

"அதிகம் என்று உனக்குத் தோன்றலாம். ஆனால் கடவுள் கருணைக்கு நான் நன்றி பாராட்டக் கடமைப் பட்டிருக்கிறேன்!"

எத்தனை வருஷங்கள் தண்டனை என்று இங்கர் கூறவில்லை. அன்று இரவு எப்போது அவளைச் சிறைக்கு அழைத்துப் போக வருவார்கள் என்று ஐஸக் கேட்டதற்கும் அவள் சரியாகப் பதில் சொல்லவில்லை. அவளுக்கே தெரியுமோ, தெரியாதோ! அவள் மீண்டும் சிந்தனையில் ஆழ்ந்திருந்தாள். பின்னர் என்ன நடக்கும் என்பது பற்றிப் பேசினாள். பண்ணையில் வேலைகளைக் கவனிக்க யாருக்கு ஆளனுப்புவது? ஒலைன்தான் வரவேண்டும். ஐஸக்குக்கும் வேறு யோசனை தோன்றவில்லை.

ஆனால் ஒலைன் என்ன ஆனாள் இத்தனை நாளும்? அவள் அந்த வருஷம் பூராவும் அந்தப் பக்கம் வரவேயில்லை. எல்லா வற்றையும் முடிபோட்டுவிட்டு அந்தப் பக்கம் வராமலே இருந்து விடுவாளோ? வேலைகள் நிறையவே இருந்தன. ஆனால் ஒலைன்

வந்தபாடில்லே. யாராவதுபோய்க் கூப்பிட்டால்தான் வருவாளோ? அதெல்லாமில்லே. அந்த மாமிச பர்வதம், ராக்ஷஸப் பிண்டம் தானே சமயத்துக்கு வந்துவிடுவாள். பயப்படவே வேண்டிய தில்லே.

கடைசியில் ஒரு நாள் ஓலேன் வந்தாள். அசாதாரணமான மனுஷிதான் அவள். அவர்களிருவரும் ஒரு சமயம் சண்டை போட்டுக்கொண்டவர்கள் என்கிற மாதிரியே தெரியாதபடி நடந்து கொண்டாள். எல்யூஸிஸுக்காக ஒரு புது ஸ்டாக்கிங் தைத்துக் கொணர்ந்திருந்தாள் அவள்.

"நீங்களெல்லாம் எப்படியிருக்கிறீர்களென்று பார்த்துவிட்டுப் போகலாமென்று வந்தேன்" என்ருள் அவள். ஆனல் அவளுக்குப் போகிற உத்தேசமில்லே. தன் துணிமணி எல்லாவற்றையும் ஒரு சாக்கில் போட்டுக் கொணர்ந்து காட்டில் கண் மறைவாக வைத்திருந்தாள். தங்குகிற உத்தேசம்தான் அவளுக்கு.

அன்று மாலேயே இங்கர் தன்கணவனேத் தனியாகக்கூப்பிட்டுச் சொன்ருள்: "கெய்ஸ்ஸலரைத் தேடி உதவிக்கு அழைப்பதாகச் சொன்னயே. இப்போது பண்ணேயில் வேலே அதிகமில்லே. தேடிப் பாரேன்" என்ருள்.

"சரியான யோசனே" என்ருன் ஐஸக். "ஓலேனும் வந்தாகி விட்டது. நானும் நாளேக் காலேயிலே கிளம்புகிறேன்."

இங்கர் நன்றி ததும்பச் சொன்ருள்: "இங்கே எதுவும் பணத்தை விட்டு வைக்காதே. எல்லாவற்றையும் உன்னிடம் எடுத்துப் போ."

"ஏன்? பணம் இங்கிருந்தால் என்ன?"

"வேண்டாம். எடுத்துப் போ."

உடனேயே உணவுப் பொருள்களேக் கட்டிக் கொடுத்தாள் கணவனுக்கு. அதிகாலேயிலேயே கிளம்பினன் ஐஸக். அவனே வழியனுப்ப வாசல் வரையில் போனள் இங்கர். அவள் அழவும் இல்லே; குறைப்பட்டுக் கொள்ளவுமில்லே. "என்னே அழைத்துப் போக அவர்கள் சீக்கிரமே வந்துவிடுவார்கள்" என்ருள்

"என்று வருவார்கள், தெரியுமோ?"

"தெரியாது எனக்கு. உடனே வருவார்களா என்ன? நீ வந்த பிறகுதான் இருக்கும். இருந்தாலும் நீ சீக்கிரமே கெய்ஸ் ஸலரைப் பிடித்து ஏதாவது செய்ய முடியுமானல் செய்."

இப்போது கெய்ஸ்ஸலர் செய்யக் கூடியது என்ன? அநேகமாக ஒன்றுமில்லை. ஆனாலும் ஐஸக் அவனைத் தேடிக்கொண்டு கிளம்பினான்.

இங்கர்—அவளுக்குத் தெரியும்—ஆனால் அவள் வாய் திறந்து பல விஷயங்களைச் சொல்ல விரும்பவில்லை. ஓலீனை வரச்சொல்லி அனுப்பியதுகூட அவள் தானோ என்னமோ! ஸ்வீடனிலிருந்து ஐஸக் திரும்பியபோது, இங்கர் போய்விட்டாள். ஒலீன் மட்டுமே வீட்டிலிருந்தாள். இரண்டு குழந்தைகளுமிருந்தன.

வீடு திரும்பலுக்கு நல்ல சந்தர்ப்பமல்லதான் அது. உரத்த குரலில் கேட்டான் ஐஸக்: "இங்கர் போய்விட்டாளா?"

"ஆமாம்" என்றாள் ஒலீன்.

"என்றைக்கு?"

"நீ போனதற்கு மறு நாளே."

ஐஸக்குக்கும் தெரிந்துவிட்டது. அன்று அவளை அழைக்க வருவார்கள் என்று தெரிந்துகொண்டுதான் இங்கர் அவனை வீட்டைவிட்டுக் கிளப்பியிருக்கிறாள். அதற்காகவேதான் பணத்தையும் எடுத்துப் போ என்று சொல்லியிருக்கிறாள். அவள் தனக்காகக் கொஞ்சம் பணம் வைத்துக் கொண்டிருக்கலாமே! எவ்வளவு தூரம் போகவேண்டியவள், பாவம்!

ஆனால் ஐஸக் கொண்டு வந்திருந்த பன்றியைத் தவிர வேறு எதையும் பற்றி அவன் குழந்தைகள் பேசவில்லை. அந்தப் பயணத்தில் லாபம் ஒன்றுதான்—அந்தப் பன்றி ஒன்றுதான். கெய்ஸ்ஸலர் அகப்படவில்லை. ஐஸக்கிடம் இருந்த விலாசம் பழைய விலாசம். கெய்ஸ்ஸலர் பல நாட்களுக்கு முன்பே ஸ்வீடன் விட்டுக் கிளம்பி நார்வேக்கே திரும்பி விட்டானாம். இப்போது ட்ராண்ட்யெம் நகரில் இருந்தானாம். அந்தப் பன்றியைப் பிடித்து வழிநெடுகக் கொணர்ந்திருந்தான் ஐஸக். மலையில் படுத்து உறங்கும்போது அதைத் தன் மாரிலேயே போட்டுக்கொண்டு உறங்கியிருக்கிறான். புட்டிப் பால் பாலைவிட்டு அதற்கு உணவு ஊட்டிக் கொணர்ந்திருந்தான். இங்கர் அதைப் பார்த்து எவ்வளவு ஆனந்தப் படுவாள் என்று நினைத்துக்கொண்டே வந்தான். ஆனால் இங்கர் அதைப் பார்க்க வீட்டில் இல்லை. பன்றியுடன் எல்யூஸிஸும், ஸிவெர்ட்டும் விளையாடினார்கள்—ஆனந்தமாக விளையாடினார்கள். அதைப் பார்த்துக் கொண்டே தன் கஷ்டத்தைக் கொஞ்சம் மறந்தான் ஐஸக். தவிரவும் ஒலீன் ஒரு செய்தி சொன்னாள்—லென்ஸ்மாண்டிடமிருந்து வந்த செய்தி. சர்க்கார் அந்த நிலத்தை

அவனுக்கு விற்றுவிடச் சம்மதித்துவிட்டது. அவன் அதிகாரியின் காரியாலயத்துக்குப் போய்ப் பணத்தைக் கொடுக்க வேண்டியது தான் பாக்கி. இது நல்ல செய்திதான். மனந்தளராதிருக்க ஐஸக்குக்கு இந்தச் செய்தி உதவியது. நட நடவென்று நடந்து அலுத்திருந்தான் ஐஸக். ஆனால் அப்படியும் ஒரு உணவுப் பொட்டலத்தைக் கட்டி எடுத்துக்கொண்டு கிராமத்துக்குக் கிளம்பினான். உடனேயே கிளம்பினால் இங்கர் கண்ணில் படுவாளோ என்கிற நம்பிக்கை இருந்ததோ என்னவோ!

ஆனால் அவன் இங்கரைப் பார்க்கவில்லை. ஏமாற்றம்தான். இங்கரை அழைத்துப்போய் விட்டார்கள். ஆமாம்—எட்டு வருஷங் களுக்கு. உலகமே சூனியமாகிவிட்ட மாதிரி இருந்தது. இருள் சூழ்ந் திருந்தது போல இருந்தது. அனுதாபத்துடன் சிலர் சொன்ன வார்த்தைகள் அவன் காதில் விழுந்தன. லென்ஸ்மாண்டும் அனுதாபத்துடன் சில வார்த்தைகள் சொன்னான். அவற்றில் பல ஐஸக்கின் காதில் விழவில்லை. இந்த மாதிரி எல்லாம் நேரிடுவது மஹா பரிதாபம்!......இனி அவள் குழந்தைகளைக் கொல்ல மாட்டாள் பார்......சீர் திருந்தி நல்ல ஸ்திரீயாக அவள் வருவாள்.

லென்ஸ்மாண்டு ஹேயர்தால் போன வருஷம் கல்யாணம் செய்து கொண்டுவிட்டான். அவளுக்குத் தாயாகும் உத்தேசம் கிடையாது. வேண்டாம் ஐயா வேண்டாம் என்றாள் அவன் மனைவி. அவள் கர்ப்பமாகவில்லை.

லென்ஸ்மாண்டு சொன்னான்: "ஸெல்லன்ரா நில விஷயத்தைக் கவனிப்போம் இப்போது. அதைத் திருப்தியாக முடித்து விடலாம். சர்க்கார் அதை விற்று விடச் சம்மதித்து விட்டார்கள் —நான் சொன்ன ஷரத்துக்களின் பேரிலேயே!"

"ம்...ம்" என்றான் ஐஸக்.

"நாள் ரொம்ப ஆகிவிட்டது என்றாலும் என் சிபாரிசுகள் வீண் போகவில்லை என்பது பற்றி எனக்குச் சந்தோஷமே! எல்லாவற்றையும் நான் சொன்னபடியே ஏற்றுக் கொண்டு விட்டார்கள்."

"சரி. எல்லாவற்றையும் ஏற்றுக் கொண்டு விட்டார்களா?" என்று தலையை ஆட்டினான் ஐஸக்.

"இதோ கிரய சாஸனம். கச்சேரியில் இந்த மாதமே இதை ரிஜிஸ்டர் செய்து கொண்டு விடலாம்."

"சரி. பணம் எத்தனை தர வேண்டும்?"

"வருஷத்திற்குப் பத்து தேலர். சர்க்கார் இதில் என் சிபாரிசைக் கேட்கவில்லை. பத்து வருஷங்களுக்கு, வருஷத்துக்குப் பத்து தேலர். ஐந்து தேலர் என்று சிபாரிசு செய்தேன் நான். போகட்டும், உன்னால் தந்துவிட முடியுமில்லையா?"

"முடியும்...எவ்வளவு காலம் முடிகிறதோ......?"

"பத்து வருஷங்களுக்கு......வருஷத்துக்குப் பத்து தேலர்" என்றான் லென்ஸ்மாண்டு.

பயந்து நிமிர்ந்து பார்த்தான் ஐஸக்.

"அதைக் கொடுத்து விட்டால் பத்து வருஷங்களில் நிலம் உனக்கே சொந்தமாகிவிடும். த்விரவும் உரிய விலையில் கால் விலை இல்லை அது. வளமான பூமி அது" என்றான் ஹேயர்தால்.

அந்த வருஷத்துக்குத் தரவேண்டிய பத்து தேலர் ஐஸக்கிடம் இருந்தது. முதுகு ஒடிய விறகு வெட்டிக் கிராமத்துக்குத் தூக்கி வந்து விற்றுச் சேர்த்த பணம் அது. ஆமாம். இங்கர் செய்து விற்கத் தந்த பாலேடைப் பணமும் இருந்தது அதில். பணத்தைக் கொடுத்தான்—கையில் கொஞ்சம் பணம் மிச்சம்கூட இருந்தது.

"நல்ல வேளையாக உன் மனைவியின் விஷயத்தைப்பற்றி சர்க்கார் கேள்விப்படவில்லை. கேள்விப்பட்டிருந்தால் நிலத்தை வேறு யாருக்காவது கொடுத்திருப்பார்கள்" என்றான் லென்ஸ் மாண்டு.

"ஆமாம்" என்றான் ஐஸக். இங்கரைப்பற்றி விசாரித்தான்: "எட்டு வருஷங்களுக்கா தண்டனை—அது உண்மைதானா?"

"ஆமாம். உண்மைதான். சட்டத்தை மாற்ற முடியாது பார். உண்மையில் அப்படியொன்றும் கடினமான தண்டனை அல்ல அது. ஒன்று நீ உடனே செய்ய வேண்டும். உன் நிலத்துக்கும் சர்க்கார் நிலத்துக்கும் நான் போட்ட எல்லைக் கற்களை அனுசரித்து நீ வேலி போட்டு விடவேண்டும். ஆமாம்; ஞாபகம் இருக்கட்டும். எல்லையில் வெட்டுகிற மரம் உன்னைச் சேர்ந்தது. நீ என்ன செய்திருக்கிறாய் என்று பார்க்க ஒரு நாள் வருகிறேன் நான்."

ஐஸக் ஸெல்லன்ரா நோக்கி நடந்து, வீடுபோய்ச் சேர்ந்தான்.

## 8

**கா**லம் ஓடுகிறது. ஆமாம். அதுவும் கிழவனின் நாட்கள் ஓடுகின்றன. ஆனால் ஐஸக் கிழவன் அல்ல. அவன் உடலில் இன்னும் தெம்பு இருக்கிறது. தளர்ந்து விடவில்லை அவன்.

வருஷம் போவது கஷ்டமாக இருக்கிறது. நாட்கள் ஓடவில்லை; நொண்டுகின்றன. அவன் நிலத்திலே வேலை செய்கிறான். அவனுடைய இரும்புக் கம்பித் தாடி அதன் இஷ்டத்துக்கு வளர்கிறது.

தனிக் காட்டு ராஜா அவன். எப்பவாவது ஒரு தரம் யாராவது ஒரு லாப் அந்தப் பண்ணையைத் தாண்டிச் செல்லுகிறான். அது தவிர எப்பவாவது ஒரு தரம் அவன் ஆடு மாடுகளில் ஏதாவது ஒன்றுக்கு ஏதாவது நேருகிறது. ஆனால் அதற்குமேல் எதுவும் நடப்பதில்லை. மீண்டும் மறுபடியும் எல்லாம் முன்போலவே ஆகிவிடுகின்றன. ஒரு தடவை அநேக மனிதர்கள் சேர்ந்தாப் போலக் கும்பலாக வந்தார்கள். அவர்கள் ஸெல்லன்ராவில் தங்கினார்கள். சாப்பிட்டார்கள்; பால் குடித்தார்கள்; மலை மேல் போகிற பாதையைப் பற்றி ஐஸக்கையும், ஓலினையும் விசாரித்தார்கள். தந்தி மரங்களை நட்டுக் கம்பி போடப் பாதை வகுப்பவர்களாம் அவர்கள். பிறகு ஒரு நாள் கெய்ஸ்ஸலர் வந்தான். கெய்ஸ்ஸலரேதான்! வழக்கம்போல ஜோராக நடை போட்டுக்கொண்டு வந்தான் அவன். அவனுடன் கோடாலியும் மண் வெட்டியும் இன்னும் சுரங்க வேலைக்கான ஆயுதங்களையும் சுமந்துகொண்டு இருவர் வந்தார்கள்.

ஓ! அந்தக் கெய்ஸ்ஸலர்! அவன் சிறிதும் மாறவில்லை. எப்போதும் போலத்தான் இருந்தான். எதுவும் கெடுதலான காரியம் நடக்காதது போலவே இருந்தான் அவன். வழக்கம் போலக் குழந்தைகளுடன் பேசினான். வீட்டுக்குள் போய்ச் சுற்றிப் பார்த்தான். வெளியே வந்தான். வயல்களைப் பார்த்தான். கதவுகளை எல்லாம் திறந்து லாயம், மாட்டுக் கொட்டில், ஆட்டுப் பட்டி, களஞ்சியம், களம் எல்லாவற்றையும் பார்த்தால். வைக் கோல் போரைச் சுற்றிப் பார்த்தான். "நேர்த்தி! வெகு நேர்த்தியாக இருக்கிறது" என்றான். "ஐஸக்! அந்தக் கற்கள் உன்னிடம் இருக்கிறதோ?"

"எந்தக் கற்கள்?"

"முன் ஒரு தரம நான் வந்திருக்கிறபோது உன் குழந்தைகள் வைத்துக்கொண்டு விளையாடிக் கொண்டிருந்தார்களே—அந்தக் கனமான கற்கள்!"

அந்தக் கற்கள் சாமான் அறையில் இருந்தன. எலிப் பொறிக்கு உபயோகித்திருந்தான் அவற்றை. ஐஸக் அவற்றைக் கொணர்ந்து தந்தான். கெய்ஸ்ஸலரும் அவனுடன் வந்த அந்த

இரண்டு மனிதர்களும் அந்தக் கற்களைப் பரிசோதித்துப் பார்த்தார்கள். அங்குமிங்கும் சுத்தியால் தட்டினார்கள். தங்களுக்குள் பேசிக்கொண்டார்கள். கையால் உருட்டி உருட்டிக் கனத்தைக் கவனித்தார்கள். "செம்பு" என்றார்கள்.

"இந்தக் கற்கள் உனக்கு எங்கே கிடைத்தன். எங்களுடன் வந்து காட்டு" என்றான் கெய்ஸ்ஸலர்.

எல்லோரும் மலையேறிச் சென்றார்கள். அதிக தூரமில்லை—ஆனால் பார்க்கவேண்டியதை எல்லாம் பார்த்துக்கொண்டு அங்கே இரண்டு நாள், மலை மேலேயே, தங்கினார்கள். அங்கு மிங்கும், வெடி மருந்து வைத்துப் பூமியைப் பிளந்து பார்த்தார்கள். கனிப் பொருள் எப்படி ஓடுகிறது என்று கவனித்தார்கள். இரண்டு பைகள் நிறைய அந்த மாதிரிக் கனமான கற்களை பொறுக்கிக் கொண்டு ஸெல்லன்ரா திரும்பினார்கள்.

இடையில் ஐஸக் தன்னைப்பற்றிய எல்லா விஷயங்களையும் கெய்ஸ்ஸலரிடம் சொன்னான். நிலம் வாங்கியாகிவிட்டது என்றான். ஐம்பது தேலரல்ல, நூறு தேலர் கொடுக்கும்படி யாகிவிட்டது என்றான்.

"ஓஹோ!"

"ஆமாம்."

"உடனே போய் நீ பத்திரத்தை உன் பெயருக்கு ரிஜிஸ்டர் பண்ணிக்கொண்டு வந்துவிடு."

"சரி."

"இல்லாவிட்டால், கனிப்பொருள் அது இது என்று சர்க்கார் தொந்தரவு தர ஆரம்பித்துவிடும்."

ஐஸக்குக்கும் விஷயம் புரிந்தது. "இங்கரைப் பற்றித்தான் ரெம்பவும் சிரமமாக இருக்கிறது?" என்றான்.

"ஆமாம். கெய்ஸ்ஸலர் வழக்கத்துக்கு விரோதமாக வெகு நேரம் மௌனமாக இருந்தான். பிறகு சொன்னான்: மறு விசாரணை நடத்தச் சொல்லலாம். விஷயத்தை விசாரணையில் சரிவர எடுத்துச் சொன்னால் தண்டனையைக் குறைப்பார்கள். மன்னிப்புக் கேட்டு விண்ணப்பம் செய்யலாம். தண்டனை பாக்கியைத் தள்ளச் செய்யலாம்."

"அப்படி ஏதாவது செய்ய முடியுமானால்...?"

"மன்னிப்புக்கு உடனே எழுதக் கூடாது. அதற்குரிய காலத்தில் காத்திருந்துதான் செய்யவேண்டும். பார்க்கலாம்

நான் என்ன சொல்ல வந்தேன் என்றால்...என் மனைவிக்கு நீ மாமிசம், பாலேடை எல்லாம் தந்தாயாமே?"

"ஆமாம். அதற்குத்தான் பணம் அப்போது பெற்றுக் கொண்டு விட்டேனே!"

"அப்படியா"

"அதுமட்டுமா? நீங்கள் எங்களுக்குச் செய்திருக்கிற உதவி சொல்பமல்ல."

"அப்படியெல்லாம் ஒண்ணுமில்லை" என்றான் கெய்ஸ்ஸலர் சுருக்கமாக. "இந்தா—இதை வாங்கிக்கொள்." பல டேலர் நோட்டுகளை எடுத்துக் கொடுத்தான்.

இனமாக எதையும் வாங்கிக்கொண்டுவிடுகிற மனிதன் அல்ல கெய்ஸ்ஸலர். அது தெளிவு. அவனிடம் பணம் நிறைய இருக்கிற மாதிரியும் தெரிந்தது. அவன் சட்டைப் பை நிறையப் பணம் இருந்தது. அவனிடம் பணம் இருந்ததா, இல்லையா, யார் பணம் அது என்பதெல்லாம் கடவுளுக்குத்தான் வெளிச்சம்.

"அங்கு எல்லாம் சௌகரியமாக இருக்கிறது என்று அவள் எழுதுகிறாள்" ஐஸக்குக்கு அந்த ஞாபகம் ஒன்றுதான் எப்போதும்.

"என்ன? யாரு?—ஓ! உன் மனைவியா?"

"ஆம். அதுவும் அந்தப் பெண் பிறந்த பிறகு முக்கியமாக எல்லாம் சௌகரியமாக இருக்கிறது என்று எழுதுகிறாள். அங்கே போய் ஒரு பெண்ணைப் பெற்றாள் அவள்."

"நல்ல காரியம்" என்றான் கெய்ஸ்ஸலர்.

"ஆம். அதற்குப் பிறகு அவளிடம் எல்லோருமே அனுதாபத்துடன் இருக்கிறார்கள். இரக்கமாக இருக்கிறாள் என்று சொல்லுகிறார்கள்."

"இதோ பார்" என்றான் கெய்ஸ்ஸலர். "இந்தக் கற்களை பரிசோதனைக்கு அனுப்பப் போகிறேன். அதில் சுமாரான சதம் செம்பிருந்தால் நீ பணக்காரனாகி விடுவாய்."

"ம்...ம்" என்றான் ஐஸக். "மன்னிப்புக்கு விண்ணப்பித்துக் கொள்ள இன்னும் எத்தனை நாளாக வேண்டும்."

"அதிக நாள் வேண்டாம். பார்க்கலாம். விண்ணப்பத்தை நான் எழுதித் தருகிறேன். நான் சீக்கிரமே மறுபடி வருவேன். நீ என்ன சொன்னாய்? சிறைக்குச் சென்ற பின் அவள் பிரசவித்தாளா?"

"ஆமாம்."

"அவள் கர்ப்பமாக இருக்கும்போது அழைத்துச் சிறையில் போட்டிருக்கிறார்கள். அப்படிச் செய்ய அவர்களுக்கு உரிமை கிடையாது."

"அப்படியா?"

"அதையும் ஒரு காரணமாகச் சொல்லாம் சீக்கிரம் அவளை விடுவிக்க விண்ணப்பம் போடுவோம்."

"அப்படிச் செய்ய முடியுமானால்......" என்றான் ஐஸக், நன்றியுடன்.

ஐஸக்குக்குத் தெரியாது. சர்க்கார் அதிகாரிகள் ஒருவருக்கொருவர் அது சம்பந்தமாக எழுதிக் கொண்ட கடிதங்களும் கண்டனங்களும் ஐஸக்குக்குத் தெரியாது. கர்ப்பிணியை எப்படிக் கொண்டு போய்ச் சிறையில் தள்ளினார்கள்? தீர்ப்பளிக்கும் வரையில் அவளை அவள் கணவனுடன் விட்டு வைத்திருந்து விட்டார்கள். அதற்கு இரண்டு காரணங்கள்—கிராமத்திலே சிறை எதுவும் இல்லை அவளைப் பூட்டி வைக்க. இரண்டாவது அப்படிக் கெடுபிடி பண்ண வேண்டிய அவசியமும் இல்லை. அவள் கர்ப்பமாகி விடுவாள் என்று அதிகாரி எதிர்பார்க்கவில்லை. பிறகு அவளைச் சிறைக்கு அழைத்துப் போனபோது அவள் கர்ப்பமாக இருந்த செய்தி ஒருவருக்குமே தெரியாது. அதைப் பற்றி யாரும் விசாரித்தறிந்து கொள்ளவில்லை—அவளாகவும் சொல்லவில்லை. வேண்டுமென்றே அவள் அதை மறைத்திருந்தாலும் இருக்கலாம். எட்டு வருஷங்கள் சிறையிலிருக்க வேண்டுமே—ஒரு குழந்தை தன்னுடன் இருந்தால் அதைப் பார்க்க அதிகாரிகள் அனுமதி தருவார்கள். அதனால் துயரை மறக்கலாம் என்று அவள் எண்ணியிருக்கலாம். அல்லது அவள் அதைப் பற்றிச் சிந்திக்காமலே கூட இருந்திருக்கலாம். அலக்ஷியமாக இருந்திருக்கலாம்.

ஐஸக் பாடு பட்டான்—உழைத்தான். வாய்க்கால்கள் வெட்டினான். வயல்களுக்கு வரப்புப் போட்டான். புது நிலத்தை உழுது சாகுபடி செய்தான். தன் நிலத்துக்கு எல்லை வேலி கட்டினான். எல்லையில் இருந்த மரத்தை எல்லாம் வெட்டி விறகுக்காகும் என்று அடுக்கினான். பல மரங்கள் வீடு கட்டவும் பலகை அறுக்கவும் பயன்படும். ஆனால் இங்கர் இல்லாததால் அவனுக்கு எந்த வேலையிலுமே சொரத்தில்லாமல் இருந்தது

வழக்க வேகத்தில் வேலை செய்தானே தவிர ஆசையுடன் செய்ய வில்லை—ஆர்வத்துடன் செய்யவில்லை. ரிஜிஸ்டர் ஆபீஸ் இரண்டு தரம் கூடிக் கலைந்துவிட்டது—அவன் கிரய சாஸனத்தை ரிஜிஸ்டர் செய்யத் தீர்மானிக்குமுன். பிறகு கடைசியில் அந்த இலையுதிர் காலத்தில் அதையும் முடித்து விட்டான்—கடனே என்று. ஐஸக் இப்பொழுது முன்னெல்லாம் போல இல்லை. எபபோதும் போலப் பொறுமையுடனும் அமைதியாகவும்தான் இருந்தான் அவன். ஆனால் அந்தப் பொறுமையும் அமைதியும் பிறந்தது ஒரு ஏக்கத்தினால்தான். செய்ய வேண்டியிருக்கிறதே என்று எல்லாக் காரியங்களையும் செய்தான்—தோல்களை உரித்துப் பாடம் செய்து பதனிட்டான். செய்ய வேண்டியதை எல்லாம் முறை யாகவே செய்தான். அதனதன் காலத்தில் செய்தான். மாரிக் காலத்தில், தானியம் அடிக்கும்போது முதல் தானியத்தை எடுத்து அடுத்த வருஷத்துக்கு விதையென்று பத்திரப் படுத்தினான். மாமூலாகச் செய்தானே தவிர அடுத்த வருஷத் தைப் பற்றிய நினைப்பில் சந்தோஷத்துடன் செய்யவில்லை. எல்லாக் காரியங்களையும் செய்து முடிக்க வேண்டுமே! வேறு யார் செய் வார்கள்? அவன்தானே செய்ய வேண்டும்? வேலையை முடித்து விட்டால் போதும் என்றிருந்தது அவனுக்கு. வர்ணமற்ற தனிமை நிறைந்த வாழ்வு அவனுடையது. அட கடவுளே! மீண்டும் மனைவியற்ற மனிதனாகி விட்டான் அவன். மற்ற தெல்லாம் இருந்து என்ன பயன்?

ஞாயிற்றுக் கிழமைகளில் குளித்து என்ன பயன்? புதுச் சிவப்புச்சட்டை அணிந்து என்ன பயன்? எதற்காகச் சுத்தமாகவும் சுருசுருப்பாகவும் இருக்கவேண்டும்? அவள்தான் இல்லையே! ஞாயிற்றுக்கிழமைகள்தான் மற்ற எல்லா நாட்களையும்விட அதிக நீண்ட நாட்களாக இருந்தன. வேலைசெய்ய முடியாது. கனவு கண்டு கொண்டு சோம்பலாக உட்கார்ந்திருக்க வேண்டும். உள்ளுக்கும் வெளிக்கும் போய்ப் போய் வந்துகொண்டிருக்கலாம். என்னென்ன செய்யவேண்டும் என்று கணக்குப் பார்க்கலாம். நில புலன்களைச் சுற்றிப்பார்க்கக் கிளம்பும்போது அவன் எப்போதும் தன்னுடன் குழந்தைகளையும் அழைத்துச் செல்வான். ஒருவனைக் கையில் தூக்கிக்கொண்டு நடப்பான். அவர்கள்பேசுவது வேடிக்கை யாக இருக்கிறது. அவன் மனசுக்கு ஆறுதலளிக்கிறது. அவர்கள் கேட்கிற கேள்விகளுக் கெல்லாம் பதில் சொல்லுவான்.

கிழவி ஒலைன் போய்விட்டால் உதவி செய்ய வேறு ஆளில்லை. அதனால் தான் அவள் அங்கு இருக்கிறாள். இல்லாவிட்டால்

அவளை முன்னரே அனுப்பியிருப்பான். என்ன சொன்னாலும் ஒலேன் இருப்பது உதவியாகத்தான் இருந்தது. நூல் நூற்றுத் தைக்கவேண்டும்—கம்பிளி ரோமங்களைச் சீர் செய்ய வேண்டும்—ஆடு மாடு கறந்து பாலேடை செய்யவேண்டும். இதெல்லாம் செய்வாள் அவள். ஆனால் அவள் செய்வது இங்கர் செய்வது போலாகுமா? தவிரவும் அவளுக்கும் இதில் அதிக கவனம் இராதே! அந்தச் சாமான்களெல்லாம் அவளுடையவை அல்ல. ஒரு பீங்கான் கோப்பை ஒன்றிருந்தது—நாய் முகம் வைத்த மூடியுடனிருந்த அதை ஐஸக் ஆசைப்பட்டு வாங்கி வந்திருந்தான். அது புகையிலை வைக்கிற கோப்பை—அலமாறித் தட்டில் வைத்திருந்தது. ஒரு நாள் ஒலேன் அதன் மூடியை எடுத்துக் கீழே போட்டு உடைத்துவிட்டாள். இங்கர் சில செடிப் பதியன்களை ஒரு கண்ணாடி ஜாடிக்குள் வைத்திருந்தாள். வேண்டுமென்றே ஒலேன் காத்துப் போகாமால் அந்த ஜாடியை மூடி வைத்து அந்தப் பதியன்களைச் சாக அடித்துவிட்டாள்—வேண்டுமென்றுதான்; காரணமேயில்லாத ஒரு பொறாமையுடன்தான். இதையெல்லாம் பொறுத்துக் கொண்டிருப்பது ஐஸக்குக்குச் சிரமமாகத்தான் இருந்தான். அவனுடைய அதிருப்தி தெளிவாகவே தெரிந்தது. அவன் எதையும் மறைத்து அறியாதவன். அவன் பார்வையில் என்ன கோபம் இருந்தால் என்ன? அதைப்பற்றி ஒலேன் லக்ஷியமே பண்ணவில்லை. அவள் மெதுவாகச் சாதுவாகக் கேட்டாள்: "தவறுதலாக நேர்ந்துவிட்டால் நான் என்ன செய்வது?"

"அது தெரியாது எனக்கு. ஆனால் நீ அவற்றின் பக்கமே போயிருக்க வேண்டாம்" என்றான் ஐஸக்.

"அவளுடைய பூச் செடிப் பதியன்களைத் தொடவில்லை நான்" என்றாள் ஒலேன். என்ன பயன்? அவைதான் கருகிவிட்டனவே!

அது சரி. ஆனால் சமீபகாலமாக ஏன் இவ்வளவு லாப்கள் ஸெல்லன்ரா பக்கமாக வருகிறார்கள்? ஆஸ் ஆண்டர்ஸ்—அவனுக்கு அங்கு என்னவேலை? உண்மையில் அவன் அங்கு வரவேகூடாது. ஒரு கோடையில் அவன் இரண்டு தரம் வந்தான். பிச்சைக்காரப் பயல் அவன். அவன் வந்தால் தன் வேலையையெல்லாம் விட்டு விட்டு ஒலேன் அவனுடன் வம்பளக்க வந்துவிடுவாள். ஊராரையெல்லாம் பற்றி இருவரும் பேசுவார்கள்—பேசுவார்கள்—அப்படிப் பேசுவார்கள். அவன் போகும்போது அவன் சாக்குச் சொள்ளாமல் சாமான்களை—ஸெல்லன்ரா சாமான்களைத் திணித்து அனுப்புவாள் ஒலேன். இரண்டு வருஷங்கள் பூராவும் இதையெல்லாம் பொறுத்துக்கொண்டிருந்தான் ஐஸக்.

ஒருநாள் ஒலீன் தனக்குப் புது செருப்புகள் வேண்டும் என்றாள். அவனால் மௌனமாக இருக்க முடியவில்லை. இலை யுதிர்காலம் அது. ஒலீன் தினமும் தோல் செருப்புப் போட்டுக் கொண்டுதான் நடப்பாள். காலில் கட்டை போட்டுக்கொண்டால் என்ன?

"இன்று வெய்யில் இருக்கிறது, இல்லையா?" என்று தொடங்கினான் ஐஸக்.

"ஆமாம்"

ஐஸக் தொடர்ந்து பேசினான்: "ஏன் எல்யூஸிஸ்; நீ எண்ணியது பத்து பாலேடைக் கட்டிகள்தானே? காலையில் பத்து இருந்தன இல்லையா?"

"ஆமாம்" என்றான் எல்யூஸிஸ்.

"பாரேன். இப்போது ஒன்பதுதான் இருக்கிறது."

எல்யூஸிஸ் எண்ணிப்பார்த்தான். மனசிற்குள் கணக்குப் போட்டுப் பார்த்தாள். "அந்த ஆஸ் ஆண்டர்ஸ் வந்தானே. அவன் ஒன்று எடுத்துக்கொண்டு போனான். ஆக மொத்தம் பத்துத்தான். நான் சரியாகத்தான் எண்ணினேன்"

சிறிது நேரம் மௌனம். சிறுவன் ஸிவெர்ட் தானும் கணக்குப் பண்ணுகிறாள். விரலை விட்டு விட்டு "எட்டு ஒன்பது பத்து" என்று எண்ணுகிறான். "ஆமாம், பத்து" என்கிறான்.

மீண்டும் மௌனம். கடைசியில் ஒலீன் ஏதாவது சொல்ல வேண்டுமென்று எண்ணிச் சொல்லுகிறாள்.

"ஆமாம். அவனுக்குச் சிறிய பாலேடைக் கட்டி ஒன்று கொடுத்தேன். அதில் என்ன தப்பு? அதில் கெடுதி ஒன்றுமில்லை. சின்னதுதானே, போகட்டும் என்றுகொடுத்தேன். அதை இந்தக் குழந்தைகள் சொல்லிக் கொடுக்க வேண்டியதில்லை. இந்த வயசுக்குள்ளாகவே இப்படி ஆரம்பித்துவிட்டனவே! இவை யாரைக் கொண்டிருக்கின்றன என்று எனக்குத் தெரியவில்லை. உன் சுபாவம் அல்ல இது ஐஸக். எனக்குத் தெரியும்" என்றாள் ஒலீன்.

மறைமுகமாகத் தன் மனைவியைக் குறிப்பிட்ட ஒலீனைச் சும்மாவிடலாமா? ஐஸக் ஆத்திரமாகச் சொன்னான்: "குழந்தைகள் சரியாகத்தான் இருக்கின்றன. அவர்கள் பேச்சு இருக்கட்டும். ஆஸ் ஆண்டர்ஸுக்கு ஒரு முழு பாலேடைக் கட்டி கொடுக்கும்படியாக அவன் எனக்கோ என்னைச் சார்ந்தவர்களுக்கோ நன்மை எதுவும் செய்திருப்பதாக எனக்குத் தெரியவில்லையே!"

"நன்மையா?"

"நன்மை எதுவும் அவன் எனக்குச் செய்யவில்லை"

"ஆஸ் ஆண்டர்ஸா?"

"ஆமாம். அவனுக்கு எதற்காக என் பாலேடைக் கட்டிகளை நீ எடுத்துத் தரவேண்டும்"

ஒலைன் இதற்குள் யோசித்துத் தன் பதிலைத் தயார் செய்து விட்டாள். "அது சரி ஐஸக். ஆஸ் ஆண்டர்ஸ் பற்றியோ மற்றும் யாரைப் பற்றியுமோ நீ இப்படிப் பேசுவாய் என்று நான் நினைக்கவே யில்லை. நானு ஆஸ் ஆண்டர்ஸைப் பற்றி இங்கு பேச்சை ஆரம்பித்தேன். அவன் யாரோ தெருவோடு போகிற பிச்சைக் காரன். அவனுக்கும் நமக்கும் என்ன? இந்த வீட்டில் இனி அவன் பேரை நான் பிரஸ்தாபிக்கவேமாட்டேன். ஆமாம். யார் அவன்? பிச்சைக்காரப் பயல்!"

வெற்றி ஒலைனுடையதுதான். ஐஸக் இதற்குப் பதில் என்ன சொல்ல முடியும்?

அத்துடன் விட்டு விடவில்லை ஒலைன். "நாலைந்து வாரங் களுக்கு முன்னேயே சொன்னேன். மாரிக் காலம் வருகிறது. எனக்கொரு தோல் செருப்பு வேண்டாமா? காலில் எதுவும் இல்லாமல் நடப்பதா நான்?"

ஐஸக் கேட்டான்: "உன் கட்டைகள் எங்கே? அவற்றை உபயோகிப்பது தானே!"

இதற்குத் தயாராக இல்லை ஒலைன். "என் கட்டைகளா?"

"ஆமாம். அவற்றை உபயோகியேன்."

"என் கட்டைகளையா?"

"ஆமாம்."

இதற்குள் பதில் தயார் செய்து விட்டாள் ஒலைன். "சரிதான். இங்கே வீடு கொள்ளாமல் வேலைகளை நான் பார்த்துக் கொள்கிறேன். அதைப் பற்றி உனக்குக் கவலையில்லை. மனைவி ஆனந்தமாக சிறையில் இருக்கிருள்! நான் என் கட்டைகளைப் போட்டு நடந்து அவஸ்தைப்பட வேண்டுமாக்கும்."

"என் மனைவி காலில் கட்டை போட்டுக் கொண்டுதான் நடப்பாள். தோல் செருப்பு விலை என்ன ஆகும் தெரியுமா?"

"எனக்கிருக்கிற ஒரு ஜோடி கட்டையும் தேய்ந்து போய் விட்டால் உனக்குத் திருப்திதானுக்கும்! உன் வீட்டு வேலை செய்வதில் என் கால் கட்டை தேய்வானேன்? வேறு வழியில்

தேயட்டுமே!" மெதுவாகத் தணிந்த குரலில் பேசினாள் ஒலேன். "பெண்டாட்டி—அவள் குழந்தையாக இருக்கும்போது" என்று அரைக் கண் மூடியபடியே பேசினான் ஒலேன்: "இங்கர்—என் குழந்தைகளுடன் ஓடியாடித் திரிந்து வீட்டு வேலைகளைக் கற்றுக் கொண்டாள். பல வருஷங்கள் என் கைச் சோறு போட்டு வளர்த்தேன். அதற்குப் பதில் எனக்குக் கிடைப்பது இதுதான்—இல்லையா? என் பெண் பெர்கன் நகரில் சீமாட்டியாக வசிக்கிறாள். தன் பெண்ணைப் போலவே சீமாட்டியாகத் தானும் ஆகவேண்டும் என்று ஆசைப்பட்டு இங்கர் ஆடை அணிகள் வாங்கிவர ட்ராண்ட்யெம் போயிருக்கிறாளோ! ஹோ! ஹோ!"

ஐஸக் வெளியே போக எழுந்திருக்கிறான். ஒலேன் அவள் மனசில் இருந்ததைத் திறந்து காட்டி விட்டாள். என்ன அழுக்கு அடைந்து கிடைந்தது அவள் மனசில்! அவள் என்ன பேச்சுப் பேசினாள்? அவள் குழந்தைகளின் உதடு பிளந் தில்லை. அவள் குழந்தைகளின் தாய் எந்தக் குழந்தையையும் கொன்றதில்லை. தனக்கு ஏது அந்தச் சாமர்த்தியம் என்றாள் ஒலேன்.

'அட கிழட்டுப் பிணமே! சும்மாக் கிட" என்று கத்தினான் ஐஸக்.

அவன் சொன்னது எதையும் லக்ஷியமே பண்ணவில்லை ஒலேன். என்ன சொன்னால் என்ன? கடவுளே, எனக்குப் பிளவு பட்ட மேலுதடில்லாமல் செய்தாயே—அதுவே நல்லது என்று கடவுளுக்கு வணக்கம் செலுத்தினாள்.

அதற்கு மேல் ஐஸக் அங்கு நிற்கவில்லை. வேறு என்ன செய்வது? ஒலேனுக்கு ஒரு ஜோடி தோல் செருப்புகள் வாங்கித் தர வேண்டியதுதான். வேறு என்ன செய்வது? அவன் உழைப் பாளி. பண்ணைக் காரியங்கள் நடந்தாக வேண்டுமே. வேலைக் காரியைக் கூடப் போ என்று அனுப்பிவிட அவனால் முடியாது. ஒலேன் இல்லா விட்டால் வேலை நடக்காதே! அவள் என்ன செய்தாலும், என்ன சொன்னாலும் பொறுத்துக் கொள்ள வேண்டியதுதான்.

இப்போது இரவுகளில் அதிகமாகக் குளிருகிறது. பாதையும் சரியாக இல்லை. ஒலேனுக்குச் செருப்புக்கள் வாங்கி வரக் கிராமத் துக்குக் கிளம்பினான் ஐஸக்.

வழியிலே புதுப் பண்ணை தோன்றியிருக்கிறது. பணக்காரன் போலிருக்கிறது. ஏனென்றால் கிராமத்திலிருந்து ஆட்களை

அழைத்து வந்து வீடு கட்டிக்கொண்டிருக்கிறார்கள். கூலிக்கு அந்தப் பண்ணையில் ஆட்கள் வேலை செய்கிறார்கள். உருளை விதைக்க நிலத்தைப் பண்படுத்துகிறார்கள். பண்ணை முதலாளியே வேலை எதுவும் செய்வதில்லை. யார் அது? பிரேட் ஓல்ஸன்தான். லென்ஸ்மாண்டின் குமாஸ்தா ஸர்வேயர். அவனுக்கு இன்னும் முப்பது வயது ஆகவில்லை. அதற்குள் நாலு குழந்தைகள் இருந்தன. அவன் மனைவியே ஒரு குழந்தை தான். ஓ! பிரேட் அப்படி ஒன்றும் பணக்காரனல்ல. சர்க்கார் உத்தியோகத்தில் லென்ஸ்மாண்டின் குமாஸ்தாவாக இருந்து என்ன சம்பாதிக்கமுடியும்? வரி கொடுக்கவே மாட்டேன் என்கிறவர் களிடம் வரி வசூல் செய்வது அவன் முக்ய வேலை. அதை விட்டு விட்டு நிலத்தில் லாபமுண்டா என்று பார்க்கப் பண்ணை வைத்திருக்கிறான். பாங்கில் கடன் வாங்கி அதைப்போட்டு சர்க்காரிடம் நிலம் வாங்கிவிட்டான். பண்ணைக்குப் பெயர் ப்ரெடாப்ளிக். அப்படிப் பெயரிட்டவள் லென்ஸ்மாண்டு ஹேயர் தாலின் மனைவிதான்.

அந்த வீட்டைத் தாண்டிச் செல்லுகிறான் ஐஸக். உள்ளே போக அவன் விரும்பவில்லை. நேரமாகிவிடும். அவ்வளவு அதி காலையிலேயே அந்தக் குழந்தைகள் எழுந்துவிட்டன. நாளையே பண்ணைக்குத் திரும்பியாக வேண்டும் ஐஸக். உடனே திரும்பிவிட வேண்டும். குழந்தைகள் ஓலேனுடன் தனியாக இருக்கின்றன.

முதல் தட்வை அந்தக் கிராமத்துக்கு நடந்தது அவனுக்கு ஞாபகம் வருகிறது. காலம் செல்லுகிறது. அதில் இந்தக் கடைசி இரண்டு வருஷங்களும் மிகவும் நீண்ட வருஷங்கள். நல்லது எத்தனையோ நடந்தது. ஸெல்லன்ராவில் கெடுதியானதும் நடந்து விட்டது—கடவுளே! அப்பால் இன்னொரு பண்ணையும் ஸ்தாபனமாகிக் கொண்டிருந்தது. இந்த இடமெல்லாம் நல்ல இடங்களென்று அவன் ஆரம்பத்திலேயே பார்த்ததுதான். அவன் அதிக தூரம், நடுக் காட்டுக்கே சென்றான். இந்தப் பண்ணைகள் கிராமத்துக்கு அருகில் இருந்தன. உண்மைதான். ஆனால் இங்கு போதிய மரங்களில்லை. நிலத்திலும் வளம் குறைவுதான். ஆழ உழுதால்தான் பலன் கிடைக்கும். ஸெல்லன்ராவில் உழாமலே அள்ளித் தெளித்தாலும் பலன் கிடைக்கும். ப்ரேட் வீட்டு வாசலில் வெய்யிலில் காய்ந்துகொண்டு, மழையில் நனைந்து கொண்டு ஒரு வண்டி கிடந்தது. அதற்கு ஒரு கொட்டகை போடக் கூடாதோ அவன்?

கெய்ஸ்ஸலரின் மனைவிக்காக இரண்டு பாலேடைக் கட்டிகள் கொண்டுவந்திருந்தான். ஆனால் அவள் ஊரைவிட்டே போய் விட்டாள் என்று தெரிந்தது. மாலையில் மற்ற வேலையையும் முடித்துக்கொண்டு வீடு திரும்புகிறான் ஐஸக். அவன் நடையே சோர்வுற்றிருக்கிறது. கெய்ஸ்ஸலர் மீண்டும் எப்போது வருவானோ? இங்கர் எங்கேயோ இருந்தாள். காலம் சென்று கொண்டிருந்தது.

அவன் சுற்றி வளைத்து, பிரேட்டின் வீட்டுப் பக்கம் போகாமல் நடக்கிறான். ஜனங்களுடன் நின்று பேச அவனுக்கு இஷ்டமில்லை. பிரேட்டின் வண்டி இன்னமும் வெளியிலேகிடக்கிறது. அது அவன் பொறுப்பு. ஐஸக்கிடம் வண்டியிருக்கிறது—அதற்குக் கொட்டகையும் இருக்கிறது; என்ன பலன்? ஒரு காலத்தில் அது முழு வீடாக, முழுப் பண்ணையாக இருந்து. இப்போது அது அரைப் பண்ணை தானே!

அவன் வீடு வந்தடையும்போது பொழுது விடிந்துவிடுகிறது. நாற்பத்தி எட்டு மணி நேர நடைக்குப் பிறகு வீடு என்கிறது பிரும்மானந்தமாக இருக்கிறது. குழந்தைகள் இரண்டும் அவனை எதிர்கொண்டழைக்கின்றன. புகை போக்கியிலிருந்து புகை வருகிறது. உள்ளே போகிறான். இரண்டு லாப்கள் உட்கார்ந் திருக்கிறார்கள். ஒலைன் ஆச்சரியத்துடன் "அதற்குள் வந்து விட்டாயே!" என்று கேட்கிறாள். அடுப்பிலே காபி கொதித்துக் கொண்டிருக்கிறது. காபி!

இதே விஷயத்தை ஐஸக் இதற்கு முன்னும் கவனித்திருக் கிறான். ஆஸ் ஆண்டர்ஸ் போன்ற லாப்கள் யாராவது வந்தால், ஒலைன் அவர்களுக்கு இங்கரின் காப்பிப் பாத்திரத்தை அடுப்பில் போட்டுக் காபி போட்டுத் தருகிறாள். ஐஸக் வீட்டிலில்லாதபோது தான் செய்கிறாள். சில சமயம் அவன் வந்து பார்த்துவிடுவான். அப்போது அவள் எதுவும் சொல்வதில்லை. தன் நஷ்டம் அவனுக்கும் தெரியாமலில்லை. பாலேடைக் கட்டி, காபி, ஆட்டு ரோமம்— ஏதேதோ போகிறது. அவள் செய்கிற காரியத்துக்கு ஒலைனை வெட்டி எறிந்து விடலாமா என்று தோன்றுகிறது அவனுக்கு. ஆனால் ஐஸக் தன் கோபத்தை அடக்கி கொள்கிறான். தன் ஆசாபாசங்களை அடக்கிக்கொண்டு தான் மிகவும் நல்ல மனிதனாக ஆகிவிடவேண்டும் என்று ஆசை அவனுக்கு. அதற்காகவாவது கடவுள் இங்கரைச் சீக்கிரம் விடுதலை செய்ய மாட்டாரா என்கிற எண்ணம் போலும். அவனுக்குக் கடவுளிடம் பயமும், பக்தியும் அதிகரிக்கின்றன. எதை எதையெல்லாமோ

பற்றி ஒரு எளிமையுடன், ஒரு ஆழத்துடன் சிந்திக்கிருன் அவன். அந்த இலையுதிர் காலத்தில் அவனுடைய லாயத்தின் கூரை உள்பக்கமாக வாங்கிட்டது. தாடியை உருவிவிட்டுக்கொண்டான்—பொறுமை இழக்காமல் அதைச் சீர்படுத்தி கீழே அண்டைக் கொடுத்து நிமிர்த்திவிட்டான். ஒரு வார்த்தைகூடக் கசப்பாக அவன் சொல்லவில்லை. இன்னெரு விஷயம். அவன் சாமான்களுக்குள் சுவரிலிருந்த இடுக்குகள் வழியாகப் பறவைகள் புகுந்து விட்டன. வெளியே போக வழி தெரியாமல் தவித்தன. சேமித்து வைத்திருந்த சாமான்களில் பாதிக்குமேல் குருவிகள் தின்று பாழாக்கிவிட்டன என்றுள் ஒலைன். வேலைக்குச் சளைப்பவனு ஐஸக்? எல்லா வேலைகளோடும் ஒரு வேலையாக, அந்தச் சுவருக்குக் காரை பூசி விடுகிருன் ஐஸக்.

தாழ்மையும் பணிவும் பக்தியும் தனக்கு ஏற்பட்டுவிட்டால் இங்கர் சீக்கிரமே வந்துவிடுவாள் என்கிற எண்ணம் அவனுக்கு. தாழ்மையும் பணிவும் பக்தியும் அவனுக்குச் சுபாவத்திலேயே இருக்கின்றன. சுயபுத்தியுடன் அவற்றைவளர்க்கிருன் அவன்.

## 9

**வ**ருஷங்கள் செல்கின்றன.

மீண்டும் ஒருதரம் ஸெல்லன்ராவுக்கு விருந்தாளிகள் கும்பலாக வருகிருர்கள். ஒரு என்ஜினியர், ஒரு ஓவர்ஸீயர், போர்மன், இரண்டொரு வேலையாட்கள் எல்லாரும் வருகிருர்கள். தந்தி மரம் நட்டு அதில் கம்பிகளை மாட்ட வந்திருக்கிருர்கள். அவர்கள் போகிற வழியில் இருக்கிறது ஸெல்லன்ரா; அந்தப் பண்ணையை ஒட்டி ஓடும் அவர்கள் தந்திக் கம்பிகள். காட்டிலே புதுப் பாதை போடப் போகிருர்கள். அதில் கெடுதல் எதுவும் இல்லை. தனிமை கலைந்துவிடும்—ஆனால் உலகின் பார்வையினுல் அந்தப் பிரதேசத்திற்கு நன்மையே தவிர கெடுதியில்லை.

"இரண்டு பக்கத்திலும் உள்ள பள்ளத்தாக்குகளுக்கு சரி மத்தியில் இருக்கிறது இந்த இடம். இரண்டுக்கும் தந்தி மரங்களையும் கம்பிகளையும் சரிபார்த்துக் கவனித்துக் கொள்ளும் பொறுப்பை ஏற்றுக் கொள்கிருயா என்று உன்னைக் கேட்பார்கள்" என்றுன் என்ஜினியர்.

"ஓஹோ!" என்றுன் ஐஸக்.

"வருஷத்தில் இருபத்தைந்து தேலர் சம்பளம்."

"அப்படியா? நான் என்ன செய்யவேண்டும்?"

"கம்பிகள் அறுந்துவிட்டால் சேர்க்கவேண்டும். காற்றில் மழையில் தந்திக் கம்பிகளும் தந்தி மரங்களும் சேதமடையாமல் பார்த்துக் கொள்ள வேண்டும். வழியில் மரம் ஏதாவது விழாமல் பார்த்துக்கொள்ள வேண்டும். இங்கே சுவரில் ஒரு சிறு யந்திரம் வைப்பார்கள். எந்த இடத்தில் என்ன செய்யவேண்டும் என்று அந்த யந்திரம் உனக்குச் சொல்லும். அது சொல்வதை உடனே, கையில் என்ன வேலை இருந்தாலும் விட்டு விட்டு, உடனே போய்ச் செய்யவேண்டும்."

ஐஸக் சற்று யோசித்தான். "மாரிக் காலத்தில் பார்த்துக் கொள்ளலாம்" என்றான்.

"அது போதாது. கோடையிலும் மாரியிலும், வருஷம்பூராவும் பார்த்துக்கொள்வதாக இருந்தால்தான் இந்த வேலையைத் தருவார்கள்."

"என்னால்இயலாது. வஸந்தத்திலும் கோடையிலும் இலையுதிர் காலத்திலும் இங்கு நிலத்தில் எனக்குப் பூரணவேலை இருக்கிறது. வேறு காரியம் கவனிக்க முடியாது" என்றான் ஐஸக்.

சிறிது நேரம் என்ஜினியர் அவனையே பார்த்தான். பிறகு ஒரு ஆச்சரியமான கேள்விகேட்டான்! "உன்நிலத்தில் இதைவிடப் பணம் வந்துவிடுமா?"

"அதிகப் பணமா?"

"நாள் பூராவும் எங்களுக்கு உழைத்துச் சம்பாதிப்பதைவிட நீ உன் நிலத்தில் உழைத்துச் சம்பாதித்து விடுவாயா?"

"பணம் சம்பாதிப்பதைப்பற்றி எனக்குத்தெரியாது" என்றான் ஐஸக். "விஷயம் இதுதான். நான் இங்கே நிலத்தை நம்பித்தானே இருக்கிறேன்? அதில் உழைத்தால்தானே பலன்உண்டு, என்னை நம்பிப் பல ஜீவன்கள் இருக்கின்றன—ஆடுகள் மாடுகள். குழந்தைகள் குட்டிகள். நிலத்தில் கிடைப்பதைச் சாப்பிடுகிறோம். என் பிழைப்பு அது."

"நீ செய்யாவிட்டால் வேறு ஆள் அகப்படும் எங்களுக்கு" என்றான் என்ஜினியர்.

இதை ஒரு பயமுறுத்தலாக எடுத்துக் கொள்ளவில்லை ஐஸக். சனியன் விட்டது, நல்லது என்கிற பாவத்துடன் ஆனால் என்ஜினியர் போன்ற ஒரு பெரிய மனிதன் தன்னைப் பற்றித்

தப்பாக நினைக்கக்கூடாதே என்பதற்காக, விவரமாகப் புரியும்படியாகச் சொன்னான்: "விஷயம் இதுதான். எனக்கு வீடு இருக்கிறது. ஐந்து பசுக்கள் இருக்கின்றன. ஒரு காளை இருக்கிறது. ஒரு குதிரை இருக்கிறது. என்னிடம் இருபது செம்மறியாடுகளும் பதினாறு ஆடுகளும் இருக்கின்றன. அவை எனக்காகப் பால் தருகின்றன—மற்ற விதங்களிலும் எனக்காக உழைக்கின்றன. நான் உழைத்து அவற்றிற்கு உணவு தரவேண்டாமா? உழைத்தால்தானே உணவு?"

"ஆமாம், ஆமாம்" என்றான் அந்த என்ஜினியர். அவன் புரிந்துகொண்டமாதிரியில்லை.

"தந்தி, தந்திக்கம்பி, தந்திமரம் என்று வேலைசெய்யவேண்டிய நாட்களில் நான் ஓடிவிட்டால் அவற்றின் உணவு என்ன ஆவது?"

"அதைப்பற்றிப் பாதகமில்லை. அடுத்த பண்ணையில் இருக்கிற ப்ரேட் ஒல்ஸனை அமர்த்தச் சொல்லுகிறேன் இந்த வேலைக்கு. அவன் சந்தோஷமாக ஒப்புக்கொள்வான்." தன் ஆட்கள் பக்கம் திரும்பி "கிளம்பலாமா? போவோம் மேலே" என்றான் அந்த என்ஜினியர்.

ஐஸக் அந்த என்ஜினியருடன் பேசிக்கொண்டிருந்ததைக் கேட்டுக்கொண்டிருந்த ஒலேன் குறுக்கிட்டாள். ஐஸக்குக்கு கர்வத்தால் மண்டை வீங்கிவிட்டது என்கிற நினைப்புப் போலும் அவளுக்கு! "என்ன சொன்னாய் ஐஸக்? பதினாறு ஆடுகளா இருக்கின்றன? இல்லையே! பதினைந்துதானே இருக்கின்றன" என்றாள்.

ஐஸக் திரும்பி அவளைப் பார்த்தான். அவளும் தைரியமாக அவனையே பார்த்தாள்.

"பதினாறு ஆடுகள் இல்லையா?"

"இல்லை." அங்கிருந்த அந்நியர்கள்பக்கம் திரும்பினாள் ஒலேன். இந்த முட்டாளைப் பாருங்களேன்; இவனுக்குச் சொன்னால்கூடத் தெரியவில்லையே என்று பார்வையால் சொன்னாள்.

என்ஜினியரும் அவன் ஆட்களும் அவர்கள் வழி சென்றார்கள்.

ஒலேனை அடித்து உதைத்து ஹிம்சைப் படுத்த — அவள் செய்கிற காரியங்களுக்கெல்லாம் அவளுக்குச் சரியான தண்டனை தருவதற்கு அது நல்ல சந்தர்ப்பம். வீட்டில் அவர்களிருவரையும் தவிர வேறு யாரும் இல்லை; குழந்தைகள் என்ஜினியர்

கோஷ்டியுடன் சிறிது தூரம் போயிருக்கின்றன. ஐஸக் அறையின் மத்தியிலிருந்தான். ஒலேன் கணப்பண்டை உட்கார்ந்திருந்தாள். அவன் இரண்டொரு தடவை தொண்டையைக் கனைத்துக் கொண்டான். தனக்கு இஷ்டமில்லை எதுவும் பதில் தர என்பதை அவள் அறிந்து கொள்ளட்டும் என்பதற்காக இன்னும் இரண்டு தரம் கனைத்துக் கொண்டான். ஆனால் அவன் எதுவும் சொல்ல வில்லை. அதுதான் அவனுடைய பலம். தன்னிடம் எத்தனை ஆடுகள் இருந்தன என்று அவனுக்குத் தெரியாதா? அந்த ஆடுகளை எவ்வளவு நெருக்கமாகத் தெரியும்? ஒவ்வொரு நாளும் அவற்றுடன் பேசினானே! இந்தக் கிழத்துக்குப் பைத்தியம்தான். இல்லாவிட்டால் அந்தத் திருட்டு ஒலேன் அவற்றில் ஒன்றை யாரிடமாவது விற்றிருக்க வேண்டும். ப்ரெடாப்ளிக்கிலிருந்து நேற்று ஒருத்தி பண்ணையைப் பார்க்க வந்தாளே—அவளிடம் அந்த ஆட்டை விற்றிருப்பாள். "ம்...ம்..." என்றான் ஐஸக். வார்த்தைகள் அவன் நுனி நாக்கு வரையில் வந்து விட்டன. ஒலேன் என்ன காரியம் செய்தாள்? கொலை செய்யவில்லை—அதற்கு அடுத்ததாகக் காரியங்கள் செய்யத் துணிந்து விட்டாள் பாவி, பாழும் கிழவி! அவனால் அந்தப் பதினாறுவது ஆட்டைப் பற்றி நிறையவே பேச முடியும்! பேச முடியும்! ஆனால் அவன் பேச வில்லை. அதுதான் அவனுடைய பலம்.

ஆனால் ஒன்றுமே சொல்லாமல் அவன் எவ்வளவு நேரம் அப்படியே நிற்கவும் முடியும்? "ம்...ம்... ஓஹோ! பதினைந்து ஆடுகள்தான் இருக்கின்றனவா?"

"ஆமாம், நான் எண்ணினேன். நீயும் வேண்டுமானால் எண்ணிப் பாரு" என்றாள் ஒலேன் மெதுவாக.

இப்போது வேண்டுமானால், கையை நீட்டி ஒரு பிடிபிடித்து ஒரு அழுத்து அழுத்தினால் அவள் உருவமே ஜன்மத்துக்கும் மாறிவிடும். அவனால் அது சுலபமாகவே செய்துவிட முடியும். அவன் அப்படிச் செய்யவில்லை. அறைக் கதவைத் தாண்டிப் போய்க் கொண்டே "இப்பசத்தியாக வேறு ஒன்றும் சொல்ல வில்லை நான்" என்று சொன்னான். அவ்வளவுதான். பிறகு அடுத்த தடவை என்ன சொல்லுவான், என்ன செய்வான் என்று ஒலேனே கற்பனை செய்து பார்த்துக் கொள்ளட்டும்!

"எல்யூஸிஸ்!" என்று உரக்கக் குரல் கொடுத்தான்.

எல்யூஸிஸ் எங்கே? அந்தக் குழந்தைகள் எங்கே? அவர் களைக் கேள்விகள் கேட்டு அறிந்து கொள்ள விரும்பினான் ஐஸக்.

அவர்கள் பெரியவர்களாகி விட்டார்கள் — எல்லாவற்றையும் கவனித்து மனசில் வைத்துக் கொண்டார்கள். அவர்களைக் கேட்டால் விஷயம் விளங்கிவிடும். களஞ்சியத்தின் அடித் தரையிலே உட்கார்ந்திருந்தனர் குழந்தைகள் இருவரும். யார் கண்ணிலும் படாதிருக்கத்தான் அவர்கள் விரும்பினார்கள். அப்பா கூப்பிட்டதும் கடவுளின் குரல் கேட்டு பயந்து வரும் பாவிகள் போலக் குசுகுசுவென்று தங்களுக்குத் தாங்களே தைரியம் கூறிக் கொண்டு வந்தார்கள்.

விஷயம் இதுதான். என்ஜினியர் போகும்போது ஒரு கலர்ப் பென்சில் துண்டைப் போட்டு விட்டுப் போய் விட்டான். அதைக் கண்டெடுத்தவன் எல்யூஸிஸ். அதைக் கொண்டு போய்க்கொடுக்க எல்யூஸிஸ் அவர்களைத் துரத்திக் கொண்டு போனான். ஆனால் என்ஜினியரும் அவன் ஆட்களும் வெகு தூரம் போய் விட்டார்கள். எல்யூஸிஸ் பின் தங்கிவிட்டான். பென்சிலைத் தானே வைத்துக் கொண்டால் என்ன என்கிற எண்ணமும் தோன்றி விட்டது அவனுக்கு. ஸிவெர்ட்டைத் தேடிப் பிடித்தான். குற்றத்தில் பங்கு இருவருக்குமே இருக்கட்டுமே! களஞ்சியத்தின் தரையில் அந்தப் பென்சிலால் சித்திரங்கள் வரைவதில் ஈடுபட்டிருந்தனர் இருவரும். அடாடா! அந்தப் பென்சில் என்பது எவ்வளவு மகத்தான பொக்கிஷம்! அந்த நாள் அவர்கள் வாழ்க்கையிலேயே மிகவும் நன்னாள். ஒரு பக்கம் நீலப் பென்சில் —மறு பக்கம் சிவப்பு. இரண்டு பக்கங்களாலும் எங்கு பார்த்தாலும் கோடுகள் போட்டார்கள்—சித்திரம் வரைந்தார்கள். மாற்றி மாற்றி ஆளுக்கொரு சித்திரமாகப் போட்டார்கள். தகப்பன் கூப்பிட்டது காதில் விழுந்ததும் எல்யூஸிஸ் "பென்சிலுக்காகத் தான் வந்துவிட்டார்கள்" என்றான். அவர்களுடைய சந்தோஷம் ஒரு நிமிஷத்தில் மாறிவிட்டது. அவர்களுடைய இதயம் படபட வென்று அடித்துக்கொண்டது. சகோதரர்கள் இருவரும் களஞ்சியத்தை விட்டு வெளியே வந்தார்கள். கையில் பென்சிலை எடுத்து நீட்டிக்கொண்டு வந்தார்கள். அவர்கள் அதை உடைத்துவிட வில்லை—இந்தா என்று கொடுத்துவிடத் தயாராக இருந்தார்கள். அவர்கள் அந்தப் பென்சிலை பார்க்காமலே இருந்திருந்தால் எவ்வளவு நன்றாக இருந்திருக்கும்!

ஆனால் என்ஜினியர் பென்சிலுக்காகக் காத்திருக்கவில்லை— அங்கு என்ஜினியரைக் காணவேயில்லை என்றதுமே அவர்களுக்குப் படபடப்பு லேசாகிவிட்டது. பென்சிலைப் பற்றிப் பயப்பட வேண்டியதில்லை! அப்பாடா!

“நேற்று ஒரு பெண்பிள்ளை வந்தாளே இங்கு?” என்று கேட்டான் ஐஸக்.

“ஆமாம்.”

“அடுத்த பண்ணையிலிருந்து வந்தாள் அந்தப் பெண்பிள்ளை. அவள் போகும்போது பார்த்தீர்களா?”

“பார்த்தோம்.”

“அவளிடம் ஒரு ஆடு இருந்ததா?”

“இல்லையே!” என்றார்கள் பையன்கள். “ஆடா?”

“அவள் இங்கிருந்து போகும்போது அவளிடம் ஆடு ஒன்றும் இல்லையா?”

“இல்லை. எது ஆடு?”

ஐஸக்குக்கு ஆச்சரியமாக இருந்தது. மாலையில் ஆடு மாடுகள் வந்ததும், ஆடுகளை எண்ணினான்—சரியாகப் பதினாறு ஆடுகள் இருந்தன. ஐந்து தடவைகள் எண்ணினான்—ஒரு ஆடுகூடக் குறையவில்லை. சரியாகப் பதினாறு ஆடுகள் இருந்தன.

ஐஸக்குக்கு உயிர் வந்தது. ஆனால் இதற்கு என்ன அர்த்தம்? பாழும் கிழவி—அவளுக்குப் பதினாறு வரையில் சரியாக எண்ணத் தெரியாதோ? பதினாறு ஆடுகள் இருக்கின்றனவே!

“பதினாறு இருக்கா?” என்று மிகவும் மெதுவாக ஏதும் அறியாதவள் போலக் கேட்டாள் ஒலைன்.

“ஆமாம்.”

“ம்......ம்......”

“ம்......ம்......”

“உனக்கு எண்ணத் தெரிகிறது.”

“உனக்கு இதுகூடத் தெரியாதா?”

அவளுக்கு ஏதோ அவன் தீங்கு இழைத்துவிட்ட மாதிரி, மிகவும் மெதுவான குரலில், ஒலைன் சொன்னாள்: “பதினாறு ஆடுகளும்தான் இருக்கின்றனவே! ஒன்றை நான் வெட்டித் தின்றுவிட்டேன் என்று சொல்லமுடியாது பாரு!” என்றாள்.

அவனை வெகு தந்திரமாக ஏமாற்றிவிட்டாள் ஒலைன். எல்லாம் சரியாக இருப்பதாக நினைத்துக்கொண்டுவிட்டான் அவன். செம்மறி ஆடுகளை எண்ணிப் பார்க்கவேண்டும் என்கிற நினைப்பே வரவில்லை அவனுக்கு. அதற்குப் பிறகு அவன் ஆடு மாடுகளை எண்ணுவதில்லை—எல்லாம் சரியாக இருக்கும் என்று

நினைப்பு. அப்படியொன்றும் மோசமானவள் அல்ல ஒலேன். வீட்டையும் வாசலையும் ஏதோ அவளாலானவரையில் அவனுக்காகப் பார்த்துக் கொண்டாள். அசடு கொஞ்சம்; ஏமாந்து யாராவது கேட்டால் அள்ளிக் கொடுத்துவிடுவாள். அவனுடையது என்று பார்க்கமாட்டாள்; கொடுத்து விடுவாள். அவள் இருக்கட்டும், போகட்டும்—ஏதோ சாப்பிட்டுவிட்டுப் போகட்டும். அவளைப்பற்றி அதிகமாகக் கவலை படுவானேன்? ஏற்கனவே வாழ்க்கையிலே இன்பமே இல்லை. வர்ணமேயில்லை. ஒலேன் என்கிற தொல்லை வேறு எதற்கு? தொலையட்டும் அவள்—எப்படியாவது போகட்டும்!

வருஷங்கள் சென்றன. வீட்டுக் கூரைமேலே போட்ட மண் பத்தைகளில் புல் அடர்ந்துவிட்டது. களஞ்சியத்தின் கூரையில் கூடப் புல் செழித்து அடர்ந்து வளர்ந்துவிட்டது. காட்டெலி களஞ்சியத்திற்குள் புகுந்து தின்று தீர்த்துக்கொண்டிருந்தது. சிட்டு முதலிய பறவைகள் எங்கே என்னகிடைக்கும் என்று பறந்து பறந்து வந்தன. மலைச் சரிவிலே ஆயிரக்கணக்கான பறவைகள் இருந்தன. காக்கைகள்கூட வந்தன. ஒரு சமயம், போன வருஷம், கடல் நாரைகள்கூட வந்தன. கடலைவிட்டுப் பறந்து காட்டுக்குள் வந்து ஐஸக்கின் பண்ணையிலே இறங்கின. ஐஸக்கினுடைய பண்ணையைப் பக்ஷிக்கும், பறவைக்கும், ஆட்டுக்கும், மாட்டுக்கும், மனிதனுக்கும், மிருகத்துக்கும் தெரியும். தின்னத் தானியம் கிடைக்கிறதென்று அறுவடை காலத்தில் எவ்வளவோ பறவைகள் எங்கிருந்தெல்லாமோ அங்கு வந்தன. கடல் நாரைகள் வந்தபோது எல்யூஸிஸும் சிறுவன் ஸிவெர்ட்டும் ஆனந்தத்தில் மூழ்கினார்கள்! எவ்வளவு தூரத்திலிருந்து வந்திருந்தன அந்த அழகான பறவைகள்! அதிகமில்லை; ஆறே ஆறு நாரைகள்தான். வெள்ளை வெளேரென்று—ஒன்றைப் பார்த்தால் இன்னொன்றைப் பார்க்க வேண்டாம். தத்தக்கா பித்தக்கா என்று அவை வயல்களில் இறங்கி, தானியத்தைக் கொத்த, நடந்த நடை! அது எவ்வளவு வேடிக்கையாக இருந்தது.

“அப்பா! அவை எதற்காக வந்தன?” என்று கேட்டார்கள் பையன்கள்.

“கடலில் புயல் வருகிறது. அதற்காக நாரைகள் காட்டுக்குப் பறந்து வந்து விட்டன” என்றான் ஐஸக். அந்த நாரைகளைப் பார்ப்பதற்கு அவனுக்கே ஆச்சரியமாகவும் ஆனந்தமாகவும் இருந்தது.

தன் பிள்ளைகளுக்குப் பல புதுப் புது விஷயங்களைச் சொல்லித் தந்தான் ஐஸக். எத்தனையோ நல்ல விஷயங்களையும் உபயோககரமான விஷயங்களையும் சொல்லித் தந்தான். பள்ளிக்கூடத்துக்குப் போக வயசாயிற்று அவர்களுக்கு—ஆனால் பள்ளிக்கூடம் தொலைவில் கிராமத்தில் இருந்தது—எட்டாத தூரத்தில் இருந்தது. அவர்களுக்கு ஞாயிற்றுக் கிழமைகளில் அக்ஷரங்களைச் சொல்லித் தந்தான் ஐஸக். ஆனால் உழவன் நிலத்தில் வேலை செய்து பாடுபடப் பிறந்தவன். அவனால் என்ன சொல்லித்தர முடியும்? மேல் படிப்பு சொல்லித்தர அவனால் முடியுமா? பைபிளையும் மற்ற மத விஷயமான புஸ்தகங்களையும் அவன் தொடுவதுகூட இல்லை. புஸ்தகப் படிப்பு எதற்கு என்று அவன் நினைப்பதுபோல இருந்தது—அவன் தன் பிள்ளைகளுக்குப் பாடம் சொல்லிக் கொடுப்பதைப் பார்த்தால்! அந்தக் குழந்தைகளிடம்தான் அவனுக்கு எவ்வளவு பெருமை, பரிவு, பிரியம்! அவர்களை நினைக்க நினைக்க அவனுக்கு ஆனந்தம் பொங்கியது. எவ்வளவு சின்னவர்களாக இருந்து இப்போது பெரியவர்களாகிக் கொண்டிருந்தார்கள்! அவனுக்கு ஞாபகம் வருகிறது; கையில் மர எண்ணை பட்டிருக்கும்: அந்த எண்ணைக் கையுடன் அவன் தன் குழந்தைகளைத் தொடக்கூடாது என்று இங்கர் உத்தரவு போடுவாளே! மர எண்ணை அசுத்தமா? மர எண்ணை உலகிலே சுத்தமான பொருள்களில் ஒன்று. தார், ஆட்டுப் பால், மர எண்ணை எல்லாம் சுத்தமான பொருள்கள் அல்லவா!

அப்பாவுடைய கொள்கைக்கு ஏற்பப் பையன்கள் குப்பையிலும் கூளத்திலும் விழுந்து புரண்டுதான் வளர்ந்து வந்தார்கள். அழுக்கும் தூசியும் அலம்பிவிட்டால் போகிறது. எப்பவாவது அவர்கள் கழுவித் தேய்த்துக் குளிப்பார்கள். அப்போது பார்க்க மிகவும் நேர்த்தியான பையன்கள்தான் அவர்கள்! சிறுவன் ஸிவெர்ட் மிக நேர்த்தியானவன். பெரியவன் எல்யூஸிஸ் சற்றே மாறுபட்டவன். அவன் மனசின் ஆழத்திலே என்ன இருந்ததோ—யார் சொல்லமுடியும்?

"புயல் வரப்போவது நாரைகளுக்கு எப்படித் தெரியும்?" என்று கேட்கிறான் எல்யூஸிஸ்.

"அவற்றின் சுபாவம் அது" என்கிறான் தகப்பன். "பக்ஷி பறவைகள் எல்லாவற்றிற்குமே சுபாவமாகவே சீதோஷ்ண நிலை பற்றி அறிவுண்டு. ஈக்களைப் பாரேன். எப்படித் தெரிகின்றன அவற்றிற்கு? தலை சுற்றுமோ அல்லது கால் வலிக்குமோ,

எனக்குத் தெரியாது. ஈயை அடிக்கக்கூடாது. அதை மட்டும் ஞாபகம் வைத்துக்கொள். மழை வருகிறபோது மயங்கிக் கிடக்கும் ஈயை அடித்தால் ஈக்கள் அதிமாகிவிடும்! ஆனால் குதிரை ஈ இருக்கிறதே—பெரிய ஈ; அதன் விஷயம் வேறு. தானாகவே இறந்துவிடும் அது. கோடையில் ஒரு நாள் திடீரென்று வரும், பிறகு தானாகவே போய்விடும்.''

"எப்படிச் சாகிறது அது, தானாகவே?'' என்று கேட்கிறான் எல்யூஸிஸ்.

"உள்ளே கொழுப்பு அதிகமானதும் உடல் வெடித்து இறக்கிறது.''

தினமும் புதுசாக ஏதாவது கேட்டுத் தெரிந்துகொள்வார்கள் பையன்களும் இருவரும். உயரத்திலிருந்து கீழே குதிக்கும்போது நாக்கைப் பற்களுக்கிடுக்கில் வைத்துக்கொண்டால் நாக்குத் துண்டித்துவிடும். ஆனால் துண்டிக்காமலும், வித்தை தெரிந்தால், குதிக்கலாம். பெரியவர்களாகி அவர்கள் மாதாகோயிலுக்குப் போகும்போது, உடம்பு வாசனையாக இருக்கவேண்டுமா? டான்ஸீ பூண்டை எடுத்து தேய்த்துக்கொண்டால் உடம்பெல்லாம் வாசனை அடிக்கும். அப்பாவுக்குத் தெரியாதது என்ன! கற்களையும், சக்கி முக்கிகளையும்பற்றிச் சொல்லித்தருகிறான் அவன். கூரான கற்களை வைத்துத் தீ மூட்டுவதை எப்படி என்று சொல்லித்தந்தான். சந்திரனைப்பற்றிச் சொல்லித் தந்தான்—இடதுபக்கம் தேய்ந்திருந்தால் வளர் பிறை; வலது பக்கம் தேய்ந்திருந்தால் தேய்பிறை. ஞாபகமிருக்குமா, பையன்களா? சிலசமயம் அவர்களுக்குஎட்டாத விஷயங்களைப் பற்றியும் சொல்லுவான். ஒட்டகம் ஸ்வர்க்கத்துக்கு போவது நடக்காதகாரியம் என்றான் ஒரு நாள்—அதைவிடச் சுலப மாக மனிதன் ஊசியில் நூலைக் கோத்துவிடலாம் என்றான். இன்னொருதடவை கடவுளின் தேவதைகள் தலையைச் சுற்றி நக்ஷத்திரங்கள்என்கிற ஆணிகள் அடித்த தொப்பிகள் அணிந்திருப் பார்கள் என்றான். காலில்கூட பூட்ஸ் ஆணிகளுக்குப் பதில் நக்ஷத்திரங்கள்தான் என்றான். காட்டில் வந்து தங்கிய மனிதர்களுக்கு, நிலத்தை உழுது பயன் பெற்ற மனிதனுக்கு, இதைவிட வேறு என்ன தேவை? பள்ளிக்கூட உபாத்தியார்கள் இதையெல்லாம் பற்றிச் சிரித்திருப்பார்கள். ஆனால் ஐஸக்கின் பிள்ளைகளுக்கு இந்த அறிவு நல்லபலன்களைத் தந்தது. சமயத்தில் உதவியது. ஆத்மீகமான ஒருஉணர்ச்சி ஏற்பட்டது அவர்களுக்கு. அவர்கள் வாழவேண்டிய இடத்துக்கு ஏற்ற அறிவு அது. வேறு

என்ன தேவை? இலையுதிர் காலத்தில் மாமிசத்துக்காக ஆடுகளை வெட்டும்போது அவர்கள் கஷ்டப்படுவார்கள்—ஆனால் பல விஷயங்களைப்பற்றியும் கேள்விகள் கேட்டார்கள். ஆட்டைக் கையில் பிடித்திருக்கிறான் ஐஸக்; மறு கையில் அரிவாளை வைத்திருக்கிறான். ஒலேன் ஒரு பாத்திரத்தில் ரத்தத்தை ஏற்கத் தயாராகஇருக்கிறாள். கிழ ஆடு. தாடியுடன், அறிஞன்போலக் கவலையில்லாமல் நாலாபக்கமும் பார்க்கிறது. பையன்கள் தூரத்திலிருந்து எட்டிப்பார்த்தார்கள். "எவ்வளவு குளிராக இருக்கிறது!" என்று சொல்லிக்கொண்டே எல்யூஸிஸ் திரும்பித் தன் கண்களைத் துடைத்துக்கொள்கிறான். சிறுவன் ஸிவெர்ட் அழவே அழுதுவிட்டான், "பாவம் அந்த ஆடு" என்று. ஆட்டை வெட்டிவிட்டு ஐஸக் தன் பிள்ளைகளுக்குச் சொன்னான்: "ஆமாம். பாவம்! பாவம்! என்று சொல்லிக்கொண்டிருப்பது தவறு. அப்படிச் சொன்னால் ஆட்டைக் கொல்வது சிரமமாகிவிடும்; இரண்டாந்தரம் வெட்ட வேண்டி வரும். அப்போது ஆடு மிகவும் சிரமப்படும்" என்றான்.

வருஷங்கள் சென்றன. மீண்டும் வஸந்தம் வந்தது.

இங்கர் சௌக்கியம் என்று எழுதியிருந்தாள். புதுப்புது விஷயங்கள் பல கற்றுக்கொள்வதாகவும் எழுதியிருந்தாள். அவள் பெண் வளர்ந்துகொண்டிருந்தாள். அவள் பிறந்த நாள் நவம்பர் 15. லெபல்டின் என்று பெயர் வைத்திருந்திருந்தது அவளுக்கு. இப்போது இங்கர் தையல் வேலையில் சமர்த்தியாகிவிட்டாள். விதவிதமான தையல்கள் செய்வாள் அவள்.

இந்தக் கடிதத்தில் பெரிய விசேஷம் என்னவென்றால், இது பூராவையுமே இங்கர் தன் சொந்தக் கைப் படவே எழுதியிருந்தாள். ஆனால் ஐஸக்குக்கு அவ்வளவாக எழுதப் படிக்கத் தெரியாது. கிராமத்தில் கடைக் குமாஸ்தாவிடம் கொடுத்து வாசிக்கச் சொன்னான். ஒரு தரம் வாசித்ததும் கடிதம் ஐஸக்குக்கு மனப் பாடமாகிவிட்டது. வீடு திரும்பும்போது பூராவும் ஒப்பித்து விட்டான் அவன்.

மேசையண்டை உட்கார்ந்து, கடிதத்தைப் பிரித்து வைத்துக் கொண்டு, தன் பிள்ளைகளுக்கு அந்தக் கடிதத்தை "வாசித்து"க் காட்டினான் அவன். அவனுக்கு எழுதப் படிக்கத் தெரியுமென்று ஒலேனுக்குத் தெரிய வேண்டுமென்று அவனுக்கு ஆசை. அவளிடம் அவன் நேரடியாக எதுவும் சொல்லவில்லை. கடிதத்தைப் படித்து முடித்ததும், அவன் சொன்னான்: "பார் எல்யூஸிஸ்! நீயும் பார் ஸிவெர்ட்! உன் அம்மாவே இந்தக் கடிதத்தை எழுதி





யிருக்கிருள். பல புது விஷயங்களையும் கற்றுக் கொண்டிருக்கிருள். உங்களுடைய சின்னத் தங்கைக்கு நமக்கெல்லாம் தெரிந்ததை விடப் பல விஷயங்கள் தெரியும். அதை ஞாபகத்தில் வையுங்கள்." ஆச்சரியத்தில்மூழ்கியவர்களாகப் பையன்கள் பேசாதிருக்கிருர்கள்.

"நல்ல காலம்தான். பெரிய விஷயம்தான்" என்ருள் ஒலேன்

என்ன அர்த்தத்தில் சொன்னுள் அதை? இங்கர் பொய் சொல்லுகிருள் என்று எண்ணிச் சொன்னுளா? ஐஸக் வாசித்தது பற்றிச் சந்தேகமா அவளுக்கு? ஒலேன் மனசில் என்ன இருந்தது என்று கண்டுபிடிப்பது மிகவும் சிரமமான காரியம். அவள் மிகவும் மிருதுவான குரலில் சாதுபோல விஷமமான பல விஷயங்களைச் சொல்லிவிடுவாள். ஐஸக் அவள் சொன்னதைக் கவனிப்பதில்லை என்று தீர்மானித்தான்.

"உங்கள் அம்மா வந்ததும், நீங்களும் எழுதப் படிக்கக் கற்றுக் கொள்ளலாம்" என்ருன் ஐஸக் தன் பையன்களிடம்.

ஒலேன் ஏதோ பாத்திரங்களைத் தொப்பென்று வைத்தாள். சில துணிமணிகளை எடுத்து உதறி மடித்து வைத்தாள். சுரு சுருப்பாக வேலை செய்பவள் போல நடமாடினுள். அவள் மனசில் என்னவெல்லாமோ யோசனைகள்.

"இங்கே எல்லாம் நேர்த்தியாகவும், சிறப்பாகவும் இருக்கிறது" என்ருள் ஒலேன் கடைசியில். "நீ வரும்போது ஒரு காபிப் பொட்டலம் வாங்கி வரக் கூடாதோ?" என்ருள்.

"காபியா?" என்ருன் ஐஸக். அவனையும் மீறி வந்துவிட்டது வார்த்தை.

ஒலேன் அமைதியாகப் பதில் அளித்தாள்: "என் பணத்தைப் போட்டு ஏதோ கொஞ்சம் காபி வாங்கினேன் இதுவரை..."

ஐஸக்கைப்பற்றிய வரையில் காபி என்பது கனவுலகத்தைச் சேர்ந்தது. எட்டாப் பொருள். வான வில்லும் கடவுளின் தேவதைகளும் உள்ள உலகைச் சேர்ந்தது. ஒலேன் புத்தி யில்லாமல் பேசினுள். அவளிடம் கோபம் வரவில்லை அவனுக்கு. அவன் அவ்வளவாக வேகமாகச் சிந்திப்பவனல்ல—எனினும் அவனுக்கு அவள் லாப்களுக்குக் காபிக் கொடுத்து அளவளாவியது ஞாபகம் வந்தது.

"காபியா? காபி வாங்கி வருகிறேன். பொட்டலம் என்ன? ஒரு பவுண்டு காபி வாங்கினுல் போகிறது! பவுண்டாகவே வாங்கலாம்—ஒரு பவுண்டு!"

"இப்படிப் பேசவேண்டாம் ஐஸக். என் தம்பி நில்ஸ்—அவன் ஒரு நாள்கூடக் காபி சாப்பிடாமல் இருப்பதில்லை. அதோ அடுத்த பண்ணை, பிரெடாப்ளிக்கில் தினம் காபி சாப்பிடுகிறார்கள்."

"அங்கே பால் கிடையாது. ஒரு துளிப் பால்கூட அந்தப் பண்ணையில் கிடையாதே!"

"அதிருக்கலாம். உனக்குத் தெரியாத விஷயமா? எழுதப் படிக்கக்கூடத் தெரிந்துகொண்டு விட்டாயே நீ! இனியும் காபி சாப்பிடாமல் இருக்கலாமா? காபி தேவைதான்."

"அயோக்யக் கழுதை!" என்றான் ஐஸக்.

அதற்குப் பிறகு ஒலீன் சுலபத்தில் ஓய்ந்து விடுவதாக இல்லை. "அந்த இங்கரைப்பற்றி, நான் சொல்லலாமானால் சொல்லுகிறேன்."

"என்ன வேண்டுமானாலும் சொல்லு."

"அவள் எல்லாம் கற்றறிந்தவளாக வீடு திரும்புவாள். தலையில் தொப்பியும், தொப்பியிலே மணிகளும் இறகுமாக—இல்லையா?"

"அது சரி. அதற்கென்ன இப்போது?"

"இதற்கெல்லாம் ஆதிகாரணம் நான்தான் என்று அவள் எனக்கு நன்றி சொல்லவேண்டும்" என்றாள் ஒலீன்.

"நீயா? உனக்கா?" என்றான் ஐஸக். அவளுடன் இத்தனை பேசிக்கொண்டிருப்பதே தவறுதான். ஆனால் பேசாமல் இருப்பது எப்படி?

ஒலீன் தாழ்மையுடன் சொன்னாள்: "ஆமாம். நான்தான் அவள் சிறைப்பட்டதற்குக் காரணம். அவள் போக நேர்ந்தது என்னால்" என்றாள் ஒலீன்.

ஐஸக்குக்குப் பேச நா எழவில்லை. வாய் அடைத்துவிட்டது. கோப முழிமுழித்துக் கொண்டு பேசாதிருந்தான். அவன் காதில் விழுந்தது நிஜம்தானா? ஏதோ சாதாரண விஷயம் பேசுகிற மாதிரி இதைச் சொன்னாள் ஒலீன். என்ன தைரியம் அவளுக்கு! பேச்சுப் போட்டியிலே ஜயம் எப்போதும் ஒலீனுக்குத்தான். அவளைச் சமாளிக்க அவனால் முடியவில்லை.

மனம் இருட்ட, செய்யக் கூடிய காரியங்கள் பலவற்றைச் சிந்தித்துக்கொண்டே வெளியே போனான். முதல் வருஷமே அந்த ராக்ஷஸியை அவன் கழுத்தை முறித்துப் போட்டிருக்க

வேண்டும்—அவள் வர வர ராக்ஷஸத்தனத்தில் செழித்துக் கொழுத்துக்கொண்டிருந்தாள்! அவளைக் கொலைசெய்து விடுவதென்றால் முடியாத காரியமா அது? சுலபமாகவே முடியும். தன் திரண்டு உருண்ட புஜங்களைப் பார்த்துக் கொண்டான்.

பிறகு வேறு ஒரு சிறு விஷயம் ஞாபகம் வருகிறது. கொட்டிலில் போய் ஆடுகளை எண்ணுகிறான். ஆடுகளும் ஆட்டுக் குட்டிகளும் எண்ணிக்கை சரியாக இருக்கிறது. பசுக்களை எண்ணுகிறான். அந்தப் பன்றியும் இருக்கிறது. பதினாறு பெட்டைக் கோழிகள். இரண்டு கன்றுக்குட்டிகள். "ஹா! செம்மறியாடுகளை மறந்துவிட்டேனே!" என்று தனக்குத்தானே சொல்லிக்கொள்ளுகிறான். அவற்றை எண்ணுகிறான். ஏதாவது குறையுமோ என்று கவலைப் படுபவன் போல எண்ணுகிறான். வெகு நாளாகவே ஒரு செம்மறியாடு போய்விட்டது தெரியும் அவனுக்கும். ஏன் அதைப் பற்றிக் கவனித்ததாகக் காட்டிக் கொள்ளவில்லை? அதுதான் அவன் யுக்தி. சமயம் வரும்போது பார்க்கலாம் என்று விட்டிருந்தான். ஒலைன் ஒரு தரம் அவனை ஆடுகளைப் பற்றிப் பேசி ஏமாற்றிவிட்டாள். அப்போது அவன் ஆர்ப்பாட்டம் செய்து ஏமாந்து போய்விட்டான். ஒலைனிடம் சண்டை போட்டு ஜயிக்க முடிவதில்லை. இலையுதிர் காலத்தில் ஆடுகள் வெட்டும்போது ஒரு செம்மறியாடு குறைவதைக் கவனித்தான். ஒலைனைக் கேட்டு என்ன லாபம்! கேட்காமலே இருந்து விட்டான்.

இப்போது கோபம் வருகிறது அவனுக்கு. ஆமாம். அவன் வெகு ஆத்திரமடைந்து இருக்கிறான். இரண்டு தடவைக்கு மூன்று தடவைகளாகச் செம்மறியாடுகளை எண்ணிப் பார்க்கிறான். ஒலைன் காதில் விழவேண்டும் என்று உரக்கவே எண்ணுகிறான். ஒலைனைப்பற்றி வாய்க்கு வந்தபடி எல்லாம் திட்டிப் பேசுகிறான். அவளை உரக்கவே திட்டுகிறான். அவள் போடுகிற உணவைத் தின்றுவிட்டு செம்மறியாடு அடியோடு மறைந்தே போய்விடுகிறது என்கிறான் கேலியாக. ஒலைன் காதில் விழட்டும் என்று திருட்டுக் கழுதை என்று கூவுகிறான். பிறகு லாயத்திற்குள் போய்க் குதிரையைப் பார்க்கிறான். அங்கிருந்து வீட்டுக்குள் போய் ஒலைனுடன் பேசுவதாக உத்தேசம் அவனுக்கு.

இந்தத் தடவை அவன் மனசில் ஒன்றையும் வைத்துக் கொள்ளப் போவதில்லை. எல்லாவற்றையும் சொல்லிவிடுவான். அவன் உள்ளே போகிற வேகத்தில் அவன் சட்டை காற்றில்

பறக்கிறது. ஒலேன் ஜன்னலண்டை நின்றிருக்கிருள். அவன் போட்ட சப்தம் அவள் காதிலும் விழுந்திருக்கும். மாட்டுக் கொட்டிலுக்குப் போகிற சாக்கில் கையில் இரண்டு வாளிகளைத் தூக்கிக்கொண்டு வீட்டு வாசலில் வருகிருள் அவள்—அமைதியாக எதுவும் காதில் விழாத மாதிரி.

"ஆடு இருந்தது ஒன்று—அதற்குக் காது மடிந்திருக்கும்! அது எங்கே!"

"ஆடா?"

"இப்போது இங்கிருந்தால் அது இரட்டைக் குட்டி போடும். வழக்கமாக வருஷா வருஷம் அது இரட்டைக் குட்டி போடும். அதை என்ன பண்ணிஞய்? ஒரு ஆடல்ல—மூன்று ஆடுகள் நஷ்டம் எனக்கு—உன்ஞல்."

இந்தக் குற்றச்சாட்டை ஒலேன் எதிர்பார்க்கவில்லே: அவளால் சமாளித்துக்கொள்ள முடியவில்லே. தலையை ஆட்டுகிருள்; நிற்க முடியாமல் தவிக்கிருள். கீழே விழுந்து மண்டை உடையட்டுமே! ஆனல் அவள் மனசில் என்ன பதில் சொல்வது என்று சிந்திக்கிருள். சமர்த்தி அவள். எதற்கும் சரியான பதில் தர அவளால் முடியும்.

"ஆமாம். நான் ஆடு திருடுகிறேன். ஆட்டுக் குட்டி திருடுகிறேன்" என்ருள் ஒலேன். "திருடி என்ன செய்கிறேஞம்! ஒரு ஆட்டை வெட்டி அப்படியே தின்றுவிடுகிறேஞே?"

"நீ என்ன செய்கிருயோ அதை? யாருக்குத் தெரியும்?"

"ஒஹோஹோ! நீ எனக்கு போதுமான உணவு தரவில்லேயா —நான் திருடித் தின்பதற்கு? எனக்கு எதற்கு ஆடும் ஆட்டுக் குட்டியும்! நீ கொடுப்பதே போதுமானதாயிற்றே!"

"அது சரிதான். அந்த ஆட்டை என்ன பண்ணிஞய் சொல்லு? ஆஸ் ஆண்டர்ஸுக்கு கொடுத்துவிட்டாயா?"

"ஆஸ் ஆண்டர்ஸா?" வாளிகளேக் கீழே வைத்துவிட்டு உட்காருகிருள் ஒலேன். "அட பாவமே. ஆஸ் ஆண்டர்ஸ் எங்கே வந்தான்? ஆடு குட்டி என்று பேசுகிருயே! மடித்த காதுள்ள ஆடா?"

"திருட்டுக் கழுதை!" என்று கோபாவேசத்துடன் சொல்லி விட்டுத் திரும்புகிருன் ஐஸக்.

"என்ன அதிசயம் இது ஐஸக்! உனக்குக் கடவுள் வேண்டியதைக் கொடுத்திருக்கிருர். ஆடு மாடு—எல்லாழ்

கொட்டில்களிலும் நிறைந்திருக்கின்றன. எனக்குத் திருட்டுப் பட்டம் கட்டி என்னிடமிருந்து ஒரு ஆட்டையும் குட்டியையும் நீ சேர்த்துக் கொள்ளப் பார்க்கிருயா? உனக்கு இருப்பதுபோதாதா? கடவுளுக்கு நன்றி செலுத்துவதற்குப் பதில் நான் திருடிவிட்டேன் என்று ஏதோ உளறுகிருயே! நான் ஏழை. என் பாவத்தைக் கொட்டிக் கொள்ளாதே! மீண்டும் ஆடுகள் ஈனும் பருவம் வரும் நீ போய்விட்டது என்கிருயே அந்த ஆட்டுக்குப் பதில் மூன்று. குட்டிகள் வரும். கடவுளை நம்பு. கவலைப்படாதே!''

அடேயப்பா! அந்தக் கிழட்டு ஒலேனுடன் யார் பேசுவது?

கரடிமாதிரி தனக்குத்தானே உறுமிக்கொண்டு போனான் ஐஸக். "முதல் நாளே அவளைக் கொன்று போட்டிருந்தால் பாதகமில்லை'' என்று தனக்குத்தானே சொல்லிக்கொண்டான். தன்னைத்தானே வைது கொண்டான்: "மாமிச பர்வதம்! நம்பி ஏமாந்துவிட்டேன்! இனியும் பார்க்கலாம். அவளைச் சும்மா விடுவது சரியல்ல. இன்று வேண்டாம்—நாளையும் வேண்டாம்—பார்க்கலாம். காபியா வேண்டும்! காபி! மூன்று ஆடுகள் போய்விட்டன—அவளுக்குக் காபி வேண்டுமாம்—காபி!''

# 10

மறுநாள் ஒரு விசேஷ நாள். பெரிய சம்பவம் ஒன்று நடந்தது. பண்ணைக்கு ஒரு விருந்தாடி வந்தான். யார்? வேறு யாருமில்லை. பழைய கெய்ஸ்ஸலரேதான். கோடை இன்னும் பிறக்கவில்லை. பாதைகள் சரியாக இல்லை. அதையெல்லாம் பற்றிக் கவலைப் படுபவன் அல்ல கெய்ஸ்ஸலர். நடந்துதான் வந்தான் அவன். காலில் பளபள வென்று விலை உயர்ந்த பூட்ஸ் அணிந்திருந்தான்; மஞ்சள் கையுறைகள் அணிந்திருந்தான். பார்ப்பதற்கு ஜோராக இருந்தான். அவனுடைய சாமான்களைக் கிராமவாசி ஒருவன் தூக்கி வந்தான்.

உண்மையில், ஐஸக்குக்குச் சொந்தமான ஒருபகுதி நிலத்தை வாங்க வந்திருந்தான் அவன்; ஆமாம் குன்றின் சரிவிலே இருந்த செம்புக் கனிப் பொருள் மலிந்த நிலத்தை வாங்க வந்தான். அது தவிர இங்கரிடமிருந்து செய்தி கொணர்ந்திருந்தான். நல்ல பெண் அவள். ட்ராண்ட்யெம் நகரில், அங்கே எல்லோரும் அவளிடம் பிரியம் வைத்திருந்தார்கள். அவன் போய் அவளைப் பார்த்தான். "இங்கே ரொம்ப வேலை செய்திருக்கிருயே, ஐஸக்!''

"ஆம். நீங்கள் இங்கரைப் பார்த்தீர்களா?"

"அதோ ஆற்றோரமாக என்ன அது? மாவு மில்லா? உனக்குத் தேவையான மாவரைக்க மில் அமைத்துவிட்டாயா? பேஷ்! போன தடவைக்கிப்போது அதிக நிலம் சாகுபடி செய்து விட்டாயே!"

"அவள் சௌக்கியமா?"

"யாரு? உன் மனைவியா? சௌக்கியம்தான். அடுத்த அறைக்குப் போவோம். விஷயத்தைப் பூராவும் சொல்லுகிறேன்."

"அறை சுத்தமாக இல்லையே" என்றாள் ஒலின். அவர்கள் அங்கு போய்ப் பேசுவதை அவள் விரும்பவில்லை.

ஆனால் இருவரும் அடுத்த அறைக்குள் போய்க் கதவைச் சாத்திக் கொண்டார்கள். ஒலின் சமையல் அறையி லிருந்தாள். அவர்கள் பேசுவதில் ஒரு வார்த்தைகூட அவள் காதில் விழவில்லை.

கெய்ஸ்ஸலர் உட்கார்ந்தான். தன் தொடையைத் தட்டிக் கொண்டான். ஐஸக்கின் விதி அவன் கையில் இருந்தது.

"அந்த நிலத்தை இன்னும் நீ விற்றுவிட வில்லையே!"

"இல்லை."

"நல்லது. அதை நானே வாங்கிக்கொள்கிறேன். ஆம். நான் இங்கரைப் பார்த்தேன். வேறு சிலரையும் போய்ப் பார்த்தேன்—அது விஷயமாக. இங்கர் விடுதலையாக அதிக நாளாகாது. சீக்கிரமே வந்துவிடுவாள். மன்னர் வரையிலும் போயிருக்கிறது விஷயம்!"

"மன்னர் வரையிலுமா?"

"ஆமாம். மன்னர் வரையில்தான். உன் மனைவியைப் போய்ப் பார்த்தேன். அதை ஏற்பாடு செய்வதில் எனக்கு என்ன சிரமம்? நெடுநேரம் அவளுடன் பேசிக் கொண்டிருந்தேன் 'என்ன இங்கர் எப்படி யிருக்கிறாய்?' என்றேன். 'குறை சொல்லும்படியாக ஒன்றும் இல்லை' என்றாள். 'வீடு திரும்ப ஆசைதானே?' 'ஆசையில்லாமல்?' என்றாள். 'அதிக நாளாவதற்குள் போய் விடுவாய். ஏற்பாடு செய்கிறேன் இங்கர்' என்றேன். இது நிச்சயம் ஐஸக்—உன் இங்கர் மிகவும் நல்லவள். அவள் அழவில்லை. கூத்தடிக்கவில்லை. புன்சிரிப்புடன் இருக்கிறாள். எல்லோரும் அவளைப்பற்றித் திருப்தியாகச் சொன்னார்கள். தவிரவும் அவள் மேலுதட்டில் இப்போது பிளவில்லை. அதை ஆபரேஷன் செய்து

சரிப்படுத்தி விட்டார்கள். தைத்து விட்டார்கள். 'வருகிறேன்' என்றும் 'சீக்கிரமே வீடு போகலாம்' என்றும் அவளிடம் சொல்லிவிட்டு வந்தேன்.

"அதற்குப் பிறகு சிறை அதிகாரியைப் போய்ப் பார்த்தேன்—அதிலும் எனக்கு ஒரு சிரமமும் இல்லை. 'இங்கே உன் சிறையில் ஒருத்தி இருக்கிறாள். அவள் சிறையில் இருப்பது தவறு. அவள் வீடு போகவேண்டும். அவள் பெயர் இங்கர் ஸெல்லன்ரா' என்றேன். அவன் சொன்னான்: 'ஆமாம். இங்கர் இங்கிருக்கிறாள். மிகவும் நல்லவள். அவளை இங்கேயே இருபது வருஷங்கள் வைத்திருந்தாலும் எனக்குத் திருப்திதான்.' 'இருபது வருஷங்கள் வைத்திருப்பது உன்னால் முடியாது! இத்தனை நாள் அவள் இருந்ததே பிசகு' என்றேன். 'அப்படியா? எதற்காக அவள் சிறைப்பட்டிருக்கிறாள்? தெரியுமோ' என்றான் சிறை அதிகாரி. 'அந்தப் பக்கத்துக் கிராமதிகாரி லென்ஸ்மாண்டு நான். எனக்கு விஷயம் தெரியும்' என்றேன். 'ஓ! அப்படியா; உட்கார்' என்று சொன்னான். அதிகாரியை நிற்கவைத்துப் பேசலாமா? சிறை அதிகாரி சொன்னான்: 'அவளுக்கும் அவளுடைய சிறு பெண்ணுக்கும் எங்களாலான உதவிகளை எல்லாம் செய்கிறோம். உன் கிராமத்தைச் சேர்ந்தவளா அவள்? அவளுக்கு ஒரு தையல் மெஷின் வாங்கித் தந்திருக்கிறோம்; வேலைக் காலங்களிலெல்லாம் வேலை செய்து உச்சியை எட்டிவிட்டாள் அவள். எத்தனையோ கற்றுக்கொண்டுவிட்டாள்; நெசவு, வீட்டுவேலை, சாயம்போடுவது, தையல் எல்லாம். அதிக நாள் இருந்து விட்டாள் என்கிறாயே!' அதற்குப் பதில் தர எனக்குத் தெரியாதா? சமயம் வரட்டும் என்று காத்திருந்தேன். விசாரணை சரிவர நடைபெறவில்லை என்றும் மறுபடியும் விசாரணைக்குக் கொண்டுவரவேண்டும் என்றும் சொன்னேன். அவளுக்குத் தண்டனை விதித்ததே பிசகு என்றேன். முயலைப் பற்றி அவனிடம் சொன்னேன். 'முயலா?' என்றான் சிறை அதிகாரி. 'ஆமாம். முயலைப் பார்த்தால் பிறக்கிற குழந்தையின் மேலுதடு பிளந்திருக்கும் என்று ஒரு நம்பிக்கை' என்றேன். 'அசட்டு நம்பிக்கை' என்றான். 'அசட்டு நம்பிக்கையோ குருட்டு நம்பிக்கையோ! பிறந்த குழந்தையின் மேலுதடு பிளந்திருந்தது. அதைப்பற்றி விசாரணையில் வெளிவரவேயில்லை!' 'இந்த அசட்டு நம்பிக்கைகளில்...' 'அது எப்படியானால் என்ன? அவள் கர்ப்பமாக இருந்தாள் முயலைப் பார்த்தாள். குழந்தை மேலுதடு பிளந்திருந்தது. அவள் மேலுதடும் பிளந்த மேலுதடு. அது காரண

மாக அவள் குழந்தையைக் கொன்றுவிட்டாள்' என்றேன். இதைப்பற்றிச் சிறிது நேரம் யோசித்தான் சிறையதிகாரி. பிறகு 'அது வெளிவந்திருந்தால் அவளை விட்டிருந்தாலும் விட்டிருக்கலாம். ஆனால் அதுபற்றி எல்லாம் எங்களுக்கென்ன கவலை? இங்கு தண்டிக்க அனுப்புகிறார்கள். இது சிறை. நான் அதிகாரி. தண்டனைக்குத் தக்கபடி நான் அவர்களைக் கவனித்துக் கொள்கிறேன். விசாரணையைப் பற்றி எனக்கென்ன கவலை?'

"அதற்குப் பிறகுதான் நான் முக்கியமான விஷயத்தைச் சொல்ல ஆரம்பித்தேன். 'முதலில் இங்கு சிறையில் அவளை வைக்கும்போதே தவறு நடந்துவிட்டது' என்றேன். 'தவறா? என்ன?' 'தவறுதான். கர்ப்பமாக இருந்தவளை எப்படிச் சிறையில் அடைக்கலாம்!' சிறை அதிகாரி என்னை முறைத்துப் பார்த்தான். 'அது உண்மைதான். ஆனால் அதற்குத் தான் நாங்கள் என்ன செய்வது?' நான் சொன்னேன்: 'சிறையில் அவள் இரண்டு மாசம் இருந்தபிறகு கூட, அவள் நிலைமை தெரிந்தும் கூட, ஏன் அவளை விடுவிக்க ஏற்பாடு செய்யவில்லை!' இது சிறை அதிகாரியின் குற்றம்தான். அவன் முகம் சிவந்தது. ஒரு நிமிஷம் மௌனமாக இருந்தான். 'அவள் சார்பில் மனுச்செய்து கொள்ளப்போகிறாயா?' என்றான். 'ஆமாம்' என்றேன். சிறையில் அவள் எழுதப்படிக்கக் கற்றுக்கொண்டதை எல்லாம் சொன்னான் அவன். நல்ல இடத்தில் அவள் பெண் வளர்ந்துகொண்டிருந்தாள் என்றான். அவளைக் கைதிமாதிரி நடத்தவில்லை என்றான். நானும் பதிலுக்கு ஸெல்லன்ராவைப் பற்றிச் சொன்னேன். வீட்டில் தாயில்லாது வளர்ந்துவரும் இருபிள்ளைகளைப்பற்றிச் சொன்னேன் வீட்டைப் பார்த்துக்கொள்ள வேலைக்காரி தவிர யாருமில்லை என்றேன். 'அவள் கணவனிடமிருந்து மனு எழுதி வாங்கிவந்திருக்கிறேன்' என்றேன். 'மறு விசாரணைக்கு ஒரு மனுவும், மன்னிப்புக்கோறி ஒரு மனுவும் எழுதி வாங்கிவந்திருக்கிறேன். எது உசிதமோ அப்படிச் செய்யலாம்.' 'முதலில் மறுவிசாரணை மனுவைப் பார்க்கலாம்' என்றான் சிறை அதிகாரி. 'சரி, நாளை கொண்டு வருகிறேன்' என்றேன்."

ஐஸக் பதில் சொல்லாமல் கேட்டுக்கொண்டு உட்கார்ந்திருந்தான். ஏதோ தேவலோகத்துக் கதைமாதிரி இருந்தது அது. கெய்ஸ்ஸலரின் வார்த்தைகள் ஒன்றையும் விடாமல் கேட்டான்.

கெய்ஸ்ஸலர் தொடர்ந்து சொன்னான்: "இரவே உட்கார்ந்து ஒரு மனு எழுதினேன். நானே எழுதினேன். ஐஸக் ஸெல்லன்ரா என்று நானே கையெழுத்துப் போட்டேன். சிறையில் இங்கர் கற்றுக்கொண்டதெல்லாம் பற்றி நான் ஒரு வார்த்தையும் எழுதவில்லை— ஒரு வார்த்தைகூட எழுதவில்லை. மறுநாள் அந்தக் கடிதத்துடன் சிறை அதிகாரியிடம் போனேன். 'உட்கார்' என்றான் அவன். எனக்காகக் காத்திருந்தான். அந்த மனுவை ஒரு வார்த்தை விடாமல் படித்துப் பார்த்தான். தலையை ஆட்டிக் கொண்டே படித்தான். கடைசியில் சொன்னான்: 'சரி ரொம்ப சரி. மறு விசாரணை செய்தால் விடுதலை கிடைத்துவிடும். ஆனால்...?' நான் சொன்னேன்: 'இரு, மறு விசாரணைகூட வேண்டாம். மன்னிப்புக்கு ஒரு மனுச் செய்துகொண்டால் தகராறே இராது. சீக்கிரமும் பைசலாகிவிடும்.' 'உண்மைதான். மன்னிப்புக் கோர இடம் இருக்கிறது' என்றான். 'அப்படியானால் மன்னிப்புக்கோரி மனுச்செய்தால் சிறை அதிகாரி அதைச் சிபாரிசு செய்வாரா?' என்று கேட்டான். 'நிச்சயமாகச் சிபாரிசு செய்கிறேன்' என்றான். 'அப்படியானால் ஸெல்லன்ரா சார்பில் உனக்கு என் நன்றிகள்' என்றேன். அவன் சொன்னான்: 'நடந்துபோனதைக் கிளற வேண்டாம். மனுச் செய். நான் சிபாரிசு செய்கிறேன். விடுதலை கிடைக்கும்' என்றான் சிறை அதிகாரி. அவன் பழசைக் கிளற வேண்டாம் என்பதற்குக் காரணம் எனக்குத் தெரியும். ஆனால் இங்கர் விடுதலை அடைந்து விட்டால் சரிதான். மற்றப்படி 'நமக்கென்ன? சரி' என்றேன்.

"நடந்தது அவ்வளவுதான். கதை பூராவும்" என்றான் கெய்ஸ்ஸலர் தன் கடிகாரத்தைப் பார்த்துக்கொண்டே. "நான் வந்த காரியத்தைப் பார்க்கலாம் இனி. மறுபடி வருகிறாயா மலைச் சரிவுக்கு என்னுடன்?"

ஐஸக் மண்ணில் உழைத்து மண்ணே போன்றவன். ஒரு விஷயத்திலிருந்து இன்னொரு விஷயத்திற்கு அவன் மனம் உடனே தாவி விடாது. மனசில் சிந்தனைகளும் ஆனந்தமும் ஏக்கங்களும் இங்கர் என்கிற ஞாபகமும் நிறைந்திருந்தன. இது அது என்று ஒவ்வொன்றாகக் கேள்விகள் கேட்கத் துடித்துக் கொண்டிருந்தான் அவன். மனு மன்னரிடம் போயிருக்கிறதென்றும் வருகிற மாசத்தில் தெரியும் என்றும் விசாரித்து அறிந்து கொண்டான். "எல்லாம் ஆச்சரியம்தான்" என்றான்.

பிறகு குன்றின் சரிவிலே ஏறிச் சென்ருர்கள்—கெய்ஸ்ஸல ருடைய ஆளும், கெய்ஸ்ஸலரும் ஐஸக்கும். பல மணி நேரம் போயிருந்தார்கள். செம்புக் கனிப்பொருள் ஓடிய வழியைத் துருவி. ஆராய்ந்து தனக்கு வேண்டிய நிலத்தைக் காட்டினுன் கெய்ஸ்ஸலர். இங்கும் அங்கும் ஓடினுன். அவன் அசடு அல்ல. கெட்டிக்காரன். சீக்கிரம் முடிவு செய்துவிடுவான்—அவன் முடிவுகள் அசைக்க முடியாதவை.

கனிப்பொருள் கட்டிகளை மீண்டும் சாக்கில் போட்டு நிரப்பிக் கொண்டு வீடு திரும்பினுர்கள். பிறகு கெய்ஸ்ஸலர் எழுத உட்கார்ந்தான். நடு நடுவே பேசிக்கொண்டே எழுதினுன் அவன். "பார் ஐஸக். நீ பணக்காரனுகி விடுவாய்! இந்தத் தடவை முன் பணம் அதிகம் கிடைக்காது. இருநூறு தேலர்தான் என்னுல் தர முடியும்." பிறகு ஏதோ எழுதினுன். "நான் போவதற்குமுன் உன் மாவு மில்லைப் பார்க்கவேண்டும். ஞாபகப்படுத்து" என்ருன். உத்தரத்தில் சிவப்புப் பென்சிலால் போட்டிருந்த சித்திரங்கள் அவன் கண்ணில் பட்டன. "யார் வேலை இது?" என்ருன். எல்யூஸிஸிடம் ஒரு காசைக் கொடுத்தான். "நன்ருகச் சித்திரம் போடுகிருயே!" என்ருன்.

இன்னும் சற்றுநேரம் எழுதினுன். பிறகு நிமிர்ந்து பார்த்தான். "உனக்குப் பக்கத்தில் நிறையப் பண்ணைகள் வந்துவிடும் இனி."

அவனுடன் வந்த ஆள், "இப்பவே சில இருக்கின்றன" என்ருன்.

"ஓஹோ! யார்?"

"அடுத்த பண்ணை ப்ரேடாப்ளிக். அதை வாங்கியது ப்ரேட்."

"சூ! அவன் கிடக்கிருன்" என்ருன் கெய்ஸ்ஸலர் அலக்ஷியமாக.

"வேறு ஒன்றிரண்டு பேர்வழிகளும் வாங்கி யிருக்கிருர்கள்!"

"நிலத்தில் உழைக்கத் தெரிய வேண்டாமா? பார்க்கலாமே!" என்ருன் கெய்ஸ்ஸலர். சிறுவன் ஸிவெர்ட் அவன் கண்ணில் பட்டான். அவனைக் கூப்பிட்டு அவனிடமும் ஒரு காசு கொடுத்தான். கெய்ஸ்ஸலர் அசாதாரணமான மனிதன். அவன் கண்கள் இப்போது சதா சிவந்திருந்தன. கண்ணில் ஏதாவது கோளாறு? அல்லது குடியா? அவனுக்கு எதுவும் குறைகள் இருந்த மாதிரியே தெரியவில்லை. இன்னும் சற்று நேரம் எழுதினுன்.

கடைசியில் எழுதி முடித்தேவிட்டான்.

ஐஸக்கிடம் சொன்னான்: "இதோ பார். திடீரென்று பணக்காரனாகிவிட மாட்டாய் நீ. ஆனால் பிறகு, சுரங்கவேலை தொடங்கியதும், நீ பணக்காரனாகி விடுவாய். உனக்குப் பங்கு கிடைக்கும்படி எழுதியிருக்கிறேன். முதலில் இப்போது உனக்கு இரு நூறு தேலர் தருகிறேன்—விலைக்கு முன் பணமாக."

ஐஸக்குக்கு அதுபற்றி ஒன்றும் புரியவில்லை. இரு நூறு தேலர் கிடைத்தால் அதுவும் ஆச்சரியம்தான்! நியாயமில்லை என்றுகூடத் தோன்றியது. ஐஸக் மனசில் வேறு ஒரு ஞாபகம் வந்தது.

"அவளை மன்னித்து விட்டு விடுவார்களா?"

"யாரை? இங்கரையா? கிராமத்தில் தந்தி இருந்தால் இத்தனை நாள் தெரிந்திருக்கும். நான் ட்ராண்ட்யெம் நகருக்குத் தந்தி அடித்திருக்கிறேன். இத்தனை நாள் விடுதலை செய்திருப்பார்கள்."

ஐஸக்குக்குத் தந்தியைப் பற்றிப் பலர் பேசிக்கொள்வது தவிர வேறு எதுவும் தெரியாது. பூமிக்கு மேலே கால் நட்டு உயரத்தில் கம்பி ஓடியது. அதைப் பார்த்திருக்கிறான். பூமியில் சேற்றில் வேலை செய்யும் அவனுக்கும் தந்திக்கும் என்ன சம்பந்தம்? ஆனால் கவலையுடன் கேட்டான்: "மன்னர் அவளை விடுதலை செய்ய மறுத்துவிட்டால்?"

"மறு விசாரணை கோரி மனுச் செய்யலாம். அது பலிக்கும்."

பிறகு தான் எழுதியதை வாசித்துக் காட்டினான். நிலக் கிரய சாஸனத்தையும் அதன் ஷரத்துக்களையும், கையில் பணம் இரு நூறு தேலர்—செம்பு எடுத்தும் அதில் பங்கு என்று எழுதியிருந்தான். "இங்கே கையெழுத்துப் போடு" என்றான் கெய்ஸ்ஸலர்.

ஐஸக் பதில் சொல்லாமல் கையெழுத்துப் போட்டிருப்பான்—அவனுக்கு எழுதத் தெரியாதே. மரத்தில் தன் பெயரின் முதல் எழுத்தை வெட்டுவான். அவ்வளவுதான். ஆனால் ஒலைன் பார்த்துக்கொண்டு நின்றாள். கையில் அந்த மெல்லிய கனமேயில்லாத பேனாவை வாங்கிக் கொண்டான். மேலும் கீழும் நகர்த்தி ஏதோ எழுதினான். அதுதான் அவன் கையெழுத்து. கீழே அதைப் புரிந்து கொள்ளும்படிக் குறிப்பு எழுதி கெய்ஸ்ஸலர் தன் ஆளிடம் சாட்சி வாங்கிக்கொண்டான்.

முடிந்தது.

ஒலென் இருந்த இடத்திலிருந்து அசையாமல் நின்றாள். இன்னும் என்ன நடக்கிறது என்று பார்க்க வேண்டாமா?

அதட்டலாகவே சொன்னான் ஐஸக்: "சாப்பாடு எடுத்து வை, ஒலென். ஏதோ ஏழையின் உணவு" என்றான் கெய்ஸ்ஸலரிடம்.

"வாசனை ஜமாய்க்கிறதே. நல்ல மச்சமும் மாமிசமும் தானியமும்—இதைவிட வேறு என்ன வேண்டும்? இந்தா உன் பணம்—இருநூறு தேலர்" என்று கெய்ஸ்ஸலர் தன் சட்டைப் பையிலிருந்து தோல் பையை எடுத்து, இரண்டு கட்டு நோட்டுகளைக் கொடுத்தான். "எண்ணிப் பார்" என்றான்.

"இது எதற்கு? நீங்கள் எங்களுக்காக எவ்வளவு செய்திருக்கிறீர்கள்!" என்று முணு முணுத்தான் ஐஸக்.

"எடுத்து எண்ணி வை. எண்ணி வை. சுரங்க வேலை ஆரம்பித்தால் இன்னும் நூறு மடங்கு கிடைக்கும்."

பிறகுதான் ஒலென் அங்கிருந்து நகர்ந்தாள். ஐஸக்குக்குக் கையெழுத்துகூடப் போடத் தெரியுமா? உணவு எடுத்து வைத்தாள்.

மறுநாள் காலையில் கெய்ஸ்ஸலர் ஆற்றோரமாக இருந்த மாவு மில்லைப் போய்ப் பார்த்தான். சிறிய மில்தான். உள்ளே போவதற்குக் குனிந்து வணங்கிப் போக வேண்டியிருந்தது. பொம்மை மில் மாதிரி இருந்தது. ஆனால் மாவு அறைக்கும்—அதுதானே வேண்டியது?

"ஒரு குறைதான் எனக்கு. குழந்தைகள் பள்ளிக்கூடம் போக முடியவில்லை. அவர்களைக் கிராமத்தில் விட்டு வைக்க வேண்டியதுதான்." ஆனால் கெய்ஸ்ஸலர் சொன்னான்: "கவலைப் படாதே! சுற்றிலும் பண்ணைகள் வளருகின்றன. பல பண்ணைகள் வந்து விட்டால் தானாகவே பள்ளிக்கூடமும் போட்டு விடுவார்கள் சமீபத்திலே" என்றான்.

"அதற்குள் என் பையன்கள் பெரியவர்களாகி விடுவார்கள்."

"அப்படியானால் கிராமத்தில் விட்டு வை. மூன்று வாரம் நாலு வாரத்துக்கொரு முறை போய் அழைத்து வரலாம். அது சுலபம்தானே!"

"பார்க்கலாம்" என்றான் ஐஸக்.

இங்கர் வந்து விட்டாளானால் எல்லாமே சுலபமாகிவிடும். வீடு, நிலம், உணவு, வேறு என்னவெல்லாமோ இருந்தது. இப்

போது கையில் பணம்கூட இருந்தது. அவனுக்கு உடலில் தெம்பும் இருந்தது. ஒரு ஆண் மகனுக்கு வேண்டிய பலமும் தெம்பும் இருந்தது அவனுக்கு. இங்கர் வந்து விட்டாளானல்......!

கெய்ஸ்ஸலர் போன பிற்பாடு பலவிதமான அசட்டுத் தனமான பெருந்தனமான எண்ணங்கள் தோன்றுகின்றன ஐஸக்குக்கு. கெய்ஸ்ஸலர் அவர்கள் விஷயத்தில் எவ்வளவு அக்கறையுடன் நடந்து கொண்டிருந்தான்! போகும்போது "இன்னும் இரண்டு வாரத்தில் தபாலாபீஸில் போய்ப் பார். நான் விசாரித்துத் தகவல் அனுப்புகிறேன்" என்றான். அதுவே ஆச்சரியம்தான்—ஐஸக்குக்கு ஆனந்தம்தானே! தன் வண்டியிலே உட்காருவதற்கு ஒரு ஆஸனம் தயார் செய்தான். எடுத்துவிடக் கூடிய ஆஸனம்தான். எரு அடிக்க, விறகு எடுக்க வண்டி வேண்டுமே! எடுக்கலாம்—ஆஸனத்தைப் போட்டுச் சவாரி செய்யலாம். வெள்ளை மரத்தாலான அந்த ஆஸனத்துக்கு வர்ணம் அடிக்க வேண்டும். அவன் வீடுகள் பூராவுக்குமே வர்ணம் அடித்தால் நன்றாக இருக்கும். மரம் அறுக்க ஒரு ரம்பம். ஆற்றின் ஜலத்தால் உருளுகிற சாதங்களுடன் போடவேண்டும்—புதுசாகப் பெரிதாக ஒரு களஞ்சியம் வேண்டும். இன்னும் எத்தனை எத்தனையோ செய்வதற்கு இருந்தது. தன் பண்ணையைச் சுற்றி நிரந்தரமான வேலி போட வேண்டும்; இல்லாவிட்டால் பயிர் பச்சைகள் பாழாகிவிடும். மலை மேலிருந்து ஏரியில் மீன் பிடிக்க ஒரு படகு செய்ய வேண்டும். செய்வதற்கா காரியம் இல்லை? போதுதான் போதவில்லை. அவன் திடசித்தத்துடன் திடமாகத் தான் வேலை செய்தான். மீண்டும் ஞாயிறு. வேலை பாதி ஆவதற்குள் மறுபடி ஞாயிற்றுக்கிழமை வந்துவிட்டது. என்ன பண்ணுவது!

எப்படியும் வர்ணம் அடித்து விடுவது என்று தீர்மானித்து விட்டான் அவன். ஏன் இப்படி வர்ணமில்லாமல் எல்லாம் பார்க்க விகாரமாக இருக்கவேண்டும்? நிலத்தில் வேலை தொடங்க இன்னும் நாள் இருந்தது. வஸந்தம் பூரணமாகத் தொடங்கவில்லை. முளைகள் சில கண்டிருந்தன. ஆனல் உறைந்த பனி பூராவும் இன்னும் உருகிவிட வில்லையே!

முட்டைகள் எடுத்துப் போய் கிராமத்தில் விற்கிறன். வரும்போது வர்ணம் வாங்கி வருகிறன். ஒரு கட்டிடத்துக்குப் போதுமான வர்ணம். களஞ்சியத்துக்குச் சிவப்பு வர்ணம் அடித்துவிட்டான். அடுத்த தடவை மஞ்சள் வாங்கி வருகிறன்.

அது வீட்டிற்கு. ஒலேன் முணு முணுக்கிருள்: "ஏது, எல்லாம் பெருந்தனமாக இருக்கிறதே" என்று. ஒலேனுக்குத் தெரியும்— ஸெல்லன்ராவில் தன் நாட்கள் முடிந்து கொண்டிருந்தன என்பது நன்கு தெரியும். கசப்பில்லாமல் அதை அங்கீகரிக்கிருள். முன் போல அவள் செய்வதையோ சொல்வதையோ கண்டிப்பதில்லை ஐஸக்; பழைய திருட்டுகளைப் பற்றிப் பேசுவதுமில்லை. இப்போது அதிகமாகத் திருடி, போகிற நாளில் எடுத்துப் போகப் பத்திரப் படுத்துகிருள்; அதையும்கூட அறியாதவன் மாதிரி இருந்து விடுகிருன் ஐஸக். தாளுகவே அவளுக்கு ஒரு ஆட்டுக் குட்டியை இனமாகக் கொடுக்கிருன். என்ன சொன்னுலும் அவள் வேலையைச் சரிவரச் செய்கிருள். சம்பளமும் சொல்பம்தானே! குழந்தைகளைச் சரிவரத்தான் பார்த்துக் கொள்ளுகிருள் அவள். அவர்கள் சொல்வதைக் கவனியாமல் விட்டு விடுவதில்லை. அவர்களை அதிகமாகக் கண்டிப்பதுமில்லை. தின்ன ஏதாவது கேட்டால், கொடுக்காதிருந்துவிட மாட்டாள். குழந்தைகளை வளர்க்க அறிந்தவள் அவள். சில சமயம் அவர்கள் முகத்தைக் கூடக் கழுவாமல் இருந்துவிடுவாள்—அதனுலென்ன?

ஒரு தரம் அடித்த வர்ணம் போதவில்லை. மறுபடியும் கிராமத் துக்குப் போய், தூக்க முடிந்தமட்டும் வர்ணம் வாங்கிவந்தான். மூன்றுதடவை அடித்தான். ஜன்னல்களுக்கு வெள்ளை வர்ணம் வைத்தான். மலையடிவாரத்திலே அந்த வீடும் கட்டிடங்களும் பார்க்கவே ஆனந்தமாக இருந்தன. கதைக்குப் படம் வரைந்த மாதிரி இருந்தது. காடு திருந்தி நிலமாகி விட்டது. மனிதன் வசிக்கும் இடமாகிவிட்டது. மனிதன் கை பட்டு அழகாகிவிட்டது. கனவு லோகம் அது. குழந்தைகளும் மனிதர்களும் இன்பமாக வசித்தார்கள். காடு கண்ணுக் கெட்டியவரையில், வானம் பூமியைத் தொடாமல், பார்த்துக்கொண்டது. குளுமையாகவும் பசுமையாகவும் இருந்தது.

கடைசி தடவை ஐஸக் வர்ணம் வாங்கப்போனபோது தபாலில் அவனுக்குக் கடிதம் வந்திருந்தது. லென்ஸ்மாண்டு கெய்ஸ்ஸலர் அனுப்பிய தந்தி—அதை நகரத்திலிருந்து கிராமத்துக்குத் தபாலில் அனுப்பியிருந்தார்கள். ஐந்து காசு கொடுத்து வாங்கிக்கொண்டான் ஐஸக். அடாடா! அந்தக் கெய்ஸ்ஸலருக்கு நன்றி பாராட்டுவது எப்படி? தந்தியில் சில வார்த்தைகளே இருந்தன. 'இங்கரை விடுதலை செய்துவிட்டார்கள்; சீக்கிரமே வருவாள்; கெய்ஸ்ஸலர்.' இவ்வளவுதான். திடீரென்று கடை,

உலகம் எல்லாம் சுழல்வதுபோல இருந்தன. "கடவுளே உனக்கு என் நன்றி!" என்று கனவில் பேசுபவன் போலப் பேசினுன் ஐஸக்.

"ட்ராண்ட்யெம் நகரைவிட்டுக் கிளம்பியிருந்தாளானல் நாளைப் படகிலேயே வந்தாலும் வருவாள்" என்ருன் கடைக்காரன்

"ஓஹோ!" என்ருன் ஐஸக்.

மறுநாள் வரையில் கிராமத்திலே காத்திருந்தான். தபால் காரன் தபால் கொணர்ந்தான். ஆனல் இங்கர் அந்தப் படகில் வரவில்லை. "அப்படியானல் அடுத்த படகில் வருவாள். அடுத்த வாரம் வருகிறது படகு" என்ருன் கடைக்காரன்.

நல்லதுதான். அவளை வரவேற்கத் தயாராகுமுன் செய்ய வேண்டியது எத்தனையோ இருந்தது. தன்னை மறக்கலாம்—நிலத்தை மறந்துவிடலாமா அவன்? பண்ணை திரும்பி நிலத்தில் எரு அடிக்கிருன். பனி அநேகமாக மறைந்துவிட்டது. எரு அடிக்கும் காரியம் சீக்கிரமே ஆகிவிடுகிறது. சூரியன் நாள் பூராவும் காய்கிறது—உஷ்ணமாகவும் பளிச்சென்றும் காய்கிறது. காடும் மேடும் எங்கும் திடீரென்று வெண்மை மாறி பச்சைப் பசேலென்று ஆகிவிடுகின்றன. ஆடுமாடுகள் சுயேச்சையாகத் திரிந்து மேய்கின்றன. ஒரு நாள் ஐஸக் உழுகிருன். பிறகு விதை விதைக்கிருன். உருளைக் கிழங்கும் விதைக்கிருன். சிறுவர்கள்—ஹோ—அவர்களும்கூட உருளை விதைக்கிருர்கள்—உழவன் பிள்ளைகள் அல்லவா? எவ்வளவு சிறிய கைகள் அவர்களுடையது! தன் கைகளையும் அவர்கள் கைகளையும் மாறி மாறிப் பார்க்கிருன் ஐஸக்.

பிறகு வண்டியை ஆற்றுக்கு ஓட்டிப் போய், அலம்புகிருன். அதில் ஆஸனத்தை வைத்துக் கொள்கிருன். கொஞ்ச தூரம் போய் வரேன் என்று சிறுவர்களிடம் சொல்லுகிருன். கிராமம் வரையில் போவதாகச் சொல்லுகிருன்.

"நடந்து போகவில்லையோ?"

"இன்று நடக்கவில்லை. குதிரை வண்டியுடன் போகிறேன்."

"நாங்களும் வருகிருேமே!"

"வேண்டாம். நல்ல பசங்களாக வீட்டிலே இருங்கள். அம்மா சீக்கிரமே வரப் போகிருள். வந்து பல விஷயங்களைச் சொல்லித் தருவாள்."

எவ்வளவு கற்றுக்கொள்ள முடியுமோ அவ்வளவும் கற்றுக் கொள்ள ஆசைப்படுகிறுன் எல்யூஸிஸ். அவன் கேட்கிறுன்: "அப்பா, அன்று நீ எழுதினுயே—அப்போது எப்படி இருந்தது?"

"கையில் ஒன்றுமே இல்லாதமாதிரி இருந்தது."

"ஐஸ் கட்டி வழுக்குகிறமாதிரி பேனு வழுக்கவில்லை."

"எது?"

"அந்தப் பேனு? எழுதினுயே பிடித்து—அது."

"பேனுவா? பிடித்துக் கொள்ளக் கற்றுக் கொண்டால் வழுக்காது" என்றுன் ஐஸக்.

சிறுவன் ஸிவெர்ட் இப்படி இல்லை. அவனுக்குப் பேனு, எழுதுவது என்பதெல்லாம் பற்றி அக்கறை கிடையாது. அவனுக்கு வண்டியில் சவாரி செய்ய வேண்டும். வண்டி ஓட்ட வேண்டும். "ட்ரு ட்ரு" என்று குதிரையை ஓட்டவேண்டும். குதிரையில்லாத வண்டியிலேகூட ஏறி உட்கார்ந்துகொண்டு அவன் "ஹை ஹோ" என்று ஓட்டுகிறுன். குதிரையில்லாத வண்டி என்ன வேகமாகப் போகிறது! என்ன ஆனந்தம் ஸிவெர்ட்டுக்கு! பாதையில் கொஞ்ச தூரம் சிறுவர்கள் தன்னுடன் வண்டியில் வருவதற்குச் சம்மதிக்கிறுன் ஐஸக்.

## 11

ஐஸக் குதிரை வண்டியை ஓட்டிக்கொண்டு போகிறுன். வழியில் ஒரு சிறு குளத்தங்கரை வரையில் வண்டியை ஓட்டிக் கொண்டு போகிறுன். நல்ல அழகான குளம் அது. ஜலம் நிர்மலமாக, நிச்சலமாக அலை பாயாமல் இருக்கிறது. அந்த ஏரி ஜலத்தின் உபயோகம் ஐஸக்குக்குத் தெரியும். அவன் வேறு கண்ணுடியில் தன் முகத்தைப் பார்த்துக்கொண்டதே கிடையாது. எப்போதும் ஜலம்தான் அவன் முகம் பார்க்கும் கண்ணுடி. அந்தக் குளத்தில் தன்னைப் பார்த்துக்கொள்ளுகிறுன். சிவப்புச் சட்டையை அணிந்துகொண்டு அவன் நேர்த்தியாகவேதான் இருக்கிறுன். ஒரு கத்திரிக்கோலை எடுத்துத் தன்னுடைய தாடியைக்கத்திரித்து விட்டுக் கொள்கிறுன். அழகாகக் கத்திரித்து விட்டுக் கொள்கிறுன். என்ன தற்பெருமை அவனுக்கு! திடீரென்று அழகனுக ஆகிவிட வேண்டுமென்று ஆசையா அவனுக்கு? ஐந்து வருஷத்து இரும்புக்கம்பி தாடியை அகற்றிவிடுவதாக உத்தேசமா? கண்ணுடியில் தன் பிரதிபிம்பத்தைப் பார்த்துக்

கொண்டு "கரக்கரக்" என்று தாடியை வெட்டி எறிகிறான். இதை வீட்டிலே செய்திருக்கலாம் அவன். ஆனால் ஒலேன் கண்ணெதிரில் தன்னை அழகு படுத்திக்கொள்ள அவனுக்கு வெட்கமாக இருந்தது. அவளுக்கெதிரில் அந்தப் புதுச் சிவப்புச் சட்டையைப் போட்டுக்கொண்டு வரக்கூட அவனுக்கு வெட்கமாகத்தான் இருந்தது. அவன் வெட்டி எறிகிற தாடியில் பாதி அவன் கண்ணாடியாகிய குளத்திலேயே விழுகிறது. குதிரைக்குக்கூட பொறுமை இல்லாமல் போய்விடுகிறது—அது தானாகவே வண்டியை இழுத்துக்கொண்டு நகருகிறது. எப்படி வெட்டினால் என்ன? இருக்கிற அழகுதானே இருக்கும் என்று எழுந்திருக்கிறான் ஐஸக். தன் இளமை திரும்பிவிட்ட மாதிரி ஒரு நினைப்பு அவனுக்கு. அவன் நடை துள்ளுகிறது. ஏன் அது? கடவுளுக்குதான் வெளிச்சம். ஐஸக் வண்டியை ஓட்டிக்கொண்டு கிராமத்துக்குப் போகிறான்.

மறு நாள் தபால் கப்பல் வருகிறது. கடைக்காரனுக்குச் சொந்தமான பகுதியில், கடற் கரையில் ஒரு பெரிய கல்லின்மேல் ஏறி நிற்கிறான் ஐஸக். இங்கரைக் காணவில்லை. யார் யாரோ பிரயாணிகள் இறங்குகிறார்கள். பெரியவர்கள், சிறியவர்கள் எல்லோரும் இறங்குகிறார்கள். கடவுளே—இங்கரைக் காணவில்லை. முன்னால் வந்து தேட மனசில்லாமல் பின் தங்கித் தயங்கி நின்றான் அவன். அவள் வரவில்லை என்று ஏற்பட்டதும் முன்னால் வந்தான். கப்பலண்டையில் போய்ப் பார்த்தான். பீப்பாய்கள், மூட்டைகள், முடிச்சுகள், தபால் பைகள், முன்பின் அவன் பார்த்திராத ஜனங்கள் எல்லாம் இறங்கின—அவன் தேடி வந்த நபரைத் தவிர. அதோ யாரோ ஒரு ஸ்திரீயும் ஒரு குழந்தையும்! அது இங்கர் அல்ல. இங்கரும் அழகுதான் என்றாலும் இவள் அதிரூபவதி. அடாடா! இதென்ன இது! இது இங்கரேதான். "ம்...ம்..." என்றான் ஐஸக். அவர்களைச் சந்திக்கப் போகிறான். ஒருவரை ஒருவர் வரவேற்றுக் கொண்டார்கள். "குட்டே" என்று சொல்லிக் கையைக் கொடுத்தாள் இங்கர். சற்றுக் குளிராக இருந்தது. பிரயாண அலுப்பினால் சற்றே வெளிரிட்டிருந்தாள். வழியில் கப்பலில் அவளுக்குச் சுகவீனம் ஏற்பட்டது. ஐஸக் அங்கே நின்றான்—மரம்போல நின்றான். கடைசியில் சொன்னான்: "நல்ல நாள்தான் இது. நேர்த்தியான நாள்" என்று.

இங்கர் சொன்னாள்: "நீ அங்கு நிற்பதை அப்பவே பார்த்து விட்டேன். ஆனால் விழுந்தடித்துக்கொண்டு வர இஷ்டமில்லாமல்

நின்றேன்—கூட்டம் குறையட்டும் என்று. நீ இன்று கிராமத்துக்கு வந்தாயா?"

"ஆம். ஆம். கிராமத்துக்கு வந்தேன்."

"வீட்டில் எல்லோரும் சௌக்கியம்தானே!"

"சௌக்கியம்தான், கடவுள் புண்ணியத்தில்."

"இதுதான் லெபல்டின். கடலில் கப்பல் பிரயாணத்தை என்னால் ரசிக்கமுடியவில்லை. உடம்பு சரியாக இல்லை. இவளுக்கு இதமாக இருந்தது. இதோ பார் லெபல்டின், இது உன் அப்பா. கை கொடு, கை குலுக்கு. வா"

"ம்...ம்..." என்றான் ஐஸக். விசித்திரமான ஒரு உணர்ச்சி அவன் உள்ளத்திலே ஏற்பட்டது. ஆம். யாரோ அந்நியர்களைச் சந்திப்பது போல இருந்தது.

இங்கர் சொன்னாள்: "கப்பலிலிருந்து தையல் மெஷின் ஒன்று இறக்கியிருப்பார்கள். அது என்னுடையது. அது தவிர பெட்டிகூட ஒன்றிருக்கும்.

அவற்றைத் தேடிக் கொண்டு கிளம்பினான் ஐஸக். சற்று நேரம் வேறு ஏதாவது காரியம் செய்தால் தேவலை போல இருந்தது. பெட்டியைக் கண்டு பிடித்து எடுத்து வந்துவிட்டான். தையல் மெஷினை அவனால் கண்டுபிடிக்க முடியவில்லை. இங்கரே வந்து இது என்று காட்டினாள். அது ஒரு விசித்திரமான உருவம்—வட்டமான மூடி போட்டிருந்தது. பிடிப்பதற்கு ஒரு பிடி இருந்தது—இந்தப் பக்கத்தில் வேறு யாரிடம் தையல் மெஷின் இருந்தது? ஐஸக் பெட்டியையும் தையல் மெஷினையும் தோளில் தூக்கிக் கொண்டான். பிறகு தன் மனைவியையும் குழந்தையையும் பார்த்துச் சொன்னான்: "இவற்றை வண்டியில் வைத்துவிட்டு வந்து பெண்ணைத் தூக்கிக் கொண்டு போகிறேன்" என்றான்.

"யாரை?" என்றாள் இங்கர் ஒரு புன்சிரிப்புடன். "அவளால் நடக்க முடியாதா என்ன? பெரிய பெண்ணில்லையா அவள்?"

குதிரையும் வண்டியும் இருந்த இடத்திற்கு நடந்தார்கள்.

"புதுக் குதிரை—வாங்கினாயா?" என்று விசாரித்தாள் இங்கர். "அதென்ன அது? வண்டியில் உட்கார ஆஸனம்கூட இருக்கிறதே!"

"அவசியம்தானே அதுவும்?" என்றான் ஐஸக். "நான் என்ன சொல்ல வந்தேனென்றால்: ஏதாவது சாப்பிடலாமா? சாப்பாடெல்லாம் கொணர்ந்திருக்கிறேன்."

"கிளம்பலாம். வழியிலே சாப்பிடுவோம்" என்றாள் இங்கர். "லெபல்டின் நீ வண்டியில் தனியாகப் பயப்படாமல் உட்கார்ந்து வருவாயா?"

அவன் அதை அனுமதிக்கவில்லை. விழுந்துவிடுவாள் என்றான். "நீயும் அவளோடு உட்கார்ந்து கொண்டு வண்டியை ஓட்டு" என்றான்.

அப்படியே செய்தார்கள் அவர்கள். ஐஸக் வண்டிக்குப் பின்னால் நடந்து வந்தான்.

நடந்து கொண்டே வண்டியிலிருந்த இருவரையும் கவனித்தான். அது இங்கர். ஆனால் புதுமாதிரியாக ஆடைகள் அணிந்திருந்தாள். பார்ப்பதற்கு அழகியாக இருந்தாள். இப்போது அவள் மேலுதடு பிளவுபட்டில்லை. ஒரே ஒரு சிறிய வடு மட்டும் இருந்தது. அவள் பேசும்போது முன்மாதிரித் தெளிவாக இல்லாமல் இல்லை. இப்போது தெளிவாகப் பேசினாள். அது ஆச்சரியம்தான். கருத்த தலை மயிருக்கு மேல் சிவப்பும் சாம்பல் வர்ணமும் கலந்த ஒரு கம்பளிச் சால்வை அணிந்திருந்தாள். அழகாக இருந்தது. வண்டியில் ஆஸனத்தில் உட்கார்ந்தபடியே திரும்பி அவள் சொன்னாள்: "ஒரு கம்மளிப் போர்வை கொணர்ந்திருந்தால் நன்றாக இருந்திருக்கும். இரவு குழந்தைக்குக் குளிருமே."

"என் சட்டையைப் போட்டுக் கொள்ளட்டும். காட்டில் ஓரிடத்தில் ஒரு போர்வையைப் பதுக்கி வைத்திருக்கிறேன்—வழியில் எடுத்துக் கொள்ளலாம்" என்றான் ஐஸக்.

"ஓ! காட்டில் பதுக்கி வைத்திருக்கிறாயா?"

"ஆமாம். நீ இன்னும் வராவிட்டால், என் போர்வையைப் பார்த்து என்னை எல்லோரும் கேலி செய்வார்களே? அதற்காகக் காட்டில் வைத்து விட்டு வந்தேன்."

"வீட்டில் எல்லோரும் சௌக்கியம் என்றுதானே சொன்னாய்?"

"ஆம். கடவுள் புண்ணியத்தில் எல்லோரும் சௌக்கியமே!"

"பையன்கள் பெரியவர்களாகியிருப்பார்கள்—இல்லையா?"

"ஆம். உண்மைதான். அவர்கள் இப்போதுதான் உருளைக் கிழங்கு விதைத்து முடித்தார்கள்."

"ஓ!" என்றாள் தாய், புன்சிரிப்புடன், தலையை ஆட்டிக் கொண்டு. "அவர்கள் உருளைக்கிழங்கு விதைக்கக்கூடிய அளவுக்குப் பெரியவர்களாகிவிட்டார்களா?"

"அது மட்டுமில்லே. எல்யூஸிஸ் பல விஷயங்களில் எனக்கு உதவி செய்கிருன். ஸிவெர்ட்டும் சோம்பேறியல்ல" என்றுன் ஐஸக் பெருமையாக.

பசிக்கிறது என்கிருள் சிறுமி லெபல்டின். ஓ! அவள் பேசுகிற அழகு! அவள் சீமாட்டிமாதிரி இருக்கிருள். ராகம் போட்டுப் பேசுகிருள் அவள்—அது நகரத்து நாகரிகப் பழக்கம்போலும்! அவள் பேசுவது பாடுவது போல இருக்கிறது. இங்கர் அவள் என்ன சொல்லுகிருள் என்று ஐஸக்குக்குப் புரியும்படியாகப் பிரித்துச் சொல்ல வேண்டியிருந்தது. முகமும் உடலும் நிறமும் அவளுடைய அண்ணன்களேப் போலவே தான், குழந்தைகள் எல்லோருமே தாயைத்தான் கொண்டிருந்தார்கள். இந்தச் சிறுமி யுடன் பேசுவதற்கே வெட்கமாக இருந்தது ஐஸக் என்கிற காட்டாளுக்கு. எவ்வளவு சிறிய பூட்ஸுகள் அணிந்திருந்தாள் அவள்! எவ்வளவு நேர்த்தியான ஸ்டாகிங்ஸ் அணிந்திருந்தாள். சிறிய சட்டை அணிந்திருந்தாள். அப்பாவை வணங்கிக் கை கொடுத்தது எவ்வளவு அழகாக இருந்தது?

காட்டை எட்டியதும், வண்டியை நிறுத்தி இறங்கிச் சாப்பிட்டார்கள். குதிரைக்கும் தீனி வைத்தான் ஐஸக். புல் தரையிலே அங்குமிங்கும் ஓடிக்கொண்டே தின்பண்டங்களேத் தின்ருள் லெபல்டின்.

தன் கணவனேப் பார்த்தபடியே இங்கர் சொன்னுள்: "நீ அப்படியே இருக்கிருய். கொஞ்சம்கூட மாறவில்லே."

ஐஸக் தன் கண்களேத் திருப்பிக்கொண்டான். "அப்படியே இருக்கிறேன் என்ரு நினேக்கிருய்? நீ மாறிவிட்டாய்" என்ருன்.

"ஹா! ஹா! இல்லே. நான் கிழவியாகிவிட்டேன்" என்று சொல்லிச் சிரித்தாள் இங்கர்.

உண்மையை மறைத்து என்ன பயன்? ஐஸக்குக்கு என்னவோ போல இருந்தது. இப்போது எப்படி நடந்துகொள்வது, என்ன சொல்வது, என்ன செய்வது என்று திடமாகத் தெரியவில்லே. தன் தனிமை கலேந்துவிடவில்லே இன்னும் என்று தோன்றியது, வெப்பமாக இருந்தது. தன் காட்டாள்தனத்தைப்பற்றி வெட்க மாக இருந்தது. அவன் மனேவிக்கு இப்போது என்ன வயசிருக்கும்? முப்பதுக்குக் குறையாது! அதாவது முப்பதுக்கு மேலிராது? சாப்பிடுவதை மறந்துவிட்டு வாயில் ஒரு புல்லேவைத்து மென்று தின்ருன்.

"என்ன புல்லுத் தின்கிருயா நீ?" என்று சிரித்தாள் இங்கர். புல்லைப்போட்டுவிட்டு வாயில் தின்பண்டங்களைப் போட்டான். உள்ளே அதிகம் செல்லவில்லை. பாதையில் நின்ற குதிரையண்டை சென்று, அதன் முன்னங்கால்கள் இரண்டையும் பிடித்துத் தூக்கினுன். சர்க்கஸ் குதிரைமாதிரி பின்னங்கால்களால் நின்றது குதிரை. இங்கர் ஆச்சரியத்துடன் பார்த்தாள்.

"எதற்காக அப்படிச் செய்கிருய்?" என்று கேட்டாள்.

"ஓ அந்தக் குதிரை விளையாட்டுக்குதிரை" என்ருன் ஐஸக். அதன் முன்னங்கால்களைத் தரையில் விட்டான்.

எதற்காக அவன் அப்படிச் செய்தான்? யார் கண்டது. ஏதோ செய்யவேண்டுமென்று தோன்றியது—செய்தான். தன் தயக்கத்தையும் வெட்கத்தையும் மறைப்பதற்காகச் செய்தானே?

மீண்டும் கிளம்பினுர்கள். மூவருமே சிறிது தூரம் நடந்தார்கள். புதுப் பண்ணை ஒன்றைப் பார்த்ததும் இங்கர் கேட்டாள்: "இது யார் வீடு? புதுசாக இருக்கிறதே!"

"பிரேடின் பண்ணை. அவன் அதை வாங்கியிருக்கிருன்."

"பிரேடா?"

"அதன் பெயர் ப்ரெடாப்ளிக். நிறைய நிலமும் சதுப்பு நிலமும் இருக்கிறது. மரங்கள் அதிகமில்லை."

புதுப் பண்ணையைப் பற்றிப் பேசிக்கொண்டே அதை தாண்டினுர்கள். ப்ரேடின் வண்டி இன்னமும் திறந்த வெளியில் கிடந்தது என்று கவனித்தான் ஐஸக்.

குழந்தைக்குத் தூக்கம் வந்துவிட்டது. மிருதுவாக அவளைத் தூக்கிக்கொண்டு ஐஸக் நடந்தான். வெகு நேரம் நடந்தார்கள். லெபல்டின் நன்கு தூங்கியதும் இங்கர் சொன்னுள்: "போர்த்தி விட்டு அவளை வண்டியில்விடு. அவள் தூங்கட்டும்."

"வண்டி அவளைப் போட்டு உலுக்கிவிடும்" என்ருன் ஐஸக். அவளைத் தன் கைகளிலேயே தூக்கிக்கொண்டு நடந்து வந்தான். மீண்டும் காட்டை அடைந்ததும் இங்கர் "ட்ரோ" என்று குதிரையை நிறுத்தினுள். குழந்தையைத் தன் கையில் வாங்கிக் கொண்டாள். பெட்டியையும், தையல் மெஷினையும் நகர்த்தி வண்டியில் இடம் பண்ணச் சொன்னுள். வண்டியில் ஆஸனத்துக் கடியில் விட்டால் ஏன் வண்டி உலுக்கும்? குழந்தை ஹாய்யாகத் தூங்கலாமே!

ஐஸக் இடம் பண்ணுகிறான். தன் சட்டையை மடித்து அவளுக்குத் தலையணையாக வைக்கிறான். போர்வையைப் போர்த்து விடுகிறான். மீண்டும் கிளம்புகிறார்கள்.

கணவனும் மனைவியும் அதையும் இதையும் பற்றிப் பேசிக் கொண்டே நடக்கிறார்கள். மாலையில் வெகுநேரம் சூரியன் இருக்கிறது. சற்று உஷ்ணமாகக்கூட இருக்கிறது.

"ஒலைன்—அவள் எங்கே படுத்து உறங்குகிறாள்?"

"சிறிய அறையில்."

"ஓ! பையன்கள்?"

"பெரிய அறையில். அவர்களுக்குத் தனிப் படுக்கை இருக்கிறது. நீ போகும் போது இருந்தமாதிரியே இரண்டு படுக்கைகள் இருக்கின்றன பெரிய அறையில்."

"இப்பொழுது உன்னைப் பார்க்கும்போது தெரிகிறது—நீ முன் இருந்த மாதிரியே இருக்கிறாய்; உன்னுடைய தோளிலே எத்தனை சுமை தூக்கியிருப்பாய்? தூக்கிய சுமையால் உன் தோள் பலஹீனப்பட்டு விடவில்லை. பலம் பெற்றிருப்பது போலவே தோன்றுகிறது" என்றாள் இங்கர்.

"ம்... இருக்கலாம். என்ன சொல்ல வந்தேன் நான்? உன் விஷயத்தைச் சொல்லு. எப்படிக் கழிந்தன உனக்கு இந்த வருஷங்கள்? சகித்துக்கொள்ள முடிந்ததா?" ஓ! ஐஸக்கின் இதயம் இளகியிருக்கிறது. அவளை இப்படிக் கேட்டுவிட்டு, மனசில் சங்கடப்பட்டான்.

இங்கர் சொன்னாள்: "குறைப் படும்படி ஒன்றும் இல்லை."

இருவரும் உணர்ச்சியுடன், ஒரு நெருக்கத்துடன், ஒரு நேசத்துடன் பேசினார்கள். நடப்பது சிரமமாக இருந்தால் அவள் வண்டியில் வரலாமே என்றான் ஐஸக். "வேண்டாம். ஆனால் என்னவோ தெரியவில்லை எனக்கு மீண்டும் பசிக்கிறது" என்றாள் இங்கர்.

"வேண்டுமானால் ஏதாவது சாப்பிடலாமே!"

"சாப்பிடுவோம். காலதாமதமாவது பற்றி உனக்கு வருத்தமில்லையே!"

'ஓ! இங்கருக்குப் பசியா? இல்லவே இல்லை. புல்லைத் தின்றுவிட்டு ஐஸக் இருந்துவிட்டானே—அவன் கொஞ்சம் சாப்பிடட்டும் தன்னுடன்' என்று எண்ணி இப்படிச் சொன்னாள் அவள். வெளிச்சமும் இருந்தது—கதகத வென்றும் இருந்தது.

இன்னும் அதிக தூரம் போக வேண்டியது இல்லை. மீண்டும் உட்கார்ந்து சாப்பிட்டார்கள்.

தன் பெட்டியிலிருந்து ஒருபொட்டலத்தை எடுத்தாள் இங்கர். "பையன்களுக்குச் சில சாமான்கள் கொணர்ந்தேன். அந்தப் புதருக்குள் போய்ப் பார்க்கலாமா? அங்கே இன்னும் கதகதப்பாக இருக்கும்" என்றாள்.

புதருக்குள் போனார்கள். பொட்டலத்தைப் பிரித்துக் காட்டினாள் இங்கர். போட்டுக் கொள்ள பெல்டுகள், எழுதி எழுதி எழுத்தைப் படிய வைக்கக் காபி நோட்டுப் புஸ்தகங்கள், பென்சில்கள், கத்திகள் எல்லாம் வாங்கி வந்திருந்தாள். தனக் கென்று வைத்திருந்த ஒரு புஸ்தகத்தையும் காட்டினாள். "பார், என் பெயர்கூட எழுதியிருக்கிறது. ஒரு பிரார்த்தனை புஸ்தகம் அது." சிறை அதிகாரி ஞாபகார்த்தமாக அவளுக்கு இனாமாகக் கொடுத்தது.

மௌனமாக எல்லாவற்றையும் பார்த்து அனுபவித்து ஆனந் தித்தான் ஐஸக். லெபல்டினுடைய காலர்கள் ஒரு கட்டு எடுத்துக் கட்டினாள். ஒரு கர்சிப் ஒன்றை எடுத்து ஐஸக்குக்குக் கொடுத்தாள் —பட்டுப்போல அது பளபளவென்று வழவழவென்றிருந்தது.

"எனக்கா இது?" என்றான் ஐஸக்.

"ஆம்; உனக்குத்தான்."

தன் கையில் எடுத்துத் தடவித் தடவிப் பார்த்தான்.

"நன்றாக இருக்கிறதா? உனக்குப் பிடிக்கிறதா?"

"பிடிக்கிறதாவா? இதை வைத்துக் கொண்டு உலகம் பூராவும் சுற்றி வரவேண்டும்போல இருக்கிறது எனக்கு."

ஆனால் ஐஸக்கின் விரல்களும் உள்ளங் கையும் காய்ந்திருந் தன. பட்டுத் துணியிலே அவை திக்கின.

இங்கர் கொண்டு வந்திருந்ததைக் காட்டியாகிவிட்டது. வேறு ஒன்றும் இல்லை. மீண்டும் எல்லாவற்றையும் கட்டி வைத்தாகி விட்டது. பிறகும் இருவரும் அங்கிருந்து கிளம்பவில்லை. இங்கர் உட்கார்ந்திருந்த தினுசில் அவள் காலில் அணிந்திருந்த ஸ்டாக்கிங்ஸ் தெரிந்தன. சிவப்புக் கரை போட்ட ஸ்டாக்கிங்ஸ்.

"ம்..." என்றான் ஐஸக். அவை நகரத்துப் பாணி போலும்."

"நான் கம்பளி வாங்கி நெய்தது, நீளமான ஸ்டாக்கிங்ஸ். முழங்காலுக்கும் மேலே போகின்றன. பாரேன்..."

சிறிது நேரம் கழித்து இங்கர் குசுகுசுவென்று தன் கணவனிடம் சொன்னாள்: "ஓ! நீ...நீ! சிறிதும் மாறவில்லை நீ! எப்பொழுதும் போலத்தான் இருக்கிறாய்!"

அதற்குப் பிறகு மீண்டும் வீடு நோக்கிப் பயணத்தைத் தொடங்கினார்கள். இங்கர் வண்டியில் ஆஸனத்தில் உட்கார்ந்து குதிரையை ஓட்டினாள். "ஒரு பை காபிகூட வாங்கி வந்திருக்கிறேன். ஆனால் இன்று காபி போட முடியாது. அதை முதலில் வறுக்க வேண்டும்" என்றாள் இங்கர்.

"காபி எதற்கு? இன்று மாலைப் பொழுதிற்கு வேறு எதுவுமே தேவையில்லை" என்றான் ஐஸக்.

ஒரு மணி நேரம் கழித்து, சூரியன் அஸ்தமிக்கிறது. குளிர ஆரம்பிக்கிறது. இங்கர் இறங்கி நடக்கிறாள். போர்வையை இழுத்து லெபல்டினுக்குப் போர்த்துகிறார்கள். அவள் அப்படி ஆழ்ந்து தூங்குவதைப் பார்த்து இருவரும் புன்சிரிப்புச் சிரிக்கிறார்கள். கணவனும் மனைவியும் பல விஷயங்களைப் பற்றிப் பேசிக்கொண்டே நடக்கிறார்கள். இங்கரின் குரல் இனிமையாக இருக்கிறது. வேறு யாராலும் இப்போது அவள் போலத் தெளிவாகப் பேச முடியாது.

"நம்ம பண்ணையிலே நாலு பசுக்களா இருக்கின்றன?"

"அதிகம் இருக்கின்றன. எட்டு" என்கிறான் ஐஸக் பெருமையாக.

"எட்டு பசுக்களா?"

"அதாவது காளையும் சேர்த்து எட்டு."

"வெண்ணை எடுத்து விற்கிறதுண்டா?"

"உண்டு. கோழி முட்டைகள் கூடக் கிராமத்தில் கொண்டு போய் நான் விற்கிறேன்."

"என்ன, கோழிகள்கூட இருக்கின்றனவா?"

"ம்...... ஒரு பன்றிகூட இருக்கிறது!"

இங்கருக்கு ஆச்சரியம் தாங்கவில்லை. ஒரு நிமிஷம் தன்னை மறந்து "ட்ரோ" என்று சொல்லிக்கொண்டே நின்று விடுகிறாள். ஐஸக்குக்குப் பெருமை தாங்க முடியவில்லை. இன்னும் பல சொல்லி அவளை ஆச்சரியத்தில் மூழ்கடிக்க விரும்புகிறான்.

"அந்தக் கெய்ஸலர்—ஞாபகமிருக்கிறதா அவனை? அவன் சில நாள் முன் வந்தான்."

"ஓ!"

"என்னிடம் ஒரு செம்புச் சுரங்கம் வாங்கினான்."

"என்ன அது? சுரங்கமா?" என்றாள் இங்கர்.

"ஆமாம். மலைச் சரிவிலே செம்பு இருக்கிறதாம். அதற்காகச் சுரங்க வேலை செய்ய என்னிடம் நிலம் வாங்கினான்."

"நீ......அதற்கு உனக்குப் பணம் தந்தானா?"

"ஆமாம். விலை கொடுக்காமல் கெய்ஸ்ஸலர் இதுவரை நம்மிடம் எதையும் பெற்றுக் கொண்டதில்லையே!" என்றான் ஐஸக்.

"எத்தனை கிடைத்தது உனக்கு?"

"ம்......உனக்கு நம்பிக்கை வராது. ஆனால் அவன் எனக்கு இரு நூறு தேலர் கொடுத்தான்."

"இரு நூறு தேலரா? இரு நூறு!" என்று கூவினாள் இங்கர். "ட்ரோ" என்று மீண்டும் நின்றுவிட்டாள்.

"இரு நூறு தேலர் கொடுத்தான். நம் பண்ணை நிலத்தை சர்க்காருக்கு முழுப் பணத்தையும் தந்து நான் வாங்கி விட்டேன். நிலம் இனி நம்முடையதேதான்."

"சரிதான். நீ சாதித்துள்ள காரியங்கள் மகத்தானவை, ஆச்சரியமானவை."

இங்கருடைய ஆச்சரியமும் ஆனந்தமும் உண்மையிலே ஐஸக்குக்குத் திருப்தி யளித்தன. அவளுக்காகத்தானே அவன் பாடுபட்டதெல்லாம்! அவள் பணக்காரி. அத்துடன் நிறுத்தாமல் ஐஸக் மறக்காமல் சொன்னான்: தான் யாருக்கும் எதற்கும் பாக்கி தர வேண்டியதே கிடையாது என்று சொன்னான். கெய்ஸ்ஸலரின் இரு நூறு தேலருடன் அவன் சேர்த்த பணம் ஒரு நூற்று அறுபது தேலரும் பத்திரமாக இருந்தது. "கடவுளுக்கு என் நன்றி" என்றான் ஐஸக்.

மீண்டும் இருவரும் கெய்ஸ்ஸலரைப் பற்றிப் பேசினார்கள். தனக்கு விடுதலை கிடைக்க அவன் கஷ்டப்பட்டுச் செய்த காரியங்களை எல்லாம் சொன்னாள் இங்கர். எல்லாம் சுலபமாக முடிந்துவிட்டது போலக் கெய்ஸ்ஸலர் பேசினானே தவிர, மிகவும் சிரமப்பட்டுத்தான் அந்தக் காரியத்தைச் சாதித்திருந்தான். ரொம்ப நாள் பிடித்தது. சிறை அதிகாரியை அடிக்கடி சந்தித்துப் பேசி சாமர்த்தியமாக முடித்தான். வேறு பல அதிகாரிகளுக்கும் எழுதி எழுதித்தான் முடிந்தது அது. ஏதோ அவன் ஏமாற்றிவிட்டான் என்று சிறை அதிகாரிக்கும்கூடக் கோபம்தானாம். ஆனால் கெய்ஸ்ஸலர் அதற்கெல்லாம் மிரண்டுவிடுகிறவன் அல்ல.

மறு விசாரணை, அநியாயம், கர்ப்பிணி என்றெல்லாம் கெய்ஸ்ஸலர் கூக்குரல் போட்டான். மன்னர் மன்னிப்பு மனுவை அங்கீகரிக்க வேண்டியதாகி விட்டது.

அவர்களிருவருக்கும் மாஜி லென்ஸ்மாண்டு கெய்ஸ்ஸலர் உறுதியான நண்பனாக உதவியிருந்தான். எதற்காக அவன் இப்படி உதவினான்? காரணம் என்ன? அவர்களுடைய ஏழ்மை மிகுந்த நன்றி தவிர அவர்களால் அவனுக்கென்ன லாபம்? அவர்களுக்குப் புரியவில்லை. நகரில் இங்கர் அவனைச் சந்தித்துப் பேசினாள். ஆனால் தன்னால் அவனைப் புரிந்துகொள்ள முடியவில்லை என்றாள். "இந்தப் பக்கத்திலே நம்மைத் தவிர வேறு யாரைப் பற்றியும் அவனுக்கு நல்ல அபிப்பிராயம் இல்லை. யாரையும் அவனுக்குப் பிடிக்கவில்லை" என்றாள் இங்கர்.

"அப்படிச் சொன்னானா அவன்?"

"ஆம். இந்தக் கிராமத்தாரிடம் அவனுக்குக் கோபம். அவர்களுக்குப் பாடம் கற்பிக்கிறேன் என்று சொன்னான்."

"அப்படியா?"

"அவன் போனதுபற்றி ஊர் ஒரு நாள் வருந்தும் என்று சொன்னான்."

இதற்குள் காட்டைத் தாண்டி அவர்கள் பண்ணையை நெருங்கிவிட்டார்கள். அவர்களுடைய வீடு கண்ணில் பட்டது. முன்னைவிட அதிகமாக பெரிதான கட்டிடங்கள் இருந்தன. எல்லாவற்றிலும் வர்ணம் பளபளத்தது. இங்கருக்கு அந்த இடம் தெரியவேயில்லை—பிரமித்துப் போய் நின்றுவிட்டாள்.

"அது......அதுவா நம் வீடு? அதெல்லா......ம்" என்று தடுமாறினாள்.

சிறுமி லெபல்டின் தூங்கி விழித்துக்கொண்டு விட்டாள். எழுந்து உட்கார்ந்தாள். வண்டியிலிருந்து அவளை இறக்கி விட்டார்கள். அவளும் நடந்து வந்தாள்.

"வீட்டுக்கு வந்தாச்சா?" என்று கேட்டாள் குழந்தை.

"வந்தாச்சு! வீடு அழகாக இல்லை?"

வீட்டு ஓரமாகச் சிறு உருவங்கள் இரண்டு தெரிந்தன. எல்யூஸிஸும், ஸிவெர்ட்டும் அவர்களுடைய வருகையை எதிர் பார்த்துக் காத்திருந்தனர். அவர்கள் இப்போது ஓடி வந்தார்கள். திடீரென்று இங்கருக்குக் குளிரத் தொடங்கிவிட்டது. நடுக்கிற்று. குரல் கம்மிற்று. கண்களில் ஜலம் நிறைந்துவிட்டது. இருமினாள்.

கப்பல் பயணம் அவளுக்கு ஒத்துக்கொள்ளவேயில்லை! கண்ணில் தண்ணியாகக் கொட்டியது இங்கருக்கு.

ஆனால் பையன்கள் அருகில் வந்ததும் தயங்கி நின்று எல்லோரையும் முறைத்துப் பார்த்தார்கள். அவர்களுக்குத் தங்கள் தாயார் எப்படியிருப்பாள் என்பது மறந்தேபோய்விட்டது. லெபல்டினை அவர்கள் பார்த்ததேயில்லை. ஆனால் அப்பா—அவன் கிட்டவந்த பிறகுகூட அவர்களுக்கு அடையாளம் தெரியவில்லை. அப்பாவுடைய அடர்ந்த தாடி எங்கே?

## 12

இப்போது எல்லாம் சரியாகிவிட்டது.

ஐஸக் தானியங்களை விதைக்கிறான். ஏர் பிடித்து உழுகிறான் ரோலர் கட்டைபோட்டு நிலத்தைச் சமப்படுத்துகிறான். சிறுமி லெபல்டின் ரோலர் மேல் உட்கார வேண்டும் என்கிறாள். அவள் ரோலர் பார்த்ததில்லை—அதில் உட்கார முடியாது என்று அவளுக்குத் தெரியாது. அவள் அண்ணன்களுக்குத் தெரியும்.

ஆனால் அப்பாவுக்கு மிக மிகத் திருப்தி. சிறுமி பிரியத்துடன் தன்னை அதற்குள்ளாகவே தேடிக்கொண்டு வருவது ரொம்பவும் திருப்தியாக இருக்கிறது. அவளுடன் பல விஷயங்களைப்பற்றிப் பேசுகிறான். வயலிலே வரப்பிலே சரியாக நடக்கக் கற்றுக் கொடுக்கிறான். பூட்ஸுக்குள் மண் புகுந்துவிடாமல் நடக்கக் கற்றுக் கொடுக்கிறான்.

"ஓ! அதென்ன? இன்று நீலச் சட்டை போட்டிருக்கிறாயா? அடேயப்பா! நீலச் சட்டை; பெல்டு. பாரேன். நீ கப்பலில் வந்தாயே!—அப்போது கப்பல் என்ஜின்களைப் பார்த்தாயோ? பார்த்தாயா? சரி, சரி; அண்ணா எங்கே? அவர்களைப்பிடி. உன்னுடன் விளையாடுவார்கள்."

ஒலைன் போய்விட்டாள். வீட்டிலும் வயலிலும் தன் பழைய வேலைகளைச் செய்யத் தொடங்குகிறாள் இங்கர். சற்று அதிகமாகவே செய்கிறாள். தவிரவும் சுத்தம் சுத்தம் என்று பிராணனை விடுகிறாள். முன்னைக் கிப்போது எல்லாம் மாறிவிட்டது. அவள் நகரத்தவள் ஆகிவிட்டாள் என்று காட்ட விரும்புகிறாள். அவளுடைய சுருசுருப்பு வீட்டிலே செய்த மாறுதல்கள் ஆச்சரியப்படத் தக்கன வாக இருந்தன. பழைய மண் குடிசையின் கண்ணாடி ஜன்னல் களைக் கூடப் பளபளவென்று துடைத்து விட்டாள் அவள்.

மூலையில் பல வருஷங்களாகக் கிடந்த அழுக்குகளெல்லாம் அகற்றப்பட்டன.

இது முதலில் சில நாட்களுக்குத்தான். அதற்குப் பிறகு அவளுடைய சுருசுருப்பு நீடிக்கவில்லை. மாட்டுக் கொட்டிலையும் சாமான்கள் சேகரித்து வைக்கிற கூடத்தையும் சுத்தம் சுத்தம் என்று கூட்டிப் பெருக்கி மாளுமோ! தவிரவும் பொழுதை வீணாக இப்படிக் கழிப்பானேன். லாபகரமான வேலை செய்யத் தெரியும் அவளுக்கு. நகரிலிருந்து இங்கர் பல விஷயங்கள் கற்று வந்திருந் தாள். அவற்றை எல்லாம் உபயோகிக்கலாமே! மீண்டும் நூல் நூற்றாள்; நெய்தாள். முன்னெல்லாம்விட அதிகமாகவும், நேர்த்தி யாகவும் நூற்றாள்—நெய்தாள். ஐஸக்குக்கு என்று அவள் வெகு சீக்கிரமாக நூற்று நெய்வதுபோல இருந்தது. தன் குடியானவக் கணவன் பார்த்து ஆச்சரியப்படுவதற்காக! கை விரல்களை இப்படி லாகவமாக உபயோகிப்பது எப்படி என்று அவனுக்குத் தெரிய வில்லை—சிட்டுகள் பறப்பதுபோல ஜிவ்வென்றுபறந்தன அவள் விரல்கள். பெரிய கைகள்—அதில் அழகான மெல்லிய நீண்ட விரல்கள். ஆனால் பார்த்துக் கொண்டிருக்கும் போதே இங்கர் வேறு வேலைக்குத் தாவி விடுவாள். பொறுமையில்லாதவளாகி விட்டாள் அவள்! நகரத்து அமைதியின்மை அவளைப் பிடித்துக் கொண்டுவிட்டது. வேலையும் நிறைய இருந்தது. அப்பாடா எத்தனை வேலை!

நகரிலிருந்து அவள் பலவிதமான புஷபச் செடிகளும், கொடி களும், விதைகளும், கிழங்குகளும் கொணர்ந்திருந்தாள். அவை யும் உயிருள்ள சிறுவர்கள் தான். நட்டுக் காப்பாற்றிப் பெரிதாக்க வேண்டும். ஜன்னல் படி மிகச் சிறியது. அதில் புஷ்பத் தொட்டி வைக்க முடியாது. தவிரவும் பண்ணையிலே புஷ்பங்கள் வவர்க்கத் தொட்டிகளே இல்லை. தொட்டிகள் வேண்டாம்—மரப் பெட்டிக ளாவது பண்ணவேண்டும். அவளுடைய பெகோனியா, பக்ஸியா, ரோஜாப் பூச்செடிகளுக்கு ஐஸக் மரப் பெட்டிகள் பண்ணித் தர வேண்டும். தவிரவும் அறைக்கு ஒரு ஜன்னல் போதுமா? எப்படிப் போதும்!

"ம்...எனக்கு ஒரு இஸ்திரிப் பெட்டி வேண்டும்" என்றாள் இங்கர். "இஸ்திரிப் பெட்டி யில்லாமல் என்ன செய்வது? ஆடைகள் தைத்தால் அவற்றிற்கு இஸ்திரி போட வேண்டாமா? இஸ்திரிப் பெட்டி யில்லாமல் ஒரு வேலையும் சரிவர நடக்காது."

ஒரு இஸ்திரிப் பெட்டி செய்து வாங்கிக் கொண்ணர்ந்து தருவ தாக ஒப்புக் கொண்டான் ஐஸக். அவன் எதுவும் அவளுக்காகச் செய்யத் தயாராகவேதான் இருந்தான். அவள் கேட்ட தெல்லா வற்றையும் வாங்கித் தரத் தயாராக இருந்தான். இப்போது இங்கரின் தேவைகள் அதிகரித்து விட்டன. அவள் நாகரிக மடைந்து விட்டாள். பல புதுப்புது விஷயங்களைக் கற்றுக் கொண்டு வந்திருந்தாள். இப்போது அவள் பேச்சு தெளிவாகவும் இருந்தது. கிராமத்து மக்கள் பேசுகிற பேச்சு மாதிரியில்லை. ஐஸக்குக்கே புரியாத பல வார்த்தைகளை உபயோகித்தாள் அவள். முன்மாதிரி "சோறு தின்ன வாயேன்" என்று கூப்பிடுவதில்லை அவள். "சாப்பாடு தயார்; சாப்பிடலாமா?" என்று கேட்டாள். முன்னெல்லாம் ஐஸக்கும் "சரி" என்பான், அல்லது "வரேன்" என்பான், அல்லது பதில் சொல்லாமல் இருந்து விடுவான். இப்போது அவனும் நாகரிகமாக "தாங்க்ஸ்" என்கிறான். கெட்டிக் காரனையும் காதல் அசடாக்கிவிடும். ஐஸக் இப்போதெல்லாம் ஒரு காரணமுமில்லாமலே "தாங்க்ஸ், தாங்க்ஸ்" என்று சொல்லிக் கொண்டிருக்கிறான். எல்லாம் மாறிவிட்டன. எல்லாம்—காட்டின் மத்தியிலிருந்த அவனுடைய பண்ணையிலேகூட—எல்லாம் நகர வாசனை பெற்றுவிட்டது. சாப்பிடும்போது எரு என்றால் இங்கர் முகத்தைச் சுளித்தாள். "குழந்தைகளை ஞாபகத்தில் வைத்துக் கொள். காட்டாள் மாதிரிப் பேசி அவர் களுக்குப் பழக்காதே!" என்பாள்.

குழந்தைகளை அவள் மிகவும் ஜாக்கிரதையாகப் போஷித்து வளர்த்தாள். அவர்களுக்குத் தெரியவேண்டிய தெல்லா வற்றையும் கற்பித்தாள். எழுதப் படிக்கச் சொல்லித் தந்தாள். சிறுமி லெபல்டின் தையல் வேலை கற்றுக் கொண்டாள்—பூ நூல் வேலை செய்தாள். பையன்கள் எழுதினார்கள்—கணக்குப் போட்டார்கள். கிராமத்தில் படிக்கப் பள்ளிக்கூடம் போனால் அவர்களை இப்போது சேர்த்துக்கொள்ள மாட்டேன் என்று சொல்ல மாட்டார்கள். எல்யூஸிஸ் படிப்பிலும் எழுத்திலும் கெட்டிக் காரனாக இருக்கிறான்—சட்டென்று பார்த்துக்கொண்டு விடுகிறான். சிறுவன் ஸிவெர்ட் அப்படியில்லை; படிப்பில் கவனம் இல்லை அவனுக்கு. விளையாடுவதிலும் பண்ணை வேலைகளிலும் அவன் கவனம் செல்லுகிறது. அம்மாவுடைய தையல் மெஷினை ஓட விட்டுப் பார்க்கிறான். நாற்காலிகளிலும், மேஜைகளிலும் தன் புதுக் கத்தியால் வெட்டி வடுச் செய்துவிட்டான். கத்தியைப்

பிடுங்கிக்கொண்டு விடுவதாக இங்கர் பயமுறுத்திய பிறகுதான் அவன் கொட்டம் அடங்கியிருக்கிறது.

குழந்தைகளுடன் விளையாட ஆடு மாடுகள் இருக்கின்றன. பன்றி இருக்கிறது. எல்யூஸிஸிடம் அந்த வர்ணப் பென்சில் இன்னமும் இருக்கிறது. அதை அதிகமாக உபயோகிப்பதில்லை அவன். தன் தம்பிக்குக்கூட அவன் அதை அதிகமாகக் கடன் கொடுப்பதில்லை. அப்படியும் சுவர்களிலெல்லாம் பல பல சித்திரங்கள் வரைந்துவிட்டான் அவன். ஸிவெர்ட்தான் சித்திரம் வரைவதில் கெட்டிக்காரன். ஆனால் அவனுக்குப் பென்சிலில் ரேஷன் பங்குதான் உண்டு. ஞாயிற்றுக் கிழமைகளில் ஒரே ஒரு சித்திரம் மட்டும் வரைவதற்கு அவனிடம் பென்சிலைத் தருவான் எல்யூஸிஸ். ஸிவெர்ட்டுக்கு இதுபற்றி ரொம்ப அதிருப்தி. ஆனால் எல்யூஸிஸ் பிடிவாதக்காரன்—அவன் விட்டுக் கொடுக்கவில்லை. பலசாலி அல்ல—ஆனால் அவன் கைகள் நீளமானவை. சண்டையில் அவனுக்கு பதில் சொல்லி ஜயிக்க, ஸிவெர்ட்டால் முடியாது.

ஆனால் அந்த ஸிவெர்ட்! காட்டிலே திரிவான்—பக்ஷிகளின் கூண்டுகளில், மரங்களின் உச்சாணிக் கொம்புகளில், என்னதான் இருக்கிறது என்று பார்ப்பான். காட்டெலி வளையைத் தோண்டி எலி பிடிப்பான். ஆற்றிலே உள்ள பெரிய பெரிய மீன்களைப் பார்த்து வந்து விவரிப்பான். ஆனால் அதில் பாதி வெறும் கற்பனைதான். கருப்பு என்று யாராவது சொன்னால் வெளுப்பு என்பான் ஸிவெர்ட். பூனை குட்டி போட்டபோது, ஸிவெர்ட்தான் அதற்குப் பால் வைத்தான்—பூனை அவனைச் சீறவில்லை. எல்யூஸிஸைப் பயங்கரமாகச் சீறியது. அந்தச் சிறிய பெட்டியிலே எவ்வளவு சுரு சுருப்பாக உயிர் தோன்றி வளர்ந்துகொண்டிருந்தது! அதைப் பார்த்துக்கொண்டு வெகு நேரம் நிற்பான் ஸிவெர்ட்.

கோழிக் குஞ்சுகளையும் அவன் தினம் கவனிப்பான். சேவல்—அது மகாப் பிரபு. அதன் சிறகுகளும் கொண்டையும்—அதன் ராஜ்யத்திலே அது ராஜாதான்! வம்பளந்துகொண்டு கண்டபடி திரிந்த அந்தக் கோழிகள்! மண்ணில் கொத்த அப்படி என்னதான் அகப்படுமோ! ஒவ்வொரு தடவை முட்டையிடும் போதும் அவை என்ன சப்தம் செய்தன!

பெரிய ஆட்டுக்கிடா இருந்தது! முன்னைவிட இப்போது படித்தவன்தான் ஸிவெர்ட். ஆனால் அந்தக் கிடாவுக்கு ரோமன்

நோக்கு இருந்தது என்று சொல்ல அவனுக்கு இன்னமும் வரவில்லை தான். அதனால் என்ன? அதைவிட அதிகமாகவே அவன் அதைப்பற்றிச் சொல்லுவான். குட்டியாக இருந்தது முதல் அதைத் தெரியும் அவனுக்கு. இருவரும் ஒன்றாக வளர்ந்தவர்கள் என்று சொல்லலாம். அது பேசுகிற பேச்சுப் பூராவும் அவனுக்குத் தெரியும். அதை அவன் புரிந்து கொண்டான்—அவன் அண்ணாவைப் புரிந்து கொண்டதுபோல. ஒரு நாள் ஒரு சிறு காரியம் நடந்தது—அது அவன் மனசில் ஏற்பட்ட ஒரு பிரமை. அந்த நிமிஷத்தை, அந்தப் பிரமையை அவன் ஆயுள் பூராவும் மறக்கவில்லை. அந்தக் கிடா புல் மேய்ந்து கொண்டிருந்தது; திடீரென்று தலையைத் தூக்கி எதையோ பார்த்தது. அசை போடக்கூட மறந்துவிட்டுப் பார்த்தது. ஸிவெர்ட்டும் அது பார்த்த பக்கமே பார்த்தான். என்ன இருந்தது? ஒன்றுமில்லை! தனக்குள் ஒரு சொல்ல முடியாத உணர்ச்சி ஊறுவதை உணர்ந்தான் ஸிவெர்ட். "ஈடன் தோட்டம் அதன் கண்ணில் படுகிறது—துயரமற்ற ஆதி மாதா பிதாவின் தோட்டம்" என்று எண்ணினான் ஸிவெர்ட்.

பசுக்கள் இருந்தன. குழந்தைகள் ஒவ்வொருவருக்கும் ஆளுக்கிரண்டு பசுக்கள் என்கிற கணக்கில். பெரிய மிருகங்கள்—சுயேச்சையாக ஓடித்திரியும். ஆனால் கூப்பிட்டால் குழந்தைகள் மாதிரி வந்துவிடும். குழந்தைகள் தட்டிக்கொடுத்தால் அசையாமல், கொம்பைக்கூட ஆட்டாமல் நிற்கும். பன்றியிருந்தது. வெள்ளைப் பன்றி. அதன் நிறத்தைப்பற்றி அதற்கு எவ்வளவு பெருமை! மேலே அழுக்கில்லாமல் நக்கி நக்கிச் சுத்தம் செய்துகொள்ளும். எந்தச் சப்தம் கேட்டாலும் அதன் காதுகள் நிமிர்ந்துவிடும். எப்போது உணவு போட்டலும் அந்தப் பன்றி சாப்பிடத் தயாராக இருந்தது. எவ்வளவு போட்டாலும்—இன்னும் என்று நிமிர்ந்து பார்க்கும்! கிச்சுக்கிச்சு மூட்டினால் ஆனந்தமாக உறுமும். தாடி ஆடு இருந்தது. ஸெல்லன்ராவில் தாடி ஆடு இல்லாத நாளே கிடையாது—குறைந்த பக்ஷம் ஒரு தாடி ஆடாவது இருக்கும். அதைப் பார்த்துக் கொண்டே நாள் பூராவும் இருக்கலாமே! பார்ப்பதற்கே சிரிப்புத்தரக் கூடியது உலகில் வேறு என்ன? அதைக் கவனித்துக்கொள்ள ஆடுகள் ஏராளமாக இருந்தன. பக்ஷபாதமில்லாமல் எல்லாவற்றையும் கவனித்துக்கொள்ளும். ஆனால் சில சமயங்களில் உடல் நலம் இல்லாமல் அலுப்புற்றுப் படுத்துவிடும்! தாடியும் அதுவும்—பெரிய தத்துவஞானி அது.

அப்பா அப்பிரஹாம்தான் அது—தாடியும் அதுவும்! திடீரென்று ஆடுகளை நினைத்துக் கொண்டு எழுந்து ஓடும். அது அருகில் வந்தாலே ஒரு வாசனை வீசும்—புளிச்ச ஏப்பம் மாதிரி.

பண்ணையில் தினசரி வேலைகள் ஒழுங்காக நடைபெறுகின்றன. எப்பவாவது ஒருதரம் யாராவது வழிப்போக்கன் வருகிறுன்: "சௌக்கியமா?" என்று விசாரிக்கிறுன்.

"கடவுள் புண்ணியத்தில் சொக்கியம்தான். தாங்க்ஸ்" என்கிறுன் ஐஸக்.

ஐஸக் உழைக்கிறுன்—இடைவிடாது உழைக்கிறுன். பஞ்சாங்கத்தைப் பார்த்துத்தான் அவன் எல்லாக் காரியங்களையும் செய்கிறுன்—குடியானவனின் பஞ்சாங்கத்தில் மழை வெய்யில் பனி எல்லாம் பற்றிக் குறிப்பிட்டிருக்கிறது. அவன் உழைக்கிறுன். கிராமத்துக்குப் போகும்வழில் நடந்து நடந்து, வண்டி ஓட்டி ஓட்டி, அவன் தடம் ஏற்படுத்திக்கொண்டு விட்டான். வண்டி வேண்டாம் என்று தானே பல தடவை தன் சுமைகளைத் தூக்கிச் செல்கிறுன். தோல்கள், பாலேடைக் கட்டிகள், மரப் பட்டைகள், மர எண்ணெ, பிசின், வெண்ணெ, முட்டைகள்—எல்லாவற்றையும் ஒவ்வொன்ருகத் தயார்செய்து விற்கக் கொண்டுபோகிறுன். விற்று வருகிற பணத்தில் ஒரு பகுதிக்கு அவசியமான சாமான்கள் வாங்கி வருகிறுன். கோடையில் வண்டியில் அதிகம் போவதில்லை. ப்ரேடாப்ளிக் வரை பாதை—அவன் செப்பனிட்ட பாதை—சரியாக இருக்கிறது. அதற்கப்பால் தடம் சரியாக இல்லை. அதைச் சரிப்படுத்த ப்ரேட் ஓல்ஸனும் உதவ வேண்டுமென்று கேட்கிறுன் ஐஸக். சரி என்றுன் ப்ரேட். அவ்வளவுதான். சொல்லுவதுடன் சரி. அவன் எதுவுமே சரிவரச் செய்வதில்லை. ஐஸக் அவனிடம் மீண்டும் போய்க் கேட்க விரும்பவில்லை. முதுகிலே சுமை தூக்கிச் செல்ல அவனுக்குத் தெம்பில்லையா என்ன? "நீ எப்படித்தான் இத்தனையையும் சமாளிக்கிருயோ?" என்கிறுள் இங்கர். ஓ! அவனுல் சமாளிக்கக் கூடாதது என்ன? எதையும் சமாளிப்பான் அவன். அவன் கால் பூட்ஸைப் பாரேன்—ஒரு மாட்டின் முழுத் தோலும் அதில் இருந்தது. போதாததற்கு அதில் செப்பு ஆணிகள் வேறு—அந்தப் பூட்ஸைப் போட்டுக்கொண்டு அவனைத் தவிர வேறு யாரால் நடக்கமுடியும்!

இப்படி ஒரு தரம் கிராமத்திலிருந்து திரும்பி வருகையில் அவன் கண்ணில் பல கூலிகள் வேலை செய்து கொண்டிருப்பது பட்டது. அவர்கள் பள்ளம் வெட்டி, தந்தி மரங்கள் நட்டுக்

கொண்டிருந்தார்கள். வேலை செய்பவர்களில் சிலர் கிராம வாசிகள். ப்ரேட் ஓல்ஸன் பண்ணை வைத்து என்ன பயன்? வயலில் வேலையைக் கவனிக்காமல் அவன் அங்கு நின்று கொண்டிருக்கிறான். ப்ரேட் அப்படிப் பொழுதை வீணாக்கினால், பண்ணை என்னவாகும்?

கூலியாட்களின் தலைவன் ஐஸக்கிடம் பேச்சுக் கொடுக்கிறான். தந்தி மரங்களுக்கு மரம் வேண்டும்—ஐஸக் சில மரங்கள் விலைக்குத் தருவானா? இல்லை என்றான் ஐஸக். நல்ல விலை கிடைக்குமே என்றான் கூலிகளின் தலைவன். இல்லை; தனக்கே போதுமான மரங்கள் இல்லை என்கிறான் ஐஸக். இல்லை என்று சொல்ல ஐஸக் இப்போதெல்லாம் தயங்குவதில்லை. சில மரங்கள் இவர்களுக்கு விற்கலாம்—விற்றால் ஏதாவது சில தேலர்கள் கிடைக்கும். சுலபம்தான். ஆனால் விறகு வேண்டும்; கட்டிடங்கள் இன்னும் கட்ட அவனுக்கே மரம் வேண்டும். என்ஜினியரே வந்து கேட்கிறான். இல்லை என்று சொல்லிவிடுகிறான் ஐஸக்.

"எங்களிடம் மரமில்லாமல் இல்லை. வேண்டியது இருக்கிறது. இங்கு உன்னிடம் வாங்கினால் தூக்குக் கூலி குறையுமே என்கிற தற்காகத்தான் கேட்கிறேன்" என்றான் என்ஜினியர்.

"அது சரி. எனக்கே போதுமான மரங்கள் இல்லையே. நான் மரம் அறுக்க ஏற்பாடு செய்து கொண்டிருக்கிறேன்—இன்னும் இரண்டொரு கட்டிடங்கள் எழுப்பவேண்டும்!" என்றான் ஐஸக்.

ப்ரேட் ஓல்ஸன் குறுக்கிட்டுச் சொன்னான்: "நானாக இருந்தால், ஐஸக், அவர்களுக்கு மரங்களை விற்று விடுவேன்" என்றான்.

பொறுமைசாலிதான் ஐஸக். ப்ரேட்டை நிமிர்ந்து பார்த்து, "நீ விற்று விடுவாய்—தெரிகிறது" என்றான்.

"என்ன? என்னது?"

"நான் நான். நீ நீதான். நான் நீயில்லையே!" என்றான் ஐஸக் தத்துவ தரிசிகளின் பாணியில்.

கூலியாட்களில் சிலர் சிரித்தார்கள். ப்ரேட்டுக்குத் தலை இறங்கிற்று.

இப்படித் தன் பக்கத்துப் பண்ணைக்காரனை மட்டந்தட்ட ஐஸக் முன் வந்ததற்குக் காரணம் இல்லாமல் இல்லை. அன்று தான் பார்த்தான்—ப்ரேடாப்ளிக் பண்ணையில் மடிந்த காதுகளுடன் ஒரு ஆடும் இரண்டு ஆட்டுக் குட்டிகளும் இருந்தன. ஒலைன் எடுத்து விற்றிருப்பாள் அதை! போகட்டும். அவனே வைத்துக்

கொள்ளட்டும். ப்ரேட்டும் அவன் மனைவியும் அதைப் பெருக்கித் தின்று வாழ்ந்து கொழுக்கட்டும். எனக்கென்ன என்று சொல்லிக் கொண்டே மேலே நடந்தான் ஐஸக்.

மாவு மில் மாதிரியே, ஆற்று ஜலத்தில் உருளுகிற சக்கரம் போட்டு மரம் அறுக்கிற யந்திரம் ஒன்றும் நிர்மாணிக்க வேண்டும் என்று ஐஸக்குக்கு வெகு நாட்களாக ஆசை. இப்போதெல்லாம் அவன் மனசில் வேறு யோசனையே இல்லை. போன வருஷமே வளைவான ரம்பம், மற்றும் அவசியமான ஆணிகள், முடிக்கிகள் எல்லாவற்றையும் வாங்கி வைத்து விட்டான். ட்ராண்ட்யெம் நகரிலிருந்து அவனுக்காக வரவழைக்கப்பட்டவை அவை. துருப் பிடிக்காமல் எண்ணெ தடவி ஒரு கொட்டகையில் பத்திரமாக அவை இருந்தன. உத்திரம், கொட்டகை முதலியவற்றிற்கு மரங் களும் தயார்செய்து விட்டான். இஷ்டப்பட்டபோது வேலை தொடங்க லாம். ஆனால் இதுவரை தள்ளிப் போட்டுக் கொண்டு வந்தான். ஏன் தள்ளிப் போட்டுக் கொண்டு வந்தான்? அவன் சோம்பேறி யாகிவிட்டானா? அல்லது வேலையை அவனால் சமாளிக்க முடிய வில்லையா? அவனுக்கே புரியவில்லை. மற்றவர்களுக்குப் புரியலாம். அவனுக்குப் புரியவில்லை. வேலை செய்ய, எந்த வேலையையும் எடுத்து முடிக்க அவன் அஞ்சியதே கிடையாது. இந்த வேலைக்கு மட்டும் அஞ்சுவானேன்! அதைவிடப் பெரிதாக மாவு மில் தனி யாகவே நிர்மாணிக்கவில்லையா? உடல் தெம்பும் மனத் தெம்பும் இல்லாமல் அவன் என்ன செய்வது? வேண்டுமானால் கூலிக்குக் கிராமத்திலிருந்து உதவி கூப்பிட்டு வரலாம். இன்னும் இரண் டொரு நாளில் வேலை தொடங்கி விடுவது என்று தீர்மானிக்கிறான் அவன். இங்கரும் கூட இருந்து உதவுவாள்.

இங்கரிடம் இது பற்றிச் சொன்னான். "ம்...ம்... ஒரு மரம் அறுக்கும் கொட்டகை போட வேண்டும்—ஆற்றோரமாக. உனக்கு ஓய்விருக்கும்போது எனக்குக் கொஞ்சம் உதவி தேவை" என்றான்.

இங்கர் ஒரு நிமிஷம் யோசித்தாள். தயங்கினாள். "ச......ரி... பார்க்கலாமே. முடியுமட்டும் உதவுகிறேன். மரம் அறுக்க ஒரு யந்திரம் போடப் போகிறாயா?"

"ஆம். அதுதான் உத்தேசம். எப்படிச் செய்வது என்று திட்டமிட்டு வைத்திருக்கிறேன்."

"மாவு மில்லைவிட இது சிரமமா?"

"சிரமம்தான். பத்துப் பங்கு சிரமம். மாவு யந்திரம் சுலபம். இதை மிகவும் ஜாக்கிரதையாக அமைக்க வேண்டும். பொருந்தி யிருந்தால்தான் ரம்பம் மரத்தை அறுக்கும்."

"உன்னால் செய்துவிட முடியுமானால் செய்து விடு" என்றாள் இங்கர், அவனால் முடியாது என்று சொல்பவள் போல.

ஐஸக்குக்கு வருத்தம். "பார்க்கலாமே" என்றான் சுருக்கமாக.

"அந்த வேலை தெரிந்த ஆள் யாரையாவது உதவிக்குக் கூப்பிட்டுக் கொள்ளேன்."

"முடியாது."

"உன்னால் சமாளிக்க முடியாது இதை" என்றாள் இங்கர் மறுபடியும்.

தன் தலையைத் தடவினான் ஐஸக்—கரடி தன் முன்னங்கால்களைத் தூக்கி உடம்பைச் சொறிவது போல இருந்தது. "என்னால் முடியாதோ என்று பயம்தான் எனக்கு. அதனால்தான் என்னவெல்லாமோ கற்று வந்திருக்கிறாயே—இதில் எனக்கு உதவி செய் என்று உன்னைக் கூப்பிட்டேன்."

கரடியானால் என்ன? புத்திசாலிக் கரடி. ஆனால் புத்திசாலித்தனமான பேச்சினால் பயன் என்ன? லாபம் இல்லை. இங்கர் தலையை ஆட்டுகிறாள். அனுதாபமில்லாமல் அவனைப் பார்த்து விட்டு முகத்தைத் திருப்பிக் கொள்கிறாள். மரம் அறுக்கும் யந்திரம் பக்கம் அவள் வருவதாக இல்லை.

"சரி. பார்க்கலாம்......" என்றான் ஐஸக்.

"ஏன்! ஆற்றில் நின்று நனைந்து எனக்கு உடம்புக்கு வந்து விடும். இங்கே தைக்க வேண்டியது நிறைய இருக்கிறது. ஆடு மாடுகளைக் கவனிக்க வேண்டாமா? வீட்டைப் பார்த்துக் கொள்ள வேண்டாமா? எனக்கு வேலை நிறைய இருக்கிறதே!"

"நிஜம்தான்" என்றான் ஐஸக்.

ஆற்றில் ஜலத்தில் நிற்கவா அவளை அழைத்தான் ஐஸக்? இல்லை. ஆற்றின் கரையில் கொட்டகைக்கு நாலு கால்களை நிறுத்தவும், குறுக்கு உத்திரங்களைப் போடவும்தான் அவனுக்கு உதவி தேவை. இங்கர்—அவள் என்ன இப்படி மாறிவிட்டாள்? நகரத்தில் வாழ்ந்த வாழ்வு அவள் மனசையே மாற்றிவிட்டதா?

உண்மையில் இங்கர் மாறித்தான் போய்விட்டாள். குடும்பம், பண்ணை பொது நலம் என்கிற ஞாபகங்கள் அவளுக்கு அதிகமில்லை. தன் சொந்த விஷயங்களைப்பற்றி மட்டும்தான் இப்பொழுதெல்லாம் அவளுக்கு ஞாபகம். நூல் நூற்றாள். நெய்தாள். ஆனால் அதெல்லாவற்றையும்விடத் தையல் வேலைதான் அவளுக்கு மிகவும் பிடித்திருந்தது. இஸ்திரிப் பெட்டியும் கருமானிடமிருந்து

செய்து வந்துவிட்டால் தையல் வேலை செய்து சம்பாதிக்கக்கூட அவள் தொடங்கினாலும் தொடங்கி விடுவாள். தைப்பது பெரிய தொழில்தானே! லெபல்டினுக்கு இரண்டு சட்டைகள் தைத்திருந்தாள். அவற்றை ஐஸக் புகழ்ந்தான்—அளவுக்கு மீறியே புகழ்ந்து விட்டான். இதென்ன பிரமாதம்? அதைப் போலப் பன்படங்கு அழகாகத் தைக்கத் தெரியுமே எனக்கு என்றாள் இங்கர்.

"மிகவும் குட்டையாக இருக்கின்றன. முழங்கால் வரையில் கூட வரவில்லையே!" என்றான் ஐஸக்.

"நகரத்துப் பாணி அது. ஆனால் அதைப்பற்றி உனக்கென்ன தெரியும்?" என்றாள் இங்கர்.

அதற்குமேல் எதுவும் பேசக்கூடாது என்று பட்டது ஐஸக்குக்கு. அவளைச் சமாதானப்படுத்த விரும்பினான். இங்கருக்கு என்று கிராமத்திலிருந்து துணி வாங்கி வருவதாகச் சொன்னான். நல்ல துணி வாங்கிவருகிறேன் என்றான்.

"மேலாடைக்கா?" என்றாள் இங்கர்.

"மேலாடையோ எதுவோ? உன்னிஷ்டத்துக்குக் தைத்துக் கொள்"

இங்கர் மேலாடைக்குத் தனக்கு என்ன துணி வேண்டும். எத்தனை வேண்டும் என்று சொன்னாள்.

ஆனால் அந்த மேலாடை தைத்தானதும் அதை என்ன செய்வது? பண்ணையில் போட்டுக்கொண்டு யாருக்குக் காட்டுவது? ஆகவே, பையன்கள் பள்ளிக்கூடத்தில் சேரப் போனபோது அவர்களுடன் இங்கரும் சென்றாள். அந்தப் பயணம் மிகச் சிறிய விஷயம்தான். ஆனால் அதன் விளைவுகள் நீடித்து நின்றன—வடுப்படச் செய்துவிட்ட ஒரு சம்பவம் அது.

முதலில் ப்ரேடாப்ளிக்கைத் தாண்டுகிறபோது, யார் போவது என்று பார்க்க ப்ரேடாப்ளிக் ஸ்திரீயும் அவள் குழந்தைகளும் வெளியே வந்தார்கள். வண்டியில் இங்கரும், பையன்கள் இருவரும் இருந்தார்கள்—ராஜ குடும்பம் மாதிரி. பையன்கள் பள்ளியில் சேரக் கிளம்பியிருந்தார்கள். இங்கர் புது மேலாடை தரித்திருந்தாள்—அமர்க்களமாக. அந்த ப்ரேடாப்ளிக் ஸ்திரீக்குச் சுருக்கென்றது. மேலாடையைப்பற்றி அவளுக்கு அவ்வளவாக ஒன்றுமில்லை. இந்த அசட்டுத்தனம் அவளுக்கு எதற்கு? ஆனால் அவளுக்கும் குழந்தைகள் இருந்தன—பார்ப்ரோ, பெரியபெண்; ஹெல்கே, இரண்டாவது, பிள்ளை; காதரீன் மூன்றாவது—மூன்று

பேருக்கும் பள்ளி சேரும் வயது கடந்துவிட்டது. அவர்களும் பள்ளிக்குப் போனார்கள். ஆனால் காட்டிலே பண்ணைக்கு வந்த பிறகு பள்ளிக்குப் போவது நின்றுவிட்டது. தன் குழந்தைகள் பள்ளிக்கூடம் போகாதது அவள் மனசில் உறுத்தியது.

"பையன்களுக்கு உணவு ஏதாவது தேவையா?" என்று கேட்டாள் அவள்.

"உணவா! இதோ இந்தப் பெட்டியைப்பார். நகரத்திலிருந்து நான் கொணர்ந்த பெட்டி இது. இது நிறைய உணவு இருக்கிறது. இன்னும் எதற்கு?"

"என்னென்ன இருக்கிறது?"

"என்னவா? எல்லாமே இருக்கிறது. இறைச்சி, வெண்ணை, ரொட்டி, பாலேடைக் கட்டி எல்லாம் இருக்கிறது."

"ஸெல்லன்ராவில் உங்களுக்கென்ன குறைச்சல்?" என்று பெருமூச்சுவிட்டாள் அந்த ஸ்திரீ. அவளுடைய குழந்தைகள்—அரை வயிறு தின்று இளைத்து வெளுத்திருந்த குழந்தைகள்—திண்பண்டங்களின் பெயரைக் கேட்டே ஆனந்த மடைந்தன பாவம்! "பையன்கள் எங்கு தங்குவார்கள்?"

"கருமான் வீட்டில்" என்றாள் இங்கர்.

"ஓ! என் குழந்தைகளும் இன்னும் சில நாளில் பள்ளி செல்வார்கள். அவர்கள் லென்ஸ்மாண்டு வீட்டில் தங்குவார்கள்" என்றாள் அந்த ஸ்திரீ.

"அப்படியா?" என்றாள் இங்கர்.

"அல்லது டாக்டர் வீட்டில் தங்குவார்கள். அல்லது மத குருவுடன் தங்குவார்கள். ப்ரேடுக்கு கிராமத்தில் எல்லாரும் நண்பர்கள் தான்."

இங்கர் தன் மேலாடையைச் சரிபடுத்திக் கொண்டாள். உள் பக்கம் இருந்த கறுப்புப் பட்டுத் தெரியும்படியாக இழுத்துவிட்டாள்

"புதுசா இந்த மேலாடை? நகரிலிருந்து கொணர்ந்தாயா?" என்று கேட்டாள் ப்ரேடாப்ளிக் ஸ்திரீ.

"இல்லை. நானே தைத்தேன்."

"அடேயப்பா! ஸெல்லன்ராவில் உள்ள உங்களுக்கு என்ன குறை!" என்று பெருமூச்சு விட்டாள் அந்த ஸ்திரீ.

இங்கருக்குப் பரமதிருப்தி. கிராமத்தில் அவள் அப்படிப் படாடோபமாக வந்தது லென்ஸ்மாண்டு ஹேயர்தாலின் மனைவிக்குப் பிடிக்கவில்லை. அந்த ஸெல்லன்ரா ஸ்திரீக்குத் தன்

இடம், ஸ்திதி மறந்துவிட்டது; சிறைக்குப் போய்விட்டு வந்தவள் என்பதுகூட ஞாபகம் இல்லையே அவளுக்கு! ஐந்து வருஷங்கள் இருந்துமா மறந்துவிடும்! ஆனால் இங்கருடைய மேலாடையைப் பலரும் பார்த்து அதிசயித்தார்கள். கடைக்காரனின் மனைவி, தபாலாபீஸ் அதிகாரியின் மனைவி, கருமானின் மனைவி; எல்லோருமே அந்த மாதிரி ஒரு மேலாடை தங்களுக்கும் வேண்டும் என்றார்கள்—கொஞ்சம் பொறுத்து வாங்குவதாகச் சொன்னார்கள்.

இப்போது குன்றுகளுக் கப்பாலிருந்து இங்கரைப் பார்க்கப் பலர் வந்து போனார்கள். அவளுடைய உறவினர்கள் போலும். ஒலேன் இஷ்டமில்லாமலே ஏதாவது சொல்லியிருப்பாள். இங்கரைப் பார்க்க வந்த ஸ்திரீகள் அவளுடைய உறவினர்கள் பலரைப் பற்றியும் செய்திகள் கொணர்ந்தார்கள். அவர்களுக்குக் காபி கொடுத்தாள் இங்கர். இது நியாயம்தானே! தன்னுடைய தையல் மெஷினைக் காட்டினாள். கிராமத்திலிருந்தும், கடற்கடரையிலிருந்தும், பல மைல்களுக் கப்பாலிருந்தும், இங்கரின் உதவியை நாடிச் சிறுமிகள் வந்தார்கள். இலையுதிர் காலம் அது. பணம் சேர்த்து ஆடை தைத்துக்கொள்ள விரும்புகிறார்கள் அந்தச் சிறுமிகள். இங்கர் புத்தி சொல்லி எப்படித் தைப்பது என்று சொல்லுவாளா? நாகரிகமான ஆடைகளைப் பற்றி இங்கருக்குத் தெரிந்தது அந்தப் பக்கத்தில் வேறு யாருக்குத் தெரியும்? சில துணிகளை அவளே வெட்டிக் கொடுத்தாள். இந்த மாதிரித் தன்னைப் பிறர் தேடி வருவது அவளுக்குப் பிடித்திருந்தது—பெருமையாக இருந்தது. சந்தோஷத்துடன் எல்லோருக்கும் உதவினாள் அவள். தவறு செய்யாமல் துணிகளை வெட்டுவாள் அவள். தையல் மெஷினில் சில சமயம் ஆடைகளைத் தைத்தும் தருவாள். லாபத்துக்கா, காசுக்கா செய்தாள்? இல்லை. சிரித்துக்கொண்டே "பொத்தான்களை நீங்களே தைத்துக் கொள்ளுங்கள் இனி" என்று ஆடையைத் தைத்துக் கொடுப்பாள்.

வருஷத்தின் பிற்பகுதியில், கிராமத்தில், இங்கரைக் கூப்பிட்டனுப்பினார்கள்—பணக்காரர்கள் வீட்டில் ஆடை தைத்துத் தர. ஆனால் இங்கரால் போக முடியவில்லை. வீட்டைப் பார்த்துக் கொள்ள வேண்டாமா? ஆடுமாடுகள் என்ன ஆகும்? வேலைக்காரி இல்லையே அவளுக்கு?

என்ன? வேலைக்காரி இல்லையா?

ஐஸக்கிடம் அவள் ஒரு நாள் சொன்னாள்: "எனக்கு உதவி செய்ய வீட்டில் யாராவது இருந்தால், நான் இன்னும் நிறையத் தைக்கலாம்."

ஐஸக்குக்குப் புரியவில்லை. "உதவியா?"

"ஆம். வீட்டு வேலை செய்ய ஒரு வேலைக்காரப் பெண் இருந்தால் தேவலை."

ஐஸக்குக்குத் தூக்கி வாரிப் போட்டது. தன்னுடைய இரும்புக் கம்பித் தாடிக் குள்ளாகவே சிரித்துக் கொண்டான். விளையாட்டு என்று நினைத்தவன் போல "ஆமாம்......ஆமாம். வீட்டு வேலை செய்ய வேலைக்காரி தேவைதான்" என்றான்.

"நகரில் எல்லா வீடுகளிலும் வேலைக்காரி இருக்கிறாள்."

"அப்படியா?" என்றான் ஐஸக்.

தவிரவும், மரம் அறுக்கும் கொட்டகையை நிர்மாணிக்கும் வேலையைத் தொடங்கிவிட்டான் ஐஸக். சிரமமான வேலை. இப்பொழுதெல்லாம் ஐஸக் பொறுமையுடனும் இல்லை—மிருதுவாகவும் இல்லை. கண்டதற்கெல்லாம் உறுமுகிறான். மெதுவாகத்தான் வேலை நடந்தது. ஒரு கையால் உத்திரத்தைத் தாங்கிக் கொண்டு மறுகையால் லைன்பார்த்து, இன்னொரு கையால் ஆணி அடிக்கவேண்டும்—உதவி செய்ய ஆளில்லாமல் வேலை எப்படி நடக்கும்? ஆனால் பள்ளியிலிருந்து சிறுவர்கள் வந்து ஐஸக்குக்கு உதவி செய்தார்கள்—பாவம் குழந்தைகள்! ஸிவெர்ட் நன்றாக ஆணி அடிப்பான். எல்யூஸிஸ் குண்டுபோட்டு லைன்பார்த்தால் பிசகவே பிசகாது. ஒரு வாரத்திற்குள்ளாகவே அஸ்திவாரம் போட்டு, கால்கள் நட்டு, உத்திரங்களையும் இடத்தில் அடித்து விட்டான் ஐஸக்.

எல்லாம் சரியாகவே நடந்தது. எதுவும் சரிவர நடைபெறாமல் இல்லை. எப்படியோ சரிவர நடந்தது. ஆனால் மாலை நேரங்களில், நாள் பூராவும் உழைத்தபிறகு இப்போதெல்லாம் ஐஸக்குக்குக் களைப்பாக இருந்தது. காரணம் தெரியவில்லை. மரம் அறுக்கும் கூடம் மட்டுமா வேலை நடந்தது—தினசரி மற்றக் காரியங்களையும் அவன் கவனிக்காவிட்டால் வேறு யார் கவனிப்பார்கள். வைக்கோல் சேகரித்தான். சேகரித்து முடிந்தது. பயிர் அறுக்கவேண்டும். அறுத்துக் கட்டவேண்டும். பிறகு அடிக்கவேண்டும். உருளைகள் தோண்டிச் சேர்க்கவேண்டும். சீக்கிரமே செய்யவேண்டும். எந்த வேலையிலும் சிறுவர்கள் இருவரும் ஐஸக்குக்கு வெகுவாக உதவினார்கள். அவர்களுக்கு நன்றி கூறவில்லை அவன். ஆனால் அவர்களிடம் அன்பும் திருப்தியும் ஆசையும் வளர்ந்தது அவனுக்கு. வேலையின் மத்தியிலே எல்லாவற்றையும் விட்டுவிட்டு மூவரும் சிறிதுநேரம் பேசுவார்கள். பிறகு என்ன செய்வது என்று

தகப்பன் தன் மக்களைக் கேட்பான். சிறுவர்களுக்குப் பெருமை தந்த சந்தர்ப்பங்கள் அவை. அவர்களுக்கும் தங்கள் தகப்பனிடம் பிரியமும் பெருமையும் வளர்ந்தன—அவர்கள் யோசித்துச் சரியான பதில் தர முயலுவார்கள்.

"இலை யுதிர் கால மழை தொடங்குமுன் மரம் அறுக்கும் யந்திரத்துக் கொட்டகைக்குக் கூரை போட்டுவிடவேண்டும்" என்பான் தகப்பன்.

இங்கரும் முன்போலவே இருந்தாளானல்! இங்கருடைய பலமும் தெம்பும் குறைந்துவிட்டன போலும். நகரத்தில் சிறையில் இருந்த நாட்களில் அவள் பலத்தை இழந்துவிட்டாள். பலம் போனது மட்டுமில்லை அவள் மனம் மாறிவிட்டது.பண்ணை விஷயங்களில் அவளுக்கு இப்போது துளிக்கூட சிரத்தையில்லை. இது இங்கரேதான? இப்படிப் புத்தியில்லாமல், ஆடை துணி என்று காலந் தள்ளிக்கொண்டிருக்கிருளே!

ஒருநாள் தான் கொன்றுவிட்ட அந்தக் குழந்தையைப் பற்றிப் பேசுகிருள்: "நான் முட்டாள். ஏன் கொன்றேன் அதை! ஆபரேஷன் செய்து உதட்டைச் சரிப்படுத்தி யிருக்கலாம்!" என்கிருள். இப்பொழுதெல்லாம் அவள் காட்டிலிருந்த அந்த சிறு சவக் குழியண்டை போய் உட்கார்ந்து அழுவதில்லை. அவளே மண்ணைப் போட்டுக் கையாலே சமப்படுத்தி அந்தச் சிலுவையை வைத்தாளே! இப்போது அந்தப் பக்கம போவதேயில்லை அவள். மாறித்தான் போய்விட்டாள் இங்கர்.

ஆனல் அப்படி மனசில்லாமல், கொடியவளாகி விட்டாள் என்றும் சொல்ல முடியாது. மற்றக் குழந்தைகளை அவள் சரிவரப் பார்த்துக் கொள்ளுகிருள். அவர்களுக்குச் சுத்தமாக இருக்கக் கற்றுக் கொடுக்கிருள். புதுத் துணிகள் தைத்துக் கொடுக்கிருள். இரவு வெகு நேரம் உட்கார்ந்து அவள் அவர்களுடைய துணிகளைச் சரி பார்ப்பாள். அவர்கள் உலகில் முன்னேற வேண்டும் என்று அவள் ஆசைப்பட்டாள்.

பயிர்களை அறுத்துக் கட்டிப் போட்டாகிவிட்டது. உருளைக் கிழங்குகளையும் தோண்டிச் சேர்த்தாகிவிட்டது. அந்த இலையுதிர் காலத்தில் மரம் அறுக்கும் இயந்திர சாலைக்குக் கூரைபோட இயலவில்லை—அது என்ன உயிர் போகிற விஷயமா? அடுத்த கோடையில் பார்த்துக் கொள்ளலாம்—அவசரம் என்ன?

## 13

மாரிக்காலத்து வேலை வழக்கம் போலவேதான். மரத்தை வெட்டிப் பிளப்பது, ஆயுதங்களைச் சரி பார்ப்பது—இவ்வளவுதான். இங்கர் வீட்டைப் பார்த்துக்கொண்டாள். ஒழிந்த நேரங்களில் தையல் வேலை செய்தாள். பையன்கள் கிராமத்திலிருந்தார்கள்—அவர்களுக்கு இப்போது பள்ளிக்கூடம் உண்டு. பனியில் ஸ்கைப் பலகைகளில் மாறி மாறி இஷ்டப்படித் திரிவார்கள். ஒரு ஜோடி ஸ்கைப் பலகைகள்தான் இருந்தன—இருவரும் எப்படியோ சமாளித்தனர். இரண்டாவது ஜோடி வேண்டுமென்று கேட்கவில்லை. மனசில் கல்மிஷமில்லாமல் ஆனந்தமாக இருக்கக் கற்றுக் கொண்டுவிட்ட பையன்கள் கிராமத்திற்குப் போனதும் ஆளுக்கொரு ஜோடி தேவை என்றார்கள். எல்லோரிடமும் ஸ்கைப் பலகை இருந்தது. ப்ரேடாப்ளிக் குழந்தைகளுக்குக்கூட ஆளுக்கொரு ஜோடி இருந்ததாம். எல்யூஸிஸுக்குப் புது ஜோடி பண்ணித் தந்தான் ஐஸக். பழசை ஸிவெர்ட் வைத்துக் கொண்டான்.

ஐஸக் இன்னும் என்னவெல்லாமோ செய்தான். நல்ல துணி உடுத்தியிருந்த பையன்களுக்கு, நல்ல பூட்ஸுகளும் வாங்கித் தந்தான். அதற்குப் பிறகு கடைக்குப் போய் ஒரு மோதிரம் வேண்டும் என்றான்.

"மோதிரமா?" என்றான் கடைக்காரன்.

"கை விரலுக்கு மோதிரம். நான் பணக்காரன் அல்லவா? பெரிய பண்ணைக்காரன் ஆயிற்றே. என் மனைவியின் விரலுக்கு ஒரு மோதிரம் வேண்டும்."

"வெள்ளியா? தங்கமா? அல்லது வெள்ளியில் தங்க முலாம் பூசியதா?"

யோசித்தான் ஐஸக். "வெள்ளி" என்றான்.

கடைக்காரனும் சற்று யோசித்தான். "பார், ஐஸக். உன் மனைவி பெருமையாக அணிந்துகொள்ள வேண்டுமானால், தங்க மோதிரம் வாங்கிக் கொடு. அதுதான் நல்லது" என்றான்.

"தங்கமா?" என்றான் ஐஸக். ஆனால் அவன் மனசில் இருந்ததும் தங்க மோதிரம்தான். தங்கம் என்று சொன்னால் கடைக்காரன் என்ன நினைப்பானோ என்று வெட்கப்பட்டுத்தான் ஐஸக் வெள்ளி என்றான்.

கடைக்காரனும் ஐஸக்கும் அதுபற்றி வெகு நேரம் பேசினார்கள். அளவு கொணர்ந்து தருவதாகச் சொன்னான் ஐஸக். மனைவியிடம் காதல் கொண்டு தங்க மோதிரம் வாங்குகிற அளவுக்குத் தான் போய்விட்டது பற்றி அவனுக்கே ஆச்சரியமாக இருந்தது.

அந்த வருஷம் பனி மற்ற எல்லா வருஷங்களிலும் போலவே விழுந்தது. மறு வருஷ ஆரம்பத்தில் பனி உருகிப் பாதைகள் நேரானதும் பெரிய பெரிய வண்டிகளில் தந்தி மரங்களைத் தூக்கி வந்து நெடுக நட்டார்கள். ப்ரேடாப்ளிக், ஸெல்லன்ரா போன்ற பல பண்ணைகளைத் தாண்டிச் சென்றன அந்த வண்டிகள். ஒன்றன்பின் ஒன்றாகப் பல வண்டிகள் வந்தன. திரும்பிப் போய் மீண்டும் மரங்களுடன் வந்தன. தந்தி மரங்கள் வரிசை முடியும் வரையில் இந்தப் போக்குவரத்து இருந்தது.

வாழ்க்கை இன்று, நாளை என்று ஓடிற்று. அசாதாரண சம்பவம் என்ன நடைபெறக் கூடும்? வஸந்தம் வந்தது. தந்தி மரங்களை நிறுத்தி வைத்து நட்டுக் கெட்டித்தார்கள். ப்ரேட் ஓல்ஸன் அந்த வேலையை மேற்பார்வை பார்த்தான்—வயலில் வேலை செய்வதை விட்டுவிட்டு அதைப் பார்த்தான்—அசடன்! "வயலில் வேலை செய்பவனுக்கு இதற்கெல்லாம் நேரம் ஏது?" என்று எண்ணினான் ஐஸக்.

சாப்பிடவோ தூங்கவோகூட ஐஸக்குக்கு நேரம் இல்லை. ஏராளமான நிலத்தை உழுது பயிர் பண்ணினான் அவன். வேலை நிறையவே இருந்தது.

ஓய்வு கிடைத்த நேரத்தில், மரம் அறுக்கும் யந்திர சாலைக்குக் கூரை போட்டான். யந்திரத்தை மாட்டி ஓட்டத் தயார் செய்தான். பிரமாதமான, நேர்த்தியான கூடம் அல்ல அது. ஆனால் பலமானது. வேலைக்கு லாயக்கானது. காட்டையும் காட்டாளையும் போலப் பிரும்மாண்டமானது. ரம்பம் வேலை செய்தது. மரம் அறுத்தது. கிராமத்தில் கண்ணால் பார்த்து அதன்படியே செய்து யந்திரத்தை மாட்டிவிட்டான் ஐஸக். சிறிய யந்திரம்தான்—ஆனால் ஐஸக்கின் தேவைகளுக்குப் போதுமானது. அவனுக்கு திருப்தி அளித்தது அது. கதவுக்கு மேலே அது கட்டி முடிந்த தேதியை எழுதினான். மரத்தில் தன் பெயரை வெட்டினான்.

அந்தக் கோடையில் ஸெல்லன்ராவில்கூட அசாதாரணமாக ஏதோ ஒன்று நடந்தது.

தந்தி மரங்கள் நட்டுக் கம்பிகள் மாட்டி வேலை செய்த கூலி ஆட்களும் அவர்களின் தலைவனும், சதுப்பு நிலங்களைத் தாண்டி விட்டார்கள்; காடுகளைக் கடந்துவிட்டார்கள்; ஸெல்லன்ராப் பண்ணையை அணுகிவிட்டார்கள். ஒரு கூட்டம் ஒரு நாள் மாலை ஸெல்லன்ராவுக்கு வந்து அங்கு தங்க இடம் கேட்டது. பெரிய கொட்டகையில் தங்க இடம் தந்தான் ஐஸக். நாட்கள் செல்லச் செல்ல, கூட்டம் கூட்டமாக வேலையாட்கள் வந்தார்கள். அவர்கள் ஸெல்லன்ராவிலே தங்குவது என்று ஏற்பட்டது. வேலை தூரத்தில் நடந்தது—ஆனால் ஆட்கள் இரவு படுக்க அங்கு திரும்பிவிடுவார்கள். ஒரு சனிக்கிழமை மாலை அவர்களுக்குக் கூலி தர என்ஜினியர் வந்தான்.

அந்த என்ஜினியரைப் பார்த்ததும் எல்யூஸிஸுக்குப் பயமாகி விட்டது. வர்ணப் பென்சிலைப்பற்றி அவன் கேட்கப் போகிறானோ என்று பயந்து வீட்டை விட்டே வெளியேறிவிட்டான் அவன். என்ன செய்வது? உதவி செய்ய ஸிவெர்ட்டைக்கூடக் காண வில்லையே! தனியாக அந்த என்ஜினியர் முன் நின்று அவன் கேட்கிற கேள்விகளுக்கு எப்படிப் பதில் சொல்வது? திருட்டுத் தனமாக அம்மாவைத் தேடிக்கொண்டு போனான்—ஸிவெர்ட்டைக் கூப்பிடச் சொன்னான். வேறு என்ன பண்ணுவது?

ஸிவெர்ட் அதிகமாகப் பயப்படுவதாகக் காட்டிக்கொள்ள வில்லை. குற்றவாளி அவன் அல்லவே! இருவரும் சிறிது தூரத்தில் போய் உட்கார்ந்து கொண்டார்கள். எல்யூஸிஸ் சொன்னான்: "பென்சிலை நீதான் எடுத்ததாகச் சொல்லேன்."

"நானா?"

"ஆமாம். நீ சின்னவன். உன்னை ஒன்றும் செய்யமாட்டான். என்னை என்ன பண்ணுவானோ? அந்தப் பென்சிலைத் திருடினேன் என்று" என்றான் எல்யூஸிஸ்.

ஸிவெர்ட் சற்றுநேரம் யோசித்தான். தன் அண்ணனின்கஷ்டம் அவனைப் பாதித்தது. தன் உதவி அவனுக்குத் தேவை என்பது பற்றித் திருப்தி அவனுக்கு. "சரி, உனக்கு உதவுகிறேன்" என்றான் பெரியவன் மாதிரி.

எல்யூஸிஸுக்குப் பரம சந்தோஷம். "உனக்கு என் நன்றி!" என்றான். "இந்தப் பென்சில் துண்டை இனி நீயே வைத்துக் கொள்" என்றான். கொடுத்தும் விட்டான்.

இருவரும் சேர்ந்து என்ஜினியரிடம் போவதாக இருந்தார்கள். ஆனால் எல்யூஸிஸுக்கு வேறு வேலை இருந்தது—ஆற்றோரமாக,

மரம் அறுக்கும் மில்லில்! இல்லை மாவு அரைக்கும் மில்லில் வேலை இருந்தது. அவனால் வரக் கூடவில்லை. ஸிவெர்ட் தனியாகத்தான் என்ஜினியரைச் சந்திக்க வேண்டும்.

என்ஜினியர் உட்கார்ந்து ஆட்களுக்கெல்லாம் கூலி தந்தான்—பணமும், காசும், நோட்டுமாக. அது முடிந்ததும் அவன் குடிப்பதற்கு ஒரு சொம்பில் பாலும் ஒரு டம்ளரும் தந்தாள் இங்கர். வந்தனம் செலுத்திவிட்டுப் பால் சாப்பிட்டான் என்ஜினியர். பிறகு சிறிது நேரம் சிறுமி லெபல்டினுடன் பேசினான். அதற்குப் பிறகு சுவரில் எழுதியிருந்த சித்திரங்களைப் பார்த்துவிட்டு, "இதெல்லாம் யார் எழுதியது?" என்று கேட்டான். ஸிவெர்ட்டைப் பார்த்து "இவ்வளவும் உன் வேலைதானா?" என்றான். இங்கர் இவ்வளவு தூரம் தன்னை வர வேற்று உபசரித்தாளே என்பதற்காக, "அழகாகச் சித்திரம் வரைந்திருக்கிறானே பையன்" என்றான். இங்கர் விஷயத்தைச் சொன்னாள்: ஒருவன் மாத்திரம் வரைந்த சித்திரங்கள் அல்ல அவ்வளவும். பையன்கள் இருவரும் மாற்றி மாற்றி வரைந்து தள்ளியவைதான் அவை. அவள் வருகிற வரையில் வீட்டிலே காகிதமேயில்லை. ஆகவே சுவரிலே கிறுக்கித் தள்ளி யிருந்தார்கள். அதை அழித்துவிட அவளுக்கென்னவோ மனசில்லை—இருக்கட்டும் என்று விட்டு விட்டாள்.

"ஏன்—நன்றாக இருக்கின்றன. அப்படியே இருக்கட்டும்" என்றான் என்ஜினியர். "காகிதம் இல்லையா?" ஒரு கத்தை பெரிய காகிதங்களாக எடுத்துக் கொடுத்தான். "நான் மறுபடியும் வருவதற்குள் இந்தக் காகிதங்கள் பூராவும் நிரப்பிவிடு, பார்க்கலாம்" என்றான். பென்சில் இருக்கிறதா என்று விசாரித்தான்.

ஸிவெர்ட் முன்னுக்கு வந்து தன் கையிலிருந்த புழுக்கைப் பென்சிலைக் காட்டினான். பாரேன்—ஆச்சரியத்தை! அந்த என்ஜினியர் புதிய சீவாத ஒரு வர்ணப் பென்சிலை அவனிடம் கொடுத்தான். "ஹா! மறுபடியும் போய்ச் சித்திரம் போடத் தொடங்கு. ஆனால் ஒன்று. குதிரைகளைச் சிவப்புப் பென்சிலால் போடு—ஆடுகளை நீலத்தில் போடு. நான் நீலக் குதிரை பார்த்ததில்லை" என்றான். "நீ பார்த்திருக்கிறாயா?"

என்ஜினியர் போய்விட்டான்.

அன்று மாலையே கிராமத்திலிருந்து ஒரு கூடை நிறையச் சாமான்களை எடுத்துக் கொண்டு ஒருவன் வந்தான்—கூடையில்

பெரும்பகுதி புட்டிகள்தான் இருந்தன. ஆனால் அந்தப் புட்டிகள் வந்த பிறகு அந்த இடத்தில் அமைதி நிலவவில்லை. பாட்டும் கூச்சலும் இரைச்சலும் கேளிக்கையும் பலமாக இருந்தது. ஒவ்வொருவரும் புட்டிகளிலிருந்ததைக் குடித்துக் கொண்டு உரக்கப் பேசினார்கள். ஸெல்லன்ராவில் பாட்டும் கூத்துமாக இருந்தது. இங்கரை நாட்டியமாடக் கூப்பிட்டான் ஒருவன். இங்கர்—ஆனால் அவள் எப்படி எதிர்பார்த்திருக்க முடியும்—சிரித்தாள். அவனைக் கட்டிக் கொண்டு நாட்டியமாடினாள். பிறகு வேறு ஒருவன் கூப்பிட்டான்—அவனுடனும் ஆடினாள். மாலை பூராவுமே பலருடன் நாட்டியமாடினாள் இங்கர்.

இங்கர்—அவள் மனசில் என்ன நினைப்பு இருந்தது? யார் சொல்ல முடியும்? ஆனந்தமாக நாட்டியமாடினாள் அவள். அவள் ஆயுளில் அதுதான் முதல் தடவையோ அவள் நாட்டியமாடுவது? இருக்கலாம். குடித்துவிட்டிருந்த முப்பது ஆண்கள் நான் நீ என்று அவளுடன் நாட்டியமாடப் போட்டி போடுகிறார்கள். தந்தி மரம் நட வந்த அந்தக் கூலியாட்கள் பலசாலிகள்—இங்கருடன் போட்டியிட அங்கு வேறு ஒரு ஸ்திரீயும் இல்லை. நாட்டியமாடினால் என்ன? சின்ன அறையில் படுத்து எல்யூஸிஸும் ஸிவெர்ட்டும் தூங்கிவிட்டார்கள்—அந்தக் கூப்பாடும் பாட்டும் அவர்கள் தூக்கத்தைக் கலைக்கவில்லை. சிறுமி லெபல்டின் மட்டும் ஆச்சரியத்துடன் தன் தாய் நாட்டியமாடுவதைப் பார்த்துக் கொண்டு உட்கார்ந்திருந்தாள்.

இவ்வளவு நேரமும் ஐஸக் எங்கே? அவன் வயலில் வேலை செய்து கொண்டிருந்தான். தூங்குவதற்கு வீடு திரும்பினான்—அவனுக்கும் ஒரு புட்டியைக் கொடுத்தார்கள். கொஞ்சம் சாப்பிட்டான். சிறுமி லெபல்டினை மடியில் வைத்துக் கொண்டு இங்கரும் மற்றவர்களும் நாட்டியமாடுவதைப் பார்த்துக் கொண்டு உட்கார்ந்திருந்தான்.

"தேவலையே இங்கர்! உல்லாசமாக நாட்டியமாடிப் பொழுது போக்குகிறாயே!" என்றான் ஐஸக் கள்ளங் கபடில்லாமல்.

சிறிது நேரத்திற்கெல்லாம் பாட்டு நின்றுவிடுகிறது. நாட்டியமும் முடிந்துவிடுகிறது. வேலையாட்கள் கிளம்புவதற்குத் தயாராகிறார்கள். இரவு உறங்க அவர்கள் பக்கத்துக் கிராமத்துக்குப் போகவேண்டும். மறுநாள் ஞாயிற்றுக்கிழமை—திங்கள் அன்று மீண்டும் அவர்கள் வேலைக்குத் திரும்பவேண்டும். சிறிது நேரத்திற்கெல்லாம் ஸெல்லன்ராவில் மீண்டும் அமைதி நிலவியது.

வேலையாட்களில் வயசானவர்கள் இரண்டுபேர் மட்டும் பின் தங்கினுர்கள்—அவர்களும் களத்தில் படுத்து உறங்கிவிட்டார்கள்.

இரவில் ஐஸக் விழித்துக்கொண்டான். பக்கத்தில் இங்கரைக் காணவில்லை. பசுமாடுகளைப் பார்க்க, வைக்கோல் பிடுங்கிப் போடப் போயிருப்பாளோ! கொட்டிலில் போய்ப் பார்த்தான். "இங்கர்" என்று கூப்பிட்டான். பதில் இல்லை. பசுக்கள் தலையைத் திருப்பி அவனைப் பார்த்தன, சிந்தனை நிறைந்த ஒரு பாவத்துடன். மற்றப்படி எங்கும் எவ்வித சலனமும் இல்லை. வழக்கப்படி ஆடுமாடுகளை எண்ணினுன். இரவுகளில் ஒரு ஆடு வராமல் இருந்துவிடுவதுண்டு. அந்த ஆடு இன்னும் வரவில்லை. அதைத் தேடிக்கொண்டு போயிருப்பாளோ இங்கர்; "இங்கர்" என்று மீண்டும் குரல் கொடுத்தான். பதில் இல்லை. நாட்டியமாட அவளும் கிராமத்துக்குப் போயிருப்பாளோ?

கோடை இரவு வெளிச்சமாகவும் இருந்தது: கதகதப்பாகவும் இருந்தது. வாசற்படியிலே சிறிது நேரம் உட்கார்ந்தான் ஐஸக். சரி, ஆட்டையாவது தேடுவோம் என்று காட்டுக்குக் கிளம்பினுன். அங்கே ஆடு அகப்படவில்லை—இங்கர் அகப்பட்டாள். இங்கரும் இன்னெருவனும்—நெருக்கி அடித்துக்கொண்டு உட்கார்ந்திருந் தார்கள். அவனுடைய குல்லாய் இங்கர் கையில் சுழன்றுகொண் டிருந்தது. இருவரும் சுவாரசியமாகப் பேசிக்கொண்டிருந்தார்கள்—தடிப் பயல். இரவிலும் அவளைத் தேடிக்கொண்டு வந்துவிட்டான்!

ஐஸக் மெதுவாக அவர்களை அணுகினுன். இங்கர் திரும்பி அவனைப்பார்த்தாள். அவமானத்தால் தலை குனிந்தாள். கால்கள் ஜில்லிட்டன. குலை நடுக்கமெடுத்தது. தலையைத் தரைமட்டும் குனிந்துகொண்டாள்.

"ம்...அந்த ஆட்டைக் காணவில்லையே!" என்று கேட்டான் ஐஸக். தொடர்ந்து "ஆனல் அது உனக்கெப்படித் தெரியும்?" என்ருன்.

கையில் தன் குல்லாயை வாங்கிக்கொண்டு அந்த வாலிபக் கூலியாள் எழுந்து மெதுவாக நகர்ந்தான். "நானும் போய் என் சகாக்களுடன் சேர்ந்து கொள்ளுகிறேன். குட் நைட்" என்ருன். அவனுக்கு ஒருவரும் பதில் சொல்லவில்லை.

"இங்கேயா உட்கார்ந்திருக்கிருய் நீ!" என்ருன் ஐஸக். "இன்னும் கொஞ்சநேரம் இருப்பாயோ?" ஐஸக் வீடு நோக்கித் திரும்பினுன். இங்கர் மண்டியிட்டாள். எழுந்தாள். பின்

தொடர்ந்தாள். முதலில் புருஷன் போனான். மனைவி பின் தொடர்ந்தாள்—இரண்டடி பின்னால். வீடு போய்ச் சேர்ந்தார்கள்.

யோசிப்பதற்கு அவகாசம் கிடைத்தது இங்கருக்கு. ஓ! வழியில்லாமலா போய்விடும்? "ஆட்டைத் தேடிக்கொண்டு போனேன்" என்றாள் இங்கர். "அந்தக் கூலியாட்களில் ஒருவன் வந்து அதைத் தேட எனக்கு உதவினான். காலை வலித்ததென்று உட்கார்ந்தோம்—நீயும் வந்துவிட்டாய். இப்போது எங்கே போகிறாய்?"

"நானா? நானே போய்த் தேட உத்தேசித்தேன்."

"வேண்டாம். போய்ப் படுக்கலாம். யாராவது போகவேண்டுமானால் நானே போய்த் தேடுகிறேன். நாள் பூராவும் வேலை செய்திருக்கிறாய்—தூக்கம் சிறிதாவது வேண்டாமா உனக்கு?" என்றாள் இங்கர். "த்விரவும் அந்த ஆடு தானே வந்துவிடும். இந்த மாதிரிப் பல தடவை செய்த ஆடுதானே!"

"ஏதாவது மிருகம் அடித்து விட்டால்?" என்றான் ஐஸக். அதைத் தேடிக்கொண்டு காட்டுக்குள் போகக் கிளம்பினான். இங்கர் அவனைத் துரத்திக்கொண்டு ஓடினாள். "வேண்டாம்! வேண்டாம்! ஆட்டுக்காக இவ்வளவு சிரமம் வேண்டாம்" என்றாள் அவள். "நீ இரவு தூங்கினால்தானே நாளை வேலை நடக்கும்? நான் தேடி வருகிறேன்."

"சரி, போகவில்லை" என்றான் ஐஸக். ஆனால் இங்கர் போவதற்கும் சம்மதிக்கவில்லை அவன். இருவருமே வீட்டுக்குள் போனார்கள்.

குழந்தைகளைப் போய்க் கவனித்தாள் இங்கர். ஏதோ சாதாரணமான ஒரு காரியத்தைச் செய்ய வெளியே போய்விட்டு வந்தவள்போலத் தன் குழந்தைகளைப் போய்க் கவனித்தாள். ஐஸக்கிடம் நெருங்கி நிற்க அவள் முயல்வது போலவும் இருந்தது. எப்போதையும்விடத் தன் கணவன் அன்று தன்னிடம் பக்ஷமாக இருக்கவேண்டும் என்று தெரிவிப்பவள் போல நடந்துகொண்டாள். தான் காட்டில் அந்த வாலிபக் கூலியாளுடன் இருந்ததற்குச் சரியான காரணம் சொல்லிவிட்டாளே! இதற்கு மேலே என்ன? ஆனால் ஐஸக் லேசுப்பட்ட ஆசாமியில்லை. அவன் மனம் இப்படியெல்லாம் திரும்பிவிடாது. அவள் உண்மையிலேயே அதுபற்றி அதிகமாக வருத்தப்பட்டுக் கஷ்டப்பட்டிருந்தாளானால் அவனுக்குத் திருப்தியாக இருந்திருக்கும். செய்ததற்கு அவள் வருந்திய மாதிரியே தெரியவில்லை. கையும் களவுமாக மாட்டிக்கொண்டபோது அவள் ஒரு நிமிஷம் தலை குனிந்தது உண்மை

தான். ஆனால் அது ஒரு நிமிஷம்தானே! அந்த அவமான உணர்ச்சி எவ்வளவு சீக்கிரமே மாறிவிட்டது!

மறுநாள்கூட அவன் மனம் இளகவில்லை. அன்று ஞாயிற்றுக் கிழமை. அன்று வேலை இருக்கிறது என்று மரம் அறுக்கும் மில்லுக்குப் போய்விட்டான். குழந்தைகளை அழைத்துக் கொண்டு வயல்களிலும் வெளியிலும் சுற்றினான். இங்கர் வந்து சேர்ந்து கொள்ள முயற்சித்தபோது ஐஸக் திரும்பினான்: "ஆற்றுப் பக்கம் போகிறேன்" என்றான். "ஏதோ வேலை இருக்கிறது" என்றான். அவன் மனசிலே கலவரமும் கஷ்டமும் நிறைந்திருந்தன. மௌனமாக அதைச் சமாளித்துக் கொண்டான் அவன். ஹா ஹோ என்று ஆர்ப்பாட்டம் செய்துவிடவில்லை. ஐஸக் சாதாரண மனிதனல்ல—அவனிடம் மகத்தானதொரு சக்தியிருக்கிறது! நம்பிக்கை வைத்து மோசம் போனாலும் அவன் இஸ்ரேல் மாதிரி மீண்டும் நம்பத் தயாராக இருக்கிறான்.

திங்கள் அன்று கோபதாபங்கள் அடங்கிவிட்டன. நாட்கள் செல்லச் செல்ல அந்தத் துக்ககரமான சனிக்கிழமை இரவின் நினைவு தேய்ந்துவிட்டது. காலம் ஆற்றாத காயம் ஏது? சாப்பாடும் ஓய்வும் இருந்தால் எதுவுமே சரியாகிவிடும். இன்னும் மோசமாக இருந்திருக்கலாமே நிலைமை! தவறு நடந்துவிட்டது என்று எப்படித் தீர்மானமாக அவன்தான் சொல்ல முடியும்? அதையே பற்றி யோசித்துக் கொண்டிருந்தால் மற்றக் காரியங்களெல்லாம் எப்படி நடக்கும்? அறுவடைக் காலம் நெருங்கிக் கொண்டிருந்தது. கடைசியில் தந்தி மரம் நடுகிற வேலையும் முடிவடைந்து கொண்டிருந்தது—இன்னும் சில நாட்களில் அந்தக் கூலியாட்களும் போய்விடுவார்கள்; அதற்குப் பிறகு ஸெல்லன்ரா பக்கம் வர மாட்டார்கள். ராஜபாட்டை ஒன்று, நேரான தடம், காட்டிலே அமைத்தாகிவிட்டது. காட்டின் இருள் இந்தப் பாதையின் ஓரத்திலே நின்றுவிடுகிறது. தந்திக் கம்பிகள் அந்த மரங்களின் உச்சியிலேயே நெடுந்தூரம் அங்குக்கிங்கு ஓடுகின்றன.

அடுத்த சனிக்கிழமை மாலை. மீண்டும் கூலியாட்களுக்குச் சம்பள தினம். ஐஸக் வீட்டுக்கு இரவு வெகு நேரம் வரை திரும்பவில்லை—அதுதான் நல்லது என்று எண்ணினான் அவன். பாலேடையும் வெண்ணெயும் எடுத்துச் சென்றவன் ஞாயிறன்று மாலைதான் கிராமத்திலிருந்து தன் பண்ணைக்குத் திரும்பினான். கூலியாட்கள் எல்லோரும் போய்விட்டார்கள்—அதாவது அநேகமாக எல்லோரும். ஐஸக் வீட்டிற்குள் போகும்போது

கூலியாட்களில் கடைசி ஆள் களத்திலிருந்து வெளியேறினன். அப்படியும் இன்னும் ஒருவன் இருந்தமாதிரி யிருந்தது. களத்தின் மத்தியிலே இன்னும் ஒரு மூட்டை கிடந்தது. அதன் மேல் ஒரு குல்லாயும் இருந்தது. அதன் சொந்தக்காரன் எங்கே என்று ஐஸக்குக்குத் தெரியவில்லை. தெரிந்துகொள்ள இஷ்டமும் இல்லை அவனுக்கு. அந்தக் குல்லாயைப் பார்த்தான். கோபம் வந்தது அவனுக்கு.

மூட்டையை எடுத்து வெளியே எறிந்தான். அதன் பின் அந்தக் குல்லாவையும் எறிந்தான். கதவைச் சாத்தினன். லாயத்துக்குள் சென்று ஐன்னல் வழியாக வெளியே பார்த்தான். "அந்த மூட்டையும் குல்லாயும் அப்படியே கிடக்கட்டும். யர்ருடையதானல் என்ன? குப்பை கூளத்தோடு சேர்ந்தவன் அவன்! அவனேடு எனக்கென்ன?" என்று எண்ணினனே ஐஸக்? ஆனல் மூட்டையை எடுக்க அதன் சொந்தக்காரன் வரும்போது, ஐஸக் அங்கிருப்பான் — அவன் முதுகில் ஒரு உதை வைத்து வெளியே அனுப்ப. முதுகு நீலம் பாய்ந்துவிடுமே! வெகுநாள் ஞாபகமிருக்கவேண்டும் அவனுக்கு அந்தக் கடைசி மரியாதை!

லாயத்தைவிட்டு மாட்டுக் கொட்டிலுக்குப் போனன் ஐஸக். அந்த ஜன்னல் வழியாகப் பார்த்தான். அங்கேயும் இருப்புக் கொள்ளவில்லை அவனுக்கு. அந்த மூட்டையைக் கயிறு போட்டுக் கட்டிப் பூட்டிவைக்க முடியாத தரித்திரம் போலும் அவன்! கயிறுகூட அவிழ்ந்துவிட்டது—ஐஸக் அதைத் தூக்கிஎறிந்ததால். என்னவானல் என்ன? தான் செய்தது தவறு என்று தோன்றியது ஐஸக்குக்கு! இப்பொழுதுதானே கிராமத்தில் தனது புது ஏரைப் பார்த்துவிட்டு வந்திருந்தான் அவன்! அந்த ஏரும், கலப்பையும் எவ்வளவு அதிசயமான சாமான்கள்—தெய்வமென்று அவற்றைத் தொழ வேண்டாமா? கோபத்துக்கிடம் கொடுத்தால், தெய்வம் பார்த்து அவனையே தண்டித்துவிடும். தெய்வத்தைப் பற்றிக் கவலைப்படாமல் மனிதன் வாழ முடியுமா? அவன் தெய்வத்தையே ஒரு நாள் இரவு நிலவொளியில் ஏர் பிடித்து உழுதுகொண்டிருக்கும்போது கண்டவன். ஆச்சரியமான காட்சி அது! அப்படிப்பட்டவன் இந்தக் காரியம் செய்யலாமா?

ஐஸக் வெளியே போய் அந்த மூட்டை யண்டை நின்ருன். அவனுக்கு இன்னமும் சந்தேகமாகத்தான் இருந்தது. தொப்பியை பின்னுக்குத் தள்ளி முன் தலையைச் சொறிந்துகொண்டான்.

கடவுளாவது ஒண்ணுவது என்று கேட்கிறமாதிரி இருந்தது. இஸ்பானியன் மாதிரிக் காலை அகட்டிக்கொண்டு நின்றான். என்ன நினைத்தான் அவன்! "நான் மனிதனா மிருகமா? கேவலம் நாயா நான்—ஆத்திரங்கொண்டு குலைக்க?" என்று நினைத்தானோ? குனிந்து அவிழ்ந்திருந்த கயிற்றால் மூட்டையை இருகக் கட்டினான். அதையும் குல்லாவையும் தூக்கிப்போய் முன் இருந்த இடத்திலே வைத்தான். ஆகிவிட்டது. திருப்திதான் அவனுக்கு!

களத்திலிருந்து கிளம்பினான். வெளியே நடந்தான். ஆற்றங் கரையிலே யிருந்த மாவு மில்லை நோக்கி நடந்தான்—இதெல்லா வற்றையும் விட்டுவிட்டுத் தனியாக எங்கேயாவது தொலைந்து விட்டால் தேவலைபோலிருந்தது. வீட்டில், ஜன்னலில் இங்கரைக் காணவில்லை. எங்கிருந்தால் என்ன? அவள் படுத்திருப்பாள். படுக்காமல் வேறு என்ன செய்துகொண்டிருப்பாள்! முந்திய நாட்களில், அதாவது அவர்கள் சேர்ந்து வாழ ஆரம்பித்த நாட்களில், அவன் கிராமத்திற்குப் போனால் திரும்பிவரும் இரவில், அவனுக்காக விழித்திருப்பாள் இங்கர். இப்போது அதெல்லாம் மாறிவிட்டது—எல்லா விதங்களிலுமே மாறிவிட்டது. அவன் அவளுக்கென்று ஒரு மோதிரம் வாங்கி வந்தானே—அப்போது என்ன நடந்தது? அது அவனுக்குத் தவிர்க்க முடியாத, மறக்க முடியாத தோல்விதானே! எவ்வளவு பயமாக, தாழ்மையாக, ஆடம்பரமில்லாமல் கொடுத்தான் அதை! தங்க மோதிரம் என்றுகூட அவன் முதலில் சொல்லவில்லை! "ஒன்றும் பெரிதில்லை. போட்டுக்கொள் உன் விரலில்" என்றான்.

"தங்கமா அது?" என்றாள் இங்கர்.

"ஆம். அப்படியொன்றும் அதிகத் தங்கமில்லை. மெல்லிய தாக இருக்கிறது."

"மெல்லிசுதான்" என்றாள் இங்கரும். "அப்படி ஒன்று மெல்லிசு இல்லை" என்று சொல்லியிருக்க வேண்டாமோ அவள்!

"ஏதோ புல் பூண்டுக்குள்ள மதிப்புத் தான். போட்டுக்கோ" என்றான் ஐஸக் வருத்தத்துடன்.

உண்மையில் இந்த மோதிரம் பற்றி இங்கருக்குப் பெருமை தான். வலது கையில் அதை அணிந்திருந்தாள். தையல் வேலை செய்யும் போது அதை அணியாமல் தைக்க உட்காரமாட்டாள். தன்னைத் தேடி வருகிற கிராமத்துப் பெண்மணிகளுக்குக் காட்டு வாள்—சில சமயம் அவர்கள் அணிந்து பார்க்கத் தருவாள்.

அசட்டு ஐஸக்—அவன் மனைவிக்கு அந்த மோதிரம் பற்றி அளவு கடந்த பெருமையிருந்தது என்பது தெரியவில்லையே!

மாவு மில்லில் உட்கார்ந்து அருவியின் சல சலப்பை எவ்வளவு நேரம் கேட்டுக் கொண்டிருப்பது? என்ன காரியம் அது? அசட்டுக் காரியம்! ஐஸக் தவறு செய்தவனில்லையே! எதற்காக அவன் போய் ஒளிந்து கொள்ள வேண்டும்? மாவு மில்லை விட்டுக் கிளம்பி, வயல்களைத் தாண்டி, வீடு வந்து சேர்ந்தான் ஐஸக்.

அவனுக்கே வெறுப்பாக இருந்தது. வீடு போய்ச் சேர்ந்ததும் அவனுக்கு ஆனந்தமாகவும் இருந்தது. வேறு யாரும் இல்லை; ப்ரேட் ஓல்ஸன் தான் உட்கார்ந்திருந்தான்—அடுத்த பண்ணைக் காரன் உட்கார்ந்து காபி சாப்பிட்டுக் கொண்டிருந்தான். ஆம்; இங்கர் விழித்திருந்தாள். இருவரும் உள்ளே உட்கார்ந்து காபி சாப்பிட்டுக் கொண்டே பேசிக் கொண்டிருந்தார்கள்.

"இதோ ஐஸக்" என்றாள் இங்கர் பிரியமாக. அவனுக்கும் ஒரு கப் காபி தயார் செய்து கொடுத்தாள்.

"ஈவனிங்" என்றான் ப்ரேட் இனிமையாக, பிரியமாக.

கூலியாட்களுடன் குடித்து விட்டிருந்தான் ப்ரேட். குடித்தும் அவன் தன் இனிமையை இழந்து விடவில்லை. நிதானமாக, சிநேக பாவத்துடன் மிகவும் சாதாரணமாக உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தான். அவ்வளவு தான். லேசாகத் தற்பெருமை பாராட்டிக் கொண்டான் அவன்—அதனாலென்ன? பண்ணை வேலை நிறைய இருந்தது—தந்திக்காரன் வேலை பார்க்க முடிய வில்லை என்றான்' இருந்தும் என்ஜினியருக்காகத் தான் இந்த வேலையையும் பார்க்க ஏற்றுக் கொண்டதாகச் சொன்னான் ப்ரேட் ஓல்ஸன். தந்தி லைன் இன்ஸ்பெக்டர் பணம் கிடக்கட்டும்—அதைப் போல நூறு பங்கு பணம் சுலபமாகச் சம்பாதித்து விடலாம். மறுக்க அவனுக்கு இஷ்டமில்லை. தந்தியைப் போலவே வேடிக்கையான ஒரு யந்திரத்தை, சிறிய அழகான ஒரு பெட்டி யந்திரத்தை அவன் வீட்டுச் சுவரில் மாட்டி விட்டார்கள்!

ஆம். ப்ரேட் ஊதாரி. தற்பெருமைக்காரன். அதனாலென்ன? அதைப்பற்றி ஐஸக் அவனிடம் கோபம் கொள்ளுவானேன்? அந்நியன் ஒருவ னிருப்பானோ என்று பயந்தான் ஐஸக்—அண்டை வீட்டுக்காரனே வீட்டிலே தங்கியிருந்தது பற்றி ஐஸக் குக்குத் திருப்திதான். குடியானவனின் சொந்தச் சொத்தான சில உணர்ச்சிகள், அசைக்க முடியாத திடம், பிடிவாதம் எல்லாம் ஐஸக்

குக்கு உண்டு. ப்ரேடுடன் பேசிக் கொண்டே அவனுக்குக் குடியானவனின் குணதிசயங்கள் எதுவுமில்லை என்று கவனித் தான் ஐஸக். தலையை ஆட்டிக்கொண்டே "ப்ரேடுக்கு இன்னொரு கப் காபி கொடு" என்றான்.

இங்கர் அந்த என்ஜினியரைப் பற்றிப் பேசினாள். அவன் மிகவும் இரக்கப்பட்டவன், நல்லவன் என்றாள். பையன்களுடைய சித்திரங்களை எல்லாம் பார்த்துப் புகழ்ந்தான் அவன். எல்யூ ஸிஸைத் தனக்குக் கீழ் வேலைக்கு வைத்துக் கொள்ளத் தயார் என்று சொன்னான் என்றாள் இங்கர்.

"வேலைக்கா? அவன் கீழா?" என்றான் ஐஸக்.

"ஆமாம். நகரத்திற்கு வந்தால் வைத்துக் கொள்கிறேன் என்றான். எழுதவும் மற்றப்படி பிளான் முதலியன போடவும் தனக்குக் குமாஸ்தாவாக இருக்கட்டும் என்றான். பையனுடைய எழுத்தும் சித்திரங்களும் அவனுக்கு மிகவும் பிடித்திருந்தன."

"ஓஹோ!" என்றான் ஐஸக்.

"நீ என்ன சொல்லுகிறாய்? கன்பர்மேஷன் சடங்கும் ஆக வேண்டும். தானே ஏற்பாடு செய்கிறேன் என்றான் என்ஜினியர். அதுவும் நல்லது என்று எனக்குத் தோன்றியது."

"ஆமாம். அது பெரிய விஷயம்" என்றான் ப்ரேட். "என்ஜி னியர் சொன்னால் சொன்னபடிச் செய்வான். எனக்கு அவனைத் தெரியும். அவனை நம்பலாம்."

"எனக்குத் தெரிந்தவரையில் எல்யூஸிஸ் இங்கு பண்ணையில் வேலை செய்யத் தேவை" என்றான் ஐஸக்.

சிறிது நேரம் அங்கு ஒரு விதமான மௌனம் நிலவியது. ஐஸக்குடன் பேசிச் சமாளிப்பது அப்படி ஒன்றும் சுலபமான காரியம் அல்ல!

"பையனே போக ஆசைப்படுகிறான். அவனுக்கு எழுதவும் சித்திரம் வரையவும் சக்தியிருக்கிறது. அப்போது என்ன பண்ணு வது?" என்றாள் இங்கர்.

மீண்டும் மௌனம்.

பிறகு சிரித்துக்கொண்டே ப்ரேட் சொன்னான்: "என் குழந்தை களில் ஒன்றைக் கூப்பிட்டிருக்கக் கூடாதோ அந்த என்ஜினியர். உடனேயே அவனுடன் அனுப்பி விட்டிருப்பேனே நான். அனுப்புவதற்கு முடியும் என்றால். ஆனால் மூத்தது—பார்ப்ரோ— பெண்."

“நல்ல பெண் அவள்” என்றாள் இங்கர் பேச்சுக்கு.

“இல்லை என்று நானும் சொல்லமாட்டேன். நல்ல பெண் தான். கெட்டிக்காரி. லென்ஸ்மாண்டு வீட்டில் உதவியாளாகப் போகிறாள் அவள்” என்றான் ப்ரேட்.

“லென்ஸ்மாண்டு வீட்டுக்கா?”

“ஆமாம். போகாமல் என்ன பண்ணுவது? லென்ஸ்மாண்டின் மனைவி பிடிவாதமாகச் சொல்லும்போது மாட்டேன் என்று எப்படிச் சொல்வது?”

பொழுதுவிடிகிற நேரமாகிவிட்டது. ப்ரேடும் கிளம்பினான்.

“ஒரு மூட்டையும் குல்லாவும் உன் களத்திலே வைத்தேன்—இருக்கும். ஆட்கள் அதை எடுத்துக்கொண்டு ஓடவில்லையானால் இருக்கும்” என்று விளையாட்டாகச் சொல்லிக்கொண்டே போனான் ப்ரேட் ஓல்ஸன்.

## 14

**கா**லம் சென்றது.

ஆம். கடைசியில் எல்யூஸிஸ் நகரத்துக்குத்தான் போனான். இங்கர் அதை எப்படியோ ஏற்பாடு செய்துவிட்டாள். ஒரு வருஷம் நகரில் இருந்தான். பிறகு கன்பர்மேஷன் சடங்கு நடந்தது. பிறகு அவனுக்கு என்ஜினியர் ஆபீஸில் தனியிடம் ஒன்று கிடைத்தது. எழுதுவதிலும் சித்திரம் வரைவதிலும் அவன் நாளுக்கு நாள் கெட்டிக்காரனானான். அவன் வீட்டுக்கு எழுதிய கடிதங்கள்!—அடாடா! அவை வர்ணப்படங்கள் போல இருந்தன. சிவப்பு, கறுப்பு, நீலம், பச்சை என்று விதவிதமான வர்ணங்களில் எழுதுவான் அவன். அதிலிருந்த வார்த்தைகள் பலவற்றிற்கு அர்த்தம் கண்டுபிடிப்பதே சிரமம். சில சமயம் அவன் பணம் கேட்டு எழுதுவான். செலவுக்குப் பணம் போதவில்லை என்று எழுதுவான். ஒரு கடிகாரமும் சங்கிலியும் வாங்கப் பணம் வேண்டும் என்று எழுதினான்—கடிகாரம் இல்லாவிட்டால் ஆபீஸுக்குப் போக அதிக நேரமாகும். லேட்டாக வந்தால் வேலை போய்விடாதோ! தவிர சுங்கான், அதற்குப் புகையிலை எல்லாம் வாங்கப் பணம் தேவை என்று எழுதினான். மற்ற குமாஸ்தாக்களெல்லாம் சுங்கானில் புகை பிடிக்கும்போது அவன் மட்டும் சும்மா இருப்பது எப்படி? இது தவிர ‘பாக்கட் மணி’ வேண்டும் என்று எழுதினான். பாக்கட் மணி என்றால்

என்னவென்றே ஐஸக்குக்குப் புரியவில்லை. தன் ஸ்திதிக்கேற்ற மாதிரி தேகாப்பியாசம், சித்திரம் வரைதல், முதலியவிஷயங்களைக் கற்றுக்கொள்ள மாலை வகுப்புகளுக்குப் போகப் பணம் கட்ட வேண்டும்—அனுப்பு என்றான். மொத்தத்தில் எல்யூஸிஸ் நகரில் இருப்பதற்கு இங்கேயிருந்து பணம் போக வேண்டியிருந்தது.

"பாக்கட் மணியா? அது என்ன? பணத்தைச் சட்டைப் பையில் வைத்துக் கொள்ளாமல் வேறு எங்கே வைத்துக் கொள்வது?" என்று கேட்டான் ஐஸக்.

"இல்லாமல் போய்விடக்கூடாது என்பதற்காக" என்றாள் இங்கர். "அதிகமில்லையே! ஒன்றிரண்டு தேலர்கள்தானே!"

கோபமாகச் சொன்னான் ஐஸக். "அதுதானே விஷயம். ஒரு தேலர், இரண்டு தேலர்......சேர்ந்து என்ன ஆகும்?" இந்தக் கோபம் பணத்தைப்பற்றி வந்த கோபம் அல்ல, எல்யூஸிஸ் அங்கு தன்னுடன் இல்லாததே அவன் கோபத்துக்கு முக்யகாரணம். "மொத்தத்தில் கணக்கு மீறிவிடும். என்னிடம் தேலர்கள் கிடையாது. திரும்பிவிடு என்று எழுது."

இங்கருக்கு மட்டும் கோபம் வராதா. "சரி அப்படியே" என்றாள்.

"ஸிவெர்ட் இருக்கிறானே! இவனுக்கு என்ன பாக்கட் மணி தேவை?"

இங்கர் சொன்னாள்: "நீ நகரில் எப்பொழுதும் இருந்ததில்லை. ஆகையால் இதெல்லாம் உனக்கு ஒன்றும் தெரியாது. ஸிவெர்ட்டுக்குத் தேவையில்லை. பணத்தைப்பற்றிப் பேசும் போது எனக்கு ஞாபகம் வருகிறது—மாமா ஸிவெர்ட் செத்துவிட்ட பிறகு நம்ப ஸிவெர்ட் அப்படி ஒன்றும் பணத்துக்குக் கஷ்டப்பட வேண்டியிராது."

"எப்படித் தெரியும் உனக்கு?"

"எனக்குத் தெரியும். பாரேன்."

இது உண்மைதான்—ஒரு விதத்தில். சிறுவன் ஸிவெர்ட்டைத் தன் வாரிசாக்கிக் கொள்வதுபற்றி மாமா ஸிவெர்ட் வாய் திறந்து ஒரு தரம் சொல்லக்கூடச் சொல்லிவிட்டான். மாமா ஸிவெர்ட்டின் காதில் எல்யூஸிஸ் நகரத்தில் அமர்க்களமாக வாழ்வது விழுந்ததும், அவனுக்குத் தன் பெயர் கொண்ட ஸிவெர்ட் கஷ்டப் படாமல் இருக்கச் செய்வது அவசியம் என்று தோன்றி விட்டது. அதற்கானது செய்வதாகச் சத்தியம் செய்தானும் மாமா ஸிவெர்ட். ஆனல்

இந்த மாமா ஸிவெர்ட் பணக்காரன் என்பது உண்மைதானு? அப்படி எத்தனை இருந்தது அவனிடம்? பாழுடைந்த ஒரு பண்ணை யும் ஒரு மீன் பிடிக்கும் சாலையும் படகுகளும் தவிர அவனிடம் வேறு என்ன இருந்தன? யாரும் நிச்சயமாகச் சொல்வதற்கில்லை. அதைத் தவிர மாமா ஸிவெர்ட்டும் மகா முரட்டுத்தனமானவன்—பிடிவாதக்காரன். சிறுவன் ஸிவெர்ட் தன்னுடன் வந்து தங்க வேண்டும் என்ருன். தங்கினுல் தான்......என்ருன். எல்யூஸிஸை அந்த என்ஜினியர் ஏற்றுக் கொண்டமாதிரி மாமா ஸிவெர்ட் சிறுவன் ஸிவெர்ட்டுக்குத் தன்னுலானதைச் செய்யவிரும்பினுன்.

ஆனுல் அது எப்படி முடியும்? ஸிவெர்ட்டை எப்படி அனுப்பு வது? முடியாது! முடியாது! ஐஸக்குக்கு உதவி செய்ய வேறு யார் இருந்தார்கள்? தவிர சிறுவன் ஸிவெர்ட்டுக்கும் தன்னுடைய புகழ் பெற்ற மாமா ஸிவெர்ட்டுடன் போய்த் தங்க அவ்வளவாக இஷ்ட மில்லை. ஒரு தரம் போய் இருந்து பார்த்திருக்கிருன் அவன். அங்கு இருக்கப் பிடிக்காமல் வீடு திரும்பி விட்டான். அவனுக்கும் கன்பர்மேஷன் சடங்கு ஆகி விட்டது. அவன் நெடு நெடு என்று வளர்ந்துகொண்டிருந்தான். கன்னங்களிலும் மேலுதட்டிலும் மயிர் அரும்ப ஆரம்பித்துக் கொண்டிருந்தது. அவன் கைகள் பெரிய கைகள்—எந்த வேலையும் செய்யத் தயங்காத அடிமைகள். பண்ணையில் ஒரு ஆள் வேலைசெய்தான் அவன்.

ஸிவெர்ட்டின் உதவி இல்லாவிட்டால் அந்தப் புதிய பெரிய கொட்டகையை ஐ ஸ க் கா ல் நிர்மாணித்திருக்கவே முடியாது! பரணுக்குப் பரண், மேலேயே பாலங்கூட போட்டுவிட்டான் ஐஸக். காற்றுப் போக ஓட்டைகளுடன் பிரும்மாண்டமான கொட்டகை அது. இதில் பாதிதான் மரம்—மற்றப் பாதி மண்ணை அப்பி அடைத்தது என்பது உண்மைதான். ஆனுல் பலமாக அஸ்தி வாரம் போட்டு அசங்காமல் கட்டியிருந்தான். மூலைகளிலே இரும்புப் பட்டங்கள் அடித்திருந்தான். ஒரு பகுதியில் அடித் திருந்த மரப் பலகைகள் பூராவும் ஐஸக்கின் மரம் அறுக்கும் சாலையிலே அறுக்கப்பட்டவை. ஸிவெர்ட் அடித்த ஆணிகள் எண்ணிக்கையில் அகப்படா! மூச்சுத் திணறுகிறமட்டும் அந்தப் பிரும்மாண்டமான உத்திரங்களைத் தூக்கி நிறுத்த உதவினுன் ஸிவெர்ட். அவனும் அவன் தகப்பனும் ஒரே மாதிரி மண்ணுல் ஆனவர்கள். இருவருக்கும் ரொம்பவும் பொருத்தம். அப்பா வுக்குச் சளைக்காமல் பக்கத்தில் வேலை செய்வான் பையனும். மலைச் சரிவிலே போய் டான்ஸீ பூண்டு பொறுக்கி மேலே தேய்த்து

வாசனை போட்டுக் கொண்டுதான் கோயிலுக்குக் கிளம்புவான். அது விஷயத்தில் லெபல்டினுக்குத்தான் நாகரிக வழிகளை எல்லாம் பற்றிக் கவனமும் கவலையும் அதிகம். அவள் மனசில் எல்லையற்ற ஆசைகள் இருந்தன. ஒரே பெண்—நகரில் பிறந்து வளர்ந்தவள்—அழகு அணிகளில் அவளுக்கு ஆசையிருந்தது நியாயம்தான்! அந்தக் கோடையில் கஞ்சி சாப்பிடத் தேன் இல்லாமல் முடியாது என்றாள் அவள். தேன் பாகாவது வேண்டும் என்றாள்—கிடைக்கிற வரையில் அவள் ஒரு கரண்டி கூட வாயில் வைக்கவில்லை. அவளால் எந்த விதமான வேலையும் செய்ய முடியாது!

தனக்கு ஒரு வேலைக்காரி வேண்டும் என்கிற சிந்தனையை இங்கர் இன்னும் பூராவும் அகற்றிவிடவில்லை. ஒவ்வொரு வஸந்தத்திலும் பிடிவாதமாக அதைப் பிரஸ்தாபித்தாள் அவள். ஒவ்வொரு தடவையும் ஐஸக் அதை ஆக்ஷேபிக்கிறான். பொழுது மட்டுமிருந்து, வீட்டு வேலைகளைக் கவனிக்க ஒரு வேலைக்காரியும் இருந்தால், இங்கர் எத்தனை நேர்த்தியான வேலைப்பாடுகள் அமைந்த தையல் வேலைகள் செய்யமாட்டாள்! விதவிதமான சட்டைகள், பாவாடைகள், மேலாடைகள், ஸ்லிப்பர்கள்—இன்னும் எத்தனை எத்தனையோ! சமீப காலத்தில் அவ்வளவு பிடிவாதமாக மறுப்பதில்லை அவன். முதலில் வேலைக்காரிகளைப் பற்றி ஒரு பிரசங்கமே செய்துவிட்டான் அவன். எப்படிப்பட்ட பிரசங்கம் அது? அதில் காரண காரியம் எதுவுமில்லை. வீம்பும் இல்லை—ஒரே கோபம்தான் இருந்தது. இந்தக் கோபத்துக்குக் காரணம் அவனே அறிந்திருந்த ஒரு பலஹீனந்தான்—இங்கர் எப்படியும் வெற்றி பெற்று விடுவாள் என்கிற ஞாபகம்தான்! இப்போது சில நாட்களாக அதுபற்றி வழிக்கு வந்து விடுவான் போல இருந்தது. தன் கோபத்தைக் கண்டு அவனே வெட்கப்படுவது போல இருந்தது.

"வீட்டுக்கு வேலைக்காரி போடுவதானால் இப்பவே போட வேண்டும்" என்றாள் இங்கர். "இன்னும் சில வருஷங்கள் போனால், லெபல்டின் பெரியவளாகி விடுவாள். அதற்கப்புறம் எனக்கு உதவி எதற்கு?"

"உதவியா?" என்றான் ஐஸக்." உனக்கு எதில் எதற்கு உதவி?"

"எதற்கா! உனக்கு உதவிசெய்ய ஸிவெர்ட் இல்லையா? அது மாதிரி என் காரியங்களில் எனக்கு உதவ ஒரு பெண் தேவை."

இந்த அர்த்தமற்ற பேச்சு ஐஸக்குக்குப் புரியவில்லை. அவன் சொன்னான்: "சரி. உனக்கு உதவிக்கு ஒரு பெண் போட்டுவிட்டால் நீங்களே உழுது பயிரிட்டுப் போரடித்து தானியம் சேகரித்து பண்ணைக் காரியங்கள் எல்லாவற்றையும் பார்த்துக் கொண்டு விடுவீர்கள். நானும் ஸிவெர்ட்டும் நகரத்துக்குப் போய் விடலாம் போலும்."

"அதென்னவோ பார்க்கலாம்," என்றாள் இங்கர். "இது மட்டும் சொல்லுகிறேன். அந்த பார்ப்ரோவைக் கூப்பிட்டால் வருவாள். வருவதாக வீட்டுக்கு எழுதியிருக்கிறாள் என்று அவள் அம்மா சொன்னாள்."

"யாரு பார்ப்ரோ?" என்றான் ஐஸக். "அந்த ப்ரேட் ஓல்ஸனின் பெண்ணா?"

"ஆம். அவள் இப்போது பெர்கன் நகரில் இருக்கிறாள்!"

"இங்கே அந்தப் பெண் வேண்டாம். அதற்கு நான் சம்மதிக்க மாட்டேன்" என்றான் ஐஸக். "யாரை வைத்துக் கொண்டாலும் சரி; அவளை வேலைக்கு வைத்துக்கொள்ள நான் சம்மதிக்க மாட்டேன்."

பாதகமில்லை, முடியாது என்பது போக இந்த மட்டும் வந்தது சரிதான். ஐஸக்குக்கு பார்ப்ரோவைப் பிடிக்கவில்லை. வேண்டாமே! வேலைக்காரியே வேண்டாம் என்று சொல்லவில்லையே ஐஸக்.

ப்ரேடாப்ளிக் பண்ணையைச் சேர்ந்த பார்ப்ரோவைப் போன்ற பெண்களை ஐஸக்குக்குப் பிடிக்கவில்லை. அவள் தன் தகப்பனைப் போல அழுத்தம் இல்லாதவள்; எதிலும் ஈடுபாடில்லாதவள் அவள். அம்மா எப்படியோ! கவலை கவனம் என்பது எதிலும் கிடையாது. லென்ஸமாண்டுடன் அவளால் அதிக நாள் தங்க முடிய வில்லை. ஒரு வருஷம் தான் இருந்தாள். அவளுடைய கன்பர்மேஷன் சடங்குக்குப் பிறகு அவள் கடைக்காரன் வீட்டில் வேலை பார்த்தாள். அங்கும் ஒரு வருஷம் தான் இருந்தாள். அதற்குள் மதப்பற்று அதிகமாகி விட்டது அவளுக்கு. மோக்ஷசேனை அந்தப் பக்கம் வந்ததும் அதில் சேர்ந்து கொண்டாள். முழங்கையில் ஒரு ரிப்பனைக் கட்டிக்கொண்டு கையில் தம்பூருடன் கோஷ்டி கீதங்கள் பாடிக் கொண்டு மோக்ஷசேனையில் ஒருத்தியாகப் பல நாள் இருந்தாள். போன வருஷம் அந்த வேஷத்துடனேயே அவள் பெர்கன் நகரம் போனாள். அந்த வேஷத்துடன் அவள் எடுத்துக் கொண்டிருந்த போட்டோவைத் தன் பெற்றோர்களுக்கு அனுப்பியிருந்தாள். அதை ஐஸக் பார்த்திருந்தான். பார்ப்பதற்கே என்னவோ போல இருந்தது. ஊரிலில்லாத பழக்கவழக்கங்கள்—தலை மயிரைச்

சுருட்டி விட்டிருந்தாள். மாரிலே ஒரு கடிகாரச் சங்கிலி தொங்கியது. தங்கள் பெண் பார்ப்ரோ பற்றி அவள் பெற்றோருக்குப் பெருமை தான்—வந்தவர்களுக்கெல்லாம் அந்தப் போட்டோவைக் காண்பித்துக் கொண்டிருந்தார்கள். நகரத்திலே வாழ்ந்து நாகரிக மடைந்துவிட்டாள் அவள் என்று பெருமைப் பட்டுக்கொண்டார்கள். இப்போது ரிப்பனுமில்லை, தம்புராவுமில்லை. வேறு என்ன வந்ததோ அதற்குப் பதில்—தெரியவில்லை.

"இந்தப் படத்தைக் கொண்டுபோய் ஸ்ரீமதி லென்ஸ் மாண்டிடம் காண்பித்தேன். என் பெண்ணை அவளுக்கு அடையாளமே தெரியவில்லை" என்றான் ப்ரேட்.

"அவள் பெர்கனிலேயே தங்கப் போகிறாளா?" என்று சந்தேகத்துடன் கேட்டான் ஐஸக்.

"ஏன்? கிறிஸ்டியானியா நகரம்போனாலும் போவாள்" என்றான் ப்ரேட். "இங்கே என்ன இருக்கிறது அவளுக்கு? அங்கே இரண்டு வாலிபக் குமாஸ்தாக்களுக்குச் சமைத்துப் போடுகிறாள். கல்யாணம் ஆகாதவர்களாம். நிறையச் சம்பளம் தருகிறார்களாம்!"

"நிறைய என்றால்? எத்தனை?" என்றான் ஐஸக்.

"எத்தனை என்று அவள் கடிதத்தில் எழுதவில்லை. இங்கு கிடைக்கக் கூடியதை விட அதிகம் என்பது நிச்சயம். கிருஸ்துமஸுக்கு இனாம்கள். மற்றும் உள்ள பண்டிகைகளுக்குச் சலுகைகள் எல்லாம் உண்டாம். இது சம்பளத்தில் சேர்ந்ததில்லை.

"ஓஹோ" என்றான் ஐஸக்.

"உன் வீட்டுக்கு வேண்டுமானால்......" என்றான் ப்ரேட்.

"எனக்கா?" என்றான் ஐஸக். அவனுக்குத் தூக்கிவாரிப் போட்டது.

"சும்மா பேச்சுக்குச் சொன்னேன். அவ்வளவுதான். உனக்கு என்றால் உனக்கா? இப்போது இருக்கிற இடத்திலே அவள் சந்தோஷமாக இருக்கிறாள். நான் என்ன சொல்ல வந்தேன் என்றால்... நீ வருகிற வழியிலே தந்தி லைனில் பிசகு ஏதுவும் இல்லையே?"

"தந்தி லைனிலா? நான் கவனித்த வரையில் இல்லை."

"இராது, இராது. நான் இன்ஸ்பெக்டராக வேலை ஒப்புக் கொண்ட பிறகு தந்தி லைனின் பிசகே வரவில்லை, தவிர இதோ என் உபயோகத்துக்கு இந்த யந்திரம் வேறு இருக்கிறது—எங்காவது பிசகு ஏற்பட்டால் தெரிவிப்பதற்கு. லைனோடு ஒரு

நாள் போய் எதற்கும் பார்த்துவிட்டு வர வேண்டும். ஆனல் பண்ணையிலே வேலை செய்து மாளவில்லை. இன்ஸ்பெக்டராக ஒப்புக் கொண்ட பிறகு அதைப் பார்க்காதிருக்க முடியுமா? தந்தி லைனில்லாவிட்டால் பண்ணையைச் சரியாகப் பார்த்துக் கொள்ளலாம்" என்ருன் ப்ரேட் ஓல்ஸன். "அதிக நாள் இல்லை..."

"ஏன்? இன்ஸ்பெக்டர் வேலையை விட்டு விடப் போகிருயா?"

"நிச்சயமாகச் சொல்ல முடியாது. என்னை மீண்டும் கிராமத்தில் கூப்பிடுகிருர்கள்."

"யார் கூப்பிடுகிருர்கள்?" என்று கேட்டான் ஐஸக்.

"ஏன்? எல்லோருமே தான். லென்ஸ்மாண்டு தனக்கு உதவி செய்ய நான் வர வேண்டுமென்கிருன். டாக்டர் தனக்கு வண்டி ஓட்ட என்னைக் கூப்பிடுகிருன். மதகுருவின் மனைவிக்கு நானில்லாமல் ஒரு காரியமும் ஆகவில்லையாம். அது சரி ஐஸக்! செம்புக்கனிப் பொருள் இருப்பதாக நீ விற்ருயே ஒரு நிலம்—அது என்ன ஆயிற்று? ஊரில் சொல்லிக்கொள்கிற அளவு பணம் அதில் கிடைத்ததா உனக்கு?" என்று விசாரித்தான் ப்ரேட்.

"அது பொய்யில்லை. பணம் கிடைத்தது" என்ருன் ஐஸக்.

"இருந்தாலும் கெய்ஸ்ஸலர் எதற்காக அதை விலை கொடுத்து வாங்கினன். வேடிக்கைதான். சும்மாப் போட்டு வைக்கவா? வருஷங்கள் ஆகின்றன—ஆனல் எதுவும் செய்யவில்லையே அவன்?"

புரியாத விஷயம் தான் அது. ஐஸக்கே அது பற்றி ஆச்சரியப்பட்டதுண்டு. புது லென்ஸ்மாண்டிடம் அது பற்றி ஐஸக்கே கேட்டான். கெய்ஸ்ஸலரின் விலாசத்தையும் கேட்டு வாங்கிக் கொண்டான். கெய்ஸ்ஸலருக்கு எழுதுகிற உத்தேசம் ஐஸக்குக்கும். உண்மையிலேயே அது விஷயம் ஒரு புதிர் தான்.

"எனக்கும் தெரியவில்லை" என்ருன் ஐஸக்.

இது விஷயமாகத் தனக்கிருந்த ஆர்வத்தை மறைக்க வில்லை ப்ரேட் ஓல்ஸன். "அங்கு அந்த மாதிரி சுரங்கக் கனிப் பொருள் நிலம் நிறைய இருக்கிறதாமே உன்னுடையதைத் தவிர. நமக்குத் தெரிந்தது சொல்பம் தான். வாயில்லா ஜந்துக்கள் மாதிரி, நாம் நமது நன்மைக்கான விஷயங்களையே அறியாமல் இருக்கிருேமே! நானே போய் ஒரு நாள் பார்க்கலாமென்று நினைத்திருக்கிறேன்."

"செம்பு, கனிப் பொருள் இது பற்றி உனக்கு ஏதாவது தெரியுமோ?"

ப்ரேட் ஓல்ஸன் சொன்னான் : "கொஞ்சம் கொஞ்சம் தெரியும். சிலரைக் கேட்டும் தெரிந்துகொண்டிருக்கிறேன். எப்படியும் ஏதாவது கண்டிபிடித்துவிட முடியும். முடியாமல் போகாது! இந்தப் பண்ணையை மட்டும் நம்பி, நானும் என் பெரிய குடும்பமும் எப்படிக் காலந்தள்ள முடியும்? முடியாது, முடியாது! உன் விஷயம் வேறு. உன் நிலத்திலே நிறைய மரம் இருந்தது. வெட்டி விற்க முடிந்தது. நிலமும் நல்ல நிலம். இங்கே வெறும் பூண்டுகள் தான் முளைக்கும்."

"பூண்டு முளைக்கும் இடத்திலே மற்றவையும் முளைக்கப் பண்ணலாம்" என்றான் ஐஸக். "என் நிலமும் இதே மண்தான்."

"தவிரவும் என் பண்ணையில் தண்ணி தேங்குகிறது. அதை வடிக்கட்டுவது எப்படி? முடியவே முடியாது" என்றான் ப்ரேட்.

முடியும். முடியும் என்பது ஐஸக்குக்குத் தெரியும். இன்னும் இரண்டொரு பண்ணைகள் கூட அந்தப் பக்கத்தில் நிர்மாணமாகிக் கொண்டிருந்தன. ப்ரேடாப்ளிக்குக்கும் ஸெல்லன்ராவுக்கும் இடையிலே கூட ஒரு புதுப் பண்ணை தோன்றிவிட்டது. நிலத்தில் உழைத்தால் முடியாதது என்ன? ஐஸக் அங்கு வந்தபோது எல்லாம் காடாக, மனிதன் கை படாமல், இருந்தது. புதுசாக வந்திருந்த பண்ணையாட்கள் வேறு பிராந்தியக்காரர்கள். புத்திசாலிகள் என்று தெரிந்தது ஐஸக்குக்கு. வீடு கட்ட அவர்கள் கடன் வாங்கிவந்து வீடு கட்டவில்லை. ஒரு வருஷம் வந்து நிலத்தில் உழுது பண்படுத்தி விட்டுப்போய்விட்டார்கள். அந்த நிலத்துக்கும் தங்களுக்கும் சம்பந்தமே யில்லாதமாதிரிப் போய்விட்டார்கள். தண்ணீர் வடிய வாய்க்கால்கள் வெட்டிவிட்டார்கள். ஆக்ஸல் ஸ்ட்ராம்தான் இப்போது ஸெல்லன்ராவுக்குப் பக்கத்துப் பண்ணைக்காரன். கெட்டிக்காரன். இன்னும் கல்யாணமாகவில்லை. ஹெல்கே லாண்டிலிருந்து வந்தவன். ஐஸக்கின் ஏரையும் கலப்பையையும் கடன் வாங்கித் தன் நிலத்தை நன்கு ஆழ உழுதான் அவன். இரண்டாவது வருஷம்தான் அவன் வந்து அங்கு தங்கினான். ஒரு வைக்கோல் கூரைக் கொட்டகையும், தான் வசிக்க ஒரு மண் குடிசையும் போட்டுக்கொண்டு வந்து தங்கினான். இரண்டு மிருகங்களையும் கொண்டுவந்தான். பண்ணைக்குப் பெயர் மேன்லாந்து— அதாவது நிலவில் அழகு என்று பொருள் பட்டது. உதவி செய்ய அவனுக்கு ஸ்திரீ யாரும் இல்லை. தானேதான் எல்லா வற்றையும் செய்துகொண்டான். கோடையில் உதவி செய்ய யார் வருவார்கள்! ஆனால் அவன் எல்லாக் காரியங்களையும் சரிவரவே

செய்தான் என்று எண்ணினன் ஐஸக். ப்ரேட் ஓல்ஸன் மந்திரிச் செய்யவில்லை அவன். வீட்டைப் பெரிசாகக் கட்டி அதில் பெண்டும் நண்டுமாகக் குடியேறிவிட்டால் அவர்களுக்கு உணவுக்குப் போவதெங்கே! நிலமும் இல்லை—ஆடுமாடுகளும் இல்லை— எல்படிக் காலக்ஷேபம் நடக்கும். ப்ரேட் ஓல்ஸனுக்கு நிலம் பற்றியும் வடிகால் பற்றியும் பண்ணை வாழ்வு பற்றியும் என்ன தெரியும்?

சோம்பேறியாகப் பொழுதைக் கழிக்கத் தெரியும்—அது தெரியும் அவனுக்கு. ஸெல்லன்ரா பக்கம் ஒரு நாள் வந்தான். குன்றின் சரிவிலே பார்க்கப் போகிறேன் என்று வந்தான். செம்பு இருக்கிறதா என்று பார்க்கவந்தான். மாலையில் திரும்பினன். தலையை ஆட்டினன். நிச்சயமாகச் சொல்ல முடியாது, ஆனல் கனிப்பொருள் இருக்கிற அறிகுறிகள் இருந்தன. இன்னெரு நாள் வந்து ஸ்வீடன் தேசம்வரை அவ்வழி சென்று பார்க்க உத்தேசித் திருந்தான்.

உண்மையில் அவன் மறுபடியும் வந்தான். அப்படிப் போவ தற்கு அவனுக்குப் பிடித்திருந்தது. இந்தத் தடவை தந்தி இலாகா வேலை என்றான். தந்தி லைன் பூராவும் பார்வையிட வேண்டும் என்றான். இதற்கிடையில் அவன் மனைவியும் குழந்தை களும் பண்ணையைக் கவனித்துக் கொண்டார்கள். ஆனல் பாவம்! அவர்களால் என்ன செய்ய முடியும்? பண்ணை வேலைகள் நடை பெருமலே கிடந்தன. இப்படி அடிக்கடி ப்ரேட் தன் வீட்டுக்கு வருவது ஐஸக்குக்குப் பிடிக்கவில்லை. ப்ரேட் வந்தால் அவன் வெளியே போய் விடுவான். பிறகு இங்கரும் ப்ரேடும் வெகு நேரம் பேசிக் கொண்டு உட்கார்ந்திருப்பார்கள். அப்படிப் பேச என்ன தான் இருக்குமோ? ப்ரேட் அடிக்கடி கிராமத்துக்குப் போய் வரு வான்—அங்குள்ள பெரிய மனிதர்களைப் பற்றிச் செய்திகள் கொண்டு வருவான். இங்கர் தன்னுடைய ட்ராண்ட்யெம் பிர யாணம் பற்றி ஓயாமல் பேசுவாள். நகரத்தில் அவள் பேசக் கற்றுக் கொண்டு விட்டாள்—யார் அகப்பட்டாலும் பேசத் தொடங்கி விடுவாள் அவள். முந்திய நாளைய இங்கர் அல்ல அவள்—அவளுடைய கிராமியமான பழக்க வழக்கங்களெல்லாம் மறைந்துவிட்டன.

பெண்களுடன் ஸ்திரீகளும் ஸெல்லன்ராவுக்கு இங்கரைத் தேடி அடிக்கடி வந்தார்கள்—ஒரு துணி வெட்டித் தர வேண்டும் என்றே, ஓரம் அழகாகத் தைக்க வேண்டுமென்றே வருவார்கள்.

அவர்களுக்கு உணவும் விருந்தும் அளிப்பாள் இங்கர். ஒலீன் மறுபடியும் வந்தாள். வராமலிருக்க அவளால் முடியவில்லை போலும். வஸந்தத்திலும் வந்தாள். இலையுதிர் காலத்திலும் வந்தாள். பிரியமாகப் பேசினாள், மனசில் பிரியமேயில்லாமல்; மிருதுவாகப் பேசினாள், கடினமான சித்தத்துடன்; உண்மை உண்மை என்றாள், பொய்யாக. "எப்படியிருக்கிறாய் என்று பார்க்கலாமென்று வந்தேன். முக்யமாகப் பையன்களைப் பார்க்க வந்தேன். அவர்களைப் பார்க்காமல் என்னால் உயிர் தாங்கவே முடியாது! தேவர் குழந்தைகள் அவை. இப்போது வளர்ந்து விட்டார்கள். சிறுவர்களாக என் கைச்சோறு போட்டு வளர்த்த பையன்கள்தானே இவர்கள்! இன்னும் என்ன கட்டிட வேலை ஆகிறது? கட்டிடம் கட்டிடம் என்று பெரிய நகரம் மாதிரி யிருக்கிறது உன் பண்ணை. களஞ்சியத்திலே ஒரு பெரிய மணியைக் கட்டி வையேன். எப்பவாவது நகரத்திலே போல ஆட்டிவிட்டு அடிக்கலாம்."

ஒரு தரம் ஒலீன் வேறு ஒருத்தியையும் அழைத்துக்கொண்டு வந்தாள். இங்கரும் அந்த இரண்டு ஸ்திரீகளும் ஒரு நாள் பூராவையும் ஆனந்தமாகக் கழித்தார்கள். கூட இரண்டு பேர் இருந்து விட்டால் இங்கருக்கு உத்ஸாகம் தாங்காது. தையல் வேலை அதி சுவாரசியமாக ஓடும். கத்திரியையும் இஸ்திரிப் பெட்டியையும் எடுப்பதும் வைப்பதுமாக ஆடம்பரமாக ஆரம்பித்து விடுவாள். இரண்டு பேர் உடன் இருந்தால், அவள் தையல் வேலை கற்றுக் கொண்ட இடம் ஞாபகம் வரும் அவளுக்கு. அவள் அதைப்பற்றி மறைத்து வைத்ததில்லை. ஆனால் அவள் போன இடம் சிறையா, பள்ளிக்கூடமா? ட்ராண்ட்யெம் நகரில் அவள் பள்ளிக்கூடம் போய்ப் பல விஷயங்கள் கற்றுவந்தாள். வேறு என்ன? எழுதப் படிக்கவும், நூற்கவும் நெய்யவும், சாயந் தோய்க்கவும், ஆடை கத்திரிக்கவும் சொல்லித் தந்த இடத்தைப் பள்ளிக்கூடம் என்று சொல்லாமல் என்ன சொல்வதாம்! வீட்டைப் பற்றிப் பேசுவதுபோல அதைப்பற்றிப் பெருமையாகப் பேசினாள் அவள். அங்கிருந்த பலரைப் பற்றியும் பேசினாள்—அதிகாரி, சின்ன அதிகாரி, போர்மென், உதவி ஆட்கள், சகோதர சகோதரிகள் என்று பலரைப் பற்றிப் பேசினாள். இங்கு பண்ணையில் யார் இருந்தார்கள்? தனிமையும் அமைதியும்தான் இருந்தது. வழக்கப்பட்டுவிட்ட புது வாழ்க்கையிலிருந்து எவ்வளவு மாறுபட்டது! இங்கே காத்துக்கூட அதிகக் குளிராக

இருந்தது—அடிக்கடி ஜலதோஷம் வருகிறது என்று காரண மில்லாமலே மூக்கைச் சிந்தினள் இங்கர். திரும்பி வந்து பல வருஷங்களாகியும் திறந்த வெளியில் அவளால் வேலை செய்யவே முடியவில்லை. வெளி வேலைகளைக் கவனித்துக் கொள்ளத்தான் ஒரு வேலைக்காரி தேவை.

"ஆம். கடவுள் நம்மைக் காப்பார்" என்றாள் ஒலென். "நீ ஏன் ஒரு வேலைக்காரி வைத்துக் கொள்ளக் கூடாது? சொத் திருக்கிறது, சுதந்திரம் இருக்கிறது—நேர்த்தியான வீடு வாசல் இருக்கிறது. வேலைக்காரி வைத்துக் கொள்ளலாமே."

இந்த அனுதாபமும் பரிவும் இங்கருக்குத் திருப்தியாக இருந்தன. அதை அவள் மறைக்க வில்லை. தையல் மெஷினை வேகமாக ஓட்டித் தைத்தாள். அவள் கை மோதிரம் நக்ஷத்திரம் போலக் கை போன வேகத்தில் ஒளி வீசியது.

தன்னுடன் வந்த ஸ்திரீயிடம் ஒலென் சொன்னாள்: "நான் சொன்னது பொய்யா! பாரேன் நீதான். அவள் கையில் தங்க மோதிரம் அணிந்திருக்கிறாள் பாரேன்."

"பார்க்கணுமா?" என்று இங்கர், விரலிருந்து மோதிரத்தைக் கழற்றிக் கொடுத்தாள்.

ஒலெனுக்குச் சந்தேகம்தான். குரங்கு தன் கையில் அகப்பட்ட கொட்டையைப் பார்க்குமே, அந்த மாதிரித் திருப்பித் திருப்பிப் பார்த்தாள் "ஆம். நான் சொன்னது சரி தான். இங்கருக்கு என்ன குறைவு?"

இரண்டாவது ஸ்திரீ தாழ்மையுடன் மோதிரத்தை வாங்கிப் பார்த்தாள். தாழ்மையுடன் பார்த்தாள். புன்சிரிப்புச் சிரித்தாள். "நீ வேண்டுமானல் கையில் போட்டுக் கொள். அது உடைந்து விடாது" என்றாள் இங்கர்.

இங்கர் பிரியமாகவும் பரிவுடனும் பெருமிதத்துடனும் பேசுகிறாள். ட்ராண்ட்யெம் நகரில் தான் பார்த்ததை எல்லாம் பற்றிச் சொல்லுகிறாள். நகரத்து மாதாகோயில் பற்றிக் சொன்னாள். "அடாடா அதைப் பார்த்ததில்லையே நீ! அதைப் போல...... நீ போன தில்லை, அடாடா!" அது தனக்கே சொந்தமான ஒரு மாதா கோவில் என்பது போல, ஒரு புது உரிமையுடன் அதைப் பற்றிச் சொன்னாள். அதன் அகலம் நீளம் எல்லாவற்றையும் பற்றி அளந் தாள். ஆச்சரியம் ஆச்சரியம் என்றாள். அதுபற்றிப் பேசிப் பெருமை பீற்றிக்கொண்டாள். ஏழு மதகுருமார் சேர்ந்தாப்போலப் பேசினால் கூட அங்கு ஒருவர் பேசியது மற்றவர் காதில் விழாது என்றாள்.

"பூஜ்யர் ஒலாவின் கிணறு பார்த்ததில்லையே நீங்கள்? அடாடா! அது அற்புதம்! அற்புதம்! மாதாகோவிலின் நடு மத்தியில் இருக்கிறது அது. அதற்கு ஆழங்காண முடியாது— அடியில்லாத கிணறு அது. அதில் ஒரு சிறு கல்லைப் போட்டேன் நான்—அது அடியை எட்ட வில்லை."

"அடியே கிடையாதா?" என்று ஒலேனும் அவளுடன் வந்தவளும் கழுத்து வலிக்கத் தலையை ஆட்டுகிருர்கள்.

"அது மட்டுமா? அது போலே ஆயிரம் இருக்கின்றன அந்த மாதாகோயிலில்" என்ருள் இங்கர் ஆனந்தத்துடன். "வெள்ளிப் பெட்டி ஒன்று இருக்கிறது. அது பூஜ்யர் ஓலாவ் ஆயுள் காலத்தில் உபயோகித்த பெட்டியாம். அத்துடன்...... அடாடா! அந்த சலவைக்கல் ஆலயம் இருக்கிறதே! அந்தக் கோயிலை சண்டையில் டேன்ஸ் பிடித்துக் கொண்டு விட்டார்கள்."

ஒலேனும் மற்றவளும் கிளம்ப நேரமாகி விட்டது. ஒலேன் இங்கரைத் தனியாக அழைத்துச் சென்ருள். பாலேடைக் கட்டிகள் வைத்திருக்கும் அறைக்குள் அழைத்துச் சென்ருள். அது பாலேடைக் கட்டிகள் வைத்திருக்கும் அறை என்று ஒலேனுக்குத் தெரியாதா என்ன? "என்ன அது?" என்ருள் இங்கர்.

ஒலேன் குசு குசுவென்று ரகசியமாகச் சொன்னுள்: "அந்த ஆஸ் ஆண்டர்ஸ்—அவன் இனி இங்கு வர மாட்டான். நான் சொல்லிவிட்டேன்."

"ஓ!" என்ருள் இங்கர்.

"வரத்துணிந்தானுனல், ஆமாம்......"

"அது சரி. வந்தால் வரட்டும். எனக்கு இனிப் பயம் இல்லை. அவன் பலதடவை வந்து விட்டுப் போனுன். வரட்டும், பாதகமில்லை."

"நீ சொல்வது சரி" என்ருள் ஒலேன். "இருந்தாலும் எனக்குத் தெரிந்ததைச் சொல்லி அவனைத் தண்டிக்க ஏற்பாடு செய்யட்டுமா?"

"வேண்டாம்! வேண்டாம்! எதற்கு அவ்வளவு சிரமம்?" என்ருள் இங்கர்.

ஒலேன் தன் கட்சியில் இருப்பதுபற்றி இங்கருக்குத் திருப்திதான். நஷ்டம் என்ன? ஒரு பாலேடைக் கட்டி என்ன பிரமாதம்? அந்தப் பாலேடைக் கட்டிக்கு ஒலேன் எத்தனை தாங்க்ஸ் சொன்னுள்: "நான் எப்பவும் இதுதான் சொல்லுவேன்.

இங்கருக்குத் தாராள புத்தி. இரண்டு கைகளாலும் அள்ளிக் கொடுப்பாள்! தாராள மனசு. ஆஸ் ஆண்டர்ஸ் பற்றி உனக்குப் பயமில்லாவிட்டாலும் அவனை வரவேண்டாம் என்று நான் சொல்லிவிடுகிறேன். தடுத்து விடுகிறேன். உனக்காக இதுகூடச் செய்ய வேண்டாமா நான்?''

இங்கர் சொன்னாள்: "அவன் வருவதால் நஷ்டம் எதுவும் இல்லை. எனக்கு ஒரு கெடுதலும் அவனால் செய்ய முடியாது.''

ஒலைன் காதைத் தீட்டிக்கொண்டு கேட்டாள்: "ஓ! புது வித்தை ஏதாவது கற்றுக்கொண்டு வந்திருக்கிறாயா?''

"எனக்கு இனிமேல் குழந்தைகள் பிறக்காது'' என்றாள் இங்கர்.

இருவருடைய பேச்சும் மர்மமான பேச்சுதான். இவள் விட்ட அஸ்திரத்துக்கு அவள் ஒரு அஸ்திரம் விட்டுவிட்டாள். சரியாகப் போச்சு. ஒலைனுக்குத் தெரியும்—ஆஸ் ஆண்டர்ஸ் இனி ஸெல்லன்ரா போகமாட்டான் என்பது. இனி அவன் எங்குமே போகமாட்டான். அவன் முதல் நாள் இறந்துவிட்டான்.........

இனிமேல் தனக்குக் குழந்தைகளே பிறக்காது என்று ஏன் இங்கர் சொன்னாள்? புருஷனுக்கும் அவளுக்கும் சரியில்லையா? அப்படி ஒன்றும் இல்லையே. நாயும் பூனையுமாக இல்லை அவர்கள் —இல்லவே இல்லை. அவரவர்கள் போகிற வழி வேறு—அதற்காக அவர்கள் சண்டை போட்டுக் கொள்வதில்லை. சிறு மனஸ்தாபம் வந்தால் அது சிறிது நேரம்தான் இருக்கும். மீண்டும் பழையபடி ஆகிவிடுவார்கள். இப்பொழுதெல்லாம் திடீரென்று நினைத்துக் கொண்டு பழைய மாதிரியே மாட்டுக் கொட்டிலில் ஒரு நாள் பூராவும் வேலைசெய்வாள்—அல்லது வயலில் பாடுபடுவாள் இங்கர். மீண்டும் அவள் மனசும் உடலும் தேறிவிட்டது போல இருந்தது. இந்த மாதிரி சமயங்களில் நன்றியுடன் அவளைப் பார்ப்பான் ஐஸக். அவன் அதிகம் பேசுகிறவனாக இருந்தால் வாய் திறந்து பின் வருகிற மாதிரி கேட்டிருப்பான். "ம்... இதென்ன இப்படி? என்ன அர்த்தம் இதற்கு?'' ஆனால் அவன் பேசுவதற்கு முன் அதிகம் தயங்குவான். அவன் புகழ்ச்சி காலம் கடந்துதான் வரும்! ஆகவே இங்கர் அதிக நேரம் வேலை செய்வதில்லை—கணவன் புகழும் வரையில் செய்வதில்லை.

ஐம்பது வயசாகும் வரையில் அவள் குழந்தைகள் பெறலாம். இப்போது அவளுக்கு வயசு நாற்பதுதான் ஆகிறது. அங்கே நகரில் பல விஷயங்களைக் கற்றுக்கொண்டு வந்திருந்தாள் அவள்.

தன் தந்திரங்களைத் தன்னிடமே உபயோகிக்கக் கற்று வந்தாளோ? சிறையிலிருந்த மற்ற கொலைகாரிகள் அவளுக்கு என்னென்ன கற்றுக் கொடுத்தார்களோ! அங்குள்ள ஆண்களும் பல கற்றுத் தந்திருப்பார்கள்—சிறை அதிகாரிகள், டாக்டர்கள் முதலியோர். ஐஸக்கிடம் ஒரு நாள் தன் குற்றத்தைப்பற்றி ஒரு வாலிப டாக்டர் சொன்னதைச் சொன்னாள்: "குழந்தைகளைக் கொல்வதில் குற்றம் என்ன? குறைகளில்லாத குழந்தைகளைக் கொன்றால் தான் என்ன? இவையும் ஆடு மாடுகள் போலத் தசை நரம்பு இவற்றாலானவைதானே!"

ஐஸக் கேட்டான்: "அந்த டாக்டர் கொடூரமானவனாக இருப்பான்."

"அவனா?" என்றாள் இங்கர். அவன்தான் அங்கிருந்தவர்களிலேயே அதி இரக்க சித்தமும் எளிய சுபாவமும் உள்ளவன் என்றாள் இங்கர். தனக்கு ஆபரேஷன் செய்ய ஏற்பாடு செய்ததெல்லாம் அவன்தான் என்றாள். வடுதானே இருக்கிறது என்றாள்.

ஆம். வடுமட்டும்தான் இருந்தது. அவள் நேர்த்தியான அழகான ஸ்திரீதான். உயரமானவள். அதிகப் பருமன் இல்லை. கருப்புத்தான். தலையில் நிறைய மயிர் இருந்தது. கோடையில் காலில் எதுவுமில்லாமல், கௌனைத் தூக்கிக் கட்டிக் கொண்டு, போவாள். அவள் கால்கள் அழகுக்கென்ன? ஐஸக் பார்த்து ஆசைப்படுவான்—அதில் தவறு என்ன?

அவர்கள் சண்டை போட்டுக் கொள்வதில்லை. கிடையாது. சண்டை போட ஐஸக்குக்குத் தெரியாது. தவிரவும் இங்கர் கெட்டிக்காரத்தனமாகப் பதில் சொல்லக் கற்றுக் கொண்டு விட்டாள். தீர்மானமாகச் சண்டை போடுவது என்று தீர்மானிக்க அவனுக்கு வெகு நேரமாகும். அதற்குள் அவன் மேல் வார்த்தை வலை போட்டுப் பின்னி விடுவாள் இங்கர். அவனுக்குப் பேச வாயே வராது. தவிர அவளிடம் அவனுக்குப் பிரியம் இருந்தது. காதல் இருந்தது. பதில் சொல்லுகிற அவசியம்கூட அவனுக்கு ஏற்படாது. இங்கர் குறைப்படவில்லை. இந்த மாதிரிப் புருஷன் தவங்கிடந்தாலும் கிடைக்குமோ? அவனை அனாவசியமாகச் சீண்டிவிட மாட்டாள் இங்கர். குறிப்பிட என்ன இருந்தது? ஐஸக் என்கிற மனிதனை யார் அலக்ஷியம் செய்ய முடியும். யார் அவமதிக்க முடியும்? அவள் அதிருஷ்டசாலி—இல்லாவிட்டால் அந்தப் புருஷன் கிடைத்திருப்பானா? எத்தனையோ மோசமானவன்

கிடைத்திருக்கலாம். வேலை செய்து தேய்ந்து விட்டானா அவன்? இல்லை. முன்போலக் களைப்பில்லாமல் வேலை செய்ய அவனால் முடியவில்லை என்பது உண்மைதான். ஆனால் அவன் இன்னமும் திடசாலிதான். பலவான்தான். அவன் பலம் வீணாகி விடவில்லை. உடல் நலம் குறைந்திருந்தது அவனுக்கு. வாழ்க்கையின் இலையுதிர் காலத்திலே அவன் அவள் போலவே காதல் புரிந்தான்.

ஆனால் அழகோ பெருமையோ கொள்ளக் கூடிய வகையில் அவன் இல்லை என்பது உண்மைதான். அவள் அந்த விஷயத்தில் பெருமை கொள்ளலாம். அவனைவிட அழகானவர்களை அவள் பார்த்திருக்கிறாள்—அழகான ஆண்கள். கையில் கழியுடன், கைக்குட்டை பறக்க, கழுத்தில் காலர் டையுடன்-நகரத்தில் நடமாடுவதைப் பார்த்திருந்தாள். ஐஸக்கை அவள் ஸ்தானத்தில் வைக்கவே நினைத்தாள் அவள். அவளுக்கு அதற்கு மேல் எட்டத் தகுதி ஏது? குடியானவன் அவன், காட்டாள். என்ன வாசனை போட்டாலும் அவனிடம் இயற்கையாக உள்ள மண் வாசனை போகுமா என்ன? ஆரம்பத்திலேயே அவள் மேலுதடு மட்டும் சரியாக இருந்திருந்தால் அவள் அவனுடன் வாழவே சம்மதித்திருக்கமாட்டாள்! அது உண்மை! எத்தனையோ பேர் அவளுக்காகப் போட்டி போட்டிருக்க மாட்டார்களா? எத்தனையோ நல்ல இடங்கள் கிடைத்திருக்குமோ? அவன் அவளுக்களித்த வீடும் வாசலும், வாழ்க்கையும் எளிமை நிறைந்தவை. தன் ஊரிலேயே யாரையாவது மணந்து உற்றார் உறவினருடன் அவள் வாழ்ந்திருக்கலாம்—காட்டிலே தனியாக வசிக்கும் மிருகம் மாதிரி இல்லாமல்! இது என்ன வாழ்க்கை? அவளுக் கேற்ற இடம் இது அல்ல!

வேடிக்கைதான்! ஒரே விஷயத்தை எவ்வளவு கோணங்களிலிருந்து பார்க்கலாம் என்று நினைத்துப் பார்த்தால் வேடிக்கையாகத்தான் இருக்கிறது. புதுக் கன்றுக் குட்டியைப் பார்த்து ஆனந்தப்பட இப்பவெல்லாம் இங்காரால் முடியவில்லை. ஐஸக் கூடை நிறைய மீன் கொணர்ந்தால் அது பற்றிக் கை கொட்டி ஆனந்தப் பட முடியவில்லை. ஆறு வருஷங்கள் அவள் இதை விடச் சிறந்த வாழ்க்கை வாழ்ந்து விட்டாள். இப்பவெல்லாம் ஐஸக்கைச் சாப்பிடக் கூப்பிட்டால் முன் போலப் பிரியத்துடன், இனிமையாகக் கூப்பிடுவதில்லை. "சாப்பாடு தயார்; சாப்பிட வாயேன்" என்பாள். வேண்டுமானால் சாப்பிடு—இல்லா விட்டால் போ என்கிற மாதிரியிருந்தது அவள் அழைப்பு. முதலில் கொஞ்சம் சிரமப்பட்டான்

ஐஸக்—ஆச்சரியப்பட்டான் இந்தமாறுதலைக்கண்டு. பிறகு அதைக் கவனிப்பதில்லை. "சாப்பாடு தயாராகி விட்டதென்று தெரியாதே!" என்று பதில் சொல்வான். நாழியாகவில்லையா என்பாள் இங்கர். சூரியனைப் பார்த்துக் காலா காலத்துக்குச் சாப்பிட வரவேண்டியது தானே என்பாள். ஐஸக் மேலே ஒன்றும் சொல்லமாட்டான்; வாயை மூடிக் கொண்டு விடுவான்.

ஹா! ஆனால் ஒரு தடவை அவள் அவனிடம் சரியாக மாட்டிக்கொண்டு விட்டாள்—அவனிடமிருந்து அவன் பணத்தைத் திருடி எடுத்துக் கொள்ள முயன்றாள். ஐஸக் லோபியல்ல. ஆனால் பணம் அவனுடையது. ஓ! அந்தத் தடவை அதோடு முடிந்து விடும் என்று சொல்கிற அளவுக்குப் போய் விட்டது. அப்படியும் இங்கர் கெட்ட தனமாகவும் செய்து விடவில்லை. எல்யூஸிஸுக்கு அனுப்பத் தான் பணம் எடுக்கப் பார்த்தாள். மகன் எல்யூஸிஸ் பணம் வேண்டும் என்று எழுதியிருந்தான். நகரிலுள்ள பணக்காரப் பையன்கள் மத்தியில் அவன் மட்டும் ஏழையாக இருக்கவேண்டுமா? அவள் தாய் தானே? முதலில் கணவனைக் கேட்டுப் பார்த்தாள். கிடைக்காது என்று தெரிந்ததும், தானே எடுத்து அனுப்பப் பார்த்தாள். முந்தியே சந்தேகமோ என்னவோ ஐஸக்குக்கு அல்லது தற்செயலாகக் கண்டு கொண்டது தானோ?—எப்படியோ கண்டு பிடித்து விட்டான். திடீரென்று இங்கரின் கைகள் இரண்டையும் பிடித்து அலாக்காகத் தூக்கிக் கீழே போட்டான் ஐஸக். கீழே விழுந்து உருண்டாள் இங்கர். ஐஸக் பலசாலி அல்லவா? யார் சொன்னது? ராக்ஷஸ பலம் இருந்தது அவனுக்கு. இங்கர் முனகிக் கொண்டே எடுத்த பணத்தைக் கொடுத்து விட்டாள்.

அப்பொழும் கூட ஐஸக் அதிகம் பேசவில்லை. இங்கர் அவனைப் பேசவிடாமல் தடுக்க வில்லை. அவன் ஒரு உறுமல் உறுமி விட்டுச் சொன்னது இது தான்; "ச்... சூ... நீ இனி இந்த இடத்தில் இருக்க லாயக்கில்லை."

அவனை அவள் அடையாளம் கண்டு கொள்ள முடியாத படி மாறி விட்டான் அவன். மனசில் அவன் இத்தனை நாளாக அடக்கி வைத்திருந்த கசப்பெல்லாம் வெளியே வந்து விட்ட மாதிரி இருந்தது.

மிகவும் சிரமமான துக்கமான நாள். நீண்ட இரவு. மீண்டும் ஒரு பகல். வெளியே போன ஐஸக் வேலை எதுவும் செய்யாமல் படுத்து விட்டான். வைக்கோல் போர் போட வேண்டும். யாரும் போடவில்லை. ஸிவெர்ட் தன் அப்பாவுடன் இருந்தான்.

இங்கருடன் லெபல்டினும், ஆடு மாடுகளும் இருந்தன. அப்படியும் தனிமை தாளவில்லை இங்கருக்கு. அழுது கொண்டே இருந்தாள் அவள். தனக்குத் தானே ஏதோ யோசித்துக் கொண்டு தலையை ஆட்டிக் கொண்டே இருந்தாள். இதற்கு முன் ஒரே ஒரு தடவை தான் அவள் இவ்வளவு உணர்ச்சி வசப்பட்டிருந்தாள். அது ஞாபகம் வந்தது—இப்பொழுது. அன்று பிறந்த குழந்தையின் கழுத்தை நெறித்த போதும் இப்படித்தான். அது ஞாபகம் வந்தது இப்போது.

ஐஸக்கும் அவன் பிள்ளையும் எங்கே? அவர்கள் அதிக நேரம் சோம்பலாக இல்லை. எல்லா வேலைகளுக்கும் இடையில் ஒரு படகு செய்திருந்தார்கள். பார்க்க அழகாக இல்லாவிட்டாலும், ஏரியில் மிதக்கக் கூடிய படகு—மீன் பிடிக்கலாம் அதில் போய். படகில் ஏறி ஏரியில் மீன்பிடிக்கப் போய் விட்டார்கள் இருவரும், வைக்கோல் எப்படியாவது போகட்டும், பார்த்துக் கொள்ளலாம் என்று.

அவர்கள் வீடு திரும்பும்போது மழைபெய்து வைக்கோல் வீணுகிவிடவில்லை. "சை போ!" என்று போனவர்கள் ஏராளமான மீனுடன் திரும்பினுர்கள். வைக்கோல் போர் இரவு போட்டு விடலாம். ஆனல் வரும்போது ஸிவெர்ட் கையை நீட்டிக் காட்டினுன். "ஹோ! ஹோ! அம்மாவைக்கோல் அடித்துப் போர் போட்டிருக்கிருள்" என்ருன். ஐஸக் தன் வயல்கள் பக்கம் திரும்பிப் பார்த்துக்கொண்டே "உம்...ம்" என்ருன். வைக்கோல் மலையாகக் குவிந்து கிடந்ததை எடுத்து உதறி அடித்துப் போர் போடத் தொடங்கியிருந்தாள் இங்கர். ஒண்டியாகச் செய்வது சிரமம்தான். சாப்பிட உள்ளே போயிருப்பாள். "ச்சூ..." என்று அவன் பேசியபிறகு இது செய்தது அதிகம்தான். அது தவிர ஆடு மாடு கறந்து சமைத்து—எவ்வளவோ வேலைகள் இருந்தன அவளுக்கு. "போய்ச் சாப்பிடு" என்ருன் ஐஸக் ஸிவெர்ட்டிடம்.

"நீ வரவில்லையா!"

"இல்லை."

சிறிது நேரம் கழித்து இங்கரே வீட்டு வாசலில் வந்து நின்ருள். மிகவும் தாழ்மையுடன் சொன்னுள்: "உடம்பைப் பார்த்துக் கொள்ள வேண்டாமா? சாப்பிடாமல்...உள்ளே வந்து சாப்பிடு" என்று கூப்பிட்டாள்.

ஐஸக் முணுமுணுத்தான். "உம்...ம்" என்ருன். இந்த நாட்களில் இங்கர் பணிவுடன் இருந்து தாழ்மையுடன் பேசுவதைக்

காண்பதே அரிதாகிக் கொண்டிருந்தது. அவளுடைய பிடிவாதம் விலவிலத்து விட்டது.

"என்னுடைய வைக்கோல் வாறுகோல் பல் விழுந்துவிட்டது. அதைச் சரிப்படுத்திக் கொடு. வைக்கோல் போர்ப் பாக்கியையும் போட்டு விடுகிறேன்" என்றாள் இங்கர். பண்ணையிலே அவன் தானே யசமான்? அவனிடம் ஒரு காரியம் ஆகவேண்டுமென்று வேண்டி நின்றாள் அவள். அவன் அலக்ஷியமாக முகத்தைத் திருப்பிக்கொள்ள வில்லை என்பதை நன்றியுடன் கவனித்தாள் அவள்.

"நீ வேலை செய்தது போதும்; போர் நாங்கள் போடுகிறோம்" என்றான் ஐஸக்.

"நானும் செய்கிறேனே! என்ன செய்துவிட்டேன் பிரமாதமாக?"

"வாறுகோலுக்குப் பல் கட்ட எனக்கு நேரமில்லை" என்கிறான் ஐஸக். "மழை வந்துவிடும்" என்று சொல்லிவிட்டு வேலை செய்ய நகர்ந்துவிட்டான்.

அவள் வேலை செய்யவேண்டாம் என்பதற்காகச் சொன்னது தான் அது. வாறுகோலுக்குப் பல் கட்ட இரண்டு நிமிஷம் பிடிக்கும். அதற்கு நேரமில்லாமல் என்ன? என்னவானால் என்ன? இங்கர் வைக்கோல் போர் போடுகிறாள்— பல் போன வாறுகோலை வைத்துக்கொண்டே. மூவரும் முனைந்து வேலை செய்தால் எவ்வளவு சிரமமான வேலையும் சீக்கிரமே ஆகிவிடாதா? வேலை மும்முரமாக நடக்கிறது. ஐஸக் வைக்கோல் போர் போடுகிற சிரமமான வேலைக்கும் ஒரு தேலர் திருடுவதற்கும் உள்ள சம்பந்தத்தை ஆராயப் பார்க்கிறான். அத்தனையும் போக அந்தச் சம்பவம் காரணமாக அன்று படகில் முதல் தடவையாக மீனும் பிடித்தாகிவிட்டது.

"ஹா! கடவுளே! உனக்கு நன்றி." என்றான் ஐஸக்.

## 15

மொத்தத்தில் அதுமுதல் ஒரு தினுசான மாறுதல் தொடங்கியது. இங்கர் இப்போது புது மாதிரி இங்கர் இல்லை— மீண்டும் பழையமாதிரி யாகிவிட்டாள். நடந்து போனதைப்பற்றி இருவருமே எதுவும் பேசவில்லை. ஒரு தேலர் காசுக்காகத் தான்

இங்கரிடம் நடந்துகொண்டதைப்பற்றி ஐஸக்குக்கே வெட்கமாக இருந்தது. எவ்வளவு சின்ன விஷயம் அது! பிச்சைக் காசு! கேட்டிருந்தால் அவனே கொடுத்திருப்பானே! அதுவும் எல்யூஸிஸுக்கு அனுப்பத்தானே! இல்லாவிட்டால் அவளுக்கா தேவை? இல்லை. தவிரவும் அந்தப் பணம் இங்கருக்கும் சொந்தமான பணம்தானே! தனக்கு அது எப்படிச் சொந்தமோ அதேபோல இங்கருக்கும் சொந்தம்தானே! ஐஸக் மிகவும் தாழ்மையுடன் பணிவுடன் நடந்துகொள்ளத் தொடங்கினான்.

அதற்குப் பிறகு இங்கரின் சுபாவம் பல தடவை பல தினுசாக மாறியது. மீண்டும் மாறினாள் இங்கர். பழைய புது இங்கர் புதுப் பழைய இங்கர் ஆனாள். பிறகு நகரத்து வழிகளை மறந்துவிட்டவள் மாதிரி மீண்டும் ஒரு ஏழைக் குடியானவனின் மனைவியாக எளிய வாழ்வு வாழத் தாயாராக இருப்பது போல இருந்தாள். அடே! தன் கணவன் பிடித்து ஒரு உலுக்கு உலுக்கி அவளை எறிந்தது என்ன மாறுதல் செய்துவிட்டது அவளிடம்! அவளுக்கே ஆச்சரியமாகத்தான் இருந்தது. அதுவும் நியாயந்தானே. அவள் என்ன நகரத்து ஸ்திரீயா? அவளும் திடசாலிதான்—நல்ல தேகக்கட்டுள்ளவள். அவள் அசடும் அல்ல. கெட்டிக்காரிதான். நகரத்துக் காற்று அவள் அடைபட்டுக் கிடந்த வருஷங்களில் ஏதோ கொஞ்சம் மனம் திரிந்துவிட்டது. திடமாக நின்ற ஒரு மனிதன்மேல் மோதிய பிறகுதான் அவளுக்கு மீண்டும் புத்தி வந்தது. ஆனால் அந்த மனிதன் தனக்கென்று காட்டில் ஏற்பட்டிருந்த இடத்தைவிட்டு அசைந்தவன் அன்று—அசைய நினைத்தவனும் அன்று. அவன் மனிதனுக்கென்று சுபாவமாக ஏற்பட்டிருந்த வேலைகளை முறையாகச் செய்து வந்தான்—பூமியைக் கிறிப் பலன் காண்பது அவன் தொழில். அதைவிட்டு அவனை எதுவும் அசைக்காது.

காலம் மாறுகிறது. இன்றைக்கு நாளை ஸ்திதிபேதலிக்கிறது. காலம் எப்போதும் நல்லதாகவே இராது. அடுத்த வருஷம் மீண்டும் மழை பெய்யவில்லை. பயிர் பச்சைகள் ஜலமின்றி வாடின. மெதுவாக, ஆனால் நிச்சயமாக, தானியம் வளர்ந்து கருகியது. மனிதனுடைய தைரியத்தையும், பொறுமையையும், நம்பிக்கையையும் சோதிப்பதற்கென்றே ஏற்பட்டவையோ இந்தக் காலங்கள்—இருக்கலாம். கண் எதிரில் பச்சை பட்டுத் தீய்ந்து கருகியது. உருளைக் கிழங்கு—அதிசயமான பயிர் அது. முழுவதும் வீணாகிவிடவில்லை. ஆனால் அசாதாரணமாகப் பூத்துக்

குலுங்கியது. புல் தரைகள் சாம்பல் நிறமாயின—ஆனால் உருளைக் கிழங்குச் செடி பூத்துக் குலுங்கியது. வானுலகத்துச் சக்திகள் எல்லாவற்றையும் கவனித்துக் கண்காணித்து வந்தானு என்பது உண்மையோ என்னவோ? ஆனால் பச்சையாக இருக்க வேண்டியவை எல்லாம் ஒன்று பாக்கியில்லாமல் தீய்ந்து கருகிக் கொண்டிருந்தன.

அப்போது ஒரு நாள் வந்தான் மாஜி லென்ஸ்மாண்டு கெய்ஸ்ஸலர். மறுபடியும் அந்தப் பக்கம் வந்தான். அவன் இறந்து விடவில்லை. உயிருடன்தான் இருந்தான் என்பதில் ஐஸக்குக்குத் திருப்திதான். இப்போது எதற்காக வந்திருந்தான்?

இந்தத்தடவை அப்படி ஒன்றும் பெரிய ஆச்சரியகரமான காரியம் ஒன்றும் இல்லை. நிலம் வாங்க வரவில்லை அவன். பணம் தரவும் வரவில்லை. பத்திரங்கள் எழுதவும் வரவில்லை. அவனே கொஞ்சம் சிரம தசையில் இருப்பதுபோல இருந்தது. ரொம்பவும் அழுக்கான ஆடைகள் அணிந்திருந்தான். தலைமயிரும், தாடியும் அதிகமாக நரைத்திருந்தன. அவன் கண்கள் முன்னைவிட அதிகமாகச் சிவந்திருந்தன. அவனுடன் ஒரு வேலைக்காரன்கூட இந்தத் தடவை வரவில்லை. அவன் கையில் பைகூட இல்லை. அவன் கையில் ஒரு பேப்பர், பத்திரம்கூட இல்லை.

“வந்தனம்” என்றான் கெய்ஸ்ஸலர்.

“வந்தனம்” என்று அவனை வரவேற்றார்கள் ஐஸக்கும் இங்கரும். “ஏது அபூர்வமாக?” என்றார்கள்.

கெய்ஸ்ஸலர் தலையை ஆட்டினான்.

“ட்ராண்ட்யெம்மில் நீ செய்ததற்கெல்லாம் என் நன்றி” என்று இங்கர் சொன்னாள்.

ஐஸக்கும் தலையை ஆட்டிக் கொண்டே “ஆமாம். என் நன்றியும் அதற்கு உனக்கு!” என்றான்.

ஆனால் கெய்ஸ்ஸலர்—அவன் மனசில் தோன்றுவதை எல்லாம் மறைத்து வைக்கப் பழகியவன். அவர்களுடைய நன்றியைக் காதில் வாங்காத மாதிரியே சொன்னான்: “அது சரி, ஆனால் நான் இப்படியே ஸ்வீடன் போய்க்கொண்டிருக்கிறேன்.”

நிலத்தின் விளைச்சல் தீய்ந்து கொண்டிருந்தது. பற்றி ஸெல்லன்ராவில் எல்லோருக்கும் வருத்தம். ஆனால் அந்தத் துக்கத்தின் மத்தியிலே கெய்ஸ்ஸலர் வந்தது அவர்களுக்கு ஆறுதலாகவும் இருந்தது—சந்தோஷமாகவும் இருந்தது.

அவர்களிடம் இருந்ததை அவனுக்கென்று தந்தார்கள். நல்ல உணவு அளித்தார்கள். அவன் செய்ததற்கு இன்னும் அதிகமாகவே பிரதியுபகாரம் செய்யலாமே!

ஆனால் வெளிப்படையாகக் கெய்ஸ்ஸலருக்கு எதுவும் கஷ்டங்கள் இருந்தமாதிரித் தெரியவில்லை. மிகவும் உத்ஸாகமாகப் பேசிக் கொண்டிருந்தான். வயல் வேலிகளை எல்லாம் பார்த்து மிகவும் திருப்தியாக இருக்கிறது என்று தெரிவித்தான். வழக்கம் போலவே நிமிர்ந்து நடந்தான். அவன் கையில் நூற்றுக் கணக்கான தேலர்களும் மனசில் அமைதியும் உள்ளவன் போலத் தான் இருந்தான். அவன் வந்ததுமே அந்தப் பண்ணை பிரகாசம் பெற்றமாதிரி இருந்தது. ஹோ ஹோ என்று சிரித்து அமர்க்களம் பண்ணவில்லை அவன்—ஆனால் இனிமையாகப் பேசினான். அவ்வளவுதான்.

"நேர்த்தியான பண்ணை, இந்த ஸெல்லன்ரா. மிகவும் அழகான வயல்கள்," என்றான் அவன். "நீ ஆரம்பித்த பிறகு இங்கு வேறு பலரும் வந்து பண்ணைகள் தொடங்கி விட்டார்கள். நானே ஐந்து பண்ணைகள் எண்ணினேன். அதிகமும் இருக்கின்றனவோ?"

"ஏழு பண்ணைகள் இருக்கின்றன இப்போது. பாதையிலிருந்து தெரியாத இடத்தில் வேறு இரண்டு பண்ணைகள் உண்டு."

"ஏழு பண்ணைகள். சற்றேறக் குறைய ஐம்பது ஆசாமிகள்! இன்னும் சில நாளில் இங்கே நெரிசல் தாங்க முடியாது. இங்கே பள்ளிக்கூடம் கூடத் தொடங்கியாகி விட்டது என்று கேள்விப் பட்டேன்!"

"ஆமாம்......"

"நான் முன்னமேயே சொல்லவில்லையா? ப்ரேடின் பண்ணைக்குப் பக்கத்தில் உங்கள் குழந்தைகளுக்கென்று பள்ளிக்கூடமும் ஏற்பட்டுவிட்டது. இனி என்ன கவலை? ஆனால் ப்ரேட் குடியானவனாகப் பண்ணை நடத்துவது எனக்கு ஆச்சரிய மாக இருக்கிறது!" என்று சொல்லிச் சிரித்தான் கெய்ஸ்ஸலர். "ப்ரேடால் பண்ணையில் என்ன வேலை செய்ய முடியும்? ஐஸக்கைப் பற்றியும் அவன் பண்ணையைப் பற்றி எல்லோரும்தான் சொல்லு கிறார்கள். இந்தப் பக்கத்திலே உன்னைப் போன்ற உழைப்பாளி வேறு யாரும் கிடையாது! அதுபற்றி எனக்கும் சந்தோஷமே! மரம் அறுக்கும் யந்திரசாலைகூட நிர்மாணித்து விட்டாயாமே!"

"ஆமாம். ஏதோ சின்னதாக ஒரு யந்திரசாலை. பெரிய விஷயம் ஒன்றுமில்லை. ஆனால் அது எனக்கு மிகவும் உபயோக மாக இருக்கிறது. தவிரக் கூலிக்கும் மரம் அறுத்துப் பல பண்ணைகளுக்குக் கொடுத்தேன்."

"பேஷ்! அதுதான் கெட்டிக்காரத்தனம்."

"நீங்களே அதைப் போய்ப் பார்வையிட்டு அதுபற்றி உங்கள் அபிப்பிராயத்தைத் தெரிவித்தால் எனக்குத் திருப்தியாக இருக்கும், லென்ஸ்மாண்டு" என்றான் ஐஸக்.

அதுபற்றிச் சகலமும் அறிந்தவன் போலத் தலையை ஆட்டினான் கெய்ஸ்ஸலர். பார்க்கிறேன் என்றான். பிறகு கேட்டான்: "உனக்கு இரண்டு பிள்ளைகள், இல்லையா! மற்றவன் எங்கே? நகரில் ஆபீஸில் குமாஸ்தாவாக இருக்கிறானா...ம்...ம்... இவன திடசாலியாக இருக்கிறான். இவன் பெயர் என்ன?"

"ஸிவெர்ட்."

"இன்னொருத்தன்?"

"எல்யூஸிஸ்."

"என்ஜினியர் ஆபீஸில் இருக்கிறானா? என்ன லாபம்? பட்டினி போடுகிற தொழில் அது. என்னுடன் வந்திருந்தானானால் அவனுக்கு லாபகரமாக இருக்கும்" என்றான் கெய்ஸ்ஸலர்.

"ஆமாம்" என்றான் ஐஸக் மரியாதையாக. கெய்ஸ்ஸலர் பற்றி அவனுக்கே அச்சமயம் பரிதாபமாக இருந்தது. குமாஸ்தா வைத்துக் கொள்ள தகுதியுடையவன் மாதிரித் தோன்றவில்லை அவனைப் பார்த்தால். மிகவும் சிரமப்பட்டுத்தான் அவனே பிழைக்க வேண்டும் போல இருந்தது. அந்தச் சட்டை—அதன் ஓரங்கள் எல்லாம் பிசுபிசு வென்று கிழிந்திருந்தன.

"ஒரு புதுச்சட்டை தைத்துத் தருகிறேனே! இந்தத் துணி நன்றாக யிருக்கும்" என்று இங்கர் தன்னிடமிருந்த நல்ல துணியைக் காட்டினாள். மிகவும் நேர்த்தியான துணி அது.

"தாங்க்ஸ். வேண்டாம். இப்போ தேவையில்லை" என்றான் கெய்ஸ்ஸலர். பிறகு மீண்டும் எல்யூஸிஸைப் பற்றிச் சொன்னான். "என்னுடன் பையன் வந்திருந்தானானால் நல்லது. எனக்கும் ஒரு குமாஸ்தா மிக மிகத் தேவைதான்." தன் சட்டைப் பையிலிருந்து ஒரு சிறிய வெள்ளிப் புகையிலைப் பெட்டியை எடுத்துக் கையில் வைத்துக் கொண்டு சிறிது நேரம் உட்கார்ந்திருந்தான். அவனிடம் இருந்த உயர்ந்த பொருள் அது ஒன்றுதான் போலும்.

கெய்ஸ்ஸலர் அமைதியில்லாமல் பேசினான். ஒரு விஷயத்தி லிருந்து இன்னொன்றுக்குத் தாவினான். வெள்ளிப் புகையிலைப் பெட்டியை மறுபடியும் சட்டைப் பைக்குள் போட்டுக் கொண்டு சொன்னான்: "என்ன, உன் வயல்களெல்லாம் காய்ந்து கிடக்கிறதே! பசுமையே இல்லையே! என்னோடு வா ஸிவெர்ட்."

திடீரென்று எழுந்தான், சாப்பிடுவதை நிறுத்திவிட்டு. இங்கருக்குச் சாப்பாடு பற்றி "தாங்க்ஸ்" சொல்லிவிட்டு, ஸிவெர்ட் பின் தொடர மறைந்து விட்டான்.

ஆற்றைத் தாண்டிப் போனார்கள் இருவரும். நாலு பக்கமும் பார்த்துக்கொண்டே வந்தான் கெய்ஸ்ஸலர். "இதோ" என்றான். ஓரிடத்தில் நின்றுவிட்டான். பிறகு ஸிவெர்ட்டுக்கு விவரமாகச் சொன்னான்: "இதோ ஆறு நிறைய ஜலம் போகிறது. உன் நிலம் காய்வானேன்? நாளைக்கே உன் வயல்களெல்லாம் மீண்டும் பசுமையாகிவிடுமே! நான் செய்து காட்டுகிறேன் பார்" என்றான்.

ஆச்சரியத்துடன் ஸிவெர்ட் "நிஜம்மாவா?" என்றான்.

"இதோ இங்கிருந்து சரிவாக வாய்க்கால் வெட்டு. பூமி பொல பொலவென்றிருக்கிற பூமி. கரைகள் சரியாமல் பலகைகள் போட்டுக் கட்டு. வீட்டுக்குப் போய் மண் வெட்டி எடுத்து வா! இங்கே ஆரம்பி. நான் கோடு போட்டுத் தருகிறேன் —அது நெடுக வாய்க்கால் வெட்டு."

அவனுடைய பூட்ஸுகள் சொத சொதவென்று ஈரமாகி விட்டன. வீட்டுக்கு ஓடினான். வெட்ட முடியாத சில இடங்களுக்கு ஐஸக்கைக் குழாய்கள் தயார் செய்யச் சொன்னான். ஐஸக் ஆக்ஷேபித்தான்—ஜலம் வயல் வரையில் வராது. அதற் குள்ளாகவே காய்ந்த அந்த பூமி அத்தனையும் குடித்துவிடும் என்றான். கெய்ஸ்ஸலர் சொன்னான்: "அதனாலென்ன? பூமியும் கொஞ்சம் ஜலம் சாப்பிடட்டுமே. தண்ணீர் வயலுக்குப் பாய சிறிது நேரம் பிடிக்கும். அதனால் பாதகமில்லை. உரிய காலத்தில் ஜலம் ஏறும். வயல்கள் பூராவும் நாளைக்கே மீண்டும் பசுமையாகிவிடும்!"

"ஓ" என்றான் ஐஸக். நீண்ட பலகைகளைச் சேர்த்துத் தைத்துக் குழாய்கள் மாதிரி—ஆனால் சதுரமாகச் செய்தான்.

மீண்டும் ஸிவெர்ட்டைத் தேடிக்கொண்டு ஓடினான் கெய்ஸ்ஸலர். "ரைட், ரைட். இந்த மாதிரிதான் வேலை செய்ய வேண்டும். வாய்க்காலைச் சமமாக வெட்டு. கெட்டிக்காரன் நீ—நான்தான் ஏற்கனவே சொன்னேனே! நான் அடித்திருக்கிற முளைகளோடு வாய்க்காலை வெட்டிவா. பெரிய கல்லு, பாறை ஏதாவது

குறுக்கிட்டால் சுற்றி வெட்டு—ஆனல் சமமாக வெட்டு. அடித் தரை மேலாகவோ பள்ளமாகவோ இல்லாமலிருந்தால்தான் ஜலம் சுலபமாகப் பாயும். புரிகிறதா?"

மீண்டும் ஐஸக்கிடம் போனன். "ஹா! ஒரு குழாய் தயாராயிற்று? சரி. இன்னும் வேண்டித்தான் இருக்கும். அரை டஜனவது வேண்டியிருக்கும். செய்து முடி. நாளைக்கு இந் நேரத்துக்கு வயலெல்லாம் பசுமையாக இராதா?" கெய்ஸ்ஸலர் ஆனந்தமாகத் தொடையைத் தட்டிக்கொண்டே உட்கார்ந்தான். மின்னல் வேகத்தில் சிந்தித்தான். வார்த்தைகளைக் கொட்டி அளந்தான். "இங்கு தார், பிசின் ஏதாவது இருக்கிறதோ? இருக்கிறதா? நல்லது. முதலில் இந்தக் குழாய்கள் ஓரத்தில் ஒழுகும். ஆனல் ஜலத்தில் ஊறினல் பெரிதாகிக் கெட்டிப்பட்டு விடும். ஓக்கம் தடவினல் முதலில்கூட ஒழுகாது. அதுகூட உன்னிடம் இருக்கிறதா! எது வேண்டுமானல் உன்னிடம் இருக்கிறது ஐஸக்! என்ன? படகு செய்தாயா? அதில் மிச்சமா? அடேடே! அந்தப் படகைக்கூட நான் பார்க்கவேண்டும்."

கெய்ஸ்ஸலர் என்ன பேச்சுப் பேசினன்? எவ்வளவு சத்தியங்கள் செய்தான்? முன்னைவிட அதிகமாக ஆர்ப்பாட்டங் களும் அமர்க்களங்களும் செய்தான். ஒரு விஷயத்தை நாலு நாட்களுக்குச் சேர்ந்தாப்போல உத்ஸாகமாகச் செய்யமாட்டான். ஆனல் செய்கிற வரையில் உத்ஸாகமாகச் செய்வான் அவன். அவன் தனிப்பட்ட ஒரு தினுசான மனிதன்தான்—சந்தேகம் இல்லை. சமயத்துக்குத் தக்கபடி ஒன்றைப் பத்தாகச் சொல்லுவான். வயல்கள் எல்லாம் நாளைக்குள் பசுமையாகிவிடுமாமே! அது எப்படியாகும்? ஆனல் கெட்டிக்காரன் அவன். அந்த உத்ஸாகம் இல்லாவிட்டால் வேலை நடந்தேராது என்பதை அறிந்தவன் அவன். இந்த வருஷம் பயிர் பச்சைகளை ஸெல்லன்ராவில் காப்பாற்றியது கெய்ஸ்ஸலர்தான்—வேறு யாருமில்லை.

"எத்தனை தயாராயிற்று? போதாது. மரக் குழாய்கள் அதிகம் போட்டாயானல் வேலை மிக சுலபமாகிவிடும். இருபது அல்லது முடியுமானல் இருபத்தைந்து அடி நீளம் உள்ளவை யாகச் செய்! நீளமான பலகைகளை இணை. அதுதான் நல்லது. அறுவடை காலத்தில் பலன் அதிகமிருக்கும்" என்றுன் கெய்ஸ்ஸலர்.

மீண்டும் அவன் ஸிவெர்ட்டைத் தேடிக் கொண்டு ஓடினன்: "அதுதான் சரி, ஸிவெர்ட். நன்ருக ஒரு மனிதன் வேலையைச்

செய்கிருய் நீ! நல்லது. கவியைப் போல நன்ருக உன் அப்பா குழாய்கள் தயாரிக்கிருர். போய் இரண்டு எடுத்து வா. போட்டுப் பார்ப்போம்."

அன்று மத்தியானம் பூராவும் ஒரே அவசரம்தான். இவ்வளவு அவசரமாக அதற்குமுன் அந்தப் பண்ணையில் எந்த வேலையும் நடந்தது கிடையாது. அப்படி அவசரப்படுகிற அவசியமும் இராது—பழக்கமும் கிடையாது. சாப்பிடக்கூட இல்லை அவர்களுக்கு. ஆனல் ஆற்று ஜலமும் வாய்க்காலில் ஆனந்தமாக ஓடியது. அங்கே, இங்கே—சற்று ஆழமாக வெட்ட வேண்டியிருந்தது—குழாயை உயர்த்தியோ, தாழ்த்தியோ வைக்க வேண்டியிருந்தது. மற்றப்படித் தண்ணீர் வேகமாகவே ஓடியது. மிகவும் உலர்ந்துபோயிருந்த பாகங்களில் தண்ணீர் ஓடி ஈரமாக்கியபோது ஐஸக்கின் கண்களும் ஈரமாயின. "என் கடிகாரத்தைக் கொண்டுவர மறந்துவிட்டேன்" என்ருன் கெய்ஸ்ஸலர். "மணி என்ன இப்போது? பாரேன்; நாளைக்கு இந்நேரத்துக் கெல்லாம் வயலும் வெளியும் பசுமையாகிவிடும். பாரேன்" என்ருன்.

நடு ராத்திரியில் வாய்க்காலில் தண்ணீர் எப்படி ஓடுகிறது என்று பார்க்க எழுந்து வந்தான் ஸிவெர்ட்டு. அதே காரியத்துடன் அவன் அப்பா அவனுக்கு முன்னலேயே எழுந்து வந்து அதைப் பார்வையிட்டுக் கொண்டிருந்தான். ஹா! அந்தத் தினத்தை அவர்கள் மறக்கவே மாட்டார்கள்! எவ்வளவு காரியங்கள் நிகழ்ந்த தினம் அது.

ஆனல் மறு நாள் கெய்ஸ்ஸலர் நண்பகல்வரை தூங்கிக் கொண்டிருந்தான். எழுந்ததும் வாய்க்காலைப் பார்வையிடக் கூடப் போகவில்லை. படகையும் பார்க்கவில்லை. மரம் அறுக்கும் யந்திர சாலையையும் போய்ப் பார்க்கவில்லை. முதலில் இருந்த உத்ஸாகம் எல்லாம் போய்விட்டது. ஆனல் இரவு பூராவும் அத்தனை தண்ணீர் பாய்ந்தும் வயலும் வெளியும் பசுமையாகிவிட்வில்லை. அதுபற்றி அவன் மனசில் அதைரியம் தோன்றிவிட்டது. அதிகமான நிலம் ஈரமாகி யிருந்தது. சற்று நிதானமாகச் சொன்னன்: "ஒரே நாளில் ஆகிவிடுமா? இன்னும் ஜலம் பாய்ந்து நாலு நாள் ஆகாதா? ஆனல் பயப்படத் தேவையில்லை. பயிர் விளைச்சல் காணும் பாரேன்" என்ருன்.

அன்று பிற்பகலில் ப்ரேட் ஓல்ஸன் வந்தான். மலைச் சரிவிலிருந்து கற்கள் பலவற்றை ஒரு சாக்கில் கட்டிச் சுமந்து

கொண்டு வந்தான். அந்தக் கற்களைக் கெய்ஸ்ஸலர் பார்த்து அபிப்பிராயம் சொல்ல வேண்டும் என்ருன். "இவை சாதாரணக் கற்கள் அல்ல என்றுதான் எனக்குத் தோன்றுகிறது" என்ருன்.

கெய்ஸ்ஸலர் அந்தக் கற்களைப் பார்க்கக்கூட மாட்டேன் என்று சொல்லிவிட்டான். "பண்ணை நடத்துவது இப்படித் தானே?" என்ருன் அலக்ஷியமாக. "மலைச்சரிவிலே கற்கள் பொறுக்கிப் பணக்காரனுகிவிடுவதாக உத்தேசமோ உனக்கு!"

இப்படித் தன்னுடைய மாஜி எஜமான் தன்னைக் கடிந்து கொள்வது மாதிரிப் பேசியது ப்ரேடுக்குப் பிடிக்கவில்லை. அவனும் சூடாகவே திருப்பிக் கொடுத்தான், மரியாதையில்லாமல்: "நீ சொல்கிறதை எல்லாம் பற்றி எனக்கென்ன கவலை இப்போது?" தானும் மாஜி லென்ஸ்மாண்டும் சம அந்தஸ்துள்ளவர்கள் என்று நினைப்பவன் போலப் பேசினுன்.

"நீ முன் மாதிரியே இன்னமும் முட்டாளாகத்தான் இருக்கிருய்?" என்ருன் கெய்ஸ்ஸர். "உன் பொழுதை வீணுக்கிக் கொண்டிருக்கிருய்?"

"உன்னைப் பற்றி என்னவாம்?" என்ருன் ப்ரேட். "நீ என்ன செய்து கொண்டிருக்கிருயாம்? சொல்லேன். நீயும் முட்டாள்தான்! வேறு என்ன? சுரங்கம் வைக்க நிலம் வாங்கினுயே; அதை என்ன செய்தாயாம்? சும்மாத்தானே போட்டு வைத்திருக்கிருய், பணத்தையும் கொடுத்து விட்டு! ஹே! ஹே! நீ தான் முட்டாள்."

"போ, போய்ட்டுவா" என்று அவனை விரட்டினுன் கெய்ஸ்ஸலர். ப்ரேட் அதிக நேரம் தங்கவில்லை. கற்கள் கொணர்ந்திருந்த சாக்கு மூட்டையைத் தூக்கிக் கொண்டு, போகிறேன் என்றுகூடச் சொல்லாமல் போய்விட்டான்.

ஏதோ சிந்தனையில் ஆழ்ந்தவனுகக் கெய்ஸ்ஸலர் பேப்பரும் பென்சிலும் வைத்துக் கொண்டு கணக்குப் போட ஆரம்பித்தான். கனிப்பொருள் சுரங்கம் பற்றி அவன் ஏதோ கணக்குப் போடுகிற மாதிரி இருந்தது. சுரங்க வேலையைத் தொடங்கிவிட வேண்டியது தான். அந்தப் பூமியில் செம்பு நிறைய இருந்தது. சுலபமாகவே எடுக்கலாம். உடனேயே ஏதாவது செய்ய வேண்டியது தான்.

"இதை ஒரு வழியாக முடிக்க வேண்டும் என்று தான் நான் இந்தப் பக்கம் வந்தேன்" என்ருன் கெய்ஸ்ஸலர் ஐஸக்கிடம். "இங்கே வேலை தொடங்குவதாக உத்தேசம். கூடிய சீக்கிரமே தொடங்கிவிடுகிறேன். நிறைய ஆட்கள் தேவை. சரியாகத் தொடங்கினுல்தான் நல்லது. நீ என்ன நினைக்கிருய்?"

ஐஸக்குக்கு அவனிடம் அனுதாபம் இருந்தது. அவன் படுகிற சிரமம் பற்றிப் பரிதாபமாக இருந்தது. அவன் சொன்னதற்கு எதிராக எதுவும் சொல்ல இஷ்டமில்லை.

"உன் விஷயமும் தானே இது? சிரமப் பட்டுத்தான் ஆக வேண்டும்—சிரமம் இல்லாமல் முடியாது! சில சமயம் கும்பல் சேர்ந்தால் காலித்தனமாகவும் போய்விடும். கூச்சலும் சந்தடியும் தாங்காது. அதுவும் சுரங்கக் கூலிகள் என்றால் கேட்கவே வேண்டாம். குன்றின் சரிவில் வெடிமருந்து வைக்க வேண்டும்—அதுவும் உனக்குப் பிடிக்குமோ என்னவோ! ஆனால் கூட்டம் அதிகரித்தால் விலை வாசிகளுக்குக் கிராக்கி ஏற்படும். கடை கண்ணிகளில் உன் சாமான்களுக்கு நீ கேட்ட விலை கொடுப்பார்கள்"

"ஆமாம்" என்றான் ஐஸக்.

"அது தவிர சுரங்கத்தில் உனக்கும் பங்குண்டு. அதில் கிடைப்பதில் ஒரு பங்கு உனக்கும் உண்டு. நிறையக் கிடைக்கும் ஐஸக்."

ஐஸக் சொன்னான்: "எனக்குத் தான் நீங்கள் பணம்கொடுத்து விட்டீர்களே! நியாயமாகவே கொடுத்த பிறகு இன்னும் எதுவும் தேவையில்லை."

மறுநாள் கெய்ஸ்ஸலர் அவசரமாகக் கிளம்பிவிட்டான்; கிழக்கு நோக்கி, ஸ்வீடன் நோக்கிக் கிளம்பி விட்டான். ஐஸக் தானும் வருவதாகச் சொன்னதற்கு "வேண்டாம். தாங்க்ஸ்" என்றான். நடந்து தனியாக அந்த மாதிரிப் பயணம் கிளம்பியது பரிதாபமாக இருந்தது. இங்கர் அவனுக்கு ஒரு சோற்று மூட்டை கட்டிக் கொடுத்தாள். நல்ல உணவாகத் தயார் செய்து கொடுத்தாள். சில கேக்குகள் கூடச் செய்து தந்தாள். அது கூடப் போதாது—பாலும் முட்டைகளும் தந்தாள். ஆனால் அவற்றை எடுத்துப் போக அவன் மறுத்துவிட்டான். இங்கருக்கு வருத்தமாக இருந்தது.

அவர்களுடைய உணவுக்கும் உதவிக்கும் பிரதியாக பணம் கொஞ்சமாவது கொடுக்காமல் போவது சிரமமாக இருந்தது கெய்ஸ்ஸலருக்கும். ஏதோ தன்னிடம் நிறைய இருந்தமாதிரியும், அதில் போதுமானது கொடுத்துவிட்ட மாதிரியும் பாசாங்கு பண்ணினான். "இதோ உங்கள் சிரமத்துக்கு என்னாலானது!" என்று வெறுங் கையை மேசை மேல் வைத்தான். சிறுமி லெபல்டி னிடம் "இதோ குழந்தாய்! உனக்கு இது" என்று தன்னுடைய

வெள்ளிப் பொடி டப்பியை அவளிடம் கொடுத்தான். "அதை அலம்பிப் பின் ரிப்பன் முதலியன வைத்துக் கொள். வீட்டிலே யானல் இது மாதிரி நல்ல சாமான்கள் பல என்னிடம் இருக் கின்றன. கொடுத்திருப்பேன். இங்கு எதுவும் நான் கொண்டு வரவில்லை'' என்ருன்.

ஆனல் கெய்ஸ்ஸலர் போன பிறகும் அவன் வெட்டச் சொன்ன வாய்க்கால் இருந்தது. அதோ இருந்தது. இரவும் பகலும் அது வழியாக நீர் நிலத்தில் பாய்ந்தது. வயல் நாளடைவில் மீண்டும் பசுமையாயிற்று. உருளைக் கிழங்குச் செடிகள் பூப்பதை நிறுத்தின. பயிர்கள் ஓங்கி வளர்ந்தன.

பக்கத்துப் பண்ணைக்காரர்கள் எல்லோரும் இந்த ஆச்சரி யத்தைக் காண வந்தார்கள். தங்கள் கண்ணுலேயே அதைப் பார்க்க வந்தார்கள். மானேலாந்து பண்ணைக்காரன்—ஆக்ஸெல் ஸ்டிராம் வந்தான். மனைவியில்லாதவன் அவன். ஒண்டியாகவே நிலத்தில் உழைத்தவன் அவன். அன்று மிகவும் உத்ஸாகமாகப் பேசினன்—அவனுக்கு ஒரு பெண் உதவி செய்ய வருவதாக இருந்தாள். மனசிலிருந்த ஒரு பெரிய சுமையை இறக்கி விட்டவன் மாதிரிப் பேசினன். யார் அது அந்தப் பெண் என்று ஐஸக் கேட்கவில்லை. அவனும் சொல்லவில்லை. ஆனல் வருவதாகச் சொல்லியிருந்தது ப்ரேடேயின் பெண் பார்ப்ரோதான். பெர்கனுக்குத் தந்தி அடித்தால் அவள் வந்துவிடுவாள். தந்திச் செலவை ஆக்ஸெல்தான் தந்தான்—மற்றப்படி அவன் கஞ்சன் தான் என்ருலும், செட்டும் கட்டுமாக இருப்பவன்தான் என்ருலும், அவன்தான் தந்திச் செலவை ஏற்றுக் கொண்டான்.

புது வாய்க்காலைப் பார்க்க வந்தான் அவன். ஒரு கோடியி லிருந்து மறு கோடி வரை பார்த்தான். அவன் நிலத்திலே பெரிய ஆறு ஒன்றும் இல்லை. ஆனல் ஒரு சிறிய அருவி ஓடியது. அவனிடம் பெரிய மரப் பலகைகளும் இல்லை—குழாய்கள் செய்ய. ஆனல் அவன் நிலத்தில் அவனல் வாய்க்கால்கள் வெட்ட முடியும்; வெட்டுவான். இதுவரை சற்றுப் பள்ளமான இடத்தில் அவன் நிலம் இருந்ததால் அவன் பயிர்கள் அதிகமாக வாடவில்லை. வாடத் தொடங்கினல் அவனும் இந்தமாதிரி வாய்க்கால்கள் வெட்டுவான். தான் பார்க்க வேண்டி விரும்பியதைப் பார்த்து விட்டு உடனேயே திரும்பிவிட்டான் ஆக்ஸெல்—தன் நேரத்தை வீணுக்குபவன் அல்ல அவன்.

ப்ரேட் அப்படிப் போய்விட மாட்டான்.

ஓ! அந்த ப்ரேட். அவன் போன இடங்களில் எல்லாம் அந்த ஸெல்லன்ரா வாய்க்காலைப் பற்றியே பேசிக் கொண்டிருப்பான் அவன். "ஏர் உழுதால் அடியோடு உழவே கூடாது! நிலம் வற்றிவிடும். ஐஸக்கைப் பாரு, வாய்க்கால் வெட்டி ஜலம் பாய்ச்ச வேண்டி வந்துவிட்டது" என்று குறை கூறுகிற மாதிரிச் சொன்னான் எல்லோரிடமும்.

ஐஸக் பொறுமைசாலிதான். இருந்தாலும் ப்ரேடிடம் ஐஸக்குக்குக் கோபம்தான் வந்தது. பெருமையாகப் பீத்திக் கொண்டு அவன் ஸெல்லன்ரா வந்து போய்க் கொண்டிருந்தது அவனுக்குப் பிடிக்கவேயில்லை. தந்தி இலாகா வேலையால்தான் அப்படி அவன் ஓடியாடினான் என்று பிறர் நினைக்கப் பேசினான்: ஆனால் அவனுக்கு யாருடனாவது பேசிக் கொண்டே பொழுதைப் போக்குவதுதான் உகந்த காரியமாக இருந்தது. ஆனால் அந்தத் தந்தி இலாகா வேலையையும் அவன் சரிவரச் செய்யவில்லை. இலாகாவிலிருந்து அவனுக்கு இரண்டொரு எச்சரிக்கைகள் வந்துவிட்டன. அவன் தந்தி இலகா பற்றி அவ்வளவாகக் கவலைப்படுவது கிடையாது. இப்போது அவன் ஞாபகம் எல்லாம் மலைச்சரிவிலே சுரங்க வேலை செய்வது பற்றித்தான். அவன் கனவில்கூட அதுதான். ஒரு நொடியில் பணக்காரனாகிவிடுவது என்று தீர்மானித்திருந்தான்.

அவன் ஸெல்லன்ராவுக்கு வருவது அதிகமாகிக் கொண்டிருந்தது. சுரங்கவேலை துவக்கிவிடலாம் என்று நம்பிக்கை அவனுக்கு. தலையை ஆட்டிக்கொண்டே அவன் சொல்லுவான்: "அதுபற்றி முழு விவரமும் அதற்குள் உன்னிடம் சொல்லக் கூடாது. ஆனால் இந்தத் தடவை நான் பணக்காரனாகிவிடுவேன். சந்தேகத்துக்கிடமேயில்லை." மணிக்கணக்காக வீண் வேலையும் வீண் பேச்சுமாக அவன் காலத்தைக் கடத்திக் கொண்டிருந்தான். தினம் போய் மலைச்சரிவிலே யிருந்து ஒரு மூட்டை கற்கள் பொறுக்கிக்கொண்டு வருவான். ஏதோ பிரமாதமான வேலை செய்துவிட்டவன் போல "உஸ் உஸ், அப்பாடா" என்பான். அவன் பண்ணையிலே ஏதோ கொஞ்சம் சிறு உருளைக் கிழங்குகள் விளைந்தன. வேறு எதையும் பயிர் செய்து கவனிப்பதில்லை அவன். வைக்கோல் போர்கூடக் கிடையாது—இங்கும் அங்கும் முளைக்கிற புல்லை வெட்டிக் கட்டுக் கட்டிப் போட்டிருப்பான்; அவ்வளவுதான். நிலத்தில் உழைத்துப் பலன் காணப் பிறந்தவன் அல்ல அவன்! முடிவு நெருங்கிக் கொண்டிருந்தது. அவனுடைய வீட்டுக்கூரை

அநேகமாக அழிந்துவிட்டது. வீட்டுப் படிகள் உளுத்துத் தேய்ந்து சரிந்துவிட்டன. மாவு அறைக்கும் கல், மேல்பாகம் தனியாகக் கிடந்தது. வண்டி இன்னமும் திறந்த வெளியிலேதான் கிடந்தது.

இந்தமாதிரிச் சின்ன விஷயங்கள் அவன் மனசில் உரைத்துத் தொந்தரவு கொடுப்பதேயில்லை. அவற்றைஎல்லாம்பற்றி அவன் கவலையே படுவது கிடையாது. அவன் குழந்தைகள் எதையாவது பெயர்த்து எடுத்து விளையாடினால், அவன் கடிந்து கொள்ளமாட்டான். அவனும் அவர்களுடன் விளையாடுவான். மொத்தத்தில் சோம்பேறி. எது நேர்ந்தாலும் அதைரியப்பட மாட்டான் அவன். ஆனால் அதற்காக எதுவும் சரிவர நடப்பதற்கு உழைக்கவும் மாட்டான். ஏதோ எப்படியோ ஜீவனம் நடந்து கொண்டிருந்தது. ஒவ்வொரு நாளும் கழிந்து கொண்டிருந்தது. கடன் வாங்கித்தான் சாப்பிட்டுக் கொண்டிருந்தான்—எல்லாக் கடைக்காரர்களுக்கும் அவன் கொடுக்கவேண்டியது ஏராளமாக இருந்தது. எத்தனை நாட்களுக்குக் கடைக்காரர்கள் கடன் கொடுத்துக் கொண்டிருப்பார்கள்? கடைக்காரர்கள் பலர் இப்படி வாய்திறந்துகூடச் சொல்லிவிட்டார்கள். அவர்கள் பேரில் பிசகு இல்லை—அதை ப்ரேடும் ஒப்புக்கொண்டான். பாரேன்—சுரங்கத்தில் அவன் கோடிக் கணக்கிலே சம்பாதித்துவிடுவான்; பாரேன். கொடுக்கவேண்டியதை எல்லாம் ஒரே நாளில் கொடுத்துவிடமாட்டானா?

ஓ! ஆனால் ப்ரேட் எப்படியும் பண்ணையை விற்றுவிடுவான் நஷ்டத்துக்கானாலும் விற்றுவிடலாம். ஏனென்றால் பண்ணை வாழ்வு தனக்கேற்ற வாழ்வு அல்ல என்று அவன் தீர்மானித்து விட்டான். கிராமத்தில் போய் மீண்டும் மக்களிடையே, நாகரிகமான மக்களிடையே வாழ விரும்பினான் அவன். அங்கு வாழ்க்கை ரம்மியமான வாழ்க்கை—தினசரி, நிமிஷத்துக்கு நிமிஷம். போராடுகிற வாழ்க்கை அல்ல அது! வெளியுலகத்தை அவன் மறந்துகூட விரும்பவில்லை. வெளியுலகத்தையும் அதன் வாழ்க்கை நலன்களையும் எண்ணி ஏங்கினான் அவன். அங்கு கிராமத்தில் லென்ஸ்மாண்டுக்கு உதவியாளாக இருந்து அவன் பார்த்த அனுபவங்களையும், அவன் அனுபவித்த சுகங்களையும், கச்சேரிகளையும், விருந்துகளையும், ஆட்டங்களையும், நண்பர்களையும் அவனால் மறக்க முடியவில்லை. அதுவும் கிறிஸ்துமஸ் சமயத்திலும் மற்றும் விடுமுறை நாட்களிலும் கிராமத்திலும் நகரிலும் உள்ள

குதூகலமான கொண்டாட்டங்களுக்கு ஈடு அவையேதான். தன்னைப்போன்ற பண்பட்ட இதயங்களுடன் பேச அவனுக்கு ஆசை. ஆனால் இங்கு பேச யார் இருந்தார்கள்? சில நாள் ஸெல்லன்ராவில் இங்கருடன் பேசுவது அவனுக்குச் சாத்தியமாக இருந்தது. பிறகு அவள்கூட மாறிவிட்டாள். இப்போதெல்லாம் நகரத்தையும் நகரத்தில் அவள் கண்ட காக்ஷிகளேயும்பற்றி வம்பளக்க அவள் உட்காருவதே கிடையாது. வேலே வேலே என்று நகர்ந்துவிட்டாள். தவிரவும் சிறையில் இருந்தவள்; தன்னைப் போன்றவன் அவளுடன் பேசிக்கொண்டிருப்பது தவறுதானே!

இல்லை. அவன் செய்தது தவறு. பண்ணை பண்ணை என்று அவன் ஆசைப்பட்டு கிராமத்தில் தனக்கிருந்த ஸ்தானத்தை விட்டு விட்டு வந்தது பிசகு. அது அசட்டுத் தனம்தான். இப்போது லென்ஸ்மாண்டுக்குப் புதுக் குமாஸ்தா ஸர்வேயர் வந்து விட்டான். டாக்டருக்கு வண்டி ஓட்டவும் புதுசாக ஒருவன் வந்து விட்டான். இதெல்லாம்பற்றி அவனுக்குப் பொருமையாக இருந்தது. அவன் உதவி தேவையாக இருந்த இடத்தைவிட்டு அவன் ஓடி வந்துவிட்டான்—அவனை நம்பியிருந்தவர்களைக் கை விட்டு விட்டான். அவர்கள் புது ஆசாமிகளை நம்பிக் கொணர வேண்டியதாகிவிட்டது. அவனில்லாவிட்டாலும் கூடச் சமாளித்துக் கொள்ளலாம் என்கிற நிலைமை ஏற்பட்டு விட்டதே! உண்மை தான்—புதுசாக வந்தவர்கள் உபயோகமற்றவர்கள்தான். சொல்லப் போனால் கிராமத்து மக்கள் தங்களுக்கு இந்த ப்ரேட் ஓல்ஸன் மிக மிகத் தேவை என்று உணர்ந்து மேளதாளத்துடன் அவனைத் திரும்பவும் அழைத்துச் செல்லவேண்டும்.

அது மட்டுமா? பார்ப்ரோ வேறு இருந்தாள்—ஸெல்லன்ராவுக்கு அவள் உதவி தேவை—வேலைக்காரியாக அனுப்பலாம் என்று அவன் எண்ணியது என்ன மடத்தனம்! அது அவன் செய்த முட்டாள்தனம் அல்ல—அவன் மனைவியின் தூண்டுதலின் பேரில் நடந்த விஷயம். ஆனால் அது பலித்தால் நல்ல யோசனை தான். அவளுடைய எதிர்காலத்தைப் பற்றியும் பிறகு அதிகமாகக் கவலைப்பட வேண்டியதில்லை. நகரில் இரண்டு பிரும்மச்சாரிகளுக்கு சமைத்துப் போட்டுக்கொண்டிருப்பதெல்லாம் சரிதான். அது எத்தனை நாளுக்கு நடக்கும்? முடிவில் என்ன லாபமிருக்கும்? பார்ப்ரோ அழகிய யுவதி. ஆடம்பரமாகவும் நேர்த்தியாகவும் ஆடை அணிவாள். இங்கு வந்தால் அவளுக்கு நல்லகாலம் பிறக்கலாம். ஸெல்லன்ரா பண்ணையில் இரண்டு வாலிபர்கள் இருந்தார்கள்.

ஆனால் இந்தத் திட்டம் நிறைவேறாது என்று ப்ரேட் கண்டு கொண்டதும், அவன் வேறு ஒரு திட்டம் போட்டான். என்ன சொன்னாலும் சிறை சென்று வந்தவளுடைய மகளை அவன் பெண் கல்யாணம் செய்து கொள்வதென்பது அவ்வளவு உசிதமான விஷயமா என்ன? ஸெல்லன்ரா வாலிபர் களைத் தவிர அந்தப் பிராந்தியத்தில் வேறு வாலிபர்கள் இல்லையா என்ன? ஆக்ஸெல் ஸ்டிராம் இருந்தான். அவனுக்குப் பண்ணை யிருந்தது. அதில் வீடும் வாசலும் இருந்தது. கல்யாணமாவில்லை. செலவு செய்யாமல் செட்டும் கட்டுமாக மீதம் பிடித்து ஆடு மாடுகள் கூடக் கொணர்ந்து பண்ணையில் சேர்த்துவிட்டான். "வா. நீ அவளை வேலைக்கு உதவியாக வைத்துக் கொண்டா யானால் ஒரு கவலையும் இராது உனக்கு. அதுபற்றி நான் உறுதி கூறுவேன் உனக்கு" என்று சொன்னான் ப்ரேட் அவனிடம். "இதோ பார். இது அவள் படம். பார். உனக்கே தெரியும்."

ஒரு வாரத்தில் பார்ப்ரோவும் வந்தாள். ஆக்ஸெல் வைக்கோல் அறுத்துக் காய வைத்துக் கட்டிக் கொண்டிருந்தான். பகலில் அறுப்பும் இரவில் வைக்கோல் தயார் செய்வதுமாக இரண்டாள் வேலையை ஒருவனாகவே செய்து அவஸ்தைப்பட்டுக் கொண்டிருந்தான். உதவி செய்ய பார்ப்ரோ வந்து சேர்ந்தாள். உண்மையிலே அது அவன் அதிருஷ்டம் தான். வேலையைக் கண்டு பயந்து விடுகிறவள் அல்ல பார்ப்ரோ. துணிகளைத் துவைத்தாள். வீடு வாசலெல்லாம் சுத்தம் செய்தாள். சமைத்தாள். ஆடு மாடுகளைக் கறந்தாள். கால் நடைகளைக் கவனித்துக் கொண்டாள்; வைக்கோல் போர் போடவும் உதவ முன் வந்தாள். ஆக்ஸெல் அவளுக்கு நல்ல கூலி தருவது அதனால் நல்லது; நஷ்டம் வராது என்று தீர்மானித்தான்.

அவள் நகரத்துப் பெண்மணியின் படமாக மட்டுமில்லை. அவள் உண்மையிலேயே நன்றாகவும் இருந்தாள். உயரமாக, மெல்லியவளாக இருந்தாள். அனுபவம் முதிர்ந்தவள். புத்திசாலி. அவள் குழந்தையல்ல. முகத்தில் இவ்வளவு கோடுகள் ஏன்? இவ்வளவு சதைப்பற்று இல்லாமை ஏன் என்று ஆச்சரியப்பட்டான் ஆக்ஸெல். "உன் முகம் தெரிகிறது. ஆனால் நீ உன் போட்டோவைப்போல இல்லை" என்றான்.

"பிரயாண அலுப்பு. அதுவும் நகரத்துக் காற்றிலே வசிப்பவர்கள் இப்படித்தான் இருப்பார்கள்" என்றாள் பார்ப்ரோ.

உண்மையில் அதி சீக்கிரமே அவள் பெருத்து விட்டாள். அழகாகவும் ஆகி விட்டாள். "நான் சொல்வது உண்மை. டவுன் காற்றும் அந்தப் பிரயாணமும் மனிதர்களை உருத் தெரியாமல் அடித்துவிடும்" என்றாள். பெர்கன் நகரில் தன்னைப் போன்ற பெண்களைச் சூழ்ந்திருந்த அபாயங்களைப் பற்றியும் லேசாகச் சொன்னாள்—சர்வ ஜாக்கிறதையாக இருந்தால் தான் பிழைக்கலாம் என்றாள். பேச்சோடு பேச்சாகத் தனக்கு நகரத்திலிருந்து பத்திரிகை வந்தால் தேவலை என்றாள்; ஒரு பெர்கன் பேப்பர்; வாசித்து உலகத்து விஷயங்களைத் தெரிந்து கொள்ளலாம். பேப்பர் படிக்கும் வழக்கம் செய்து கொண்ட பிறகு, பேப்பர் இல்லா விட்டால் என்னவோ போலிருந்தது. நாடகக் கொட்டகையோ சங்கீத சபையோ என்ன இருந்தது இங்கே? பேப்பராவது வந்தால் நல்லது என்றாள்.

கோடையில் அவள் செய்த உதவிகள் பற்றி ஆக்ஸெலுக்குத் திருப்திதான். ஆகவே ஒரு பெர்கன் பேப்பர் வரவழைக்கச் சம்மதித்தான். அது மட்டுமல்ல: தன் பண்ணைக்கு அடிக்கடி ப்ரேட் குடும்பத்தார் வந்து போவதையும் சஹித்துக்கொண்டான். வந்தால் பேசுவதுடன் நிற்கிறதா? உணவு குடி என்றெல்லாம் செலவு ஆனதைப் பாராட்டாமல் பொறுத்துக் கொண்டான். இந்த வேலைக்காரப் பெண்ணிடம் தனக்கு மதிப்பு இருக்கிறது என்று காட்டிக் கொள்ள விரும்பினான் அவன். ஞாயிற்றுக்கிழமை பிற்பகலில் பார்ப்ரோ தனது ஸிதாரை மீட்டித் தன்னுடைய கட்டைத் தொண்டையால் பாடுவாள்—அதை விட இன்பமான விஷயம் வேறு என்ன இருக்க முடியும்? அவள் வந்த பிறகு தானே வீடு வீடாயிற்று. அவளுடைய அழகான பாட்டுகளும் அவள் குரலும் அவனுக்கு மிகவும் பிடித்திருந்தன.

உண்மையில் அந்தக் கோடையிலே பார்ப்ரோவின் குணாதிசயங்களில் வேறு சிலவும் அவனுக்குத் தெரிய வந்தன. ஆனால் மொத்தத்தில் சொல்லப் போனால் அவனுக்குத் திருப்திதான். அவன் ஏதோ நினைத்துக் கொண்டு, ஏதாவது கேட்டால் ஏதாவது சட்டென்று பதில் அளித்து விடுவாள். சடக்கென்று பேசுவாள். சண்டைக்காரி மாதிரி பேசுவாள். ஒரு சனிக்கிழமை யன்று அவன் சில சாமான்கள் வாங்கி வரக் கிராமத்துக்குப் போனான். அன்றைக்கென்று அவளும் அங்கிருந்து போய் விட்டாள். ஆடு மாடுகளைக் கவனிப்பது யார்? அது பற்றி அவளைத் திட்டினான் ஆக்ஸெல். எங்கே போனாள் அவள்? அவள் பிறந்த

வீட்டுக்கு. ப்ரேடாப்ளிக்குக்குத் தான் போனுள்—என்ருலும்......
தன் குடிசைக்கு அன்றிரவு திரும்பியதும், பார்ப்ரோ அங்கில்லை என்று கண்டு கோபம் வந்தது அவனுக்கு. ஆடு மாடுகளுக்குத் தீனிபோட்டுக் கறந்து விட்டு, தானே சமைத்துச் சாப்பிட்டு விட்டுப் படுத்தான். காலையில் பார்ப்ரோ வந்தாள். "மீண்டும் மரத் தரை மேல் கால் வைத்தால் எப்படி யிருக்கும் என்று பார்ப்பதற்காக என் வீட்டுக்குப் போனேன்!" என்ருள் அவள் அலக்ஷியமாக. ஆக்ஸெல் என்ன சொல்வது? அவனுடைய வீட்டில் மண் தரைதானே! என்ன பிரமாதம்—சில பலகைகள் வாங்கி வந்து தன் வீட்டுத் தரையையும் பலகைகளால் ஆனதாகச் செய்து விடலாம் என்ருன். இப்படி விட்டுக் கொடுத்து ஆக்ஸெல் பதில் சொன்னதும், பார்ப்ரோவுக்குத் தான் செய்து விட்ட பிசகுக்கு வருத்தம் ஏற்பட்டது. அந்த வருத்தத்தில் அது ஞாயிற்றுக் கிழமை என்று கூடப் பாராமல் ஒரு ஆள் வேலை செய்து முடித்தாள் அன்று.

அவள் இப்படி வேலை செய்வதைப் பார்த்து அவளுடைய நல்ல சுபாவத்தைக் கண்டு உருகினுன் ஆக்ஸெல். அவளுக்கென்று கிராமத்திலிருந்து தான் வாங்கி வந்திருந்த ஒரு நேர்த்தியான குட்டையைக் கொடுத்தான். அவளுக்காக வாங்கியது தான் அது என்ருலும் அன்று கொடுப்பதாக முதலில் அவனுக்கு உத்தேசம் இல்லை—அவளிடம் இருந்து பதிலுக்கு எதுவும் பெற்றுக் கொள்ளாமல் கொடுப்பதாக அவன் உத்தேசிக்கவில்லை. அவள் அதை வாங்கி உடனே தன் கழுத்தைச் சுற்றி அணிந்து கொண்டாள். திரும்பிக் காட்டித் தனக்கு நன்ருயிருக்கிறதா என்று கேட்டாள். அவள் எப்பவுமே ஆக்ஸெல் கண்களுக்கு நன்ருகத்தான் இருந்தாள்—இப்போது வழக்கத்தை விட அதிகமாகவே நன்ருகயிருந்தாள். தன்னுடைய நேர்த்தியான குல்லாயைக்கூட அவளுக்கு எடுத்துக் கொடுத்தான் ஆக்ஸெல். பார்ப்ரோவுக்கு ஆனந்தம் தாங்கவில்லை. அவளும் அவனைப் புகழ்ந்து இரண்டு வார்த்தைகள் சொன்னுள்: "இந்தக் குட்டையை தலைக்கு அணிந்துகொண்டு நான் மாதா கோவிலுக்குப் போவேன். தொப்பியைவிட இது நன்ருக இருக்கிறது. பெர்கனில் சீமாட்டிகள் எல்லோரும் தொப்பிகள் தான் அணிவார்கள்."

மீண்டும் இருவரும் நெருங்கிச் சிநேகிதமாகி விட்டார்கள்.

ஆக்ஸெல் கிராமத்துத் தபாலாபீஸிலிருந்து தான் வாங்கி வந்திருந்த பெர்கன் பேப்பரை வெளியே எடுத்தான். உடனேயே

அதை வாசிக்க உட்கார்ந்துவிட்டாள் பார்ப்ரோ—ஒரு தெருவில் நகைக் கடையில் திருட்டுப் போய்விட்டது. வேறு ஒரு தெருவில் இரண்டு நாடோடிகள் அடித்துக்கொண்டு கலாட்டாவாகிவிட்டது. ஹார்பர் பக்கத்தில் அநாதைக் குழந்தையொன்று கிடந்தது; அதைக் கொன்று சாக்கில் கட்டிப் போட்டிருந்தது. "யார் செய்திருப்பார்கள் இதை?" என்ருள் பார்ப்ரோ. அதைத் தவிர மார்க்கட் நிலவரங்களையும் படித்து வைத்தாள் அவள்.

இப்படியாகக் கோடை கழிந்தது.

## 16

செல்லன்ராவில் பெரிய மாறுதல்கள்!

அந்தப் பண்ணையை முன்பு பார்த்திருந்தவர்கள் அடையாளம் கண்டுகொள்ள முடியாதபடி மாறிற்று அது. மாவு மில், மர மில், ஏகப்பட்ட கட்டிடங்கள்—காடு அநேகமாக அழிந்து விட்டது. மனிதர்கள் வாழும் பிரதேசமாகிவிட்டது. இன்னும் மாறுதல்கள் ஏற்பட இருந்தன. ஆனால் எல்லாவற்றையும் விட அதிகமான மாறுதல் இங்கரிடம் காணப்பட்ட புதுப் போக்குத்தான். அவள் அவ்வளவு மாறிவிட்டாள். மீண்டும் பண்ணையில் உழைப்பவளாக ஆகிவிட்டாள்; இரக்க மனசுள்ளவள் ஆகிவிட்டாள்; கெட்டிக்காரி யாகிவிட்டாள்.

சென்ற வருஷம் வாய்க்கால் வெட்டியது பெரிய விஷயம். விளைச்சல் எல்லாம் வீணுகாமல் காப்பாற்றியாகிவிட்டது. அது கண்டே அவள் மாறி யிருக்கலாம். சில சமயம் அவள் தானும் அறியாமலே பழையமாதிரி நகரவாசத்தைப் பற்றிப் பேசத் தொடங்குவாள். பிறகு வேறு எதுவோ ஞாபகத்துக்கு வந்தவள் போலப் பேச்சை மாற்றிக் கொண்டாள். அப்படி ஒன்றும் பெரிய விஷயங்கள் அல்ல அவை. மோதிரத்தைக்கூடச் சில சமயம் கழற்றி வைத்துவிடுவாள். முழங்கால் தெரியத் தெரியக் கட்டிக்கொண்டிருந்த 'ஸ்கர்ட்டைச்' சற்றே தழைத்துவிடுவாள். அவள் முன்போல அமைதியில்லாமல் இல்லை. அவளைத் தேடி வருகிறவர்கள் எண்ணிக்கையும் குறைந்துகொண்டிருந்தது. வேறு வட்டத்திலிருந்து வந்த பெண்களையும் ஸ்திரீகளையும் பார்த்து முன்போலெல்லாம் அளவளாவிக் கொண்டிருக்க அவள் விரும்பவில்லை. காட்டில் வசிப்பவள், பண்ணையின் யசமானி இந்தமாதிரி அசட்டுத்தனமாகக் காலங்கழித்துக் கொண்டிருந்தால்

சரிப்பட்டு வருமா? சந்தோஷம் என்பது வேறு—அசட்டுத்தனம் என்பது வேறு அல்லவா?

காட்டில், ஒவ்வொரு காலமும் ஆச்சரியம் நிறைந்த காலம்! ஆனால் மாறுமல், எப்போதும் உள்ளது வானமும் பூமியும் இசைக்கிற சங்கீதம். மனிதனை அந்தப் பூமியும் வானமும் சூழ்ந்து நிற்கின்றன. காட்டின் இருட்டு நண்பனாக உதவுகிறது. மரங்களைவிட நட்புக்குத் தகுதியுள்ள பொருள் வேறு என்ன? கனமான பொருள்கள்கூட ம்ருதுவாக இருக்கின்றன—இங்கு எந்தச் சிந்தனையும் சாத்தியமானதுதான். எந்தச் செயலுமே சாத்தியமானதுதான். ஸெல்லன்ராவுக்கு வடக்கே, ஒரு சிறிய ஏரி மலைச்சரிவிலே இருக்கிறது. ஏரி என்று அதைச் சொல்வதுகூடப் பிசகு—குட்டை என்று சொல்லலாம். அங்கே சில குட்டி மீன்கள் வசித்தன. சிறிய மீன்கள்—அவை வளர்ந்து பெரியவை ஆவதில்லை. கடவுளே! அந்த மீன்களால் யாருக்கு என்ன பிரயோசனம்? ஒரு நாள் இங்கர் அந்தக் குட்டையின் கரையில் நின்று, பசுக்கள் திரும்பி வருகிற சப்தம் கேட்கிறதா என்று கவனித்துக்கொண்டிருந்தாள். அங்கு எவ்விதமான சந்தடியும் இல்லை. ஆனால் திடீரென்று ஒரு பாட்டுக் கேட்டது—ஏரியிலிருந்து கேட்டது. அந்த மீன்கள் தங்கள் சிறிய வாய்களைத் திறந்து பாடிக் கொண்டிருந்தன.

ஒவ்வொரு வருஷமும், வஸந்தத்திலும் இலையுதிர் காலத்திலும் சாம்பல் நிற வாத்துகள் ஸெல்லன்ராவைத் தாண்டிக் கூட்டமாகப் பறந்து செல்லும். அதிர்ஷ்டமான சகுனம் அது! வானத்திலே அவை பேசிக்கொண்டு போகிற காட்சி அழகான காட்சி. ஜன்னி வந்தவள் குரல்போல இருக்கும் அவற்றின் குரல்கள். உலகமே அவை தாண்டிப் போகட்டும் என்று நின்று பார்ப்பதுபோல இருக்கும். கீழே நின்று அண்ணாந்து அவற்றைப் பார்த்து, அவற்றின் சப்தத்தைக் கேட்கிற மனிதர்களைப் பலஹீனம் பிடித்துக் கொள்ளும். நாலு பெருமூச்சு விட்டுவிட்டுத்தான் அவர்கள் மீண்டும் வேலை தொடங்குவார்கள். எட்டாத ஒரு விஷயத்தை யாரோ அவர்களுக்கு விரும்பிச் சொல்ல முன்வந்தது போல இருந்தது—வானத்திலிருந்து யாரோ அவர்களுடன் தனிமையில் பேசிவிட்டார்கள்.

எல்லா சமயங்களிலும் அவர்களைச் சுற்றி ஏராளமான விஷயங்கள், ஆச்சரியகரமான விஷயங்கள் இருந்தன கவனிப்பதற்கு. மாரிக்காலத்திலே நக்ஷத்திரங்கள் இருந்தன. வடக்குத்

தீகள் இருந்தன. கடவுளின் வாசஸ்தலத்திலே எதுவோ பற்றித் திகுதிகுவென்று பளிச்சிட்டு எரிவதுபோலிருந்தது. அது அடிக்கடி நேராது. அதேபோல இடிச் சப்தம் கேட்கும் சில சமயம். சாதாரணமாக இலையுதிர் காலத்தில் மனிதனுக்கும் மிருகத்திற்கும் அந்த சப்தத்தில் குலை நடுங்கும். கடவுளின் குரல் அது. மிருகங்கள் ஒன்றோடொன்று ஒட்டிக்கொண்டு நெருக்கி அடித்துக் கொண்டு நிற்கும் பயந்துபோய். தலை தொங்க அவை ஏன் அப்படி நிற்கின்றன? அவை எதிர்பார்ப்பது என்ன? முடிவு நெருங்கிவிட்டது என்று காத்திருக்கின்றனவா? இடிக் குரல் கேட்டவுடன் மனிதனும் எதை எதிர்பார்க்கிறான்? எதற்காகவோ காத்திருப்பதுபோன்ற உணர்ச்சி அவனுக்கு ஏற்படுகிறது என்பது உண்மைதானே?

வஸந்தம் வரும். எவ்வளவு துரிதமாக எல்லாம் வளரு கின்றன? சந்தோஷமாக வளருகின்றன. ஆனந்தமாக விளைகின்றன. பெரிதாகின்றன. ஆனால் இலையுதிர்காலம் பயமுறுத்துகிறது. இருட்டிவிடும்போல இருந்தது எப்போதும். ஒரு மாலைப் பிரார்த்தனை கீதம் இலையுதிர் காலம் பூராவும். நிமிர்ந்து பார்க்கக் கண்கள் இருந்தால், வானத்திலே காணக் காட்சிகள் பல கிடந்தன. எத்தனைஒலிகள் திடீர் திடீரென்று எழுந்து மறைந்தன? இலையுதிர் காலத்தில் ஒருநாள் வேலை செய்ய வெளியே போகிறவன் கண்களில் என்ன படும், காதில் என்ன விழும் என்று நிச்சயமாக யாரும் சொல்லிவிடமுடியாது. ஆனால் மரம் வெட்டப் போயிருப்பான். பெண்ணானால் ஆடுமாடுகளைத் தேடிப் போயிருப்பாள். திரும்பும்போது அவர்களுக்குப் பல புதுப் புது ரகசியங்கள் தெரியவந்திருக்கும். எதிர்பாராமல் ஒரு பெரிய எறும்பை மிதித்திருப்பார்கள்—அதன் பின்பாகம் நசுங்கி யிருக்கும்—முன் பாகம் விடுவித்துக்கொள்ள முடியாமல் தவிக்கும். அல்லது காட்டுவாத்துக் கூட்டுப் பக்கம் நெருங்கிவிட்டார்களா? காட்டுவாத்து ஒன்று கோபமாக எதிர்த்துப் பறந்துவரும். ஷ்...ஷ்...என்று பயமுறுத்தும். நாய்க் குடைகள் பெரிதாக வளர்ந் திருக்கும். அவை அர்த்தமில்லாமலா வளர்ந்திருக்கின்றன? காரண மில்லாத வெண்மையா அவற்றின் வெண்மை? அது பூப்பதில்லை. அது அசைவதில்லை. ஆனால் அதைப் பார்ப்பதற்கே ஒரு தலை கீழான உணர்ச்சி ஏற்படுகிறது என்பது உண்மை. அதன் ராக்ஷஸத் தன்மை ஆச்சரியகரமானது. உடம்பில்லாத ஒரு இதயம் அங்கு தனித்து நிற்பது போல இருக்கிறது!

இங்கர் நம்பிக்கை இழப்பது போலிருந்தது. காடு என்கிற இருள் அவள் மனசில் புகுந்து விட்டது போலிருந்தது. அவள் பக்தியுள்ளவளானாள். மதப்பற்று உள்ளவளானாள். அவளால் அதைத் தவிர்க்க இயலவில்லை, காட்டிலே அந்தத் தனிமையிலே அது தவிர்க்க முடியாத ஒரு நிலை. அங்கு நாள் பூராவும் பூமியில் உழைப்பதிலும் நிலம் புலன் விளைச்சல் என்கிற ஞாபகங்களிலும் போய்விடாது. அசட்டுநம்பிக்கைகளும், குருட்டு பக்தியும், தெய்வத்திடம் அசைக்க முடியாத ஒரு பணிவும் பக்தியும் நிறைந்த இடம் அது. கடவுளிடம் பயங்கொள்ளத் தனக்கு ஏராளமான காரணங்கள் இருந்தன என்று எண்ணினாள் அவள். கடவுளின் நீதி அவளைத் தேடிப் பிடித்துத் தண்டித்து விடும். எல்லாவற்றையும் பார்க்கிற அதிசயக் கண்களுடன் கடவுள் உலகத்தில் பாவிகளைத் தேடி மாலை வேளைகளில் அலைகிறார் என்று இங்கருக்குத் தெரியும். தேடி அவளையும் ஒரு நாள் கண்டு விடுவார். தினசரி வாழ்க்கையில் புண்ணியம் செய்ய அவள் புதுசாக எதுவும் செய்ய வேண்டியதில்லை. தங்க மோதிரத்தை எடுத்து வைத்துவிட்டு, உலகத்துப் படாடோபங்களில் மனம் பறிகொடுக்காதிருக்கப் பாடு படலாம். எல்யூஸிஸுக்கும் எழுதலாம்—சதா சர்வதா கடவுளை நினை என்று. தன் வேலையைச் சரிவரச் செய்வதையும் உடல் அலுக்கும் வரையில் உழைப்பதையும் தவிர அவள் செய்யக் கூடியது தான் என்ன? இன்னும் ஒன்று! ஆடை அணிகள் விசேஷமாக அணியாமல் இருக்கலாம். எளிமையும் தூய்மையும் தோன்ற வாழலாம். ஞாயிற்றுக்கிழமைகளில் ரிப்பன் வைத்துக்கொண்டால் போதுமே! உண்மையல்லாத அனாவசியமான ஏழ்மைதான் அது—அனால் அது மனசில் எழுந்த ஒரு சிந்தனையின் விளைவு; தன்னைத் தானே தாழ்மைப் படுத்திக் கொள்ளும் ஒரு மனப்பான்மை; தியாகம் செய்கிற ஒரு உணர்ச்சியால், பெருமிதத்தால் எழுந்தது. அவள் ஞாயிற்றுக்கிழமைகளில் அணிந்த ரிப்பன்கூடப் புது ரிப்பன் அல்ல; பழசு தான். லெபல்டினுடைய போதாத குல்லாயிலிருந்து, கத்தரித்தது. கொஞ்சம் அழகாகக் கூட இருந்தது. ஞாயிறு போன்ற விடுமுறை தினங்களில் மட்டுமே அதையும் அணிவாள் இங்கர். இது காரண காரியமில்லாத ஒரு காரியமாக இருக்கலாம்—அவள் ஏழை என்று பாசாங்கு செய்யவேண்டியதில்லை. நிறக நிலமும், தங்கக் குடிசையும் இல்லாதவர்கள் வாழ்ந்தது போல அவள் வாழ முயலவேண்டியதில்லை. அப்படியும்—என்ன லாபம்? ஏழையாக இருப்பதனால் மட்டும் குணாதிசயங்கள் வெகுவாக மாறிவிடுகின்றனவா? அதுவும் தான் இல்லையே! அவள் நிம்மதி

யாக இஷ்டப்படி செய்யட்டும்—நிம்மதி பெற அவளுக்கு உரிமை கிடையாதா என்ன?

இப்போது சற்று அதிகம்தான். எதையுமே அவள் சற்று அதிகமாகவேதான் செய்வாள். பண்ணையிலே இரண்டு ஆண்கள் இருந்தார்கள். அவர்கள் எங்காவது போயிருக்கும் போது, அவர்கள் வேலைகளையும் இழுத்துப் போட்டுக் கொண்டு செய்வாள் இங்கர். மரம் அறுப்பாள். ஒரு ஆண் மகனின் வேலையைச் செய்து உடலை வாட்டி வருத்துவதில் லாபம் என்ன? அவள் கடவுளின் சிருஷ்டிகளிலே மிகவும் தாழ்ந்தவள்; அவள் சுய மதிப்பென்னவோ வெகு சொல்பம்! அவளுக்கிருந்த சக்திகளோ மிக மிகக் குறைவு. இருந்தாலும்... இருந்தாலும்... அவளைப் பற்றிச் சிந்திப்பவர்கள் அந்தப் பரந்த பூமியிலே மிகவும் சிலர் தான். இந்தக் காட்டுப் பிராந்தியத்திலே சிலர் அவள் போய் விட்டால் கஷ்டப்படுவார்கள். வேறு யார்? இங்கு அவள் யசமானி—அவளை விடப் பெரியவள் என்று சொல்லிக்கொள்ள யாரும் இல்லை. தன் உடலை வாட்டி உழைக்க அவள் பட்டபாடு நியாயமானதாகவே இருக்கலாம். ஒரு நாள் அவள் கணவன் சொன்னான்:

“ஸிவெர்ட்டும் நானும் இதுபற்றிப் பேசிக் கொண்டிருந்தோம்! நீ மரம் அறுக்க வேண்டியதில்லை. எதற்காக இந்தக் கடினமான வேலைகளை எல்லாம் நீ செய்ய வேண்டும்?”

“என் மனச் சாட்சிக்காகச் செய்கிறேன்” என்றாள் இங்கர்.

மனச்சாட்சி! ஐஸக்கை மீண்டும் சிந்தனையில் ஆழ்த்தியது அந்த வார்த்தை. அவனுக்கு வயசாகிக் கொண்டிருந்தது. சிந்திக்கத் தொடங்க அவனுக்கு நேரம் பிடித்தது. ஆனால் சிந்திக்கத் தொடங்கினானால், ஆழ்ந்து சிந்திப்பான். உண்மையில் இந்த மனச் சாட்சி என்பது பெரிய விஷயம்தான்—இங்கரை எப்படித் தலை கீழாகத் திருப்பிவிட்டது! அது எப்படியானாலும் இங்கரிடம் ஏற்பட்ட இந்த மாறுதல் அவனிடமும் ஒரு மாறுதலைச் செய்தது. அவளிடமிருந்து மதப்பற்றும் அமைதியும், சிந்தனா சக்தியும் அவனைத் தொத்திக் கொண்டன. அந்த மாரிக்கால வாழ்க்கை கனமான ஆழமான வாழ்க்கைதான். தனிமையைத் தேடித் தேடி ஓடினான் அவன். தன் காட்டிலிருந்த மரங்கள் பூராவும் அழிந்துவிடக்கூடாது என்பதற்காக வெகு தூரத்துக்கப்பால், ஸ்வீடன் அருகில் இருந்த ஒரு காட்டை சர்க்காரிடமிருந்து வாங்கியிருந்தான் அவன். அங்கு போய் தனியனாக மரம் வெட்டுவான். ஸிவெர்ட்கூட அவனுடன்

வரக்கூடாது என்று உத்தரவு போட்டான். தன் தாயார் அதிகமாக உழைத்து உடம்பைக் கெடுத்துக் கொள்ளாமல் இருக்கும்படிப் பார்த்துக்கொள்ள வேண்டும் என்று உத்தர விட்டான்.

ஆகவே, மாரிக்காலத்தில் உள்ள குறுகிய பகலில் அதி காலையில் எழுந்து போய்விடுவான் ஐஸக். இருட்டிய பிறகுதான் திரும்புவான். சந்திரன் இல்லாத நாட்களிலும் சரிதான். சில நாட்களில் நக்ஷத்திரங்கள்கூட இராது வானத்திலே. அங்கு போக நேரான பாதைகூடக் கிடையாது. காலையில் வந்த தடம் பனி பெய்து மூடியிருக்கும். புதுத் தடம் செய்துகொண்டு நடக்க வேண்டும்! ஒரு நாள் முன்னிரவில் விசித்திரம் ஒன்று நடந்தது.

வீட்டை அனுகிவிட்டான். இளநிலவில், மங்கியவெளிச்சத்தில், மலைச்சரிவிலே இருந்த செல்லன்ரா கட்டிடங்கள் நன்கு தெரிந்தன. சிறியதாகத்தான் தெரிந்தன—இன்னும் இரண்டு மைல்களுக் கப்பால் தானே இருந்தன! மரம் நிறைய இருந்தது—புதுசாகப் பெரிதாக அரண்மனை மாதிரியாகப் புது வீடு ஒன்று கட்டுவதாக அவனுக்கு உத்தேசம்—இங்கரும் குழந்தைகளும் பார்த்து ஆச்சரியப்படும்படியான வீடாக இருக்கும் அது. பரமரகசியம்—அவன் மனசிலிருந்ததை அவன் யாரிடமும் சொல்லவில்லை. சிறிது நேரம் அங்கேயே உட்கார்ந்து காலாற இளைப்பாறிவிட்டு வீடு திரும்ப எண்ணினன் அவன். மேல் மூச்சு கீழ் மூச்சு வாங்க களைத்துப் போனவன் போல வீடு திரும்ப விரும்பவில்லை அவன்.

சுற்றிலும் அமைதியாக இருக்கிறது. எவ்விதச் சந்தடியும் இல்லை அங்கு. கடவுளே வந்து அந்த அமைதியில் பங்கெடுத்துக் கொண்டு அதை ஆசிர்வதித்திருப்பார் என்று தோன்றியது. நல்ல தனமான அமைதி அது. ஐஸக் உழைப்பாளி—காட்டைத் திருத்தி உழுது சாகுபடி செய்யும் நிலமாக்குகிறன்; அடுத்தபடி எந்த மரங்களை வெட்டுவது என்று பார்க்கிறன்; வேலையைத் தடை செய்கிற பெரிய கற்களைப் பெயர்த்து அப்புறப்படுத்துகிறன். ஐஸக் இந்த வேலையில் கெட்டிக்காரன். அவன் நிலத்திலே பெரிய தொரு வெளி இருக்கிறது. கட்டாந்தரை. அதை என்ன உழுதாலும் பயன் இராது. என்ன விதைத்தாலும் அதில் முளைக் காது. அதில் செம்புக் கனிப் பொருள் இருக்கிறது. அங்கிருக்கிற ஜலம் கூடப் பயிருக்கு உபயோகப்படாது. செம்பு ஊறிய ஜலம் அது. அந்த உலோகத்தை வெட்டி எடுத்து அப்புறப் படுத்துவது என்று அவன் தீர்மானிக்கிறன். எப்படி எப்படி

என்னென்ன வேலைகள் செய்வது என்று திட்டமிடுகிருன். உலோகத்தை அப்புறப் படுத்தி விட்டு அந்த இடத்திலும் பயிர்கள் நட்டுப் பயிர் செய்து பலன் காணவேண்டும் என்று அவன் கனவு காண்கிருன். உழுது பண்பட்ட நிலம் போல நல்ல விஷயம் உலகில் வேறு எது உண்டு? மன அமைதி போன்றது அது—அதற்கப்பால் என்று ஒன்றும் கிடையாது. ஆனந்தம் அது.

எழுந்தான். ஆனல் திடீரென்று ஒரே குழப்பமாக இருந்தது. ம்...ம்... இப்போது என்ன நடந்துவிட்டது? என்ன விஷயம்? ஒன்றுமில்லையே! சிறிது நேரம் உட்கார்ந்திருந்தான். அவ்வளவுதானே! அவன் முன் இப்போது நிற்பது யார்? யாரோ ஒரு தேவதை. வானுலகைச் சேர்ந்த தேவதை. பட்டாடை உடுத்தியிருந்தாள். என்னவோ போல இருந்தது ஐஸக்குக்கு. முன்னுடி நடந்தான். ஆனல் இரண்டடி எடுத்து வைக்குமுன், ஒரு ஜோடிக் கண்கள், பெரிய கண்கள், அவனுக்குள் துருவி ஆராய்வது போல இருக்கிறது. அதே சமயம் அருகிலிருந்த நாணல் சல சலத்தது. நாணலின் சல சலப்பு விதவிதமான சப்தங்களை எழுப்பும் என்பது உலகில் எங்கும் தெரிந்ததுதானே! அப்படியிருந்தும் இப்போது அந்த நாணல் சல சலத்தமாதிரி வேறு எப்போதும் அது சல சலத்ததில்லை என்று தோன்றிற்று அவனுக்கு. அவன் உடல் நடுங்கிற்று. தவிரத் தன் கையைத் தூக்கித் தனக்கு முன்னல் குருடன் போல, பாதையைத் தேடுகிற கபோதி போல, நீட்டினன்.

ஆனல் அவன்முன் நின்றது என்ன? யார்? உண்மையா அது? அல்லது ஏதாவது புரியாத மாயமா? தேவதை! கடவுளின் தூதன்! கடவுளே தான் என்று ஆயுள் பூராவும் நம்பத் தயாராகவே தான் இருந்தான் ஐஸக். ஆனல் அந்த உருவம், கடவுளின் உருவம் அல்ல. இரண்டு கண்கள்—ஒரு பயங்கரமான பார்வை—இதுவா கடவுளின் உருவம்! இல்லை; இராது. அவனை அழைத்துச் செல்ல வந்து விட்டதுவோ அது—அப்படியிருந்தால் மேலே செய்வதற்கு ஒன்றுமில்லை. எப்படியும் ஒரு நாள் சாக வேண்டியவன் தானே அவன்? கடவுளின் ஆசி பெற்றவர்களில் ஒருவனுக அவன் வானுலகத்துக்குப் போகத் தயார்தான்.

மேலே என்ன நடக்கும் என்று காண ஆவலுடன் நின்றுன் ஐஸக். அவன் உடல் இன்னும் நடுக்கிக் கொண்டிருந்தது. எதிரில் நின்ற உருவத்திடமிருந்து ஒரு குளுமை—தாளாத குளுமை---பாய்வது போல இருந்தது. குளுமை---ஆனல் அது நிஜக்

குளுமை அல்ல. எதிரே நின்றது துர்த்தேவதைதான். சாத்தானேதான்—துர்த் தேவதைகளின் தலைவன் அவன்! அதற்குப் பிறகு—அப்படிச் சாத்தானாக இருந்தால் என்ன செய்வது என்று ஐஸக்குக்கும் புரியவில்லை. சாத்தானாக இருந்தால்? அவன் எதற்காக அவனைத் தேடி வந்திருந்தான்? ஐஸக் அப்படி என்ன காரியம் செய்து விட்டான், சாத்தானை அழைக்கும்படியாக? ஒன்றுமே செய்யவில்லையே! உட்கார்ந்து ஏதோ உழைத்து நிலத்தில் பலன் காண்பது பற்றிக் கனவுகள் கண்டு கொண்டிருந்தான். அதைத் தவிர அவன் வேறு எதுவும் செய்ய வில்லையே! அதில் தவறு என்ன? தான் எதுவும் குற்றம் செய்ததாக ஐஸக்குக்குப் படவில்லை. பாவம் செய்வது இன்னதென்று அறியாதவன் அவன். ஒரு நாள் பூராவும் மரம் வெட்டி விட்டு உடல் அலுப்புடன் ஸெல்லன்ரா திரும்பிக் கொண்டிருந்தான்—பசிக்கவும் பசித்தது. வேறு என்ன தவறு செய்தான்? அவனால் யாருக்கு என்ன கெடுதி?......

மீண்டும் ஓரடி எடுத்து வைத்தான். சுவர்போல அவனை மேலே செல்லவொட்டாமல் தடுத்தது அந்தப் பார்வை. இரண்டடி பின் வாங்கினான். எதிரில் நின்ற உருவம் நகர்ந்து வழி விட மறுத்தது. ஐஸக் முகத்தைச் சுளித்துக் கொண்டான்—ஏதோ சந்தேகம் தட்டியது அவனுக்கு. சாத்தானாகவேதான் இருக்கட்டுமே—சாத்தானையும் விடப் பெரிய சக்தி உலகில் கிடையாதா என்ன? லூதர் என்பவர் அவனை வென்று குற்றுயிரும் குலையுயிருமாக ஆக்கிவிட வில்லையா? இன்னும் எத்தனையோ பேர்களிடம் தோற்றவன் சாத்தான். சிலுவையைக் காட்டி, ஏசு என்று கூப்பிட்டால் போதும்—சாத்தான் ஓடி ஒளிந்து விடுவான். முன் நின்ற சக்தியை எதிர்த்துத் தன்னால் தனியாக எதுவும் செய்துவிட முடியாதென்று அவனுக்குத் தெரியும். உட்கார்ந்து அதனுடன் அளவளாவவோ அதைப்பார்த்துச் சிரிக்கவோ அவன் தயாராக இல்லை. சாகத் தயார் என்று சற்று முன் தோன்றிய ஒரு உணர்ச்சியும் மறைந்துவிட்டது. அந்தக் கண்களை நோக்கி தடதடவென்று இரண்டடி எடுத்து வைத்தான்—சிலுவைக் குறியைத் தன் மாரில் விரல்களால் செய்தான். "போ! ஏசுவின் பெயரில் ஆணையிடுகிறேன்! போய்விடு" என்றான்.

உம். அவன் குரல் உரக்க ஒலித்தது. உடனேயே அவனுடைய பிரமை நீங்கிவிட்டது. ஸெல்லன்ரா வீடுகள் முன் போலவே அவன் கண்ணில் பட்டது. கண்கள்—அந்தப் பயங்கரமான கண்கள்—மறைந்து விட்டன.

வேகமாகவே வீடு திரும்பினுன். நின்று சாத்தானை அறை கூவி அழைக்க வில்லை அவ ர். வீட்டு வாசற்படியண்டை வந்ததும் தெம்பாகக் கனைத்துக் கொண்டான். அவன் உள்ளத்திலே சக்தியும் பலமும் துள்ளிப் பாய்ந்தன. நிமிர்ந்து நடந்தான். பலசாலி அவன். திடகாத்திரமுடையவன். ஆண்மகன்—உலகிலே சிறந்த ஆண்களுடன் போட்டியிட்டு வெற்றிபெறக் கூடிய ஆண்மகன்!

இங்கர் அவனைப் பார்த்தாள். பார்த்து ஏன் உன் முகம் இப்படி வெளிரிட்டிருக்கிறது என்று கேட்டாள்.

நேரடியாகக் கேட்டபோது என்ன சொல்வது? வரும் வழியில் சாத்தானைப் பார்த்ததை அவன் மறைக்கவில்லை.

"எங்கே?" என்ருள் இங்கர்.

"அங்கே! நம் வீட்டுக்கு வரும் பாதையிலே!"

அதுபற்றி இங்கர் பொருமைப்படவில்லை. அதற்காக அவனைப் பாராட்டியோ இகழ்ந்தோ எதுவும் சொல்லவில்லை. பரிகாசம் செய்கிற மாதிரியோ அல்லது பாராட்டுகிறமாதிரியோ பேசவில்லை அவள். இங்கர் மாறித்தான் போய்விட்டாள். சில நாட்களாகவே அவள் எல்லோரிடமும் அனுதாபத்துடனும் பிரியத்துடனும் இருக்கிருள். "சாத்தானையேவா பார்த்தாய்?" என்று கேட்டாள்.

ஐஸக் தலையை ஆட்டினுன். அவனுக்குத் தெரிந்த அளவில் அது சாத்தானே தான்—வேறு யாரும் இல்லை.

"எப்படித் தப்பி வந்தாய்?"

"ஏசு பெயரைச் சொல்லி!" என்ருன் ஐஸக்.

இங்கர் சிந்தனையில் ஆழ்ந்தவளாகத் தலையை ஆட்டினுள். சாப்பாட்டை எடுத்து வைக்க இதனுல் அவளுக்குச் சிறிது நேரம் பிடித்தது.

கடைசியில் அவள் சொன்னுள்: "அது எப்படியானுலும் நீ இனிமேல் தனியாகக் காட்டுக்குப் போகக் கூடாது!" என்ருள்.

தன்னைப்பற்றி அவள் கவலைப்பட்டாள்—கரிசனப்பட்டாள். அதுபற்றி ஐஸக்குக்குத் திருப்திதான். எப்போதும் போல, தைரியமாக இருப்பவன் போல இருந்தான். தனியாகப் போனுல் என்ன என்று பயமில்லாதவன் போல இருந்தான். ஆனுல் இது இங்கர் கவலைப்படாதிருக்கட்டும் என்பதற்காகப் போட்ட வேஷம் தான். தனக்கு நேர்ந்த அந்த அனுபவம் பற்றி அவள் அதிகமாகப் பயப்பட்டுவிடக் கூடாது என்று நினைப்பு அவனுக்கு.

என்ன பயங்கரம் அது! அவளையும் மற்றவர்களையும் காப்பாற்றுவது அவன் பொறுப்பு—அவன் ஆண் மகன், ஸெல்லன்ராவின் தலைவன்.

இங்கருக்கும் அவன் மனசிலிருந்தது புரிந்தது. அவள் சொன்னாள்: "ஓ! என்னைப் பயமுறுத்த நீ விரும்பவில்லை. அது சரி. ஆனால் இனித் தனியாகப் போகாதே. ஸிவெர்ட்டையும் அழைத்துப் போ."

ஐஸக் "...ம்...ம்..." என்றான்.

"திடீரென்று காட்டில் உனக்கு மயக்கம் வந்துவிட்டால் என்ன செய்வதாம்? சில நாட்களாகவே உனக்கு உடம்பு சரியாக இல்லை" என்றாள் இங்கர்.

"ஓ!" என்றான் ஐஸக் அலக்ஷியமாக. உடம்பு சரியாக இல்லையா? யார் சொன்னது? கொஞ்சம் அலுப்பாக இருந்தது என்பது உண்மைதான். சீக்கிரமே அவன் களைப்படைந்து விடுகிறான்—அதுவும் உண்மையே! அதற்காக இங்கர் அவனைப் பற்றிப் பிரமாதமாகக் கவலைப்பட்டுத் தன் உடம்பைக் கெடுத்துக் கொள்ள வேண்டியதில்லையே! அவன் உடம்புக்கு என்ன? அவன் திடம் அழியாத திடம். ஒரு தடவை மரம் வெட்டிக்கொண்டிருக்கும் போது, மரம் அவன் மேலேயே சாய்ந்து விட்டது. ஒரு காது பிய்ந்து விட்டது. பிய்ந்ததைச் சரியான இடத்தில் வைத்து அது நகராமல் அதன்மேல் தன் குல்லாயை அணிந்துகொண்டு விட்டான். நாளடைவில் பிய்ந்த காது ஒட்டிக்கொண்டு சரியாகவும் போய்விட்டது. வயிறு சரியாக இல்லாவிட்டால், பழைய காலத்துச் சாக்கு ஒன்றை வாங்கி வந்து அதைப் பாலில் வேகவைத்து அருந்தி விடுவான்; ஒரு தரம் வேர்த்துவிடும்; வயிறும் சரியாகி விடும். கையைக் காலை வெட்டிக் கொண்டானானால், அதில் உப்பு நிறைந்த ஒரு கஷாயத்தை ஊற்றுவான்—நாலு நாளில் சரியாகி விடும். ஸெல்லன்ராவில் யாருமே டாக்டரைத் தேடிப் போவது கிடையாது.

இல்லை. ஐஸக்குக்கு உடம்புக்கு ஒன்றுமில்லை. ஆனால் திடசாலிகூடச் சாத்தானைச் சந்திப்பது என்பது நடக்காத, நடக்கக் கூடாத காரியமா என்ன? அந்தச் சம்பவத்தின் காரணமாகக் கூட அவன் உடல் நலம் கெடவில்லை. அதற்குப் பதில் அவனுடைய பலம் அதிகரித்திருப்பது போல இருந்தது. மாரிக் காலம் கழிந்து கொண்டிருந்தது. வஸந்தத்தை எதிர் பார்த்திருக்கிற நாட்கள் நல்ல நாட்கள். ஆண்மகன், தலைவன்

அவன். தன்னை ஒரு மஹா புருஷனாக உணர்ந்தான் அவன். இதெல்லாம் அவனுக்குப் புரிந்தமாதிரி வேறு யாருக்குப் புரியும்? அவனை நம்பினால் எதுவும் சரிவர நடக்கும். அவசியம் நேர்ந்தால் அவனால்தான் துர்த் தேவதைகளின் அதிபதியாகிய சாத்தானுடன் கூடப் போரிட்டு வெற்றிகொள்ள முடியுமே!

நாட்களில் பகல் பொழுது நீண்டது. வெளிச்சமும் அதிகமாயிற்று. ஈஸ்டர் தாண்டியது. மரங்களை எல்லாம் கொணர்ந்து சேர்த்துவிட்டான் ஐஸக். எல்லாமே பிரகாசமாகவும் இன்பமாகவும் உல்லாஸமாகவும் இருந்தது.

முதலில் தன் உல்லாஸத்தைத் திரும்பவும் பெற்றவள் இங்கர் தான். இப்போது பல நாட்களாகவே அவள் இன்பலோகத்தில் இருக்கிறாள். என்ன காரணம்? மிகவும் சின்னக் காரணம் தான். இங்கர் மீண்டும் கர்ப்பமாக இருந்தாள். அவள் வயிறு கனத்தது. அவள் வாழ்க்கையிலே எல்லாமே சரியாகத்தான் நடந்தன. எங்கேயும் எவ்விதமான சிக்கலும் இல்லை. பாவி அவள். ஆனால் அவள் வயிற்றில் மீண்டும் சிசு உற்பத்தியாகி யிருந்தது. அவள் எதிர் பார்த்ததை விட ஆனந்தமான விஷயம் அது! அவள் அதிர்ஷ்டக்காரி. அதிர்ஷ்டக்காரி அவள். ஒரு நாள் ஐஸக்கே அதைக் கவனித்து விட்டான். நேரில் கேட்கவும் கேட்டான்: "இன்னொரு குழந்தை பிறக்கப் போகிறதா? அப்படித்தான் எனக்குத் தோன்றுகிறது."

"கடவுளுக்கு என் நன்றி! அப்படித்தான்" என்றாள் இங்கர்.

இருவருக்குமே ஆனந்தம்தான். இங்கருக்கு அதிக வயசாகி விடவில்லை. எப்படிப் பார்த்தாலும் அவளுக்கு வயசாகி விட்ட மாதிரித் தோன்றவில்லை ஐஸக்குக்கு. இன்னொரு குழந்தை! சரி. நல்லதுதானே! சிறுமி லெபல்டினும் வருஷத்தில் பல நாட்கள் பள்ளிக்கூடம் போய்க் கொண்டிருந்தாள்—ப்ரேடாப்ளிக்குக்குப் பக்கத்திலிருந்த பள்ளிக்கூடம் போய் வந்து கொண்டிருந்தாள். வீட்டிலே குழந்தை தவழ்ந்து விளையாடி வெகு நாட்களாகின்றன— லெபல்டினுக்குக் கூட வயசாகிக் கொண்டிருந்தது.

நாட்கள் சில சென்றன. ஐஸக் தீர்மானமாக ஒரு வாரத்தில் இரண்டு நாட்களை வீணாக்கினான்—சனிக்கிழமை முதல் திங்கள் வரையில் வீணாக்கினான். ஒன்றுமே காரியமில்லாமல் கிராமத்துக்குப் போய் வீணாக்கினான். எதற்காகப் போனான் என்பது பரம ரகசியம். ஆனால் திரும்பும்போது அவனுடன் ஒரு பெண்ணையும்

அழைத்துக்கொண்டு வந்தான். "இவள் பெயர் ஜென்ஸின். வீட்டிலே உதவி செய்ய அழைத்து வந்தேன்" என்றான் ஐஸக்.

"தேவையில்லை. எனக்கு உதவி எதற்கு?" என்றாள் இங்கர்.

இப்பொழுது தேவைதான் என்று அவளுக்குப் பதில் அளித்தான் ஐஸக். தேவையோ இல்லையோ—அதுபற்றி அவன் யோசித்து அவனாகவே செய்திருந்தது பற்றிப் பரம திருப்திதான். தான் இப்படி எல்லாம் அவனுக்காகச் செய்ததில்லையே எதுவும் என்று அவளுக்கு வெட்கமாக இருந்தது. நன்றியாகவும் இருந்தது. புதுசாக வந்த பெண் கிராமத்துக் கருமானின் பெண். கோடை பூராவும் அவள் அவர்களுடன் தங்குவாள்—அதற்குப் பிறகு என்ன என்று பிறகு பார்த்துக் கொள்வாள்!

"எல்யூஸிஸிற்கும் தந்தி அடித்திருக்கிறேன்" என்றான் ஐஸக்.

திடுக்கிட்டுப் போனாள் இங்கர். தூக்கிவாரிப் போட்டது பெற்றவளுக்கு. தந்தியா? அவனுடைய முன் யோசனையினால் அவளைப் பூரணமாக வெட்கப்படச் செய்வது என்று தீர்மானித்து விட்டானா அவன்? பாபச் செயல்கள் நிறைந்த இடம் நகரம். அதன் காற்றே பாபக் காற்று. அப்படிப்பட்ட நகரிலே எல்யூஸிஸ் தனியாக இருக்கிறானே என்று இங்கருக்கு அளவில்லாத வருத்தம். அவள் கடிதங்களில் அவனுக்குக் கடவுளைப் பற்றியும், நல்லவனாக இருக்க வேண்டியதன் அவசியத்தைப்பற்றியும் விரிவாக எழுதிக் கொண்டிருந்தாள். இங்கே பண்ணையில் வேலை அதிகமாக இருந்தது என்றும் தெரிவித்தாள். அப்பாவுக்கு உடம்புக்கு எதுவுமில்லாவிட்டாலும் அவரால் வேலை செய்து சமாளிக்க முடியவில்லை. சிறுவன் ஸிவெர்ட்டால் எல்லா வேலைகளையும் கவனித்துக்கொள்ள முடியவில்லை. தவிரவும் மாமா ஸிவெர்ட் இறந்தால் அவர் தொழிலும் பொருளும் அவனைச் சேரும். எல்யூஸிஸ் திரும்பி வந்தால் அங்கு உதவியாக இருக்கும். உடனே வந்துவிடு என்று பணம்கூட அனுப்பினாள். ஆனால் எல்யூஸிஸ் இப்போது நகரத்து பனிதனாகிவிட்டான். குடியானவன் வாழ்க்கையை மேற்கொள்ள அவன் மனம் விரும்பவில்லை. வீட்டுக்குத் திரும்பிவந்து என்ன செய்வது என்கிற மாதிரிப் பதில் எழுதினான். அவன் கற்றுக் கொண்டதை எல்லாம் மறந்துவிட்டு நிலத்திலே விவசாயியாகப் பாடுபட்டுப் பிழைப்பதா? அவன் எழுதியது இதுதான்: "இப்போது எனக்குத் திரும்ப மனசில்லை; உண்மை அதுதான். ஆடைகள்

தைத்துக் கொள்ளப் பணம் இல்லாவிட்டால் துணிகளாவது அனுப்பினுயானல் இங்கு வீணுகக் கடனுக்கு வாங்குவது குறையும்" என்று எழுதினன். அதைப் பார்த்துவிட்டு அவள் சும்மா துணிகள் வாங்கி அனுப்பினுள். நிறையவே அனுப்பினுள். மதுப்பற்று அதிகமான பிறகு அவளுக்கே தெரிந்துவிட்டது—அவள் கண்களை மூடியிருந்த திரை விலகிவிட்டது. நகரில்கூட அத்தனை துணிகள் எதற்கு? எல்யூஸிஸ் அவற்றை விற்றுவிட்டு வந்த காசை வேறு வழியாகச் செலவழித்துக் கொண்டிருந்தான். அதுதான் உண்மை.

அவன் தகப்பனுக்கும் அது தெரிந்தது. ஆனல் அதுபற்றி அவன் ஒருபோதும் பேசுவதில்லை. எல்யூஸிஸிடம் அவன் தாய்க்கு ரொம்பவும் பிரியம். அவன்தான் அவளுடைய செல்லப் பிள்ளை. அவனைப் பற்றித்தான் பெருமையும் சிறுமையும் அவளுக்கு. வாங்கிக் கொண்டு வருகிற துணிகளை எல்லாம் எல்யூஸிஸுக்கு, எல்யூஸிஸுக்கு என்று அனுப்பி விட்டால் என்ன பண்ணுவது? ஒருவனுக்கு ஒரு வருஷத்தில் எத்தனை கஜம் துணிதான் தேவை? ஐஸக் மீண்டும் குறுக்கிட்டுத் தன் ஸ்தானத்தை நிலைநிறுத்த வேண்டியதுதான். இல்லாவிட்டால் இது எங்கே போய் நிற்குமோ, யார் கண்டது? தந்தி யடிப்பதற்குச் செலவு அதிகம்தான்—உண்மைதான். இருந்தாலும் தந்தியைப் பார்த்தவன் வராமல் இருந்து விடமாட்டான். தவிரவும் தந்தி கொடுத்ததில் சொந்தப் பெருமையும் கூட இருந்தது. இங்கரிடம் அதை அவன் தெரிவித்தபோது இங்கர் எப்படி ஆச்சரியப் பட்டுப் போனுள்? வேலைக்காரப் பெண்ணின் பெட்டியைத் தன் முதுகில் தூக்கிக் கொண்டு நடந்துதான் வந்தான் அவன் கிராமத்தி லிருந்து. அது எப்படியானல் என்ன? அந்தத் தங்க மோதிரம் வாங்கி வந்த அன்று இருந்த மாதிரிப் பெருமையாகவும் மிகவும் ஆனந்தமாகவும் இருந்தது அவனுக்கு. எத்தனை ரகசியங்கள் சொல்ல அவன் தயாராக இருந்தான்—இங்கருக்காக!

அதற்குப் பிறகு எல்லோருக்குமே எல்லாவிதங்களிலுமே திருப்தியாகத்தான் இருந்தது. இங்கர் தன் கணவனுக்குத் திருப்தியும் ஆனந்தமும் தரக்கூடிய வகைகளிலெல்லாம் உழைத் தாள். எவ்வளவு உபயோகமாகவும் உதவியாகவும் தன்னல் காரியங்கள் செய்ய முடியும், என்று காண்பிக்க வேண்டும் என்று அவனுக்குச் செய்து காண்பிக்க வேண்டும் என்று எண்ணியவள் மாதிரி உழைத்தாள். முன்னெல்லாம் போல அவன் ஏதாவது

சிரமப்பட்டு வேலை செய்தானானால் "ஏனிப்படி உழைத்துச் சாகிறாய்?" என்று கேட்பாள். சில சமயம், "ஒரு மனிதனால் எப்படித்தான் இந்தக் கஷ்டமான வேலைகளை எல்லாம் செய்ய முடிகிறதோ!" என்பாள். "போதும் வேலை செய்தது. உனக்காக பிஸ்கட்டுகள் பண்ணியிருக்கிறேன். வந்து தின்னு" என்று பிரியமாகக் கூப்பிடுவாள். அவனைத் திருப்தி செய்வதற்காக அவள் சொல்லுவாள்: "அத்தனை மரம் வெட்டிப் போட்டிருக்கிறாயே! அத்தனையும் எதற்கு? பெரிசாக ஏதாவது அரண்மனை கட்டப் போகிறாயோ?" என்பாள்.

"ஏன், எனக்கே தெரியாது" என்று பழைய பாணியில் பதில் சொல்லுவான் அவன்.

பழைய நாட்கள் திரும்பிவிட்டமாதிரி இருந்தது. குழந்தையும் பிறந்தது—பெண்தான். பெரிய குழந்தை. திடமான குழந்தை. ஐஸக் என்ன கல்லா மண்ணா—கடவுளுக்கு நன்றி செலுத்தா திருப்பதற்கு? ஆனால் அவன் என்ன கட்டுவதாக உத்தேசித் திருந்தான். ஒலைன் வந்தால் அவளுக்கு வம்பளக்கப் புது விஷயம் கிடைக்கும். ஸெல்லன்ராவிலே புதுக் கட்டிடம் எழுப்புகிறார்கள்! வீட்டுக்குப் புதுப் பகுதியா? இல்லை. ஒரு புது வீடே கட்டிக் கொண்டிருக்கிறார்கள். வீட்டிலே அதிகப் பேர்வழிகளும் இருந்தார்கள். வேலைக்காரப் பெண் வந்திருந்தாள். எல்யூஸிஸும் வந்து விடுவான். புதுசாகப் பெண் குழந்தை ஒன்று பிறந்திருந்தது. பழைய வீடு போதாது, போதாது. அதையும் உபயோகிக்கலாம் தான். ஆனால் புதிய பெரிய வீடு அவசியம்தானே!

ஒரு நாள் அதை இங்கரிடம் சொல்லவும் சொன்னான். அவள் முன்பின் அது பற்றி அறியாதவள் போல நிண்டி நிண்டிக் கேட்டுத் தகவல்களைத் தெரிந்து கொண்டாள். ஸிவெர்ட் எல்லா வற்றையும் அவளிடம் சொல்லியிருந்தான். எனினும் கணவனின் ஆவலைத் தீர்த்து வைக்கும் பொருட்டு ஆச்சரியப்படுபவள் போல நடித்தாள் இங்கர். "அடேயப்பா, நிஜமாவா? அல்லது பொய் சொல்லுகிறாயா?"

ஐஸக்குக்குப் பெருமை தாங்க முடியவில்லை. உள்ளூறப் பூரித்துக்கொண்டே சொன்னான்: "நீ இன்னும் எத்தனை குழந்தை களுக்குத் தாயாவாயோ? அவற்றை எல்லாம் இந்த வீடு கொள்ளுமா? வேறு வீடு கட்டாமல் என்ன செய்வது?"

புது வீட்டுக்கு என்று இரண்டு ஆண்களும் பகல் பூராவும் கற்கள் கொணர்ந்து சேர்த்தார்கள். அவர்கள் இருவரும் தங்கள்

சக்திகள் பூராவையும் செலவிட்டு வேலை செய்தார்கள். ஒருவன் வாலிபன்—அவன் உடல் வலுவும் வனப்பும் பெற்றுக் கொண்டிருந்தது. அவன் கண்களும் பளிச்சென்றிருந்தன. எந்தெந்தக் கற்கள் பயன்படும் என்று பார்த்தவுடனேயே அவன் சொல்லிவிடுவான். மற்றவனுக்கு வயசாகிக்கொண்டிருந்தது. திடசாலி. நீளக் கைகள் உள்ளவன். நல்ல கனமுள்ளவன் அவன். கோடாலியைக் கொடுத்து நெம்பினுன் என்றுல் மலையைப் பெயர்த்து விடுவான். அப்படியும் இருவரும் சேர்ந்துகூட சில சமயம் அசந்து விடுவார்கள். பெரிய கல் ஒன்றைப் புரட்டிவிட்டபிறகு இருவரும் உட்கார்ந்து மெதுவாகச் சிறிது நேரம் பேசிக்கொண்டிருப்பார்கள். அவர்கள் பேசுவது ஒரு தினுசாகப் புதிய மாதிரியாக இருக்கும். அதிகமாக வாய்விட்டு, மனம் விட்டுப் பேசமாட்டார்கள். இலை மறைவு, காய் மறைவாகத்தான் பேசுவார்கள் எந்த விஷயத்தையும்.

“ப்ரேட், அவன் பண்ணையை விற்றுவிடுவதாகச் சொல்லிக் கொண்டிருக்கிறுன்!” என்றுன் தகப்பன்.

“ஆமாம். என்ன கேட்பான் என்று தெரியவில்லையே.”

“தெரியவில்லை.”

“நீ எதுவும் கேள்விப்பட வில்லையா?”

“இருநூறு தேலருக்குக் கொடுத்துவிடுவான் என்று கேள்விப்பட்டேன்.” சிறிது நேரம் யோசனையில் ஆழ்ந்திருந்தான் ஐஸக். பிறகு “இது நல்ல கல்லா, சொல்லு” என்றுன்.

“மேல் ஓட்டை எடுத்துவிட்டுப் பார்த்தால்தான் தெரியும்” என்று சொல்லிவிட்டு எழுந்தான் ஸிவெர்ட். சுத்தியலை அப்பாவிடம் கொடுத்துவிட்டு, இழுக்கிற வண்டியைத் தான் இழுத்தான். மூச்சுத் திணறுகிற வரையில் இழுத்து உயர்த்தி சுத்தியலைக் கைக்கொண்ட பலத்துடன் விட்டான். இருபது அடிகள் அந்தக் கல்லின் மேல் விழுந்தன. சிரமமான வேலைதான். அவன் ஓங்கின ஓங்கலில் கால் சட்டையும் மேல் சட்டையும்கூடக் கிழிந்துவிட்டது. இருபது அடிகள்—ராக்ஷஸ அடிகள் இருபது.

“இரு. பார்க்கலாம்” என்றுன் தகப்பன்.

பிள்ளை அடிப்பதை நிறுத்துகிறுன். “ஏதாவது அடிபட்ட அடையாளமாவது இருக்கிறதா?” என்று கேட்கிறுன்.

குனிந்து பார்க்கிறுர்கள் இருவரும்—கல் அசைந்துகூடத் தரவில்லை. ஸிவெர்ட்டின் பலத்த அடிகள் அதன்மேல் பட்டதாகத் கூடத் தெரியவில்லை.

தகப்பன் சுத்தியலின் வண்டியை இழுத்தான். "நான் அடித்தால் அசையுமா பார்க்கலாம்" என்றான். பலத்த அடிகள் தான். சுத்தி சுட்டது. இரும்பு உருகி மழுங்கிவிடும்போல இருந்தது.

"நழுவுகிறது. என்னால் இனி முடியாது" என்றான். ஆனால் முடியாது என்று எந்த வேலையையும் பற்றிச் சொல்லுகிற மனிதன் அல்ல அவன்.

இந்தத் தகப்பனுடைய எண்ணம் வேறு. கடைசி இரண்டொரு அடிகளைச் சுத்தியால் தன் மகன் தட்டி அந்தக் கல்லைப் பிளக்கட்டும் என்பது அவன் எண்ணம். மகனுக்குத் திருப்தியாக இருக்க வேண்டாமா? கடைசியில் கல் இரண்டாகப் பிளந்து விழுந்தது.

"உனக்கு இந்த வித்தை தெரிகிறது" என்றான் தகப்பன்.

"ஆமாம். அந்த ப்ரேடாப்ளிக் பற்றி நாம் ஏதாவது செய்யலாம்."

"செய்யலாம் என்றுதான் எனக்கும் தோன்றியது."

"நிலத்திலே சரியானபடி வேலை செய்தாக வேண்டும்."

"வீட்டையும் சரி பார்த்துத்தான் ஆகவேண்டும்."

"அதுவும் தான். பண்ணையை அவன் சரியாக கவனிக்கவே யில்லை. அதை எடுத்துக் கொண்டால் வேலை நிறையக் கொள்ளும். இருந்தாலும்.........பார்க்கலாம்......நான் சொல்ல விரும்பியதென்ன வென்றால், இந்த ஞாயிறன்று உன் அம்மா கோயிலுக்குப் போவாளா?"

"போவதாகத்தான் சொன்னாள்."

"ஓ! உம்...ம்...புது வீட்டுக்கு வாசற்படிக்குப் போட ஒரு நல்ல கல் கிடைக்குமா பார். ஒன்றும் கண்ணில் படவில்லையே" என்று கேட்டான் ஐஸக்.

"இல்லை" என்றான் ஸிவெர்ட்.

இருவரும் மீண்டும் வேலை துவக்கினார்கள்.

இரண்டு நாட்களில் தங்களுக்குத் தேவையான கற்கள் கிடைத்துவிட்டன என்கிற முடிவுக்கு வந்தார்கள் இருவரும். அது ஒரு வெள்ளிக்கிழமை மாலை. வேலை செய்து களைத்துப் போய் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தார்கள்.

"ம்...நீ என்ன செய்கிறாய்?" என்று கேட்டான் தகப்பன்.

"ப்ரேடாப்ளிக் பற்றிச் சற்றே யோசித்துப் பார்ப்போமா?"

"அதை வாங்கி என்ன செய்வது?"

"எப்படிச் சொல்வது? ஆனால் ஒன்று. ப்ரேடாப்ளிக்குக்கு அருகில் இருக்கிறது பள்ளிக்கூடம். தவிரவும் நம் பண்ணைக்கும் கிராமத்துக்கும் மத்தியில் இருக்கிறது அது."

மகன் சொன்னான்: "அதெல்லாம் சரி. ஆனால் அதை வாங்கினால் என்ன செய்வது? தவிரவும் விலையும் அதிகம் சொல்லுகிறார்களே."

"அப்படியா நினைக்கிறாய்......"

"எல்யூஸிஸ் அந்தப் பண்ணை வேலையை மேற்கொண்டு செய்யச் சம்மதித்தானானால்......"

"எல்யூஸிஸா? ஒப்புக் கொள்வானா? எனக்கு நிச்சயமாகத் தெரியவில்லை......"

நீண்ட மௌனம். இருவரும் ஆழ்ந்த யோசனையில் இருக்கிறார்கள். கொண்டுவந்த ஆயுதங்களை ஒன்று சேர்த்துக் கொண்டு வீடு திரும்பத் தயாராகிறான் தகப்பன்.

"ஆமாம். அவன் என்ன சொல்லுகிறான் என்று நீயே கேட்டுவிடேன்" என்றான் ஸிவெர்ட்.

பேச்சுக்குப் பின் வருமாறு முற்றுப்புள்ளி வைத்தான் ஐஸக். "அதுபற்றி வேறு ஒரு நாள் பார்த்துக் கொள்ளலாம். தவிரவும் புது வீட்டு வாசலுக்குப் போடக் கல் இன்னும் அகப்படவில்லையே!"

மறுநாள் சனிக்கிழமை. புதுசாகப் பிறந்த குழந்தைக்கு நாமகரணம் செய்யும் சடங்குக்கு அவர்கள் குன்றுகளைத் தாண்டிப் போக வேண்டியதாக இருந்தது. வேலைக்காரி ஜென்ஸினும் அவர்களுடன் வந்தாள். குழந்தைக்கு அவள் ஒரு 'காட்மதர்.' மற்ற காட்மதர்களை அங்கே நேருகிறமாதிரி, இங்கரின் ஜனங்களிடையே பார்த்துக்கொள்ள வேண்டியதுதான்.

இங்கர் நன்றாக ஆடை உடுத்தி வந்தாள். நேர்த்தியாக இருந்தாள். கழுத்திலும், மணிக்கட்டுகளிலும் வெள்ளைத் துணி வைத்துத் தனக்கு ஒரு அழகான ஆடை தைத்துக் கொண்டிருந்தாள். குழந்தைக்கு முழுதும் வெள்ளை ஆடை அணிவித்திருந்தாள். ஓரத்தில் மட்டும் ஒரு புது நீல ரிப்பனைத் தைத்திருந்தாள். குழந்தை அழகான கெட்டிக்காரக் குழந்தைதான். அது புன்னகை புரியும்போது எவ்வளவு அழகாக இருந்தது! அது பேச முயன்று புரியாத மழலை மிழற்றியதும் அழகாகத்தான் இருந்தது. சுவரில் இருந்த கடிகாரம் மணி அடிக்கும்போது தன் கண்களைப்

பரக்க விழித்துக் கவனிக்கும் அந்தக் குழந்தை. அவளுடைய பெயரை ஐஸக்தான் தேர்ந்தெடுத்தான். அது அவனுடைய உரிமை. அவன் இஷ்டப்படிதான் பெயர்வைக்க வேண்டுமென்றான். ஜாகபின் என்று வைக்கலாமா, ரிபெக்கா என்று வைக்கலாமா என்று யோசித்தான் அவன்—இரண்டு பெயர்களுமே ஐஸக் என்ற பெயருக்குத் தொடர்புள்ளவை. இது விஷயம்பற்றி அவன் மெள்ள இங்கரிடம பிரஸ்தாபித்தான். "ரிபெக்கா என்று பெயர் வைத்தால்..."

"அதுவே இருக்கட்டுமே" என்றாள் இங்கர்.

தன் குழந்தையின் பெயரைத் தீர்மானிக்கத் தகப்பனுக்குத் தானே உரிமையுண்டு. "அவள் பெயர் ரிபெக்காதான்" என்று தீர்மானமாகச் சொன்னான் அவன்.

அவனும் நாமகரணம் செய்யும் சடங்குக்காகச் செல்லும் கோஷ்டியுடன் சென்றான். முக்யமாக ரிபெக்காவை எடுத்துச் செல்வதற்காகத்தான். தவிரவும் அவன் வராவிட்டால் யாராவது ஏதாவது சொல்லுவார்கள். பத்துப்பேர்கூட உடன் இல்லாமல் ரிபெக்காவின் நாமகரணச் சடங்கு நடப்பானேன்! தாடியை வெட்டிவிட்டுக் கொண்டான். சிவப்புச் சட்டையை எடுத்துப் போட்டுக்கொண்டான். அந்தச் சட்டை பழகிவிட்டது. உண்மைதான். ஆனால் அதைத் தரித்துக்கொண்டு வாலிப மிடுக்குடன் நடந்தான் ஐஸக். கோடை சற்றுக் கடுமையான கோடைதான். அதற்குத் தகுந்த உடுப்புக்கள் இல்லை ஐஸக்கிடம். மாரிக்காலத்துக் கனமான உடுப்புக்களை அணிந்துகொண்டு நடந்தான் அவன். தூக்கமுடியாத பெரிய பூட்ஸை மாட்டிக்கொண்டு கிளம்பினான்.

ஸிவெர்ட்டும் லெபல்டினும் பண்ணையைப பார்த்துக்கொள்ளப் பின் தங்கினார்கள்.

ஏரியைப் படகில் கடந்தார்கள். முன்னெல்லாம் ஏரியைச் சுற்றி நடந்து கடக்கவேண்டும். படகில் போவது ஆனந்தமாகவும் சுலபமாகவும் இருந்தது. வழியில் குழந்தைக்கு பால் கொடுக்க இங்கர் தன் மேல் சட்டையை ஒதுக்கியபோது அவள் கழுத்திலிருந்து பளபளவென்று ஏதோ ஒன்று தொங்குவதைப பார்த்தான். ஆலயத்தில் இங்கர் தனக்கு ஐஸக் அளித்திருந்த மோதிரத்தை அணிந்திருந்தாள். மொத்தத்தில் இங்கர் மீண்டும் முன்மாதிரியாகி விட்டாள். நல்லதுதான்.

# 17

எல்யூஸிஸ் வீடு திரும்பினான்.

அவன் வீட்டை விட்டுக் கிளம்பி இப்போது பல வருஷங்களாகிவிட்டன. தகப்பனையும் விட உயரமாக இருந்தான் அவன். அவன் கைகள் நீளமாக வெளுத்திருந்தன. உதட்டிலே மீசை புச புசவென்று வளர்ந்திருந்தது. நகரத்தவன் என்கிற மாதிரி வேஷம் போட்டு அமர்க்களம் பண்ண முயலவில்லை அவன். சுலபமாகவும் சாதாரணமாகவும் நடந்து கொண்டான். இங்கருக்குத் திருப்திதான். ஆனந்தமாகவும் இருந்தது. ஸிவெர்ட்டுடன் சிறிய படுக்கை அறையில் படுத்துறங்கினான். சகோதரர்கள் இருவரும் தோழமை பூண்டு நடந்து கொண்டார்கள் மிகவும் பிரியத்துடன். ஒருவருக்கொருவர் ஏதாவது வேடிக்கை செய்து கொண்டே இருப்பார்கள். ஆனால் எல்யூஸிஸூம் பண்ணையிலிருந்த வேலைகளில் தன் பங்கைச் செய்ய வேண்டும் என்று வந்தது. அவனுக்கு உடலுழைப்பு அதிகப் பழக்கமில்லை. சீக்கிரமே அலுத்து விடுவான்—மேல் மூச்சு கீழ் மூச்சு வாங்கும். ஆனால் புது வீடு கட்டுகிற வேலையில் அவன் பங்கை அவன் செய்யாமல் இல்லை. அதுவும் கூட ஸிவெர்ட் வேலை செய்யாத சந்தர்ப்பங்களில், தகப்பனுடன் மட்டும் வேலை செய்யும்போது எல்யூஸிஸ் மிகவும் சிரமப்பட்டுப் போவான்.

ஆனால் ஸிவெர்ட் எங்கே போனான்? விஷயம் இதுதான். மாமா ஸிவெர்ட் சாகக் கிடப்பதாக ஓலின் வந்து தகவல் சொன்னாள். உடனேயே சிறுவன் ஸிவெர்ட் கிளம்ப வேண்டியது தானே! அவன் இந்தச் சமயத்தில் போவது எல்லோருக்குமே அசந்தர்ப்பம்தான். ஆனால் போகாமல் என்ன செய்வது?

ஓலின் சொன்னாள்: "இப்படிச் சேதி தெரிவிக்க வர எனக்கு நேரமும் பொழுதும் இல்லைதான். உண்மை அது. இருந்தாலும் வந்தேன். இந்தக் குழந்தைகளிடம் எனக்கு என்ன பிரியம் தெரியுமோ? அதுவும் சிறுவன் ஸிவெர்ட்டைச் சேரவேண்டிய சொத்தை வேறு யாராவது தட்டிக்கொண்டு போய்விட்டால் என்ன பண்ணுவது?"

"அப்படியானால் மாமா ஸிவெர்ட்டுக்கு ரொம்பவும் மோசமாகத்தான் இருக்கிறது என்று சொல்லு."

"மோசமா? தினத்துக்குத் தினம் மோசமாகிக் கொண்டு இருக்கிறது."

"படுத்த படுக்கை தானே?"

"படுக்கையா? இனி எழுந்திருப்பார், நடப்பார் என்கிற நம்பிக்கைக்கே இடமில்லே."

மாமா ஸிவெர்ட் அதிக நாள் உயிருடனிருக்கமாட்டார் என்று தான் ஒலென் சொன்னதிலிருந்து ஏற்பட்டது. உடனேயே ஸிவெர்ட் கிளம்பிப் போகவேண்டும் என்று இங்கர் பிடிவாதம் பிடித்தாள்.

ஆனல் மாமா ஸிவெர்ட், கிழவன். சாகக் கிடக்கவில்லே. உண்மையில் சொல்லப் போனல் அவன் படுத்த படுக்கையாகக் கூடக் கிடக்கவில்லே. சிறுவன் ஸிவெர்ட் அங்கு வந்து சேர்ந்த போது அங்கு ஒரே குழப்பமாயும், எல்லா சாமான்களும் கசா முசா என்று இரைபட்டும் கிடந்தன. வஸந்த காலத்து வேலே இன்னும் செய்து முடிந்தபாடில்லே. மாரிக்காலத்துக்குத் தேவையான எருக் கூடச் சேகரித்தாகவில்லே. ஆனல் கிழவன் சாகக் கிடந்தமாதிரித் தெரியவில்லே. மாமா ஸிவெர்ட்டுக்கு வயது எழுபதுக்கு மேலாகிவிட்டது. உடம்பு சரியாக இல்லே என்பதும் உண்மைதான். நேராக உடை உடுக்காமல் வீட்டுக் குள்ளே நடமாடுவான். வெளியே கிளம்புவதேயில்லே. இரவு பகல் என்று பாராமல் படுத்துக் கிடப்பான். அங்கு உதவிசெய்ய அவனுக்கு ஒரு ஆள் தேவையாக இருந்தது. மீன் பிடிக்கும் வலேகளே எடுத்து வைக்கவாவது ஒரு ஆள் வேண்டாமோ? அதெல்லாம் சரிதான்—அவன் சாகக் கிடக்கவில்லே. புகை பிடித்துக்கொண்டு, அழுகின கருவாடு தின்று கொண்டு, காலந் தள்ளிக் கொண்டிருந்தான்.

ஸிவெர்ட் வந்து அரை மணிக்குள்ளாகவே விஷயத்தைப் புரிந்துகொண்டான். வீடு போய் விட்டு வருகிறேன் என்ருன்.

"வீட்டுக்கா?"

"ஆமாம். அங்கே அப்பா ஒரு புது வீடு கட்டிக் கொண் டிருக்கிருர், அதில் உதவி செய்ய அவருக்குச் சரியான ஆசாமி இல்லே."

"ஓஹோ! எல்யூஸிஸ் திரும்பிவிட்டான் என்று கேள்விப் பட்டேன!" என்ருன் கிழவன்.

"ஆமாம். ஆனல் அவனுக்கு இந்த மாதிரி வேலேகளில் பழக்கம் இல்லே."

“அப்படியானால் நீ இப்போது எதற்காக வந்தாய்?”

ஒலேன் வந்ததையும் அவள் தந்த தகவல்களையும் ஸிவெர்ட் சொன்னான். மாமா ஸிவெர்ட் சாகக் கிடப்பதாக அவள் சொன்னதையும் சொன்னான்.

“சாகக் கிடக்கிறேனா? சாகக் கிடக்கிறேன் என்று சொன்னாள். கிழட்டுக் குருட்டு முண்டம்!” என்றான் மாமா ஸிவெர்ட்.

“ஹா! ஹா! ஹா!” என்று ஸிவெர்ட் சிரித்தான்.

கிழவன் அவனைக் கோபமாகப் பார்த்தான்: “நான் சாகக் கிடக்கிறேன் என்றால் அது சிரிப்புக்கிடமாக இருக்கிறதோ உனக்கு? உனக்கு என் பெயரை வேறு வைத்திருக்கிறார்கள்!”

ஆனால் சிறுவன் ஸிவெர்ட் அந்தக் கோபத்தை லக்ஷியம் பண்ணவில்லை. சாவைப்பற்றி எண்ணிப் பயப்பட அவனும் கிழவனா என்ன! அந்தக் கிழவனை அவனுக்குப் பிடிக்கவும் இல்லை! வீடு திரும்பிவிட்டால் தேவலை போல இருந்தது.

“நான் சாகப்போகிறேன் என்று நம்பிக்கொண்டுதான் இங்கு வந்தாயோ நீ!” என்று கேட்டான் கிழவன் மீண்டும்.

“ஒலேன்தான் அப்படிச் சொன்னாள்.”

சிறிது நேரம் சும்மா இருந்தான் கிழவன். பிறகு சொன்னான்: “இதோ பார். அந்த வலையைத் தைத்து எடுத்து வைத்தாயானால் நான் உனக்கு ஒரு விஷயம் காட்டுகிறேன்” என்றான்.

“உம்...ம்...என்ன அது?”

“அதைப்பற்றி என்ன?” என்றான் கிழவன், கோபமாக. அதற்குப் பிறகு அவன் பேச மறுத்துவிட்டான்.

எல்லாவற்றையும் சீர்படுத்த அங்கு வெகு காலம் தங்க நேரிடும் என்று சிறுவன் ஸிவெர்ட்டுக்குத் தெரிந்துவிட்டது. அவனுக்கு இஷ்டமில்லை. போய் இடத்தையெல்லாம் சுற்றிப் பார்த்தான். எல்லாமே கவனிப்பாரில்லாமல் வீணாகிக் கிடந்தது. அங்கு வேலை துவக்கி லாபமே இராது என்று தெளிவாகவே தெரிந்தது. கொஞ்சநேரம் கழித்து அவன் திரும்பி வந்தபோது கிழவன் கணப்பண்டை உட்கார்ந்து குளிர் காய்ந்து கொண்டிருந்தான்.

“அதைப் பார்த்தாயா?” என்று பெரிய மரப்பெட்டி ஒன்றைக் காட்டினான். அவன் பணப் பெட்டி அதுதான். முன் காலத்தில் நீதிபதிகளும் சர்க்கார் அதிகாரிகளும் பிரயாணங்கள் கிளம்பும் போது சாராயப் புட்டிகள் வைத்துக்கொண்டு போக அந்தமாதிரி

பெட்டியைத்தான் உபயோகிப்பார்கள். இப்போது அந்தப் பெட்டியில் புட்டிகள் இல்லை. கிழவன் ஜில்லா பொக்கிஷதாராக இருக்கும்போது அதில் பத்திரங்களையும் மற்றும் முக்யமான தஸ்தாவேஜுகளையும் கணக்குகளையும் வைத்திருந்தான். இப்போது அதில் கணக்குகளும் அவன் பணமும் இருந்தது. ஊரில் அந்தப் பெட்டி பிரசித்தமான பெட்டி. எண்ணிக்கையற்ற பணம் அதில் இருந்ததாக ஊரில் கதை. "அவ்வளவு பணம் எனக்கும் இருந்தால்......" என்று தலையை ஆட்டிக்கொண்டே ஊரில் சொல்லுவார்கள்.

பெட்டியிலிருந்து ஒரு கடிதத்தை எடுத்தான் மாமா ஸிவெர்ட். மிகவும் கனமான குரலில் "உனக்கு வாசிக்கத் தெரியுமில்லையா?" என்றான்.

சிறுவன் ஸிவெர்ட் அப்படி ஒன்றும் படிப்பாளி அல்ல. ஏதோ எழுத்துக் கூட்டுவான். மாமாவிடம் இருந்ததெல்லாம் அவனுக்குப் பிறகு சிறுவன் ஸிவெர்ட்டுக்குத்தான் என்று அந்தக் கடிதத்தில் எழுதியிருந்ததென்று ஸிவெர்ட் வாசித்தறிந்து கொண்டான்.

"விஷயம் இவ்வளவுதான். இனி நீ உன் இஷ்டப்படி செய்" என்று சொல்லிவிட்டுக் கிழவன் அந்தக் கடிதத்தை வாங்கிப் பெட்டியில் வைத்தான்.

ஸிவெர்ட்டுக்கு அது விஷயம் அப்படி ஒன்றும் பிரமாதமாகத் தோன்றவில்லை. ஏற்கனவே தெரிந்த விஷயம்தானே அது. அவன் பிறந்த அன்று முதல் அவன் அம்மா சொல்லிக் கொண்டிருக்கிறாள்—மாமா ஸிவெர்ட்டின் ஆஸ்தியெல்லாம் அவனுக்கேதான் என்று. அந்தப் பெட்டியில் எவ்வளவு பணம், என்னென்ன பொக்கிஷங்கள் இருந்தன என்று கிழவன் காண்பித்தானானால்—அது வேறு விஷயம்.

"அந்தப் பெட்டியில் பல நேர்த்தியான சாமான்கள் இருக்கின்றன என்று எண்ணுகிறேன்" என்றான்.

"நீ நினைப்பதைவிட அதிகம் இருக்கிறது" என்றான் கிழவன்.

அவனுக்குத் தன் மருமகனிடம் கோபம். ஒரு விதத்தில் ஏமாற்றமும் தான். பெட்டியைப் பூட்டி விட்டுப் படுக்கப் போய் விட்டான். படுக்கையில் படுத்தபடியே பல தகவல்கள் சொன்னான்: "நான் ஜில்லா பொக்கிஷ அதிகாரியாக இருந்திருக்கிறேன். இந்தக் கிராமத்துப் பொதுப் பணங்கள் எல்லாம் பல வருஷங்கள் என்னிடமே இருந்தன. முப்பது வருஷங்கள் என்னிடமிருந்தன.

யாரும் உதவி செய்ய வர வேண்டுமென்று கெஞ்சிக் கொண்டு இளம்ப எனக்கு அவசியம் எதுவும் இல்லை. நான் சாகக் கிடக்கிறேன் என்று ஒலேனுக்கு யார் சொன்னது? வண்டி குதிரை தந்து மூன்று ஆளை அனுப்ப மாட்டேனு டாக்டருக்கு—உடம்பு சரியாக இல்லாது போனல்? என்னிடம் விளையாட்டெல்லாம் வைத்துக் கொள்ளாதே, பையா. நான் போகிற வரையில் காத்திருக்கக்கூட உனக்குப் பொறுமையில்லையே! உன் பத்திரத்தைக் கூடக் காட்டி விட்டேன்—அதுவும் அந்தப் பெட்டியிலேதான் இருக்கிறது. வீடு திரும்ப வேண்டும் என்று உனக்கிருந்தால் திரும்பிப் போ, எனக்கென்ன? ஆனல் போய் எல்யூஸிஸிடம் சொல்லு. அவளை வரச் சொல்லு. அவனுக்கு என் பெயர் வைக்கவில்லை, உண்மைதான். அதனல் என்ன?"

அவன் குரலில் கோபம் தொனித்தது. அந்தக் கோபத்தை எல்லாம் ஸிவெர்ட் லக்ஷியமே செய்ய வில்லை. ஒரு நிமிஷம்தான் தயங்கினன்: "சரி; எல்யூஸிஸை வரச் சொல்கிறேன்."

ஸிவெர்ட் திரும்பியபோதும், ஸெல்லன்ராவில்தான் ஒலேன் இருந்தாள். கொஞ்சநாள் ஆக்ஸெல் ஸ்டிராமுடனும் பார்ப்ரோவுடனும் அவர்களுடைய பண்ணையில் தங்கிவிட்டுத் திரும்பியிருந்தாள். வம்புக்கு விஷயம் கிடைக்காமலா போய்விடும்! "அந்தப் பெண் பார்ப்ரோவின் வயிறு நிரம்பி விட்டது. அவள் கர்ப்பம். நான் சொன்னதாகத் தெரிய வேண்டாம். அடே! ஸிவெர்ட் திரும்பி விட்டானே! விஷயம் என்ன? மாமா ஸிவெர்ட் செத்து விட்டானு? கிழவன்தானே அவன்? காலக் கிரமத்தில் எல்லோருமே சாகவேண்டியவர்கள்தானே! ஓ! சாகவில்லையா? சரி, நல்லது தான். நல்ல கிழவர். இருக்கட்டுமே. சொத்தும் இருக்கிறது? என்ன பிதற்றுகிறேனு? பாசாங்கு பண்ணிக் கொண்டு ஐயோ அப்பா அம்மா என்று படுத்திருந்தான் என்று எனக்கு எப்படித் தெரியும்? அதிக நாள் இருக்க மாட்டான் என்று எனக்குத் தோன்றியது—சொன்னேன். எனக்குத் தெரிந்ததைச் சொன்னேன். அதில் தவறு என்ன? அவனே சொன்னுன்—சாகக்கிடப்பதாக..."

ஒலேனுடன் பிடிவாதம் செய்து லாபம் என்ன? எல்லாவற்றையும் பேசிப் பேசிக் குழப்பி விடுவாள் அவள். எதிரிகள் அவள் சொல்வதில் எதையும் தீர்மானமாகப் புரிந்து கொள்வது இயலாது. எல்யூஸிஸை அனுப்பச் சொன்னுன் கிழவன் என்று தெரிந்ததும் அதையும் தனக்குச் சாதகமாக உபயோகித்துக்

கொண்டாள் ஒலேன். "பாரேன். நான் சொன்னது உண்மை தானே? இல்லாவிட்டால் கிழவன் எதற்காக எல்யூஸிஸைக் கூப்பிடுகிறுன். அவன் சாகத்தான் கிடக்கிறுன்—இல்லாவிட்டால் உற்ருர் உறவினரை இப்படி அழைத்து அனுப்புவாஞ? அவன் சாகக் கிடக்கிறுன். அவன் அழைப்பை அலக்ஷியம் செய்யாதே எல்யூஸிஸ். அதனுல் உனக்கு லாபமேதவிர நஷ்டமிராது. இப்பவே கிளம்பு. அவன் உயிருடனிருக்கும்போதே போய்விடு. நானும் அந்தப் பக்கம்தான் போகிறேன். என்னுடன் வந்து விடு" என்ருள் ஒலேன்.

ஒலேன் அங்கிருந்து கிளம்புமுன் இங்கரைத் தனியாக அழைத்துப் போய் அவள் காதில் குசுகுசு வென்று ரகசியம் பேசினுள்: "நான் சொன்னதாக யாரிடமும் சொல்லிவிடாதே! அவள், அந்தப் பார்ப்ரோ, கர்ப்பமாகத்தான் இருக்கிருள். அடையாளங்கள் எனக்குத் தெரியாதா? அவள் அந்தப் பண்ணைக்கு யசமானி ஆகிவிடுவாள் என்று எண்ணுகிறேன். ஆமாம். சிலர் பெரிய பண்ணைகளுக்கு யசமானிகளாவதற் கென்று பிறந்திருக்கிருர்கள்—மிகவும் கீழானவர்கள்கூட. ஆனுல் பார்ப்ரோ அப்படி யாவாள் என்று யார் எதிர்பார்த்திருக்க முடியும்? ஆக்ஸெல் — அவன் உன் புருஷனைப்போல— உழைப்பாளி. பண்ணையில் நன்கு வேலை செய்து எல்லா வற்றையும் ஒன்றுக்கிரண்டாகப் பெருக்குகிறுன். உனக்குத் தெரியாதா? நம் பக்கத்தில் இந்த மாதிரியான பண்ணைகளே இல்லை. பார்ப்ரோவை நான் கேட்கவில்லை—அவளாகவே எனக்கு ஒரு சுமை கம்பளி கொடுத்தாள். வந்தனம், நன்றி, வருகிறேன் என்றெல்லாம் பரிமாறிக்கொண்டு கிளம்பினேன்—அவள் இத்த னூண்டு இருந்தது முதல் தெரியுமே அவளை எனக்கு. அவள் வளர்ந்த காலத்தில் நான் இங்கு ஸெல்லன்ராவில்தானே இருந்தேன்—நீ நகரில் சிறையில் இருந்தாய்..."

"ரிபெக்கா அழுகிருள். போகிறேன்" என்று போனுள் இங்கர். அவளும் ஒரு சுமை கம்பளி ரோமம் கொடுத்தாள் ஒலேனுக்கு.

பிரமாதமான நன்றி தெரிவித்துப் பேசினுள் ஒலேன். அவளைப் போல தரும சிந்தனையுள்ளவர்கள் வேறு யார் இந்தப் பக்கத்திலே? அதை அவள் பார்ப்ரோவிடமே சொன்னுளாம்—இங்கரைப்போல யாரும் இல்லை என்று. அதனுல்தான் அவள் ஒரு குறைவு மில்லாமல் இருந்தாள். அந்தக் குழந்தை ரிபெக்கா அது அவள்

தாயையே உரித்து வைத்திருந்தது. தனக்குக் குழந்தைகளே இனி பிறக்காது என்று ஒரு நாள் இங்கர் தன்னிடம் சொன்னதை ஞாபகப்படுத்தினள் ஒலைன். இப்போது தெரிகிறது. கடவுளின் வழிகள் மனிதனல் ஆராய்ந்து அறியப்படாதவை—கிழவி ஒலைனுக்குத் தெரியும்.

அத்துடன் கிளம்பினள்ஒலைன். எல்யூஸிஸ் முன்னல்போனன். ஒலைன் கிழவி. அவளுக்குத் தெரியாமல் அந்தப் பக்கத்தில் எதுவும் நடக்காது. எது நடந்தாலும் தெரிந்துகொள்ளும் ஆவல் உள்ளவள் அவள். அழியாதவள் அவள்—அவளுக்கு அழிவேது? கிழவன் ஸிவெர்ட்டிடம் போய் தான் எல்யூஸிஸை அழைத்து வந்ததாகச் சொல்வாள். அவனைக் கிளம்பத் தூண்டியது தானே தான் என்று சாதித்து விடுவாள்.

உண்மையில் எல்யூஸிஸுக்குத் தூண்டுதல்கள் எதுவும் தேவையாக இல்லை. அவன் கிளம்பிவிடத் தயாராகவே தான் இருந்தான். பாரேன்; எல்யூஸிஸ் நகரவாசத்தினல் எதிர்பார்த்தபடி அவ்வளவு கெட்டவனகி விட வில்லை. அவனுக்கு உடம்பில் அவ்வளவாகத்திடமோ தெம்போ கிடையாது. ஸெல்லன்ரா திரும்ப அவனுக்கு மனசில்லாதிருந்ததற்குக் காரணம் இல்லாமல் இல்லை. அவனல் பண்ணையில் மற்றவர்களுக்குச் சமமாக உழைக்கமுடியாது என்பது ஒன்று. இரண்டாவது அவன் தாயார் குழந்தையைக் கொன்ற குற்றத்திற்காகச் சிறைசென்றவள்—அது நகரில் யாருக்கும் தெரியாது. இங்கு கிராமத்தில் எல்லோரும் அதை மனசில் வைத்துப் பேசுவார்கள். தவிரவும் அவன் நகரத்தில் வேறு தினுசான மனிதர்களுடன் பழகி வந்தவன்; அவன் உணர்ச்சிகளும் நடையுடை பாவனை பழக்க வழக்கங்களும் கனதனவான்களுடையதைப் போல இருந்தன. சூலம் கத்தியில்லாமல் சாப்பிடக்கூடாது என்பது அவன் கட்சி, நகரத்திலே புது நாணயங்கள் புழங்கின. இங்கு காட்டுப் பிரதேசத்தில் பழைய தேலர் கணக்குத்தான். இதை விட்டுப் போக அவனுக்கு இஷ்டமில்லாமல் என்ன? கிளம்பத் தயாராகவே இருந்தான் அவன். தனது பெருமை தெரியாது, துருத்தாமல், நடந்துகொள்ள வேண்டியிருந்தது. மற்றவர்களுடன் சரிசமமாகப் பழக அவன் தயார்—ஆனல் நகர வாசத்தின் சின்னங்கள் எங்கு போய்விடும்? ஆனல் யாருடனும் ஜாக்கிறதையாக இருக்க வேண்டியதாக இருந்தது. நடுக் கோடையில் மாரிக் காலத்து ஆடைகள் அணிந்தான் அவன். கையில் அழகான தடி

யில்லாமல் கிளம்பமாட்டான் அவன். நகரில் அதைச் சுழற்றிக் கொண்டு நடக்கிறமாதிரி இங்கு நடக்க முடியுமோ? ஒளித்து வைத்துக் கொள்ள வேண்டியதாக இருந்தது.

அவன் ஸெல்லன்ராவை விட்டுக் கிளம்பத் தயாராக இருந்ததுபற்றி ஆச்சரியப்படுவதற்கில்லை. வீடு கட்டுவதில் அவனுக்குப் பரிசயமில்லை. அந்தக் கடினமான வேலைகள் செய்யப் பழகாதவன் அவன். அவனால் நன்றாகக் கடிதம் எழுதமுடியும்— அந்தக் கலையை அவன் தாயாரைத் தவிர வேறு யாரும் அனுபவிக்கவில்லை. வேறு யாருக்குத் தெரியும் அங்கு அந்தக் கலையை மதிப்பிட? சந்தோஷத்துடனேயே கிளம்பினான் அவன்— ஒலினுக்கு வெகுதூரம் முன்னால் தன் கைத்தடியைச் சுழற்றிக் கொண்டு நடந்தான். முக்கால் வழி நடந்துவிட்டு அவள் வருவதற்குத் தங்கினான். ஸெல்லன்ராப் பிரதேசத்திலிருந்து அவசரமாக வெளியேறிவிட்டால் தேவலை என்றிருந்தது. தன்னுடைய நகரத்து ஆடைகளை உடுத்திக்கொண்டு, கைத் தடியைச் சுழற்றிக்கொண்டு வெகு வேகமாக நடந்துவிட்டான். சூரிய வெப்பம் அதிகமாகத்தானிருந்தது—எனினும் மன உல்லாஸத்தினால் அவனுக்கு ஆடை கனமோ புழுக்கமோ தெரியவேயில்லை.

வீட்டு வேலை செய்வதில் அவனில்லாததைதுபற்றி யாரும் கவலைப்படவில்லை. ஸிவெர்ட் திரும்பி வந்ததும், வீட்டு வேலை முடிந்துவிட்டது என்கிற மாதிரி நம்பிக்கை வந்துவிட்டது ஐஸக்குக்கு. நூறு எல்யூஸிஸ்கள் சேர்ந்து செய்கிற வேலையை ஒண்டியாக ஸிவெர்ட் செய்து முடித்து விடுவான். அதிகாலைமுதல் இரவு வெளிச்சம் மங்குகிறவரையில் அவனால் நின்று வேலை செய்ய முடியும். கூடிய சீக்கிரமே அஸ்திவாரம் போட்டுப் பெரிய மரங்களைச் சரிவர நிறுத்தி விட்டார்கள். குறுக்கு உத்திரங்களையும் போட்டுவிட்டார்கள். மூன்று தாய்ச் சுவர்கள்தான்—நாலாவது சுவர் ஏற்கனவே இருந்த வீட்டின் சுவர்தான். இப்போது மர வேலை செய்வதும் சுலபமாக இருந்தது—மரத்தை அறுக்க அவர்களிடமேதான் மரம் அறுக்கும் யந்திர சாலை இருந்ததே! கூரைகூட மரப்பலகைகளால் ஆகிறமாதிரிச் செய்தார்கள்! இப்படித் தினம் தினம் வேலை செய்து, கூரைபோட்டு, தரையைக் கெட்டிசெய்து, ஜன்னல்களும் வைத்து, வீட்டைக் கட்டி முடித்து விட்டார்கள். அந்தக் குறுகிய காலத்தில் அவர்கள் செய்யக் கூடியது அவ்வளவுதான். அதற்குள் மீண்டும் நிலத்தில் வேலை

செய்ய வேண்டிய அவசியம் ஏற்பட்டுவிட்டது. வர்ணமடிப்பது, உள்ளே மற்றும் நகாசு வேலை செய்வது என்பதெல்லாம் பிறகு தான் ஆகவேண்டும்.

இப்பொழுது பலர் தன்னைப் பின் தொடரக் கெய்ஸ்ஸலர் வந்து சேர்ந்தான்—ஸ்வீடன் தேசத்திலிருந்து வந்தான். அவனுடன் வந்த ஆசாமிகள் பளபளவென்று மின்னிய சேணங்கள் அணிந்த குதிரைகள் மேல் ஏறி வந்தார்கள். குதிரைகளும் சுத்தமாக மிடுக்காக இருந்தன. அவர்கள் பணக்காரர்கள் என்பது பார்த்த மாத்திரத்திலேயே தெரிந்தது. திடகாத்திரர்கள். கனமான மனிதர்கள். குதிரைகள் அவர்களுடைய கனம் தாங்காமல் முதுகை வளைத்துக்கொண்டு நடந்தன. இவர்களுடன் கெய்ஸ் ஸலரும் வந்தான்—அவன் மட்டும் கால் நடையாகத்தான் வந்தான். நாலு கனவான்கள்; கெய்ஸ்ஸலர்; மற்றும் இரண்டு வேலைக்காரர்கள்; மூட்டை தூக்குகிற குதிரைகள் இரண்டும் வந்தன.

பண்ணை வீட்டு வாசலிலே வந்து இறங்கினார்கள். "இதோ ஐஸக். பண்ணையார் ஐஸக்—மார்க்ரேவ் ஐஸக். குட் டே ஐஸக். நான் சொன்னபடியே மறுபடியும் வந்துவிட்டேன் பார்" என்று கூவினான் கெய்ஸ்ஸலர்.

கெய்ஸ்ஸலர் எப்போதும் போலத்தான் இருந்தான். நடந்து தான் வந்தான் எனினும் அவன் மற்ற கனவான்களுக்குத் தாழ்ந்தவன்மாதிரி நடந்து கொள்ளவில்லை. அவன் சட்டை துணி மணிகளும் கிழிந்தும் ஒட்டுப் போட்டும் நூல் பிரிந்தும் இருந்தன—இதெல்லாம் பற்றி அவன் லக்ஷியம் செய்ததாகவே தெரியவில்லை. மற்றவர்களுடன் சரி சமானமாகப் பேசினான் அவன். "இந்தக் கனவான்களும் நானும் இந்தக் குன்றுகளின் சரிவிலே போய்ப் பார்த்துவிட்டு வருவோம்—சற்றுத் தங்கிவிட்டுப் போவோம் — வெகு தூரம் வந்திருக்கிறார்கள்" என்றான் கெய்ஸ்ஸலர்.

வந்திருந்தவர்களும் நேர்த்தியாக, இன்முகமாகப் பேசுகிற வர்கள்தான். கெய்ஸ்ஸலரின் வார்த்தைகளைக் கேட்டு அவர்கள் புன்சிரிப்புச் சிரித்தார்கள். இந்த மாதிரி அவன் பண்ணையிலே வந்து ஆர்ப்பாட்டம் பண்ணியதை மன்னிக்க வேண்டும் என்றார்கள். உணவுக்குத் தேவையான பொருள்கள் கொணர்ந் திருந்தார்கள் அவர்கள். "இல்லாவிட்டால் அவர்கள் பண்ணையில் இருந்தது பூராவையும் தின்று தீர்த்து விட மாட்டார்களா?

இரவில் படுத்து உறங்கத்தான் இடம் வேண்டும் அவர்களுக்கு. அந்தப் புதுக் கட்டிடத்தில் அவர்களைத் தங்க அனுமதித்தானுனல்......? என்று பணிவாகக் கேட்டார்கள்.

சிறிது நேரம் இளைப்பாறினார்கள். கெய்ஸ்ஸலர் இங்கரையும் குழந்தைகளையும் பார்த்துச் சிறிது நேரம் பேசி விட்டு வந்தான். பிறகு அவர்கள் எல்லோரும் மலைச்சரிவிலே ஏறிச் சென்றார்கள். இருட்டும் வரையில் திரும்பவில்லை. பகல் பொழுதில் அன்று பல தடவைகள் டபார் டபார் என்று வெடிச் சப்தம் கேட்டது. அவர்கள் திரும்பும் போது பைகள் பல நிறைய ஸாம்பிள்கள் கொணர்ந்தார்கள். "நீலச் செம்பு" என்றான் ஒருத்தன். தங்களுக்குள் வெகு நேரம் படித்தவர்கள் பேசுவது போலப் புரியாத வார்த்தைகளைப் போட்டுப் போட்டுப் பேசிக் கொண்டிருந்தார்கள். கையில் இருந்த ஒரு தேசப் படத்தையும், ப்ளானையும் அடிக்கடி பார்த்து பல விஷயங்களை விவாதித்தார்கள். வந்திருந்தவர்களில் ஒருவன் என்ஜினியர் போல இருந்தது. வேறு ஒருவன் மிராசுதார் அல்லது மானேஜர் வேலை செய்து பழகியவன் போல இருந்தது. மலை ரெயில், ஆகாய ரெயில், சுரங்க விபத்துக்கள் என்று பல புதுப் புது விஷயங்களைப் பற்றி அவர்கள் பேசினார்கள். நடுநடுவே கெய்ஸ்ஸலரும் ஏதோ வார்த்தைகள் சொன்னான். அவன் வார்த்தைகளை மதித்து கவனித்துக் கேட்டுக் கொண்டார்கள் அவர்கள்.

"ஏரிக்குத் தெற்கேயுள்ள நிலம் யாருக்குச் சொந்தம்?" என்று கேட்டான் ஒருவன்.

"சர்க்காரைச் சேர்ந்தது" என்றான் கெய்ஸ்ஸலர். அவசரம் அவசரமாக, அவன் கெட்டிக்காரன்; தூங்கிக் கொண்டிருப்பவன் அல்ல. அவனை யாரும் ஏமாற்ற முடியாது. அவன் கையில் ஐஸக் தனக்குக் கையெழுத்திட்டுக் கொடுத்திருந்த பத்திரம் இருந்தது. அதை ஆட்டி ஆட்டிக்கொண்டு பேசினான் அவன், "நான்தான் முதலிலேயே சொன்னேனே! அந்த நிலம் பூராவும் சர்க்காரைச் சேர்ந்தது. மறுபடியும் மறுபடியும் கேட்டு என்ன லாபம்? நான் சொல்வதில் நம்பிக்கை வராவிட்டால் சர்க்காரையே கேட்டுத் தெரிந்து கொள்ளுங்கள்."

அன்று இரவு கெய்ஸ்ஸலர் ஐஸக்கைத் தனியாக அழைத்துச் சென்று கேட்டான்: "அந்த செம்புச் சுரங்கத்தை விற்று விடுவோமா?"

ஐஸக் சொன்னான்: "ஏன்? லென்ஸ்மாண்டுதான் என்னிடமிருந்து அந்த நிலத்தை விலைக்கு வாங்கி விட்டாரே?"

"நிலத்தை வாங்கியது உண்மைதான்! சுரங்கத்தை வெட்டிச் செம்பு எடுத்தால் அதில் கிடைக்கிற லாபத்திலும் உனக்குப் பங்கு உண்டு. உன் பங்கை நீ விற்றுவிடத் தயாரா?"

ஐஸக்குக்குப் புரியவில்லை. கெய்ஸ்ஸலர் விவரமாகச் சொல்ல வேண்டியிருந்தது. அது மட்டுமல்ல. இது செய்தால் நல்லது, நீ கவலைப்படாதே என்று அடித்துச் சொல்லவும் வேண்டியிருந்தது. ஐஸக் குடியானவன்; பண்ணைக்காரன். வயல் வெளிகளில் அவனால் வேலை செய்ய முடியும். மற்றப்படி சுரங்கத்தில் அவனால் என்ன செய்ய முடியும்? கெய்ஸ்ஸலராலும் முடியாது. பணத்தைப் பற்றிக் கவலையில்லை; தேவைக்கும் அதிகமாகவே அவனால் பணம் தயாரித்துவிட முடியும். ஆனால் அவனுக்குப் பொழுது போதாது. எத்தனையோ காரியங்கள் அவன் கவனத்தைக் கவர்வதற்கு இருந்தன. நாடெங்கும் ஓடித் திரிபவன் அவன்—வடக்கே அவன் தொழில்கள், தொழிற்சாலைகள் இருந்தன; தெற்கே நிலபுலன்கள், பண்ணைகள் இருந்தன. எதற்கென்று பாடுபடுவான் அவன். தன்னுடைய பங்கையும் ஐஸக்கின் பங்கையும் இந்த ஸ்வீடன் தேசத்துக் கனவான்களுக்கு விற்றுவிடலாம் என்பது அவன் உத்தேசம். அவர்கள் கெய்ஸ்ஸலரின் மனைவியின் உறவினர்கள்—பணக்காரப் பிரபுக்கள். "புரிகிறதா, நான் சொல்வது?"

"நீங்கள் சொல்லுகிறபடியே செய்யுங்கள்" என்றான் ஐஸக்.

என்ன ஆச்சரியம் அது! ஐஸக் தன்னிடம் வைத்திருந்த நம்பிக்கை, கெய்ஸ்ஸலரின் பெருமிதத்தையும் பெருமையையும் பன்மடங்காக்கியது. "பார்க்கலாம். உன் பங்குபற்றி இது நல்லது. எத்தனை தருவார்கள் என்று பார்க்கலாம்" என்றான் கெய்ஸலர். யோசனையில் ஆழ்ந்தவனாகத் திடீரென்று ஒரு முடிவுக்கும் வந்தான். "என்னிஷ்டப்படி செய்யலாம் என்று நீ எனக்கு அதிகாரம் கொடுத்தாயானால் உனக்கு எதில் அதிக லாபம் வரும் என்று பார்த்துச் செய்கிறேன்."

"உம்...உங்களைப்போல எங்களுக்கு உதவி செய்துள்ளவர்கள் இங்கு யார்?" என்றான் ஐஸக்.

ஆனால் கெய்ஸ்ஸலருக்கு இந்தப் புகழ்ச்சியான வார்த்தைகள் பிடிக்கவில்லை. குறுக்கிட்டு "சரி, பார்க்கலாம்!" என்றான்.

மறுநாள் அந்தக் கனவான்கள் எழுத உட்கார்ந்தார்கள். பெரிய விஷயம் இல்லையா அது? சுரங்கத்தின் விலையாக

நாற்பதினுயிரம் க்ரோனர் கெய்ஸ்ஸலருக்குக் கொடுப்பது என்று ஒரு பத்திரம். அதேபோல அந்தப் பணத்தைப் பூராவும் அவன் தன் மனைவிக்கும் குழந்தைக்கும் தந்து விடுவதாக இன்னெரு பத்திரம். இந்தப் பத்திரத்துக்கு ஐஸக்கும் ஸிவெர்ட்டும் சாக்ஷிக் கையெழுத்திட்டார்கள். அது முடிந்த பிறகு அந்தக் கனவான்கள் அதில் ஐஸக்கின் பங்கையும் ஐநூறு க்ரோனர் கொடுத்து வாங்க முன்வந்தார்கள். ஐநூறு க்ரோனரா? அது என்ன தொகை ஐஸக்கின் பங்குக்கு?

கெய்ஸ்ஸலர் சொன்னுன்: "நான் ஐஸக் சார்பில் பேசுகிறேன். நிலத்தை வாங்கின தொகையில் பத்தில் ஒரு பங்காவது தந்தால் தான் ஐஸக் தன் பங்கை விற்பான்" என்றுன்.

"நாலாயிரம் க்ரோனரா?" என்றுர்கள் மற்றவர்கள்.

"நாலாயிரம்தான். நிலம் அவனுடையது. அதை நான் வாங்கியதால் எனக்கு நாற்பதனுயிரம்—அவனுக்கு நாலாயிரம் கூட இல்லாவிட்டால்—என்ன பண்ணுவது? நியாயமாகச் சொல்லுங்கள்" என்றுன் கெய்ஸ்ஸலர்.

"அது சரி—இருந்தாலும் நாலாயிரம் க்ரோனர் என்றுல்...?"

கெய்ஸ்ஸலர் எழுந்து சொன்னுன்: "நாலாயிரம்—இல்லா விடில் அவன் பங்கை அவன் விற்கமாட்டான்."

தங்களுக்குள் பேசிக்கொண்டார்கள். பிறகு எழுந்தார்கள். வெளியே போய்க் "குதிரைகளைத் தயார் செய்" என்று தங்கள் வேலைக்காரர்களுக்கு உத்தரவிட்டார்கள். ஒருவன் இங்கருடன் போய்ப் பேசி அவள் தந்த பால், காபி, கோழி முட்டைகள் இவற்றிற்கு என்று அதிகமாகவே பணம் தந்தான். எதுவும் கவலைகளே இல்லாதவன் போலக் கெய்ஸ்ஸலர் குறுக்கும் நெடுக்கும் போய் வந்தான்.

"போன வருஷம் வெட்டினேமோ வாய்க்கால், என்ன ஆயிற்று?" என்று ஸிவெர்ட்டைக் கேட்டான் கெய்ஸ்ஸலர்.

"பயிர் பிழைத்தது அதனல்."

"அந்தக் குன்றை வெட்டிச் சமப்படுத்தி யிருக்கிறீர்கள்!"

"ஆமாம்."

"பண்ணை வேலைக்கு இன்னெரு குதிரை கூட வாங்கி விட்டாயா?" கெய்ஸ்ஸலர் கவனிக்காத விஷயமே கிடையாதா? எல்லாவற்றையும் கவனித்தான் அவன்.

கனவான்களில் ஒருவன் வந்தான். "அந்த விஷயத்தையும் பேசி முடித்து விடுவோமே!" என்ருன்.

எல்லோரும் புதுக் கட்டிடத்தில் போய் மீண்டும் கூடினர்கள். ஐஸக்கினுடைய நாலாயிரம் க்ரோனர்களையும் எண்ணி அவன் கையில் கொடுத்து விட்டார்கள். கெய்ஸ்ஸலரிடம் ஒரு கடிதத்தைக் கொடுத்தனர்—சின்ன விஷயம் போல அதை எடுத்து இடுப்பில் சொருகிக் கொண்டான். "அதை ஜாக்கிறதையாக வைத்துக் கொள். இன்னும் சில நாளில் பணத்தைப் போட்டு பாங்க் பாஸ் புஸ்தகத்தை உன் மனைவியிடம் அனுப்பிவிடுவோம்."

கெய்ஸ்ஸலர் முகத்தைச் சுளித்துக் கொண்டான். "நல்லது" என்ருன்.

கெய்ஸ்ஸலரை அத்துடன் விட்டு விடுவதாக அவர்களுக்கு உத்தேசமில்லை. அவன் எதுவும் கேட்கவில்லை வாய்திறந்து. பேசாமல் யோசனையில் ஆழ்ந்தவன் மாதிரி நின்ருன். அவன் நின்றதைப் பார்த்தார்கள் அவர்கள். அதைப் புரிந்து கொண்டவர்கள்போலக் காரியங்களைச் செய்தார்கள் ஸ்வீடன் தேசத்துக் கனவான்கள். இல்லை, முன்னடியே ஏதாவது சொல்லி வைத்திருந்தானே என்னவோ? அவனுக்காக என்று ஒரு தொகையும் தந்தார்கள். கெய்ஸ்ஸலர் தலையை ஆட்டிக்கொண்டே அதையும் வாங்கிப் பையில் போட்டுக் கொண்டான்.

"கெய்ஸ்ஸலருடன் ஒரு கிளாஸ் மது அருந்திவிட்டு நாம் கிளம்பலாம்" என்ருன் வேறு ஒருவன்.

அதுவும் செய்தார்கள். கெய்ஸ்ஸலரிடம் விடை பெற்றுக் கொண்டு கிளம்பினர்கள்.

அதே சமயம் ப்ரேட் ஓல்ஸன் அங்கு ஏதோ காரியம் இருக்கிற மாதிரி வந்து சேர்ந்தான். என்ன வேலை அங்கு? முந்திய தினம் மலைச் சரிவில் கேட்ட வேட்டுச் சப்தம் அவன் வீட்டிலும் கேட்டுத்தானே இருக்கும். ஏதோ சுரங்கம் பற்றி வேலை நடக்கிறது என்று புரிந்துகொண்டு வந்திருந்தான். அவனும் ஏதாவது விற்க முடியுமா என்று பார்க்க வந்திருந்தான். கெய்ஸ்ஸலரைத் தாண்டி நேரே அந்தக் கனவான்களை அணுகித் தன்னிடம் இருந்த கல் "ஸாம்பிள்"களைப் பார்ப்பார்களா என்று கேட்டான். வெள்ளிக் கனிப் பொருள்கூட இருந்தது இந்த ஸாம்பிள்களில் என்ருன் ப்ரேட். அந்தக் குன்றுகளில் எல்லா இடங்களும் அவனுக்குத் தெரியும். அவர்கள் எங்கு போக

விரும்பினாலும் அழைத்துப்போக அவன் தயார். என்ன பரிசோதனை செய்ய விரும்பினாலும் செய்து பார்க்கலாம்.

"ஸாம்பிள்களைக் கொடு" என்று கேட்டான் என்ஜினியர்.

ப்ரேடிடம் ஸாம்பிள்கள் இருந்தன. ஆனால் ஸாம்பிள்கள் போதுமா? நேரில் இடங்களையும் சென்று பார்த்தால் திடமாகத் தெரியுமே என்றான் அவன். அதிக தூரம் இல்லை—அதிக நேரமும் பிடிக்காது. ஸாம்பிள்கள்—சாக்குச் சாக்காக ஸாம்பிள்கள் இருந்தன. தன்னுடன் அவன் அவற்றைத் தூக்கிக் கொண்டு வரவில்லை. வீட்டில் இருந்தன—போய்க் கொண்டு வரட்டுமா என்றான். பண்ணையும் வீடும் பக்கத்திலேதான்—ஓடிப் போய்க் கொணர்ந்து விடுவான். அல்லது மலைச் சரிவிலே போய்க் கூடப் பொறுக்கி வந்து விடுவான்.

ஆனால் அவர்கள் வேண்டாம் என்று சொல்லிவிட்டுக் கிளம்பிவிட்டார்கள்.

தனக்குத் தவறு ஏதோ செய்து விட்டுப் போகிறார்கள் என்று எண்ணுபவன் போல அவர்களையே பார்த்தான் ப்ரேட். அவன் என்ன நம்பிக்கையுடன் வந்தானே! அந்த நம்பிக்கை இப்போது போய்விட்டது. விதி சதி செய்து விட்டது. அவன் எடுத்தது எதுவும் சரிவர நடைபெறவில்லை. நல்ல வேளை. அப்படி எல்லாம் சுலபமாக மனசு ஒடிந்து விடுபவன் அல்ல ப்ரேட். போகிறவர்களைப் பார்த்து "சௌக்கியமாகப போய்ச் சேருங்கள்" என்று சீறினான். அவ்வளவுதான்.

ஆனால் மீண்டும் கெய்ஸ்ஸலருடன் தாழ்மையுடன் பேசினான். பழைய அதிகாரியுடன் குமாஸ்தா பேசுவது போலப் பேசினான். முன் தடவை போலச் சரிசமானமாகப் பேசிவிடவில்லை. இடையில் எதற்காகவோ கெய்ஸ்ஸலர் தன் பையிலிருந்து பணப்பையை எடுத்தான். அது நிறையப் பணம் இருந்தது தெரிந்தது.

"லென்ஸ்மாண்டு எனக்கு உதவி புரிந்தாரானால்..."

"பண்ணைக்குத் திரும்பி உன் வயலில் சரிவர வேலை செய்" என்றான் கெய்ஸ்ஸலர். அவனுக்கு உதவி செய்யக் கெய்ஸ்ஸலருக்கு மனசில்லை.

"ஸாம்பிள்கள் வேண்டுமானால் சாக்குச் சாக்காக் கொண்டு வந்திருப்பேன். அதைவிட நேரில் போய்ப் பார்ப்பது சுலபம் என்று எண்ணினேன் நான்."

கெய்ஸ்ஸலர் அவனைக் கவனியாமலே, ஐஸக்கிடம் சொன்னான்: "உன் பத்திரத்தை என்ன செய்தேன்? ஹா! இதோ க்ரோனர் நோட்டுகளின் மத்தியில் இருக்கிறது? இந்தா; ஜாக்கிறதையாக வை."

"வந்து போனவர்கள் யார்? இந்தப் பக்கம் தற்செயலாக வந்தவர்களா? அல்லது காரியமாக வந்தவர்களா?" என்றான் ப்ரேட்.

கெய்ஸ்ஸலருக்கு இருந்த கவலைகள் எல்லாம் இப்போது மறைந்துவிட்டன. இப்போது பையில் நிறையப் பணமும் இருந்தது. இன்னமும் வாழ்க்கையில் உத்ஸாகமும் ஈடுபாடும் இருந்தன அவனுக்கு. அவனுக்கு இன்னமும் ஏதோ செய்ய வேண்டும் என்று தோன்றிற்று. ஸிவெர்ட்டை அழைத்துக் கொண்டு போய், ஒரு பெரிய பேப்பரில் ஏரிக்குத் தெற்கேயுள்ள நிலத்துக்கெல்லாம் ஒரு பிளான் போட்டுக் கொண்டான். அவன் மனசில் என்ன இருந்ததோ—யாருக்குத் தெரியும்? சில மணி நேரங்கள் கழித்து அவன் வீடு திரும்பியபோதும் ப்ரேட் அவனைக் கேள்விகள் கேட்கத் தயாராக உட்கார்ந்திருந்தான். ஆனால் அவனைக் கவனிக்கவேயில்லை கெய்ஸ்ஸலர். களைப்பாக இருக்கிறது என்று நகர்ந்துவிட்டான்.

மறுநாள் காலை வரை அசந்து தூங்கினான். சூரியோதயத்தில் எழுந்துவிட்டான். மீண்டும் கெய்ஸ்ஸலராகி விட்டான் அவன்.

"அந்தப் பணம்—அவ்வளவும் எனக்கா?" என்றான் ஐஸக்.

"அவ்வளவுமா? கடவுளே? சரியாகப் பேரம் பண்ணியிருந்தால் இன்னும் அதிகம்கூட வந்திருக்கும். சுரங்க வேலை தொடங்கியதும் உன் பங்கு பத்தாயிரம் இருபதினாயிரம் என்று கூட வந்திருக்கும். நான் வாங்கித் தந்திருக்கிறேன், பிச்சைக்காசு நாலாயிரம் க்ரோனர்கள்—அதாவது ஆயிரம் தேலர்கள். இவ்வளவுதானே! இன்னொரு குதிரைகூட உனக்குத் தேவையாக இருக்குமே!"

"ஆமாம்."

"அந்த ஹேயர்தாலின் குமாஸ்தா—அந்த ப்ரேட் தன் பண்ணையைச் சரியாகக் கவனிக்க வில்லை. அவன் குதிரை மலிவாகவே கிடைக்கும்."

"கேட்டுப் பார்க்கிறேன்" என்றான் ஐஸக்.

கெய்ஸ்ஸலர் பெருமிதத்துடன் கையைப் பரக்க விரித்துக் காட்டினான்: "விவசாயி, பண்ணைக்காரன், நிலத்தில் பிழைப்பவன்

நீ! பெரிய நிலப்பிரபு. மார்க்ரேவ் நீ! வீடு, ஆடுமாடுகள், உழுத நிலம்—உன்னை யாரும் பட்டினி போட்டுவிட முடியாது!"

"உண்மை. என் தேவைகளைக் கடவுள் கொடுத்திருக்கிறார்" என்றான் ஐஸக்.

கெய்ஸ்ஸலர் ஏதோ வேலை இருக்கிறவன் போலக் குறுக்கும் நெடுக்கும் நடந்து கொண்டிருந்தான். உள்ளே இங்கரைத் தேடிக் கொண்டு போனான். "உணவுப் பொட்டலம் தயார் பண்ணிக் கொடு. பிஸ்கட்டுகள் தா. போதும். வெண்ணை, பாலேடை இரண்டும் வேண்டாம். உன் பிஸ்கட்டுகள் பிரமாதமாக இருக்கும். வேறு எதுவும் வேண்டாம்—பிஸ்கட்டுகள் மாத்திரம் கட்டிக் கொடு."

வெளியே வந்தான் மீண்டும். கெய்ஸ்ஸலரால் ஒரு இடத்தில் உட்கார்ந்திருக்க முடியவில்லை. புதுக் கட்டிடத்தில் போய் ஏதோ எழுத உட்கார்ந்தான். முன் கூட்டியே யோசனை செய்து வைத்திருந்ததால் விறு விறு என்று எழுதினான். சர்க்காருக்கு ஒரு மகஜர் எழுதினான். "உள் நாட்டிலாகா மந்திரிக்கு மனு எழுதுகிறேன். அவசரமான, அவசியமான விஷயம். எத்தனையோ விஷயங்களைக் கவனிக்க வேண்டியதாக இருக்கிறது."

உணவு மூட்டையைக் கையில் எடுத்துக்கொண்டு கிளம்பத் தயாரானான். திடீரென்று ஞாபகப் படுத்திக் கொண்டவன் போலச் சொன்னான்: "போன தடவை வந்து போன போதுகூட எதுவும் தர முடியவில்லை. மறந்து விட்டேன். உனக்காக எடுத்து வைத்த நோட்டு என் பையிலேயே தங்கிவிட்டது என்று பிறகு தான் எனக்குத் தெரிந்தது. எனக்கு எத்தனையோ முக்கியமான விஷயங்களைப் பற்றி ஞாபகம்." இங்கரின் கையில் ஒரு நோட்டைத் திணித்து விட்டுப் போய்விட்டான்.

கெய்ஸ்ஸலர் அமர்க்களமாக, அதி ஆடம்பரமாகத்தான் கிளம்பிப் போனான். அவனுக்கு எதுவும் கவலையோ கஷ்டமோ எதுவுமே இருந்ததாக அவனைப் பார்த்துத் தெரிந்துகொள்ள யாராலும் முடியாது. அவன் ஆட்டம் முடிந்து விடவில்லை. மறுபடியும் ஸெல்லன்ராவுக்கு வருவான்—அவன் சாவதற்கு இன்னும் பல வருஷங்கள் இருந்தன. ஒவ்வொரு தடவையும் அவன் வந்து போகும்போது ஸெல்லன்ரா மக்களுக்குத் தாங்கள் யாரோ ஒரு ஆப்த நண்பனைப் பெற்று இழப்பதுபோல இருந்தது. ப்ரேடாப்ளிக் பற்றி அவனைக் கேட்கவேண்டும் என்று எண்ணினான் ஐஸக்—ஏதாவது உருப்படியாக யோசனை, புத்திமதி சொல்லி

இருப்பான் அவன். கேட்கவில்லை—மறந்து போய்விட்டது. கெய்ஸ்ஸலர் வேண்டாம் என்று சொன்னாலும் சொல்லியிருப்பான். எல்யூஸிஸுக்கு நிலத்தைக் கொடுப்பது தவறு என்று சொன்னாலும் சொல்லி இருப்பான்.

## 18

கடைசியில் மாமா ஸிவெர்ட் இறந்தும் விட்டான். எல்யூஸிஸ் மூன்று வாரங்கள் அவனைப் பார்த்துக்கொண்டு அவனுடன் தங்கினான். கிழவன் இறந்ததும் அவனுக்குச் சாவுக்குப் பிறகு நடக்கவேண்டிய காரியங்களைச் சாமர்த்தியமாகக் கவனித்தான்; சரியாக மானேஜ் செய்தான். துக்கத்தை அறிவிக்கக் கருப்புத் துணி முதலியன சம்பாதித்துச் சவத்தைப் புதைக்க ஏற்பாடு செய்தான். ஐஸக்கும் இங்கரும் போனார்கள். எல்யூஸிஸ் வீட்டுக்கு முதல்வனாக நின்று வந்திருந்த விருந்தாளிகளுக்கெல்லாம் உபசாரம் சொன்னான்—செய்யவேண்டியதை எல்லாம் உரிய வகையில் செய்தான். சவத்தை எடுத்துப் போனார்கள். மாதா கோயிலிலும் கல்லறையிலும் உரியபடி சடங்குகள் நடந்தன. சவக் குழியில் சவத்தைப் போடுமுன், இரண்டொரு வார்த்தைகள் சொன்னான் எல்யூஸிஸ். அவன் தாயாருக்குப் பெருமை தாங்க வில்லை. கண்களைத் தன் கைக்குட்டையால் அடிக்கடி துடைத்துக் கொண்டாள். எல்லாம் சரிவரப் பிரமாதமாகவே நடந்தேறியது.

தகப்பனுடன் வீடு திரும்பும்போது தன்னுடைய நகரபாணி கோட்டைக் கையிலேயே மடித்துப் போட்டுக் கொணர்ந்தான் எல்யூஸிஸ். கைத்தடியைமட்டும் மறைத்தே வைத்துக்கொண்டான். படகில் ஒரு ஆற்றைக் கடக்கவேண்டி வந்தது. அப்போது ஐஸக் தன் பிள்ளையினுடைய கோட்டின்மேல் உட்கார்ந்துவிட்டான். மடக் என்று சப்தம்கேட்டது. "அது என்னது?" என்றான் ஐஸக்.

"ஒன்றுமில்லை" என்றான் எல்யூஸிஸ்.

உடைந்துபோன கைத் தடியைத் தூக்கி எறிந்துவிடவில்லை அவன். வீடு சேர்ந்தவுடன், சரியான ஆணியாகப் பார்த்துப்போட்டு உடைந்துபோன இரு பகுதிகளையும் சேர்க்கப் பார்த்தான். ஸிவெர்ட் சொன்னான்: "சேர்த்துவிடலாம். மீண்டும் ஒடியாதபடி ஒட்டுப் போட்டு விடலாம். இரண்டு சிம்புகளை இரண்டு பக்கத்திலும் வைத்து எண்ணை தடவி நார் கட்டிவிட்டால்..."

"உனக்குச் சிம்பு வைத்து எண்ணை தடவி நார் போட்டுக் கட்டிவிடுகிறேன்" என்றான் எல்யூஸிஸ்.

"ஹா! ஹா! ஹா! வேண்டாம். சிவப்பு ரிப்பன் ஒன்று போட்டுக் கட்டிவிடலாம்!"

"ஹா! ஹா! ஹா!" என்று சிரித்தான் எல்யூஸிஸும். ஆனால் அவன் உள்ளே போய் அம்மாவிடம் அங்குஸ்தான் ஒன்றை வாங்கி வந்து அதை இரண்டு பக்கமும திறக்கும்படி ராவி அதில் இரு பகுதிகளையும் மாட்டிவிட்டான். கைத்தடி மீண்டும் சரியாகி விட்டது. அப்படி ஒன்றும் அசடனல்ல எல்யூஸிஸ்.

சகோதரர்கள் இருவரும் ஒருவரை ஒருவர் கிண்டல் செய்து கொண்டனர். "மாமா ஸிவெர்ட் விட்டுப் போனதெல்லாம் எனக்குத் தானே?" என்று கேட்டான் எல்யூஸிஸ்.

"உன் கையில் கிடைத்து விட்டதா எல்லாம்? எத்தனை இருந்தது?" என்று விசாரித்தான் ஸிவெர்ட்.

"ஹா! ஹா! ஹா! மாமா ஸிவெர்ட் எத்தனை வைத்து விட்டுப் போனார் என்று தெரிய வேண்டுமா உனக்கு? ஹா! ஹா! ஹா! கஞ்சன் நீ!"

"அது சரி! நீயே வைத்துக் கொள். எனக்கு வேண்டாம்."

"ஐந்து முதல் பத்து ஆயிரம்வரை இருக்கும்!"

"தேலரா?" என்றான் ஸிவெர்ட் ஆச்சரியத்துடன். அப்படிக் கேட்காமல் அவனால் இருக்க முடியவில்லை.

எல்யூஸிஸுக்குத் தேலர் கணக்குப் பார்க்கத் தெரியாது, அந்தச் சமயம் அவன் எதுவும் சொல்லவில்லை. அதோடு விட்டு விட்டான். வெறுமனே தலையை ஆட்டிவைத்தான்.

மறு நாள் மீண்டும் அது பற்றிப் பிரஸ்தாபித்தான். "அது பற்றி உனக்கு வருத்தம் தானே! எல்லாவற்றையும் மாமா ஸிவெர்ட் எனக்கே கொடுத்து விட்டது பற்றி உனக்கு வருத்தம் தானே?" என்றான்.

"உனக்கு மூளையில்லை. எனக்கு என்ன வருத்தம்!" என்றான் ஸிவெர்ட். அவன் வாயால் சொன்னது அது. ஆனால் ஐயாயிரம் பத்தாயிரம் தேலர் என்றால் சின்னத் தொகையல்லவே! சபலமாகத்தான் இருந்தது. நிஜமாகவே நல்லவனாக இருந்தால் அண்ணன் தனக்குக் கிடைத்ததில் பாதியைத் தம்பிக்குக் கொடுத்துவிட வேண்டியதுதான்.

"உண்மையைச் சொல்லட்டுமா! அப்படி ஒன்றும் உண்மையில் பிரமாதமான ஆஸ்தியில்லை இங்கு."

ஆச்சரியத்துடன் அவனைப் பார்த்தான் ஸிவெர்ட். "ஓ! அப்படியா?"

"ஆமாம். அப்படி ஒன்றும் இல்லை. கிழவன் எல்லோரையும் ஏமாற்றிக்கொண்டுதான் இருந்திருக்கிறான்."

எல்யூஸிஸுக்குக் கணக்கு விவகாரங்கள் நன்கு தெரியும். மாமா ஸிவெர்ட்டினுடைய பெரிய நிதிப் பெட்டியைத் திறந்து பார்த்தபோது அதிகமாக ஒன்றுமில்லை என்று ஏற்பட்டுவிட்டது. கணக்கெல்லாம் பார்த்துக் கிழவன் இருக்கும்போதே ஒரு புள்ளி போட வேண்டியிருந்தது—செய்தான். மாமா ஸிவெர்ட்டிடம் இருந்ததில் அது தான் பலன்—வயலில் வேலை செய்யச் சொல்ல வில்லை அவன்—மீன் வலைகளையும் சரிபார்க்கச் சொல்லவில்லை. தன் கணக்குகளை நேர்படுத்தச் சொன்னான். ஒரு தினுசான கணக்குகள் அவை. விசித்திரமாக எழுதியிருந்த கணக்குகள். பல வருஷங்களுக்கு முன் ஒருவன் தன் வரியை ஆடு அல்லது மாடு ஒன்று கொடுத்துத் தீர்த்திருப்பான். அல்லது ஒரு மரக்கால் கருவாடு கொடுத்துத் தீர்த்திருப்பான். அதற்கு ரசீது ஏது? கிழவன் ஸிவெர்ட் மனசில் ஞாபகம் இருந்தால் தான் உண்டு. "அவன் ஒரு மரக்கால் தானியம் தந்தான்—அவன் பெயரை அடித்துவிடு" என்பான்.

எல்யூஸிஸிற்கும் அந்த வேலை திருப்தியாகத்தான் இருந்தது. அவன் கெட்டிக்காரன். புள்ளிக் கணக்குப் போடுவதில் நிபுணன். வியாதியாகப் படுத்திருந்த கிழவன் மனசில் நிம்மதி ஏற்படுகிற வண்ணம் எல்லாம் சரியாகத்தான் இருக்கிறது என்பான். கிழவனும் வாலிபனும் சில நாட்களிலே நெருங்கிய நண்பர்களாகி விட்டார்கள். சில விஷயங்களில் எல்யூஸிஸ் பரம முட்டாள்; கிழவன் ஸிவெர்ட்டும் சிலவற்றில் பரம முட்டாள்தான். முப்பது வருஷங்கள் அந்தக் கிராமத்துக்குச் சேவை செய்திருந்தான் கிழவன். தன் சொத்துக்களைச் சிறுவன் ஸிவெர்ட்டுக்கும், ஊரில் பொதுக் காரியங்கள் சிலவற்றிற்கும் என்று மாற்றி மாற்றி உயில் எழுதினான் அவன். அதற்கு உதவினான் எல்யூஸிஸ். பொழுது இன்பமாகக் கழிந்தது. "இந்த விஷயத்தில் உன்னைவிடச் சிறந்த உதவி எனக்குக் கிடைத்திராது" என்றான் மாமா ஸிவெர்ட். மாமிசம் வாங்கினான்—புது மாமிசம்—கோடை மத்தியிலே. கடல் மீன் புதுசாக அவனுக்கென்று வந்தது. இதற்கெல்லாம் எல்யூஸிஸ் மரப் பெட்டியிலிருந்து பணம் எடுத்து உடனுக்குடன் கொடுத்தான். நன்றாகத்தான் வசித்தார்கள் அவர்கள். ஒலினைத்

தேடிப் பிடித்தார்கள். வேறு யார் அவள் மாதிரி உதவுவார்கள். மாமா ஸிவெர்ட்டின் தனமும் தாராளமும் புகழும் நாடு பூராவும் பரவ ஒலேன் உதவி செய்தாள். மொத்தத்தில் எல்லோருக்குமே திருப்திதான்! "ஒலேனுக்கும் ஏதாவது தர வேண்டாமா என் சொத்தில்? விதவை, பாவம்! ஏழை! எப்படியும் சிறுவன் ஸிவெர்ட்டுக்குப் போதுமானது இருக்கிறது" என்றான் கிழவன். எல்யூஸிஸ் இந்தப் புது ஷரத்தையும் நாலு வரிகளில் எழுதிச் சேர்த்தான். நாலு வரியில் அந்தப் பொக்கிஷத்தில் பங்கு பெற்றாள் ஒலேன்.

விருந்துக்கு அவளை அழைத்து, கிழவன் அவளிடம் சொன்னான்: "உன்னையும் நான் பார்த்துக்கொள்கிறேன். எனக்கு உடம்பு சரியாகாமல் நான் இறந்துவிட்டேனானால், உன்னை மறந்துவிட மாட்டேன்." ஒலேன் உணர்ச்சிப் பெருக்கால் பேச முடியவில்லை என்று சொல்லிக்கொண்டே பேசினாள். அழுதாள். உன்னைப்போல உண்டா என்றாள். அரற்றினாள். சந்தோஷத்தால் ஆரவாரம் செய்தாள். இதயத்தைப் பிளந்து தன் நன்றியைக் காட்டுகிறேன் என்றாள். ஒலேன் மாதிரித் தனக்குக் கொடுக்கிற ஒவ்வொரு சாமானுக்கும் ஆயிரம் பங்கு மோக்ஷத்தில் கிடைக்கும் என்று கணக்குப் பண்ணிச் சொல்லக் கூடியவர்கள் வேறுயார்? அவளால் பேசமுடியாமலும் போய் விடுமா என்ன!

ஆனால் எல்யூஸிஸைப் பற்றி என்ன? முதலில் ஏதோ பெரிசாக இருக்கிறதாக்கும் என்று எண்ணி அவனும் ஏமாந்து தான் போய்விட்டான். பிறகு யோசித்துப்பார்த்தான். நிலைமை அவனுக்கும் தெரியத்தொடங்கிவிட்டது. குறிப்பாக இரண்டொரு தரம் மாமா ஸிவெர்ட்டிடம் செல்லியும் பார்த்தான். "கணக்குகள் சொல்கிறபடி பார்த்தால்..."

"அதைப்பற்றி நீ கவலைப்படாதே! நான் போனபிறகு கணக்குகளைப் பார். போதுமானது இருக்கும்" என்றான் கிழவன்.

"வரவேண்டிய தொகைகள் ஏதாவது இருக்கிறதா? அல்லது பாங்கில் பணம் கட்டியிருக்கிறதா?" என்று கேட்டான் எல்யூஸிஸ், அப்படி ஒரு வதந்தி ஊரில் பரவியிருந்தது.

"ம்..." என்றான் கிழவன். "அப்படியும் இருக்கலாம். அதற்கெல்லாம் இப்போது என்ன அவசரம்? மீன் பிடிக்கும் தொழிற்சாலையிருக்கிறது — நிலங்கள் இருக்கின்றன — வெள்ளையும் சிவப்புமாக மாடுகள் இருக்கின்றன. என்ன கவலை உனக்கு எல்யூஸிஸ்?"

அந்த மீன் பிடிக்கும் தொழிற்சாலையின் மதிப்பு என்ன இருக்கும் என்று எல்யூஸிஸிற்குத் தெரியவில்லை. மாடுகள் என்றுனே கிழவன்—அதைப்பற்றி மதிப்புத் தெரியும் அவனுக்கு. ஒரே ஒரு மாடு—கிழப் பசுமாடு இருந்தது. அந்த மாடு பாதி சிவப்பு, பாதி வெளுப்பு. ஜன்னி கண்டவன் மாதிரிப் பேசிய கிழவன் ஏதோ; பேசினன் அவ்வளவுதான்! சிலகணக்குகள் புரியவேயில்லை. அதுவும் நாணயம் மாறிய காலத்தில் எழுதிய கணக்குகள் எதுவும் நேராக இல்லை. க்ரோனர் நாணயமும் தேலருக்குச் சமம் போலக் கணக்கு எழுதியிருந்தான் கிழவன். தான் பணக்காரன் என்று கிழவனே தவறுதலாக எண்ணிக்கொண்டிருந்தானே என்னவோ! எல்லாவற்றையும் கணக்குப் போட்டுப் பார்த்தால் போகவேண்டிய தெல்லாம் போக மிச்சம் எதுவும் இராது போலிருந்தது.

ஆம்; அது பூராவையும் எல்யூஸிஸுக்கே தந்துவிடுவதாக ஸிவெர்ட் சொல்வதனல் அவனுக்கு ஒன்றும் நஷ்டமில்லை!

அது பற்றித் தங்களுக்குள்ளேயே கேலியும் கிண்டலும் செய்துகொண்டார்கள் சகோதரர்கள். ஸிவெர்ட்டுக்கு மாமாவின் ஆஸ்தியை அண்ணனுக்குக் கொடுத்து விட்டது பற்றித் துக்கம் இல்லை. முதலில் சொன்னபடி ஐயாயிரம் தேலராக இருந்தால் வருத்தப்பட்டிருப்பானே என்னவோ? அவனே ஸிவெர்ட் என்று அழைத்ததனல் கிடைக்கிற லாபம் தவறிவிட்டதே என்று அவனுக்கு ஒன்றும் வருத்தமில்லை. உரிமை கொண்டாட அவனுக்கு என்ன ஆதாரம் இருந்தது? இப்போது சிறிதும் சங்கோசப்படாமல் நீயே உள்ளதை எடுத்துக்கொள் என்று எல்யூஸிஸிடம் சொல்லிவிட்டான். "எழுதி வேண்டுமானலும் கொடுத்து விடுகிறேன். நீ பணக்காரனுவதைப் பார்க்கவேண்டும் என்று எனக்கும் ஆசைதான். வேண்டாம் என்று சொல்லி விடாதே!" என்றுன்.

ஆம். இருவரும் பேசிக்கொண்டு விழுந்து விழுந்து சிரித்தார்கள். எல்யூஸிஸ் வீட்டை விட்டுப் போகாமல் பார்த்துக் கொண்டது ஸிவெர்ட் என்றுதான் சொல்லவேண்டும். அவனில்லாவிட்டால் எல்யூஸிஸுக்கு அங்கு பொழுது போவதற்குச் சிரமப்பட்டிருக்கும்.

உண்மையில் எல்யூஸிஸ் மாறுதல் அடைந்துகொண்டிருந்தான். கிழவன் ஸிவெர்ட்டுடன் இருந்த மூன்று வாரங்களில் அவன் பெரிதும் மாறுதல் அடைந்துவிட்டான். மீண்டும் சோம்பேறியாகிவிட்டான் அவன்; நகர வாசியாகிவிட்டான். அங்கு

அவனைப் பாராட்ட ஆசாமிகள் இருந்தார்கள். அங்கு சில பெண்களுடன்கூட அவன் சிநேகமாக இருந்தான். இங்கே ஸெல்லன்ராவில் அவனுடன் சரிவரப் பேசுவதற்குக்கூட ஆட்களில்லை. ஜென்ஸின் இருந்தாள் ஆனால் அவள் வேலைக்காரி. வீடு வயலில் வேலை பார்ப்பாள். ஸிவெர்ட்டுக்கு ஏற்றவள். அவ்வளவுதான்.

"அந்தப் பெண் பார்ப்ரோ எப்படியிருக்கிறாள்? வளர்ந்து, பெரியவளாகியிருப்பாளே?" என்றான் எல்யூஸிஸ் ஒரு நாள்.

"ஆக்ஸெல் ஸ்டிராமின் பண்ணைக்குச் சென்று பாரேன்" என்றான் ஸிவெர்ட்.

ஒரு ஞாயிறு அன்று போனான் எல்யூஸிஸ். ஆமாம். வெளியூர் போயிருந்ததில் அவனுடைய தன்னம்பிக்கை வளர்ந்து விட்டது. அவனுக்கு உத்ஸாகம் பிறந்திருந்தது. ஆக்ஸெலினுடைய சிறிய வீடே அதிரும்படியாகச் சிரித்தான்; பேசினான். பார்ப்ரோவுக்கும் அவன் வந்ததில் திருப்திதான். அந்தப் பிராந்தியத்திலே அவளைத்தவிர வேறு பெண்கள்—நகரத்து வழிகளில் பழகிய பெண்கள்—வேறு யார் இருந்தார்கள்? சிதாரை மீட்டிப் பாடினான். பலபல சுவாரஸ்யமான விஷயங்களைப் பற்றிப் பேசினான். டான்ஸிப் பூண்டு தடவி அவள் வாசனை வீசவில்லை. கடையில் வாங்கிய செண்டு வாசனையடித்தது அவளிடம். தான் மீண்டும் நகரத்துக்குப் போவதாக உத்தேசம் என்பதை எல்யூஸிஸ் தெரிவித்தான். விடுமுறை நாட்களை ஸெல்லன்ராவில் கழிக்க வந்திருந்தான். அவ்வளவேதான். ஆனால் வீட்டிலே வந்து இருப்பதும் அப்படி ஒன்றும் சிரமமான காரியம் அல்லவே! ஸெல்லன்ரா அப்படி என்ன சின்னப் பண்ணையா? எப்படியிருந்தாலும் நகரவாசம் போல இராது என்பது என்னவோ உண்மைதான்.

"ஆமாம். நீ சொல்வது உண்மை" என்று ஆமோதித்தாள் பார்ப்ரோ. "நகரம் என்றால் அந்தத் தினுசே தனிதான்."

இந்த இரண்டு நகர வாசிகளும் பேசிக் கொள்ளும்போது ஆக்ஸெலுக்குப் புரியவேயில்லை. அவன் சொல்ல எதுவும் இருந்த மாதிரித் தெரியவில்லை. சிறிது நேரம் கழித்து அவன் எழுந்து தன் நில புலன்களைப் பார்வையிட, இருந்த வேலையைக் கவனிக்கப் போய் விட்டான். எல்யூஸிஸும் பார்ப்ரோவும் பேசிக் கொண்டு உட்கார்ந்திருந்தார்கள். எல்யூஸிஸ் செய்கிற காரியங்கள் எல்லாம் பெரிய விஷயங்களாகத்தானே இருக்கும். அவனுடைய

மாமா ஸிவெர்ட் இறந்துவிட்டான்—அவனைப் புதைத்து விட்டுத் தானே கிளம்ப முடிந்தது! அந்தப் புதை சடங்கின் போது தான் சொன்ன இரண்டு வார்த்தைகளையும் மறந்து விடவில்லை எல்யூஸிஸ்.

வீடு திரும்பும் போது பாதி வழி தன்னுடன் வரும்படி பார்ப்ரோவை அழைத்தான் எல்யூஸிஸ். ஆனால் பார்ப்ரோ அப்படி வரத்தயாராக இல்லை.

"உன் நகர வாசத்தில் நீ கற்றது இவ்வளவுதானு? பெண்கள்தான் புருஷர்களை வழிகொண்டு அனுப்ப வேண்டுமா?" என்று கேலி செய்தாள் பார்ப்ரோ.

எல்யூஸிஸுக்கு அது ஒரு தோல்விதான். அவன் முகம் சிவந்தது. பார்ப்ரோவுக்குக் கோபம் வந்து விட்டது என்று அவன் புரிந்து கொண்டான்.

அடுத்த ஞாயிற்றுக்கிழமை அவன் மீண்டும் மேன்லாந்துப் பண்ணைக்குப் போனுன். இந்தத் தடவை அவன் தன் கைத் தடியைக் கொண்டு போனுன். முன் போலவே அவர்களிருவரும் பேசினுர்கள். ஆக்ஸெல் அவர்களைப் பேச விட்டு விட்டுத் தன் காரியத்தைக் கவனிக்கப் போய்விட்டான். ஆனல் போவதற்கு முன் அவன் சொன்னுன்: "உன் தகப்பனுர் பண்ணை பெரிய பண்ணை. வேறு வீடு கூடக் கட்டிக் கொண்டிருக்கிருப் போல இருக்கிறது!" என்றுன்.

"அவருக்கென்ன—பணக்காரர்" என்றுன் எல்யூஸிஸ். "தவிர அவரிடம் இப்போது ரொக்கமாகப் பணம் வேறு ஏராளமாக இருக்கிறது. நாமெல்லாம் ஏழைகள் தானே!"

"பணமா? அது எப்படி?"

"ஒ! தெரியாது போலிருக்கு உங்களுக்கு. ஸ்வீடனிலிருந்து பல என்ஜினியர்களும் பணக்காரர்களும் வந்து பார்த்துச் செம்புச் சுரங்கம் வெட்டுவதற்காக அவர் நிலத்தில் ஒரு பகுதியை வாங்கினுர்கள்."

"அப்படியா? நிறையப் பணம் கொடுத்திருப்பார்களே!"

"ஆமாம். நிறையவே கொடுத்தார்கள். பிரமாதப்படுத்துவதாக நினைக்காதீர்கள். ஏதோ சில ஆயிரம் கொடுத்தார்கள். வேறு என்ன சொல்ல வந்தேனென்றுல்—நீகூடத்தான் இங்கு

கட்டிடம் கட்டிக் கொண்டிருக்கிருய். மரம் ஏராளமாக இருக்கிறது —பிரயோசனப்படும்" என்ருன் எல்யூஸிஸ்.

பார்ப்ரோ குறுக்கிட்டுச் சொன்னுன்: "ஓஹோ! அப்படியா?"

"எப்போது நீ வீடு கட்டத் தொடங்கப் போகிருய்?" என்று ஆக்ஸெக்லேக் கேட்டான் எல்யூஸிஸ்.

"ஒரு போதுமில்லை" என்ருள் பார்ப்ரோ.

அது அசட்டுத்தனம் மட்டுமல்ல—பொய்யும் கூட. ஆக்ஸெல் வீடு கட்டக் கற்களைச் சேகரித்துவிட்டான், போன வருஷமே. மாரிக்காலத்தில் அவற்றைக் கொணர்ந்து சேர்த்தும் விட்டான். நிலத்தில் வேலை இருந்த காலங்கள் தவிர மற்றக் காலங்களில் உழைத்து அஸ்திவாரம் போட்டுச் சுற்றுச் சுவர்களையும் எழுப்பிவிட்டான். மேலே உத்திரம் யோசனம் எல்லாம் ஏற்றுவதுதான் பாக்கி. அதை முடித்துவிட்டால் இந்த இலையுதிர் காலத்தில் கூரையும் போட்டு விடலாம். தனக்கு உதவி செய்ய ஸிவெர்ட் வருவானு என்று கேட்க ஆவலாக இருந்தான் ஆக்ஸெல்.

வந்தாலும் வருவான் என்ருன் எல்யூஸிஸ். "ஆனல் என்னை ஏன் கூப்பிடக் கூடாது?" என்ருன் சிரித்துக் கொண்டே.

"நீயா?" என்ருன் ஆக்ஸெல். பிறகு திடீரென்று ஒரு விஷயம் தோன்ற "இதைவிடப் பெரிய விஷயங்களைச் செய்யும் தகுதியுள்ளவன் நீ" என்ருன்.

இந்த நாட்டுப் புறத்திலும் தன்னைச் சரியானபடி மதிப்பிட்டு அறிந்து கொண்டவர்கள் இருக்கிருர்கள் என்பது பற்றிப் பரமதிருப்தி எல்யூஸிஸிற்கு. "என் கைகள் இந்த வேலைக்கு லாயக்கானவை அல்லதான்" என்ருன் பெருமையுடன்.

"எங்கே பார்க்கலாம்" என்று அவன் கையைப் பிடித்துப் பார்த்தாள் பார்ப்ரோ.

பேசுவதற்கு வேறு விஷயம் ஆக்ஸெலுக்கு அகப்படவில்லை. அவர்களிருவரையும் விட்டு விட்டு வேறு வேலையைக் கவனிக்கச் சென்ருன் அவன். அவர்களிருவருக்கும் ஒரே வயசு. சிறுவர்களாக இருக்கும்போது ஒன்ருக விளையாடியவர்கள்—முத்தமிட்டுக் கூடிக் குலாவி விளையாடியவர்கள். ஒரு விதமான ஏக்கத்துடன், இன்றைய நிகழ்ச்சிகளைப் பற்றிய ஒரு அலக்ஷியத்துடன் இருவரும் சென்ற காலத்தைப் பற்றிப் பேசிக் கொண்டி

ருந்தார்கள். பார்ப்ரோ சற்று டம்பமாகவே பேசினாள். உண்மையில் மூக்குக் கண்ணாடியும் கைக் கடிகாரமும் அணிந்த நகரத்து ஆபீஸ் குமாஸ்தாக்கள் மாதிரியில்லை இந்த எல்யூஸிஸ். ஆனால் இந்த நாட்டுப்புறத்தில் நகரத்தான் மாதிரித்தான் இருந்தான் அவன். தன் போட்டோவை அவனிடம் காட்டினாள். அப்பொழுது எப்படியிருந்தாள்! "இப்பொழுது எல்லாம் மாறி விட்டது" என்று பெருமூச்சு விட்டாள் பார்ப்ரோ.

"இப்போ என்னவாம்?" என்றான் எல்யூஸிஸ்.

"முன்னைக்கிப்போது நான் மோசமாகி விட்டேனில்லையா, பார்ப்பதற்கு?"

"மோசமாகி விட்டாயா? உண்மையில் இப்போது நீ மிகவும் அழகியாக இருக்கிறாய்" என்றான் எல்யூஸிஸ். "சற்றுப் பருமனாகவும் இருக்கிறாய். மோசமாகிவிட்டாயா? ஹோ! ஹோ!" என்று சிரித்தான்.

"அந்த ஆடை நகரத்து ஆடை. நல்ல ஆடை அது. முன்னும் பின்னும் தெரியும்படியாக வெட்டியிருக்கும். அதோ வெள்ளிச் சங்கிலி—அதை ஏகப்பட்ட விலை கொடுத்து வாங்கி என் யசமான்களில் ஒருவன் எனக்கு அளித்திருந்தான். அது இப்போது இல்லை. இல்லை என்றால் இழந்துவிட்டேன் என்று சொல்லலாம். இங்கு வரச் செலவுக்குப் பணம் இல்லை—அதை விற்றுவிட்டேன்."

எல்யூஸிஸ் கேட்டான்: "இந்தப் போட்டோவை நான் வைத்துக் கொள்ளலாமா?"

"வைத்துக் கொள்ளவா? ம்...அதற்குப் பதில் நீ எனக்கு என்ன தருவாய்?"

இதற்கு என்ன பதில் சொல்வது என்று எல்யூஸிஸிற்குத் தெரியும். ஆனால் அதைச் சொல்ல அவனுக்குத் தைரியம் வரவில்லை. "நான் நகரத்துக்குத் திரும்பியதும் என் போட்டோவை எடுத்து உனக்கு அனுப்புகிறேன்" என்றான்.

பார்ப்ரோ போட்டோவை எடுத்து வைத்துவிட்டாள். "வேறு போட்டோ இல்லை என்னிடம். இது ஒன்றுதான் இருக்கிறது" என்றாள்.

அவன் இதயமே இருண்டது போலிருந்தது. அதைப் பிடுங்கிக் கொள்ளக் கையை நீட்டினான்.

"அவசியம் வேண்டுமானால் அதற்காக நீ ஏதாவது கொடு" என்றாள் பார்ப்ரோ.

உடனே அவன் அவளைக் கட்டியணைத்து முத்தமிட்டான். அதற்குப் பிறகு நிலைமை சரிப்பட்டு விட்டது. எல்யூஸிஸும் பெருமையுடன் பேசினான். பார்ப்ரோவும் பிரியமாகப் பேசினாள். ஹாஸ்யமும் ஆனந்தமும் மாறி மாறி இழைந்தன அவர்கள் பேச்சிலே. "என் கையை நீ பிடித்தாயே — அப்போது அன்னத்தின் இறகைத் தொடுவதுபோல இருந்தது. உண்மை" என்றான் எல்யூஸிஸ்.

"ஓ! நீ நகருக்குப் போவாய். இங்கு திரும்பவேமாட்டாய்!"

"அப்படிப்பட்டவனா நான்?"

"அங்கு நகரிலே ஒரு காதலி உனக்காகக் காத்திருப்பாள்!"

"இல்லை. ஒருத்தியும் இல்லை. சத்தியம்" என்றான் எல்யூஸிஸ். "ரகசியத்தில் சொல்லுகிறேன்—எனக்குக் காதலி ஒருத்தியும் இல்லை."

"உனக்கா? இருப்பாள்! இருப்பாள்!"

"இல்லை. இல்லவே இல்லை."

இப்படி வெகு நேரம் தர்க்கம் நடந்தது. எல்யூஸிஸ் அவளிடம் காதல் கொண்டுவிட்டான். "நான் உனக்குக் கடிதம் எழுதுகிறேன்—எழுதலாமில்லையா?"

"எழுது" என்றாள் அவள்.

"உனக்கிஷ்டமில்லாவிட்டால் எனக்கு எழுத மனம் வராது" என்றான் எல்யூஸிஸ். திடீரென்று நினைத்துக் கொண்டு கேட்டான்: "உன்னை ஆக்ஸெலுக்குக் கொடுப்பதாக ஏற்பாடாகி இருக்கிறதாமே!"

"ஆக்ஸெலுக்கா?" என்றாள் பார்ப்ரோ அலக்ஷியமாக. "அவனையா கல்யாணம் செய்து கொள்வேன் நான்?" பிறகு ஆக்ஸெலைப் பற்றியும் பிரியமாகப் பேசினாள்: "அவன் என்னிடம் பிரியமாகத்தான் இருக்கிறான். சொல்லப்போனால் அவன் எனக்காக எவ்வளவு செய்கிறான் தெரியுமோ. எனக்காக நகரத்துப் பேப்பர் வரவழைக்கிறான். அடிக்கடி எனக்கு இனாம்கள் தருகிறான் —ஆமாம்; நிறையவே கொடுக்கிறான். அதைச் சொல்லத்தானே வேண்டும்?"

"ஆமாம். ஆனால் எவ்வளவு நேர்த்தியானவனாகத்தான் இருக்கட்டுமே. உன் அன்பு யாரிடம் இருக்கிறதோ?"

ஆக்ஸெலினுடைய நினைப்பு அவளுடைய அமைதியைக் குலைத்துவிட்டமாதிரி இருந்தது. அவள் எழுந்தாள். "நீ போக வேண்டியதுதான். ஆடுமாடுகளைக் கவனிக்கப் போகவேண்டும் நான்."

அடுத்த ஞாயிறன்று எல்யூஸிஸ் வேண்டுமென்றே தாமதமாகப் போனான். ஒரு கடிதம் எழுதி எடுத்துக்கொண்டு போனான். ஆமாம். ஒரு கடிதம். அந்த வாரம் பூராவும் உட்கார்ந்து எழுதிய கடிதம் அது—வெகுவாகச் சிரமப்பட்டு, உணர்ச்சி துள்ள, எழுதி இருந்தான் அதை. வெகு சிரமப்பட்டுத்தான் கடைசியில் எழுதி முடித்தான் அவன். "ப்ரோகன் பார்ப்ரோ ப்ரெடேஸென்னுக்கு! இரண்டு மூன்று தடவை உன்னோடு சம்பாஷிக்கும் ஆனந்தத்தை அடைந்துவிட்டேன் நான்......"

தாமதித்தே வந்தான் அன்று. பார்ப்ரோ ஆடுமாடுகளைக் கவனித்து முடித்திருப்பாள். தூங்கக்கூடத் தூங்கியிருக்கலாம் அவள். அப்படியிருந்தால் நல்லதுதானே!

ஆனால் பார்ப்ரோ விழித்துக் கொண்டிருந்தாள். ஆக்ஸெலின் வருகைக்காகக் காத்துக் கொண்டிருந்தாள். திடீரென்று அவனிடம் எவ்வித அன்பும் இல்லாதவள்மாதிரி அலக்ஷியமாக அவமதிப்பாகப் பேசினாள். அவனுடைய காதலை அங்கீகரித்தவள் போல நடந்துகொள்ளவில்லை அவள். ஆக்ஸெல் அவளை எல்யூஸிஸுக்கு இடம் கொடாதே என்று சொல்லியிருப்பானோ?

"இதோ நான் எழுதுவதாகச் சொன்ன கடிதம்" என்றான் எல்யூஸிஸ்.

"தாங்க்ஸ்" என்று வாங்கிப் பிரித்து அதைப் படித்தாள். உணர்ச்சி வசப்படாமல் படித்தாள். "என் கையெழுத்து இந்த மாதிரி அழகாக இருந்தால் நன்றாயிருக்கும்" என்றாள்.

இந்தப் பதில் எல்யூஸிஸுக்குத் திருப்தியளிக்கவில்லை. அவன் தவறுதலாக என்ன செய்துவிட்டான்? ஏன் அவளுக்கு அவனிடம் இந்தக் கோபம்! என்ன விஷயம்? ஆக்ஸெல் குடிசையில் இல்லை. எங்கே அவன்? அவனுக்கு எல்யூஸிஸ் அங்கு ஞாயிற்றுக்கிழமைகளில் வருவது பிடிக்கவில்லை என்பதினால் வெளியேறிவிட்டானோ? அல்லது வேறு ஏதாவது வேலையிருந்ததோ? இரண்டு நாட்களுக்கு முன் கிராமத்துக்குப் போனவன், இன்னும் திரும்பவில்லை.

"இரவு வேளை நன்றாக இனிமையாக இருக்கிறதே! இப்படி உள்ளே அடைபட்டுக் கிடப்பானேன். உலவிவிட்டு வரலாம், வா" என்று அவளை அழைத்தான் எல்யூஸிஸ்.

"ஆக்ஸெல் வரட்டுமென்று காத்திருக்கிறேன்."

"ஆக்ஸெலா? அவனில்லாமல் உன்னால் வாழ முடியாதா?"

"முடியும். ஆனால் அவன் திரும்பும்போது உணவு தயாராக இருக்க வேண்டாமா?"

பொழுது போயிற்று. கொஞ்சம் கொஞ்சமாக ஊர்ந்து நகர்ந்தது. அவர்கள் இடையில் நெருக்கம் ஏற்படவில்லை. ஒருவரைவிட்டு ஒருவர் நகர்ந்து கொண்டிருந்தனர். பார்ப்ரோ என்னவோ ஒருவிதமாக நடந்து கொண்டாள். எல்யூஸிஸ் மாமா ஸிவெர்ட் வீட்டில் நடந்ததெல்லாம் பற்றி மீண்டும் ஒருதரம் சொன்னான். சவக்குழியண்டை அவன் செய்த பிரசங்கத்தையும் அவன் மறந்துவிடவில்லை. "நான் அதிகம் சொல்லவில்லை— இரண்டொரு வார்த்தைகள் தான் சொன்னேன். ஆனால் கேட்டவர்கள் கண்களில் நீர் துளித்தன."

"அப்படியா?"

"மீண்டும் ஒரு தரம் ஒரு நாள் ஆலயத்துக்குச் சென்றேன்"

"என்ன விசேஷம்?"

"விசேஷம் எதுவுமில்லை. சும்மா சுற்றிப் பார்க்கப் போனேன். மதகுரு அப்படி ஒன்றும் பிரமாதமான ஆசாமி அல்ல. பேசுவது கூட மிகச் சாதாரணமாகப் பேசினான்."

பொழுது போய்க் கொண்டிருந்தது.

"திரும்பி வந்து ஆக்ஸெல் இரவில் உன்னை இங்கு பார்த்தால் என்ன சொல்லுவான்?" என்றாள் பார்ப்ரோ திடீரென்று.

இப்படியா வார்த்தை சொல்வது? முகத்தில் அடித்த மாதிரி இருந்ததே! முந்திய ஞாயிறன்று பேசியதெல்லாம் மறந்துவிட்டதா அவளுக்கு? இன்று இரவு வரச் சொன்னவள் அவளே தானே? எல்யூஸிஸுக்குப் புரியவில்லை. துக்கம் வந்தது. "உன் இஷ்டம் அதுவானால் நான் போய்விடுகிறேன். நான் செய்த தவறு என்ன? சொல்லேன்" என்றான். அவன் உதடுகள் துடித்தன. அவன் மனசு மிகக் கஷ்டப்பட்டது—அது தெளிவாகவே தெரிந்தது.

"தவறா? நீ ஒரு தவறும் செய்ய வில்லை"

"அப்படியானல் என்ன விசேஷம்? நீ ஏன் இப்படித் திடீரென்று இன்றிரவு மாறிவிட்டாய்?"

"விசேஷமா? மாறி விட்டேனு? யார் சொன்னது? ஹா! ஹா! ஹா! ஆனல் ஆக்ஸெல் வந்து பார்த்தால் அவனுக்குக் கோபம் வருவது நியாயந்தானே!"

"அப்படியானல் நான் போகிறேன்" என்ருன் எல்யூஸிஸ். அப்படியும் அவள் அலக்ஷியமாகவே இருந்தாள். அவன் போய் விடுவானே என்று அவள் பயந்ததாகத் தோன்றவில்லை. அவன் உணர்ச்சி வசப்பட்டிருந்தது பற்றி அவள் கவலைப்பட்டதாகவே தெரியவில்லை. அசட்டுப் பெண்!

இப்போது அவனுக்கும் கோபம் வரத் தொடங்கியது. முதலில் தன் அதிருப்தியை மறைமுகமாகச் சொன்னுன். ரொம்ப நல்ல பெண்மணி அவள் என்ருன். அவளால் பெண்குலத்துக்கே பெருமைதான் என்ருன். அதற்கும் மசியவில்லை அவள் என்று கண்டதும், பேசாமல் பொறுமையாக இருந்திருக்கலாம். அதற்குப் பதிலாக அவன் சொன்னுன்: "நீ இப்படி இருக்கப் போகிருய் என்று தெரிந்திருந்தால் நான் வந்தே இருக்க மாட்டேன்."

"நீ வந்திராவிட்டால்தான் என்ன?" என்ருள் அவள். "உன் கைப்பிரம்பை ஒரு தடவை கூடச் சுழற்ற உனக்கு இடம் இருந்திராது."

ஹோ! அந்த பார்ப்ரோ! அவள் பெர்கன் நகரில் வாழ்ந்தவள். ஒருவனை எப்படி இகழ வேண்டும் என்று அவளுக்குத் தெரியும்—கேலி செய்து நகைக்கத் தெரியும். நல்ல நல்ல கைத்தடிகளைக் கண்டவள் அவள்—எல்யூஸிஸின் உடைந்து மீண்டும் ஒட்டுப் போட்ட கைத்தடியை ஒரு பொருட்டாகவே எண்ணவில்லை அவள்.

அவன் பதில் தரவில்லை.

"சரி. அடுத்தபடியாக உன் போட்டோவைத் திருப்பிக் கேட்பாயாக்கும்!" என்ருன் அவன். இதற்கும் அவள், அசைந்து கொடுக்காவிட்டால் அப்புறம் செய்ய ஒன்றுமில்லை என்றுதான் அர்த்தம். நாட்டுப் புறத்திலே கொடுத்ததைத் திருப்பிக் கேட்பதைப் போன்ற அவமானகரமான விஷயம் வேறு எதுவும் கிடையாது என்பது எல்யூஸிஸிற்குத் தெரியும்.

"அது உன்னிஷ்டம்" என்ருள் அவள் நேரிடையாகப் பதில் தராமல்.

தைரியமாகவே பேசினான் பையன்: "அதைத் திருப்பித் தந்து விடுகிறேன் — பயப்படாதே. உடனேயே அனுப்பிவிடுகிறேன். என் கடிதத்தைத் திருப்பிக் கொடுத்துவிடு." எல்யூஸிஸ் எழுந்தான்.

ரொம்ப சரி. அவன் கடிதத்தை அவனிடமே கொடுத்து விட்டாள். இப்போது அவள் கண்ணில் நீர் துளித்தது. இந்த வேலைக்காரப் பெண்ணுக்கும் இப்போது உணர்ச்சி வந்தது. அவள் நண்பன் அவளைவிட்டுப் போகக் கிளம்பிக் கொண்டிருந் தான்—மீண்டும் வரவேமாட்டான்.

"நீ போகவேண்டிய அவசியமில்லை. ஆக்ஸெல் வந்து என்ன சொன்னால் எனக்கென்ன?" என்றாள் பார்ப்ரோ.

ஆனால் இப்போது எல்யூஸிஸ் விட்டுக் கொடுக்காமல் விரைப்பாக இருந்தான். அவளுக்கு நன்றி செலுத்திவிட்டு வருகிறேன் என்று கிளம்பினான். "ஒரு பெண் இப்படி நடந்து கொள்ளும்போது, வேறு என்ன செய்வது!" என்றான்.

அமைதியாக வெளியேறினான். கைத்தடியைச் சுழற்றிக் கொண்டே தன் வீடு நோக்கிக் கிளம்பினான். வாயால் உல்லாசமாக ஊதுபவன்போல ஊதிக்கொண்டே நடந்தான். ஹா! சிறிது நேரத்திற்கெல்லாம் பார்ப்ரோவும் அவனைத் தொடர்ந்து வந்தாள். இரண்டொருதரம் அவனைக் கூப்பிட்டாள். ரொம்ப சரி. அவன் நின்றான். அடியுண்ட சிங்கம்மாதிரி நின்றான். மிகவும் வருத்தம் தொனிக்கிறமாதிரியில் முகத்தை வைத்துக்கொண்டு புல்தரை மேல் உட்கார்ந்தாள் அவள். ஒரு குச்சியை எடுத்துக் கையில் வைத்துக்கொண்டு விளையாடினாள். சற்று நேரத்தில் அவனும் தன் பிகுவை விட்டுவிட்டு அவளிடம் ஒரு முத்தம் வேண்டினான்— கடைசி முத்தம்—குட் பை சொல்லுகிறமாதிரியில்—நண்பர்கள் என்கிற நினைப்புக்காக! அவள் மறுத்தாள். "மறுக்காதே. நல்ல பெண்ணாக இரு. பிரியமாக இரு. போன வாரம் மாதிரி" என்றான் எல்யூஸிஸ். சமயமும் சந்தர்ப்பமும் வரக் காத்திருப்பவன் போல அவளைச் சுற்றிச் சுற்றி வந்தான். அவள் சம்மதிக்கவில்லை. எழுந்துவிட்டாள். தலையை ஆட்டிவிட்டு அவன் வேகமாகப் போய் விட்டான்.

அவன் போய் மறைந்த பிறகு ஆக்ஸெல் அங்கு வந்தான்— திடீரென்று சில புதர்களுக்குப் பின்னாலிருந்து வெளிப்பட்டான். பார்ப்ரோ குழப்பமடைந்து திடுக்கிட்டு: "என்ன அது? எங்கிருந்து வருகிறாய்—கிராமத்திலிருந்தா?" என்றாள்.

"இல்லை. வீட்டிலிருந்து. நீங்களிருவரும் வருவதைப் பார்த்துத் தொடர்ந்து வந்தேன்" என்றான் ஆக்ஸெல்.

"ஓ! அப்படியா? ரொம்ப நல்ல காரியம் செய்கிறாய் நீ? உனக்கு நல்லதே நடக்கும்" என்றாள் பார்ப்ரோ கோபமாக. இப்போது அவளைச் சமாதானப்படுத்துவது உண்மையிலேயே சிரமம்தான். "என்ன இருக்கிறது இங்கே என்று மூக்கை நீட்டிக்கொண்டு என்னைத் தொடர்கிறாய்? உனக்கு என்ன? நான் எங்கே யாருடன் போனால் உனக்கென்ன?"

ஆக்ஸெலுக்கே கோபம்தான்: "இன்றும் அவன் வந்தானோ?"

"அவன் வந்தால் உனக்கென்ன? உனக்கென்ன அதுபற்றி? அவனிடம் உனக்காக வேண்டியதென்ன?"

"அவனிடம் எனக்காக வேண்டியது என்னவா? உனக்கு அவனிடம் வேண்டியது என்ன என்றுதான் உன்னை நான் கேட்கிறேன். உனக்கு வெட்கமாக இல்லையா?"

"வெட்கமா? எதற்காக? எதைச் செய்துவிட்டேன் நான் வெட்கப்பட? வீட்டைவிட்டு வெளியே கிளம்பாததற்கு நான் என்ன கற்சிலையா? எதைப்பற்றி நான் வெட்கப்படவேண்டும், சொல்லேன். உனக்கு வேறு வேலைக்காரி பார்த்துக் கொள். நான் வேண்டுமானால் போய்விடுகிறேன். வாயை மூடிக் கொண்டிருந்தால் சரி — இல்லா விட்டால் நான் போய்விடுகிறேன். இப்போது உனக்கு உணவு தயார் செய்து காபிப் போடப் போகிறேன். அதற்குப் பிறகு என் இஷ்டப்படி நான் செய்கிறேன்."

வீடு திரும்பியும் அவர்கள் சண்டை ஓய்ந்த பாடில்லை.

ஆமாம். அவர்கள் அப்படி ஒன்றும் சுமுகமாக இருப்பதில்லை தான். ஆக்ஸெலும் பார்ப்ரோவும் அடிக்கடி சண்டை போட்டுக் கொள்ளுவார்கள். அவள் அவனிடம் வந்து இப்போது இரண்டு வருஷங்களாகிவிட்டன. இதற்கு முன் பல தடவைகளிலும் அவர்கள் சண்டைபோட்டுக் கொண்டதுண்டு. முக்யமாக பார்ப்ரோ வேறு இடத்துக்கு வேலைக்குப் போவதாகச் சொல்லும்போது அவர்களுக்கிடையே சண்டை வந்துவிடும் அவள் அங்கேயே தங்க வேண்டும்—தன்னுடைய வீட்டிலும் வாழ்க்கையிலும் நிரந்தரமாகப் பங்கெடுத்துக் கொள்ள வேண்டும் என்று ஆசைப் பட்டான் ஆக்ஸெல். மீண்டும் ஒரு பெண்ணில்லாமல் வாழ்வதன் சிரமங்கள் அவனுக்குத் தெரியும். அவளும் சரி என்று பல

தடவைகளில் சொன்னதுண்டு—அவனிடம் அன்பு இருக்கும் போது அங்கிருந்து போவதில்லை என்று தான் அவள் தீர்மானிப்பாள். ஆனால் சண்டை வந்த அடுத்த நிமிஷமே அங்கிருந்து கிளம்பிவிடுகிறேன் என்பாள் அவள். வேலை ஒன்று மில்லா விட்டால் நகரில் போய்த் தன் பற்களைச் சுத்தம் செய்து கொள்ள வேண்டும் என்பாள். "போ; போய்விடு..." ஆனால் அவளை அங்கு நிறுத்திவைக்க ஒரு வழிகண்டு பிடித்து விட வேண்டும் என்பது ஆக்ஸெலின் ஆசை.

அங்கேயே வைத்துக் கொள்வதா? அவளிஷ்டம் இல்லாமல் அது சாத்தியமா? பார்க்கலாமே!

"ஓ! நீ போய் விடுவதாகச் சொல்கிறாயா மறுபடியும்?"

"அப்படிச் சொன்னால் என்ன?" என்றாள் பார்ப்ரோ.

"முடியுமா? உன்னால் சொல்லு."

"ஏன் முடியாது? மாரிக் காலம் வருகிறது என்று பயந்து விடுவேனா நான்! என்று விரும்பினாலும் எனக்குப் பெர்கனில் ஒரு வேலை கிடைக்கும்."

பிறகு சொன்னான் ஆக்ஸெல்: "எப்படியும் நீ இப்போது போவது சாத்தியமில்லை. வேறு இடம் எப்படித் தேடுவாய்? அதுவும் கர்ப்பமாக இருக்கும்போது?"

"கர்ப்பமா? யார் கர்ப்பம்? என்ன சொல்கிறாய் நீ?"

ஆக்ஸெல் பரக்கப் பரக்க விழித்தான். பார்ப்ரோவுக்குப் பைத்தியம் பிடித்துவிட்டதா என்ன?

உண்மைதான், அவன் சற்றுப் பொறுமையுடனேயே இருந்திருக்கலாம். அவள் அங்கு தங்குவதற்குக் காரணம் ஏற்பட்டு விட்டது என்பது தெரிந்தவுடன் அவன் அதிக நம்பிக்கையுடன் பேசிவிட்டான்—அது தவறு. அவளைத் திட்டிக் கோபம் வரும் படியாகச் செய்வதில் என்ன லாபம்! அந்த வஸந்தத்தில் அவன் அவளை அவ்வளவு அதிகமாகவும் வேலை வாங்கியிருக்க வேண்டிய தில்லை. அவனே உருளைக் கிழங்கை விதைத்திருக்கலாம். கல்யாணம் செய்து கொண்டபிறகு விரட்ட அவகாசம் கிடைக்காமலா போய்விடும்? அதுவரை விட்டுப் பிடிக்க வேண்டியதுதான்!

ஆனால் இதுவும் சரியல்ல. எல்யூஸிஸுடன் இப்படி நடந்து கொண்டது அவள்மேல் பிசகுதான். கைத்தடியையும் பெரிய

பேச்சுமாக வந்த அந்தக் குமாஸ்தாவிடம் அவள் மயங்கியிருக்க வேண்டியதில்லை. கர்ப்பமாக இருக்கும்போது—வேறு ஒருவன் கணவன் என்று வர இருக்கும்போது அவள் அப்படி நடந்து கொண்டது சரியல்லதான்! புரிந்துகொள்ள முடியாத புதிர் அது. அதுவரை ஆக்ஸெலுக்குப் போட்டியேயில்லை—இப்போது போட்டி முளைத்துவிட்டது.

"புதுப் பேப்பர் வாங்கி வந்தேன் இதோ. உனக்காக வேறு ஒன்றும் வாங்கி வந்தேன். உனக்குப் பிடிக்குமோ என்னவோ" என்றான் ஆக்ஸெல்.

குளிராகத்தான் இருந்தது. இருவரும் சுடச் சுடக் காபி அருந்திக்கொண்டு உட்கார்ந்திருந்தார்கள். அப்படியும் பனி வீச்சுமாதிரிக் குளிர் உதறல் எடுக்கிறமாதிரி வெடுக்கென்று பேசினாள் பார்ப்ரோ.

"ஒரு வருஷமாகச் சொல்லிக் கொண்டிருக்கிற தங்க மோதிரத்தை வாங்கி வந்துவிட்டமாதிரித்தான்!" என்றாள்.

அந்தப் பேச்சு வீண். உண்மையில் அவன் ஒரு மோதிரம் வாங்கி வந்திருந்தான். அது தங்க மோதிரம் அல்ல—ஆனால் தங்க மோதிரம் வாங்குவதாக அவன் ஒரு நாளும் சொன்னதே இல்லை. அது முழுப் பொய்! இது வெள்ளி மோதிரம்—இரண்டு கைகள் சேர்ந்திருந்தன. கைகளுக்கு மட்டும் தங்க முலாம் பூசியிருந்தது. நல்ல வெள்ளி அது! பெர்கன் போய் வந்தவள் பார்ப்ரோ—எத்தனையோ தினுசான மோதிரங்களைப் பார்த்தவள் அவள். அவளுக்கு என்ன சொல்லி என்ன பயன்?

"உன் மோதிரமோ நீயோ? அதை நீயே வைத்துக் கொள்."

"அதன் மேல் என்ன பிசகாம்?"

"பிசகு என்ன? எனக்குத் தெரிந்து பிசகு ஒன்றுமில்லை" என்றாள் பார்ப்ரோ. எழுந்து மற்ற வேலைகளைக் கவனித்தாள்.

"இப்பசத்தியாக இதுதான். பிறகு இயலுமானால் வேறு ஒன்று வாங்கலாம்" என்றான் ஆக்ஸெல்.

பார்ப்ரோ பதில் எதுவும் சொல்லவில்லை.

இன்றிரவு பார்ப்ரோ இப்படி இருந்தாள். மோதிரம் கொணர்ந்ததற்கு நன்றிகூடச் செலுத்தவில்லை அவள். நகரத்திலிருந்து வந்திருந்த அந்த குமாஸ்தாப் பையன் அவளை மயக்கிவிட்டானோ? ஆக்ஸெலால் சொல்லிக் காட்டாமல் இருக்க முடிய

வில்லே: "அந்த எல்யூஸிஸ் பயல் எதற்காக இங்கு வருகிறுன்? உன்னிடம் அவனுக்கென்ன வேலே" என்றுன்.

"என்னிடமா?"

"ஆமாம். அவனுக்குக் கண்ணில்லேயா? நீ கர்ப்பமாக இருப்பது தெரியாதா அவனுக்கு?"

பார்ப்ரோ கோபமாக அவன் மேல் பாய்ந்தாள்; "அதனுல் நீ என்னே உன் இஷ்டப்படி ஆட்டிவைக்கலாம் என்று பார்க்கிருயா? அதுதானே நடக்காது, பாரேன்" என்றுள்.

"ஹோ!" என்றுன் ஆக்ஸெல்.

"ஆமாம். நான் இங்கே தங்குவதாக உத்தேசமில்லே."

அது கேட்ட ஆக்ஸெல் புன் சிரிப்புச் சிரித்தான். அவளேப் பார்த்து சிரித்துக் கேலி செய்யவில்லே அவன். அவளுக்கு மேலும் கோபமூட்ட அவன் விரும்பவில்லே: "நல்ல பெண்ணுக இரேன் பார்ப்ரோ! நீயும் நானும் தானே!"

கடைசியில் பார்ப்ரோ சாந்தமானுள். நல்லவளாகவே இருந்தாள். தூங்கப் போகும்போது கையில் அந்த வெள்ளி மோதிரத்தை அணிந்துகொண்டாள்.

பயப்படவேண்டியதில்லே. எல்லாம் நாளடைவில் சரிப்பட்டு விடும்.

குடிசையில் இருந்த இருவருக்கும் சரிதான். ஆனுல் எல்யூஸிஸ் விஷயம் என்ன? அவன் முன்னேவிட அதிகமாக துயரத்தில் ஆழ்ந்தான். தன்னே பார்ப்ரோ நடத்திய விதத்தை அவனுல் மறக்கவேமுடியவில்லே. கர்ப்பஸ்திரீகளுக்குள்ள மனேநிலே பற்றியும் மற்றும் பெண்களுடைய சுபாவம் பற்றியும் அவனுக்கு அவ்வளவாக ஒன்றும் தெரியாது. அவள் தன்னேக் கொடுமையாக் நடத்திவிட்டாள் என்று எண்ணினுன் அவன். பெர்கனுக்குப் போனவளாகத்தான் இருக்கட்டுமே—இந்த ஜம்பமும் ராங்கியும் உதவுமா என்ன?

ஒரு புதிய முறையில் அவள் போட்டோவைத் திருப்பி யனுப்புவது என்று எண்ணினுன். அவள் படுத்திருந்த அறையின் கதவு வழியாக அதை அவனே கொண்டு போய்ப் போட்டான். சந்தடி கேட்டு விழித்துக்கொண்ட பார்ப்ரோ முழங்கையை ஊன்றிக்கொண்டு சாய்ந்தபடியே "ஏன் இவ்வளவு நேரம் இன்று?" என்று கேட்டாள். அந்தக் கேள்வி தனக்கல்ல வேறு ஒருவனுக்கு என்று உணர்ந்த எல்யூஸிஸிற்கு ஈட்டியால்

மார்பில் குத்துவதுபோல இருந்தது. அவன் வீடு திரும்புபோது கைத்தடியைச் சுழற்றவில்லை—வாயால் ஊதவில்லை. அவன் மனம் உடைந்துவிட்டது—அது சுலபத்தில் சமாளித்துக் கொள்கிற விஷயமா? மனிதனின் சக்தியை மீறிய சோதனை அது!

அதோடு முடிந்துவிடவில்லை.

ஒரு ஞாயிறன்று அங்கு என்ன நடக்கிறது என்று ஒளிந்து கொண்டு பார்த்தான். வெகு நேரம் புதர்களில் மறைந்து படுத்துக் கிடந்தான். பிறகு அவன் கண்ட காக்ஷிதான் உள்ளத்தை உருக்கிவிட்டது. ஆக்ஸெலும் பார்ப்ரோவும் கட்டி அணைத்துக்கொண்டு வெளியே வந்து மாட்டுக் கொட்டிலுக்குள் போனார்கள். இருவரும் காதல் புரிவதைத் தன் மறை விடத்திலிருந்து பார்த்துக் கொண்டிருந்தான் எல்யூஸிஸ். ஆனந்தமாகக் காதல் புரிந்தார்கள் இருவரும்! ஆமாம்!

எல்லாவற்றையும் பறிகொடுத்தவன்போல அவர்களையே பார்த்துக் கொண்டிருந்தான் எஸ்யூஸிஸ். என்னை அணைத்த அதே கைகளால் அவள் ஆக்ஸெலை அணைக்கிறாளே! அது எப்படி சாத்தியம்?

சரி. செய்யட்டும். ஹோ! ஹோ! லதற்காக அவன் இப்படித் தன்னை மறந்து புதர்களுக்குப் பின்னால் புல்தரையில் குப்புறப் படுத்திருப்பானேன். யார் அவள், அப்படி வருத்தப்பட? மீண்டும் பழைய எல்யூஸிஸ் ஆகிவிட்டான் அவன். அவன் மனசில் நிம்மதி பிறந்தது.

குதித்து எழுந்தான். நிமிர்ந்து நின்றான். தன்மேல் படிந் திருந்த தூசியைத் தட்டினான். அவனுடைய கோபமும் ஆத்திரமும் அலக்ஷியமும் வேறு ஒரு தினுசாக வெளிப்பட்டன இப்போது. ஒரு பெரிய காலித்தனமான் பாட்டை உரக்கப் பாடத் தொடங்கினான். மிகவும் விரஸமான பகுதிகளை, உரத்த குரலில் பாடினான்.

## 19

ஐஸக் கிராமத்திலிருந்து ஒரு குதிரையை ஓட்டிக்கொண்டு வந்தான்.

ஆமாம். அப்படியேதான் நடந்தது. லென்ஸ்மாண்டின் உதவியாளிடமிருந்து அதை வாங்கினான் ஐஸக். இருநூற்று ஐம்பது க்ரோனர்—அதாவது அறுபது டேலர்—கொடுத்து

வாங்கினுன் அந்தக் குதிரையை. குதிரைக்கு இந்த விலையா? ஏன் இப்படி அநியாயமாகக் குதிரை விலைகள் ஏறிவிட்டன. ஐஸக் சிறு பையனுக இருந்தபோது ஐம்பது தேலருக்கு ஒரு குதிரை வாங்கலாம்.

அவனே ஒரு பெண் குதிரைக் குட்டியை வளர்த்திருக்கலாம். அந்த எண்ணத்துடன் அவன் இரண்டு வருஷங்களுக்கும் அதிகமாகக் காத்திருந்திருக்கிருன். குதிரையை ஈனச் செய்து குட்டியை வளர்ப்பதென்பது அவகாசமுள்ளவர்கள் செய்ய வேண்டிய காரியம். நிலத்தில் வேலை செய்வதற்கு ஓய்வு கொடுத்து விட்டு அதில் ஈடுபடவேண்டும். லென்ஸ்மாண்டினுடைய குமாஸ்தா சொன்னுன்: "அந்தக் குதிரையை யாராவது வளர்த்தால் போதும். அதற்குத் தீனிபோட இங்கு என்னுல் முடியவில்லை" என்ருன்.

புதிதாகக் குதிரை வாங்குவதுபற்றி ஐஸக் பல வருஷங்க ளாகவே யோசித்துக்கொண்டிருந்தான். கெய்ஸலர் சொல்லித் தோன்றிய யோசனை அல்ல அது. அதற்காக சில ஏற்பாடுகளையும் செய்து வைத்திருந்தான் அவன்—ஒரு புது லாயம். கோடையில் அதைக் கட்டிப் போடுவதற்கு ஒரு கயிறு; குதிரை கட்டக் கூடிய வண்டிகள் பல இருந்தன ஐஸக்கிடம்; இன்னும் ஒன்றிரண்டு கூடச் செய்துகொள்ளலாம், சமயம் வாய்க்கும்போது. எல்லாவற்றையும்விட முக்கியமானது தீனி—அதை மறந்துவிடவில்லை ஐஸக். குதிரைப் புல்லும் மாட்டுப் புல்லும் தன் நிலத்தில் சில பகுதிகளில் பயிரிட்டு வளர்த்தான் ஐஸக்—இல்லாவிட்டால் புதுக் குதிரையும் பிறக்கப் போகும் கன்றுக்குட்டிகளும் தீனியில்லாமல் தவிக்குமே?

ஆம். எல்லாவற்றையும் அவன் முன்கூட்டியே யோசித்துத் தானிருந்தான். உண்மையிலேயே இப்போது இங்கர் ஆச்சரியப் பட்டாள். பழைய நாட்களைப்போலவே கைகளைக் கொட்டிக்கொண்டு ஆனந்தப்பட்டாள்.

ஐஸக் கிராமத்திலிருந்து செய்திகள் கொணர்ந்தான். ப்ரேடாப்ளிக் விற்பனைக்கு வந்துவிட்டது. ஆலயத்திலே நோட்டீஸ் போட்டுவிட்டார்கள் எல்லோருக்கும் தெரிவதற்காக. விளைந் திருந்த பயிர்—ஏதோ சொல்பந்தான்—வைக்கோல், உருளைக் கிழங்குப் பயிர் எல்லாம் சேர்த்து ஏலம் போடப்படும். சில ஆடு மாடுகள்—அதிகம் இல்லை அங்கு. கொஞ்சம்தான் பெறும். ஆனல் அது அப்படியே விற்கப்படும்.

"வீட்டையும் வாசலையும் ஒன்றுவிடாமல் விற்றுவிடுகிறுனு? எங்கே வசிப்பானும் பிறகு?" என்ருள் இங்கர்.

"கிராமத்தில்."

அது உண்மைதான். ப்ரேட் மீண்டும் கிராமத்துக்குப் போவதாக இருந்தான். ஆனுல் ஆக்ஸெல் ஸ்டிராமன் பண்ணையில் தன் பெண் பார்ப்ரோவுடன் தானும் வசிக்க முடியுமா? இடம் கிடைக்குமா என்று முதலில் முயற்சி செய்து பார்த்தான். பலிக்கவில்லை. ஆக்ஸெலுக்கும் தன் பெண்ணுக்கும் இருந்த உறவிலே குறுக்கிட்டுக் கெடுத்துவிட அவன் விரும்பவில்லை. அது ஒரு பெரும் ஏமாற்றம்தான் ப்ரேடுக்கு. இலை யுதிர் காலத்தில் ஆக்ஸெலின் புது வீடு தயாராகிவிடும். அங்கு போதிய இடம் இருந்தது. ப்ரேடுக்கும் அவன் மக்களுக்கும் அந்தப் பழைய குடிசை போதுமே? முடியாது—குடிசை ஆக்ஸெலுக்குத் தேவையாக இருக்கும். ப்ரேட் குடியானவன் கண்களுடன் இந்த விஷயத்தைப் பார்க்க அறியாதவன். ஆடு மாடுகளில்லாவிட்டால் பண்ணை என்னவாகும்? ஆடுமாடு களுக்கு அந்தக் குடிசை தேவை. இதை ஆக்ஸெல் எடுத்துரைத்த பிறகும்கூட ப்ரேடுக்குப் புரியவில்லை. மனிதர்கள் முக்கியமா, ஆடுமாடுகள் முக்கியமா என்று கேட்டான் அவன். எது முக்கியம்? காட்டைத் திருத்தி நிலத்தை உழுது பிழைக்க வழிசெய்து கொள்ள முயன்று கொண்டிருந்த உழவனுக்கு இப்போது ஆடு மாடுகள்தான் முக்கியம். தவிரவும் மனிதனுக்குத் தங்க வேறு எங்கேயாவது இடம் கிடைத்துவிடும். பார்ப்ரோவும் இரண்டொரு வார்த்தைகள் சொன்னுள்: "என் மனிதர்களைவிட உனக்கு உன் ஆடுமாடுகள்தான் முக்கியம். இதை நான் தெரிந்துகொள்ள வேண்டியது அவசியம்!" அந்தக் குடும்பமே இதனுல் ஆக்ஸெலுக்கு விரோதமாகிவிட்டது. ஆனுல் அதற்காக அசைந்து கொடுத்துவிடவில்லை அவன். அவன் அசடு அல்ல. ஆக்ஸெல் கெட்டிக்காரன். ஜாக்கிரதையாக எக்காரியத்தையும் உரியபடி செய்யப் பழகிக் கொண்டிருந்தான். அந்தக் கூட்டம் பூராவும் அங்கு தன் வீட்டில் குடியேறிவிட்டால் அதற்கும் உணவு அவன்தானே தந்தாகவேண்டும்? ப்ரேட் பேசாதிரு என்று தன் மகளை அதட்டினுன். இங்கு இந்தக் காட்டிலே வசிப்பதைவிட அவனுக்கே கிராமத்தில் வசிப்பதுதான் நல்லதென்று தோன்றியது—கிராமத்துக்குப் போவதற்காகத்தானே அவன் தன் பண்ணையையே விற்றுக்கொண்டிருந்தான்!

ஆனால் உண்மை என்னவோ அது அல்ல. இந்த விஷயம் ப்ரேடைக் தாண்டிப் போய் விட்டது. பண்ணையை விற்க ஏற்பாடுகள் செய்தது ப்ரேட் அல்ல. பாங்கும் கிராமத்துக் கடைக்காரர்களுமாக அதை ஏலம்போட ஏற்பாடு செய்து இருந்தார்கள். தங்கள் பாக்கி வசூலாகுமோ என்று பார்ப்பதற் காகவும் ப்ரேடின் பெயரைக் கெடுப்பானேன் என்பதற்காகவுமே அவன் விற்பது போலவே அறிக்கைகள் போட்டிருந்தார்கள். தனக்கு அதில் அவமானம் எதுவும் இல்லை என்று எண்ணினான் ப்ரேட். அவன் ஐஸக்கைச் சந்தித்தபோது அப்படி ஒன்றும் கஷ்டப்படுகிறவன் மாதிரிக் காட்டிக் கொள்ளவில்லை. தந்திக் கம்பெனியின் இன்ஸ்பெக்டர் அவன் — மாதாமாதம் சம்பளம் வாங்கிக் கொண்டிருந்தான். அவன் எதற்காகக் கஷ்டப்பட வேண்டும்? தவிரவும் கிராமத்துக்குப் போய்விட்டால் அவன் மீண்டும் லென்ஸ்மார்ண்டின் ஸர்வேயர் குமாஸ்தாவாகி விடலாம். கிராமத்திலே அவனைப் போன்ற அனுபவஸ்தனுக்கு வேலையா கிடைக்காது? மாறுதல் என்றால் சிரமம்தான். அதுவும் உழைத்துக் கொட்டி உருச் செய்த ஒரு இடத்தைவிட்டுப் போவதென்றால் யாருக்குத்தான் மனசு வரும்? ப்ரேட் அவசரப் பட்டு துயரத்துக்கு இடம் தந்து விடமாட்டான். அதுதான் அவனுடைய பலம். முன் ஒரு நாள் தான் உழவனாகிவிடுவது என்று தீர்மானித்து ப்ரேடாப்ளிக் பண்ணையை வாங்கினான். உழவுத் தொழிலில், பண்ணை வைத்து அவன் வெற்றி பெற்றுவிட வில்லை—உண்மைதான். ஆயினும் வேறு தொழில்களை அவன் மேற்கொண்டான். அவற்றில் ஏதாவதொன்றில் வெற்றி கிட்டாமலா போய்விடும்? எது எப்படியானாலும் சுரங்கம் வைக்கலாம்—அதுபற்றி அவன் பிரமாதமாக உழைத்து ஸாம்பிள்கள் சேர்த்திருந்தான். ஒரு நாள் அவன் பணக்காரனாகி விடுவான் — சந்தேகம் என்ன? பார்ப்ரோவையும்தான் பாரேன். மேன்லாந்தில் அவள் யஜமானியாகி விட்டாள். இனிமேல் ஆக்ஸெலை விடமாட்டாள் —அவளைப் பார்த்தவர்களுக்கு அது தெளிவாவே தெரிந்தது.

அவன் உடலில் தெம்பு இருந்த வரையில் அவன் கவலைப்பட வேண்டியதேயில்லை. ப்ரேட் ஒல்ஸன் கையில் தெம்பு இருக்கும் வரையில் அவனை நம்பியிருந்தவர்களைக் காபபாற்றி விடுவான். அவன் குழந்தைகளும் வளர்ந்து பெரியவர்களாகிக் கொண் டிருந்தார்கள். இன்னும் சில நாட்களில் அவரவர்கள் வழியில்

சென்று வாழ்வுக்கு வழிதேடிக் கொண்டுவிடுவார்கள். ஹெல்கே என்கிற பையன் மீன் பிடிக்கும் தொழிற்சாலையில் வேலையில் இருந்தான். டாக்டர் வீட்டில் உதவி செய்யக் காதரீன் போய் விட்டாள். இன்னும் இரண்டு பேர் இளையவர்கள் மட்டுமே வீட்டிலே இருந்தார்கள். இன்னொரு குழந்தை வர இருந்தது. அதனால் என்ன?

கிராமத்திலிருந்து வேறு செய்திகளும் கொணர்ந்தான் ஐஸக். லெல்ஸ்மாண்டின் மனைவிக்குக் குழந்தை பிறந்திருந்தது. "பெண்ணு பிள்ளையா?" என்று ஆவலுடன் கேட்டாள் இங்கர்.

"நான் கேட்கவில்லை" என்ருன் ஐஸக்.

லென்ஸ்மாண்டின் மனைவிக்குக் குழந்தை பிறந்துவிட்டது. அதுதான் விஷயம். ஊரெல்லாம் கர்ப்பத் தடை பற்றிப் பிரசங்கங்கள் செய்து கொண்டிருந்தாள் அவள். ஸ்தீரீகளுக்கு வாக்குரிமை பற்றியும் ஊர் லேடீஸ் கிளப்பில் பிரசங்கங்கள் செய்தாள் அவள். இப்போது அவளுக்கே ஒரு குழந்தை பிறந்து விட்டது. ஆமாம். மதகுருவின் மனைவி "ஹா! ஹா! பிறருக்கு உபதேசம் பண்ணத் தெரியும்" என்று சொல்லிச் சிரித்தாள். மதகுருவின் மனைவி சொன்னது ஊருக்கெல்லாம் தெரியும். அது பற்றியோ, அவள் அதை என்ன அர்த்தத்தில் சொன்னுள் என்பது பற்றியோ ஊரில் யாருக்கும் சந்தேகம் எதுவும் இல்லை. இங்கருக்கும் தெரிந்தது. ஐஸக் ஒருவனுக்குத்தான் அந்த வாக்கியத்தின் அர்த்தம் புரியவில்லை.

ஐஸக்குக்குப் புரிந்ததெல்லாம் அவனுடைய வேலையும் நிலத்தின் பண்ணையின் தேவைகளும்தான், பணக்காரன் அவன். பண்ணையோ பெரியபண்ணை. ஆனுல் அதிருஷ்டவசமாக அவன் கையில் சிக்கிய பணத்தைச் சரிவர உபயோகிக்க அவனுக்குத் தெரியவில்லை. நிலம் அவனைக் காப்பாற்றியது. கைப்பணம் உறங்கியது. கிராமத்திலிருந்திருந்தானுனல் அவனையும் புது மோகங்கள் புது நாகரிகங்கள் கவர்ந்திருக்குமோ என்னவோ! எத்தனையோ அற்பமான பொருள்கள் வாங்கித் தேவைகளை அதிகரித்துக்கொண்டு ஆனந்தப்பட்டிருப்பானே என்னவோ; ஞாயிறுகளில் இப்போது அணிகிற சிவப்புச் சட்டையை வாரம் பூராவும் அணிந்து துணி மணிகள் ஏராளமாக வைத்துக் கொண்டு ஆனந்தப்பட்டிருப்பானே என்னவோ! இந்தக் காட்டுப் புறத்திலே எந்தவிதமான அளவுக்கு மீறிய செய்கையும் நடக்க முடியாது. தெள்ளிய நீர், சுத்தமான காற்று என்று இருந்தது. ஞாயிறன்று

குளிப்பான். அந்த ஆயிரம் தேலர்—அதைக் கடவுள் தந்தார். அதை ஜாக்கிறதையாகப் காப்பாறி வைப்பது அவசியம். வேறு என்ன செய்வது அதை? நிலத்தில், பண்ணையில் விளைந்தது அவன் தினசரிச் செலவுகளுக்குப் போதுமானதாக இருந்தது.

பணத்தைப் பாங்கில் போடச் சொன்னான் எல்யூஸிஸ். அது தான் சிறந்த வழி என்று ஐஸக்கும் ஒப்புக்கொண்டான். ஆனால் பணத்தைப் பாங்கில் கொண்டு போய்ப் போடுவதை தள்ளிப் போட்டுக் கொண்டே வந்தான். நாளடைவில் அது செய்யாமல் போனாலும் போய்விடும். தன் பிள்ளையின் புத்திமதியைக் கேட்கத் தயங்கியவன் அல்ல ஐஸக். எல்யூஸிஸ் கெட்டிக்காரன் அல்ல என்று யார் சொல்லமுடியும்? அவனால் வைக்கோல் போர் போட முடியாது—அவனால் அறுப்பு அறுக்க முடியாது. அதற்கெல்லாம் லாயக்கல்ல அவன்! அதனாலென்ன? அதில்கூட ஸிவெர்ட் செய்கிறமாதிரியே அவனும் செய்து வெகுவாக முன்னேறினான். அப்படியும் அறிவாள் தீட்டத் தெரியாது அவனுக்கு; ஸிவெர்ட் தான் செய்து தரவேண்டும். எல்யூஸிஸ் கைகள் நீண்டவைகள்—ஒரு பிடியில் ஒரு போர் வைக்கோலை அள்ளி வருவான் அவன். அவனும் ஸிவெர்ட்டும் லெபல்டினும் உதவிக்கு வந்து வேலைக்காரி ஜென்ஸினுடன் இப்போது வைக்கோல் அறுத்துக் காயப் போட்டுக் கட்டுக் கட்டுவதில் ஈடுபட்டிருந்தனர். எல்யூஸிஸ் சளைக்காமல் வேலை செய்தான்—அவன் கைகளில் காயங்கள் ஏற்பட்டுவிட்டன. ஒரு வாரம் அவனுக்கு உணவு செல்லவில்லை. அதற்காக அவன் வேலையில் தளரவில்லை. ஏதோ ஒரு மாறுதல் —ஏதோ காதல் விஷயத்தில் ஏமாந்துவிட்டானோ அவன்? இருக்கும். அதுவும் நன்மைதான். வேலை செய்வதில் அவன் துயரத்தை அவனால் மறக்க முடிந்தது. அதுமட்டுமல்ல. நகரிலிருந்து அவன் கொணர்ந்திருந்த சுங்கான் புகையிலை தீர்ந்துவிட்டது. சாதாரண நகர வாசியாக இருந்தால் சுங்கான் புகையிலை இல்லாமல் அமர்க்களப்படுத்தி ஆர்ப்பாட்டம் செய்ய மாட்டானா? எல்யூஸிஸ் அப்படிச் செய்யவில்லை. புகையிலை இல்லாததால் மிகவும் தெம்பாக உழைத்தான் அதையும் மறக்க அவனுக்கு வேலை உதவியது. ஆண் மகன்தான் அவனும். இப்பொழுதெல்லாம் ஸிவெர்ட்கூடக் கேலி செய்து அவனை வெட்கப்பட வைக்கமுடிவதில்லை. இருவரும் பக்கத்தில் பக்கத்தில் படுத்து ஆற்றிலிருந்து தண்ணீர் குடித்தார்கள். ஸிவெர்ட் கேலியாகச் சொன்னான்—நான் பாசி சேர்த்துத்

தருகிறேன்—அதைச் சுங்கானில் போட்டுப் புகை பிடியேன் என்றான் பாசி காய்ந்தால் புகையிலை மாதிரியேதான் இருக்கும். "பச்சையாகக்கூடப் புகைக்கலாம்" என்றான் ஸிவெர்ட் கேலியாக.

"புகையிலைதானே!" என்று கேலியாகக் கூறிவிட்டு எல்யூஸிஸ் விளையாட்டாகத் தன் தம்பியைப் பிடித்து ஆற்றுக்குள் தள்ளிவிட்டான். ஈரம் சொட்டச் சொட்ட வீடு திரும்பினான் ஸிவெர்ட்.

"எல்யூஸிஸும் நல்ல பிள்ளையாகிவிட்டான்" என்று தனக்குள்ளேயே சொல்லிக்கொண்டான் ஐஸக். அவன் வேலை செய்தது அவனுக்குப் பிடித்திருந்தது. இங்கரிடம் சொன்னான். அவன்: "ம்......எல்யூஸிஸ் இங்கு பண்ணையிலேயே தங்கி விடுவான் என்று நினைக்கிறாயா நீ?"

ரொம்பவும் ஜாக்கிறதையாகச் சொன்னாள் இங்கர்: "என்னால் நிச்சயமாகச் சொல்லமுடியாது. இங்கு தங்கமாட்டான் என்றுதான் எனக்குத் தோன்றுகிறது."

"ஓ நீ அவனிடம் சொல்லிப் பார்த்தாயா?"

"இல்லை. அவனிடம் ஏதோ பேசியதிலிருந்து தெரிகிறது. அவன் கிளம்பிவிடுவான் என்றே எனக்குத் தோன்றுகிறது."

"தெரிந்தால் நல்லது, அவனுக்கென்று சொந்தமாக ஒரு பண்ணை வைத்துக் கொடுத்தால்...?"

"என்ன சொல்லுகிறாய் நீ?"

"அவனுக்கென்று ஒரு பண்ணை தந்தால் அதில் தங்கி உழைப்பானா?"

"மாட்டான்" என்றாள் இங்கர்.

"அதுபற்றி நீ அவனுடன் பேசினாயா?"

"பேசவேண்டிய அவசியம் என்ன? பார்த்தாலேதான் தெரிகிறதே! உனக்கே தெரியவில்லையா? அவனிடம் பண்ணையில் உழைக்கப் போதிய தெம்பும் இல்லை தகுதியும் இல்லை."

பக்ஷபாதமில்லாமல் சொன்னான் ஐஸக். "அவனைப்பற்றிக் குறை கூறிக்கொண்டே நிற்காதே! இப்பொழுதெல்லாம் அவன் வயல் வெளியில் ஒரு ஆள் வேலை செய்கிறான்."

"இருக்கலாம்" என்றாள் இங்கர் பணிவாக.

"அவனிடம் குறை எதுவும் இருப்பதாக எனக்குத் தெரியவில்லை" என்ருன் ஐஸக் அதிருப்தியுடன். "ஒவ்வொரு நாளும் அவன் வேலை கற்றுக் கொள்கிருன். அதிகமாக வேலை செய்கிருன். வேறு எப்படி என்ன சொல்ல முடியும்?"

இங்கர் முணுமுணுத்தாள். "ஆனல் அவன் முன் மாதிரியில்லை. அவனுடன் ஆடை அணிகளைப் பற்றிப் பேசிப்பார்."

"ஆடை அணிகளா? நீ சொல்வது புரியவில்லை."

"நகரில் வெள்ளை வெய்ஸ்ட் கோட்டு எப்படி அணிந்து கொண்டு போனன் என்பதுபற்றி அவன் சொல்லும்போது கவியே யாகிவிடுகிருன் அவன்."

சிறிது நேரம் இதுபற்றி யோசித்தான் ஐஸக். அவனுக்கு எட்டவில்லை. "ஏன் வெள்ளை வெய்ஸ்ட் கோட் போட்டுக் கொள்ளக் கூடாது அவன்? போட்டுக்கொள்ளட்டுமே" என்ருன். ஐஸக்குக்குப் புரியத்தானில்லை. வெள்ளைச் சட்டை போட ஆசைப்பட்டால் இங்கேயும்தான் போட்டுக் கொள்ளட்டுமே? மிகச் சின்ன விஷயம் அது. இதைப்போய்ப் பிரமாதப்படுத்திக் கொண்டிருப்பானேன்?

"சரி. சொல்லு. ப்ரேடின் பண்ணையை வாங்கி அவனுக்குத் தந்துவிடட்டுமா?"

"யாருக்கு?"

"எல்யூஸிஸுக்குத்தான்."

"ப்ரேடாப்ளிக்கையா? வேண்டாம். வீண் செலவுதான்" என்ருள் இங்கர்.

ஸிவெர்ட்டிடம் இதுபற்றிக் கேள்விப்பட்டாள் இங்கர். ஸிவெர்ட்டால் எதையும் ரகசியமாக வைத்துக்கொள்ள முடியாது; ஆகவே அவள் எல்யூஸிஸைக் கேட்டுப் பார்த்துவிட்டாள். அதில் ரகசியம் என்ன? எப்படியாவது ஒரு முடிவுக்கு வந்து ஏதாவது ஏற்பாடு செய்துதானே யாகவேண்டும்? எல்யூஸிஸ் அதுபற்றி என்ன சொன்னன்? முன்போலத்தான் பதிலளித்தான் அவன். நகரிலிருந்து கடிதங்களில் எழுதியது போலத் தான் கற்றுக் கொண்டதை எல்லாம் மறந்துவிட அவன் தயாராக இல்லை. இங்கு தங்கினல் அவன் கற்றுக்கொண்டதெல்லாம் வீணகத் தானே போகும். இங்கு காட்டுமிராண்டி மாதிரி வாழ்க்கை நடத்த விரும்பவில்லை அவன் என்று சொன்னன். வெகுவாக அவனுடன் விவாதித்துப் பார்த்தாள் அவன் தாய். நல்ல நல்ல காரணங்களாக தேடிப் பிடித்துத்தான் சொன்னுள் அவள். அதற்கெல்லாம்

செவி சாய்க்கவில்லை அவன். தன் வாழ்வுபற்றி அவன் பலவித மாகத் திட்டங்கள் போட்டுக் கனவுகள் கண்டுகொண்டிருந்தான். இளம் உள்ளங்களின் ஆழத்தை யாரே அறிவர்? பார்ப்ரோ என்கிற காதகி இருந்த பிரதேசத்திலே இருக்கவே அவனுக்கு விருப்பமில்லைபோலும்! யார் சொல்ல முடியும் அவன் மனசில் என்ன இருந்தது என்று? அம்மாவிடம் பிரமாதமாகத்தான் பேசினன் அவன். இங்கு உள்ளதைவிட நல்ல ஸ்திதியில் இருக்கும்படியாக நகரில் அவனுக்கு இடம் கிடைத்துவிடும். பெரிய அதிகாரிகளில் யாருக்காவது குமாஸ்தாவாகப் போகலாம். உலகில் உன்னதமான பதவிகள் வகிக்க வேண்டாமா அவன்? எதிர்காலத்தில் லென்ஸ்மாண்டாக வந்தாலும் வருவான். அல்லது தீபஸ்தம்ப அதிகாரியாகவும் வரலாம். அல்லது சுங்க இலாகா அதிகாரியாகவேனும் வரலாம். படித்தவனுக்கு அகப்படாத உத்தியோகம் என்ன இருந்தது உலகில்?

அது எப்படியானுல் என்ன? அவன் அம்மா அவன் கக்ஷிதான். பிள்ளையைப் பார்த்த பிறகு அவளும் நகரத்துப் பழக்க வழக்கங்களில் மீண்டும் நம்பிக்கை கொள்ளத் தொடங்கினுள். போன மாரிக்காலத்தில் அவன் ட்ரர்ண்ட்யெம் நகரிலிருந்து கொணர்ந்திருந்த ஒரு மத புஸ்தகத்தைப் படித்துக் கொண்டேயிருந்தாள். இப்போது தன் பிள்ளை லென்ஸ்மாண்டு ஆனுலும் ஆகிவிடுவான் என்றதும் அவளுக்குப் பெருமை தாங்க முடியாதுபோலிருந்தது.

"ஏன் ஆகக்கூடாது" என்று கேட்டான் எல்யூஸிஸ். "ஹேயர்தால்கூட அதே இலாகாவில் முன்னர் குமாஸ்தாவாக இருந்தவன்தானே!"

எதிர்காலம் ஆனந்தமான காலம். கூவி யழைத்தது. அதை விட்டுவிடாதே என்று அவன் தாயாரே அவனுக்குப் புத்திமதி கூறினுள். அவன் இங்கு பண்ணையில் தன் சக்திகளை வீணுக்கிக் கொண்டிருப்பானேன்? காட்டிலே அவன் உபயோகப்படமாட்டான்.

பின் எதற்காக எல்யூஸிஸ் பண்ணை வேலைகளில் இப்படிக் கஷ்டப்பட்டு உழலவேண்டும்! அப்பா கண்முன் எதற்காக இப்படி யெல்லாம் கஷ்டப்பட்டு உழைத்தான்? கடவுளுக்குத்தான் தெரியும். காரணமேயில்லாமலா இருக்கும். மனசில் எதையாவது வைத்துக்கொண்டுதான் இப்படிப் பாடுபட்டிருப்பான் அவன். ஏதோ சொல்லமுடியாத ஒரு கர்வம் அவனுள்ளே ஓங்கி வளர்ந்திருந்ததோ! மற்றவர்களுக்கு இளைத்தவனு அவன்? தவிர

அப்பாவுடைய நன்மதிப்பையும் சம்பாதித்துக்கொண்டால் நல்லது தானே! நகரில் அவனுக்குச் சில்லரைக் கடன்கள் சில இருந்தன. அப்பா தயவிருந்தால் அதை உடனேயே தீர்த்துவிட்டால் நலம்தானே! மேலும் கடன் வாங்குவது அதனுல் சுலபமாகுமே! நூறு க்ரோனர் என்கிற சில்லரைக் கணக்கல்ல அது. அதற்கு மேலே கிடைக்கக்கூடிய கடன் பெரிய விஷயம் அல்லவா? யோசிக்கத்தானே வேண்டும்!

எல்யூஸிஸ் முட்டாள் அல்ல. நேர்மாருக, மிகவும் கெட்டிக்காரன். முன் யோசனையுடன் காரியங்கள் செய்யத் தெரிந்தவன். அப்பா வீடு திரும்பியது அவனுக்குத் தெரியும். ஜன்னலில் உட்கார்ந்து அவன் எப்படி வேலை செய்கிருன் என்று கவனித்துக் கொண்டிருப்பார். சற்று கனமாகவே வேலை செய்தால் கொள்ளையா போய்விடும்—முதுகைச் சற்றே வலிக்கும். பாதகம் இல்லை. அதற்குத் தக்க லாபம் கிடைத்துவிடும்.

எல்யூஸிஸ் முன்னைக்கிப்போது மாறிவிட்டான். எதுவோ தெரியவில்லை—அவனுக்குள் ஏதோ ஒடிந்துவிட்டமாதிரியிருந்தது —புளித்துப் போய்விட்டமாதிரி இருந்தது. அவன் கெட்டவனல்ல. ஆனல் கெடுதியின் விதை அவனில் வீழ்ந்துவிட்டது. முளைத்துப் பலன் காட்டத் தொடங்கிவிடும். அவனுக்குச் சரியான வழி கற்றுத் தர துணிவில்லையா? தாயார் உதவி யிருக்கலாமே! அவள் அவனைத் திருத்தவில்லை. அவனுக்கு ஏதோ பெரும் பதவி கிட்டப்போகிறது என்று அவனைத் தூண்டிவிடுகிற மாதிரி இருந்தாள் இவள். அவளால் அவனை அனுசரித்து அவள் கணவனை எதிர்க்கக்கூடத் துணிவு இருந்தது. அதைத் தன்னுல் இயன்றவரையில் செய்தாள்.

அவளுடைய எதிர்ப்பு ஐஸக்கின் பொறுமையைப் பரி சோதித்தது. அவன் மனசில் ப்ரெடாப்ளிக் பற்றிய எண்ணம் நல்ல எண்ணமாகப்பட்டது. அதுதான் எல்யூஸிஸிற்குச் சிறந்த பிழைப்பு என்று அவன் தீர்மானித்துவிட்டான். அன்று அவன் அந்தப் பக்கமாக போகும்போது ப்ரேடாப்ளிக் எப்படி இருந்தது, என்ன பெறும் என்று மனதிற்குள் கணக்குப் போட்டுப் பார்த்துக் கொண்டான். நல்ல உழைப்பாளி கையில் இருந்தால் அந்தப் பண்ணையும் செழித்தோங்கும்.

"என் அது சரிப்படாது" என்று இங்கரைக் கேட்டான் அவன். "எல்யூஸிஸ் நல்வாழ்வு வாழ நான் அவனுக்கு உதவ வேண்டாமா? அது என் கடமை அல்லவா?"

"அது சரி. ஆனால் அவனிடம் உனக்கு பிரியமிருப்பது உண்மையானால் ப்ரேடாப்ளிக்கைப் பற்றி அவனிடம் எதுவும் சொல்ல வேண்டாம்" என்றாள் இங்கர்.

"ஓ! அப்படியா?"

"நம்மைப்போல இல்லை அவன். அவனுடைய உள்ளத்தில் பெரும் ஆசைகள் இருக்கின்றன."

ஐஸக்கிற்கும் இதுபற்றித் திடமாக எதுவும் சொல்லத் தெரியவில்லை. அதுபற்றிய பலஹீனத்தை அவன் அங்கீகரிக்கத் தயாராக இல்லை. தவிரவும் எல்யூஸிஸ் பற்றித் தன் திட்டத்தை வாய்திறந்து சொன்ன பிறகும் தோல்வியை ஒப்புக்கொள்ள வேண்டும் என்று வந்துவிட்டால் என்ன பண்ணுவது? சொல்லாதிருந்திருந்தால் பாதகமில்லை. இப்போது அதை விட்டுவிடுவதாக உத்தேசமில்லை அவனுக்கும்?

"நான் சொல்கிறமாதிரி அவன் செய்யத்தான் வேண்டும்?" என்று உரக்கக் கத்தினான் ஐஸக். இங்கருக்குக் காது செவிடு என்பது போலக் கத்தினான்: "பாரேன். என்னை முறைத்துப்பார். பாதகமில்லை, நீ என்ன சொன்னால் என்ன? நான் சொல்கிறபடி தான் அவன் செய்ய வேண்டும். ப்ரேடாப்ளிக் நல்ல இடம். கிராமத்துக்கு நடக்கும் மத்தியில் இருக்கிறது அந்தப்பண்ணை. அதை விடச் சிறந்த ஸ்திதி, நிலமை மனிதனுக்கு என்ன வேண்டும்? எனக்குத் தெரியவில்லை. இந்த மாதிரி ஒரு பிள்ளையை வைத்து கொண்டு நான் பட்டினிகிடக்க வேண்டியதுதான்! பட்டினி கிடந்து நான் செத்தால் நல்லதா—நீயே சொல்லு; என் உள்ளமும் ரத்தமும் போகிறதற்கு நேர் எதிராகவா என் மகன் போகவேண்டும்? என் பிள்ளைதானே அவன்!"

இங்கர் பதில் சொன்னாள்: "நீயே சொல்வது நல்லது என்று நினைக்கிறேன். நான் சொல்வதைக் கேட்கமாட்டான்."

அப்படியானால் சரி. ஐஸக்தான் குடும்பத்தின் தலைவன்! அதில் சந்தேகம் என்ன? அவனே சொல்லுவான். எல்யூஸிஸ் எதிர்த்துச் சொல்லட்டும் பார்க்கலாம். ஆனால் தோல்வியை எதிர்ப்பார்ப்பவன் போலப் பயந்துகொண்டு சொல்லத் தயங்கினான். "சரி, நானே சொல்லுகிறேன். எத்தனையோ வேலை எனக்கு. அது இது என்று மறந்துவிடுவேன். நீ ஞாபகப்படுத்து" என்றான்.

"சரி......" என்றாள் இங்கர், அவன் தயங்குவதைப் பார்த்து ஆச்சரியமடைந்தவளாக.

மீண்டும் வெளியேறுகிறுன் ஐஸக்—அதிக தூரம் போகவில்லை வெளி வயல்களில் வேலை செய்யப் போய் விடுகிறுன். வீட்டை விட்டுப் போய்விடுகிறுன். அவன் ஏதோ ரகசியங்கள் புரிந்து கொண்டிருக்கிறுன். தனியாக இருந்து சிந்திக்க விரும்புகிறுன் அவன். உண்மை இது தான்: கிராமத்திலிருந்து மூன்ருவது செய்திகூட ஒன்று கொணர்ந்திருக்கிறுன். மற்றதெல்லா வற்றையும் விடப் மிகப்பெரிய செய்தி இது. பிரம்மாண்டமானது. அது காட்டின் ஓரத்திலே காத்திருக்கிறது. சாக்கும் பலகையும் போட்டுத் தைத்து பத்திரப் படுத்தியிருக்கிறது; அதை திறந்து பார்க்கிறுன். பெரியதொரு இயந்திரம் அது. பார், நீலமும் சிவப்புமாக, பார்ப்பதற்கே ஆச்சரியமாக இருக்கிறது அது. எத்தனை பற்கள் ஐயா அதற்கு! கத்திகளும் ஏராளமாக இருக்கின்றன. லீவர்கள், சக்கரங்கள் மதப்புகள், ஆணிகள், மறைகளுடன் அது பிரமாதமாகத்தான் இருக்கிறது. ஒரு அறுவடை யந்திரம் அது. அந்தப் புது அறுவடை யந்திரத்துக் காகத்தான் அந்தப் புதுக் குதிரையை வாங்கி வந்திருக்கிறுன்.

அவன் முகத்திலே ஒரு ஆனந்த பாவம் படருகிறது. அந்த யந்திரத்தை எப்படி ஓட்ட வேண்டும் என்று கடைக்காரன் வாசித்துக் காட்டிய தாளை மீண்டும் ஞாபகப்படுத்திக் கொள்ளுகிறுன். ஒவ்வொன்ருக ஆதிமுதல் அந்தம் வரையில் ஞாபகப்படுத்திக் கொள்கிறுன். இங்கே ஒரு விசையைத் திருப்புகிறுன். அங்கு ஒரு ஆணியை இறுக்குகிறுன். எங்கெங் கெல்லாம் எண்ணெ போடவேண்டுமோ அங்கெல்லாம் போடுகிறுன். இது ஒரு சிகரம் அவன் வாழ்விலே—இதற்கீடான சமயம் வேறு ஏது? கையில் பேனுவை எடுத்து அதில் தன் பெயரைப் பேப்பரில் எழுதுவது—அதுவும் பெரிய விஷயம்தான். உண்மையே. அதே போல ஏர் ஒன்று வாங்கியபோது அதை ஓட்டியதும் பெரிய விஷயம்தான். அதில் எத்தனை தினுசான விசைகள் அடங்கி யிருந்தன. அது தவிர அவன் மரம் அறுக்கும் சாலையில் நிர்மாணித்திருந்த அந்த வளைந்த ரம்பமும் பெரியதொரு சாதனைதான்! மயிரிழை பிசகாமல் அறுக்கும் அது—சரியாக வைத்தால். அதெல்லாவற்றையும்விடப் பெரிது. ஆச்சரியமானது. இந்த அறுவடை யந்திரம். அதற்குள் எத்தனை விதவிதமான விசைகள் இருந்தன. இங்கரின் தையல் மெஷின் இதன்கிட்டே ஒரு சுண்டைக்காய்தான்!

அதைப் பிடித்து இழுத்தான். வயலில் குதிரைக்குப் பதில் தான் நின்று அதை இழுத்துக்கொண்டு போனுன். ஆச்சரியமான

வண்டி இது. அதை இதுவரை ரகசியமாக வைத்திருந்ததற்குக் காரணம் இதுவே. அது ஓடாமல் முதல் எடுப்பிலேயே ஒடிந்து விழுந்துவிட்டதானல்! ஒவ்வொரு விநாடியும் அது விழுந்துவிடப் போகிறதே என்கிற பயம்தான்! ஆனல் அப்படி ஒன்றும் நேர்ந்து விடவில்லை. இயந்திரம் வேலை செய்தது, புல் வெட்டியது. அப்படி அது வெட்டும் என்றுதானே வாங்கி வந்திருந்தான் அவன்? ஐஸக் வெகு நேரம் சிந்தனையில் ஆழ்ந்தவனுக நின்ருன். சூரியன் அஸ்தமித்துவிட்டது. மீண்டும் இயந்திரத்தை இழுத்துப் பார்த்தான். உண்மைதான் புல்லை ஜோராக வெட்டியது அது.

பனி பெய்யத் தொடங்கியது. பையன்கள் இருவரும் வெளியே வந்தார்கள் கையில் அறிவாள்களுடன். ஐஸக் வீட்டை அணுகி அவர்களிடம் சொன்ஞன்: "இன்று அறிவாள்கள் வேண்டாம். புதுக் குதிரைகள் ஓட்டி வந்து இதில் பூட்டுங்கள். பார்க்கலாம்."

பையன்களுக்குப் புரியவில்லை. "வண்டியும் வேண்டுமா" என்ருன் ஸிவெர்ட்.

"வேண்டாம்" என்று சொன்ஞன் ஐஸக். காட்டோரமாகப் போஞன். ரகசியம் பெரிய ரகசியம் லுல்லவா? பெருமையுடன் கம்பீர கதியில் நடந்தான். குதித்துக் குதித்துக்கொண்டு நடந்தான். தைரியமுள்ளவன், வீரன், தன் நாட்டைக் காக்க இப்படித்தான் நடப்பான். கையில் ஆயுதமில்லாது, ஆத்ம பலத்தை மட்டும் நம்பும் வீரன்போல ஒரு திமிருடன் நடந்தான்.

குதிரையுடன் பையன்கள் வந்தார்கள். யந்திரத்தைப் பார்த்தார்கள், திகைத்து நின்ருர்கள். அந்தப் பக்கத்திலே அதுதான் முதல் அறுவடை யந்திரம். நீலமும் சிவப்புமாக—மனிதனுடைய கண்களுக்கு மிகவும் இன்பமாக இருந்தது அது. குடும்பத்தின் தலைவன் அவர்களுடைய ஆச்சரியத்தைக் கண்டும் காணுதவன்போல இருக்கிருன். எவ்வளவு அலக்ஷியமாகப் பேச முடியுமோ அவ்வளவு அலக்ஷியமாக பேசுகிருன். ஏதோ சர்வ சாதாரணமான விஷயத்தைப் பற்றிப் பேசுவன்போல: "குதிரையை இதில் பூட்டு."

குதிரையைப் பூட்டி ஓட்டிஞர்கள். தகப்பன்தான் ஓட்டிஞன். ப்ர்ர்...என்றது யந்திரம். கட்டுக் கட்டாகப் புல்லை வெட்டிப் போட்டது அது. பையன்கள் கையில் எதுவுமில்லாமல் ஆனந்தமாகப் பின்ஞல் நடந்தார்கள். அவர்கள் செய்யவேண்டியது எதுவுமில்லை. யந்திரத்தை நிறுத்திவிட்டுத் திரும்பிப் பார்த்தான்.

வெட்டியது சரியாக இல்லை. இங்கு ஒரு ஆணியை முடுக்குகிறான். அங்கு ஒரு விசையைத் திருப்பிவிடுகிறான். யந்திரத்தின் கத்திகள் தரையில் ஒரு பக்கமாக வேலை செய்கின்றன. அப்படியும் யந்திரத்தின் வேலை திருப்திகரமாக இல்லை. கடகடவென்று சப்தம் செய்கிறதே தவிர வேலையைச் சரிவரச் செய்யவில்லை. தகப்பனும் பிள்ளைகளும் என்னவாக இருக்கும் என்று ஆலோசனை செய்கிறார்கள். அதைப் எப்படி ஓட்ட வேண்டும் என்று குறித் திருக்கிறத் தாளைக் கண்டுவிட்டான் எல்யூஸிஸ். "அதன்மேல் உட்கார்ந்து ஓட்டினால் கடகடவென்று சப்தம் செய்யாது" என்று வாசித்தான் எல்யூஸிஸ்.

"ஆமாம், ஆமாம், நானும் படித்தேன்" என்று பதிலளித் தான் ஐஸக். "பூராவும் படித்துவிட்டேன்" ஆஸனத்தில் ஏறி உட்கார்ந்து ஓட்டினான் ஐஸக். மீண்டும் புல் அறுக்கிறது, ஆனால் திடீரென்று டப்பென்று நின்று விடுகிறது. கத்திகள் வெட்ட வில்லை. "ட்ரோட்ரோ" என்று குதிரையை ஓட்டினான் "என்ன ஆயிற்று?" என்று பெருமையிழந்தவனாகக் கேட்டான் ஐஸக். அவன் முகத்திலே கவலைக் குறிகள் தோன்றின. மேலும் கீழும் பார்த்தான். தகப்பனும் பிள்ளையும் அதையே முழித்து முழித்துப் பார்க்கிறார்கள். ஏதோ பிசகிவிட்டது. எல்யூஸிஸ் ஓட்டுவதற்குத் தந்திருந்த புஸ்தகத்தைப் படிக்கிறான்.

"இதோ ஒரு ஆணி விழுந்து விட்டது!" என்று எடுத்துக் கொடுத்தான் ஸிவெர்ட்.

"ஓ! அதுதான் விழுந்து விட்டதா? அதான் பிசகு" என்றான் ஐஸக். "அதைத்தான் நானும் தேடினேன்?" ஆனால் அந்த ஆணியை எங்கு பொருத்துவது என்று தெரிய வில்லை. எங்கே அந்த ஓட்டை!

இப்போது எல்யூஸிஸின் 'சான்ஸ்' அந்தத் தாளில் எழுதி யிருந்ததை அவனைத் தவிர வேறுயார் படித்து அர்த்தம் சொல்ல முடியும்? அவனில்லாமல் என்ன செய்யமுடியும் அவர்களால்? ஓட்டையைத்தேடிக் காண்பித்தான்—அதையே காட்டிக் கொண்டு நின்றான் பல நிமிஷங்கள். "படத்தின்படி ஆணி இங்குதான் பொருந்தவேண்டும்!"

"ஆமாம் அங்கேதான்" என்றான் ஐஸக். "அங்கேதான் அதை முன்னர் போட்டிருந்தேன்." இழந்துவிட்ட மரியாதையைக் காப்பாற்றிக் கொள்ள உத்தேசித்தவன் போல. கீழே இன்னும் ஏதாவது ஆணிகிடக்கிறதா பார் என்றான். "இன்றென்று

இருக்கிறதாபார் — இருக்கவேண்டும்.'' சற்று யோசித்தான். "இன்னென்று கிடைக்கவில்லையா? சரி, அதன் இடத்தில் இருக்கும். பாதகமில்லை பார்க்கலாம்.''

மீண்டும் யந்திரத்தை ஓட்டுகிருன் ஐஸக்.

"இரு இரு'' என்ருன் எல்யூஸிஸ். "இது தவருகப் போட்டு இருக்கிறது'' கையில் படத்தை வைத்துக்கொண்டு சரியாகப் பார்த்தான் அவன். சட்டமும் விதிகளும் அவன் கையில் தானே இருந்தன. அவனிடமிருந்து தப்பிவிட முடியுமா? "அந்த விசை வெளிப்பக்கமாக மாட்ட வேண்டியதற்குப் பதிலாக, "உள் பக்கமாகப் போட்டிருக்கிறது! அது எஃகு விசை. வெளிப் பக்கமாக மாட்டினுல்தான் அது உபயோகப்படும்! இல்லா விட்டால் ஒவ்வொரு தடவையும் தெரித்து விழுந்து கத்திகளை உபயோகப்படாமல் செய்துவிடும். இதோ படத்தில் பார்.''

"அப்படியா?''

"என் கண்ணுடி வீட்டில் இருக்கிறது. கண் சரியாகத் தெரியாது என்ருன் ஐஸக். மற்ற எல்லாவற்றையும் பொருத்திச் சரிப்படுத்தினுன் எல்யூஸிஸ்.

ஐஸக் ஆசனத்தில் உட்கார்ந்து யந்திரத்தை ஓட்டுகிருன். "நீ வேகமாக ஓட்டவேண்டும். அப்பத்தான் அது புல்லைச் சரியாக வெட்டும். அப்படித்தான் எழுதியிருக்கிறது இதில் என்று எல்யூஸிஸ் சொன்னுன் :

ஐஸக் ஓட்டுகிருன். எல்லாம் சரிவர நடக்கிறது. ப்ர்ர் என்று யந்திரம் வெட்டுகிறது. அகலமான ஒரு பாதையைப் புல்லில்லாமல் செதுக்கிவிட்டது யந்திரம். அதை எடுத்து கட்டுக் கட்ட வேண்டியதுதான் பாக்கி. வீட்டிலும் அந்த யந்திரத்தின் சப்தம் காதில் விழுகிறது. ஸ்திரீகள் எல்லோரும் வந்து பார்கிருர்கள். ரிபெக்காவுக்கு நடக்கத் தெரியும்; ஆனுலும் அவளைக் கையில் தூக்கிக் கொண்டு வந்து நிற்கிருள் இங்கர். நாலு பெண்கள்— பெரியவர்களும் சிறியவர்களுமாக—அந்த ஆச்சரியத்தைப் பார்க்க வருகிருர்கள். ஒ! இது ஐஸக்கின் வெற்றி அவன் பெருமை கட்டுக் கடங்காது. எவ்வளவு பெரியவன் அவன்! தன் விடுமுறை ஆடைகளையே இன்னமும் அணிந்திருக்கிருன் அவன்; சிவப்புச் சட்டையும் அணிந்திருக்கிருன், வேர்வை ஊற்றுகிறது. நாலு பக்கமும் புல் தரையில் சுத்தமாகப் பாதை வெட்டுகிருன் அவன். புல்லை வெட்டிக் குவித்தது அந்த யந்திரம். ஸ்திரீகள் இருக்கிற

இடத்தின் பக்கமாக வந்தது யந்திரம். அவர்களுடைய ஆச்சரியம் அவர்களை ஊமையாக்கி விட்டது. ப்ர் ப்ர் ப்ர் என்கிறது அந்த யந்திரம்.

அதை நிறுத்திவிட்டு இறங்குகிறுன் ஐஸக். பூமியிலே நின்று அண்ணாந்து தன்னையும் தன் யந்திரத்தையும் பார்த்துக் கொண்டிருக்கிற அந்த மண் மனிதர்கள் என்ன சொல்லுகிறார்கள் என்று சற்றே செவி சாய்த்துக் கேட்க வந்தான் அவன். அவர்கள் சொல்லுவதற்கு வேறு என்ன இருந்தது. ஆச்சரியத்தால் அடாடா அடாடா என்றார்கள். ஒருவரை ஒருவர் பார்த்துப் பிரமித்து நிற்கிறார்கள்! அவனை விசாரிக்கிறார்கள். பெருமிதத்துடன் அவர்களுக்குப் பதில் அளிக்கிறான் ஐஸக். "இன்னும் கொஞ்சம் புல் வெட்டிவிட்டு வருகிறேன். நாளைக் காலையில் கட்டிப் போர் அடிக்கலாம்."

"சாப்பிட்டுவிட்டு செய்யக்கூடாது!" என்றாள் இங்கர்.

"வேறு வேலை இருக்கிறது!"

மீண்டும் யந்திரத்துக்கு எண்ணை போடுகிறான். விஞ்ஞான பூர்வமான வேலையல்லவா யந்திரத்துக்கு எண்ணை போடுவது! மீண்டும் ஏறி உட்கார்ந்து அதை ஓட்டுகிறான். புல் வெட்டுகிறான். கடைசியில் கால் வலிக்கிறது—பெண்கள் வீடு திரும்புகிறார்கள்.

சந்தோஷம் ஐஸக்குக்கு! ஸெல்லன்ரா பண்ணையிலே எல்லோருமே சந்தோஷமாகத்தான் இருக்கிறார்கள்.

அதி சீக்கிரமே பக்கத்து வீட்டுக்காரர்கள் வருவார்கள். ஆக்ஸெல் ஸ்ட்ராம் நாளைக்கே வந்துவிடுவான். ப்ரேடாப்ளிக்கிலிருந்து ப்ரேடும் வருவான்—அன்றே வந்தாலும் வருவான். அந்த யந்திரத்தை அவர்களுக்கெல்லாம் ஓட்டிக் காட்ட அவன் தயார். அதில் உள்ள விஷயங்களை எல்லாம் விவரித்துச் சொல்லக் கூடத் தயார்தான் அவன். அரிவாள் கொண்டு எந்த மனிதனால் இவ்வளவு நேர்த்தியாக வெட்ட முடியும்? பணம் அதிகம் தான்—நீலமும் சிவப்புமாக பார்ப்பதற்கு அமர்க்களமாக இருக்கிறது. விலைகொடுத்தால் தான் கிடைக்கும்.

அதிருஷ்டசாலி ஐஸக்.

மூன்றாவது தடவையாக எண்ணைபோட அவன் யந்திரத்திலிருந்து இறங்கும்போது அவன் சட்டைப் பையிலிருந்து அவன் மூக்குக் கண்ணாடி கீழே விழுகிறது. அவன் தற்பெருமை

தூளாகிறது! அந்தப் பையன்களும் அதைப்பார்த்துவிட்டார்கள். அந்தக் கண்ணுடி வீட்டிலிருக்கிறது என்ருனே—அவன் சட்டைப் பையிலேயேதான் இருந்தது இத்தனை நேரமும்? எல்யூஸிஸ் உதவியில்லாமல் அவனுல் எதையும் படித்திருக்க முடியாது, எழுதப் படிக்கத் தெரிவது நல்ல விஷயம்தான்—சந்தேகம் என்ன? தற்பெருமையை இழந்த ஐஸக் அதற்குப்பரிகாரமாக ஒரு தீர் மானம் செய்தான். இனி அவன் எல்யூஸிஸைக் கட்டாயப்படுத்த மாட்டான் — உழவனுகப் பண்ணையில் வேலை செய்யத்தான் வேண்டும் என்று வற்புறுத்தமாட்டான்.

அந்தக் கண்ணுடியைப் பார்த்ததாகவே அந்தப் பையன்கள் காட்டிக் கொள்ளவில்லை. அதைக் கவனியாதமாதிரியே இருந்து விட்டார்கள். ஸிவெர்ட் வேடிக்கையாகச் சென்னுன்: வா, நாம் போய் அரிவாள்களைத் தூக்கி ஏரியில் எறிந்துவிடுவோம். எந்திரம்தான் இருக்கிறதே! இனி அறிவாள் வேறு எதற்கு?" உண்மையில் விளையாட்டாகவே சொன்னுன் அதை.

## முதல் பாகம் முற்றும்

# நிலவளம்

## இரண்டாம் பாகம்

### 1

செல்லன்ரா என்பது மனித சஞ்சாரமில்லாத காடல்ல இப்போது அங்கே மனிதர்கள் வசிக்கிருர்கள்;—பெரியவர்களும் சிறியவர்களுமாக ஏழு பேர் வசிக்கிருர்கள். வைக்கோலுக்காகப் புல் வெட்டுகிற சமயத்திலே பலர் வந்து புதுசாக வந்திருந்த அந்த அறுவடை இயந்திரத்தைப் பார்த்துப் போனுர்கள். முதலில் வந்தது ப்ரேட் ஓல்ஸன்தான். ஆக்ஸெல் ஸ்டிராமும் வந்தான். பக்கத்துப் பண்ணையார்கள் பலரும் வந்தார்கள்—ஒருவர்பின் ஒருவராக, அந்நியர் பலர் வந்தார்கள்.—கிராமத்திலிருந்தும் கூடப் பலர் வந்தார்கள். குன்றுகளுக்கப்பாலிருந்து ஒலின் வந்தாள்—அழியாத ஒலின் அவள்.

தன் கிராமத்திலிருந்து செய்திகள் கொணர்ந்தாள் ஒலின். செய்திகள் இல்லாமல் ஒரு இடத்திலிருந்து இன்னெரு இடத்துக்கு வந்துவிடுவாளா ஒலின். கிழவன் ஸிவெர்ட்டின் கணக்குகளை எல்லாம் பார்த்து விட்டார்கள்—அவன் விட்டுப்போன சொத்து—ஒன்றுமில்லை. ஒன்றுமே இல்லை என்பது சந்தேகத்துக்கிடமில்லாமல் ஏற்பட்டுவிட்டது.

தன் உதடுகளை இறுக மூடிக்கொண்டு மாறிமாறி எல்லோரையும் பார்த்தாள் ஒலின். ஒருவரும் அதுபற்றிச் சிறிதும் பெருமூச்சு விடவில்லை—அவன் சொத்தில்லாததனுல் செல்லன்ராவின் கூரை விழுந்துவிடாது. எல்யூஸிஸ்தான் முதலில் சிரிக்கத் தொடங்கினுன். "உன் மாமா பெயர் உனக்குத்தானேடா வைத்திருக்கிறது?" என்று தன் தம்பியைக் கேலி செய்தான் அவன்.

"ஆமாம். ஆனுல் அவர் எனக்குத் தருவதை எல்லாம் உனக்கேதான் கொடுத்துவிட்டேனே!" என்ருன் ஸிவெர்ட் மெதுவாக.

"எத்தனையப்பா அவர் ஆஸ்தி?"

"ஐந்து அல்லது பத்தாயிரம்."

"தேலரா?" என்ருன் எல்யூஸிஸ். ஆச்சரியத்துடன். அன்று ஒரு நாள் ஸிவெர்ட் கேட்டமாதிரி.

இந்த விளையாட்டுப் பேச்சு ஒலனுக்குப் பிடிக்கவில்லை. இந்தச் சமயத்தில் இப்படிப் பேசுவது சரியல்ல என்று எண்ணி னுள் அவள். தனக்கு வரப்போகிறது என்று எண்ணியிருந்த தொகை கிடைக்காததுபற்றி அவளுக்கு அளவுகடந்த வருத்தம் தான். உண்மையில் ஸிவெர்ட் இறந்தபோது அவள் அழவே அழுதாளே! அவளையே ஏமாற்றிவிட்டான் அவன். எல்யூஸிஸுக் குத் தெரியாதா? அவன்தானே அவளுடைய உயிலை எழுதியவன் —ஒலனுக்கு இவ்வளவு சேரவேண்டும் என்று அவன் கைப்படத் தானே எழுதினன். அது எங்கே போயிற்று; கிழவயதில் அதை நம்பியிருந்தாளே அவள்?

பாவம்! ஒலனுக்கு மட்டுமாவது அவன் ஏதாவது வைத்து விட்டுப் போயிருக்கலாம். அவனிடம் பொருள் ஏதோ இருந்தது? அது கிடைக்கும் என்று அவள் இன்பக் கனவுகள் கண்டுகொண் டிருந்தாள்—ஆசைப்பட்டுக் கொண்டிருந்தாள். கெட்டவள்தான் அவள்—தவறு செய்து அதன் பலாபலன்களை மீறி ஏதோ வாழ்க்கை நடத்திக் கொண்டிருந்தாள் அவள். இல்லாத சின்னத் தனங்களெல்லாம் செய்துகொண்டே காலம் தள்ளினுள். வம்பு பேசுவதிலே திடமான சித்தம் கொண்டவள். அவள் வாயைக் கண்டு பயப்படாதவர்கள் இல்லை என்று சொல்லலாம். அவள் இன்னும் கேவலமாகிவிட முடியாது. சொல்ப ஆஸ்தி சேர்ந் திருந்தாலும் அவள் அப்படியேதானிருப்பாள்: ஒன்றும் பிரமாத மாக மாறிவிடமாட்டாள். ஆயுள் பூராவும் கையால் உழைத்துச் சாப்பிட்டவள்; நிறையக் குழந்தைகள் பெற்றுள். அவற்றிற்கும் தனக்குத் தெரிந்த கலைகள் பூராவையும் சொல்லிக் கொடுத்திருந் தாள். அவர்களுக்கு என்று பிச்சை எடுத்தாள், திருடினுள், எப்படியோ என்னவோ செய்து அவர்கள் பட்டினியால் வாடாமல் பார்த்துக் கொண்டாள். அவள் வழியில் அவள் தாய்தான். அரசியல்வாதிகளைப் போல விந்தையான சக்திகள் சில உண்டு அவளிடம். தன் நன்மையையும் தன் குழந்தைகளின் நன்மை யையும் பூரணமாக மனதில் கொண்டு அவற்றிற்காக உழைத்தாள். இந்த நிமிஷத்துக்கேற்றவாறு பேசுவாள். முடிவு தனக்குச் சாதகமாக இருப்பதற்கு ஏற்றபடி எதையும் திரித்துச் சொல்லு வாள். ஒவ்வொரு தடவையும் யாரையாவது பார்க்கப் போனல் சாமர்த்தியமாகப் பேசி ஒரு பாலேடைக் கட்டியையோ, ஒரு சுமை கம்பளியையோ வாங்கிக் கொள்ளாமல் கிளம்பி விடமாட்டாள். கொடுக்கத் தயாரக இல்லாதவர்களிடமும் நைஸாகப் பேசி

இனுமாகக் கறந்து விடுவாள். ஒருவரிடமும் ஈடுபாடில்லாமல், நுனிநாக்கால் பேசிக் கொண்டே வாழ்வைக் கழித்துவிடுவாள் —கிழவன் ஸிவெர்ட்டுக்கு அவள் ஒலீன் யுவதியாக அழகியாக இருந்தநாள் தெரியும். மற்றவர்களுக்கு அது எப்படித் தெரியும், இப்போது அவள் கிழவி, அழகே அற்றவள், க்ஷீணித்துக் கொண்டிருப்பவள். வெகு காலத்துக்கு முன்னமேயே அவள் இறந்திருக்கவேண்டும். அவளை எங்கே புதைப்பார்கள்? குடும்பம் என்று சொல்லிக் கொள்ளும்படியாக என்ன எங்கே இருக்கிறது அவளுக்கு? அந்நியர்களின் சவக்குழிகளுக்கு மத்தியில் திறந்த வெளியில் எங்கேயாவது அவளையும் புதைத்து விடுவார்கள். அவள் வாழ்க்கை வரலாறு ஒரே வரியில் அடங்கி விடும்— இருந்தாள், இறந்தாள். அவளும் யுவதியாக அழகியாக இருந்தவள்தான். சாவதற்கு முன் அவளுக்கென்று கொஞ்சம் சொத்துக் கிடைத்திருந்தால்....அவள் கடைசி நாட்களிலாவது கை தேய உழைக்காமல் வாழ்க்கையில் நிம்மதியாக இருந்திருக்க லாம். பிறருக்காகப் பாடுபட்டுப் பாடுபட்டுத் தேய்ந்து ஓடாகப் போன அவள் உடலும் உள்ளமும் ஓய்வு பெறுமற் செய்துவிட்டான் பாவிக் கிழவன் ஸிவெர்ட். ஒரு வருஷம் நிம்மதியாக இருக்க அவளுக்குக் கொடுத்து வைக்கவில்லையே; முன்போலவே வம்புபேசிக் குழையடித்து இனும் தேட வேண்டியிருக்கிறது. முன்போலவே யாரும் பார்க்காதிருக்கும்போது திருட்டுத் தனமாக எடுத்துக் கொள்ள வேண்டியதாக இருக்கிறது. அந்தப் பணம் கிடைத் திருந்தால்...? கிடைத்திருக்கக் கூடாது!

அவள் எதிர்பார்த்தபடி நடை பெறவில்லை. எல்யூஸிஸ் பார்த்த பிறகு கிழவன் ஸிவெர்ட்டின் கணக்குகள் சரியாக இருந்தன; ஆனால் நிலங்களும் வீடும் மீன்பிடிக்கும் வலைகளும் படகுகளும் குறைந்த பணத்தைச் சரிக்கட்டவே போதும்போதாத தாக இருந்தது. ஒலீனால்தான் இது இன்னமும் மோசமாகப் போகாமல் இருந்தது என்று சொல்லவேண்டும். பழைய காலத்தில் நடந்தது பலவற்றை ஞாபகம் வைத்துக் கொண்டு அது இது என்று கிழவன் ஸிவெர்ட்டின் ஆஸ்த்தியைக் காப்பாற்ற முயன்றாள் அவள். தனக்குச் சேரவேண்டிய தொகைக்காக அவள் வெகுவாகப் பாடுதான் பட்டாள். அவனைப்பற்றி அலக்ஷியமாகவும் பேசாதிருந்தாள் அவள். கடன் அவளுக் கென்று கொஞ்சம் எழுதிவைத்தான் அவன்? அவன்மேல் பிசகில்லை. கணக்குகளை முடிக்க சர்க்கார் அனுப்பிய இரண்டு

குமாஸ்தாக்களும்தான் அவளை ஏமாற்றிவிட்டார்கள் கடவுள் பார்த்துக் கொள்வார் என்றாள் ஒலைன்—அவர்களைத் தண்டிக்கா மல் விட்டு விடுவாரா கடவுள்!

ஸிவெர்ட்டின் உயிலில் தன் பெயர் கண்டிருந்தது கேலிக் கிடமாகப்படவில்லை அவளுக்கு என்பதும் ஆச்சரியம்தான். அதில் அவள் பெருமைப் பட்டுக்கொண்டாள். அவளைப் போல வேறு யார் அதில் இடம் பெற்றிருந்தார்கள்!

ஸெல்லன்ரா ஜனங்கள் அதைப் பெரிதாகப் பாராட்டவில்லை. ஒன்றுமில்லையா, சரி என்றார்கள். இங்கருக்குத்தான் அது ஆச்சரியமாக இருந்தது—அவளுக்குப் புரியவில்லை. மாமா ஸிவெர்ட் பணக்காரன் அல்லவா?

"பணக்காரனாகவே தான் இருந்திருப்பான் — அவர்கள் அவன் சொத்தைக் கொள்ளை யடிக்க வராமல் இருந்தால்!" என்றாள் ஒலைன்.

ஐஸக் தன் வயல்களில் வேலை செய்யக் கிளம்பிக்கொண்டிருந் தான். ஒலைன் சொன்னாள்: "நீ போகிறாயா? சரி, அப்படியானால் உன்னுடைய புது யந்திரத்தை இன்று நான் பார்க்க முடியாது! உன்னிடம் புது யந்திரம் ஒன்று இருக்கிறதாமே!"

"ஆமாம்."

"யாரோ சொல்லிக்கொண்டார்கள். நூறு அரிவாள்கள் செய்வதை அது ஒரு நொடியில் செய்து விடுகிறதாமே! கேள்விப் பட்டேன். உன்னிடம் ஸெல்லன்ராவில் இல்லாததென்ன ஐஸக்! நீ பணக்காரன் — பெரிய பண்ணைக்காரன் ஆகிவிட்டாய். எங்கள் பக்கத்தில் மதகுருவிடம் ஏர்க்கலப்பை ஒன்றிருக்கிறது. அதெல் லாம் இந்தப்புது யந்திரத்துக்கு முன் எம்மாத்திரம்?" என்றாள் ஒலைன்.

"இதோ ஸிவெர்ட் காட்டுவான் அந்த யந்திரத்தை உனக்கு என்னைவிட அதை ஓட்டுவதில் அவன்தான் கெட்டிக்காரன்." என்று சொல்லிவிட்டு வெளியேறினான் ஐஸக். அன்று நண் பகலில் ப்ரேடாப்ளிக்கையும் அதிலுள்ள சாமான்களையும் ஏலம் போடப்போகிறார்கள். அதற்குப் போகிறான் அவன். உடனே கிளம்பினால்தான் போய்ச் சேரமுடியும். அந்தப் பண்ணையை வாங்குகிற உத்தேசம் இல்லை ஐஸக்குக்கு — ஆனால் அதுதான் அந்தப் பிரதேசத்திலே முதல் ஏலம் — போகாதிருப்பது தவறு.

மான்லாந்தை அடைந்ததும் அவன் பார்ப்ரோவைப் பார்க்கிறான். பர்க்காதமாதிரித் தாண்டிப் போயிருப்பான். ஆனல் பார்ப்ரோ அவனைக் கூப்பிட்டு விசாரிக்கிறாள். ப்ரேடாப்ளிக் ஏலத்திற்குப் போகப்போகிறாயா என்று கேட்கிறாள். "ஆமாம்" என்று சொல்லிவிட்டு ஐஸக் மேலே நடக்கப்பார்க்கிறான். அவள் பிறந்த வீட்டை ஏலம் போடப் போகிறார்கள் — அதுபற்றி அவன் அதிகமாக எப்படிப் பேசமுடியும்?

"ஏலத்துக்குப் போகிறாயா" என்று மீண்டும் கேட்கிறாள் அவள்.

"ஏலத்துக்கா? ம்...போகலாம் என்றுதான் எண்ணினேன். ஆக்ஸெல் எங்கே? அவனை என்ன பண்ணிவிட்டாய் நீ?"

ஆக்ஸெலா? எனக்குத் தெரியாது. ஏலத்துக்குப் போவதாகத்தான் சொன்னான். அதிக விலை தராமல் ஏதாவது நல்லதாகக் கிடைக்குமோ என்று மற்றவர்களைப் போலவே அவனும் பார்க்கப் போயிருப்பான்."

பார்ப்ரோவை இப்போது பார்ப்பதற்கே அருவருப்பாக இருந்தது. வாயும் அதிகரித்துவிட்டது.

ஏலம் தொடங்கிவிட்டது. லென்ஸ்மாண்டு சாமான்களையும் விலைகளையும் கூவிக் கொண்டிருக்கிறான். கூட்டமாக மனிதர்கள் நின்று கொண்டிருக்கிறார்கள். அருகில் வந்து பார்க்கிறான்— அவர்களில் பலரை அவனுக்குத் தெரியாது. வேறு கிராமங்களிலிருந்தும் பலர் வந்திருக்கிறார்கள்—ஏலத்தை உத்தேசித்து. தன்னுடைய சிறந்த ஆடைகளை அணிந்துகொண்டு ப்ரேட் குறுக்கும் நெடுக்கும் போய்க் கொண்டிருக்கிறான். "வருக, ஐஸக்" என்று வரவேற்கிறான். "என் ஏலத்துக்கு வந்து என்னைக் கௌரவிப்பது என்று தீர்மானித்துவிட்டமாதிரி இருக்கிறது. மிக்க நன்றி. நீயும் நானும் அண்டை வீட்டுக்காரர்கள். இத்தனை வருஷங்களில் ஒரு தடவையாவது சண்டை போட்டிருக்கிறோமா?" ப்ரேட் கண்களில் நீர் ததும்ப அனுதாபம் மேலிடச் சொல்கிறான்: "ஒரு இடத்தில் பாடுபட்டு அதில் பயனடைந்து பழகியவன் அதை விட்டுக் கிளம்புவதென்றால் சிரமமாகத்தான் இருக்கிறது. அப்படி நடக்கவேண்டும் என்று விதி இருக்கும்போது மனிதன் என்ன செய்யமுடியும்?"

ஆறுதலாக ஐஸக் சொன்னான்: "இனிமேலாவது சௌக்கியமாக இருப்பாய். கவலைப்படாதே."

ப்ரேட் மூச்சுத் திணறுகிறவன் பேசுகிறமாதிரிப் பேசினான்: "நானே அப்படித்தான் நினைக்கிறேன். எனக்கு இது போகிறதே என்பதில் சிறிதும் வருத்தமில்லை. இதில் உழைத்து நிறையவே பலன் கண்டுவிட்டேன் நான் என்று சொல்வதற்கும் இல்லை. இனி வருகிற நாட்களில் நான் நிறையச் சம்பாதிக்கலாம். சிறுவர்கள் பெரியவர்களாகிக் கூண்டைவிட்டுக் கிளம்பத் துடிக்கிறார்கள். மனைவி கர்ப்பம்—இன்னொன்று பிறக்க இருக்கிறது—என்றாலும்......" தயங்கிவிட்டுப் பிறகு திடீரென்று ப்ரேட் விஷயத்தைத் தெளிவாகவே சொல்லுகிறான்: "தந்தி இன்ஸ்பெக்டர் வேலையையும் விட்டுவிட்டேன்."

"என்ன அது?" என்றான் ஐஸக்.

"தந்தி இலாகா வேலையையும் விட்டுவிட்டேன்."

"தந்தி இலாகா வேலையையுமா?"

"ஆமாம். வருகிற புது வருஷத்திலிருந்து அவர்கள் வேறு ஆள் பார்த்துக்கொள்ள வேண்டியதுதான். எப்படி நான் அதையும் பார்க்க இயலும். லென்ஸ்மாண்டிடமோ டாக்டரிடமோ நான் வேலைக்குப் போய்விட்டால் இதையும் சேர்த்து எப்படிப் பார்த்துக்கொள்ள முடியும்? அவர்களுக்கு அசௌகரியம் என்பதிருக்கட்டும். எனக்கு என்ன? எந்த வேலை செய்து கொண்டிருந்தாலும் அதை விட்டுவிட்டு, மலை ஏறி மடுவில் இறங்கித் தந்திக் கம்ப வேலை செய்ய ஓடவேண்டும் என்றால் சிரமமாகத்தானே இருக்கிறது? அதுவும் என்ன சம்பளம்? — அல்ப சம்பளம்! ப்ரேடுக்கு ஏற்ற வேலையா அது? தவிரவும் தந்தி இலாகா அதிகாரிகளுக்கும் எனக்கும் சண்டை வேறு வந்துவிட்டது—அதற்குப் பிறகும் அவர்களுடன் உழைப்பது எப்படி?" என்றான் ப்ரேட் ஓல்ஸன்.

லென்ஸ்மாண்டு வீட்டுக்கும் வயலுக்கும் உரக்க விலைகளைக் கூவிக் கொண்டிருக்கிறான். அதற்கு நியாயமான மதிப்பு என்று எண்ணுகிற சில நூறு க்ரோனர்களை எட்டியாகிவிட்டது. அதற்கு மேலே விலை கூறல் மிகவும் மெதுவாகவே நடக்கிறது—பத்து, ஐந்து க்ரோனர்களுக்கு மேல் அதிகம் கூறிக் கேட்பவர்களில்லை.

"ஏன்—அது யார்...ஆக்ஸெல் கேட்கிறான் விலை" என்று சொல்லிக்கொண்டே ப்ரேட் அவன் பக்கம் போனான் வேகமாக. "என் பண்ணையையும் வாங்கிக்கொள்ளப் போகிறாயா? உனக்கிருப்பது போதாதோ?" என்று கேட்டான்.

"எனக்காக இல்லை வேறு ஒருத்தருக்காக" என்றுன் ஆக்ஸெல் நேரடியாகப் பதில் சொல்லாமல்.

"அதில் எனக்கொன்றுமில்லை. நீ வாங்கினுல்தான் என்ன?"

லென்ஸ்மாண்டு இரண்டாவது ஏல மணி அடிக்கிறுன். மூன்றுவது மணி அடிக்கக் கையை ஓங்கும்போது, யாரோ நூறு க்ரோனர் அதிகம் கேட்கிறுன். லென்ஸ்மாண்டு தொகையைச் சொல்லி மணி அடித்தான்.

யார் வாங்கியது?

ஆக்ஸெல் ஸ்டிராம்—வேறு யாரோ ஒருத்தருக்காக!

லென்ஸ்மாண்டு அதைக் குறித்துக் கொள்கிறுள்.

"யாருக்காக வாங்குகிறுய்?" என்று ப்ரேட் ஆக்ஸெலைக் கேட்கிறுன். "எனக்கும் அதற்கும் சம்பந்தமில்லை. இருந்தாலும்..."

ஆனுல் அதற்குள் லென்ஸ்மாண்டும் இன்னும் நாலைந்து பேர்வழிகளும் சேர்ந்து பேசிக் கொள்கிறுர்கள்—பாங்கியிலிருந்து ஒருவன்; கடைக்காரன் ஒருவன், இன்னும் இரண்டொருவர். விஷயம் என்ன? கிடைத்த ஏலப் பணம் ப்ரேடின் கடன்களைத் தீர்க்கப் போதுமானதாக இல்லை! ப்ரேடைக் கூப்பிடுகிறுர்கள். அலக்ஷியமாகக் கவலையேயில்லாதவன் போலப் பேசுகிறுன் ப்ரேட். அவன் எதுவும் பேசவில்லை: தலையை மட்டும் தன் சம்மதத்தைத் தெரிவிக்கிற வகையில் ஆட்டுகிறுன். "இதற்கு அதிகமாகப் போகும் என்றுதான் நான் எதிர்பார்த்தேன்" என்கிறுன். திடீரென்று அவன் குரலை உயர்த்தி, அங்கு கூடியிருந்தவர்கள் எல்லோரையும் பார்த்துச் சொல்லுகிறுன்.

"லென்ஸ்மாண்டைச் சிரமப்படுத்தி இந்த ஏலத்தை நடத்தச் சொன்னேன். பண்ணையை ஏலம் விட்டாகிவிட்டது. இங்குள்ள சில்லறை சாமான்கள் சிலவற்றையும் விற்று விட விரும்புகிறேன்—வண்டி, ஆடுமாடுகள், வைக்கோல் அடிக்க ஒரு விளக்குமாறு, அரைக்கும் கல் யந்திரம் அவற்றுல் எனக்கென்ன பிரயோசனம்?"

இப்பொழுது சில்லரைச் சாமான்களின் ஏலம் தொடங்குகிறது. ப்ரேடைப் போலவே அவன் மனைவியும் கவலை எதுவும் இல்லாதவள் மாதிரித்தான் இருக்கிறுள். அவள் வயிறு பெரிதாக இருக்கிறது. அவள் ஒரு மேஜையில் காபி தயாரித்து வைத்திருக்கிறுள்—கேட்பவர்களுக்கு விற்கிறுள். ப்ரேட் காபி கேட்கிறுன். மற்றவர்களைப் போல அவனும் காசு தரவேண்டும்

என்கிருள் அவன் மனைவி. சிரித்துக் கொண்டே தன்னுடைய கிழிந்த கனமில்லாத பர்சை வெளியே எடுக்கிருன் ப்ரேட். காசு கொடுக்கிருன். "என் மனைவி லக்ஷிய மனைவி; செட்டும் கட்டுமாக இருக்கிருள்" என்ருன்.

அந்த வண்டி அதிக விலை பெருது, அது இவ்வளவுநாளும் திறந்த வெளியிலே கிடந்திருக்கிறது. அதன் பெறுமானத்தை விட ஐந்து க்ரோனர் அதிகமாகவே கொடுத்து ஆக்ஸெல் வண்டியையும் வாங்குகிருன். இப்படி எதற்காக பணத்தை விரயம் பண்ணுகிருன் அவன் என்று அங்குள்ளவர்களுக்குப் புரியவில்லை. ஆனல் அதற்குமேல் அவன் எதுவும் பேரம் பேசவில்லை.

பிறகு ஆடுமாடுகளை ஏலம் போட்டார்கள். ஏலத்தைமுன் கூட்டியே தீர்மானித்து அவற்றைத் தயாராக வைத்திருந்தான் ப்ரேட். பண்ணையையே ஏலத்துக்கு விட்டபிறகு ஆடுமாடுகளை வைத்துக் கொண்டு என்ன பண்ணுவது? அவனிடம் பசுக்கள் இல்லை. ஆரம்பத்தில் இரண்டு ஆடுகள் இருந்தன. இப்போது அவை நாலாகிவிட்டன. அவை தவிர இன்னும்ஆறு செம்மறி யாடுகள் இருந்தன. குதிரை இல்லை.

காதுகள் வளைந்திருந்த ஒரு ஆட்டை ஐஸக் வாங்கினன். ப்ரேடின் குழந்தைகள் அந்த ஆட்டை வெளியே கொணர்ந்ததும் அதற்கு விலை கூறத்தொடங்கினன் ஐஸக். ஜனங்கள் அவனை ஆச்சரியத்துடன் பார்த்தார்கள். ஸெல்லன்ராவின் சொந்தக் காரனன ஐஸக் பணக்காரன்.—அவனுக்கு எதற்காக இந்த ஆடு? அவனிடம் இல்லாத ஆடுகளா? ஒரு நிமிஷம் காபி விற்பதை நிறுத்தி விட்டு ப்ரேடின் மனைவி சொல்கிருள்: "நீயே வாங்கு அதை ஐஸக். அது கிழட்டு ஆடுதான். ஆனல் அது வருஷத்துக்கு இரண்டு மூன்று என்று குட்டிகள் ஈனுகிறது" என்ருள்.

அவளை நேருக்கு நேர் நோக்கிவிட்டு ஐஸக் சொன்னன்: "அது தெரியும் எனக்கு? அந்த ஆட்டை இதற்குமுன் நான் பார்த்திருக்கிறேன்."

ஒரு கயிற்றில் கட்டி அந்த ஆட்டை இழுத்துக் கொண்டு ஏலம் முடிந்தபிறகு ஆக்ஸெல் ஸ்டிராமுடன் திரும்பினன் ஐஸக். ஆக்ஸெல் உதடுகளை இறுகமூடிக்கொண்டு, எதையோபற்றிச் சிந்திப்பவன் போலப் பேசாதிருக்கிருன். அவன் கவலைப் படும்

படியாக எதுவும் இல்லையே என்று எண்ணுகிருன் ஐஸக். அவன் பயிர்கள் நன்ருக இருக்கின்றன; வைக்கோலைப் போர் அடித்து விட்டான்; வீட்டிற்குள் மரப் பலகைகள் அடிக்கவும் தொடங்கி விட்டான். ஆக்ஸெல் ஸ்டிராம் கவலைப்பட அவசியம் என்ன? சற்று மெதுவாகத்தான் நடந்தது எல்லாம். ஆனல் அதனல் என்ன?

"ஆகவே நீ ப்ரேடின் பண்ணையையும் வாங்கி விட்டாய்? அதையும் நீயே பார்த்துக் கொள்ளப் போகிருயா?" என்று கேட்டான் ஐஸக்.

இல்லை. எனக்காக இல்லை. வேறு ஒருவருக்காக வாங்கு கிறேன்."

"ஓ!"

"நான் கொடுத்த விலை அதிகமா?"

"அதிகம் என்று சொல்வதற்கில்லை. சரியானபடி அதைக் கவனித்து உழுது பயிரிட்டு உழைத்தால் பலன் தரும்."

"ஹெல்கேலாந்திலிருக்கும் என் சகோதரனுக்காக வாங்கி னேன்."

"ஓ! அப்படியா!"

"பிறகு நான் நினைத்தேன்—அதை நானே எடுத்து கொண்டால் என்ன என்று."

"மாற்றிக்கொள்ளலாம், என்று எண்ணுகிருயா?"

"பார்ப்ரோவுக்குத் திருப்தியாக இருக்கும் என்பதற்காகத் தான் பார்க்கிறேன்."

"உண்மைதான்."

வெகுதூரம் மௌனமாக நடந்தார்கள். பிறகு ஆக்ஸெல் சொன்னன்: "அந்தத் தந்தி இலாகா வேலையைக்கூட என்னை ஒப்புக்கொள்ளச் சொல்லித் தொந்தரவு செய்கிருர்கள்."

"ஓஹோ! தந்தி இலகாவா? ப்ரேட் அதையும் விட்டுவிட்ட தாகச் சொன்னன்."

"ம......ம..." என்று சிரித்தான் ஆக்ஸெல். "அப்படியல்ல அது, ப்ரேடை அவர்கள் போகச் சொல்லிவிட்டார்கள்."

ப்ரேடை இப்படி அலக்ஷியமாக ஒதுக்கிவிடுவதாக உத்தேச மில்லை ஐஸக்குக்கு. "தந்தி இலாகா வேலை செய்வதும் சிரமம் தான்."

"புது வருஷம் வரையில் அவன் இருக்கலாம்—அதற்குள் அவன் வேலை திருப்திகரமாக இல்லை என்றால் அவனைப் போகச் சொல்லிவிடுவார்கள். நோட்டீசு கொடுத்திருக்கிறார்கள்."

"ம்...ம்..."

"நான் எடுத்துக்கொள்வது சரி என்று எனக்குத் தோன்று கிறது."

ஐஸக் சிறிதுநேரம் யோசித்தான் பிறகு, "பணம் தருகிறார்கள் சரிதான். இருந்தாலும்......"

"எனக்கு அதிகப் பணம் தருவதாக சொல்லுகிறார்கள்."

"எத்தனை?"

"இரண்டு பங்கு."

"இரண்டு பங்கு என்றால் இது தீர யோசித்து முடிவு செய்ய வேண்டிய விஷயம்தான்" என்றான் ஐஸக்.

"ஆனால் இப்போது தந்தி வரிசையும் சற்று அதிகம். எனக்கே தெரியவில்லை. எது நல்லது என்று. உன் பண்ணையில் இருக்கிறமாதிரி இங்கு அவ்வளவு மரமில்லை—வெட்டி விற்றுப் பணம் பண்ண. பணமில்லாமல் அவசியமான சாமான்களை வாங்குவது எப்படி? இங்கு என் பண்ணையில் எவ்வளவோ சாமான்கள் தேவையாகின்றன. அதையெல்லாம் வாங்காமல் என்ன பண்ணுவது? இங்கு ஆடுமாடுகளோ வேறு விளை பொருள்களோ விற்பதற்குக் கிடைக்கவில்லை. தந்தி இலாகாவில் வேலை கிடைத்தால் கையில் கொஞ்சம் பணம் கிடைக்குமே என்று பார்க்கிறேன்."

ப்ரேட் இந்தவருஷம் சரிவர வேலை செய்து வேலையைக் காப்பாற்றிக்கொள்வான் என்று இருவருக்கும் நம்பிக்கையில்லை.

மேன்லாந்தை அடைந்ததும், ஒலைன் அங்கிருப்பதைக் கண்டார்கள். குண்டாகப் புழுப்போலக் கொழுத்தக் கிழவி அவள்—வயசு எழுபதுக்கு மேலாகிவிட்டது—இருந்தும் அவள் ஒரு பண்ணையிலிருந்து இன்னொன்றுக்கு வம்பளந்துகொண்டும் போய் வந்துகொண்டு மிருந்தாள். குடிசையில் உட்கார்ந்துகொண்டு காப்பி சாப்பிட்டுக் கொண்டிருக்கிறாள். இருவரும் வந்ததைக் கண்டதும், எழுந்து அவர்களை வரவேற்றாள்.

"வருக ஆக்ஸெல், வருக. எலம் எல்லாம் சரிவர நடந்ததா? உன்னையும் பார்ப்ரோவையும் பார்ப்பதற்கு வந்தேன். நேர்த்தி

யாகவே இருக்கிறது உன் பண்ணை. புது வீடும் கட்டிக்கொண்டிருக்கிறுய்! நாளுக்குநாள் பணக்காரனுகிக் கொண்டிருக்கிறுய்! என்ன ஐஸக்—நீ ஆடா வாங்கினுய்?"

"ஆமாம். அந்த ஆட்டை உனக்கும் தெரியுமோ—இல்லையா?"

"எனக்கா அப்படியா?"

"வளைந்த கொம்புகளுடன்—இந்த ஆடு......பாரு" என்றுன் ஐஸக்.

"வளைந்த கொம்புகளா? நீ என்ன சொல்லுகிறுய்? பிறகு என்ன? நான் என்ன சொல்ல வந்தேன் என்றுல்—ப்ரேடினுடைய பண்ணையை யார் வாங்கினுர்கள்? உனக்கு அண்டையில் உள்ள பண்ணையில் யார் குடி வருகிறுர்கள்? பாவம், பார்ப்ரோ உட்கார்ந்து அழுதுகொண்டிருக்கிறுள் — அது இயற்கைதான். ஆனுல் அவளுக்கென்ன?—மேன்லாந்தில் புது வீடும் இடமும் கிடைத்துவிட்டது.........வளைந்த கொம்புகளா? நான் வளைந்த கொம்புகளுடன் எத்தனையோ ஆடுகளைப் பார்த்திருக்கிறேன். ஆமாம் ஐஸக்—அந்த யந்திரம் அதை என்னவென்று சொல்வது போ! எனக்கு சொல்லத் தெரியவில்லை! அதற்கு என்ன விலை கொடுத்தாய்? கேட்டுத்தான் என்ன பிரயோசனம்? நிறையக் கொடுத்திருப்பாய் —— அதுவரை எண்ணக்கூட எனக்குத் தெரியாது! ஆக்ஸெல்—நீயும்தான் பார்த்திருப்பாயே! நான் சொல்வது உனக்கும் தெரியும்! ஏதோ பழங்காலத்து பைபிள் கதையில் நடக்கிறமாதிரி இருந்தது!" என்று பொறிந்து தள்ளினுள் ஒலைன் மூச்சுவிடக்கூடத் தாமதியாமல்......

வைக்கோல் எல்லாம் சேர்த்துப் போர் போடுகிற வேலை முடிந்த பிறகு எல்யூஸிஸ் நகரத்துக்குத் திரும்ப ஏற்பாடுகள் செய்யத் தொடங்கினுன். வருகிறேன் என்று என்ஜினியருக்குத் தெரிவித்தான். ஆனுல் என்ஜினியர் எழுதிய பதில் ஆச்சரியமாக இருந்தது. காலம் சரியாக இல்லை என்றும், எல்யூஸிஸ் இல்லாமலேயே தான் ஆபீஸை நடத்தவேண்டியிருக்கும் என்றும் எழுதியிருந்தான். குமாஸ்தாவுக்குப் பணம் தருவதற்குப் போதிய வரவு வரவில்லை என்றுன் என்ஜினியர்.

கடவுளே! ஆனுல் என்ஜினியருக்கு ஆபீஸ் குமாஸ்தா எதற்கு? காட்டிலிருந்த இந்த நாட்டுப்புறத்தான்களுக்காக அவன் ஏதோ சொல்லி வைத்தான். தவிரவும் அப்போது பையன்

சிறுவனாக இருந்தான்—கூப்பிட்ட குரலுக்கு ஏன் என்று கேட்டுக் கொண்டு ஆபீஸில் இருந்தான். ஏதோ அவன் செலவுக்குக் கொடுத்துவந்தால் போதுமானது என்றிருந்தது. பையன் இப் போது வளர்ந்துவிட்டான்—முழுச் சம்பளம் போட்டுக் கொடுத்தாக வேண்டுமே !

என்ஜினியர் மேலும் எழுதியிருந்தான் : “ஆனால் நீ வந்தால் உனக்கானது நான் செய்கிறேன். கொஞ்சம் சிரமம்தான். நல்ல வேலையாக ஏதாவது பார்த்து ஏற்பாடு செய்ய முயலுகிறேன். அன்புடன் !!

எல்யூஸிஸ், நகருக்குத் திரும்புவது என்று நிச்சயமாகி விட்டது. அதைப்பற்றிச் சந்தேகம் என்ன? இங்கே நாட்டுப் புறத்தில் இருந்து அவன் என்ன பண்ணுவது ? அவன் உலகில் முன்னேற வேண்டாமா ? நிலைமை மாறிவிட்டது என்பதுபற்றி அவன் வீட்டிலுள்ளவர்களிடம்கூடச் சொல்லவில்லை. சொல்லி என்ன பிரயோசனம் ? உண்மையில் அதுபற்றி அவனுக்கு மனசில் வருத்தம்தான்.

அதென்னவோ, அவன் எதுவும் சொல்லவில்லை. மீண்டும் ஸெல்லன்ரா வாழ்க்கை அவனை ஆட்கொண்டது. திருப்தி தராத சாதாரணமான வாழ்வு அது. நேர்த்தியான உணர்ச்சிகளுக்கு அதில் இடமில்லை. கனவு லோகம் அது. ஆடம்பரத்துக்கு அங்கு எவ்வித இடமும் இல்லை. முகம் பார்க்கும் கண்ணாடியை உபயோகப்படுத்தக்கூட அங்கு அவசியம் நேருவதில்லை. நகர வாழ்க்கையினால் அவன் வாழ்க்கை வரம்பு விரிந்துவிட்டது. அவன் மற்றவர்களைவிட நேர்த்தியானவன் ஆகிவிட்டான். மற்ற வர்களைவிட அதிக பலஹீனமுள்ளவனாகி விட்டான். எங்கும் அவனுக்கு இடமில்லை என்கிறமாதிரி அவனுக்கு ஒரு உணர்ச்சி தோன்றியது. பின்ஸிட் பூண்டின் வாசனை அவனுக்கு மிகவும் பிடித்திருந்தது—அதைச் சொல்லிக் கொள்ளவே அவனுக்கு வெட்கமாக இருந்தது. குடியானவனின் வாழ்க்கையும் ஒரு வாழ்க்கையா ? காலையில் பெண்கள் பால் வட்டாவில் பால் கறப்பது ஆனந்தமாக இருக்கிறது. கேள்; பால் பீச்சுகிற சப்தம் எவ்வளவு ஆனந்தமாக இருக்கிறது! இன்னிசை அது! நகரில் பாண்டு வாத்தியங்கள் முழங்கலாம்—கப்பல் சங்குகள் ஊதலாம்—ஆனால் இந்த இன்பம் வருமா? ......அதெல்லாம் சரிதான். இருந்தாலும் நகர வாழ்க்கைதான் சிறந்த வாழ்க்கை என்ற தீர்மானம் உறுதிப்பட்டது எல்யூஸிஸிற்கு.

ஸெல்லன்ராவில் யாரும் உணர்ச்சிகளை அதிகமாக வெளிக் காட்டுவதென்பது பழக்கமில்லை. விடைபெற்றுக் கொண்டு கிளம்புகிற நேரத்தைப்பற்றி வெகுவாகப் பயந்தான் எல்யூஸிஸ், நகருக்குப் போக அவனுக்குப் போதிய சலுகைகள் கிடைத்தன. மறுபடியும் அவனுடைய அம்மா அவனுக்குப் போதுமான— உண்மையில் அதிகமாகவோ துணிமணிகள் தந்திருந்தாள். கிளம்பும்போது அவனுக்குப் பணம் கிடைக்க ஏற்பாடு செய் திருந்தான் அவன் தகப்பன். பணம்—பணம்கூடவா இருந்தது ஐஸக்கிடம்? இருந்தது. அவனுக்குப் பணம் தருவது இதுதான் கடைசித்தடவை—அதற்குமேல் அவசியம் கூட இராது. அவன் தான் சம்பாதித்துப் பணக்காரனாகி விடுவது என்கிற சித்தத் துடன் நகருக்குக் கிளம்பிக் கொண்டிருந்தானே?

"ம்......" என்றான் ஐஸக்.

வீட்டிலே ஒரு சோகமும் துயரமும் குடி புகுந்தது போல இருந்தது. ஆளுக்கொரு கோழிமுட்டை சாப்பிட்டார்கள். அண்ணனுடைய சாமான்களைத் தூக்கிக் கொண்டு அவனுடன் கிராமம் வரையில் போகத் தயாராக இருந்தான் ஸிவெர்ட். எல்யூஸிஸ் விடைபெற்றுக் கொண்டு கிளம்புவதுதான் பாக்கி.

முதலில் லெபால்டினிடம் தொடங்கினான். "குட்பை" என்றான். அவள் பதிலுக்கு—தைரியமாகவே நிதானமாகவே சொன்னாள். அதேபோல வேலைக்காரி ஜென்ஸினும் சொன்னாள் —நூல் நூற்றுக் கொண்டே. ஆனால், அவர்களிருவரும் அவனையே பார்த்துக் கொண்டு பதில் சொன்னது என்னவோ போலிருந்தது எல்யூஸிஸிற்கு. அவன் கண்கள் சற்றே சிவந்திருந் தனவோ என்னவோ! தாயாருடன் கைகுலுக்கினான். அவள் பகிரங்கமாகவே அழுதாள். அழுதால் அவனுக்குக் கோபம்வரும் என்று தெரிந்திருந்தும் அழுதாள். "குட்பை! கட...வுள் உன்னை ஆசீர்வதிப்பாராக" என்றாள். தகப்பனுடன் விடைபெற்றுக் கொள்வதுதான் சிரமம்—அதிகச் சிரமம் அதுதான் எல்லா விதங்களிலும்அது சிரமம்தான். என்ன உழைப்பு உழைத்தான் அவன்! அடேயப்பா—என்ன நன்மனம் படைத்தவன் அவன்! அந்தக் குழந்தைகளை அவன் கையிலேந்தி தோளில் தூக்கிக் கதை சொல்லி அறிவு புகட்டி வளர்ந்தவன் அல்லவா? வயல் களிலும் வரப்புகளிலும் ஆகாயத்திலும் பூமியிலும் நடப்ப தெல்லாவற்றையும் பற்றி அவன் எத்தனை சொல்லியிருப்பான். அதெல்லாம் நடந்து அதிக நாளும் ஆகிவிடவில்லையே! கண்ணாடி

ஜன்னலண்டை நிற்கிறான் ஐஸக். திடீரென்று திரும்புகிறான். எல்யூஸிஸின் கையைப் பிடித்துக் குலுக்குகிறான். அவசரமாக, கோபமாக "சரி, போய்வா அடாடா! அதோ குதிரை லாயத்திலிருந்து தப்பிவந்து விட்டதே!" என்று சொல்லிக் கொண்டே குதிரையைத் துரத்திக் கொண்டு போய் விடுகிறான்! ஓ! அந்தக் குதிரையைச் சற்று நேரத்திற்கு முன் அவிழ்த்து விட்டது அவனே தான். போக்கிரி ஸிவெர்ட்டுக்கும் அது தெரியும். அப்பாவைப் பார்த்துக் கொண்டே தனக்குத்தானே சிரித்துக் கொள்கிறான். ஸிவெர்ட் குதிரையைப் பற்றி என்ன கவலே? விடை பெற்றுக் கொள்ளுதல் முடிந்து விட்டது.

மீண்டும் அவன் தாய் வாசல் வரையில் வந்து "குட்டை, கடவுள் உன்னை ஆசீர்வதிக்கட்டும்" என்கிறாள். அவனிடம் எதையோ கொடுக்கிறாள். "இதை எடுத்துக்கொள். நன்றி சொல்லாதே—இதற்கு நன்றி சொல்லக்கூடாது என்று உன் அப்பா உத்தரவு. எழுத மறந்துவிடாதே! அடிக்கடி கடிதம் எழுது!"

இருநூறு க்ரோனர்கள்.

எல்யூஸிஸ் வயல்பக்கம் திரும்பிப் பார்த்தான். அவன் தகப்பன் வயலில் குனிந்த தலே நிமிராமல் ஏதோ முளை அடிப்பதில் ஈடுபட்டிருந்தான் — அனாவசியமான ஒரு வேகத்துடன் முளையை ஓங்கி ஓங்கி அடிப்பதில் ஈடுபட்டிருந்தான்.

சகோதரர்கள் இருவரும் கிளம்பினார்கள். வழியிலே மேன் லாந்து வந்தார்கள். பார்ப்ரோ வாசலில் நின்றுகொண்டிருந்தாள். அவர்களை உள்ளே அழைத்தாள்.

"நீ மீண்டும் நகரத்துக்குக் கிளம்பிவிட்டாயா எல்யூஸிஸ்? அப்படியானால் உள்ளேவந்து ஒரு கப் காப்பி சாப்பிட்டுவிட்டுப் போ."

குடிசைக்குள் போகிறார்கள். எல்யூஸிஸ் காதல் வசப்பட்டவனைமாதிரி நடந்துகொள்ளவில்லை. ஜன்னலில் இருந்து குதித்தோ விஷம் அருந்தியோ உயிரை விடுவதாக அவன் எண்ணக்கூட இல்லை. தன் மேல்க் கோட்டைப் பிரித்து மடியில் போட்டுக் கொள்ளுகிறான் — அதன் உள்புறம் தைத்திருக்கிற பட்டும், வெள்ளிடிக்கட்டும் தெரியும்படியாக அதை வைத்துக் கொள்ளுகிறான். தலையைக் கைக்குட்டையால் துடைத்துக் கொள்ளுகிறான்: "நேர்த்தியான தினம் இல்லையா?" என்கிறான் நகரத்து பாணியில்.

பார்ப்ரோவும் அழகை இழந்தவளாகக் காணப்படவில்லை. ஒரு கை விரலில் வெள்ளி மோதிரமும், இன்னொரு கை விரலில் தங்க மோதிரமும் அணிந்திருக்கிருள் அவள். கழுத்திலிருந்து பாதம்வரையில் வருகிற ஒரு மேல் ஆடை அணிந்திருந்தாள். காப்பி தயார்செய்து கொடுத்தாள். அவர்கள் குடித்துக்கொண் டிருக்கும்போது ஒரு வெள்ளைத் துணியில் எம்பிராய்டரி போடு கிருள்—சிறிது நேரத்துக்கெல்லாம் அதை எடுத்து வைத்து விட்டு ஒரு சின்னச் சட்டையில் கழுத்துப்பக்கம் ஏதோ தைக் கிருள். அவர்கள் வந்ததுபற்றி பார்ப்ரோ அதிகமாகக் கவலைப் பட்டதாகக் காட்டிக் கொள்ளவில்லை. நல்லதுதானே! அவர்கள் இயற்கையாகப் பேசுகிருர்கள். எல்யூஸிஸ் நகரத்து மனுஷன் மாதிரி மேலெழுந்தவாரியாக, கெட்டிக்காரத்தனமாகப் பேசுகிருன்.

"ஆக்ஸெலே என்ன செய்துவிட்டாய்?" என்று கேட்கிருன் ஸிவெர்ட்.

"எங்கேயாவது வேலை செய்துகொண்டிருப்பான்" என்கிருள் பார்ப்ரோ. "இந்தப் பக்கத்தில் இனிப் பல நாள் உன்னைப் பார்க்கமுடியாது என்று எண்ணுகிறேன்" என்ருள் எல்யூஸிஸிடம்.

"பல நாள் ஆகும்."

"நகரத்தில் பழகிவிட்டவர்களுக்கு ஏற்ற இடமில்லையே இது" என்ருள் பார்ப்ரோ. "நானும் கிளம்பி உன்னேடு நகரத் துக்கு வந்துவிட்டால் தேவலை என்று எண்ணுகிறேன்."

"நிஜமாகவா?"

"நிஜமாகவா? நகரவாசம் என்ருல் என்ன என்று எனக்குத் தெரியும். தவிரவும் நான் பெரிய பெரிய நகரங்களில் வசித்திருக் கிறேன். அந்த வாழ்வு எனக்குப் பிடித்திருந்தது. இங்கே இந்த நாட்டுப்புறத்தில் என்ன இருக்கிறது?"

"நீ பெர்கனில் கூட வசித்திருக்கிருய்" என்ருன் எல்யூஸிஸ். அவளுடைய குரல் அவனுக்குப் பிடிக்கவில்லை. பொறுமையே யற்றவள் அவள்.

"படிப்பதற்கு பேப்பர் இருப்பதனுல் இங்கே என்னுல் காலந் தள்ள முடிகிறது. அது கூட இல்லாவிட்டால் ஒரு நாள்கூட நான் இங்கு தங்கமாட்டேன்" என்ருள் பார்ப்ரோ.

"ஆக்ஸெலைப் பற்றி என்ன? மற்றதெல்லாம் எப்படிப் போவது?"

"அதைப்பற்றி எனக்கென்ன கவலை. உன்னைப் பற்றிய விஷயம் என்ன? நகரில் உனக்காக யாராவது ஒருத்தி காத்திருப்பாள்."

பெருமையாக, படாடோபமாகப் பதில் சொல்ல எல்யூஸிஸுக்கு ஆசைதான். இருக்கலாம் — தொப்பி யணிந்த அழகான பணக்காரச் சீமாட்டி காத்திருக்கிறாள் என்று சொல்ல ஆசைதான். ஸிவெர்ட் அங்கிருந்த காரணத்தினால் அவன் அப்படிச் சொல்ல இயலவில்லை. "அசட்டுத்தனமாகச் சொல்லாதே!" என்பதற்கு மேல் வேறு எதுவும் சொல்லவில்லை.

"ஹோ! அசட்டுப் பேச்சா? அனால் மேன்லாந்து மக்களிடமிருந்து நீ வேறு என்ன எதிர்பார்க்க முடியும்? நாங்கள் உன்னைப் போல கெட்டிக்காரர்களா?" என்றாள் பார்ப்ரோ குத்தலாக.

அவள் எப்படியாவது போகட்டும். எல்யூஸிஸுக்கு அதுபற்றி என்னகவலை. அவள் முகம் அழக்காகக் கூட இருந்தது. ஒன்றும் அறியாத அவன் கண்களுக்குக்கூட அவள் நிலை தெளிவாகவே தெரிந்தது.

"சிதாரில் ஒரு பாட்டுப் படியேன்" என்றான்.

"மாட்டேன்" என்றாள் பார்ப்ரோ சுருக்கமாக. "நான் என்ன சொல்ல வந்தேனென்றால்...ஸிவெர்ட், நீ வந்து ஆக்ஸெலுக்கு ஒரு நாள் உதவி செய்யேன்—வீட்டைக் கட்ட. கிராமத்திலிருந்து திரும்பும்போது நாளைக்கே நீ இங்கு உதவி செய்யேன்" என்றாள்.

ஒரு நிமிஷம் யோசித்தான் ஸிவெர்ட். "முடியும், ஆனால் வேலை செய்வதற்கான என் துணிகளைக் கொண்டு வரவில்லையே!"

"இன்று மாலை உன் வீட்டிலிருந்து உன் துணிகளைக் கொணர்ந்து வைத்துவிடுகிறேன்—நாளைக் காலை நீ இங்கு வேலை செய்யலாம்."

"சரி, அப்படியே செய்."

பார்ப்ரோ ஆவலுடன், அனாவசியமான ஆவலுடன் சொன்னாள்: "ஓ! நீ வந்து உதவினால் நல்லது. கோடை அநேகமாக முடிந்து விட்டது. மழை தொடங்குமுன் வீட்டை நிர்மாணித்துக் கூரையை வேய்ந்துவிட்டால் தேவலை. ஆக்ஸெல் உன்னைக் கேட்க வேண்டுமென்று வெகு நாட்களாகச் சொல்லிக் கொண்டிருக்கிறான். என்னவோ கேட்காமலேயே போய்விட்டது. உன்னால் மிகவும் உதவியாக இருக்கும்."

"என்னாலான வரையில் உதவுகிறேன்" என்றான் ஸிவெர்ட்.

அது தீர்மானமாய் விட்டது.

இப்போது எல்யூஸிஸிற்குக் கோபம் வந்தது. பார்ப்ரோ கெட்டிக்காரிதான். சாமார்த்தியமாகப் பேசி ஸிவெர்ட்டின் உதவியைக் கேட்டுப் பெற்றுக் கொண்டு விட்டாள். ஆக்ஸெலுக்கும் தனக்கும் லாபகரமாக ஏதோ பேசி முடித்துக் கொண்டு விட்டாள். ஏதோ பத்தினிப் பெண் மாதிரிப் பேசி—அவளைச் சில நாள் முன் முத்தமிட்டிருக்கிறானே அவன். அவளுக்கு வெட்கமாக இருக்காதா?

"சரி" என்றான் எல்யூஸிஸ். திடீரென்று, "நான் சீக்கிரமே திரும்பி வந்து உன் குழந்தைக்கு "காட்பாதராக" இருப்பதற்கு வந்து விடுகிறேன்."

அவனை நிமிர்ந்து பார்த்துக் கோபமாகப் பேசினாள் பார்ப்ரோ. "காட்பாதரா? யாரு இப்போது அசட்டுத்தனமாகப் பேசுவது? என்குழந்தைக்கு காட்பாதர் வேண்டுமென்று நான் உனக்குச் சொல்லியனுப்புகிற போது நீ வா—போதும்."

எல்யூஸிஸ் அசட்டுத்தனமாகச் சிரிப்பதைத் தவிர வேறு என்ன செய்யமுடியும்? அங்கிருந்து போய்விட்டால் தேவலைபோல இருக்கிறது.

"தாங்க்ஸ், வருகிறேன்" என்று எழுந்திருக்கிறான் ஸிவெர்ட்.

"தாங்க்ஸ் என்று எல்யூஸிஸும் எழுந்தான். வந்தனமோ நன்றியோ தெரிவிக்கவில்லை அவன். இந்த பார்ப்ரோ! அவளிடம் கோபம் கோபமாக வந்தது அவனுக்கு. எவ்வளவு கசப்பான நாக்கிருந்தது அவளுக்கு—என்ன பேச்சுப் பேசினாள் அவள்! குரூபி! குணமும் இல்லாதவள்.

"எங்கே பாரக்கலாம்" என்றாள் பார்ப்ரோ. "ஆமாம். நான் இருந்த இடத்தில் நகரில் வாலிபர்கள் அணிந்திருந்த கோட்டுகளில் உள்பக்கம் இதைவிட நேர்த்தியான பட்டுத்தான் தைத்திருக்கும். அவர்கள் சட்டைகளில் இதைவிடப் பெரிதாக வெள்ளிப்படம் அடித்திருக்கும்!" பிறகு ஸிவெர்ட்பக்கம் திரும்பிச் சொன்னாள்: "சரி. நீ திரும்பும்போது இரவு இங்கு தங்கி வீடு கட்டுவதில் ஆக்ஸெலுக்கு உதவி செய். உன் துணிகளைக் கொணர்ந்து வைத்துவிடுகிறேன்."

விடை பெற்றுக்கொண்டு கிளம்பினார்கள்.

சகோதரர்கள் மேலே சென்றார்கள். பார்ப்ரோ சொன்ன வார்த்தைகளால் எல்யூஸிஸ் அப்படி ஒன்றும் வருத்தப்பட்டுக் கொள்ளவில்லை. அவள் எப்படியாவது தொலையட்டும். அவன் பையில் இரண்டு பெரிய நோட்டுகள் இருந்தன. இருவருமே வருத்தம் தரக்கூடிய எந்த விஷயத்தைப்பற்றியும் பேசாது நடந்தார்கள்—தகப்பன் விடை கொடுத்த விஷயம் பற்றியோ, அம்மா அழுதது பற்றியோ அவர்கள் பேசவில்லை. ப்ரேடாப்ளிக் பண்ணையிலுள்ளவர்கள் கண்ணில் படாமல் போகவேண்டும் என்பதற்காக வெகு தூரம் சுற்றி நடந்தார்கள். அதைப்பற்றி வேடிக்கையாக, ஏதோ பெரிய விஷயம் மாதிரிப் பேசிக்கொண்டு நடந்தார்கள். கிராமத்து எல்லை வந்ததும்தான் அவர்கள் உத்ஸாகம் தவிர்ந்தது. ஸிவெர்ட்டும் விடை பெற்றுக்கொண்டு கிளம்புகிற நேரம் வந்ததும் தான் இருவரும் சற்றுத் தடுமாறினார்கள்—ஆண்பிள்ளைகளுக் கொவ்வாத மாதிரி நடந்துகொண்டார்கள். ஸிவெர்ட் மெல்லிய குரலில் சொன்னான்: நீ போன பிறகு நான்மட்டும் தனியாக இருக்கவேண்டும்.''

உடனே எல்யூஸிஸ் ஊத ஆரம்பித்தான். தன் கால் செருப்புகளை இறுக்கிக் கட்டிக் கொண்டான். கையில் முள் குத்தியது என்று முள்ளைத் தேடினான். தன் சட்டைப் பைகளைத் துளாவினான். "அந்தக் கடிதங்கள் எங்கே?'' என்று முணு முணுத்தான.........ஸிவெர்ட்தான் அந்த சமயத்தில் உதவினான்: "சரி, தேடு,'' என்று திடீரென்று சொல்லிவிட்டு, அவனைத் தோள்பட்டையில் தொட்டுவிட்டு திரும்பினான் ஸிவெர்ட். அதற்குப்பிறகு இருவரும் உணர்ச்சி வசமாகவில்லை. தூரத்திலிருந்து "போய் வா,'' என்றும் "வருகிறேன்'' என்றும் சொல்லிவிட்டுப் பிரிந்து அவரவர் வழி போனார்கள்.

விதி, சந்தர்ப்பம்—எதுவானால் என்ன? எல்யூஸிஸ் மீண்டும் நகருக்குச் சென்றான் — தனக்காகக் காத்திராத ஒரு வேலையை ஒப்புக் கொள்வதற்காகச் சென்றான். அதே சமயம் ஆக்ஸெல் ஸ்டிராமின் வீட்டு வேலையை முடிக்க அவனுக்கு உதவிக்கு ஒரு ஆள் கிடைக்க ஏற்பாடு ஆயிற்று. ஆகஸ்டு 21-ந் தேதி அந்த வேலை தொடங்கினார்கள். பத்து நாட்களில் கூரை போட்டாகி விட்டது. அப்படி ஒன்றும் பிரமாதமான வீடு அல்ல; உயரம் அதிகம் இல்லை. மரவீடு. மண் குடிசையல்ல என்பதுதான் முக்யம். மாடுகளுக்குக் குடிசையும் மனிதர்களுக்கு வீடும் நிர்மாணமாகிவிட்டன மேன்லாந்தில்.

# 2

செப்டம்பர் மூன்ருந்தேதியன்று பார்ப்ரோவைக் காண வில்லை. காணவில்லை என்ருல் அவள் எங்கேயோ போய்விட்டாள். என்கிற அர்த்தம் இல்லை—வீட்டில் அவளைக் காணவில்லை.

ஆக்ஸெல் அவனுல் இயன்ற அளவில் தச்சுவேலை செய்து கொண்டிருந்தான். ஒரு கண்ணுடி ஜன்னல் வைத்து, வீட்டிற்கு மரக்கதவும் போட முயன்று கொண்டிருக்கிருன். அவனுக்குப் பழக்கப்படாத வேலை. சிரமமாகத்தான் இருந்தது. சூரியன் மேற்கேசாய்ந்து விட்டது; சாப்பிட பார்ப்ரோ வந்து கூப்பிட வில்லையே என்று எண்ணிக் கொண்டே வீட்டுக்குள் போனுன். அங்கு ஒருவரும் இல்லை. உணவு தானுகவே எடுத்துப் போட்டுக் கொண்டான். சாப்பிட்டுக் கொண்டே சுற்றும்முற்றும் பார்த்தான். ஆனுல், பார்ப்ரோவின் துணிமணிகள் எல்லாம் அதனதன் இடத்தில் தான் இருந்தன எங்கோ வெளியேதான் போயிருக்க வேண்டும். புதுக்கட்டிடத்தில் வேலை செய்யத்திரும்பினுன்—சிறிது நேரம் வேலையும் செய்தான். மீண்டும் குடிசைக்குள் போய்ப் பார்த்தான். இல்லை—ஒருவரும் இல்லை. எங்கேயாவது போய்ப் படுத்திருந்தாளோ? அவளைத் தேடிக்கொண்டு கிளம்பினுன்.

"பார்ப்ரோ" என்று கூப்பிட்டான். பதில் இல்லை. எல்லாக் குடிசைகளுக்குள்ளும் கொட்டகைகளுக்குள்ளும் புகுந்து பார்க் கிருன். புதுவீட்டிலும் இல்லை அவள் — ஆடு மாடுகளுக்கான கொட்டகைகளிலும் இல்லை. தன் நிலத்தின் எல்லையாக அமைந் திருந்த புதர்களில் தேடினுன். மற்றும் வயல் வெளிகளெல்லாம் தேடினுன். வெகுநேரம் தேடினுன், பார்ப்ரோ பார்ப்ரோ என்று கூவினுன். இல்லை, கடைசியாக வெகு தூரத்துக்கப்பால் புதர்களின் மறைவில் அருவிக்குள் காலை விட்டுக் கொண்டு அவள் விழுந்து கிடப்பதைக் காண்கிருன். அவள் காலிலும் ஒன்றுமில்லை; தலையிலும் ஒன்றுமில்லை. அவள் ஆடைகளெல்லாம் சொட்டச் சொட்ட ஈரமாக நனைந்திருக்கின்றன.

"ஏன் இங்கே இப்படிக் கிடக்கிருய்? கூப்பிட்டபோது பதில் தரக் கூடாதோ?" என்ருன் அவன்.

"பதில் தரமுடியவில்லை" என்ருள் அவள். அவளுடைய குரல் மிகவும் கம்மியிருக்கிறது.

“ஏன்? அருவியில் விழுந்து நனைந்து விட்டாயா?”

“ஆம், வழுக்கி விழுந்துவிட்டேன்,”

“வலிக்கிறதா?”

“இப்பொழுது வலிக்கவில்லை.”

“அப்படியானால்...ம்...முடிந்துவிட்டதா?” என்றான் அவன்.

“ஆமாம், என்னைத் தாங்கிக் கொள். வீட்டுக்குப் போகலாம்”.

“எங்கே அது?”

“எது?”

“குழந்தை; அதுதானே காரணம்.”

“அது செத்துப் பிறந்தது.”

“செத்துப் பிறந்தது?”

“ஆமாம்.”

ஆக்ஸெல் தாமச புத்தியுள்ளவன். எதிலுமே அவனுக்குத் தாமசம்தான். அங்கிருந்து அசையாமல் நிற்கிறான்? அப்படியானால் அதன் சடலம் எங்கே? என்று கேட்கிறான்.

“உனக்கு எதற்கு அந்தக்கவலை எல்லாம்” என்கிறாள் அவள். “நான் வீடு திரும்ப உதவி செய். குழந்தை இறந்து, பிறந்தது. என் கையைப் பிடித்துக் கொள், நான் எழுந்து நடந்து வருகிறேன்.”

ஆக்ஸெல் தன்னுடைய பலமானகைகளில் அவளைத் தூக்கிக் கொண்டு வீடு திரும்புகிறான். அவளை ஒரு நாற்காலியில் உட்கார்த்தி வைக்கிறான். அவளுடைய ஆடைகளிலிருந்து ஈரம் சொட்டுகிறது. “அது இறந்தா பிறந்தது?”

“அப்படித்தான் என்று சொன்னேனே!” என்று பதிலளிக்கிறாள் அவள்.

“அதை என்ன செய்தாய் நீ?”

“நீ என்ன அதை முகர்ந்துபார்க்க விரும்புகிறாயா? சாப்பிட்டாயா ஏதாவது, இல்லையா?”

“நீரோடைப் பக்கமாக எதற்காகப் போனாய் நீ?”

“ஓடைப் பக்கமாகவா? ஜினிபர் இலைகள் வேண்டியிருந்தது போனேன்?”

“எதற்காக ஜினிபர் இலைகள்?”

“பாத்திரங்கள் துலக்க,”

"அந்தப்பக்கம் ஜினிபர் மரங்களே இல்லையே" என்ருன் ஆக்ஸெல்.

பொறுமை இழந்தவளாக, கம்மிய குரலில் பார்ப்ரோ சொன்னுள்: "நீ உன் வேலையைப் பாரேன். எதற்காகத் தொந்திரவு செய்கிருய்? ஓடைப் பக்கம் நான் என்ன செய்து கொண்டிருந்தால் என்ன? விளக்குமாறு செய்யக் குச்சிகள் பொறுக்கிக் கொண்டிருந்தேன். நீ சாப்பிட்டாயா, இல்லையா?"

"சாப்பாடா?" என்ருன் அவன். "இப்போது உனக்கு எப்படி இருக்கிறது?"

"உடம்புக்கு ஒன்றுமில்லை."

"போய் டாக்டரை அழைத்து வரட்டுமா?"

"டாக்டரா! தேவலையே! எதற்கு டாக்டர்? உன் பணத்துக்கு வேறு செலவே கிடையாதுபோலிருக்கிறது!" என்ருள் பார்ப்ரோ. எழுந்து காய்ந்த துணிமணிகள் தேடினுள்.

ஆக்ஸெல் தன் வேலையைச் செய்யப் போகிருன். அவனுல் அதிகமாகக் கவனம் செலுத்தி வேலை செய்ய இயலவில்லை. இழைப்பதும் செதுக்குவதுமாகச் சப்தம் செய்கிருன்—பார்ப்ரோ காதில் விழட்டும் என்று. ஜன்னலும் ஒருவழியாகப் பொருத்தியாகிவிட்டது. சுற்றிலும் பாசி வைத்து இண்டு இடுக்கில்லாமல் அடைக்கிருன்.

அன்று மாலை பார்ப்ரோவுக்கு உணவு செல்லவில்லை. ஏதோ காரியம் இருக்கிறவள்மாதிரிக் குறுக்கும் நெடுக்கும் போகிருள். அதற்காகச் செய்யவேண்டிய வேலைகளைச் செய்யாமலுமில்லை. மாடுகளை உரிய காலத்தில் கறந்து வைக்கிருள். வாசற்படி தாண்டும்போது வெகு ஜாக்கிறதையாக மெதுவாகத் தாண்டுகிருள். வழக்கம்போல வைக்கோல் போருக்கு மேல் உள்ள மச்சில் படுக்கப் போனுள். அவள் எப்படித் தூங்குகிருள் என்று பார்க்க இரண்டு தரம் ஆக்ஸெல் போனுன். அவள் அசந்து நன்ருகத் தூங்கினுள்.

மறுநாள் அவள் தொண்டை இன்னும் அதிகமாகக் கட்டிவிட்டது என்பதைத் தவிர மற்றப்படி அவள் வழக்கம்போல ஆகிவிட்டாள். அவளால் பேசவே முடியவில்லை. கழுத்தில் ஒரு நீளமான ஸ்டாகிஸ்ஸை எடுத்துக் கட்டிக்கொண்டு அவள் வேலைகளைக் கவனித்து வந்தாள். ஒரு வார்த்தைகூடப் பேச முடியவில்லை அவளால். நாட்கள் சென்றன. விஷயம் பழைய விஷயம்

ஆகிவிட்டது. வேறு பல புது விஷயங்கள் முளைத்தன. அதன் முக்யத்துவம் மறைந்தது. புதுவீடு அப்படி அவசரமாக நிர்மாணிக்கக் கூடாததுதான் — நியாயப்படி வெயிலில் காய்ந்து மழையில் நனைந்து மரங்களும் தூண்களும் உத்தரங்களும் ஒட்டிப் பொருந்துகிறவரை காத்திருக்க வேண்டும்தான். ஆனால் அதற்கு நேரம் இல்லை. அவசரமாக மாடுகளுக்குக் கொட்டகை தேவை— ஆகவே அவர்கள் பழைய குடிசையைக் காலிபண்ணிப் புது வீட்டில் குடியேற வேண்டியதாக இருந்தது. அதற்குள் உருளைக் கிழங்கு தோண்ட வேண்டிய பருவம் வந்துவிட்டது. அதற்குப் பிறகு தானிய அறுவடை காத்திருந்தது. வாழ்க்கை வழக்கப் படியே நடந்தது.

ஆனால் மேன்லாந்தில் சின்னதும் பெரியதுமாகப் பலதரப் பட்ட மாறுதல்கள் இருக்கத்தான் இருந்தன. பார்ப்ரோ வேலைக் காரிமாதிரி நடந்துகொண்டாளே தவிர, பண்ணை யசமானிமாதிரி நடந்துகொள்ளவில்லை. அவளுக்கும் அந்தப் பண்ணைக்கும் எவ்வித சம்பந்தமும் இல்லாதமாதிரி நடந்துகொண்டாள். குழந்தையுடன் அவளிடம் தனக்கிருந்த பிடிப்பும் விட்டுப் போய்விட்டது என்று உணர்ந்தான் ஆக்ஸெல். இதுவரையில் அவள் அன்பில் பிரமாத நம்பிக்கை வைத்திருந்தான் அவன்—குழந்தை வந்தால் சரியாகப் போய்விடும் என்று எண்ணினான். ஆனால் குழந்தை வந்தது— வந்ததுபோல் போய்விட்டது. கடைசியில் பார்ப்ரோ தன்விரல்களி லிருந்து அவனுடைய மோதிரங்களையும் எடுத்து வைத்துவிட்டாள்.

“இதற்கு என்ன அர்த்தம்?” என்று கேட்டான் அவன்.

தலையை ஆட்டிக்கொண்டே பார்ப்ரோ சொன்னாள்: “அதற்கு என்ன அர்த்தம்?”

அவன் அன்பை அவள் நிராகரித்து விட்டாள் என்றுதான் அர்த்தம் அதற்கு — வேறுஎன்ன?

ஓடைக் கருகில் அந்தக் குழந்தையின் சடலத்தையும் கண்டு விட்டான். தேடிக்கொண்டு போகவில்லை அவன். எங்கே புதைத் திருப்பாள் என்பது அவனுக்குத் தெரியவே தெரிந்தது. ஆனால் இருக்கட்டும் என்று விட்டுவிட்டான். தற்செயலாக அவன் அதைப்பற்றிக் கவனிக்க நேர்ந்துவிட்டது. அந்த இடத்துக்கு மேலே காக்காய்களும், கழுகுகளும், மற்றும் பல பக்ஷிகளுமாகப் பறக்கத் தொடங்கிவிட்டன. முதலில் ஒரு பறவைதான் அதைப் பார்த்திருக்கும்—அங்கு ஏதோ புதைக்கப்பட்டிருக்கிறது என்பதை மனிதர்களைப்போல ரகசியத்தைக் காப்பாற்றிக்கொள்ளக் கூடிய

ஜாதி அல்லவே அது—கத்திக் கிறிச்சிட்டு மற்ற பறவை களைக்கும் விஷயத்தைச் சொல்லிவிட்டது. தோண்டி எடுத்து அந்தக் குழந்தையின் சடலத்தை அவை பிய்த்தெறியுமுன் ஆக்ஸெல் தன் அலக்ஷியத்தை விடுத்து அங்கு போனான். ரகசிய மாக அந்த இடத்துக்குப் போனான். பாசியையும் மரக்கிளைகளையும் போட்டு மூடியிருந்தாள் பார்ப்ரோ. சில அகலமான கற்களையும் போட்டு மூடியிருந்தாள். கையால் ஏழெட்டு அங்குல ஆழம் குழி பறித்து அதனுள் அதைப் புதைத்திருந்தாள். ஒரு கந்தலில் சுற்றிப் புதைத்திருந்தாள். ஆசையும் அருவருப்பும் மேலிட அவன் அதைத் தோண்டிப் பார்த்தான்—அதன் கண்கள் மூடியிருந்தன; கருப்புத் தலை மயிருடன் பையன்; கால்களை மடக்கி விட்டிருந்தாள். சுற்றியிருந்த துணி ஈரமாக இருந்து இப்போது காய்ந்து கொண்டிருந்தது. அவ்வளவுதான் அவன் பார்த்தான். அரையும் குறையுமாகப் பிழிந்து விட்டுப் போட்ட துணிப் பந்துமாதிரி கிடந்தது அது.

அப்படியே அதை விட்டு விட்டு வர அவனுக்கு மனம் வரவில்லை. மனசில் அதுபற்றி ஏதாவது தனக்குக் கெடுதல் நேரிடுமோ என்கிற பயமும் இருந்திருக்கலாம். வீட்டுக்கு ஓடிப் போய் ஒரு மண்வெட்டி கொணர்ந்தான்; சவம் புதைத்திருந்த கல்லறையை ஆழமாக வெட்டினான். ஓடைக்கு அருகில் இருந்ததால், ஆழமாக வெட்டினால் ஜலம் ஊறிற்று. ஆகவே அதைக் கொஞ்ச தூரத்துக்கப்பால் எடுத்துப்போய் ஆழக் குழி வெட்டிப் புதைத்தான். முதலில் பார்ப்ரோ வந்து தன்னைக் கண்டுவிடப் போகிறாளே என்று பயப்பட்டான். பிறகு அந்தப்பயம் மறைந்துவிட்டது. மனசிலே ஒரு கசப்பும் அவளிடம் ஒரு அருவருப்பும் ஏற்பட்டன. அவள் வந்தால்தான் வரட்டுமே! அந்தச் சிசுவின் உடலை சரியானபடி மூடி அடக்கம் செய்யச் சொல்லலாம்! செத்துப் பிறந்ததோ இல்லையோ. அதையேன் சரியானபடி அடக்கம் செய்யக்கூடாது. அந்தச் சிசு மரித்ததால் தனக்கு ஏற்பட்ட நஷ்டங்களை எல்லாம் கணக்குப் பண்ணிப் பார்த்தான் ஆக்ஸெல். அந்தப் பண்ணையுடன் அவனைப் பிணைத் திருந்த பிணைப்பு விட்டுப் போய்விட்டதே! அவள் இனிக் கிளம்பி விடுவாள். உதவிக்கு ஆளில்லாமல் அவன் அங்கு தவிக்க வேண்டும். அவள் வரட்டும்—வந்து அவன் செய்துகொண் டிருந்த காரியத்தைப் பார்க்கட்டும். அவன் பயப்படுவானேன்? ஆனால் அவன் என்ன செய்துகொண்டிருந்தான் என்பது

பார்ப்ரோவுக்குத் டுதரியும்போலும்! அவள் வரவில்லை. அவனால் முடிந்த அளவில் அதை எடுத்து மூடிப் புதைத்துவிட்டான். புதிய இடத்தின்மேல் புல் பத்தையும் வைத்து சமப்படுத்தினன். முடித்து விட்டுப் பார்த்தபிறகு ஒரு சிறு பச்சை மேட்டைத் தவிர வேறு எதுவும் தெரியவில்லை.

வீடு திரும்புகையில், பார்ப்ரோ வீட்டு வாசலில் அவன் கண்ணில் பட்டாள்.

"எங்கே போயிருந்தாய்?" என்று கேட்டாள்.

அவன் கசப்பும் அருவருப்பும் அதற்குள் மறைந்து விட்டன போலும். "எங்குமில்லை. நீ எங்கே போயிருந்தாய்?" என்று சாதாரணமாகக் கேட்டான்.

ஓ! ஆனல் அவன் கண்களிலிருந்த பார்வை அவளை உஷார்ப் படுத்தியதோ என்னவோ—அவள் பதில் எதுவும் பேசாது உள்ளே போய்விட்டாள்.

அவளைத் தொடர்ந்து அவனும் உள்ளே போனன்.

"இதோபார். அந்த மோதிரங்களை, நான் கொடுத்த மோதிரங்களை ஏன் கழட்டிவிட்டாய்!" என்று நேரடியாகக் கேட்டான்.

பிகுவாகப்பதில் சொல்லவில்லை பார்ப்ரோ சிரித்துக்கொண்டே சொன்னள்: இன்று என்ன — ஒரே அதட்டலாக இருக்கிறது— எனக்குச் சிரிப்பு வருகிறது. மோதிரங்களைப் போட்டுக்கொள்ள வேண்டும்—சாதாரண நாட்களிலும் அணிந்து கொள்ளவேண்டும். என்றல் அணிந்து கொள்கிறேன்" உடனேயே மோதிரங்களை எடுத்துப் போட்டுக்கொண்டாள்.

அவன் முகத்தில் அசட்டுக் களை வழிய நின்றதைப் பார்த்து அவளுக்குத் தைரியம் வந்தது. "வேறு என்ன தப்புப் பண்ணி விட்டேன்—சொல்லேன்" என்றள்.

"தப்புக் கண்டுபிடிக்கவில்லை நான். முன்னெல்லாம் இருந்த மாதிரி நீ இருந்தாயானல் போதும். அவ்வளவுதான் வேண்டியது. எனக்கு?" என்று பதில் அளித்தான் ஆக்ஸெல்.

எப்போதும் ஒன்றக இருந்து கொண்டு, எப்போதும் சண்டை போடாதிருப்பதும் சிரமமாகத்தான் இருந்தது.

ஆக்ஸெல் தொடர்ந்து சொன்னள்: "உன் அப்பாவுடைய பண்ணையை நான் வாங்கிதற்குக் காரணம் என்ன தெரியுமா? நீ

அங்கு போய் இருக்கவிரும்பினல் நாம் அங்கே போய் விடலாம் என்று எண்ணினேன். அவ்வளவுதான்.

அவள் போய்விடப் போகிருளே என்று பயம் அவனுக்கு. உதவிக்கு ஆளில்லாமல் பண்ணையில் தனியாக மாட்டிக்கொண்டு விடப் போகிறேமோ என்ற பயம் வேறு அவனுக்கு. வெளிப் படையாகவே தெரிந்து விட்டது. "அதை ஏற்கனவேதான் சொன்னயே!" என்ருள் அவள்.

"ஆமாம், சொன்னேன். ஆனல் பதில் எதுவும் கிடைக்க வில்லை."

"பதிலா? எதற்கு? நீ பேசுவதைக் கேட்கக்கூடப் பிடிக்க வில்லை எனக்கு" என்ருள் பார்ப்ரோ.

சண்டை போடக்கூடாது என்று மிகவும் சமாதானமாகத்தான் அவன் பேசினன். அந்தப் பண்ணை விஷயத்திலும் அப்படி ஒன்றும் அவன் கெடுபிடிபண்ணவில்லை. ப்ரேடாப்ளிக் பண்ணையில் ப்ரேடும் அவன் குடும்பமும் தங்குவதுபற்றி அவன் ஆக்ஷேபமே செய்யவில்லை. பண்ணையுடன் அதிகம் விளைந்த பொருள்களையும் அவன் வாங்கிவிட்டான் என்பது உண்மைதான்—எனினும் உருளை, வைக்கோல் முதலியவற்றை அவர்கள் உபயோகிப்பதற்கு அவன் ஆக்ஷேபிக்கவில்லை. இப்படி அர்த்தமில்லாமல் பார்ப்ரோ பேசுவது அவனுக்குப் பிடிக்கவில்லை. அதைப்பற்றி அவள் கவலைப் பட்டதாகத் தெரியவில்லை. கோபமாகக் கேட்டாள். இப்போது ப்ரேடாப்ளிக்குக்கு நாம் போய்விடலாம் என்கிருயே! அந்தக் குடும்பத்தை வெளியே துரத்திவிடுவதா?

அவன் தன் காதுகளையே நம்பவில்லை. பிளந்த வாய் பிளந்தபடி இருக்க, விழித்துப் பார்த்தபடியே சிறிதுநேரம் உட் கார்ந்திருந்தான். தொண்டையைக் கனைத்துக் கொண்டான். இத்தனை ஆர்ப்பாட்டத்துக்கும் அவன் அதிககாக எதுவும் சொல்லிவிடவில்லை. அவன் கேட்டது இதுதான்: "அவர்கள் தான் கிராமத்துக்குப் போகப் போகிருர்களே!"

"என்னைக் கேட்காதே! எனக்குத் தெரியாது? அவர்களுக் காகக் கிராமத்தில் நீ ஒரு இடம் வாங்கித் தந்திருக்கிருயோ?"

இப்போதுகூட அவளுடன் சண்டை பிடிக்க அவனுக்கு இஷ்டமில்லை. ஆனல் தனது ஆச்சரியத்தைக் காட்டாதிருக்க முடியவில்லை. "வரவர மிக மோசமாகப் பேசுகிருய்—கோபித்துக் கொள்கிருய் — என்னிடம் கடினமாக நடந்து கொள்கிருய்.

நீ சொல்வதன் அர்த்தம் உனக்கே புரியவில்லையோ அல்லது என்ன சொல்லுகிறோம் என்று தெரியாமல் சொல்லுகிறாயோ!"

"நான் சொல்வது தெரிந்து அர்த்தத்துடன் தான் சொல்லு கிறேன்" என்று பதிலளித்தாள் அவள். "என் அப்பாவும் அம்மாவும் இங்கு வந்து இருந்தால் என்னவாம்? எனக்கு எவ்வளவு உதவியாக இருந்திருக்கும்? அதற்குச் சம்மதிக்க மறுத்துவிட்டாயே நீ! இல்லை—எனக்கு அதிக வேலையில்லை— உதவியே தேவையில்லை என்று தீர்மானித்து விட்டாயோ?" என்று கேட்டாள் பார்ப்ரோ.

இதில் உண்மை இல்லாமல் இல்லை. ஆனால் முழு உண்மை யும் இல்லை. ப்ரேட் குடும்பம் அங்கு வசிக்க வந்திருந்தால் மண் குடிசையில்தான் இருக்கவேண்டும்—ஆடு மாடுகள் தங்க இடம் இருந்திராது. இந்தப் பெண்ணுக்கு மூளையே கிடையாதோ— விஷயங்களைப் புரிந்துகொண்டே பேசமாட்டாளோ!

"இதோ பார் உனக்கு வேண்டுமானால் ஒரு வேலைக்காரி போட்டுக் கொள்" என்றான் அவன்.

"இப்பொழுதா? மாரிக்காலம் வருகிறது—வேலை இல்லாத நாளிலே வேலைக்காரி எதற்கு? எனக்கு உதவி தேவையாக இருக்கும்போது அதைப்பற்றி நீ யோசித்திருக்கவேண்டும்."

இதுவும் உண்மைதான்—வயிற்றில் கனத்துடன் இருக்கும் போது உதவி தேவைதான். அப்போது எதையும் லக்ஷியம் செய்யாதவள்மாதிரி வேலைகளை எல்லாம் அவளே செய்துவிட்டாள் உதவி தேவை என்றே சொல்லவில்லை. சுருசுருப்பாகவும் ஜரூ ராகவும் எல்லாவற்றையும் செய்து முடித்துவிட்டாள்.

"என்னவோ—எனக்குப் புரியவில்லை" என்றான் அவன்.

மௌனம்.

பிறகு பார்ப்ரோ கேட்டாள்: "அப்பாவுக்குப் பிறகு தந்தி இலாகா வேலையை நீ ஏற்றுக் கொள்வதாகப் பேச்சு இருக்கிறது!"

"என்ன? யார் சொன்னது அப்படி?"

"காதில் விழுந்தது எனக்கு?"

"இல்லை என்று சொல்லவில்லை நான். அப்படியே நடந் தாலும் நடக்கும்! என்றான் ஆக்ஸெல்.

"ஓ!"

"எதற்காகக் கேட்கிறாய்?"

"ஒன்றுமில்லே. வீடு வாசல் பண்ணை எதுவுமில்லாமல் அப்பாவிடமிருந்து பிடுங்கிக் கொண்டாகி விட்டது. வேலேயையும் பிடுங்கிக் கொள்வதாக உத்தேசிக்கிருயே!" என்ருள் பார்ப்ரோ.

மௌனம்.

அதற்குமேல் பொறுக்கவில்லே ஆக்ஸெலுக்கு: "ஆமாம். உனக்கும் உன் குடும்பத்திற்கும் நான் செய்திருப்பதற்கு நீங்கள் லாயக்கில்லே."

"ஓஹோ!"

"இல்லே" என்ருன் ஆக்ஸெல். முஷ்டியை ஓங்கி மேஜை மேலே தட்டினுன். பிறகு எழுந்தான்.

"என்னேப் பயமுறுத்துவதாக எண்ணிக் கொள்ளாதே!" என்று சிணுங்கினுள் பார்ப்ரோ. சுவர் ஓரமாக நகர்ந்தாள்.

"பயமுறுத்துவதா?" என்ருன் ஆக்ஸெல். அலக்ஷியமாகச் சூ என்ருன். "இப்பொழுது உண்மையைக் கேட்கிறேன், சொல்லு. அந்தக் குழந்தையை நீ என்ன செய்தாய்? ஓடையில் அமுக்கிக் கொன்ருயா?"

"ஓடையிலா?"

"ஆமாம். அது நீரில் போட்டமாதிரி நனைந்திருந்தது.

"ஓ! அதைத் தோண்டிப் பார்த்தாயா நீ? நீ அதை......" முகர்ந்து பார்த்தாயா என்று கேட்க எண்ணினுள். தைரியம் வரவில்லே. அவன் முகத்தைப் பார்த்தால் அவன் அதற்குமேல் எதையும் பொறுத்துக் கொள்ளமாட்டான் என்று தோன்றியது. "நீ போய்த் தோண்டியெடுத்துப் பார்த்தாயா?"

"அது தண்ணியில் அமுக்கியிருந்தது என்று பார்த்தேன்."

"ஆமாம். நான் கால் வழுக்கி ஓடையில் விழுந்துவிட்டேன். ஜலத்திலே பிறந்தது அது. என்னல் எழுந்திருக்க முடியவில்லே."

"வழுக்கி விழுந்தாயா?"

"ஆமாம். நான் சமாளித்துக்கொண்டு எழுந்திருக்குமுன் குழந்தை பிறந்துவிட்டது."

"ம்...ஆனல் அதை எதிர்பார்த்து நீ அதைச் சுற்றி மறைக்க ஒரு துணியையும் எடுத்துக்கொண்டு போனுய் போலும்! விழுந்து விடப் போகிறதாக எதிர்பார்த்துத்தான் போனுயோ?"

"கந்தல் துணியா?"

"ஆமாம்—என் சட்டைகளில் ஒன்றைக் கிழித்து எடுத்துப் போனாய்?"

"ஜூனிபர் தழைகள் கொண்டு வருவதற்கு ஒரு துணி எடுத்துப் போனேன்."

"ஜூனிபர் தழைகளா?"

"ஆமாம். நான் ஜூனிபர் தழைகள் கொண்டு வரத்தான் அந்தப் பக்கம் போனேன். அதான் சொன்னேனே?"

"ஆமாம். அப்படித்தான் நீ சொன்னாய்? அல்லது விளக்கு மாறுக்குக் குச்சு ஒடிக்கப் போனாய்..."

"அப்படியா? எதுவானால் என்ன?"

இந்தத் தடவை இருவருக்கும் இடையே சண்டை பிரமாதமாகவே மூண்டுவிட்டது. ஆனால் காலக்கிரமத்தில் இந்தச் சண்டையும் மறந்துவிட்டது. மறுபடியும் சௌஜன்யம் நிலவியது. முழு சௌஜன்யம் அல்ல அதுவும். சௌஜன்யம்மாதிரி ஒரு நிலமை, பார்ப்ரோ ரொம்பவும் ஜாக்கிரதையாக இருந்தாள். மிகவும் அடங்கி யிருந்தாள். பயப்படுவதற்கு விஷயம் இருந்தது என்பது அவளுக்குத் தெரியாமல் இல்லை. ஆனால் மேன்லாந்தில் வாழ்க்கை சகிக்கக்கூடியதாக இல்லை—மனதில் உல்லாசமோ உற்சாகமோ இல்லை. இருவரும் ஜாக்கிரதையாக இருப்பதென்பது எப்படி சதா சர்வகாலமும் நடக்கும்? நடக்கிறவரையில் நடக்கட்டுமே என்று ஆக்ஸெல் பொறுமையாக இருக்கவேண்டி வந்துவிட்டது. இந்தப் பெண்ணைத் தன் பண்ணைக்குக் கொண்டுவர ஆசைப்பட்டான்; கொண்டும் வந்தான். அவள் தனக்கென்றே இருக்க வேண்டும் என்று எண்ணினான். அதற்கான வழியும் செய்தான். அவள் தப்பித்துக் கொள்ளாதபடி முடிச்சுப் போட்டான். அவள் வயிற்றில் இருந்த குழந்தை அவன் குழந்தை. அந்தப் பண்ணையில் சகல விஷயங்களும் பார்ப்ரோவுக்குத் தெரியும். பாக்கிப்பண்ணைகள் எங்கெந்தஇடத்தில் இருந்தன; ஆடுமாடுகள் எவ்வப்போது கன்று போடும். மாரிகாலத்துக்கு உணவு சேகரித்தது போதுமா. உணவுக்கென்று எத்தனை பால், பாலேடைக்கென்று எத்தனை—எல்லாமே அவளுக்குத் தெரியும். புதிதாக யாராவது வந்தால் தெரிந்து கொள்ள நாள் பிடிக்கும்! தவிர வேறு யார் வர இருந்தார்கள்? யாரையும் காணவில்லையே!

ஆக்ஸெல் மனசில் அந்த யோசனையும் இல்லாமல் இல்லை. பார்ப்ரோவை அனுப்பித் தொலைத்துவிட்டு வேறு ஒருத்தியைக்

கொண்டுவந்து வைத்துக் கொள்ளலாம் என்று யோசனை தான் அவனுக்கு. அவள் எதுவும் செய்யத் துணிந்தவள்—அவளைக் கண்டு சில சமயம் அவனுக்குப் பயமாகக்கூட இருந்தது. அவளுடைய வழிகள் சாதாரணப் பெண்களுடைய இரக்கமான அன்பு நிறைந்த வழிகள் அல்ல. அவளுடன் சௌஜன்யமாக இருக்கும் போது கூடச் சில சமயம் அவனுக்குப் பயமாக இருக்கும். சில சமயம் அன்பு மீறி அவனிடம் பிரியமாகவும் இருப்பாள். பார்ப்பதற்கும் அழகாக இருந்தாள். அவனைக் கட்டி முத்தமிட்டாளானால் இன்பமாகவே இருந்தது. அதெல்லாம் முந்திய நாட்களில்—இப்போது அதெல்லாம் அடியோடு மறைந்துவிட்டது. மீண்டும் கர்ப்பிணியாகி அவஸ்தைப்பட பார்ப்ரோ தயாராக இல்லை. மாறுவது என்பது என்ன—சுலபமான விஷயமா?... "உடனேயே கல்யாணத்தை முடித்து விடலாமே!" என்று ஆக்ஸெல் அவளை வற்புறுத்தினான்.

"உடனேயா?" என்றான் அவன். "அது முடியாது. என் பற்கள் வீணாகிக் கொண்டிருக்கின்றன. அவற்றைச் சரிபார்த்துக் கொள்ள நான் இப்போதே நகருக்குப் போய் வரவேண்டும்."

வேறு என்ன செய்வது? பழையமாதிரியே தான் வாழ்க்கை நடந்தது. பார்ப்ரோவுக்கு இப்பவெல்லாம் வேலை செய்வதற்குக் கூலியா கிடைத்தது? இல்லை. அதைப்போல நாலு பங்கு கிடைத்தது. அவள் பணம் கேட்டபோதெல்லாம் ஒவ்வொரு தடவையும் கொடுத்தான். இனும் தானே — அவள் நன்றி சொன்னாள். அந்தப் பணமெல்லாம் எங்கே தான் சென்றது என்று ஆக்ஸெலால் கண்டுபிடிக்க இயலவில்லை. இந்தக் காட்டிலே பணத்தை என்ன பண்ணுவது? அதைத் தனக்கென்று பத்திரப்படுத்தி வைத்துக் கொண்டாளா? வருஷம் பூராவும் சேர்த்து வைத்துதான் என்ன பண்ணுவது?

ஆக்ஸெலுக்குப் புரியாத விஷயங்கள் எத்தனையோ இருந்தன. அவளுக்கு ஒரு மோதிரம்கூட வாங்கித் தந்தானே அவன்?—ஒரு தங்க மோதிரம். அதற்குப் பிறகு அவர்கள் இருவரும் கொஞ்ச காலம் ரொம்பவும் சௌஜன்யமாகக்கூட இருந்தார்கள். ஆனால் அதுவும் அதிக நாள் நிலைக்கவில்லை. ஒரு வார்த்தையில்—அவள் அவனைவிட்டுப் போய்விடுவது என்று தீர்மானித்திருந்தாளா? பெண் என்றாலே அபூர்வப் பிறவிகள் என்றுதான் அர்த்தம். தன்னைப் போலவே ஒரு பண்ணையுடனும் ஒரு வீடுடனும் யாராவது

ஒருத்தன் காத்திருந்தானு அவளுக்காக! கையை ஓங்கி ஓங்கி மேஜை மேல் தட்டினுன் ஆக்ஸெல் ஆத்திரமாக.

ஆச்சரியம்தான். பார்ப்ரோவின் மனசிலே வேறு ஒன்றும் இல்லை. பெர்கன் நகரையும் அந் நகர வாழ்க்கையும் தவிர வேறு எதுவும் மனசிலே சிந்தனையேயில்லை அவளுக்கு. அப்படியானுல் அவள் திரும்பி வந்தது ஏன்? அப்பா தந்தி கொடுத்தார் என்பதற்காகவா?—வேறு ஏதோ காரணம் இருந்திருக்க வேண்டும்? இங்கு வந்து என்ன நிம்மதியிருந்தது அவளுக்கு? நாளுக்குப்பின் நாள் என்று வருஷம் பூராவையும் நிம்மதியில்லாமலே கடத்திவிட்டாள். இரும்பு வாளிகள் உண்டா பண்ணையில்—மரத் தொட்டிகள்தான் இருந்தன. பீங்கான் ஜாடிகள் உண்டா? மண் சட்டிகள்தான் இருந்தன. காலை மாலை இரு வேளைகளிலும் பால் கறந்துவைக்க வேண்டும். கனமான பூட்ஸுகள்—வைக்கோல் அடைந்த தலை காணி. ஜனங்கள், புது முகங்கள், என்று யாரும் கிடையாது. என்ன வாழ்க்கை இது?

பெரிய சண்டைக்குப் பிறகு சில்லரைச் சண்டைகள் பல நடந்தன. திரும்பவும் திரும்பவும் சண்டைகள்தான்: "நீ கெட்டிக்காரனுனுல் அதைப்பற்றி எதுவும் பேசமாட்டாய்" என்ருள் பார்ப்ரோ. "அப்பாவுக்கு நீ இழைத்திருக்கிற தீங்கைப்பற்றியும் பேசாதே."

"தீங்கா? என்ன தீங்கு?" என்று கேட்டான் ஆக்ஸெல்.

"உனக்கே தெரியும். ஆனுல் நீ என்ன முயற்சி செய்தாலும் நீ தந்தி இன்ஸ்பெக்டர் ஆகமுடியாது."

"ஹோ! அப்படியா?"

"ஆமாம் அப்படித்தான். நீ தந்திமர இன்ஸ்பெக்டர் ஆவது என்பது மட்டும் நடக்காது."

"ஏன்! அதற்கு எனக்குத் தகுதி இல்லையோ?"

"தகுதிக்கென்ன குறைவு! தகுதி யில்லாமல் என்ன? வாசிக்கத் தெரியுமா உனக்கு? எழுதத் தெரியுமா? ஒரு பத்திரிகை பார்க்கத் தெரியுமா?"

அவன் சொன்னுன்: "அதைப்பற்றி என்ன? எனக்குத் தேவையானது எனக்குத் தெரியும். உன் பேச்சும் நீயும்—உன்னைக் கண்டாலே எனக்குப் பிடிக்கவில்லை!"

"அப்படியானால் சரி இந்தா—இதை நீயே வைத்துக் கொள்" என்று தன் மோதிரத்தை வெள்ளி மோதிரத்தைக் கழட்டி மேஜை மேல் போட்டாள்.

"ஓஹோ! அந்த மோதிரம் எங்கே?" என்றான் ஆக்ஸெல் சிறிது நேரம் கழித்து.

"நீ எனக்குக் கொடுத்த மோதிரங்களைத் திருப்பிப் பெற்றுக் கொள்ள விரும்பினால் பெற்றுக் கொள்ளேன்" என்று சொல்லிக் கொண்டே பார்ப்ரோ தங்க மோதிரத்தையும் கழற்ற முயன்றாள்.

சிறிது நாட்களுக்குள் இந்தநிலை மாறியது—மீண்டும் பார்ப்ரோ இரண்டு மோதிரங்களையும் அணிந்து கொண்டிருந்தாள்.

அந்தத் தடவை ஆக்ஸெல் சொல்லிவிட்டான்: "நீ என்ன வேண்டுமானாலும் செய்து கொள். நான் கவலையே படப்போவ தில்லை."

நாளடைவில் அந்தக் குழந்தையின் சாவைப் பற்றி அவன் சொன்ன வார்த்தைகளை லக்ஷியம் செய்வதை அவள் நிறுத்தி விட்டாள். "ஓஹோ! என்பாள்; தலையையாட்டுவாள் அவ்வளவு தான். சிலசமயம் கேலியாக "அடாடா" என்பாள். அவள் அதை ஒத்துக் கொள்ளவில்லை. "இருக்கட்டுமே! அப்படியே நான் அதை ஆற்றில் போட்டுக் கொன்றதாகவே வைத்துக் கொள். அதனால் என்ன? நீ நாட்டுப் புறத்தான். நகரத்தில் இம்மாதிரி எல்லாம் எத்தனை நடக்கிறது என்று உனக்குத் தெரியுமா?" ஒரு தரம் இதுபற்றிப் பேசிக்கொண்டிருக்கும் போது அவன் அதை இவ்வளவு பெரிய விஷயமாக எடுத்துக் கொள்ள வேண்டியதில்லை என்கிற மாதிரி சொன்னாள் அவள். குழந்தையைக் கொல்ல வேண்டியதில்லை என்கிற மாதிரி சொன்னாள் அவள். குழந்தையைக் கொல்வது பற்றி அவள் அப்படி ஒன்றும் பெரிய விஷயமாக எண்ணி வருந்தவில்லை. அவளுக்கு பெர்கனில் இரண்டு பெண் களைத் தெரியும் — அவர்கள் குழந்தைகளைக் கொன்றவர்கள் தான். ஒருத்தி கொன்றுவிடவில்லை. பனியில் உரைந்து சாகட்டும் என்று தான் பெற்றெடுத்த குழந்தையை விட்டுவிட்டாள் — அவளுக்கு இரண்டு மாசம் சிறைத் தண்டனை விதித்தார்கள். மற்றவள் செய்த குற்றம் ருசுவாகவில்லை. "இல்லை. சட்டம் கூட முன்னெல்லாம் போல இப்போது கடினமாக இல்லை, எல்லாக் குற்றவாளிகளும் அகப்பட்டுக் கொள்வதும் இல்லை." பெர்கன் நகரில் ஹோட்டலிலிருந்த ஒரு பெண் இரண்டு குழந்தைகளுக்குத்

தாயாகி இரண்டையும் கொன்றுவிட்டாள். அவள் நகரத்தவள்— நல்ல ஆடை துணிகளும் தொப்பியும் அணிந்தவள். இரண்டாவது குற்றத்துக்காக அவள் மூன்று மாசம் சிறையிலிருந்தாள்; முதல் குற்றம் கண்டு பிடிக்கவேயில்லை.

ஆக்ஸெல் இதை அமைதியற்ற மனசுடன் கேட்டான். அவளிடம் அவனுக்கு இப்போது பயமே ஏற்பட்டுவிட்டது. அவன் அவளைப் புரிந்துகொள்ள முயன்றான். மன இருளிலே கை நீட்டித் தடவிப் பார்த்தான். ஆனால் அவள் சொன்னதும் உண்மை தானே! அவள் கெட்டவளோ, நல்லவளோ — அவளைப்பற்றி அதிகமாக சிந்திக்கவேண்டியது அவசியமே இல்லை. அவ்வளவுக் குத் தகுதியற்றவள் அவள். அவளைப்பற்றிய வரையில் குழந்தைக் கொலை பெரிய விஷயம் அல்ல—குழந்தையைக் கொல்வது என்பது துச்சமான விஷயமாகப்பட்டது அவளுக்கு. வேலைக்காரிகளுக்கே யுள்ள ஒரு மட்டமான மனப்பான்மையுடன் அவள் வாழ்க்கை வழிகளையும் சம்பவங்களையும் கவனித்தாள். தான் செய்துவிட்ட காரியத்தைப்பற்றி அவள் வருந்துவதாகவோ சிந்திப்பதாகவோ தெரியவேயில்லை. அசட்டுப் பெண். எப்போதும் போலவே நிச்சிந்தையாகக் கவலையற்று இருந்தாள். இந்த அனுபவத்தால் அவள் எப்படியும் மாறிவிடவில்லை. "நகருக்குப் போய்ப் பற்களைச் சுத்தம் செய்து கொள்ளவேண்டும்! புதுச் சால்வை ஒன்று வேண்டும்" என்று சொல்லிக் கொண்டிருந்தாள். புது தினுசான சால்வை தனக்கும் ஒன்று தேவை என்று அவள் தீர்மானித்து விட்டாள்.

அவள் அதைப்பற்றிக் கவலைப்படாதபோது, ஆக்ஸெல் என்ன செய்ய முடியும்? உண்மையில் அவளைப்பற்றி ஆக்ஸெலுக் குச் சந்தேகமே தவிர, வேறு எதுவும் திடமாகச் சொல்லமுடிய வில்லை. அவளோ குற்றத்தை ஒத்துக்கொள்ளவில்லை; ஒவ்வொரு தடவையும் சாமர்த்தியமாக நேருக்கு நேர் பதில் தராமல் தப்பித் துக் கொண்டு வந்தாள். அதுபற்றிக் கேட்டாள் அவளுக்குக் கோபம்கூட வருவது கிடையாது. ஏதோ பாத்திரத்தை நீ உடைத்தாயா என்று கேட்டால், பட்டதும் படாததுமாக வேலைக் காரி பதில் சொல்லுகிறமாதிரி பதில் சொன்னாள் அவள். இரண்டு வாரங்களுக்குப்பிறகு அவனுக்குத் திடீரென்று ஞானோதயம் ஆயிற்று. கடவுளே! ஊரில் எல்லோருக்கும் அது தெரிந் திருக்குமே! கடவுளே! அவள் வயிற்றில் குழந்தையுடன், பெரிய வயிறுடன், நடமாடிக் கொண்டிருந்தது எல்லோருக்குமே

தெரியுமே! அவள் வயிறு இப்போது வாடிவிட்டது. அதைப் பற்றி வேறு யாராவது கேட்டால் என்ன பதில் சொல்லுவாள்? இன்றோ நாளையோ யாராவது கேட்கத்தானே கேட்பார்கள்? அவள் தவறு செய்யவில்லையானால் அதைக் கோயிலுக்கடுத் துள்ள சவக் குழிகளில் உரிய சடங்குகளுடன் புதைக்க ஏற்பாடு செய்திருக்கலாமே! அவன் நிலத்தில், திருட்டுத்தனமாகப் புதைக்க வேண்டிய அவசியம் இராதே!

"அப்படிச் செய்வது சரியாக வராது. அதைப்பற்றி அமர்க் களப்படுத்தி யிருப்பார்கள். வெட்டிப் பார்ப்பார்கள். டாக்டர் அத்தாட்சி கேட்டார்கள். அதெல்லாம் வீண் அவஸ்தை என்று விட்டுவிட்டேன்" என்றாள் பார்ப்ரோ.

"இது பின்னால் மஹா இடஞ்சலாகிவிட்டால்......"

கவலையே படாமல் பார்ப்ரோ சொன்னாள்: "அதைப்பற்றி என்ன இப்போது? இருக்கிற இடத்திலேயே கிடக்கட்டும்!" பிறகு புன்சிரிப்புச் சிரித்தாள். கேட்டாள்: "அது தூக்கத்தில் வந்து உன்னைத் துரத்தும் என்று பயமா உனக்கு? அதெல்லாம் பயப் படாதே. உன் காரியத்தைக் கவனி."

"ரொம்ப சரி."

"நான் அதைத் தண்ணீரில் போட்டுக் கொன்றேனா? அதான் சொன்னேனே! தவறி விழுந்துவிட்டேன். அது தண் ணீரில் பிறந்து திக்குமுக்காடிச் செத்துவிட்டது. உன் கவலைகள் அனாவசியம். இப்படிக் கவலைப்படுகிறவர்களை நான் கண்டதில்லை. தவிரவும் இதை யார் கண்டுபிடிக்கப் போகிறார்கள்?"

"ஸெல்லன்ராவில் இங்கர் விஷயம் அம்பலமாகிவிட்டதே!" என்றான் ஆக்ஸெல்.

பார்ப்ரோ ஒரு நிமிஷம் யோசித்தாள். "வெளிவந்தாலும் பாதகமில்லை. சட்டம் இப்போது மாறிவிட்டது. முன்மாதிரி யில்லை. பேப்பர் படித்தாயானால் உனக்கும் தெரியும்! எத்தனையோ பேர் இதைச் செய்கிறார்கள் — தப்பித்துக் கொள்கிறார்கள் — எவ்வித தண்டனைக்கும் உள்ளாவதில்லை. அதை விளக்கமாகச் சொல்லி அவனுக்குப் புரியும்படியாக விவரித்தாள். இந்தமாதிரி யான விஷயங்களில் பரந்தமனப்பான்மை மிகமிக அவசியம் என்று வற்புறுத்தினாள். அவள் நாடு நகரமெல்லாம் சுற்றியவள்; பார்த்தும் கேட்டும் பல விஷயங்களைச் சரிவர அறிந்தவள். அவள் வற்புறுத்தினாள்; முதல் விஷயம், அவள் அதைச் செய்யவில்லை.

அவள் அப்படிச் செய்திருந்தாலுங் கூட அது ஒன்றும் பிரமாத மான விஷயம் அல்ல; இது இரண்டாவது, மூன்ருவதாக அதை யாரும் கண்டுபிடித்து விடமாட்டார்கள்.

"எல்லாவற்றையும் எல்லோரும் கண்டு பிடித்துத்தான் விடுகிருர்கள்" என்ருன் ஆக்ஸெல்.

"எல்லாம் என்பது தவறு" என்ருள் பார்ப்ரோ வெற்றிப் புன்னகையுடன். அவனுக்கு அதிசயத்தையோ ஆச்சரியத்தையோ விளைவிப்பதுஎன்று. தன் கட்சிக்குச் சாதகமாக விஷயம் ஒன்றும் சொன்னுள்: திடீரென்று ஒரு வெடிகுண்டைத் தூக்கிப் போட்ட மாதிரி சொன்னுன்: "நானே இதுமாதிரி ஒரு விஷயம் செய்திருக்கிறேன்—ஒருவரும் கண்டு பிடித்து விடவில்லை."

"நீயா?" என்ருன் ஆக்ஸெல் நம்பிக்கை இல்லாமல். "அப்படி நீ என்ன செய்திருக்கிருய்?"

"என்ன செய்திருக்கிறேனு? ஒன்றைக் கொன்றிருக்கிறேன்."

இத்தனையும் சொல்லுகிற உத்தேசம் இல்லையோ என்னவோ—அவளுக்கு. ஆனுல் இவ்வளவு சொன்னபிறகு பாக்கியையும் சொல்லாமல் என்ன செய்வது? அவளையே பார்த்துக் கொண்டு உட்கார்ந்திருந்தான் ஆக்ஸெல். தைரியத்துடனே, பெருமை யுடனே சொல்லிக் கொள்ளவில்லை அவள். ஒரு அசட்டுத் தனத்துடன், டம்பமாகச் சொன்னுள் அவள். அவன் வாயை அடக்குவதற்கு என்று பெரிதாக ஏதாவதொன்றைச் சொல்ல வேண்டும் என்று அவள் நினைத்தாள். "நம்பிக்கை வரவில்லையா உனக்கு? சொல்லுகிறேன் கேள். இங்கு வந்த புதிதில் பெர்கன் பேப்பரில் நான் ஒரு செய்தி வாசித்துக் காண்பித்தேனே உனக்கு — ஹார்பரில் ஒரு குழந்தையுடன் சடலம்கிடந்தது என்று. அந்தக் குழந்தை என் குழந்தை"

"என்ன அது?" என்ருன் அவன்.

"குழந்தையின் சவம் ஒன்று கிடந்தது என்று செய்தி படித் தேனே! உனக்கு எதுவுமே ஞாபகமே யிராதோ?"

ஒரு விநாடிக்குப் பிறகு அவன் ஆத்திரத்துடன் சொன்னுன்: "உனக்குப் புத்தி தடுமாறி விட்டது" என்று.

அவனுடைய வார்த்தைகள் அவளை இன்னும் அதிகமாகத் தூண்டிவிடுவதுபோல இருந்தது. ஏதோ அசாதாரணமான ஒரு பெரிய காரியத்தைச் சாதித்து விட்டவள் போல அவள் நுணுக்க மான விவரங்களுடன் அதை வர்ணித்தாள்: "பெற்றெடுத்து

அதைக் கொன்று என் கைப்பெட்டிக்குள் வைத்திருந்தேன். ஹார்பருக்குப் போனதும் எடுத்து வெளியே போட்டு விட்டேன்'' என்றாள்.

ஆக்ஸெல் மௌனமாக, முகம் இருள உட்கார்ந்திருந்தான். அதெல்லாம் நடந்து இப்போது பல வருஷங்களாகிவிட்டன — அவள் மேன்லாந்துக்கு வருவதற்கு முன் நடந்தது அது. அவளை யார் கண்டு பிடித்து விட்டார்களாம். சில விஷயங்கள் கண்டு பிடிக்கப்படாமலே போய் விடுவது உண்டுதான்! மனிதர்கள் செய்வதெல்லாம் கண்டு பிடிக்கப்பட்டு விடுமானால் உலகம் நடைபெறாது! நகரிலே கல்யாணமானவர்கள் இருந்தார்களே அவர்கள் செய்த காரியங்கள் கொஞ்சமா நஞ்சமா? பிறப்பதற்கு முன்னரே குழந்தைகளைக் கொன்று விடுவார்கள் அவர்கள்—அதைச் செய்வதற்குப் பிரத்தியேகமான டாக்டர்கள் இருந்தார்கள். ஒன்றிரண்டு குழந்தைகளுக்குமேல் இஷ்டமில்லாதவர்கள் கர்ப்பந்தரித்த பிறகு இப்படிச் செய்ய டாக்டர்களின் உதவியை நாடினார்கள். இது ஒன்றும் பெரிய விஷயம் அல்ல என்று முடித்தாள்.

"ஓஹோ! அப்படியானால் இதற்கு முந்தியதையும் நீதான் கொன்று குழியை வெட்டி மூடினாயோ?"

"அதெல்லாமில்லை. அதுவும் செத்துப் பிறந்தது" என்று மென்று முழுங்கினாள் பார்ப்ரோ. அதற்குப் பிறகும் அவளால் அதைப்பற்றிப் பேசாமல் இருக்கமுடியவில்லை. அப்படி ஒன்றும் பெரிய விஷயமல்ல இதெல்லாம் என்றாள் அவள். அதை மிகவும் சர்வசாதாரணமான விஷயமாக மதித்தாள் அவள். செய்யத் தகாத காரியம் எதுவும் செய்துவிட்டதாக அவளுக்குத் தோன்றவில்லை. முதல் தடவை அதுபற்றிச் சிரமப்பட்டிருக்கலாம் அவள். அதுபற்றி ஏதாவது மனச்சாட்சி அவளைக் குத்தியிருக்கும். இந்த இரண்டாவது தடவை அதெல்லாம் ஒன்றுமில்லை. ஒருதரம் செய்தது—இரண்டாவது தடவையும் தப்பித்துக்கொள்ளலாம் என்கிற சரித்திரபூர்வமான ஒரு ருஜுவுடன் நினைக்கத் தொடங்கி விட்டாள்.

ஆக்ஸெல் மனசில் பாரத்துடன் வீட்டைவிட்டு வெளியேறினான். பார்ப்ரோ தன்னுடைய முதல் குழந்தையைக் கொன்றவள் என்பதுபற்றி அவன் கவலைப்படவில்லை. அது அவன் சம்பந்தபடாத விஷயம்; அவனிடம் வந்து சேருமுன் அவளுக்குக் குழந்தை பிறந்தது என்பதுபற்றியும்கூட அவன்

கவலைப்படவில்லை. அவள் ஒன்றும் கற்பழியாத கன்னி என்று சொல்லிக்கொண்டு அவனிடம் வரவில்லை. உண்மையில் நகரில் தான் கற்றுவந்த வித்தைகளை எல்லாம் இரவில் இருளில் அவள் அவனுக்குப் பெருமையுடன் செய்து காட்டினுள். அது நல்லது தான்! அவனுக்கும் பிடித்துத்தான் இருந்தது. ஆனால் இந்த அவன் குழந்தை— அதை இழந்ததுபற்றி அவனுக்கு வருத்தம் தான்! சின்னஞ்சிறு பையன்—வெளேரென்றிருந்த சிறு உடலைக் கந்தலால் சுற்றிப் புதைத்துவிட்டாளே! அவள் அதைக் கொன்றிருந்தால், பெரும் தீங்கிழைத்தவள்தான். ஆக்ஸெலுக்குத் தீங்கிழைத்தவள்தான். அவனையும் அவளையும் பிணைத்த ஒரு கயிறை வேண்டுமென்றே அறுத்தெறிந்துவிட்டாள். மீண்டும் அத்தொடர்பு, அக்கயிறு உருவாகுமா? அவன் நினைத்தது பிசகாகவும் இருக்கலாம்; அவள் கால் வழுக்கியே தண்ணீரில் விழுந்திருக்கலாம்! அப்படியிருந்தால்—எதற்காகக் கையுடன் கந்தல் துணியை எடுத்துப் போயிருக்க வேண்டும்?

இடையில் காலம் ஓடிற்று. மணி ஆயிற்று. சாப்பாட்டு நேரம் வந்தது. மாலையும் வந்தது. ஆக்ஸெல் படுக்கையில் படுத்து வெகுநேரம் உறக்கம் வராமல் புரண்டு உருண்டான். கண்களை அகல விழித்து இருட்டில் எதையோ காண விரும்பினுன். பிறகு தூங்கிவிட்டான். காலையில் வெகுநேரம் தூங்கினுன். புது நாள் பிறந்தது. அதற்குப் பிறகு ஒன்றன் பின் ஒன்ருக நாட்கள் பல............

பார்ப்ரோ வழக்கம்போலவே இருந்தாள். அவள் உலகத்தைப் பூரணமாக அறிந்தவள். காட்டில் இருந்த மனிதர்கள் பார்த்துப் பயந்து ஒதுங்கிய பல விஷயங்கள் அவளுக்குச் சர்வ சாதாரணமாகத் தோன்றின. அதுவும் நல்லதுதான். இருவருக்கும் தேவையான கெட்டிக்காரத்தனம் அவளுக்கிருந்தது. இருவருக்கும் தேவையான அலக்ஷியமும் அவளுக்கிருந்தது. அவளைப் பார்த்தால் அப்படி ஒன்றும் ராக்ஷஸியாகவும் தோன்றவில்லை. ராக்ஷஸியா அவள்? இல்லவே இல்லை! அழகான பெண் அவள்— நீலக் கண்கள் படைத்தவள்! சற்றே எடுப்பான மூக்கும் அழகான உருண்டை முகமுமாக—அவள் அழகிதான். வேலைகளையும் அவள் சரிவரவே செய்தாள்—சுருசுருப்பாகச் செய்தாள். அவளுக்குப் பண்ணை வாழ்விலே அலுப்புத் தட்டிவிட்டது. அந்த மரத்தொட்டிகளும், ஆடுமாடுகளும் அவளுக்கு எரிச்சலூட்டின—ஆக்ஸெலைக் கண்டாலே அவளுக்குப் பிடிக்கவில்லை. அதற்காக அவள்

ராக்ஷஸியாகவில்லை. ஆடுமாடுகளை வெட்டுகிற காரியத்தில் அவள் பங்கெடுத்துக் கொள்ளவில்லை. இரவில் கையில் அரிவாளுடன் அவனை வெட்டிவிடுகிற உத்தேசத்துடன் அவனண்டையில் ரகசியத்தில் வந்துவிடவில்லை.

மீண்டும் ஒரே ஒரு தரம்தான் ஆற்றோரத்தில் புதைத்திருந்த அச் சிசுவின் சவம்பற்றி இருவரும பேசினார்கள். கோயிலின் நிழலிலே அதைப் புதைத்து விடவேண்டும். உரிய சடங்குகளுடன் என்பது ஆக்ஸெலின் கட்சி. தான் செய்ததுதான் சரி, தொந்திர வில்லாத வழி என்பது அவள் கட்சி. தன் கட்சிக்குப் பலமாகக் கடைசியில் அவள் வேறு ஒரு விஷயமும் சொன்னாள். அப்படி ஒன்றும் அசடல்ல அவள். கண்ணுக்கெதிரே யிருந்தது தெரி யாமல் தடுமாரவில்லை அவள். காட்டுமிராண்டி மாதிரித்தான் என்றாலும் அவளாலும் சிந்திக்க முடிந்தது!

"இது வெளியில் வந்து விட்டால் நான் போய் லென்ஸ் மாண்டிடம் பேசுகிறேன். அவனிடம் வேலை பார்த்திருக்கிறேன். ஹேயர்தாலின் மனைவி எனக்காகச் சிபாரிசு செய்வாள் என்பது எனக்குத் தெரியும். அத்தனை பெரியவர்களின் உதவி எல்லோ ருக்குமே கிடைக்குமா? கிடைக்காது என் அப்பாவும்..."

ஆக்ஸெல் தலையை ஆட்டினான்.

"அதில் என்ன தப்பு?"

"உன் அப்பாவினால் எதுவும் செய்ய முடியும் என்று நீ நினைக்கிறாயா?"

"அதைப்பற்றி உனக்கென்ன தெரியும்?" என்றாள் பார்ப்ரோ கோபமாக. "அவனை வீடு வாசலிழக்கச் செய்து வேலையையும் பிடுங்கிக் கொண்டுவிட்ட நீ என் அப்பாவைப்பற்றிப் பேச வேண்டாம்!"

தன் அப்பாவினுடைய ஸ்திதியோ நிலைமையோ சரியாக இல்லை —அதனால் தானும் கஷ்டப்பட நேரிடும் என்பது அவளுக்குத் தெரியாதா என்ன? அதற்கு ஆக்ஸெல் என்ன பதில் சொல்லக் கூடும்? அவன் பதிலே சொல்லவில்லை. அவன் குடியானவன்— சமாதானத்தை விரும்பியவன்—உழைப்பாளி.

# 3

அந்த மாரிக் காலத்தில் ஆக்ஸெல் மீண்டும் தன் பண்ணையில் தனியனுனன். பார்ப்ரோ போய்விட்டாள். ஆமாம். அது தான் முடிவு.

நகருக்குப் பயணம் அதிக நாளாகாது என்ருள் அவள். பெர்கனுக்குப் போகிறமாதிரி யில்லை என்ருள். ஆனல் பல் ஒன்றென்ருக விழும்வரையில் அங்கிருக்கத் தனக்கு இஷ்டமில்லை என்ருள். மாட்டுப் பல்மாதிரியாகிக் கொண்டிருக்கிறது என்ருள். "செலவு என்ன ஆகும்?" என்ருன் ஆக்ஸெல்.

"தெரியாது" என்ருள் அவள். "ஆனல் உனக்கு எதுவும் செலவில்லை. அதற்காகிற பணத்தை நானே சம்பாதித்துக் கொள்கிறேன்."

அப்பொழுது உடனேயே போவது அவசியம் என்றும், ஏன் என்றும் விளக்கமாகக் கூறினள். அச் சமயம் பால் கறக்க இரண்டு பசுக்கள்தான் இருந்தன. வஸந்தத்தில் இன்னும் இரண்டு பசுக்களாகிவிடும். அவை தவிர ஆடுகளும் பெருகி விடும். பிறகு வேலை ஒழியவே ஒழியாது. ஜுன் முடிகிறவரை ஓய்ச்சல் ஒழிவே இராது.

"உன்னிஷ்டம்" என்ருன் ஆக்ஸெல்.

அவளுக்கு ஒரு செலவுமில்லை. செலவு ஒன்றுமில்லை! ஆனல் கிளம்புவதற்குப் பணம் வேண்டுமே! கொஞ்சம் இருந்தால் போதும். பயணச் செலவு—தவிர பல் டாக்டருக்கும் பணம் தர வேண்டும். நகரில் புதுச் சால்வை ஒன்று வாங்கவேண்டும்... ஆனல் அவனுக்குத் தர இஷ்டமில்லாவிட்டால் பாதகமில்லை.

"இதுவரையில் வேண்டிய பணம் தந்தேனே!" என்ருன் அவன்.

"உம்......அதெல்லாம் செலவாகிவிட்டது."

"எதுவும் சேர்த்து வைக்கவில்லையா?"

"சேர்த்து வைப்பதா? வேண்டுமானல் என் பெட்டியைச் சோதித்துப் பார்த்துக் கொள். பெர்கனில் எனக்கு அதிகச் சம்பளம் கொடுத்தார்கள்—அங்கேகூட நான் சேர்த்து வைத்ததில்லை" என்ருள் அவள்.

"என்னிடம் உனக்குக் கொடுக்கப் பணம் இல்லையே!" என்றான் ஆக்ஸெல்.

அவள் திரும்பி வருவாள் என்கிற நம்பிக்கை இல்லை அவனுக்கு. தவிரவும் அவளுடைய நடவடிக்கைகளினாலும் பேச்சினாலும் அவள் அவனை இல்லாதபாடும் படுத்திவைத்து விட்டாள். அவளைப்பற்றி ஒரு அசிரத்தையே தோன்றிவிட்டது அவனுக்கு. கடைசியில் அவளுக்குப் பணம் கொடுத்தான் எனினும் அதிகம் தரவில்லை. உணவு மூட்டை பெரிசாகக் கட்டிக்கொண்டு அவள் கிளம்பினாள். அவன் அதையும் பொருட்படுத்தவில்லை. தன் வண்டியிலே அவளையும் அவள் பெட்டியையும் ஏற்றிக்கொண்டு போய் கிராமத்தில் கப்பலில் கொண்டுபோய் ஏற்றிவிட்டான்.

அது முடிந்துவிட்டது.

பண்ணையை அவன் ஒருவனாகவே சமாளித்துக்கொண்டு விடுவான். முன்னெல்லாம் செய்ததில்லையா? ஆனாலும் இப்போது பண்ணையிலே ஆடுமாடுகள் அதிகம் இருந்தன. அவன் பண்ணையை விட்டுக் கிராமத்துக்குப் போனால் அவற்றை யார் கவனித்துக் கொள்வார்கள்? கிராமத்துக் கடைக்காரன் ஒலேனுக்குச் சொல்லியனுப்பி வருவாள் என்றான். பல வருஷங்களுக்கு அவள் ஸெல்லன்ராவில் உதவி செய்திருக்கிறாள். கிழவி அவள்; இருந்தாலும் வீட்டு வேலைகளைச் சரிவரவே பார்த்துக் கொள்வாள். ஆக்ஸெல் அவளை வரச் சொல்லி ஆளனுப்பினான். அவள் வரவில்லை. வருவதாகச் சொல்லியும் அனுப்பவில்லை.

இடையில், காட்டைத் திருத்தி மரம் வெட்டினான். நிலத்தில் விளைந்த தானியத்தைச் சேகரித்தான். ஆடுமாடுகளை அவனே பார்த்துக் கொண்டான். அமைதியான தனிமையான வாழ்க்கை அது! சில சமயம் ஸெல்லன்ராவிலிருந்து ஸிவெர்ட் வண்டியில் பண்ணைப் பொருள்களை ஏற்றிக்கொண்டு கிராமத்துக்குப் போவான்—மரம், தோல், தானியம், பாலேடை ஏதாவது எடுத்துப் போவான். கிராமத்திலிருந்து எதுவும் வாங்கி வருவதில்லை அவன். ஸெல்லன்ரா பண்ணைக்கு எதுவும் தேவையே கிடையாது இப்போது. போகும்போதும் வரும்போதும் சில சமயம் ஸிவெர்ட் அங்கு ஆக்ஸெலுடன் தங்குவான். பேசுவான்.

சில சமயம் ப்ரேட் ஓல்ஸன் வருவான். சமீப காலத்தில் அதிகமாக வரத்தலைப்பட்டான். எதைத் தேடிக்கொண்டு வந்தான் அவன்! தந்தி இலாகா தானில்லாமல் நடக்காது என்று நிரூபிக்க

விரும்புகிறவன்மாதிரிப் பிரமாதமாக ஓடியாடி வேலை செய்தான்—தனக்கு மிஞ்சியுள்ள நோட்டீஸ் காலத்தில் சரிவர வேலை செய்து வேலையையாவது ஸ்திரப்படுத்திக் கொள்ளலாம் என்று எண்ணினானோ அவன்? பார்ப்ரோ போய்விட்ட பிறகு அவன் மேன்லாந்துக்குள் வந்து ஆக்ஸெலைப் பார்ப்பதில்லை. பேசாமல் தாண்டிப் போய் விடுவான். அவன் இருந்த நிலையில் அதுபற்றி யாரும் எதுவும் நினைப்பதற்கில்லை. அவன் என்ன செய்தால் என்ன? அவனைப் பெரிய மனிதன் என்று யார் நினைத்தார்கள்? அவன் இன்னமும் ப்ரேடாப்ளிக்கில்தான் தங்கியிருந்தான். நகரவில்லை. ஒரு நாள் அவன் ஒரு வார்த்தைகூடப் பேசாமல் தாண்டிப் போகும்போது ஆக்ஸெல் அவனை நிறுத்திக் கேட்டான்— எப்போது அந்த இடத்தைக் காலி செய்வதாக அவனுக்கு உத்தேசம் என்று கேட்டான்.

"பார்ப்ரோ உன்னை விட்டுப் போனாளே! எப்படிப் போனாள்?" என்று சம்பந்தமில்லாமல் பேசினான் ப்ரேட். ஒரு வார்த்தையிலிருந்து இன்றொன்றுக்குத் தாவினான். "அவளுக்கு உதவி செய்யாமல் பணமும் தராமல் அனுப்பிவிட்டாயே! எவ்வளவு சிரமப்பட்டு பெர்கன் போய்ச் சேர்ந்தாள் தெரியுமா?"

"ஹோ! அவள் பெர்கன் போய்விட்டாளா?"

"ஆமாம், கடைசியில் வெகு சிரமப்பட்டு பெர்கன் போய்ச் சேர்ந்ததாகத் தெரிவித்திருக்கிறாள் அவள். உனக்கு அவள் நன்றி உரியதன்று."

"உன்னைப் ப்ரேடாப்ளிக்கிலிருந்து சீக்கிரமே விரட்டி விடுகிறேன்" என்றான் ஆக்ஸெல் கோபமாக.

"உனக்கு எப்போதுமே இரக்கமான மனசுதான்" என்று கேலி செய்தான் ப்ரேட். "நாங்களோ புது வருஷத்தில் போய்விடுவோம்" என்று சொல்லிவிட்டுத் தன் வழி போனான் ப்ரேட்.

ஆகவே பார்ப்ரோ ஒரு வழியாக பெர்கன் போய்ச் சேர்ந்து விட்டாள் — ஆக்ஸெல் நினைத்த மாதிரியேதான் ஆயிற்று. அதைப்பற்றி அவன் வருந்தவில்லை. வருந்துவானேன்? எதற்காக? அவள் போனது நல்லதுதானே! பெரிய சனியன் விலகியது மாதிரி இருந்தது. இருந்தும் அவன் மனசிற்குள் அவள் திரும்பி வந்துவிடமாட்டாளா என்று ஆசைதான்! அர்த்தமற்ற காரண காரியமற்ற ஆசை அது! அவளிடம் அவனுக்கு என்னவோ பிடித்தம் விழுந்து விட்டது—ராக்ஷஸப் பெண்ணிடம். அவளிடம்

அவள் இன்பத்தை, பல விநாடிகள் சுகத்தை அனுபவித்து விட்டான். அவற்றை எல்லாம் அவன் மறக்க முடியுமா? அவள் பெர்கன் நகர் போகாதிருக்கட்டும் என்பதற்காகவேதான் அவன் அவளுக்கு அதிகப்பணம் தராதிருந்தான். எப்படியோ சமாளித்துக் கொண்டு கிளம்பிவிட்டாள். அவளுடைய துணிமணிகளில் சில இன்னமும் வீட்டிலேயே இருந்தன. பறவைச் சிறகுகள் வைக்க ஒரு வைக்கோல் தொப்பியைக்கூட விட்டுவிட்டுப் போயிருந்தாள்! வேறு சில் சாமான்களையும் பொட்டலமாகக்கட்டி அவள் படுக்கிற இடத்தில் விட்டு விட்டுப் போயிருந்தாள்! உம்...அவன் வருந்த வில்லை என்றும் சொல்லிவிட முடியாது. மனசில் உள்ளூர அவனுக்கு வருத்தம்தான். அவனைப் பார்த்துக்கேலி செய்வதற்கே போல அவனுக்காக அவள் தருவித்த பெர்கன் ந்யூஸ் பேப்பர் வாராவாரம் வந்துகொண்டிருந்தது—புது வருஷம் வரையில் அது நிற்காது.

சே! சிந்திப்பதற்கு, செய்யவதற்கு எத்தனையோ காரியங்கள் இருந்தன. அவற்றை விட்டுவிட்டு அவன் இப்படி இருந்தால் என்ன லாபம். ஆண் மகன் அல்லவோ அவன்!

வீட்டின் வடக்குச் சுவரை ஒட்டி அவன் வருகிற வஸந்தத்தில் ஒரு கொட்டகை போடவேண்டும். அதற்கு மரம் வெட்டவேண்டும் சதுரப் பலகைகள் அறுக்கவேண்டும். ஆக்ஸெலுடைய பண்ணை யிலே போதிய மரங்கள் இல்லை—ஆனல் அங்கும் இங்குமாக அவன் பண்ணையில் எல்லைக் கோடுகளிலே பல பெரிய கன மரங்கள் இருந்தன. ஸெல்லன்ரா பண்ணைக்குச் சமீபமான மரங்களைக் குறித்து வைத்திருந்தான்—வெட்டினுல் அவற்றை ஐஸக்கின் மர யந்திரசாலைக்குச் சுலபமாக வண்டியில் ஏற்றிச் செல்லலாம்.

ஒரு நாள் காலையில், வீட்டுக் கதவுகளை எல்லாம் சரிவரச் சாத்திவிட்டு, ஆடுமாடுகளுக்கு நாள் பூராவும் போதுமான தீனியைப் போட்டுவிட்டு, மரம் வெட்டுவதற்குக் கிளம்புகிருன் அவன். ஒரு கூடையில் உணவும், ஒரு கோடாலியும், பனியை ஒதுக்க ஒரு பனிவாறு கோலும் எடுத்துக்கொண்டு கிளம்புகிருன். அதிக வெப்பமோ அதிக குளிரோ பனியோ இல்லாமலிருந்தது. முந்திய தினம் அடித்த பனிப் புயலில் விழுந்த பனி பூராவும் இன்னும் மறைந்துவிடவில்லை. தந்தி மரங்களைத் தொடர்ந்து சென்று குறிப்பிட்ட இடத்தில் மேல் சட்டையைக் கழட்டிவிட்டு வேலையைத் தொடங்குகிருன். மரங்கள் விழவிழ அவற்றின்

கிளைகளை வெட்டி ஓரிடத்தில் குவிக்கிறான். பெரிய மரங்களை ஒரு ஓரமாக எடுத்துச் சேர்க்கிறான்.

ப்ரேட் ஓல்ஸன் அந்தப் பக்கமாக வருகிறான்—தந்தி மரம் ஏதாவது சாய்ந்திருக்கும் முந்திய தினத்தின் புயலிலே. அல்லது ப்ரேடுக்கு உண்மையில் வேலை எதுவும் இருந்திராது—வேலையில் ஜரூராக இருப்பதாகக் காட்டிக்கொள்வதற்காக வந்திருக்கலாம். சமீபகாலமாக அவன் தந்தி இலாகா வேலையில் பிரமாதமாகக் கவனம் செலுத்துகிறான். இருவரும் பேசவில்லை—ப்ரேட் தன் வழி செல்லுகிறான் தன் வேலையைப் பார்த்துக்கொண்டு.

காற்று விசிறி விசிறி அடிக்கத் தொடங்குகிறது. ஆக்ஸெல் அதைக் கவனிக்கிறான் எனினும் தன் வேலையை நிறுத்தவில்லை. நண்பகலாகி வெகு நேரமாகிவிட்டது. இன்னமும் அவன் சாப்பிட வில்லை. பிறகு ஒரு பெரிய மரத்தை வெட்டிச் சாய்க்கையில் அதன் கீழே மாட்டிக்கொண்டு விடுகிறான். எப்படி நடந்தது என்று அவனுக்கே புரியவில்லை—ஆனால் நடந்துவிட்டது. அடி மரத்தை வெட்டிவிட்டான்—இந்தப் பக்கம் விழவேண்டும் என்பது மனிதனின் விருப்பம். ஆனால் புயல் வேறு விதமாகச் செய்து விடுகிறது. புயல்தான் ஜயிக்கிறது. பனி பெய்த காரணத்தினால் தரை தெரியாமல் வழுக்கிக் கால் தடுக்கி விழுந்து அடியில் மாட்டிக்கொண்டு விட்டான் ஆக்ஸெல். மரத்தின் முழு கனமும் அவனை அமுக்குகிறது.

அதற்குப் பிறகு? எப்படியானாலும் தப்பித்துக் கொண்டிருக் கலாம். முடியவில்லை. எலும்பு ஒன்றும் ஒடிந்து நொறுங்கி விடவில்லை—அவனுக்குத் தெரிந்தவரையில். ஆனால் திமிறித் தப்பித்துக்கொள்ள இயலாதபடி மாட்டிக் கொண்டுவிட்டான். ஒரு கையை விடுவித்துக்கொள்ளவே நேரம் பிடிக்கிறது. அப்படியும் கோடாலி எட்டவில்லை. கூண்டில் அடைபட்ட மிருகம்போல அசைவற்றுப்போய் என்ன வழி என்று யோசிக்கிறான். சுற்றுமுற்றும் பார்க்கிறான். பிறகு நெளிந்து நெளிந்து தப்ப முடியுமா என்று பார்க்கிறான். இன்னும் சற்று நேரத்தில் அந்தப் பக்கம் போன ப்ரேட் வந்துவிடுவான்; உதவி கிடைக்கும். உடல் வலிக்க நெளிந்து என்ன லாபம் என்று எண்ணிப் பேசாதிருக்கிறான்.

அதைப்பற்றி முதலில் அவன் அதிகமாகக் கவலைப்பட வில்லை. வேலை கெடுகிறது என்பதுபற்றி மட்டும் சற்று

வருத்தமாக இருந்தது. பிரமாதமான விஷயம் அல்ல அது. உயிர் போய்விடாது. உண்மைதான் மரத்துக்கடியில் அகப்பட்டுக்கொண்டு விடுவிக்க முடியாமற் போன கை ரத்தம் செத்து மரத்துவிட்டது—இரண்டு கற்களுக் கிடுக்கில் மாட்டிக்கொண்ட காலும் மரத்துக் கொண்டிருக்கிறது. அது எப்படியானால் என்ன? ப்ரேட் வந்து சீக்கிரமே விடுவித்துவிட மாட்டானா?

ப்ரேட் வரவில்லை.

புயலும் காற்றும் பனி பெய்வதும் அதிகரிக்கிறது. பனிப் படலம் ஆக்ஸெலின் கண்ணை மறைக்கிறது. காற்றும் சற்றுக் கடுமைதான். அதுபற்றி அதிகம் கவலைப்பட வேண்டியதில்லை. பிறகு ஒருதரம் உரக்க "உதவி" என்று கூவுகிறான். அந்தக் காற்றிலே அவன் கூவியது யார் காதில் விழுந்துவிடப் போகிறது? ப்ரேட் போன பக்கம் அவன் குரல் எட்டலாம்—காற்று அந்தப் பக்கம்தான் வீசுகிறது. அவன் உள்ளத்திலே எத்தனையோ வித விதமான சிந்தனைகள் தோன்றி மறைகின்றன. கோடாலி கைக்கு எட்டினால் சமாளித்துக்கொண்டு விடுவான். கையை விடுவித்துக் கொள்ள இயலவில்லை. கூர்மையான ஒரு கல்லில் தேய்ப்பட்டது அவன் விடுவித்துக்கொள்ள முயன்றபோதெல்லாம். அந்தக்கல் மட்டும் அங்கு இல்லாதிருந்தால்...........கல் இருந்தது. கடின மாகவும் இருந்தது.

இப்போது நேரமாகிக் கொண்டிருந்தது. இன்னும் நேரமாகிக் கொண்டேயிருந்தது. பனி மேலும் மேலும் பெய்து கொண்டிருந்தது. ஆக்ஸெல் மேலெல்லாம் பனி பெய்து மூடிவிடுகிற அளவுக்கு வந்துவிட்டது. பனிக்கு என்ன தெரியும்? அவன் முகத்தை எல்லாம் மூடுகிறது. முதலில் பனி உருகுகிறது. பிறகு அது உருகாமல் அப்படியே நின்றுவிடுகிறது. முகம் ஜில்லிடுகிறது. ஹா! பனியா அது?

இரண்டுதரம் பெரிதாகக் கூப்பாடு போடுகிறான் அவன். கவனிக்கிறான்.

அவன் கோடாலியைப் பனிமூடிவிட்டது. இப்போது அதன் காம்பைத் தவிர வேறு எதுவும் வெளியே தெரியவில்லை. அதோ அங்கே அவனுடைய உணவுக் கூடை இருக்கிறது. அதை அவனால் எட்ட முடியவில்லையே! முடிந்தால் அவனுக்கிருக்கிற பசியில் அள்ளி அள்ளிப் போட்டுக்கொண்டு விடமாட்டானா? அதற்குமேல் கூட அவன் கனவு காண்கிறான். குளிர் தாங்க

வில்லை. கோட்டையும் போட்டுக் கொள்ள முடிந்தால் மீண்டும் ஒருதரம் உதவி நாடிக் கூவுகிறான்......

அதோ ப்ரேட் வருகிறான். வந்தவன் நிற்கிறான்; கூவுகிறவனைப் பார்க்கிறான். ஒரு நிமிஷம்தான் அந்தப் பக்கம் பார்க்கிறான்.

"அந்தக் கோடாலியை எடுத்துக் கொடு" என்கிறான் ஆக்ஸெல், பலஹீனமாக.

ப்ரேட் அவசரமாக எதிர்பக்கம் திரும்புகிறான். அவனுக்கு விஷயம் புரிந்துவிட்டது. ஆனால் தந்திக் கம்பிகளைப் பார்த்துக் கொண்டே வாயால் சீட்டி அடிக்கிறான்ம. றுபடியும் ஆக்ஸெல் பக்கம் திரும்பாமலே நடக்கிறான். அதற்கென்ன அர்த்தம்?

ஆக்ஸெல் மீண்டும் கூவுகிறான்: "இதோ — அந்தக் கோடாலியை எடுத்துக் கொடு—மாட்டாயா? நான் மரத்தினடியில் மாட்டிக்கொண்டு விட்டேன்."

ஆனால் ப்ரேடின் கவனம் பூராவும் இப்போது அந்தத் தந்திக் கம்பங்களின்மேல் இருக்கிறது. அவன் மனசில் உள்ள சந்தோஷம் தெரியும்படி சீட்டி அடித்துக்கொண்டு மேலே செல்லுகிறான்.

"ஓ! என்னைக் கொலை செய்கிற உத்தேசமா உனக்கு? அந்தக் கோடாலியைக்கூட எடுத்துத் தரமாட்டாயா?" அதற்குள் தந்திக் கம்பிகளில் எதுவும் பிசகில்லை—அப்பால் என்ன என்று பார்க்க விரும்பியவன்போல அவசர அவசரமாக நடந்துவிட்டான் ப்ரேட். ஆக்ஸெலின் கண்களுக்கப்பால் மறைந்தே போய்விட்டான்.

அப்படியா? அதுவும் நல்லதுதான். ஆக்ஸெல் தானாகவே தான் விடுபட்டுத் தப்பித்துக் கொள்ளவேண்டும். அவனுக்கு ப்ரேட் உதவி செய்யமாட்டான். கோடாலியை எடுக்கத் தன்னாலான மட்டும் முயலுகிறான் ஆக்ஸெல். அவன் மேல் விழுந்து கிடக்கும் கனமான பாரத்தை அசைத்துப் புரட்டிவிடத் தன்னாலான மட்டும் முயலுகிறான். மரம் அசைகிறது—அதன் இலைகள் சலசலக்கின்றன. அதன்மேல் விழுந்து உரைந்த பனி உதிர்ந்து விழுகிறது. ஆனால் அவனால் அதைத் தள்ளிவிட முடியவில்லை. இன்னும் இரண்டொரு தடவை முயலுகிறான். பிறகு முடியாது என்று விட்டுவிடுகிறான்.

இப்போது இருட்டத் தொடங்கிவிட்டது. ப்ரேட் போய் விட்டான்—அப்படி எவ்வளவு தூரந்தான் போயிருப்பான்.

மீண்டும் ஆக்ஸெல் கூவுகிறான். அதற்குப் பிறகு சில வசவுகளை யும் சேர்த்துக் கொள்ளுகிறான். "கொலைகாரன்! சாகட்டும் என்று போய்விட்டானே! உனக்கு என்ன இதயமோ இரக்கமோ கிடையாதா? உதவி செய்தால் ஒரு பசுமாடு இனமாகக் கேட்டால் கூடத் தந்து விடுவேனே! ப்ரேட்—நீ எப்போதுமே எச்சிற்கலை நாய்தான். ஒரு மனிதன் சாகட்டும் என்று விட்டுவிட்டுப் போய் விட்டாயே? ஓ! இது விஷயம் பலருக்கும் தெரியும்படிச் செய் கிறேன் பார்—பார்............"

மௌனம்தான் நிலவியது. மீண்டும் மரத்தைப் புரட்ட முயலு கிறான். சிறிது தள்ளுகிறான். அதற்கு மேல் இயலவில்லை; பெரு மூச்சு விடுகிறான். அதற்குமேல் தாளாது. அவனுக்குத் தூக்கம் வருகிறமாதிரி இருக்கிறது. ஆடு மாடுகள் வீட்டிலே தீனியில்லா மல் கதறிக் கொண்டிருக்கும். காலை முதல் அவற்றிற்கு உணவு கிடையாதே! பார்ப்ரோ இருந்தால் பார்த்துக் கொண்டிருப்பாள். ஆனால் பார்ப்ரோதான் போய்விட்டாளே! வெள்ளி மோதிரம் தங்க மோதிரம் இரண்டையுமே எடுத்துக்கொண்டு போய் விட்டாள். இருட்டிவிட்டது. மாலை. இரவு......தவிரவும் ஒரே அடியாகக் குளிருகிறது. அவன் தாடியில் பனி உரைகிறது. கண்கள்கூட பனியால் மூடி உரைகின்றன. இடுப்புவரை ஒரு கால் செத்துவிட்டது. "கடவுள் விட்ட வழி" என்று தனக்குள் முணு முணுத்துக் கொள்கிறான். ஓஹோ! இப்போது கடவுளைப் பற்றிய ஞாபகம்கூட வந்துவிட்டதா? இருட்டில் சாக முடியாதா என்ன மனிதனால்? முடியும், முடியும். தாழ்மையுடன் கடவுளின் கருணையான அந்தப் பனிப் புயலைப் பார்த்துச் சிரிக்கிறான். அவன் இப்போது அந்தப் பாவி ப்ரேடைக்கூட மன்னித்துவிடத் தயார். அவன் செய்த காரியம்பற்றி யாரிடமும் தெரிவிக்க வேண்டிய தில்லை.

அவனால் அசைய முடியவில்லை. தூக்கம் வருகிறது. ஏதோ விஷம் அருந்தி மயக்கத்தில் கிடப்பவன்போலக் கிடக்கிறான். எங்கு பார்த்தாலும் ஒரே பனி — வெண்மையாக இருக்கிறது! காடு, மலை, நிலம், ஆகாயம் எல்லாம் ஏன் இப்படி ஒரே வெண்மை யாக இருக்கின்றன? வேறு என்ன—பனிதான்? இது ஒன்றும் கனவல்ல. அவன் மரத்துக்கடியில் உயிருக்கு மன்றாடிக்கொண்டு கிடப்பதும் கனவல்ல.

கர்ஜனைமாதிரி ஒரு சப்தம் செய்கிறான் அவன். மீண்டும் கூவி உதவி கோருகிறான். தன் வீடு வரையில் கேட்கும்படியாக

சுவாசகோசம் வெடித்து விழும்படியாகக் கூவுகிறான். மறுபடியும் மறுபடியும் கூவுகிறான். மீண்டும் ப்ரேடைத் திட்டுகிறான்: "மனிதனா அவன்! பன்றி! பன்றி! கிடந்து சாகட்டும் என்று விட்டுவிட்டுப் போகிறானே—அவன் மனிதனா? மிருகங்கள்கூட உதவி செய்து கொள்ளுமே ஒன்றுக்கொன்று. போ போ நீ போகிற வழி சரியாக இருக்கட்டும்......"

தூங்கிப் போய்விட்டான் போலும். இப்போது அசையவே யில்லை அவன். உயிர் இருக்கிறமாதிரியே இல்லை. ஆனால் அவன் கண்கள் திறந்தபடி. மேனியிலே பனி விழுந்துகொண் டிக்கும்போது அவற்றை எப்படி மூட முடியும்? ஒரு நிமிஷம் தூங்கினானோ என்னவோ—ஆனால் மீண்டும் விழித்துக்கொண்ட போது, கடவுள் காக்ஷிதரவில்லை. பதிலுக்கு அவன் எதிரில் ஓலேன் நிற்கிறாள். அவள் கேட்டுக் கொண்டிருக்கிறாள்: "ஏசு அறியச் சொல்—உயிர் இருக்கிறதா உனக்கு?" என்ன. ஏன். எப்படி என்றெல்லாம் கேட்டுக்கொண்டு நிற்கிறாள்.

ஓலேன் என்பவள் எப்போதுமே நரியைப் போல. ஏதாவது சாகக் கிடந்தால் அதை முகர்ந்து மோப்பம் பிடித்துக்கொண்டு வந்துவிடுவாள். எங்கே எந்த சமயத்தில் தீங்கு, கெடுதி நேரப் போகிறது என்பது அவளுக்குத் தெரிகிறமாதிரி வேறு யாருக்கும் தெரியாது. அப்படி இல்லாவிட்டால் அவள் எப்படித் தன் னுடைய நீண்ட ஆயுளைக் கழித்திருக்க முடியும்? அவளை வரச் சொல்லி ஆக்ஸெல் சொன்னது அவள் காதுக்கெட்டியது; எழுபது வயதான அவள் கடல் கடந்து, அவன் பண்ணையில் உதவ வந்தாள். பனிப் புயலில் மாட்டிக்கொண்டு முந்தாநாள் ஸெல்லன்ராவில் தங்கினாள். பிறகு மேன்லாந்து வந்தாள். அவள் வந்தபோது அங்கு யாரையுமே காணவில்லை! ஆடுமாடு களுக்குத் தீனி போட்டாள். ஏதோ அபாயக் குரல் கேட்டது, கவனித்தாள். மீண்டும் கேட்டது.

மூன்றாவது தடவையாக "உதவி" என்கிற கூவுதல் கேட்ட தும், ஆக்ஸெலாகத்தான் இருக்கும் என்று எண்ணிக் கிளம்பினாள் அவள். அல்லது ஏமாற்றுகிற குன்றுக் கோமாளித் தேவதைக ளாகவும் இருக்கலாம். அதனாலென்ன? அவற்றிற்கெல்லாம் பயந்தவள் அல்ல ஓலேன். எதுவானாலும் அதை மோந்து மோப்பம் பிடித்துக் காண வேண்டாமா? அதுதானே ஓலேனின் தொழில்? ஓலேனுக்கு யார் தீங்கு செய்யத் துணிவார்கள்?

அதோ அவள் வந்துவிட்டாள்.

கோடாலியா? பனியில் கோடாலி எங்கே புதைபட்டிருக்கிறது என்று தெரியவில்லை. நோண்டி நோண்டிப் பார்க்கிறாள். கோடாலி வேண்டாமே என்று மரத்தை அப்புறப்படுத்தத் தன்னால் ஆனமட்டும் முயலுகிறாள். ஆனால் அவள் கைகளில் போதிய தெம்பு இல்லை. இலைகளும் கிளைகளும் ஆடுகின்றன அவ்வளவுதான். மீண்டும் கோடாலி தேடுகிறாள்—கையாலும் காலாலும் தேடுகிறாள். கையை அசைத்துக் காட்டக்கூட முடிய வில்லை ஆக்ஸெலால். முன்னிருந்த இடத்தில் இல்லை அந்தக் கோடாலி. "ஸெல்லன்ராகூட அதிக தூரமாச்சே" என்று முணு முணுக்கிறான் ஆக்ஸெல்.

ஒலேன் அந்தக் கோடாலி இல்லாத இடங்களிளெல்லாம் தேடுகிறாள். அங்கில்லை அங்கில்லை என்கிறான் ஆக்ஸெல். "இதென்னவாம்" என்று கடைசியில் கோடாலியைக் கண்டே பிடித்து விடுகிறாள் ஒலேன்.

"கிடைத்ததா?"

"கடவுள் புண்ணியத்தில் கிடைத்தது" என்கிறாள் ஒலேன். பெரிதாக வார்த்தைகள் சொல்லி மகிழ்கிறாள்.

கோடாலியை எப்படி அவன் உபயோகிக்க முடியும்? அவன் கை மரத்து உயிரற்றுப் போய்விட்டது. அவன் தலை சுற்றுகிறது. ஒலேன் தான் அவனை விடுவிக்க வேண்டும். அதற்குமுன் ஒலேன் கோடாலியை உபயோகித்திருக்கிறாள். எத்தனையோ விறகு பிளந்திருக்கிறாளே அவள்!

ஆக்ஸெலால் நடக்க முடியவில்லை. இடுப்புவரை ஒரு கால் செத்துவிட்டமாதிரி இருக்கிறது. இடுப்பே ஒடிந்துபோய் விட்ட மாதிரித்தான் இருக்கிறது. முனகுகிறான் அவன். மரத்துக் கடியிலே விடுபடாமல் இன்னமும் ஏதோ கிடப்பதுபோல இருக் கிறது அவனுக்கு. "என்ன அது? என்ன அது? தெரிய வில்லையே!" என்று கேவுகிறான் அவன். ஒலேனுக்கு இது விஷயம் தெளிவாகவே புரிகிறது. கடவுள் அவனைக் காற்பாற்றத்தானே அவளை அனுப்பினான். கடவுளுக்குச் சாத்தியமல்லாதது எது. பொறுமையாக இரு. எல்லாம் சரியாகிவிடும்.

" அது சரி. இருந்தாலும்.........இருந்தாலும்.........என்று முனகுகிறான் ஆக்ஸெல்.

ஒரு தினுசாக இருக்கிறதா? இரு. சற்றுப் பொறு. காலை யும் கையையும் கொஞ்சம் கொஞ்சமாக அசை—அவற்றில் ரத்தம் ஓடட்டும்—உணர்வு மீண்டும் வரட்டும். சட்டையைப் போட்டுக் கொள். குளிரும் மறையட்டும். கடவுளே குரல் கொடுத்து அவனைக் காப்பாற்ற அவளை அனுப்பினர். இல்லாவிட்டால் அவன் குரல் அவ்வளவு தூரம் அவளுக்கு எட்டியிருக்குமா? கடவுள் இல்லை என்று யார் சொன்னது. அந்த நாளிலும் இந்த நாளிலும் அவன் இருக்கிறுன். அவனில்லாமல் எதுவும் அசையாது!

விந்தைதான். ஒலென் பேசிக் கொண்டிருந்தாள். இடையில் ஆக்ஸெல் தள்ளாடித் தள்ளாடி நடந்து தன் கைகளையும் கால் களையும் மீண்டும் பெற்றுக் கொண்டிருந்தான். நடக்க முயன்றுன்.

மெதுவாக வீடு நோக்கிக் கிளம்பினுர்கள். ஒலென் அவனைக் கைத்தாங்கலாகத் தாங்கிக்கொண்டு பேசிக்கொண்டே நடக்கிறுள். தன் புகழையும் கடவுளின் புகழையும் சேர்த்துச் சேர்த்துப் பாடுகிறுள். எப்படியோ மெள்ள நகருகிறுர்கள் இருவரும். பாதி வழியில் ப்ரேட் வருகிறுன். "என்ன இது?" என்கிறுன் ப்ரேட். "விபத்து நேர்ந்ததா? நானும் உதவுகிறேன்."

ஆக்ஸெல் அவனைக் கவனியாத மாதிரி நடக்கிறுன். கடவு ளறிய அந்தப் பாபியை மன்னித்து விட்டான் அவன். அவன்மேல் கோபம் காட்டுவதில்லை என்று தீர்மானித்து விட்டான் அவன். அந்த வழியில், எதற்காக வந்தான் அவன் மீண்டும்? ஒலென் உதவி புரிந்திருப்பாள் என்று எண்ணிப் பார்க்கலாம் என்று வந்தானு?

"நீயா ஒலென்?" என்றுன் ப்ரேட் வெகுவாக. "எங்கே கண்டாய் அவனை? மரத்துக்கடியிலா? என்ன ஆச்சரியம்? நான் சற்றுமுன் அந்தப் பக்கம் வந்தேனே! யாரோ கூவுவது என் காதிலும் கேட்டது. பார்த்தேன் பார்த்தேன்—எதுவும் என் கண்ணில் படவில்லையே! மரத்திற்கடியில் அகப்பட்டுக்கொண்டு ஆக்ஸெலா கூவியது அப்படி?"

"ஆம், நான்தான். நீயும் பார்த்தாய் என்னை. நான் கூவுவதையும் கேட்டாய். உதவ மறுத்துவிட்டாய்..."

"கடவுளே! அப்படியா?" என்றுள் ஒலென். திகைத்துப் போனவளாக. "பாவிநான்..."

ப்ரேட் சொன்னான்: "பார்த்தேனா? உன்னைப் பார்த்தேனே அதான். ஆனால் நீ விஷயத்தைச் சொல்லக் கூடாதோ! சும்மா படுத்திருக்கிறாய் என்று எண்ணினேன் நான்."

"போதும். உன் பேச்சை நிறுத்திக்கொள்" என்றான் ஆக்ஸெல் கோபமாக. "சாகட்டும் அப்படியே என்று விட்டு விட்டுப் போனாய் நீ!"

ஒலினுக்குப் புரிந்து விட்டது. ப்ரேட் குறுக்கிடும்படி விடக்கூடாது. ஆக்ஸெல் இது விஷயத்தில் தனக்குப் பூரணமாக கடமைப்பட்டிருக்க வேண்டியவன் — அதில் ப்ரேட் குறுக்கே வரலாமோ? அவள் ஒண்டியாக ஆக்ஸெலைக் காப்பாற்றினாள் — அவள் மட்டும்தான். ப்ரேடை ஒரு கையால் ஒதுக்கினாள். அவன் கோடாலியையோ அல்லது உணவுக் கூடையையே கூடத் தூக்கி வரக்கூடாது என்று தீர்மானிக்கிறாள். அப்போது அவள் ஆக்ஸெல் கட்சி — சமயம்வாய்த்து அவள் ப்ரேடுடன் பேசினால் பிறகு அவன் கட்சி பேசுவாள்.

"கோடாலியையும் மற்றதையும் நான் தூக்கிவருகிறேன்" என்றான் பிரேட்.

"வேண்டாம். ஆக்ஸெலே எடுத்து வரட்டும்" என்றாள் ஒலின்.

ப்ரேட் தொடர்ந்து சொன்னான்: "நீ என்னைக் கூப்பிட்டுச் சொல்லியிருக்கலாம். அப்படி என்னோடு பேசக்கூடாது என்கிற அளவுக்கு நீயும் நானும் விரோதிகளா என்ன? நீ கூப்பிட்டாயா? உரக்கக் கூவியிருக்கலாம். கையை ஆட்டிக் காட்டி யிருக்கலாம்."

"ஆட்டுவதற்கு எனக்குக் கையில்லை. இதெல்லாம் எதற்கு இப்போது? எனக்கு உதவ மனமில்லாமல் நீ போய்விட்டாய்?"

"சத்தியமாகச் சொல்கிறேன். அப்படியில்லை."

"அதுசரி. என் இந்தத் தொணதொணப்பு. பாவம்! அவன் படுகிற அவஸ்தையில் இந்தப் பேச்சு வேறு எதற்கு" என்கிறாள் ஒலின்.

ஆக்ஸெலுக்கு விஷயங்கள் தெளிவாகத் தெரிகின்றன. அவன் ஒலினைப் பற்றிக் கேள்வி பட்டிருக்கிறான். இது விஷயம் தன் பொருளுக்கு ஆபத்து என்று உணருகிறான். அவனுக்குத் தான் உதவியதை மறக்கவே விடமாட்டாள் ஒலின். தன்னைக்

காப்பாற்றிய பெருமை அவர்கள் இருவருக்குமேதான் இருக்கட்டுமே. கோடாலியையும் உணவுக் கூடையையும் மற்றுமுள்ள சாமான்களையும் ஆக்ஸெல் ப்ரேடின் கையில் தந்துவிடுகிறான். அதைத் தன்னால் எடுத்துவரமுடியவில்லை என்கிற மாதிரி பாவனை செய்கிறான். ஒலினுக்கு அது பிடிக்கவில்லை. ப்ரேடின் கையிலிருந்து அந்த சாமான்களைப் பிடுங்கிக் கொள்கிறாள். இருவரும் ஒருவருக்கொருவர் சளைத்தவர்கள் அல்ல ஆக்ஸெலைத் தாங்கிக்கொண்டு நடக்கிறான் ப்ரேட்.

சிறிது தூரம் நடக்கிறார்கள் இப்படி. ப்ரேடின் தாங்குதலில் ஆக்ஸெல் நடக்கிறான்—ஒலின் சாமான்களைத் தூக்கி வருகிறாள். மனிதனா அவன்—அந்த ப்ரேட் ஒரு ராஷஸன் அல்லவா? ஒலினின் உள்ளம் குமுறுகிறது. கசப்பால் நிறைகிறது.

"உன் பண்ணையை விற்றுவிட்டாயாமே ப்ரேட்" என்று அவனிடம் பேச்சுக் கொடுக்கிறாள் ஒலின்.

"அது தெரிந்து யாருக்கு என்ன ஆகவேண்டும்?" என்கிறான் ப்ரேட்.

"அப்படியா? ரகசியமான விஷயமா அது? ஏலம் என்றெல்லாம் சொன்னார்களே!"

"நீயும் வந்து ஏலம் கேட்பதுதானே!"

"நானா? ஏழையைப் பார்த்து நீ ஏளனம்தான் செய்வாய்!" என்றாள் ஒலின்,

"நீ பணக்காரியாகி விட்டாயாமே! மாமா ஸிவெர்ட்டின் சொத்துப் பூராவும் உன்னுடையதுதானாமே! ஹே ஹே ஹே!" என்று சிரித்தான் ப்ரேட்.

அதுபற்றி எண்ணி பொருமினாள் ஒலின். அதை ப்ரேட் இப்போது ஞாபகப்படுத்தியது அவளுக்குப் பிடிக்கவேயில்லை. "ஆம். கிழவன் ஸிவெர்ட் எனக்குத் தரவேண்டுமென்று ஆசைப்பட்டான். அது உண்மைதான். ஆனால் அவன் போனபிறகு எதுவும் மிஞ்சவில்லை. ஒன்றுமில்லாது போய்விட்டால்—வீடு வாசல் பண்ணை எல்லாம் போய்விட்டால் எப்படி என்று உனக்கே தான் அனுபவபூர்வமாகத் தெரியுமே. நீயும் நானும் ஏழைகள் தான் ப்ரேட்—மாமா ஸிவெர்ட் சொர்க்கத்தில் இருக்கிறான். அவனைப் பற்றி என்ன பேச்சு?"

"நீயும் உன் பேச்சும்" என்றான் ப்ரேட் அலஷியமாக. "நல்ல வேளையாக நான் சமயத்தில் ஆக்ஸெலுக்கு உதவ வந்தேன்! சிரமமாக இருக்கிறதா இப்படி வேகமாக நடப்பது?"

"இல்லை."

யார் ஒலேனுக்கு எதிர்த்துப் பதில் சொல்லி மீளமுடியும்? யாரும் அவளிடம் பேச்சுக் கொடுத்து வென்றுவிட முடியாது. இரக்கமும் கடுமையும், பச்சாத்தாபமும் கோபமும் மாறி மாறிக் காண்பித்து உயிரை உறிஞ்சிவிட மாட்டாளா அவள். விஷமும் விஷமமும் நிறைந்தவை அவள் வார்த்தைகள்! ஆக்ஸெலுக்கு ஏதோ உதவியவன் போலப் பேசி விட்டானே அவன்! அது நடக்குமா?

மீண்டும் தொடங்குகிறாள் ஒலேன்: "அந்த ஸ்வீடிஷ் கனவான்கள் ஸெல்லன்ராவுக்கு வந்தார்களே — உன் ஸாம்பிள் கற்களை எல்லாம் அவர்களிடம் காண்பித்தாயோ ப்ரேட்?"

"ஆக்ஸெல் — உன்னால் நடக்கமுடியாவிட்டால் நான் உன்னை என் தோள்மேல் தூக்கிக் கொள்கிறேன்" என்றான் ப்ரேட்.

"வேண்டாம். நன்றி."

போவதற்கு அதிக தூரமும் இல்லை. அதற்குள் ஒலேனுக்குத் தன் விஷத்தை எல்லாம் கக்கியாகிவிட வேண்டுமே! "அவன் கூப்பிட்டும் காதில் விழாதமாதிரி போய்விட்டாயா ப்ரேட் அப்படிச் செய்ய உன்னால் எப்படி முடிந்தது ப்ரேட்?"

"வாயை மூடிக்கொண்டுவா" என்கிறான் ப்ரேட்.

கையில் கனமான சாமான்களைத் தூக்கிக்கொண்டு அந்தப் பனியில் நடந்துகொண்டே அவளால் பேசத்தான் முடியவில்லை. ஆனால் ஒலேன பேசாதிருந்துவிடுவாள்! கூரான அம்பு, ரகசிய அம்பு ஒன்று வைத்திருந்தாள் — அதை எடுத்துத் தொடுத்து விட்டாள். அது பேசுவதற்குக் கடினமான விஷயம்தான் — ஆபத்தான விஷயம்தான். இருந்தும் ஒலேன் அது பற்றிப் பேசினாள்: "பார்ப்ரோ எங்கே இப்போது? ஓடிப்போய் விட்டாளோ?"

"ஆமாம்" என்றான் ப்ரேட் அலக்ஷயமாக. "அவள் போனதினால்தான் இப்போது உனக்கு இங்கு இடம் கிடைத்தது."

ஒலேனுக்கு இது ஒரு புது சந்தர்ப்பம். ஒலேன் எப்படிப்பட்ட பெண். அவளில்லாமல் எந்தப் பண்ணையில் எந்தக் காரியம் சரிவர

நடைபெறும்? எங்கிருந்தெல்லாமோ அவளை அழைத்து வர ஆளனுப்பினார்கள். எத்தனையோ இடங்களுக்குச் சென்றிருக்கலாம் அவள். மதகுருவின் வீட்டில் அவளை அழைத்தார்கள். கையில் இத்தனை தருகிறேன் என்று சொல்லிக்கூட அழைத்தார்கள். நிறையவே கொடுப்பதாகத்தான் சொன்னார்கள். ஆனால் மேன் லாந்துக்கு வந்தாள் அவள் — மற்றவர்கள் தருவதைவிட அதிகமாகவே ஆக்ஸெல் தருவான் என்று அவளுக்குத் தெரியாதா? அவளைப்பற்றி ப்ரேட் கவலைப்பட வேண்டிய அவசியமேயில்லை. கடவுள் ஒலைனைக் காப்பாற்றுவார்! கடவுள் அனுப்பித்தானே ஆக்ஸெலுக்கு உதவுவதற்குச் சரியான சமயத்தில் அவள் அங்கு வந்து சேர்ந்தாள்!......

ஆக்ஸெலுக்கு மீண்டும் களைப்பாக இருந்தது. அவன் கால்கள் பின்னின — தடுமாறின. இதுகாறும் களைப்பு இல்லை— இப்போது ப்ரேடின் மேல் சாய்ந்துகொண்டுதான் அவனால் அடி எடுத்து வைக்க முடிந்தது. ஒலைன் தன் கூலியைப் பற்றிப் பேச ஆரம்பித்ததும் நேர்ந்தது அது. அதற்கும் இதற்கும் ஏதாவது சம்பந்தமுண்டோ — அவன் உயிரைக் காப்பாற்றினளே அவள்! கடவுளுக்குத்தான் வெளிச்சம்—ஆனால் அவள் செய்த உதவி ஒன்றும் பிரமாதமில்லை என்று காட்ட விரும்பினனோ ஆக்ஸெல். வீட்டை நெருங்கும்போது நின்று ஆக்ஸெல் சொன்னான்: "ஏது? என்னால் வீடு போய்ச் சேரமுடியாது போலிருக்கிறது" என்றான்.

ஒரு வார்த்தைகூடச் சொல்லாமல் ப்ரேட் அவனைத் தூக்கித் தன் முதுகின்மேல் சாத்திக் கொள்கிறான். பிறகு மூவரும் மேலே நடக்கிறார்கள் — ஒலைன் விஷம் கக்குகிறாள். ஆக்ஸெல் ப்ரேடின் முதுகின்மேல் சவாரி செய்கிறான்.

ஒலைன் சொல்லுகிறாள்: "நான் என்ன சொல்ல வந்தேனென்றால்...பார்ப்ரோவின் குழந்தை என்ன ஆயிற்று?"

"குழந்தையா?" ப்ரேட் முனகுகிறான். தோளிலிருந்த கனம் தாங்காமல், ஆக்ஸெல் அசையவில்லை. தன் வீட்டு வாசல் வருகிறவரையில் ப்ரேடின் தோளைவிட்டு இறங்கவில்லை அவன்.

ப்ரேட் பெருமூச்சு விடுகிறான்; அவனுக்கு இரைக்கிறது.

"ஆமாம்...... அந்தக் குழந்தை பிறந்ததோ இல்லையோ?" என்று விசாரிக்கிறாள் ஒலைன்.

ஆக்ஸெல் சட்டென்று குறுக்கிடுகிறான். ப்ரேடிடம் சொல்லுகிறான்: "இன்று உன் உதவியில்லாமல் நான் வீடு திரும்பியிருக்கவே முடியாது. அதற்கு என் நன்றி" பிறகு ஒலேன் பக்கம் திரும்பி "முதலில் நீதான் என்னைக் கண்டுபிடித்து விடுவித்தாய். அதற்கும் எனது நன்றி" என்கிறான்.

இப்படியாக ஆக்ஸெல் காப்பாற்றப்பட்டான்.........

இந்தப் பெரிய சம்பவத்தைத் தவிர வேறு எதையும்பற்றி அடுத்த சில நாட்களுக்கு ஒலேன் பேசுவதில்லை. எல்லை மீறாமல் பார்த்துக் கொள்வது ஆக்ஸெலுக்கு சிரமமாகத்தான் இருந்தது. அறையில் எங்கு நின்று கொண்டிருக்கும்போது. கடவுள் அருளால், அவன் குரல் தன் காதில் விழுந்தது என்று காட்டுகிறாள். ஆக்ஸெல் மீண்டும் மரம் வெட்டக் காட்டுக்குச் செல்கிறான். போதுமான மரம் வெட்டியதும், அதை எடுத்துப் போய் ஸெல்லன்ரா மர இயந்திரசாலையில் பலகைகளாக அறுத்து விடுகிறான்.

மாரிக்காலத்தில் சரியான வேலை—வெட்டிய மரங்களை ஏற்றிப் போய் அவற்றை அறுத்துப் பலகைகளாகக் கொண்டுவந்து சேர்ப்பது. அவசரமாக அதைச் செய்து முடிக்கவேண்டும். இல்லாவிட்டால் ஆற்றில் ஜலம் உரைந்துவிடும். அதற்குப் பிறகு மர யந்திரம் வேலை செய்யாது—ஆறு மாசத்துக்கு மரம் அறுக்காது. எல்லாம் சரிவரவே நடைபெறுகிறது. கிராமத்திலிருந்து திரும்புகிற ஸிவெர்ட் தன் வண்டியிலும் சில மரங்களை ஏற்றிப் போகிறான்—அண்டைப் பண்ணைக்காரனுக்கு உதவுகிற உத்தேசத்துடன் இருவரும் பல விஷயங்களைப் பற்றிப் பேசுகிறார்கள்—பேசத் துணை கிடைத்ததுபற்றி இருவருக்குமே திருப்திதான்.

"கிராமத்திலே விசேஷம் என்ன?"

"அதிகம் ஒன்றும் இல்லை. இந்தப் பக்கம் புதுப் பண்ணை ஒன்று ஒருவன் வாங்கியிருக்கிறான்" என்கிறான் ஸிவெர்ட்.

புதுப் பண்ணை—அதில் விசேஷம் ஒன்றுமில்லை. நிலத்தை வாங்கி உழுது பயிரிட இப்போதெல்லாம் புதுசு புதுசாக வருஷத்துக்கு இரண்டொருவர் வருகிறார்கள். ப்ரேடாப்ளிக்குக்கு அப்பால் கிராமத்துக்கு இந்தண்டை ஐந்து புதுப் பண்ணைகள்

தோன்றிவிட்டன. மேலே தூரத்தில் அதிகப் பேர் வரவில்லை. கடைசிப் பண்ணை இன்னமும் ஐஸக்கினுடையதுதான். அதற்கப்பால் போக யாரும் துணியவில்லை. — மரங்களும் ஏராளமாக இருந்தது. நிலமும் செழிப்பாக இருந்தது எனினும், யாரும் அதைத் தாண்டிப் போகவில்லை. அதற்கடுத்த பண்ணை மேன்லாந்து. மூன்றாவதாகப் புது மனிதன் ஒருவன் வந்திருந்தான்— நிலமும் காடும் ஏராளமாக இருந்தது.

"எப்படிப்பட்ட மனிதன்? கேள்விப்பட்டாயோ?"

"இல்லை. ஆனால் அவன் தயார் செய்யப்பட்ட வீடுகளாகக் கொண்டு வருகிறானாம். ஒரு நொடியில் வீடு நிர்மாணமாகி விடுமாம்."

"ஓ! பணக்காரன்போல இருக்கிறது."

"அப்படித்தான் கேள்விப்பட்டேன். மனைவி, மூன்று குழந்தைகள். இன்னும் குதிரைகள் ஆடு மாடுகளுடன் வருகிறானாம்."

"அப்படியானால் பணக்காரன்தான். வேறு என்ன?" என்றான் ஆக்ஸெல்.

"அவனுக்கு வயது முப்பத்துமூன்று."

"பெயர்?"

"ஆரான் என்று பெயராம். பண்ணைக்குப் பெயர் ஸ்டார்போர்க்."

"பெரிய வீடு என்று பெயரா? சரிதான்."

"சமுத்திரக் கரையிலிருந்து வருகிறானாம் அவன். இதுவரை மீன் பிடிக்கும் தொழில் செய்தானாம்!"

ஆக்ஸெல் சற்று யோசித்தான். "மீன் பிடிப்பவன் என்றால் உழவுத்தொழில் எதுவும் தெரிந்தவனாக இராது! அவ்வளவுதானா விஷயம் நீ கேள்விப்பட்டது அல்லது வேறு ஏதாவதுண்டா?" என்றான்.

"வேறு ஒன்றும் இல்லை. பணம்பூராவும் கொடுத்து நிலத்தை வாங்கிவிட்டானாம். மீன் பிடிப்பதில் நிறையச் சம்பாதித்தவனாம் அவன். இங்கே ஒரு கடை வைக்கப் போகிறானாம்!"

"ஓ! கடையா?"

"அப்படித்தான் சொல்லிக் கொண்டார்கள்."

"உம். கடையா வைக்கப் போகிறான்?"

இது உண்மையிலேயே விசேஷமான செய்திதான். இருவரும் வண்டிகளை ஓட்டிக் கொண்டே இதைப் பற்றி விரிவாகப் பேசுகிறார்கள். விசேஷம் என்பது மட்டுமல்ல — காட்டுப் பிரதேசத்திலே கடை என்பது உண்மையிலேயே பெரிய விஷயம்தான்! அந்தப் பிராந்தியத்துச் சரித்திரத்திலே இடம் பெற வேண்டிய செய்தி அது. இந்தப் புது மனிதன் யாருடன் வியாபாரம் செய்வதாக உத்தேசித்திருந்தான்? எட்டுப் பண்ணையார்களிடமா? அல்லது கிராமத்திலிருந்த மக்களும் தன்னிடம் சாமான்கள் வாங்க வருவார்கள் என்று அவன் எதிர்பார்த்தானோ? அது எப்படியானாலும், அது முக்கியமான விஷயம்தான். இன்னும் பல பண்ணைகள் தோன்றும் அங்கே. அது காரணமாக நிலங்களின் மதிப்பும் ஏறும் — நல்லதுதானே!

களைப்பே அற்றவர்கள்போல அதுபற்றி இருவரும் வாய் ஓயாமல் பேசினார்கள். மற்றவர்களுக்கு வேறு என்ன கவலைகள் இருந்தனவோ — இவர்கள் இருவருக்கும் தங்கள் கவலைகள் இருந்தன. அந்தக் காட்டுப் பிரதேசம்தான் அவர்களுடைய உலகம். உழைப்பு, பயிர்கள், நிலம், மரங்கள், தானியங்கள்— இவைதான் அவர்களுடைய சிந்தனைகள். தீரச் செயல்கள், வாழ்க்கை எல்லாமே! அது போதாதா வாழ்வுக்கு சொரத்தும் ஆழமும் ஆனந்தமும் தர? போதும்! போதும்! தூங்குவதற்குக்கூட அவர்களுக்குப் பலநாள் அவகாசம் கிடைக்காது. வேளா வேளையில் சாப்பிடக்கூடப் போக முடியாமல் உழைப்பு இருந்தது. அதைத் தாங்கி நின்றார்கள் அவர்கள். அதனால் அவர்களுக்கு எவ்வித கெடுதியும் இல்லை. மரத்திற்கடியில் அகப்பட்டுக் கொண்டு ஏழு மணிநேரம் உயிருக்கு மன்றாடியும்கூட உடம்பு கெட்டு விடவில்லை. கைகால் ஓடியாத வரையில் சரிதான். குறுகிய உலகம் அது — பெரிய விஷயங்கள் எதுவும் அதில் குறுக்கிடாது! அப்படியா? இந்தக் கடை விஷயம் என்ன? — அது பெரிய விஷயம் இல்லையா?

கிரிஸ்துமஸ் வரும் வரையில் அதைப் பற்றியே பேசினார்கள்.

ஆக்ஸெலுக்கு ஒரு கடிதம் வந்தது. சிங்க முத்திரை போட்ட ஒரு பெரிய கடிதம் வந்தது. சர்க்காரிடமிருந்து வந்த கடிதம் அது. கம்பிகள், தந்தி யந்திரம், மற்றும் சர்க்காருடைய சாமான்கள் ஆயுதங்கள் எல்லாவற்றையும் அவன் ப்ரேட் ஓல்ஸனிடமிருந்து பெற்றுக் கொள்ளச் சொல்லி உத்தரவு அது. புது வருஷத்தில் அவன்தான் அந்த இலாகா இன்ஸ்பெக்டர்.

4

அந்தக் காட்டுப் பிரதேசத்திலே சாரிசாரியாகக் குதிரைகள் வருகின்றன — புதுப் பண்ணைப் பெரிய வீட்டுக்காரனின் வீடுகளைப் பகுதி பகுதியாகத் தூக்கிக் கொண்டுவந்து காடுகளின் ஓரத்தில் விடுகின்றன. கணக்கற்ற சுமைகள் — பல நாட்கள் சுமந்து வருகின்றன. அந்த இடத்திற்கே பெயர் பெரிய வீடு — ஸ்டார் போர்க். காலக்கிரமத்தில் அந்தப் பெயர் நிலைத்துவிடும். இப்போது புதுசாக இருக்கிறது. குன்றுகளிலே நாலு ஆட்கள் வேலை செய்கிறார்கள்—சுற்றுப்புரச் சுவர்களுக்குத் தேவையான கற்களைச் சேகரம் செய்து கொண்டிருக்கிறார்கள்.

அவைகள் வந்து இறங்குகின்றன. வண்டி வண்டியாக வந்திறங்குகின்றன. வீட்டின் பாகங்கள் கட்டித் தயாராக இருக்கின்றன. அவற்றை வைத்து வஸந்தத்தில் அசையாமல் கொள்ளாமல் நிறுத்தவேண்டும். ஒவ்வொரு பகுதிக்கும் கணக்காக நம்பர் போட்டிருக்கிறது; ஒன்றோடொன்று அவை அழகாகப் பொருந்துகின்றன. வைத்துச் சேர்க்க வேண்டியதுதான் பாக்கி. ஒரு கதவு, ஒரு ஜன்னல் பாக்கியில்லாமல் தயாராக இருக்கின்றன. வராண்டாவுக்கு ஒரு வர்ணக் கண்ணாடிகூட வைத்திருக்கிறது. ஒருநாள் ஒருவண்டி நிறைய வெள்ளை எல்லைக் கற்கள் வருகின்றன. இது எதற்கு? கிராமத்துக்கு அருகில் இருக்கிற ஒரு பண்ணைக்காரன் சொல்லுகிறான்—அவன் இந்தமாதிரி கற்களை நகரில் பார்த்திருக்கிறான். "தோட்டத்துக்கு எல்லைக் கற்கள்!" என்கிறான் அவன். அப்படியா? புதுமனிதன் காட்டிலே தோட்டங்கூடப் போடப் போகிறானா? பேஷ்!

எல்லாம் நன்றாகத்தான் இருந்தது. அந்தப் பொட்டலிலே அதுவரை அந்தமாதிரி வண்டிகளும் குதிரைகளும் சுமைகளும் வந்ததில்லை. இந்த வேலைக்குத் தங்கள் குதிரைகளை வாடகைக்கு விட்டுப் பணம் சம்பாதித்தார்கள் பலர். இதைப்பற்றியும் விவாதம் நடந்தது. ஆமாம். அந்த வியாபாரிக்கு எல்லா சாமான்களும் வெளியே இருந்துதான் வரவேண்டும். அதற்குக் குதிரையைக் கொடுத்துதவிப் பணம் சம்பாதிக்கிலாம்.

மொத்தத்தில் எல்லாமே அமர்க்களமாகத்தான் இருக்கும் போல இருந்தது. இதோ வாலிப மானேஜர் — சாமான்கள்

வந்து இறங்குகிற காரியத்தை மேற்பார்வை பார்த்தான். கம்பீரமான வாலிபன் அவன் — போதுமான குதிரைகள் கிடைக்கவில்லை என்று முணுமுணுத்துக்கொண்டேயிருந்தான்.

"வீடுகள் தான் வந்து சேர்ந்துவிட்டனவே! இனி வரச் சுமை அதிகமிராதே!'' என்று கேட்டார்கள்.

"அது சரி. சாமான்கள் வரவேண்டாமா?''

ஸெல்லன்ரா ஸிவெர்ட் வெறும் வண்டியை ஓட்டிக்கொண்டு கிராமத்திலிருந்து வீடு திரும்பிக் கொண்டிருந்தான். காலி வண்டியைக் கண்டு அவனைக் கூப்பிட்டான் அந்த மானேஜர். "ஏன் காலியாக வண்டியை ஓட்டி வருகிறாய்? எங்களுக்கு ஒரு சுமை கொணர்ந்திருக்கலாமே!'' என்றான்.

"கொணர்ந்திருக்கலாம். ஆனால் எனக்கு இதுபற்றி விஷயம் தெரியாதே'' என்றான் ஸிவெர்ட்.

"அவன் ஸெல்லன்ரா பண்ணையைச் சேர்ந்தவன். அங்கே அவர்களிடம் இரண்டு குதிரைகள் இருக்கின்றன'' என்று யாரோ சொன்னார்கள்.

"அப்படியா? இரண்டு குதிரைகள் இருக்கின்றனவா? அவற்றைக் கொண்டுவா. நல்ல கூலி தருகிறோம்'' என்றான் மானேஜர்.

"அது சரிதான். ஆனால் பண்ணையிலே வேலை இருக்கிறதே!''

"பணம் சம்பாதிக்கக்கூடவா நேரம் இல்லை. என்ன ஆச்சரியமாக இருக்கிறதே!''

உண்மைதான். ஸெல்லன்ராவில் நேரம் வீணாக்குவதற்கு அதிகம் இல்லை. எப்போதும் அங்கு வேலை இருந்துகொண்டேயிருக்கிறது. இந்தத் தட்வை—அந்தப் பண்ணையிலே முதல் தடவையாக—இரண்டு ஆட்களைக் கூலிக்கு வைத்திருந்தார்கள்; குன்றில் கற்கள் வெட்டி, மாட்டுக் கொட்டிலுக்குச் சுவர் வைக்கப் போதுமானது சேர்ப்பதற்கு.

பல வருஷங்களாக இந்த மாட்டுக் கொட்டில் பற்றிச் சிந்தித்திருக்கிறான் ஐஸக். கல் கொட்டில் இருந்தால்......? இப்போது மாடுகள் கட்டியிருந்த கொட்டில் மண் சுவர்களால் ஆனது; கூரை பாசிக் கூரை. இரட்டைச் சுவர்களுடன், எருக் குழி முதலியவற்றுடன் மாட்டுக் கொட்டில் கட்டுவது என்று ஐஸக் பல வருஷங்களுக்கு முன்னரே திட்டமிட்டுவிட்டான். இடையில்

செய்வதற்கு ஒன்றன்பின் ஒன்றாக எத்தனையோ வேலைகள் வந்தன. தவிரவும் வீடுகளும் கொட்டில்களும் கட்டுவதற்கு முடிவு ஏது? மரம் அறுக்கும் இயந்திரம். மாவு அரைக்கும் இயந்திரம். ஆடு மாடுகளுக்குக் கோடைக்கு ஒரு கொட்டகை—எல்லாம் இருந்தன. பட்டறை ஒன்றும் தேவைதானே! தேவைக்கு ஏற்றமாதிரி சின்னப் பட்டறைதான். சுத்தி மழுங்கிவிட்டது. கத்தி கூர் இழந்துவிட்டது; குதிரைக்கு லாடம் வேண்டும் என்றால்—சின்ன விஷயங்களுக்காக — அவ்வளவு தூரம் கிராமத்துக்குப் போக வேண்டும் என்றிருந்தது. அதற்குப் பதில் தன் பட்டறையிலேயே இதை எல்லாம் கவனிக்கலாமே! சின்னதும் பெரிதுமாகப் பல கட்டிடங்களும் கூடங்களும் தோன்றிவிட்டனஸெல்லன்ராவிலே.

பண்ணை வளர்ந்து கொண்டிருக்கிறது. மேலும், மேலும் பெருகிக் கொண்டிருக்கிறது. மிகவும் பெரிய பண்ணையாகிவிட்டது. வீட்டு வேலைகளைச் செய்ய இப்போது ஒரு வேலைக்காரி அவசியம் தான். ஜென்ஸின் அங்கேயே தங்குகிறாள். அவள் தகப்பன் கருமான் அடிக்கடி விசாரிக்கிறான் — எப்படி இருக்கிறாள், என்று திரும்பப்போகிறாள். அதுபற்றி அவன் அவசரப்படவில்லை. அவள் அங்கு தங்குவதில் அவனுக்குப் பரம திருப்திதான். அங்கே ஸிவெர்ட்டை அவள் கல்யாணம் செய்துகொண்டு விட்டாளானால் நல்லதுதானே! அந்தப்பண்ணைகளில் பெரியது ஸெல்லன்ராதான். கிராமத்திலிருந்து அதிக தூரத்திலிருக்கும் பண்ணையும் அதுதான். ஐஸக் ஒருவன்தான் அதிக தைரியத்துடனும், துணிவுடனும், புத்தியுடனும் அவ்வளவுதூரம் வந்திருந்தான்; மற்றவர்கள் அவனுக்கு இப்பால், அவனுக்கும் கிராமத்துக்கும் இடையில் தங்கள் பண்ணைகளை நிர்மாணித்துக் கொண்டார்கள். பண்ணை பெரிதாக்கிக் கொண்டே இருக்கிறது — வீடுகள் நிலம் எல்லாம் வளர்ந்து கொண்டிருக்கிறது. ஸெல்லன்ரா மனிதர்கள் மட்டும் பழைய மாதிரியேதான் இருக்கிறார்கள். ஆனால் இப்பொழுதெல்லாம் அங்கு நாடோடி லாப்புகள் வருவதில்லை. வந்தாலும் எதையாவது வாங்கிச் சுருட்டிக்கொண்டு போவதில்லை; வீட்டுக்குள் அவர்களை யாரும் அனுமதிப்பதில்லை. வெளிச்சமும் காற்றும் லாப்புகளுக்கு ஆகாது அவர்கள் இருட்டிலேயே இருந்துவிட விரும்புகிறவர்கள். ஸெல்லன்ராவின் வெளிப் பிரதேசங்களிலிருந்து திடீரென்று ஏதாவது ஒரு ஆட்டுக்குட்டி காணாமற் போய்விடும் — அப்படிப் போகாமல் காப்பாற்றமுடியாது. ஸெல்லன்ரா தாங்கக் கூடிய நஷ்டம்தான் அது! ஸிவெர்ட்டிடம் துப்பாக்கி இல்லை;

துப்பாக்கி இருந்தாலும் அவனுக்கு அதைச் சுடத் தெரியாது. அவன் சமாதானப்பிரியன் — யாரிடமும் சண்டைக்குப் போக மாட்டான். கோமாளி மாதிரிப் பேசுவான் — அவ்வளவுதான். "லாப்புகளைச் சுடக்கூடாது என்று சட்டம் இருக்கிறது" என்பான்.

ஒரு ஆட்டுக் குட்டி கெட்டுப் போனால் ஸெல்லன்ராவுக்குப் பிரமாதம் இல்லை — தாங்கிக் கொள்ளச் சக்தியிருக்கிறது. ஆனால் அதிலும் கஷ்டங்களுக்குக் குறைவில்லை. முக்கியமாக இங்கருடைய கஷ்டங்கள் சிரமமானவை. அவளுக்கு வருஷம் பூராவும் அந்த வாழ்வும் காரியங்களும் திருப்தி யளிப்பதில்லை. ஒரு காலத்தில் அவள் நகரில் போய்த் தங்கியிருந்தாள் — அது காரணமாக அவளுக்கு ஒரு அமைதியின்மை ஏற்பட்டுவிட்டது. சில சமயங்களில் இந்த அமைதியின்மை மறைந்து விடுவதுண்டு. எனினும் அடிக்கடி மீண்டும் மீண்டும் தோன்றுகிறது. அவளுடைய ஆதி நாட்களில் போல அவள் கெட்டிக்காரத் தனமாகவும் மிகவும் பிடிவாதத்துடனும் வேலைகளைச் செய்கிறாள், அழகிதான் அவள்! கடலில் தனியாக ஓடுகிற படகைப்போன்று வாழ்க்கை நடத்துகின்ற தன் கணவனுக்கு ஏற்ற மனைவிதான் அவள். ஆனால் ட்ராண்ட்யெம் நகரைப் பற்றிய கனவுகள் அவளை விடாது தொடர்ந்து பீடிக்கின்றன? அந்த வாழ்வின் நினைவுகள் அகல மறுக்கின்றன. முக்யமாக மாரிக் காலத்தில்தான் அவளுடைய அமைதியின்மை அதிகரிக்கிறது. மிகவும் உத்ஸாகமாகவும் ஆசையுடனும் அவள் பல விஷயங்களை விரும்புகிறாள். ஆனால் அவள் ஒண்டியாக எப்படி நாட்டியமாட முடியும்? கடவுள் சிந்தனையும், பிரார்த்தனைகளும் இருக்கவே இருந்தன. அது சரிதான். இருந்தாலும்... நேர் மாறான வாழ்க்கையையே அவள் மனம் நாடிற்று — அதில் இருந்தமாதிரி ஆனந்தம் இந்தப் பண்ணையிலே எப்படிவரும்? கிடைப்பதை வைத்துக் கொண்டு திருப்தியுறக் கற்றுக் கொள்கிறாள் அவள். ஸ்வீடிஷ் கூலிகள் வந்திருக்கிறார்கள்—அவர்களுடைய முகங்கள் புது முகங்கள்தான். அவர்களுடைய குரல்களும் புதுக் குரல்கள்தான். ஆனால் அவர்கள் வயதானவர்கள் — வேலை செய்பவர்களே தவிர நாட்டிய மாடுகிறவர்கள் அல்ல. ஒன்றுமில்லாததற்குத் தேவலை — அவ்வளவுதான். வேலை செய்துகொண்டே அவர்களில் ஒருவன் வெகு அழகாகப் பாடுகிறான். இங்கர் தன் வேலையை நிறுத்திவிட்டு அவன் பாடுவதைப் பல தடவைகள் கேட்கிறாள். அவன் பெயர் ஹ்யால்மர்.

செல்லன்ராவில் இதுபோல இன்னொரு கஷ்டமும் இருக்கிறது. எல்யூஸிஸ் விடியமும் பெரும் ஏமாற்றம்தான். என்ஜினியர் ஆபீஸில் தனக்கு வேலைகிடைக்க வில்லை என்று எழுதி விட்டான் அவன். காத்திருந்தால் வேறு நல்ல வேலை கிடைக்கும். இன்னொரு கடிதத்தில் பணம் அனுப்பு என்று எழுதினான். ஒரு நூறு க்ரோனே அனுப்பினார்கள் — அது சில்லறைக் கடன்களைத் தீர்க்கத்தான் பயன்பட்டது என்று எழுதினான்...... "உம்..." என்றான் ஐஸக்: "கல் வெட்டுபவர்களுக்குச் கூலி வேறு கொடுக்க வேண்டும்... அவன் திரும்பி விடட்டுமே—பணம் வேறு ஏது?"

இங்கர் எழுதினான். ஆனால் எல்யூஸிஸிற்குத் திரும்ப மனமில்லை.. பட்டினி கிடந்தாலும் நகரத்திலேயே இருப்பது என்று தீர்மானித்து விட்டான். காரணமில்லாமல் இன்னொரு பிரயாணம் செய்வானேன்.

நகரில் நல்ல வேலை அந்தச் சமயம் காலியாக இல்லை. எல்யூஸிஸும் அப்படித் துடியாகத் தேடவில்லையோ என்னவோ? அல்லது அவனுக்குச் சாமர்த்தியம் தான்போதாதோ! எழுதுவதில் சமர்த்தன் தான் — சிரமப்பட்டும் வேலை செய்வான். இருந்தும் குறை ஏதோ இருந்ததினால்தானே வேலை கிடைக்கவில்லை. அவன் என்ன ஆவான்?

கையில் இருநூறு க்ரோனருடன் அவன் திரும்பியபோது, நகரம் அவனை ஆவலுடன் வரவேற்றது. பழைய கணக்குகளைத் தீர்த்துவிட்டுப் புதுக் கைத்தடி ஒன்று வாங்கிக் கொண்டான். வேறு பல அவசியமான சாமான்களும் வாங்கிக் கொண்டான்.—மாரிக்காலத்துக்கு ஒரு கம்பளிக் குல்லாய், ஐஸ் விளையாட்டுக்கு ஸ்கேட் கட்டைகள், பல் குச்சி ஒன்று (வெள்ளியில் ஆனது) எல்லாம் வாங்கிக் கொண்டான். அவன் தோழர்களிடம் இதுவும் இருந்தது—இன்னும் அதிகமும் இருந்தது. அவன்மட்டும் சோடையாகிவிடலாமா? கையில் காசிருக்கிறவரையில் அவன் தன் தோழர்களுக்கு டீயும் தின்பண்டங்களும் வாங்கித் தந்தான். ஹோட்டலில் வெய்ட்ரஸ்ஸுக்கு இருபது ஓர் இனாம் தந்தான். "இருபது எதற்கு? பத்து போதாதோ?" என்றார்கள் அவன் நண்பர்கள்.

"ரொம்பவும் கஞ்சத்தனமாக இருக்கக் கூடாது," என்றான் எல்யூஸிஸ்.

எல்யூஸிஸிடம் கஞ்சத்தனமே கிடையாது. அவன் செல்லன்ரா பண்ணையிலிருந்து வருகிறான் — அந்தப் பக்கத்திலேயே

மிகவும் பெரிய பண்ணை அது. அவன் தகப்பனர் பெரிய ஜமீன் தார். காடு காடாக மரங்கள் இருந்தன அவனுக்கு. நாலு குதிரைகள், முப்பது பசுக்கள், மூன்று அறுவடை யந்திரங்கள் எல்லாம் இருந்தன அவன் பண்ணையிலே. எல்யூஸிஸ் பொய்ய னல்ல. அவன் கட்டிவிட்ட கதைகள் அல்ல இவை எல்லாம். பல நாட்களுக்கு முன் ஜில்லா ஸர்வேயர் ஸெல்லன்ரா பண்ணை யைப்பற்றி இப்படி எல்லாம் கதைகள் சொல்லியிருந்தான். இந்தக் கதைகள் பரவியிருந்ததுபற்றி எல்யூஸிஸிற்குப் பெருமையாகவே தான் இருந்தது. உண்மை என்று அதை எல்லாம் நம்புகிறவர்கள் நம்பட்டுமே! அவனுக ஒன்றுமில்லே. பெரிய மனிதனின் பிள்ளை யாக உலகம் தன்னை மதித்ததை திருப்தியுடன் ஏற்றுக் கொண்டான். கடன் வாங்குவது சுலபமாக இருந்தது. ஆனல் எத்தனை நாள்தான் இப்படிக் கடன் வாங்கிச் சமாளிக்க முடியும். திருப்பித் தர வேண்டாமா? அவன் நண்பர்களில் ஒருவன் அவ னுக்கு உதவினன். அவன் தகப்பன் ஒரு சிறிய கடை வைத்திருந் தான்—அதில் எடுபிடி ஆள் தேவையாக இருந்தது. அந்த வேலையை எல்யூஸிஸிற்குத் தரச் சொன்னன். சம்பளமும் குறைவு தான்; மதிப்பும் குறைவுதான்; இருந்தாலும் ஒன்றுமில்லாததற்கு இது பாதகமில்லே. அது லென்ஸ்மாண்டு ஆவதற்குக் குறுக்கு வழியல்ல. இருந்தும் சாப்பிடுவதற்குப் போதுமானது கிடைத்து வந்தது—மிகவும் சிரமப்பட்ட ஒன்றுமில்லாத வாழ்வை விட இது தேவலே. எல்யூஸிஸ் முழு மனசுடன் வேலை செய்தான் — புன் சிரிப்புடன் யாருக்கும் பதில் தருவான். கடைக்குச் சாமான் வாங்க வந்த குடியானவர்கள் அவனிடம் பிரியமாக இருந்தார்கள். வியா பாரத் துறையில் இறங்கிவிட்டதாக வீட்டுக்குக் கடிதம் எழுதினன்.

அவன் அம்மாவுக்கு இது பெரும் ஏமாற்றத்தைத் தந்தது. எல்யூஸிஸ் கடையில் வேலை பார்த்தான்—அதைவிடக் கிராமத்தி லேயே தங்கி அந்தக் கடையிலே இருக்கலாமே! மற்றவர்கள் மாதிரி இல்லே தன் பிள்ளை — குமாஸ்தாவாகிப் பிறகு லென்ஸ் மாண்டும் ஆகிவிடுவான் என்று கனவு கண்டு கொண்டிருந்தாள் அவள். ஆபீஸில் வேலை பார்ப்பது என்கிற அவன் லக்ஷியம் என்ன ஆயிற்று? அதை மறந்துவிட்டான? இங்கர் அசடல்ல. அவளுக்கு சாதாரணம், அசாதாரணம், நல்லது கெடுதி என்பது தெரியும்—ஏமாற்றத்துக் குள்ளானள். ஐஸக்குக்கு இதெல்லாம் பற்றி ஒன்றும் தெரியாது—வேலை பார்க்கிருன்—சம்பாதிக்கிருன்;

சரி என்றுன். இப்போதெல்லாம் அவன் எல்யூஸிஸைப்பற்றிச் சிந்திப்பதே கிடையாது. அவன் மனசிலிருந்தே அவன் மூத்த மகன் நழுவிக் கொண்டிருந்தான். தான் போன பிறகு ஸெல்லன்ரா பண்ணை இரு பிள்ளைகளுக்குமே சமமாகப் பங்கிடப்பட வேண்டும் என்று அவன் நினைப்பதில்லை.

வஸந்தத்தில் பாதி ஆகிவிட்டது. ஸ்வீடனிலிருந்து என்ஜினியர்களும் கூலியாட்களும் வந்தார்கள். பாதைகள் போட்டார்கள். தங்குவதற்குக்குடிசைகள் நிர்மாணித்தார்கள். என்னவெல்லாமோ வேலை செய்தார்கள். வெடிமருந்து வைத்துப் பாறைகளைப் பெயர்த்தார்கள். உணவு கொண்டுவந்து சேகரித்தார்கள். ஆற்றுக்குப் பக்கத்திலிருந்து பண்ணைக்காரர்களுடன் பேச்சுக் கொடுத்து சிநேகிதம் செய்துகொண்டார்கள். எதற்காக? இதெல்லாம் ஸெல்லன்ராவுக்கும் மேலே உள்ள காட்டுப் பிரதேசத்திலே நடந்த காரியங்கள், வேறு ஒன்றும் இல்லை — சுரங்கவேலை தொடங்கத் தயாராக வந்திருந்தார்கள் அவர்கள்.

ஆகவே அது விஷயமும் பலித்துவிட்டது. கெய்ஸ்ஸலர் வெறும் பேச்சுக்காரனல்ல.

அன்று அவனுடன் வந்த ஆட்களல்ல அவர்கள். இரண்டொருவர் புதிதாக வந்திருந்தார்கள். ஆனுல் அதே என்ஜினியர் வந்திருந்தான். சுரங்க நிபுணரும் முன்னர் வந்தவரே தான். ஐஸக்கிடம் இருந்த அறுத்த மரப் பலகைகளை எல்லாம் விலை கொடுத்து வாங்கிக் கொண்டார்கள் அவர்கள். உணவு, பால் எல்லாம் வாங்கிக்கொண்டு பணம் கொடுத்தார்கள். உத்ஸாகமாகப் பேசினுர்கள். ஸெல்லன்ராபற்றி அவர்களுக்கும் திருப்திதான். "ஆகாய ரெயில்" என்றுர்கள். "மலையுச்சியிலிருந்து ஜலக்கரை வரை உயரத்தில் கம்பி கட்டி எதையும் ஏற்றி அனுப்பலாம்."

"இங்கே இத்தனை காடுகளுக்கு மேலேயுமா?" என்றுன் ஐஸக். ஆனுல் அவர்கள் சிரித்தார்கள். "இந்தப் பக்கம் அல்ல. குன்றின் உச்சியிலிருந்து கடற்கரைக்கு. அதிக தூரமும் இல்லை. தடை செய்ய மரங்களோ வேறு தடங்கல்களோ இல்லை. கம்பியில் கட்டி உருட்டிவிட்டால் தானே போய் கடற்கரையில் விழுந்து விடும். இரும்புத் தொப்பிகளில் கனியை நிரப்பி கம்பி ரெயிலில் தள்ளிவிடுவார்கள். சரிவர நடைபெறும் — காத்திருந்து பாரேன். ஆனுல் முதலில் எல்லாம் தயாராக வேண்டும். பாதையைச் செப்பனிட்டாக வேண்டாமா? அவசியமான வேலைகள் முடியவே

பல வாரங்கள் ஆகும். எங்களுக்கு ஐம்பது குதிரைகள் வேண்டும்!--பாரேன் —எப்படி வேலை நடக்கிறது என்று. இந்தக் கூலியாட்கள் மட்டும்தானா? இதைப்போல நூறு பங்கு ஆட்கள் காத்திருக்கிறார்கள். அந்தப் பக்கத்தில் பலர் வேலை செய்துகொண்டிருக்கிறார்கள். எல்லாம் தயாராகவேண்டுமே. பார்--எப்படிச் செய்கிறோம் என்று. கனிப்பொருளைத் தென் அமெரிக்காவுக்குக் கப்பல் ஏற்றி விட்டால் நல்ல விலை கிடைக்கும். லக்ஷக்கணக்கில் பணம் இருக்கிறது இந்தச் சுரங்கத்தில்."

"முன் வந்த கனவான்கள் எங்கே?" என்று விசாரித்தான் ஐஸக்.

"யார்? அவர்களா? அவர்கள் வேறு ஒரு கம்பெனிக்கு விற்றுவிட்டார்கள்! அவர்களை ஞாபகம் இருக்கிறதா உனக்கு? அவர்களிடம் வாங்கியவர்கள் கூடப் புதுச் சொந்தக்காரர்களுக்கு விற்றுவிட்டார்கள். இப்போது இந்தச் சுரங்கம் ஒரு பெரிய கம்பெனிக்குச் சொந்தமாகிவிட்டது.—ஏகப்பட்ட பணம் இருக்கிறது அந்தக் கம்பெனிக்கு."

"கெய்ஸ்ஸலர் எங்கே?"

"கெய்ஸ்ஸலரா? யார் அது? அவனைப்பற்றி நான் கேள்விப் பட்டதில்லை."

"லென்ஸ்மாண்டு கெய்ஸ்ஸலர்! இந்தச் சுரங்கத்தை முதன் முதலில் உங்களிடம் விற்றானே?"

"அவனா? அவன் பெயர் கெய்ஸ்ஸலரா? அவன் எங்கேயோ—கடவுளுக்குத்தான் தெரியும். அவனைக்கூட ஞாபகம் இருக்கிறதா உனக்கு?"

குன்றின் மேலே வெடி வைக்கிறார்கள். மற்றும் பல வேலைகள் செய்கிறார்கள். கோடை நாட்கள் பூராவும் அங்கு கும்பல் கும்பலாக கூலியாட்கள் நடமாடுகிறார்கள். அந்த இடத்திலே சுருசுருப்பான ஜனநடமாட்டத்தினால் யாவும் உத்ஸாகமாக இருக்கிறது. பாலும், மற்றும் பண்ணைப் பொருள்களுமாக வியாபாரம் செய்கிறாள் இங்கர். வியாபாரம் செய்வது இங்கருக்கு திருப்தியாக இருக்கிறது. அத்தனை ஜனங்கள் வந்து போனதே திருப்தியாக இருந்தது. ஐஸக் ஒருவிதமான மாறுதலும் அடையவில்லை—அவன்பாட்டுக்குத் தன் வயல்களிலே வேலைகளைக் கவனிக்கிறான். ஸிவெர்ட்டும் இரண்டு கூலியாட்களுமாகச் சேர்ந்து புது மாட்டுக் கொட்டிலை எழுப்புகிறார்கள். நல்ல கட்டிடம் அது; பெரியது. ஆனால் கட்டி

முடிக்கப் பல நாட்கள் பிடித்தன. மூன்று ஆட்கள் உழைத்தும் பல நாளாயிற்று. தவிரவும் ஸிவெர்ட்டுக்கு அடிக்கடி வயலில் வேலை வேறு இருந்தது. அறுவடை யந்திரம் மிகவும் உபயோகமாக இருந்தது. மூன்று பெண்களும் வைக்கோல் வேலை பூராவையும் கவனித்துக் கொண்டார்கள்.

எல்லாம் சரியானபடியே நடந்தேறியது. காட்டிலே மனிதன் வேரூன்றிவிட்டான். வாழ்க்கை மலர்ந்து கொண்டிருந்தது. பணம் புரண்டது. வந்து போனவர்கள் காசை விசிறிக் கொண்டிருந்தார்கள்.

ஸ்டார் போர்கைப் பாரேன் — அந்தப் புது வியாபாரியின் புதுக் கடை நன்றாகவே நடந்தது. பெரிய ஸ்டோர் அது. இந்த ஆரான் மந்திரவாதிதான்! ராக்ஷஸகுலம் போலும் அவன்! சுரங்க வேலை தொடங்கப் போகிறது என்று அறிந்து கொண்டு அதற் கேற்றபடி முன்கூட்டியே கடையை அங்கு கொண்டுவந்து வைத்து விட்டானே! வியாபாரமா? ஒரு சர்க்கிளுக்குத் தேவையான வியாபாரம் நடந்தது அங்கே. ஒரு ராஜாவுக்குத் தேவையான பேரங்கள் நடந்தன. வீட்டுப்பாத்திரங்கள் முதல் கூலியாட்களுக் குத் தேவையான சாமான், துணிமணிகள் வரையில் எல்லாம் அந்தக் கடையில் கிடைத்தன. சுரங்கக் கூலிகள் பணம் செல வழிக்கமாட்டார்கள்! அவசியமான சாமான்கள் மட்டும்தான் அவர்கள் வாங்குவார்கள் என்பதில்லை. எதை வேண்டுமானாலும் வாங்குவார்கள் அவர்கள். சனிக்கிழமை மாலைகளில் அந்தக் கடையில் கூட்டம் சொல்ல முடியாது. தன் இரண்டுகைகளாலும் ஆரான் பணத்தை வாரிவாரிப் பெட்டிக்குள் போட்டான். அவன் குமாஸ்தாவும் அவன் மனைவியும் அன்று இந்த வேலையில் அவனுக்கு உதவினார்கள். ஆரானுக்கே இரண்டு கைகள் போத வில்லை. இரவு வெகு நேரம் வரையில் அங்கு கூட்டமாக இருக்கும். கிராமத்தில் குதிரை வைத்திருந்தவர்கள் அதிருஷ்டக்காரர்கள், ஸ்டார் போர்க்குக்குச் சாமான்கள் ஏற்றி வந்தே நிறையப் பணம் பார்த்தார்கள், குதிரைகளை வாடகைக்கு விட்டவர்கள். கடைக் கென்று புதிதாக ஒரு பாதைகூட ஏற்பட்டு விட்டது. ஐஸக் தனக்கென்று முதலில் கால் நடையாக நடந்து ஒரு பாதை வகுத்துக் கொண்டானே அந்த மாதிரிப் பல இருந்தது — அந்தப் பாதை! ஆரான் அந்தப் பக்கம் வந்தது கடவுளின் ஆசீர்வாதத் தால்தான். அந்த பிரதேசத்துக்கே அவனால் பல நன்மைகள் ஏற்பட்டன. அவன் பெயர் உண்மையில் ஆரான் அல்ல. அது

அவனுடைய கிறிஸ்துவப் பெயர். உண்மைப் பெயர் ஆரான் ஸென். அப்படித்தான் அவன் தனக்குப் பெயர் சொல்லிக் கொண்டான். அவன் மனேவியும் அவனே அப்படித்தான் கூப்பிட் டாள். அவர்கள் குடும்பத்தை புறக்கணிக்க முடியாது — பெரிய குடும்பம் அது. கடையில் இரண்டு வேலைக்காரிகளும் ஒரு வேலைக் காரனும்இருந்தார்கள்

ஸ்டார் போர்கைச் சுற்றியிருந்த நிலத்தை யாரும் பண்படுத்த வில்லை. அதன் பக்கம் கவனமே செலுத்தவில்லை ஆரான். நிலத்தில் உழைக்க ஆரான்ஸெனுக்கு நேரம் ஏது? காட்டைத் திருத்தி உழுது விதை விதைப்பது அவசியமா என்ன? ஆனால் அவன் ஒரு தோட்டம் போட்டான். சுற்றிலும் வேலி கட்டி அழகான தோட்டம் போட்டான். உண்மையிலேயே நல்ல தோட்டம் அது. ஹ்ரண்ட் புதர்களும், ஆஸ்டர் செடிகளும் ரோவன் கொடிகளும் வேறு பல பல தினுசான மரங்களும் செடி களுமாக அழகாக இருந்தது அது. குறுக்கே அதில் அகலமான பாதை ஓடியது. ஞாயிற்றுக் கிழமைகளில் அந்தப் பாதையில் சுங்கானைப் புகைத்துக்கொண்டு குறுக்கும் நெடுக்கும் நடப்பான் ஆரான்ஸென். வீட்டு வாராந்தா பின்னல் இருந்தது. அதன் கண்ணாடி ஜன்னல்களில் பலவித வர்ணக் கண்ணாடிகள் இருந்தன —ஆரஞ்சு, சிவப்பு, நீலம் என்று. ஸ்டார் போர்க்......பெரிய வீடு தான்.........மூன்று குழந்தைகளும் இருந்தன அவனுக்கு—அழ கான குழந்தைகள்! பணக்கார வியாபாரியின் பெண்ணாகத் தன் ஸ்திதிக்கு ஏற்றபடி நடந்துகொள்ள அவன் பெண் பயின்று கொண்டிருந்தாள். பையன்கள் வியாபாரத்தைத் தொடர்ந்து நடத்துவார்கள். மூன்று குழந்தைகளுக்கும் எதிர்காலம் பிரகாசமாக இருக்கும்.

எதிர்காலத்தைப் பற்றித் தீரயோசித்து எதையும் செய்பவன் ஆரான்ஸென். இல்லாவிட்டால் அவன் அங்கு வந்து அவ்வளவு முன்யோசனையுடன் கடை வைத்திருப்பானு? மீன் பிடித்தே அவன் பொருளீட்டிக் கொண்டிருக்கலாம்—அதிலும் இவ்வளவு சம்பாதித் திருக்கலாம். ஆனால் அது சாதாரண மனிதனின் வாழ்க்கை. வியாபாரியின் வாழ்க்கை யாகுமா அது? மீன் பிடிப்பவனைப் பார்த்து யாரும் வணங்கமாட்டார்கள். வியாபாரியின் விஷயமே வேறு. முன்னெல்லாம் ஆரான்ஸென் துடுப்பெடுத்துப்படகு தள்ளுவான்; இப்போது பாய்மரங்களுடன் ஒரு படகு வாங்குவ தாக இருந்தான் அவன். "கையில் காசு" என்று அவன் அடிக்

கடி சொல்லுவான். எத்தனையோ விதமாக அந்த வார்த்தைகளை உபயோகித்தான் அவன். வாங்குவதற்கும் விற்பதற்கும், லாபத்துக்கும் நஷ்டத்துக்கும் எல்லாவற்றிற்கும் அதை உபயோகித்தான் அவன். அவன் குழந்தைகள் கையில் காசுடன் வாழ்வார்கள், தன்னையும்விட அதிகக் காசுடன் வாழ்வார்கள். தான் பட்ட சிரமங்கள்கூட அவர்கள் படமாட்டார்கள் என்கிற அர்த்தத்தில் அந்த வார்த்தையை உபயோகித்தான் அவன்.

ஆமாம். எல்லாம் சரிவர லாபகரமாகவே நடந்தது. அவனையும் அவன் மனைவியையும் — குழந்தைகளையும்கூட எல்லோரும் கவனித்தார்கள். குழந்தைகளையும் கவனித்தார்கள் என்பதுதான் விசேஷம்! சுரங்கக் கூலிகள் குன்றின் சரிவிலிருந்து வந்தார்கள்—அவர்கள் ஒரு குழந்தையின் குரலைக் கேட்டே பல நாட்களாயின. ஆரான்ஸென்னின் குழந்தைகள் தோட்டத்தில் விளையாடிக் கொண்டிருப்பதைக் கண்டதும் அவற்றுடன் நின்று பேசுவார்கள். அவர்களுக்குக் காசுகூடக் கொடுத்திருப்பார்கள்—ஆனால் வியாபாரியின் குழந்தைகளுக்குக் காசு கொடுப்பது சரியல்லவே! வாய் ஹார்மோனியத்தில் அவர்களுக்குப் பாட்டுப் பாடுவார்கள். வாலிபன் குஸ்டாவ் வந்து அவர்களுடன் விளையாடுவான்; அவன் கண்களும் உதடுகளும் சிரிப்பால் மலரும்; அந்தக் குழந்தைகளுடன் வெகு நேரம் விளையாடிக் கொண்டிருப்பான் குஸ்டாவ். ஆரான்ஸென்னின் குழந்தைகளுக்கு அவனை நன்கு தெரியும். அவனைக் கண்டதும் ஓடி வரும். அவனும் ஓடுவான் அவர்களுக்கேற்றமாதிரி. அவர்களை தன் முதுகில் தூக்கிக்கொண்டு நாட்டியமாடுவான் அவன். மூவரையும் சேர்ந்தார்ப் போல உப்பு மூட்டை தூக்குவான். பிறகு தன் வாய் ஹார்மோனியத்தை எடுத்து அதில் வித விதமான பாட்டுக்கள் வாசிப்பான். வேலைக்காரப் பெண்கள் இருவரும் வந்து நின்றுகொண்டு அந்தப் பாட்டுக்களைக் கேட்பார்கள்; அவர்கள் கண்களில் நீர் துளிக்கும். குஸ்டாவ் எவ்வளவு அழகாக ஹார்மோனியம் வாசித்தான்! கிறுக்கன்தான்—ஆனால் என்ன செய்கிறோம் என்று அவனுக்குத் தெரியாதா என்ன?

சிறிது நேரம் கழித்து அவன் கடைக்குள் போவான். காசை விசிறுவான். ஒரு பை கொள்ளாத சாமான்கள் வாங்குவான். ஒரு கடையே வைக்கலாம் போல இருக்கும் அவன் வாங்குகிற சாமான்கள். வழியில் ஸெல்லன்ராவில் வந்து தன் பையைத் திறந்து என்னென்ன வாங்கினேன் என்று காண்பிப்பான். ஓரத்தில்

பூப்போட்ட லெட்டர் பேப்பர்; புதுச் சுங்கான் ஒன்று; ஒரு புதுச் சட்டை; ஓரத்தில் பூவேலை செய்த ஒரு கழுத்துச் சவுக்கம்; பெண்களுக்குத் தித்திப்புப் பண்டங்கள்; பளபளவென்றிருந்த பல சாமான்கள், ஒரு கடிகாரச் சங்கலி, ஒரு காம்பஸ், ஒரு சிறு கத்தி— இன்னும் என்ன எல்லாமோ வாங்கி வருவான் அவன். ஞாயிற்றுக் கிழமைகளில் கொளுத்துவதற்கு என்று பல வர்ண அவுட்டுகள் கூட வாங்கி வந்திருந்தான் அவன். இங்கர் அவன் குடிப்பதற்குப் பசுவின் பால் கொடுத்தாள். லெபல்டினுடன் வேடிக்கையாகப் பேசி விளையாடினான் அவன். ரிபெக்காவைத் தூக்கி ஆகாயத்தில் போட்டு...“ஓ...வா” என்று பிடித்தான்.

ஸ்வீடனைச் சேர்ந்த கூலியாட்களுடன் நின்று பேசினான். “கட்டிட வேலை எந்தமட்டும் இருக்கிறது” என்றான். குஸ்டாவே ஸ்வீடனைச் சேர்ந்தவன் தான். அவர்களுடைய வேலையில் உதவி செய்யவும் அவன் தயார்—ஆனால் இப்படிச் சொல்லிவிட்டு நகர்ந்து விடுவான் குஸ்டாவ்.

“நீயும் உதவி செய்தால்தான் முடியும் வேலை” என்றாள் இங்கர். மாட்டுக் கொட்டில் சீக்கிரமே தயாராகிவிடவேண்டும்— இல்லாவிட்டால் அந்த மாரிக்காலத்தில் ஆடுமாடுகள் மிகவும் கஷ்டப்படும்.

குஸ்டாவ் ஒரு அவுட்டைக் கொளுத்தி விட்டான். ஒன்று கொளுத்திய பிறகு மற்றதை வைத்திருப்பானேன். ஒவ்வொன்றாகக் கொளுத்திவிட்டான். அரைடஜன் அவுட்டுகளைக் கொளுத்தினான். குழந்தைகளும் ஸ்திரீகளும் சுற்றி நின்று ஆச்சரியத்துடன் பார்த்தார்கள். மந்திரவாதியின் மந்திரம் இது. இங்கர் அதற்குமுன் வாண வேடிக்கை பார்த்ததேயில்லை. ஆனால் அந்த அவுட்டு அவளுக்கு அவளுடைய நகர வாழ்க்கையை ஞாபகப்படுத்துகிறது. தையல் மெஷின் இந்த வித்தைக்குமுன் எம்மாத்திரம்? வாய் ஹார்மோனியத்தில் பாட்டு வாசிக்கிறான் குஸ்டாவ். உணர்ச்சி வசப்பட்டவளாக இங்கர் அவனுடன் பாதிவழி போய்விட்டுத் திரும்புகிறாள்.

சுரங்கத்தில் வேலை நடந்து கொண்டிருக்கிறது இப்போது. குதிரை வண்டிகளில் ஏற்றிக் கனிப் பொருள்களைக் கடற்கரைத் துறைமுகத்துக்கு அனுப்புகிறார்கள். அங்கிருந்து ஒரு கப்பல் அதை ஏற்றிக்கொண்டு தென் அமெரிக்காவுக்குக் கிளம்புகிறது. அது போனபின் இன்னொரு கப்பல் சுமை ஏற்றிக்கொள்ளத்

தயாராக நிற்கிறது. பெரிய கம்பெனிதான் அது. நடக்க முடிந்தவர்களெல்லாம் நடந்து போய் அந்தச் சுரங்கத்தைப் பார்த்துவிட்டு வந்துவிட்டார்கள். ப்ரேட் ஒல்ஸனும் போனான். தன்னுடைய ஸாம்பிள் மூட்டைகளைச் சுமந்து கொண்டு போனான்; தூக்கிப்போன கூலியாகக்கூட எதுவும் கிடைக்கவில்லை அவனுக்கு; சுரங்கவேலை நிபுணனும் ஸ்வீடன் திரும்பியிருந்தான் அச்சமயம். ஞாயிற்றுக் கிழமைகளில் கிராமத்திலிருந்து பலர் — ஒரு கூட்டம் — வந்தது அந்தச் சுரங்கத்தைப் பார்க்க. ஆக்ஸெல் ஸ்டிராம் கூடப்போனான். நேரத்தை வீணாக்க இயலாத ஆக்ஸெல் கூடப் போய்ப் பார்த்தான் — தந்தி இலாகாவும் பண்ணையுமாக இப்போது அவனுக்கு ஓய்வே கிடையாது; அப்படியும் போய் அந்தச் சுரங்கத்தையும் அதன் அதிசயங்களையும் பார்த்தான். எல்லோரும் பார்த்துவிட்டார்கள். கடைசியில் இங்கர் கூடக் கிளம்புகிறாள் — ஸெல்லன்ராவிலிருந்து இங்கர் கிளம்புகிறாள். தங்கமோதிரமும் பளபளக்கும் ஆடையுமாக இங்கரும் போகிறாள்.

அங்கே எதற்காகப் போகிறாள் அவள்?

ஒன்றுமில்லை. வேலை எப்படி நடக்கிறது என்று கூட அவள் கவனிக்கவில்லை. இங்கர் தன்னைப் பிறர் பார்க்கட்டும் என்று வந்திருக்கிறாள் அவள் — அவ்வளவுதான்! மற்ற பெண்கள் போவதைக் கண்டதும் தானும் போகவேண்டும் என்று எண்ணி வந்தாள் அவள் — அவள் மேலுதட்டில் விகாரமான வடு இருக்கிறது வயது வந்த பிள்ளைகளும் பெண்களும் இருக்கிறார்கள் அவளுக்கு. ஆனால் அவளும் வந்தாள். மற்றவர்கள் வாலிபமாக இருக்கிறார்கள். என்பது அவள் மனதில் உறுத்துகிறது — அவளுடன் தன்னால் போட்டியிட முடியாதா என்ன என்று தனக்குத் தானே சவால் கூறிக் கொள்ளுகிறாள். அவள் இன்னும் பெருக்கத் தொடங்கிவிட வில்லை. அவள் உருவமும் நடையும் இன்னும் கவர்ச்சிகரமாகத்தான் இருக்கின்றன. பார்ப்பதற்கு அழகாகவே இருக்கிறாள். அவள் நிறம் மாறிவிட்டது. அவள் மேனிப்பகட்டும் அழிந்துவிட்டது — அப்படியும்தான் என்ன? அவளால் ஆசையைக் கிளறிவிட முடியாதா?

அவளை எல்லோரும் வரவேற்கிறார்கள். சுரங்கத்தில் வேலை செய்பவர்கள் எல்லோருக்கும் அவளைத் தெரியும். எத்தனை பால் கொடுத்திருப்பாள் அவர்களுக்கு. சுரங்கம், குடிசைகள் எல்லாவற்றையும் அவளுக்குக் காட்டுகிறார்கள். லாயங்கள், சமையல்

அறை எல்லாவற்றையும் காட்டுகிறார்கள். சில தைரியஸ்தர்கள் அவளைத் தொட்டுத் தொட்டுப் பேசுகிறார்கள். அதுபற்றி இங்கர் கோபித்துக் கொள்ளவில்லை. படி ஏறும்போதும் இறங்கும் போதும் பாவாடையைத் தூக்கிக் கணைக்கால் தெரிய விட்டுக் கொள்கிறாள். அவள் 'அழகிதான் என்று எண்ணுகிறார்கள் அங்குள்ள ஆண்கள்.

அவளுக்கு வயதாகிக் கொண்டிருக்கிறது. அவளிடம் அனுதாபம் பிறக்கிறது அந்த ஆண்களுக்கு. ஒருவரையொருவர் அன்புடன் பார்த்துக் கொள்கிறார்கள். அது அவளுக்குத் திருப்தியாகவே இருக்கிறது. அவர்கள் அன்பையும் அனுதாபத்தையும் அறிந்து அவள் நன்றி பாராட்டுகிறாள். அவள், நாணயமுள்ளவள் தான் — வேறு விதமாக இருக்க அவளுக்குச் சந்தர்ப்பம் வாய்க்கவில்லை.

வயதாகிக் கொண்டிருந்தது அவளுக்கு......

குஸ்டாவும் வந்தான். கிராமத்தில் இரண்டு இளம் பெண்களை விட்டு விட்டு வந்தான். அவனுக்குப் புரிந்துவிட்டது விஷயம் — என்ன செய்கிறோம் என்றறியாத புள்ளி அல்ல அவன். அவசியமில்லாத ஒரு நெருக்கத்துடன் ஒரு பாவத்துடன் இங்கரின் கைகளைத் தொட்டான் அவன். ஸெல்லன்ராவில் இது என் கடைசி நாள் என்றான் — அதற்காக அவளை அவன் தொந்தரவு செய்யவில்லை.

முகம் சிவக்க இங்கர் கேட்டாள்: "கட்டிட வேலையில் உதவ நீ எப்போது வரப் போகிறாய்?"

கூடிய சீக்கிரமே வருகிறேன் என்கிறான் குஸ்டாவ். அது கேட்ட மற்றவர்களும் கட்டிட வேலையில் உதவ வருவதாகச் சொல்கிறார்கள்.

"ஓ!" என்கிறாள் இங்கர். "அப்படியானால் சுரங்கத்தில் வேலை முடிந்துவிட்டதா?"

ஒருவரும் நேரடியாகப் பதில் சொல்லவில்லை. ஆனால் அநேகமாக வேலை முடிந்துவிட்ட மாதிரித்தான். குஸ்டாவ் மற்றவர்களை விடத் தைரியஸ்தன். சுரங்கத்தில் இனிமேல் செம்பு இல்லை என்றான்.

"நிஜமாகவா?" என்கிறாள் இங்கர்.

குஸ்டாவ் இம்மாதிரிப் பேசுவது தவறு என்று மற்றவர்கள் சொன்னார்கள். குஸ்டாவ் அப்படி எல்லாம் அடங்கி விடுவதாக

இல்லை. வேறு என்னவெல்லாமோ சொன்னான். இங்கருக்காக மட்டும், மற்றவர்களை எல்லாம் ஒதுக்கி விட்டுப் பேசுபவன்போலப் பேசினான் குஸ்தாவ். வேறு ஒருவன் வாய் ஹார்மோனியத்தில் பாடினான். அது குஸ்தாவின் பாட்டு மாதிரியாகுமா? வேறு ஒருவன் வாயால் பாடினான்—அதுவும் சரிவர அமையவில்லை. குஸ்டாவின்மேல் வைத்த கண்ணை இங்கர் வாங்கவேயில்லை. அவள் தங்கமோதிரம் எப்படி குஸ்டாவின் கை விரலுக்கு மாறியது! அவனும் அமுக்கன்தான்—அவளும் அமுக்கம்தான் இங்கரின் கையைப் பிடித்து அமுக்கினான் குஸ்டாவ். அதைக் கவனியாதவள் மாதிரியே இருந்துவிட்டாள் இங்கர். பிறகு அவள் தன் அறையில் உட்கார்ந்து காப்பி சாப்பிட்டுக் கொண்டிருக்கும்போது வெளியே பல ஆண் குரல்கள் ஒருவரை ஒருவர் திட்டிக்கொள்வது காதில் விழுந்தது. அவள் பொருட்டுத்தான் அத்தனைபேரும் சண்டை போட்டுக் கொண்டிருந்தார்கள் என்று எண்ணிப் பெருமையாக இருந்தது அவளுக்கு. கிழவியா அவள்? இல்லை. அழகிதான்.

அந்த ஞாயிறன்று எப்படி மலைச்சரிவிலிருந்து வீடு திரும்பினாள் அவள்? போனமாதிரியேதான். நாணமுள்ளவளாகவேதான் திரும்பினாள். அவனையும் குஸ்டாவையும் ஒரு விநாடிகூடத் தனியாக விடவில்லை. அந்தச் சுரங்க வேலைக்காரக் கும்பல். வேண்டுமென்றே அப்படிச் செய்தார்கள். இங்கருக்கு அதுவும் திருப்திதான்—அன்று மாலைப் பொழுதைப் போல ஒருநாளும் அவ்வளவு இன்பகரமாகக் கழித்ததில்லை.

கடைசியில் வீடு வந்ததும் "இங்கர் எதையும் இழந்துவிடவில்லையா!" என்று அவர்கள் கேட்டார்கள்.

"இழந்து விடுவதா? இல்லையே!"

"தங்க மோதிரம்."

குஸ்டாவ் வேறு என்ன செய்யமுடியும். மோதிரத்தைக் கழட்டி அவளிடம் கொடுத்துவிட்டான். அவன் இந்தச் சேனையை எதிர்த்துத் தனியாக என்ன செய்ய முடியும்?

"ஓ! நீ கண்டுபிடித்ததும் நல்லதுதான்" என்று சொல்லி விட்டுக் கிளம்பினாள் இங்கர்.

ஸெல்லென்ராவை அணுக அணுக அவள் கண்களில் தன் வீடுகளின் கூரைகள் தெளிவாகத் தெரிந்தன. அது அவள் வீடு. அதற்கு அவள் எஜமானி. மீண்டும் விழித்துக்கொண்டாள் அவள். கனவு லோகத்திலிருந்து விடுபட்டு நினைவு உலகத்துக்கு

வந்தாள். கொட்டிலில் போய் மாடுகளைப் பார்த்தாள். ஒரு இடத்தில் ஞாபகம் வருகிறது — அந்த இடத்தில்தான் அவள் ஒரு குழந்தையையும் புதைத்தாள்—வெகுநாட்களுக்கு முன் நடந்தது அது. வேலைக்காரி ஜென்ஸின் மாடுகளைக் கறந்தாளோ —இல்லையோ...?

சுரங்கத்தில் வேலை இன்னமும் நடக்கிறது. ஆனால் குசுகுசு வென்று எல்லோரும் ரகசியம் பேசுகிறார்கள். சுரங்கம் எதிர் பார்த்தபடி பலன் தரவில்லை. ஒரு எக்ஸ்பெர்ட்டுக்கு இரண்டு எக்ஸ்பெர்ட்டுகளாக இப்போது வந்து அந்தச் சுரங்கத்தைப் பார்வையிடுகிறார்கள். எல்லாவற்றையும் அடியிலிருந்து பார்வை யிடுகிறார்கள். செம்பு நன்றாகத்தான் இருக்கிறது. ஆனால் அதிகம் இல்லை. அதுதான் குறை. கம்பெனிக்குச் சொந்தமான நிலத்துக்கு அப்பால் அதிகச்செம்பு இருக்கிறமாதிரி இருக்கிறது— இந்தப் பக்கத்தில் இல்லை. அதற்கப்பாலிருந்தது சர்க்கார் சொத்து. முதலில் வாங்கியவர்கள் அதுபற்றி அதிகம் சிந்திக்க வில்லை. தவிரவும் குடும்ப கௌரவத்தைக் காப்பதற்காக அதை வாங்கி நஷ்டப்படாமல் நாசூக்காக விற்று விட்டார்கள். அவர்கள் அந்தப் பிரதேசம் பூராவையும் வாங்கிவிடவில்லை. ஐஸக்குக்கும் கெய்ஸ்ஸலருக்கும் சொந்தமான ஒரு பகுதியை மட்டும் தான் வாங்கியிருந்தார்கள். அதில் அதிகச் செம்புக்கனிப் பொருள் தேறவில்லை.

இப்போது என்ன செய்வது? செய்வது என்ன? மற்ற நிலத்தையும் வாங்கிச் சுரங்கம் வெட்ட சர்க்காருடன் பேரம் பேச வேண்டும் என்றான் தலைவன். ஸ்வீடனுக்கு ஒரு தூதனை அனுப்பிவிட்டு அவர்கள் லென்ஸ்மாண்டைத் தேடிப் போனார்கள். அங்கு அவ்வளவு சுலபமாக நிலத்தை வாங்கிவிட முடியவில்லை. சட்டம் அவர்களுக்குக் குறுக்கே நிற்கிறது. சர்க்கார் நிலத்தை அந்நிய தேசத்தவர்களுக்கு விற்கக்கூடாது. சரி, அதற்கும் வழி செய்கிறார்கள். அப்படியும் தென் பகுதி கிடைக்காது. ஏன்? வேறு ஒருவன் வாங்கிவிட்டான். வாங்கியவன் யார்? வேறு யாருமல்ல, கெய்ஸ்ஸலர்தான்.

"யாரு கெய்ஸ்ஸலர்? ஓ! அவனா?"

"பத்திரங்கள்கூட ரிஜிஸ்தராகிவிட்டன" என்றான் லென்ஸ் மாண்டு. "வெறும் மலைச்சரிவு. ஒன்றும் அங்கு விளையாது என்று ஏதோ சொல்ப விலைக்கு வாங்கினான் அவன்."

"யார் இவன்? இதில் எங்கு திரும்பினாலும் கெய்ஸ்ஸலர் மயமாக இருக்கிறதே? எங்கிருக்கிறான் அவன்?"

"அவன் இப்போது எங்கிருக்கிறானோ? யார் கண்டது!"

புதுசாக ஒரு தூதனை ஸ்வீடனுக்கு அனுப்புகிறார்கள்—இந்த கெய்ஸலரைப் பற்றிய விஷயங்களை எல்லாம் விசாரித்து வர. இடையில் ஆட்களை வைத்துக்கொண்டு என்ன பண்ணுவது? காத்திருந்து பார்க்க வேண்டியதுதான்!

ஆகவே குஸ்டாவ் வந்து சேர்ந்தான் ஸெல்லன்ராவுக்கு. தன் சாமான்களை எல்லாம் முதுகில் தூக்கிக் கொண்டுவந்து சேர்ந்தான். சுரங்கத்தில் இனி வேலையில்லை அவனுக்கு. அவன் ஸெல்லன்ராவில் முந்திய ஞாயிறன்று பேசிய பேச்சு என்ஜினியர் காதுவரை எட்டிவிட்டது. அதற்காக அவனை முதலில் நிறுத்தி விட்டார்கள். நல்லதுதான். அவன் விரும்பியதும் அதுதானே? அவன் இனி ஸெல்லன்ராவுக்கு வருவதற்கு என்ன தடை? புதுக் கட்டிட வேலையைச் செய்ய அவனை அமர்த்தினார்கள். கற்சுவர் வேலை இன்னமும் நடந்தது. சில நாள் கழிந்து போய்விட்டது என்று இன்னொரு சுரங்கத் தொழிலாளி வந்து சேர்ந்தான். அவனும் ஸெல்லன்ராவில் வேலைக்கு அமர்த்தப்பட்டான். வேலை இப்போது வேகமாக நடந்தது. இலையுதிர் காலம் முடிவதற்குள் புதுக் கொட்டகை தயாராகிவிடும்—பயப்படத் தேவையில்லை.

ஒருவர்பின் ஒருவராக சுரங்கத் தொழிலாளிகள் வந்தார்கள், ஸ்வீடனுக்குக் கிளம்பினார்கள். தற்காலிகமாக சுரங்கத்தில் வேலையை நிறுத்திவிட்டார்கள். இந்தச்செய்தியைகேட்டு கிராமத்து மக்கள் பெருமூச்சு விட்டார்கள். அவர்களுக்கென்ன தெரியும் சுரங்க வேலையைப் பற்றிய சிரமங்கள் எல்லாம்! இத்தனை நாளும் ஸாம்பிள் வேலைதான் நடந்தது என்பது அவர்களுக்கு எப்படித் தெரியும்? கிராமத்து மக்கள் நம்பிக்கை இழந்துவிட்டனர். ஏமாற்ற மடைந்தனர், ஸ்டார் போர்க் கடையில் கூட்டமேயில்லை—கேட்பா ரற்றுக் கிடந்தன சாமான்கள் எல்லாம். இதற்கு என்ன அர்த்தம்? எல்லாம் நேர்த்தியாக இருந்த சமயத்தில் இப்படி நேர்ந்துவிட்டது. ஆரான்ஸென் கொடி மரம் ஒன்று நிறுத்தி அதன்மேல் கொடியைப் பறக்கவிட்டிருந்தான். குடும்பத்தாருக் கெல்லாம் நேர்த்தியான புதுத் துணிகள் வாங்கியிருந்தான். ஒரு புதுக் கம்பளியும் வாங்கியிருந்தான். ஊரிலே பணப் புழக்கம் குறைந்ததால், கூலிகள் குறைந்தன. சின்ன விஷயங்கள்தான்

இவை. ஆனால் பெரிய விஷயங்கள் பலவும் நடைபெற்றுக் கொண்டிருந்தன. மேன்லாந்துக்கும் ஸெல்லன்ராவுக்கும் இடையே வேறு இருவர் பண்ணை வாங்கியிருந்தார்கள். மண் குடிசைகள் போட்டுக் கொண்டு அவர்கள் நிலத்தை உழுது பண்படுத்தத் தொடங்கிவிட்டார்கள். அவர்கள் உழைப்பதற்கு அஞ்சாதவர்கள். குறுகிய காலத்திலே அவர்கள் பல காரியங்கள் செய்து விட்டார்கள். கோடையிலே அவர்கள் ஸ்டார்போர்கிடம் சாமான்கள் வாங்கினார்கள் — இப்போது ஸ்டார் போர்கிலே சாமான்கள் எதுவும் கிடைக்கவில்லை. நிறைய சாமான்களை வைத்துக்கொண்டு ஆரான்ஸென் என்ன செய்வது? அவன் சாமான்கள் வாங்கவேயில்லை; சுரங்கக் கூலிகள் இல்லாவிட்டால் அவனுக்கு வியாபாரம் ஏது? பணத்தைத் தவிர வேறு எதுவும் இப்போது ஸ்டார் போர்கில் இல்லை. சுற்று வட்டாரத்தில் இருந்த மக்களில் அதிகமாக ஏமாந்து சிரமப்பட்டவன் ஆரான்ஸென்தான். அவன் எதிர்பார்த்திருந்தது எல்லாம் கவிழ்ந்து விட்டது. நிலத்தை உழுது பயிரிடலாமே என்று யாரோ சொன்னதற்கு அவன் கோபித்துக் கொண்டான்: "இதற்காகவா நான் இங்கு வந்தேன்?" என்றான்.

கடைசியில் ஆரான்ஸெனுக்குத் தாங்கவில்லை. தானே போய்ச் சுரங்கத்தைப்பற்றி நேரில் தெரிந்து கொள்வது என்று கிளம்பினான். அன்று ஞாயிற்றுக்கிழமை. ஸெல்லன்ராவுக்கு வந்து ஐஸக்கையும் கூப்பிட்டான். ஐஸக் சுரங்க வேலை தொடங்கிய பிறகு அந்தப் பக்கம் ஒரு நாள் கூடப் போனதில்லை. வயலில் வேலை செய்வதே அவனுக்குத் திருப்தியாக இருந்தது. இங்கர் சிபாரிசு செய்தாள். "ஆரான்ஸென் கூப்பிடும்போது, நீயும்தான் போய் வாயேன்" என்றாள். ஞாயிறு. அன்று அவன் வீட்டி லில்லாதிருந்தால் நல்லது என்று இங்கர் நினைத்தாளோ என்னவோ! ஐஸக்கும் போனான்.

எப்படி மாறிவிட்டது அந்த இடம்? என்ன மாறுதல்! அதைத் தெரியவேயில்லை ஐஸக்குக்கு. குடிசைகளும் கட்டிடங்களுமாக அங்கு ஒரு புது நகரமே நிர்மாணமாகிவிட்ட மாதிரி இருந்தது. வண்டிகளும் குதிரைகளும் பூமியிலே பெரிய பெரிய பிளவுகளுமாக — நிலத்தின் தன்மையே மாறிவிட்டமாதிரி இருந்தது. என்ஜினியரே அவர்களுக்குச் சுற்றிக் காண்பித்தான். அப்போது அவன் நல்ல மனசுடன் இல்லை. ஆனாலும் ஏமாற்றத்துக்கும் வருத்தத்துக்கும் இடம் கொடுத்து விடக்கூடாது என்று

அவன் பாடுபட்டான். ஸெல்லன்ரா ஜமீந்தார் ஸ்டார் போர்க் சொந்தக்காரன் இருவருக்கும் தன் நம்பிக்கையைத் தெரிவிக்க இது நல்ல சந்தர்ப்பம்தானே! அவர்கள் போய், சொன்னல் கிராமத்தவர்கள் நம்பிவிடுவார்கள் — இன்னும் நம்பிக்கைக்கு இடம் இருக்கிறது என்று.

செம்புக் கனிப்பொருள் பற்றியும் அது காணப்படும் கற்கள், இடங்கள் பற்றியும் விரிவாகச் சொன்னன் என்ஜினியர். செம்பு, இரும்பு, கந்தகம் இவை மூன்றும் சேர்ந்தே காணப்படும். அந்தச் சுரங்கப் பிரதேசத்தில் தங்கமும் வெள்ளியுங்கூட இருந்தது— அதிகம் இல்லே. ஏதோ கொஞ்சம் இருந்தது. என்ஜினியருக்குத் தெரியாதா?

"இப்போது இதெல்லாம் தீர்ந்துவிட்டதா?" என்ருன் ஆரான்ஸென்.

"தீர்ந்துவிடுவதா?" என்ருன் என்ஜினியர் ஆச்சரியத்துடன். "அப்படி நாம் மூடிவிட்டால் தென் அமெரிக்காவில் தவிக்க மாட்டார்களா?" ஆரம்ப வேலைகள் முடிந்துவிட்டன. முழு வேலையும் பிறகு தொடங்கும். கொஞ்ச நாளில் மீண்டும் தொடங்கும். சுரங்கத்தில் எத்தனை கிடைக்கும் என்று மதிப்பிடப் போதுமான வேலை நடந்துவிட்டது. இனி ஆகாய கம்பி ரெயில் போட்டுத் தென்னண்டைப் பக்கத்தில் சுரங்க வேலை தொடங்கும். பிறகு ஐஸக் பக்கம்திரும்பி என்ஜினியர் கேட்டான்: "அந்த கெய்ஸ்ஸலர் எங்கே யிருக்கிருன் தெரியுமா?"

"தெரியாதே!"

பாதகமில்லே. அவனை உடனே கண்டு பிடித்துவிடுவார்கள். உடனேயே சுரங்க வேலை மீண்டும் தொடங்கும். சுரங்கத்தை மூடி விடுவதா? நல்ல பேச்சு இது!

ஐஸக்கின் கவனத்தை ஒரு சிறிய இயந்திரம் கவருகிறது. காலே வைத்து அசைத்தால் வேலை செய்கிறது அந்த இயந்திரம். அது புரிகிறது அவனுக்கு—அது ஒரு கொல்லன் பட்டறை. தூக்கிப்போய் எங்கு வேண்டுமானலும் வைத்து அதை வேலை செய்யலாம்.

"இதன் விலே என்ன?" என்கிருன் ஐஸக்.

"அதுவா? அந்தப் பட்டறையா! அதிகம் விலே இராது." அதுமாதிரிப் பல பட்டறைகள் இருக்கின்றன அங்கே. இதென்ன

பிரமாதம்! இதுபோலப் பெரிதும் சிறிதுமாக எத்தனையோ இயந்திரங்கள் இருந்தன அவர்களிடம். சுரங்க வேலை என்பது கை நகத்தாலும் பல்லாலும் செய்துமுடிக்கிற வேலையா என்ன?

மீண்டும் எல்லாவற்றையும் பார்த்துக்கொண்டு நடக்கிறார்கள். இன்னும் சில நாளில் ஸ்வீடனுக்குத் தானும் போகப் போவதாகச் சொல்லுகிறான் என்ஜினியர்.

"நீ திரும்புவாயா?" என்று கேட்கிறான் ஆரான்ஸென்.

வராமல்? வராதிருக்கக் காரணம் எதுவும் இருப்பதாகத் தெரியவில்லை அவனுக்கு.

மீண்டும் அந்தப் பட்டறை அருகில் வந்து, அதுபற்றிப் பேசுகிறான் ஐஸக். "இது என்ன விலையாகும்?"

"விலையா? என்ஜினியருக்குத் தெரியவில்லை. அதிகம் இராது. அதிகமும் இருக்கும். ஆனால் அல்ப விஷயம் அது. என்ஜினியருக்குத் தெரியாது. ஆனால் அவன் பெரிய மனிதனாக இருக்க விரும்பினான். ஐஸக்குக்கு அதுமாதிரி ஒரு பட்டறை வேண்டுமா? அதையே அவன் எடுத்துக்கொள்ளலாம். சுரங்கக் கம்பெனிக்கு அது ஒன்றும் பெரிய விஷயம் அல்ல. அதை இனமாகவே எடுத்துக்கொள்.

ஒரு மணி நேரம் கழித்து ஆரான்ஸெனும் ஐஸக்கும் வீடு திரும்பிக் கொண்டிருந்தார்கள். வியாபாரிக்கு மீண்டும் நம்பிக்கை பிறந்தது — எல்லாம் போய்விடவில்லை என்று. பட்டறையை முதுகில் சுமந்துகொண்டு நடக்கிறான் ஐஸக். கனமாக இருக்கிறது அது—ஆனால் கனத்துக்குப் பயப்படுபவன் அல்ல அவன். மறு நாள் இரண்டு ஆளைவிட்டுத் தூக்கிக் கொண்டு ஸெல்லன் ராவுக்குக் கொண்டுவரச் சொல்வதாக என்ஜினியர் சொன்னான். ஆனால் ஐஸக் நன்றி, நானே எடுத்துப் போகிறேன். எதற்காக மற்றவர்களுக்குச் சிரமம் என்றான். அதைத் தூக்கிக்கொண்டு போனால் பண்ணையில் பலரை ஆச்சரியத்தில் ஆழ்த்தலாம்.

ஆனால் பண்ணையை அடைந்தவுடன் ஆச்சரியத்தில் அழுந்தியவன் ஐஸக்கேதான்.

அதே சமயம் அவன் வீட்டு வாசலில் வந்து நின்றது ஒரு குதிரை வண்டி. அதில் வந்தது யார்? அதை ஓட்டி வந்தவன் கிராமத்தான் ஒருவன். வண்டிக்குப் பக்கத்தில் நடந்துவந்தவன் யார்.....யார்...வேறு யாருமில்லை கெய்ஸ்ஸலரேதான்!

## 5

ஐஸக்குக்கு ஆச்சரியமூட்டுவதற்கு வேறு பல விஷயங்களும் இருந்தன. ஆனல் அவனல் ஒரு விஷயத்தைத் தவிர வேறு எதையும் பற்றிச் சிந்திக்கச் சக்தி கிடையாது. "இங்கர் எங்கே?" என்று கேட்டுக் கொண்டே சமையல் அறையைத் தாண்டினன். இங்கரைப்பற்றிக் கவலையில்லை அவனுக்கு—கெய்ஸ்ஸலரைச் சரிவர வரவேற்று உபசரிக்க வேண்டுமே என்றுதான் கவலை அவனுக்கு.

இங்கர் எங்கே? பழங்கள் பொறுக்கப் போயிருந்தாள் இங்கர். ஐஸக் வீட்டைவிட்டுக் கிளம்பியது முதல், இங்கர் பழங்கள் பொறுக்கப் போய்விட்டாள். தனியாகவா? இல்லை. அவளுடன் குஸ்டாவும் போயிருந்தான். அவளுக்கு வயதாகிக் கொண்டிருந்தது — உண்மைதான். ஆனல் அவள் உள்ளத்தில் மீண்டும் காதல் தோன்றிவிட்டது. இலையுதிர் காலமும் மாரிக் காலமும் நெருங்கிக் கொண்டிருந்தன. ஆகவே கடைசி வஸந்தத்தை அனுபவிக்கத் தயாராகிக் கொண்டிருந்தாள் அவள். மலரும் உள்ளம் அது. "மேகப் பழங்களும் கிரான் பெர்ரீஸும் எங்கிருக்கின்றன காட்டுவா" என்று அழைத்தான் குஸ்டாவ். எப்படி ஒரு ஸ்திரீயால் மறுக்க முடியும்? இங்கர் தன் அறைக்குள் போனள்—சிறிது நேரம் தயங்கினள். கடவுளையும் தன் மனச்சாட்சியையும் கேட்டுக் கொள்கிருள் — போகலாமா வேண்டாமா? பிரார்த்தனை கீதங்களில் ஒன்றை வாய் முணுமுணுக்க, கண்ணாடியில் முகத்தைப் பார்த்து அழகு பண்ணிக் கொள்கிருள். குஸ்டாவ் அவளுக்காகக் காத்திருக்கிருன். அவளுக்கு அடிபணிய உலகம் காத்திருக்கிறது! தலையைச் சரிப்படுத்திக்கொண்டு கிளம்புகிருள். அவள் போனல் தான் என்ன? போகாமல் எந்த ஸ்திரீ இருப்பாள்? ஒரு மனிதனுக்கும் வேறு ஒருவனுக்கும் என்ன வித்தியாசம்? காதல் வந்து கண்ணை மறைக்கும்போது எவ்வித வித்தியாசமும் இல்லை. எப்போதுமே ஒரு ஸ்திரீயால் மனிதனுக்கு மனிதன் வித்தியாசம் காணமுடியாது—சில சமயம் காண்பர்கூட அரிது.

பழங்கள் பறிக்க இருவரும் போகிருர்கள். காட்டிலே இஷ்டப்படி திரிகிருர்கள். ஒரு வரப்பிலிருந்து இன்னென்றுக்கு—ஒரு மரத்திலிருந்து இன்னெரு மரத்துக்கு — தாவிப் பழம் பறிக்

கிருர்கள். தன் பாவாடையை முழங்காலுக்கு மேல் தூக்கிக் கொண்டு தன் அழகை அவன் கண்டு களிக்க நிற்கிருள் இங்கர். எங்கும் அமைதியாக இருக்கிறது. நாரைகளின் குஞ்சுகள் வளர்ந்து பெரியவைகளாகிவிட்டன. புதர்களில் மறைவான இடங்கள் பல இருக்கின்றன. இருவரும் ஒரு மணி நேரத்திற்குள்ளாகவே அலுத்துப் போனவர்கள் போல மறைவாக நெருக்கி யடித்துக் கொண்டு உட்காருகிருர்கள். இங்கர் சொல்கிருள்: "நீ இப்படிச் செய்யலாமா?" என்று. அவனிடம் மறுத்து அதட்டலாக எதுவும் சொல்ல அவளால் முடியவில்லை. அவனிடம் அவளுக்கு அன்பு பிறந்துவிட்டது; அவளால் அவன் கேட்டது எதை மறுக்க முடியும். ஜாக்கிறதையாக இருப்பது நல்லது—அதனுல் காதல் இன்பம் அதிகரிக்கும் என்பதற்காக அவள் மறுத்துச் சொல்லிப் பார்த்தாள். அவனிடம் எதை மறைக்க முடியும் அவளால்!

அவளுக்கு வயதாகிக் கொண்டிருக்கிறது!

"வேலை முடிந்ததும் நீ போய் விடுவாய்" என்கிருள் அவள்.

இல்லை. அவன் இரண்டொரு வாரங்களுக்குப் போகமாட்டான். போக வேண்டியதுதான் — ஆனுல் உடனே போய் விடமாட்டான்.

"வீட்டுக்குப் போகலாமா?"

"அதற்குள்ளாகவா?"

மீண்டும் பழம் பறிக்கிருர்கள் இருவரும். மீண்டும் புதரில் மறைவான ஓரிடத்தில் ஒதுங்குகிருர்கள். இங்கர் சொல்லுகிருள். "வேண்டாம் குஸ்டாவ்" என்று. நேரம் செல்லுகிறது. பக்கத்தில் படுத்து உறங்கி விட்டார்களோ அவர்கள்? தூக்கமா? இன்பம் அது. காட்டிலே — அதுதான் ஈடன் தோட்டம். இன்பத் தோட்டம். வேறு என்ன? இங்கர் திடீரென்று எழுந்து உட்காருகிருள்; கவனிக்கிருள். "பாதையிலே யாரோ வருகிற மாதிரி இருக்கிறது" என்கிருள்.

சூரியன் அஸ்தமித்துக் கொண்டிருக்கிறது. அவர்கள் திரும்பி வீடு நோக்கி நடக்கும்போது இருள் படரத் தொடங்கிவிட்டது. பல மறைவான புதர்கள் கண்ணில் படுகின்றன — குஸ்டாவ் அவற்றையும் இங்கரையும் மாறிமாறிப் பார்க்கிருன். ஆனுல் இங்கர் நேரே நடக்கிருள். ஆனுலும் பக்கத்தில் வந்த வாலிபனின் பார்வையுடன் கூடிய அழைப்பை எத்தனை நேரம் மறுக்க முடியும்? இங்கர் தன் பலத்தையும் பலஹீனத்தையும் உணருகிருள்: "உன்னைப் போல நான் பார்த்ததில்லை" என்கிருள்.

வீட்டிற்கு அவள் தனியாகத் திரும்புகிருள். அவள் அந்த சமயம் வந்து சேர்ந்தது அதிருஷ்டவசமாகத்தான். ஒரு நிமிஷம் கழித்து வந்திருந்தாளானுல் சரியாக இருந்திராது. ஐஸக் முதுகில் அந்தப் பட்டறையைத் தூக்கிக் கொண்டு வந்திருக்கிருன். ஆரான் ஸெனும் வந்து விட்டான். ஒரு குதிரை வண்டியும் வந்து நிற்கிறது.

"வந்தனம்" என்கிருன் கெய்ஸ்ஸலர் இங்கரைப் பார்த்ததும். ஒருவரை ஒருவர் பார்த்துக்கொண்டு வீட்டுக்கு வெளியே எல்லோரும் நிற்கிருர்கள்.

கெய்ஸ்ஸலர் திரும்பியும் வந்து விட்டான். அவன் வந்து போய்ப் பல வருஷங்களாகி விட்டன. ஆனுல் திரும்பி வந்து விட்டான். சற்று வயதானவனுகி விட்டான் அவன். நரை அதிக மாகி விட்டது. எப்போதும் போலப் பிரகாசமாகவும் சந்தோஷ மாகவும் இருக்கிருன் அவன். வெள்ளை வெயிஸ்டு கோட்டும், அதன் மேல் தங்கச் சங்கிலியும் அணிந்திருக்கிருன். அவனைப் புரிந்துகொள்வது சிரமம்தான்.

சுரங்கத்தில் நடப்பதென்ன என்று அவனுக்குத் தெரியுமோ? அதைப் பார்க்கத்தான் வந்தானே அவன். எதுவானுல் என்ன? வந்து விட்டான். மிகவும் விழிப்பாக வந்திருந்தான் — நாலா பக்கமும் சுற்றிக் கண்களை ஓட்டிக் கவனித்தான். கவனிப்பதற்கு எத்தனையோ மாறுதல்கள் இருந்தன. மார்க்ரேவ் (ஜமீந்தார்) நிலத்தைப் பொது பண்ணியிருந்தான். கெய்ஸ்ஸலர் தலையை ஆட்டினுன்.

"என்ன தூக்கிவருகிருய் நீ? ஒரு குதிரைச் சுமையைத் தூக்கி வருகிருயே!" என்று ஐஸக்கைக் கேட்டான்.

"ஒரு பட்டறை. இங்கு உபயோகப்படும் — என் வயலில் உபயோகிக்கலாம்" என்ருன் ஐஸக். அவ்வளவு பெரிய பண்ணை யைப் போய் வயல் என்றுதான் சொல்லுகிருன் அவன்.

"ஏது அது?"

"சுரங்க என்ஜினியர் எனக்கு இனுமாகத் தந்தான்."

"கம்பெனி என்ஜினியரா?" என்ருன் கெய்ஸ்ஸலர். விஷயத் தைப் புரிந்து கொள்ளாதவன்மாதிரி, முகத்தைச் சுளித்துக் கொண்டு, ஒரு கம்பெனி என்ஜினியருக்கு மட்டமானவனு கெய்ஸ்ஸலர். "நீ அறுவடை இயந்திரம் வாங்கிவிட்டாயாமே! நான் ஒரு போரடிக் கும் மெஷின் கொணர்ந்திருக்கிறேன் — உனக்காக. பார்" என்ருன்

குதிரை வண்டியில் இருப்பது போரடிக்கும் இயந்திரம்தான். சிவப்பும் நீலமுமாக ஒரு பெரிய சிப்புமாதிரி அது இருக்கிறது, அதை இறக்கிக் கீழே வைக்கிறார்கள். ஐஸக் ஆனந்தத்துடன் குதிரை கட்டவேண்டிய இடத்தில் நின்று அதை இழுக்கிறான். ஆச்சரியத்தால் அவன் வாய் பிளந்தது. ஸெல்லன்ரா பண்ணைக்கு ஒன்றன்பின் ஒன்றாகப் பல ஆச்சரியங்கள் வந்தடைகின்றன.

சுரங்கத்தையும் அதன் வேலையையும் பற்றிப் பேசுகிறார்கள். "உன்னைப்பற்றி அவர்கள் விசாரித்துக் கொண்டிருக்கிறார்களே?" என்றான் ஐஸக்.

"யார்?"

"என்ஜினியரும் அந்தச் சுரங்கச் சொந்தக்காரர்களும்தான்."

"ஐஸக் சொன்னது கெய்ஸ்ஸலருக்குப் பிடிக்கவில்லையோ என்னவோ, "நான் இங்கேதான் இருக்கிறேனே! வேண்டுமானால் தேடிக்கொண்டு வரட்டும்" என்று சொன்னான் கெய்ஸ்ஸலர் சுருக்கமாக.

மறுநாளே ஸ்வீடன் சென்றிருந்த இரண்டு தூதர்களும் திரும்பிவிட்டார்கள். சுரங்கத்துச் சொந்தக்காரர்கள் இருவரும் அவர்களுடன் வந்தார்கள். கனவான்கள் அவர்கள்—குதிரைகளின் மேல் ஏறிச் சவாரிசெய்து வந்தார்கள். பணக்காரர்கள் என்று தோன்றிற்று. தொந்தியும் பருமனுமாக இருந்தார்கள் அவர்கள். ஸெல்லன்ராவில் அவர்கள் தாமதிக்கவில்லை. ஏதோ கேள்விகள் சில கேட்டுவிட்டு, குதிரையைவிட்டு இறங்காமலே போய் விட்டார்கள். கெய்ஸ்ஸலரைப் பார்த்தமாதிரியே அவர்கள் காண்பித்துக் கொள்ளவில்லை. தூதர்களாகப் போனவர்கள் மட்டும் ஒருமணி நேரம் தாமதித்தார்கள். அங்கிருந்தவர்களுடன் பேசி கெய்ஸ்ஸலர் யார் என்று அறிந்துகொண்டு கிளம்பினார்கள். அன்று மாலையே அவர்களில் ஒருவன் வந்து சுரங்கத்துச் சொந்தக்காரர்கள் கெய்ஸ்ஸலரைப் பார்க்க விரும்புவதாகவும் அழைத்து வரச் சொன்னதாகவும் சொன்னான். "நான் இங்கே இருக்கிறேன். என்னைப் பார்க்க விரும்பினால் அவர்கள் இங்கு வரட்டுமே" என்றான் கெய்ஸ்ஸலர் அழுத்தலாக.

கெய்ஸ்ஸலர் பெரிய மனிதன் ஆகிவிட்டான் — வேறு என்ன? அவனைத் தேடுபவர்கள் தேடி வரட்டுமே! அவன் சக்தி அவனுக்குத் தெரியாதா? கூப்பிட்டனுப்பினால் அவன் யார் ஓடுவதற்கு? வரட்டும், வரட்டும். ஆனால் அவன் எப்படி அந்தச் சமயத்தில் அங்கு ஸெல்லன்ரா வந்து சேர்ந்தான்?—தேடுவார்கள்

என்று தெரிந்துதான் வந்திருந்தானே? அவனுக்குத் தெரியாத விஷயம்தான் எது? அது எப்படியானால் என்ன? கெய்ஸ்ஸலரின் பதில் கிடைத்ததும் மேலே போன கனவான்கள் வேறு என்ன செய்வது? மீண்டும் இறங்கிவந்தார்கள். ஸெல்லன்ராவுக்கு வந்தார்கள். அவர்களுடன் அந்த என்ஜினியரும் சுரங்க எக்ஸ்பெர்ட்டுகள் இருவரும் வந்தர்ர்கள்.

அவர்கள் சந்திக்குமுன் எத்தனை கோணல் வழிகள் தென்பட்டன. ஆரம்பமே சரியாக இல்லை. கெய்ஸ்ஸலர் இல்லாத அமுத்தலெல்லாம் பண்ணிக்கொண்டான்.

இந்தத் தடவை அந்த ஸ்வீடன் கனவான்கள் மிகவும் மரியாதையாகவே இருந்தார்கள். அவனை அழைத்து வர ஆளனுப்பியதற்கு மன்னிப்புக் கேட்டுக்கொண்டார்கள். களைப்பாக இருந்ததால் ஆளனுப்பினர்களாம்; இல்லாவிட்டால் அவர்களே வந்திருப்பார்களாம். பிறகு அவர்கள் வந்த விஷயத்தைச் சொன்னார்கள்; தண்ணிக்கு அப்பால் தென்னண்டைப் பக்கத்தில் இருந்த நிலத்தை எல்லாம் விற்க கெய்ஸ்ஸலர் தயாராக இருந்தானு?

"உங்களுக்காகவே வாங்கப் போகிறீர்களா? அல்லது வேறு யாருக்காகவாவதா?" என்று கேட்டான் கெய்ஸ்ஸலர்.

இதைப்பற்றி கெய்ஸ்ஸலருக்கு என்ன கவலை? இது வேண்டுமென்று அவர்களைத் தொந்தரவு செய்வதற்காகக் கேட்ட கேள்வி தான். அவர்கள் பணக்காரர்கள் — தங்களுக்காகவேதான் கேட்டார்கள். பிறகு பேரம் பேசினார்கள். "என்ன விலைக்குக் கொடுப்பாய்?"

"சரி" என்றான் கெய்ஸ்ஸ்லர். சிறிது நேரம் யோசித்தான். "விலையா இருபது லக்ஷம்."

"அப்படியா?" என்று சொல்லி அந்தக் கனவான்கள் சிரித்தனர். ஆனால் கெய்ஸ்ஸலர் சிரிக்கவில்லை.

அந்த நிலத்தைப் பரிசோதித்துப் பார்த்த என்ஜினியரும் சுரங்க நிபுணர்களும் தங்கள் அபிப்பிராயங்களைச் சொன்னார்கள். கனிப் பொருள் மேலெழுந்தவாரியாக இருந்தது. அடர்த்தியாகவும் இல்லை; நிறையவும் இல்லை. கெய்ஸ்ஸலர் நிலத்தின் ஓரத்தில் மற்ற இடங்களைவிட அதிகமாக இருப்பது போல இருந்தது. கடைசி மைலில் கனிப் பொருள் இல்லவே இல்லை என்று.

அலக்ஷியமாக இதை எல்லாம் காதில் வாங்கினன் கெய்ஸ்ஸலர். தன் பையிலிருந்து சில கடிதங்களை எடுத்துப் பார்த்தான். ஜாக்கிறதையாகப் பார்த்தான். அவை பிளான் களும் அல்ல—கனிப் பொருள் சம்பந்தமான குறிப்புகளும் அல்ல. வேறு ஏதோ சம்பந்தமேயில்லாத கடிதங்களாகவும் இருக்கலாம். தன் கடிதங்களிலிருந்து சொல்பவன் போலச் சொல்கிருன்: "நீங்கள் அதிக ஆழம் போகவில்லை." உண்மைதான் என்று அவர்கள் ஒப்புக் கொண்டார்கள். "உனக்கு எப்படித் தெரியும்? நீ ஓட்டைப் போட்டுப் பார்த்தாயா?" என்று கேட்டார்கள்.

கெய்ஸ்ஸலர் பதில் தராமல் புன்சிரிப்புச் சிரித்தான். பூமி பூராவுமே தொளைகள் போட்டுப் பார்த்துவிட்டு மூடிவிட்டவன் போலச் சிரித்தான்.

நண்பகல் வரை அவர்கள் பேசிக் கொண்டிருந்தார்கள். அப்படியும் இப்படியும் ஓயாமல் பேசிக் கொண்டிருந்தார்கள். கன வான்கள் தங்கள் கடிதங்களைப் பார்த்துக் கொண்டார்கள். கெய்ஸ்ஸலர் ஐந்து லக்ஷத்தில் வந்து நின்ருன்—அதற்குக் கீழே நகர மறுத்துவிட்டான். அவனுக்குக் கோபம் வந்துவிட்டது மாதிரி இருந்தது. ஏதோ விற்பதற்கு அவன் அவசரப்பட்ட மாதிரி அவர்கள் பேசினர்களே — அவனுக்கு எப்படிப்பட்ட அவசரமும் இல்லை. அவனும் அவர்களைப் போலப் பணக்காரன் தான்—அவனுக்கென்ன கவலை.

"பதினைந்து அல்லது இருபதினயிரம் என்ருல் சரியான விலை" என்ருர்கள் அவர்கள்.

கெய்ஸ்ஸலரும் ஒத்துக் கொண்டான்: விற்க அவசரப்படு கிறவனுக்கு பதினைந்தாயிரம் போதும். அவன்கூட இருபத்தை யாயிரம் கேட்கலாம்.

பிறகு அந்தக் கனவான்களில் ஒருவன் சொன்னன்: "உன் மனைவியின் ஜனங்களைப் பார்த்தேன் ஸ்வீடனில். அவர்கள் தங்கள் அன்பை அனுப்பினர்கள்." இப்படிப் பேசினலாவது கெய்ஸ்ஸலர் அடங்கமாட்டான என்று எண்ணினன்போலும்.

ஆனல் கெய்ஸ்ஸலர் அடங்கவில்லை. "தாங்க்யூ" என்ருன். அவ்வளவுதான்.

"சரி போகட்டும். இரண்டரை லக்ஷம் வேண்டுமா. அவ்வளவு தான்! தங்கச் சுரங்கம் அல்லவே அது? செம்புதானே?"

"ஆமாம் செம்புதான்" என்ருன் கெய்ஸ்ஸலர்.

அவர்கள் பொறுமை இழந்தவர்களாகத் தங்கள் கடிகாரங்களைப் பார்க்கிறார்கள். நேரம் போய்க் கொண்டிருக்கிறது. வீண் பொழுது போக்க அவர்களா மனிதர்கள்? சாப்பிட நேரம் ஆகிக் கொண்டிருக்கிறது. ஸெல்லன்ராவில் சாப்பிட உணவு கேட்கவில்லை அவர்கள். தங்கள் உணவை அருந்தச் சுரங்கத்துக்குத் திரும்பினார்கள்.

அவர்கள் சந்திப்பு அன்று அத்துடன் முடிந்தது.

கெய்ஸ்ஸலரைத் தனியாக விட்டுவிட்டுப் போய்விட்டார்கள்.

அவன் மனதில் என்ன இருந்தது? எதைப்பற்றி அவன் சிந்தித்துக் கொண்டிருந்தான்? ஒரு விதமான சிந்தனையுமே இல்லையோ? சும்மா வெறும் சோம்பேறிதானே அவன்? அப்படியில்லை. அவன் மனதில் ஏதோ திட்டம் ஒன்று இருந்தது. எதைப் பற்றியோ யோசித்துக் கொண்டிருந்தான் அவன். ஆனால் அவன் அதற்காக ஆர்ப்பாட்டம் எதுவும் செய்யவில்லை. சாப்பாட்டிற்குப் பிறகு அவன் ஐஸக்கிடம் சொன்னான்: "நான் என் நிலத்தில் நீள நடந்துவிட்டு வரப் போகிறேன். முன் தடவை போல ஸிவெர்ட்டும் வந்தால் தேவலை."

"வரட்டுமே" என்றான் ஐஸக்.

"வேண்டாம். அவனுக்கு இங்கு வேலை இருக்கிறது இருக்கட்டும்."

"என்ன வேலை" என்று ஸிவெர்ட்டைக் கூப்பிட்டான் ஐஸக். ஆனால் கெய்ஸ்ஸலர் வேண்டாமென்று தடுத்துவிட்டான்.

பண்ணையிலேயே அங்கும் இங்கும் சுற்றிச் சுற்றிப் பார்த்துவிட்டு வந்தான். அங்கு வேலை செய்து கொண்டிருந்தவர்களுடன் பேசினான். இந்தக் கனமான விஷயம் அவன் மனதிலிருந்ததென்று யாரும் கண்டு கொண்டிருக்க முடியாது அவன் பேச்சிலிருந்து. கெய்ஸ்ஸலருக்குத் தன் பொருளாதார நிலைமையில் மாறுதல்கள் அதிசயமான விஷயங்கள் அல்ல. கவலைப்படுவானேன் என்றும் இருக்கலாம் அவன்.

விதியா அது அல்லது அவன் புத்திசாலித்தனமா அவனை இந்த நிலையில் வைத்திருந்தது? தன் மனைவியின் ஜனங்களுக்கு அந்தச் சிறு பகுதியை விற்றுவிட்டான். பிறகு? தென்னண்டைப் பகுதி பூராவையும் அவனே வாங்கி விட்டான். எதற்காக? அவர்களுக்கு அண்டையிலிருந்த நிலத்துச் சொந்தக்காரன் என்று கொக்கரிக்கவா? முதலில் கொஞ்ச நிலத்தை மட்டும் வாங்குவதாக

உத்தேசித்தான் அவன். ஆனால் கடைசியில் முழுநிலப்பரப்பையுமே வாங்கிவிட்டான். பணமும் அதிகம் தரவில்லை அவன் — ரொம்பவும் மலிவாகவே கிடைத்தது அவனுக்கு. சோம்பல் காரண மாக அவன் பெரிய சுரங்கச் சொந்தக்காரனுகிவிட்டான் அவன். எல்லைக் கோடுகள் அமைப்பது சிரமமாக இருந்தது. மலைக்கே சொந்தக்காரனுகி விட்டான் அவன். சமுத்திரக்கரை வரை ஓடியது அவன் நிலம் அதற்கெல்லாம் ராஜா அவன்.

ஸ்வீடனில் அந்த முதல் நிலப்பகுதி பல கைகள் மாறிற்று அது என்ன ஆயிற்று என்று கவனித்தான் கெய்ஸ்ஸலர் — அதைப் பற்றி விசாரித்து அறிந்து கொண்டான். முதலில் வாங்கியவர்கள் முன் யோசனையில்லாமல் வாங்கிவிட்டார்கள். கெய்ஸ்ஸலரைத் தீர்த்துக் கட்டுவதற்காக அவர்கள் வாங்னுர்களே தவிர வேறு அல்ல. பிறகு வாங்கியவர்கள் எதற்காக வாங்னுர் களோ — அசட்டுத் தனம்தான். வேடிக்கையாக வாங்கினுர்களோ — வினையாக எண்ணி வாங்கினுர்களோ? கெய்ஸ்ஸலருக்குச் சிரிப்பு வந்தது. சுரங்கத்தில் வேலை செய்து பார்த்தார்கள் — எதிர்ப்பட்டது ஒரு சுவர். அதன் பெயர் கெய்ஸ்ஸலர்.

அவர்கள் கசடர்கள். குழந்தைகள். கெய்ஸ்ஸலர் தன் சக்தியை உணராதவன் அல்ல. ஜனங்களுடன், கனதனவான்களுடன் அழுத்தலாகப் பேசினுன் அவன். அவனை மட்டந்தட்ட மற்றவர்கள் முயன்ருர்கள். பணம் தேவை என்று கெய்ஸ்ஸலர் ஒப்புக் கொண்டால்தானே! அசடர்கள். பதினைந்தாயிரம் இருபதினுயிரம் என்ருர்கள். அவன் விற்கத் தயாராக இல்லை. அவர்களுக்கு கெய்ஸ்ஸலரைத் தெரியாது. தெரிந்து கொள்வார்கள்.

அன்று அவர்கள் அவனை மீண்டும் தேடிக்கொண்டு வரவில்லை. விட்டுப் பிடிக்கலாம் என்று எண்ணினுர்களோ என்னவோ? ஆனல் மறுநாள் காலையில் வந்தார்கள். ஆனல் கெய்ஸ்ஸலர் அங்கில்லை.

அங்கில்லையா?

குதிரைமேலிருந்தபடியே பேசி முடித்துவிட்டுக் கிளம்பி விடுவதாக அவர்கள் எண்ணியிருந்தார்கள். அது நடக்காது. இறங்கி அவர்கள் காத்திருக்க வேண்டியதாகி விட்டது. கெய்ஸ்ஸலர் எங்கே? யார் சொல்லமுடியும்? அவன் இஷ்டப்படி வருவான்—இஷ்டப்படி போவான்? ஸெல்லன்ரா அவன் சொந்தப் பண்ணையைப் போல். அதில் ஆகவேண்டியது எதையாவது

கவனிக்கப் போயிருப்பான் அவன். அவன் மர யந்திரசாலேப் பக்கம் போனுன். அவனேத் தேடிவர ஆளனுப்பினுர்கள். உரக்கக் கூவிக் கூப்பிட்டார்கள். பதில் கிடைக்கவில்லே. கடிகாரங்களேப் பார்த்துவிட்டு முணுமுணுத்தார்கள் கனதனவான்கள்: "இவனுக்காக எத்தனே நேரம் காத்திருக்கமுடியும்? அவன் விற்க விரும்பினுல் காத்திருக்க வேண்டாமோ?" சிறிது நேரத்தில் அவர்களுடைய பாவமும் குரலும் மாறியது. காத்திருக்கத் தயாரானுர்கள். கோபம் மறைந்துவிட்டது. கெட்டிக்காரன் அவன் என்று தங்களுக்குள்ளாகவே பேசிச் சிரித்துக் கொண்டார்கள். இப்படி அவனுக்காகக் காத்திருந்தால் இருட்டில் மலேயில் தங்கி வழி தப்பிவிடுவார்கள். அவர்கள் உறவினர்களுக்கு வெள்ளே எலும்புகளேத் தவிர வேறு எதுவும் கிடைக்காது. இப்படி விளேயாட்டாகவே பேசினுர்கள் அவர்கள்.

கடைசியில் கெய்ஸ்ஸலரும் வந்தான். பண்ணேயைச் சுற்றிப் பார்த்துக் கொண்டிருந்தான். ஆடுமாடுகள் பட்டியிலிருந்து வந்து கொண்டிருந்தான். "பட்டி போதாது போலிருக்கிறதே ஐஸக்" என்ருன். "இப்போது எத்தனே ஆடுமாடு இருக்கிறது உன்னிடம்?" அந்தக் கனதனவான்கள் அவனுக்காகக் காத்திருந்தார்கள். ஆனுல் அவன் ஐஸக்கின் ஆடுமாடுகளேப்பற்றி பேசினுன். காத்திருந்தவர்கள் கையில் கடிகாரத்துடன் காத்திருக்கட்டுமே! கெய்ஸ்ஸலரின் முகம் ஒருவிதமாகச் சிவந்திருந்தது. "நடந்தது உஷ்ணமாக இருக்கிறது" என்ருன்.

"நாங்கள் வரும்போது நீ இருப்பாய் என்று எதிர்பார்த்தோம்."

"எதிர்பார்த்தீர்களா? என்னேப் பார்க்க நீங்கள் விரும்புவீர்கள் என்று எனக்குத் தெரியாது. தெரிந்திருந்தால் இருந்திருப்பேன்" என்ருன் கெய்ஸ்ஸலர்.

சரி. அந்தப் பேரம் பற்றி என்ன விஷயம்? பதினேந்து இருபதிணுயிரம் என்று தினமும் கிடைக்காது. அல்லது உனக்குப் பணமே தேவையில்லேயோ?

கெய்ஸ்ஸலருக்கு இந்தக் கடைசிப் பேச்சு கோபமூட்டியது. ஓஹோ! இப்படிப் பேசுகிருர்களா? சரிதான். கோபத்தில் சொன்னுர்களா? சரிதான். திடீரென்று அவன் முகம் வெளிரிட்டது. எங்கேயோ போய் சிவக்க அடித்துக்கொண்டிருந்த அவன் முகம் வெளிரிட்டது. அவன் நிதானமாகப் பதில் அளித்தான்: "உங்கள்

ஸ்திதி, பணம், நிலைமைபற்றி எனக்குத் தெரியாது. உங்கள் அந்தஸ்து என்ன என்றும், உங்களால் என்ன கொடுக்கமுடியும் என்றும் எனக்குத் தெரியாது. என் விலையைச் சொல்லிவிட்டேன். வீணாகக் குழந்தைகள் மாதிரிப் பேசுவானேன்? நேற்றுச் சொன்ன விலைதான் என்ன விலை."

"இரண்டரை லக்ஷம் க்ரோனரா?"

"ஆமாம்."

மீண்டும் குதிரைகளில் ஏறினார்கள் அவர்கள். "இதோ பார். போகட்டும் இருபத்தைந்தாயிரம் தருகிறோம்" என்றான் ஒருவன்.

"விளையாட்டுப் பேச்சு வேண்டாம்" என்றான் கெய்ஸ்ஸலர். "வடவண்டைப் பக்கத்திலுள்ள உங்கள் சுரங்கத்தை நான் வாங்கிக் கொள்ளுகிறேன். என்ன விலை—சொல்லுங்கள்!"

அவர்களுக்குத் தூக்கி வாரிப் போடுகிறது. "ஏன்? ஏன்? அப்படியும் செய்யலாமே!"

"நான் வாங்கிக் கொள்ளத் தயார்."

ஓ! அந்த கெய்ஸ்ஸலர். அவர்கள் பேசுவதை எல்லோரும் கேட்டுக் கொண்டு நிற்கிறார்கள்; ஸெல்லன்ரா ஜனங்கள், தூதர்கள், மற்றும் கூலியாட்கள் எல்லோரும் கேட்டுக் கொண்டிருக்கிறார்கள். அவனிடம் பணம் ஏது? கிடைக்காது. இருந்தாலும் அவன் அதற்காக விட்டுக் கொடுத்து விடமாட்டான். ஆனால் அவனுக்குப் பணம் கிடைக்காது என்று யார் சொல்லமுடியும்? கெய்ஸ்ஸலரை உள்ளபடி யார் புரிந்துகொள்ள முடியும்? அவன் கடைசியாகச் சொன்ன வார்த்தைகள் அந்த சீமான்களை உலுக்கி விடுகின்றன. அது என்ன தந்திரம்? இப்படிப் பேசித் தன் விலையை உயர்த்த முயன்றானோ அவன்?

அவர்கள் அதுபற்றித் தீர யோசித்தார்கள். ரகசியமாகத் தங்களுக்குள் பேசிக் கொண்டார்கள். குதிரையைவிட்டு இறங்கினார்கள். பிறகு என்ஜினியர் ஒரு வார்த்தை சொன்னான். தாங்க முடியாத அளவுக்குப் போய்க் கொண்டிருந்தது பேச்சு. அவன் பேசுவதைப் பணிவுடன் கேட்டார்கள் அவர்கள். அங்கு நடப்பதை எல்லோரும் கவனித்துக் கொண்டிருந்தார்கள். "நாங்கள் விற்கவில்லை" என்றான் அவன்.

"வேண்டாம்" என்றார்கள் மற்றவர்கள்.

"வேண்டாம்."

பிறகு மீண்டும் தங்களுக்குள் பேசிக் கொண்டார்கள். மீண்டும் குதிரைமேல் ஏறினர்கள். இந்தத் தடவைதான் கடைசித் தடவை என்கிறமாதிரி. "இருபத்தையாயிரம் தருகிறோம்" என்ருன் ஒருவன். கெய்ஸ்ஸலர் பதில் சொல்லவில்லே. திரும்பிக் கொண்டான். கல்லில் வேலே செய்து கொண்டிருந்தவர்களுடன் பேசப் போனுன்.

அவர்களுடைய கடைசி சந்திப்பு அதுதான்.

அதுபற்றிக் கவலேப்பட்டதாகவே கெய்ஸ்ஸலர் காட்டிக் கொள்ளவில்லே. வேறு எதையெல்லாமோ பற்றிப் பேசிக் கொண்டே அங்குமிங்கும் போனுன் அவன். புது மாட்டுக் கொட்டிலில் குறுக்கே உத்தரங்கள் போடுவதில் கவனம் செலுத்தினுன் கெய்ஸ்ஸலர். அந்த வாரம் அந்த வேலே முழுவதும் முடிந்துவிடும். ஸிவெர்ட் அங்கு வேலே செய்யவேண்டாம்—கெய்ஸ்ஸலர் கூப்பிட்டால் போவதற்குத் தயாராக இருக்க வேண்டும் என்ருன் ஐஸக். ஆனுல் ஐஸக் அதுபற்றிக் கவலேப் பட்டிருக்க வேண்டியதில்லே. கெய்ஸ்ஸலர் ஸிவெர்ட்டைக் கூப்பிடவில்லே. இங்கரை உணவு கட்டித்தரச் சொல்லி வாங்கிக் கொண்டு கிளம்பினுன் — இரவு வரையில் அவன் திரும்ப வில்லே.

ஸெல்லன்ராவுக்கும் மேன்லாந்துக்கும் இடையில் தோன்றிய இரண்டு பண்ணேகளேயும் தாண்டினுன். வழியில் எதிர்ப்பட்டவர்களுடன் பேசினுன். ஆக்ஸெல் ஸ்டிராம் என்னபண்ணியிருக்கிருன் என்று பார்ப்பதற்காகத்தான் பண்ணேக்குள் போனுன். அதிகம் இல்லே. ஆனுலும் அப்படிக் குறைவாகவும் ஒன்றுமில்லே. நிலத்தில் உழைக்கத் தயங்காதவன் ஆக்ஸெல். இந்தப் பண்ணே யில்கூட கெய்ஸ்ஸருக்குப் பிரியம்தான். ஆக்ஸெலேக் கேட்டான். "குதிரை இருக்கிறதா உன்னிடம்?"

"இருக்கிறது."

"ஒரு அறுவடை மெஷினும், ஏர்க்கலப்பையும் இருக்கின்றன—தெற்கே என்னிடம். இரண்டும் புதுசு. உனக்குத் தேவை யானுல் அனுப்புகிறேன்."

"எப்படி?" என்ருன் ஆக்ஸெல். பலதவணேகளில் அவற்றிற் குரிய விலேயைக் கொடுத்து விடுகிற உத்தேசம் அவனுக்கு.

"உனக்கு என் இனம் அவை" என்ருன் கெய்ஸ்ஸலர்.

"என்னுல் நம்ப முடியவில்லே" என்ருன் ஆக்ஸெல்.

"புது நிலம் உழ நீ உன் அண்டைப் பண்ணைக்காரர்களுக்கும் உதவி செய்ய வேண்டுமே!"

"அது செய்யாமலா?" என்றான் ஆக்ஸெல். கெய்ஸ்ஸலரின் இனம் பிரச்னை அவனுக்குப் புரியவில்லை. "தெற்கே உன்னிடம் அதெல்லாம் இருக்கிறதா?"

"அதுமட்டுமா? எத்தனையோ விஷயங்கள் நான் கவனிக்க வேண்டியவை இருக்கின்றன" என்றான் கெய்ஸ்ஸலர். உண்மையில் அப்படி எல்லாம் ஒன்றும் இல்லை. அப்படி இருப்பதுபோலப் பாசாங்கு செய்தான் அவன். ஏர்க்கலப்பையும், அறுவடை இயந்திரமும் புதுசாக வாங்கி அனுப்பிவிட்டால் போகிறது!

பக்கத்தில் வந்து குடியேறியவர்களைப் பற்றி ஆக்ஸெலிடம் விசாரித்தான் கெய்ஸ்ஸலர். ஸ்டார்போர்க்கும் அவன் கடையையும் பற்றி விசாரித்தான். புதுசாகக் கல்யாணம் பண்ணிக் கொண்டு வந்து ப்ரேடாப்ளிக்கில் குடியேறியிருந்த ஆக்ஸெலின் தம்பியைப் பற்றி விசாரித்தான். உதவிக்கு வர எந்த ஸ்திரீயும் மறுத்தாள் என்று குறைப்பட்டுக் கொண்டான் ஆக்ஸெல். ஒலைன் என்கிற கிழவியைத் தவிர வேறு யாரும் அவனுக்கு உதவ ஆள் இல்லை. கிழவி அவள்; நல்ல நாளிலேயே உபயோகமற்றவள். ஆனாலும் அவளாவது கிடைத்தது பற்றி அவனுக்குச் சந்தோஷம்தான். அந்தக் கோடை பூராவும் ஆக்ஸெலுக்கு இரவுபகல் என்று பாராமல் வேலையிருந்து வந்தது. ஹெல்கேலாந்து என்கிற தன் பிறப்பிடத்திலிருந்து ஒரு பெண்ணை அழைத்து வரலாம்—வருகிற செலவு அதைத்தவிர அதிகக் கூலி எல்லாம் தர வேண்டும். மொத்தத்தில் பணம் அதிகம் பிடிக்கும். தான் தந்தி இலாகா இன்ஸ்பெக்டராக வேலை ஒப்புக் கொண்டதையும் பற்றி ஆக்ஸெல் சொன்னான். ஆனால் அதில்லாவிட்டால் கூடத் தேவலை என்றிருந்தது.

"அந்த வேலை ப்ரேடைப் போன்றவர்களுக்குத்தான் லாயக்கு" என்றான் கெய்ஸ்ஸலர்.

"நிஜம்தான். ஆனால் பணம் தருகிறார்களே என்று ஒப்புக் கொண்டேன்."

"உன்னிடம் எத்தனை பசுக்கள் இருக்கின்றன?"

"நாலு. அது தவிர ஒரு காளையும் இருக்கிறது. காளைக்காகத் தேடிக் கொண்டு செல்லன்ரா போகமுடியாது பார்!"

கெய்ஸ்ஸலருடன் பேசுவதற்கு ஆக்ஸெலுக்கு வேறு கனமான விஷயம் ஒன்றிருந்தது. பார்ப்ரோ விஷயம் எப்படியோ வெளிவந்துவிட்டது. அதுபற்றி விசாரணை நடந்து கொண்டிருந்தது. வெளிவந்து விட்டதா? எப்படி? எப்படியோ வந்து விட்டது. பார்ப்ரோ வயிறு பெரிசாக நடமாடிக் கொண்டிருந்ததைப் பலர் பார்த்திருந்தார்கள். பிள்ளையைப் பெற்று என்ன செய்தாள்? எப்போ பிறந்தது!

கெய்ஸ்ஸலருக்கு விஷயம் புரிந்ததும் தனியாக அழைத்துப் போனுன் ஆக்ஸெலை. பிரமாதமான ஒரு பாவத்துடன், ஏதோ பெரிய உத்தியோகத்திலிருப்பவன் போலப் பேசினுன் கெய்ஸ்ஸலர். காட்டின் ஓரத்திலே போய் உட்கார்ந்து ரகசியம் பேசினுர்கள். "விஷயத்தை ஆதியோடந்தம் சொல்லு" என்ருன் கெய்ஸ்ஸலர்.

வெளிவந்துவிட்டது! ஆமாம். வெளிவராமல் எப்படி இருக்கும்! அந்த இடம் முன்போல நிர்மானுஷ்யமான இடம் அல்லவே! தவிர அங்கு ஒலைன் வேறு வந்திருந்தாள். ஒலைனுக்கும் அதற்கும் என்ன சம்பந்தம்? ஹோ! அவள் வம்பளப்பதில் கெட்டிக்காரி யல்லவா? ப்ரேட் ஒல்ஸன் வேறு அவளை விரோதித்துக்கொண்டு விட்டான். இப்போது ஒலைன் ரொம்பவும் காரமாக இருந்தாள். ஆக்ஸெலிடமிருந்து சிறிது சிறிதாக அவளே விஷயத்தைக் கிரஹித்துக் கொண்டுவிட்டாள். இந்தமாதிரிக் காரியத்துக்காகத் தானே அவள் உயிர் வைத்துக் கொண்டிருந்தாள்! அவள் கண் காணிப்பிலிருந்து யார் தப்பிவிட முடியும்? அவள் எப்படியோ எல்லாவற்றையும் மோப்பம் பிடித்துவிட்டாள். உண்மையில் அவளால் மேன்லாந்தில் வேலை செய்ய முடியவில்லைதான். ஆனுல் இதெல்லாம் எப்படி முடியும் என்று அறியும் வரையில் அவள் அங்கிருந்து அசையமாட்டாள். ப்ரேடின் மகளைக் கோர்ட்டில் நிறுத்திவைத்துப் பார்த்து விடுவது என்கிற தீர்மானத்துடன் வேலை செய்தது அவள்தானே என்னவோ? ஆற்றங்கரையில் குழந்தை புதைபட்டிருந்த இடத்தையும் கண்டுபிடித்து விட்டாள். ஆக்ஸெல் அங்கு நின்றுகொண்டிருக்கும்போது ஒருநாள் அவள் அங்கு வந்து விட்டாள். ஆக்ஸெலுக்கும் விஷயம் தெரியும் போலும்—ஒலைன் ஒரு கை பார்க்காமல் விடமாட்டாள்.

ஆக்ஸெல் இரக்கமுடைய மனிதன்தான். ஆனுல் கஞ்சன். பாலேடைக் கட்டிகளை எண்ணிப் பார்ப்பான். வீட்டில் என்னென்ன எங்கே இருக்கிறது என்று கணக்குத் தெரியும் அவனுக்கு. ஒலைனுல் அவள் இஷ்டப்படி செய்யமுடியாது. தவிரவும் ஆக்ஸெல்

மரத்தினடியில் அகப்பட்டுக்குக் கொண்டு சாகாமல் காப்பாற்றியது அவள்தான். அவளுக்குப் பூரண நன்றி செலுத்தாமல், ப்ரேட் ஒல்ஸனுக்கு நன்றி செலுத்தினன் ஆக்ஸெல். அதுவே அவளுக்கு அதிருப்தி தந்தது. அதுபற்றி ரொம்பவும் கோபம்தான் அவளுக்கு. "இந்தா ஒலீன் உனக்கு இது இனும்—நீ எனக்குச் செய்த உதவிக்கு" என்று ஒரு பசுவைத் தரக்கூடாதோ அவன்! அப்படிச் செய்துவிடுவானு ஆக்ஸெல்.

மொத்தத்தில் அதுபற்றி அவனுக்கு நஷ்டம் ஏற்படாமல் போய்விடாது—பார்க்கலாமே என்று ஒலீன் தனக்குள் கூறிக் கொண்டாளோ?

அந்தக் கோடை பூராவும், ஒலீன் அங்கு வருகிறவர்கள் போகிறவர்களிடம் விஷயத்தை ரககியமாகச் சொல்லிவைத்தாள். "நான் சொன்னதாக யாரிடமும் சொல்லாதே!" என்று எல்லோரையும் உஷார்ப்படுத்தி அனுப்பிவிட்டாள் ஒலீன். ஒலீனும் பலதடைவைகள் கிராமத்துக்குப் போய்விட்டு வந்தாள். ஊரெல்லாம் செய்திபரவிவிட்டது. ப்ரேடாப்ளிக்கிலிருக்கும் பள்ளிக் கூடம் போய்க்கொண்டிருந்த சிறுவர்களுக்குக்கூட அது விஷயம் பரவிவிட்டது. லென்ஸ்மாண்டின் காதிலும் அது விழுந்துவிட்டது. அதற்குப்பிறகு அவன் அதிகாரிகளுக்குத் தெரிவித்தான். ஒரு உதவியாளுடனும் ஒரு புஸ்தகத்துடனும் மேன்லாந்துக்கு வந்தான் அவன். எல்லாவற்றையும் விசாரித்து எழுதிக்கொண்டு போனுன். மூன்று வாரங்களுக்குப் பிறகு மீண்டும் வந்தான்—மேலும் விசாரித்து எழுதிக்கொண்டான்—ஆற்றங்கரையிலிருந்த சவக்குழியைத் தோண்டிக் குழந்தையின் சடலத்தை எடுத்துப் போனுன். ஒலீன் அவனுக்குப் பெரிதும் உதவினுள். அவள் கேட்ட கேள்விகளுக்கெல்லாம் அவன் பதில் தந்தான். பல விஷயங்களுக்கு மத்தியில் ஆக்ஸெலையும் குற்றம் சாட்டுவார்கள் என்று வெளிவந்தது. எவ்வளவு பொல்லாதவர்கள் இந்த மனிதர்கள் என்று கையைக் கொட்டினுள் ஒலீன். அங்கிருந்து ஓடிவிட்டால் தேவலே என்ருள். "ஆனுல் அந்தப் பெண் பார்ப்ரோவை என்ன செய்வார்கள்?"

லென்ஸ்மாண்டு சொன்னுன்: "அவள் பெர்கனில் சிறைப்பட்டு இருக்கிருள். சட்டப்படி இதெல்லாம் நடைபெறும்" என்று சொல்லிவிட்டுக் குழந்தையின் சடலத்துடன் கிராமத்துக்குத் திரும்பினுன்.

ஆக்ஸெலுக்குக் கவலே அதிகமாகத்தான் இருந்தது. என்ன செய்வது என்று புரியவில்லே. லென்ஸ்மாண்டிடம் அவன் எதையும் மறைக்கவில்லே. குழந்தை உண்டானதற்கு அவன்தானே பொறுப்பு. தவிரவும் அதைப் புது இடத்தில் புதைத்ததும் அவன்தான். கெய்ஸ்ஸலரைக் கேட்டான்—மேலே என்ன செய்வது என்று? நகரில் போய் அவர்கள் செய்கிற விசாரணைக்கு உட்பட வேண்டியது — அது தவிர......

கெய்ஸ்ஸலரும் முன்போலச் செல்வாக்குள்ளவன் அல்ல. நீண்ட கதை கேட்டு அலுப்பாகவும் இருந்தது. சற்றும் உத்ஸாக மில்லாமல் இருந்தான். காலையில் இருந்தமாதிரி அவன் சுறு சுறுப்பாகப் பிரகாசமாக இல்லே. கடிகாரத்தைப் பார்த்துவிட்டு எழுந்தான். "இதைப்பற்றி யோசித்துச் சொல்லுகிறேன். நான் கிளம்புமுன் சொல்லிவிட்டுப் போகிறேன்."

கெய்ஸ்ஸலர் ஸெல்லன்ரா திரும்பினன். இரவு உணவு அருந்திவிட்டுப் படுத்தான். காலையில் வெகு நேரம் வரையில் தூங்கிக் கொண்டிருந்தான். களேப்பு அதிகம்தான் — அதிக வேலே செய்துவிட்டானில்லேயா? இரண்டு நாட்கள் கழித்துத்தான் கிளம்பத் தயாரானன் அவன். மீண்டும் பெரிய மனிதனுகி விட்டான். தன் உணவுக்கும் தங்கியதற்கும் போதியதற்கு அதிகமாகவே பணம் தந்தான். சிறுமி ரிபொக்காவிடம் பளபள வென்றிருந்த ஒரு க்ரோனர் நாணயத்தைக் கொடுத்தான்.

ஐஸக்கிடம் ஒரு பிரசங்கமே செய்துவிட்டான்: "இந்தப் பேரம் படியாவிட்டால் பாதகமில்லே. பிறகு சரியாக வந்துவிடும். இப்பொழுது சத்தியாக சுரங்கவேலே இப்படியே நிற்கட்டும்! அந்தப் பயல்கள்—எனக்குப் பாடம் சொல்லித்தர முயன்ருர்களே! எனக்கு என்ன தருவதாகச் சொன்னுர்கள்—இருப்பத்தையாயிரமா? பூ!"

"பூ!" என்ருன் ஐஸக்.

"போகட்டும்" என்ருன் கெய்ஸ்ஸலர். அல்பத் தொகைகளே மனசிலிருந்து அகற்றி விடுபவன் போலக் கையை விசிறினன். "நிற்கட்டும். சுரங்க வேலே நின்ருல் கிராமத்துக்கு நஷ்டம்தான். நஷ்டப்படட்டும். பண்ணையில் பலர் வேலே செய்வது நல்லது தானே! உங்களுக்கெல்லாம் பாதகமில்லே. கிராமத்தில்தான் இது நஷ்டம் என்று பெரிதாகத் தெரியும். என்னே விரோதித்துக் கொண்டவர்கள்தானே? அவஸ்தைப்படட்டும். என் னிஷ்டப்படி நடக்கட்டும்" என்ருன் கெய்ஸ்ஸலர்.

கிராமத்தின் விதியை நிர்ணயிக்க விரும்பியவன்போலப் பேசினுன். ஆனல் கிராமத்தின் விதியை நிர்ணயிக்க அவன் யார்? தன் கையில் ஒரு உணவு மூட்டையைச் சுமந்துகொண்டு கிளம்பினுன். அவன் சட்டை அழுக்காகி யிருந்தது! அவன் வந்தபோது அவனிடம் பணம் இருந்ததோ என்னவோ — இப்போது அவனிடம் பணம் இல்லை — பாவம்!

போகும் வழியில் ஆக்ஸெல் ஸ்டிராமைப் பார்க்காமல் போய் விடவில்லை அவன். மறந்துவிடுகிறவன் அல்ல அவன். தன் சிந்தனையின் பயனை ஆக்ஸெலிடம் சொன்னுன்: "நான் மறுபடியும் விசாரிக்க உன்னைக் கூப்பிடுவார்கள். நீ உள்ளதைச் சொல்லு..."

வெறும் வார்த்தைகள்; வேறு என்ன? கெய்ஸ்ஸலர் அதைப் பற்றிச் சிந்தித்த மாதிரியே தெரியவில்லை. அவன் சொன்னதை எல்லாம் தொங்கிய தலையுடன் கேட்டுக் கொண்டிருந்தான் ஆக்ஸெல். அவன் மனசில் பெரிய பாரம் இருந்தது. மீண்டும் கெய்ஸ்ஸலர் பெரிய மனிதன் மாதிரிச் சொல்லுகிருன்: "நான் விசாரணைக்கு வர முடியுமானுல்...?"

"ஹா! நீ வந்தாயானுல் நல்லது" என்ருன் ஆக்ஸெல். அவன் மனதில் நம்பிக்கை வந்தது.

ஒரு நிமிஷத்தில் கெய்ஸ்ஸலர் தீர்மானிக்கிருன்: "முடிந்தால் நிச்சயம் வந்து விடுகிறேன். ஆனல் எத்தனையோ வேலைகள் ஆயினும் வந்துவிடுகிறேன். வரட்டுமா? யந்திரங்களைச் சீக்கிரமே அனுப்பிவிடுகிறேன்."

கெய்ஸ்ஸலர் போய்விட்டான்.

மறுபடியும் அந்தப் பக்கம் வருவானு?

# 6

சுரங்கத்திலிருந்து மற்ற வேலையாட்களும் கிளம்பி விட்டார்கள். வேலை பூராவுமே நின்றுவிட்டது. அந்தப் பிராந்தியத்திலே இப்போது உயிரே இல்லை.

ஸெல்லன்ராவிலும் கட்டிட வேலை முடிந்துவிட்டது. மாரிக் காலத்துக்கு என்று அதன் மேல் புல்தரை போட்டிருக்கிறார்கள். உள்ளே பல அறைகளாகப் பிரகாசமாக இருக்கிறது. மனிதர்கள் வசிக்கும் வீடுகளில் போலவே இங்கும் நடுவில் ஒரு பெரிய கூடம் இருந்தது. ஸெல்லன்ராவில் ஆரம்பத்தில் ஐஸக் ஒரு மண் குடிசையில் வசித்து வந்தான். இப்போது அங்கு ஒரு மண்குடிசை கூட இல்லை.

தனிப்பெட்டிகள், தொழுவம், தொட்டிகள் எல்லாம் அததற்கு உரிய இடத்தில் வைக்கப்படுகின்றன. இரண்டு கூலியாட்களுக்கும் வேலை நிறையவே இருக்கிறது. எவ்வளவு சீக்கிரம் முடியுமோ அவ்வளவு சீக்கிரம் முடிப்பது என்றுதான் அவர்கள் வேலை செய்கிறார்கள். ஆனால் குஸ்டாவுக்கு அந்த வேலை சரிப்பட்டு வரவில்லை. கிளம்பி விடுகிறேன் என்றான். காடி போல கற்களைப் புரட்ட அவன் திடமாக உதவியிருக்கிறான். மாலை வேளைகளில் அவன் வேடிக்கையாகப் பேசுவான் — பாடுவான் — ஆடுவான். தன்னுடைய வாய் ஹார்மோனியத்தில் இசை எழுப்புவான். பெண்களுக்கு உதவியாக வாளிகளைத் தூக்கி வருவான். இப்போது அவன் விடை பெற்றுக்கொண்டு கிளம்புகிறான். குஸ்டாவுக்கு அந்தக் கல்தச்சுவேலை பிடிக்கவில்லை — அது சரியாக வரவில்லை என்கிறான். போக ஏதோ அவசரம் வந்துவிட்டது அவனுக்கு.

"நாளைவரையில் இரேன்" என்கிறாள் இங்கர்.

நாளைவரையில் இருக்க அவன் விரும்பவில்லை. அன்றே கிளம்பிவிடத் தீர்மானித்து விட்டான். தவிர அன்றே கிளம்பினால் கூடவர நண்பர்கள் இருந்தார்கள். அவர்களுடன் போவது நல்லது.

துக்கமான புன்சிரிப்புச் சிரிக்கிறாள் இங்கர். "நீ போய்விட்டால் வாளிகளைத் தூக்கி வர எனக்கு யார் உதவுவார்கள்?" என்கிறாள்.

இதற்குப் பதில் சொல்ல குஸ்டாவுக்குத் தெரியாதா? "ஹ்யால்மர் உதவுவான்" என்கிறான் அவன். 'கல்தச்சர்களில்

சின்னவன் ஹ்யால்மர்தான். ஆனால் அவர்களிருவருமே குஸ்டாவைப்போல இல்லை. குஸ்டாவ் உண்மையிலே தனி மனிதன்தான்.

"ஹ்யால்மர்......ஹூ!" என்றாள் இங்கர் அலக்ஷியமாக திடீரென்று அவள் தன் குரலை மாற்றிக்கொள்ளுகிறாள். குஸ்டாவ் பொறுமைப்பட்டாவது தங்கினால் சரி என்று எண்ணியவள்மாதிரி: "ஆனால் ஹ்யால்மருக்கு என்ன குறை! நன்றாகப் பாடுவான்" என்றாள்.

"அவனைப் பற்றியே ஜபம் செய்யாதே!" என்றான் குஸ்டாவ், அவன் மனசில் பொறுமை சிறிதும் இல்லை.

"இன்னும் ஒரு இரவு இருந்துவிட்டுப் போயேன்."

குஸ்டாவ் மறுத்துவிட்டான். மற்றவர்களுடன் போவது என்று அவன் தீர்மானித்துவிட்டான்.

ஸெல்லன்ராவில் அந்த விளையட்டு அவனுக்கு அலுத்து விட்டது போலும். அவளை வென்று விடுகிற வரையில் அதில் ஒரு உற்சாகம் இருந்தது. ஆனால் அவளை அடைந்துவிட்ட பிறகு அவனுக்கு சலிப்பு ஏற்பட்டுவிட்டது. ஊரிலே அவன் வயசுக்கேற்ற காதலி அவனுக்காகக் காத்திருந்தாளே! தவிர அவன் வேறு வழிகள் போயாகவேண்டாமா? இப்படியே ஸெல்லன்ராவில் தங்கிவிட முடியுமா? அந்த விஷயத்தை முடித்துக் கொண்டு என்றாவது கிளம்ப வேண்டியது தானே! தவிர அவளும் அசட்டுத் தைரியத்தில் பிறர் கண்ணில் படப் போகிறதே என்கிற பயம்கூட இல்லாமல் காரியங்கள் செய்தாள். அவள் பிணைப்பு ஆதியிலேயே அறுந்துபோய விட்டது.

இங்கருக்கு வருத்தம்தான். அவன் போய்விட்டது பற்றித் துக்கம்தான். தவறுதான் அவள் அன்பு — இருந்தும் அவன் போய் விட்டது பற்றி அவள் உண்மையிலேயே வருந்துகிறாள். அந்தப் பிரிவு அவளுக்குக் கஷ்டம் தருகிறது. உண்மையிலேயே அவனிடம் அவள் காதல் கொண்டுவிட்டாள். பாவம்! டம்பமோ வெற்றியோ இல்லை அவள் உணர்ச்சிகளிலே — காதல் மட்டுமே இருந்தது. வெட்கம்கூடத் தோன்றவில்லை அவளுக்கு. அவள் திடசாலி — பலஹீனமான திடசாலி. இயற்கை நியதி அவளை அப்படி ஊக்கியது. இளையுதிர் காலத்தில் அவள் உள்ளம் சற்றே பிரகாசம் பெற்றது. உணர்ச்சி வசப்பட்டவளாக குஸ்டாவுக்கு உணவு மூட்டை கட்டித் தருகிறாள். தப்பு சரி என்கிற ஞாபகமே வரவில்லை அவளுக்கு! துணிச்சல் உள்ளவள் அவள். ஜலக்

அவளைத் தூக்கிக் கூரையிலிருந்து கீழே எறிந்தாலும் சரி — அவள் உணர்ச்சிகளை அவளால் கட்டுப்படுத்த இயலவில்லை.

உணவு மூட்டையைக் குஸ்டாவிடம் தருகிறாள்.

வழியிலே வாளியை வைத்திருந்தாள். அதைப் பார்த்தாவது குஸ்டாவ் மறுபடி ஒருதரம் ஆற்றுப்பக்கம் அவளுடன் தனியாக வரச் சம்மதிக்கமாட்டானா என்ற ஆசை அவளுக்கு. என்ன சொல்வது என்று அவளுக்குத் தெரியவில்லை. அவன் தங்க மோதிரத்தைக் கேட்டிருந்தாலும் கொடுத்திருப்பாள். குஸ்டாவ் நன்றி 'செலுத்துகிறான்; நன்றி என்கிறான்; கிளம்புகிறான். எப்படியாவது முடித்துக் கொண்டு கிளம்பி விடவேண்டும் அவனுக்கு.

அவள் நிற்கிறாள்: அளவுக்கு மீறிய சப்தத்துடன் "ஹ்யால்மர்!" என்று கூப்பிடுகிறாள் இங்கர். போகிற குஸ்டாவ் காதில் விழட்டும் என்றா? அல்லது உதவி தேடுகிறாளா?

குஸ்டாவ் தன் வழி செல்லுகிறான்......

இலையுதிர் காலத்திலே வழக்கம்போலவே வேலை யிருக்கிறது பண்ணைகளில் எல்லாம். கிராமம் வரையில் எங்கும் நிலத்தில் வேலை இருந்துகொண்டே யிருக்கிறது. உருளைக்கிழங்குகள் சேகரிக்கவேண்டும். தானியம் அடித்துச் சேர்க்கவேண்டும். ஆடுமாடுகளை அவிழ்த்து மேயவிட வேண்டும். எட்டுப் பண்ணைகளிலும் வேலை சுருசுருப்பாக நடக்கிறது. ஆனால் ஸ்டார்போர்க் பண்ணையில் ஒரு வேலையுமில்லை. அங்கு பசும் புல்லும் இல்லை — தானியமும் இல்லை, ஆடுமாடுகளும் இல்லை. ஒரே ஒரு தோட்டம் இருக்கிறது. அவ்வளவுதான். வியாபாரம் சிறிதும் இல்லை. அங்கு யாரும் எவ்விதத்திலும் சுருசுருப்பாக இல்லை.

ஸெல்லன்ராவில் புதிதாக ஒரு கிழங்கு விதைத்திருக்கிறார்கள் — டர்ணிப் கிழங்கு. அது பிரும்மாண்டமான இலைகள் விடுகிறது. பசுமையாகப் பூமியிலிருந்து கிளம்புகிறது. பசுக்கள் அதைவிட்டு வைக்கமாட்டேன் என்கின்றன. வேலி கட்டினாலும் முறித்து எறிந்து விடுகின்றன. லெபல்டினும் சிறுமி ரிபெக்காவும் டர்ணிப் வயல்களில் மாடுகள் புகுந்துவிடாமல் காவல் காக்கிறார்கள். கையில் பெரிய கழியுடன் ரிபெக்கா காவல் காக்கிறாள். அந்தப்

பக்கம் வருகிற மாடுகளை விரட்டுகிருள். ஐஸக் பக்கத்திலுள்ள வயலில் வேலை செய்து கொண்டிருக்கிருன். அவன் அடிக்கடி வந்து அவளைப் பார்த்துக் கொள்ளுகிருன். அவள் கால்களையும் கைகளையும் தொட்டுப் பார்க்கிருன். குளிருகிறதா என்று கேட்கிருன். லெபல்டின் சிறுமியல்ல இப்போது; ஆடு மாடுகள் மேய்த்துக்கொண்டே அவள் ஸ்டாக்கிங்ஸும் கையுறைகளும் பின்னுகிருள். ட்ராண்ட்யெம் நகரில் பிறந்தவள். ஐந்து வயசில் ஸெல்லன்ரா வந்தாள் அவள். நகரின் வாசமும் அந்தக் கப்பல் பிரயாணமும் இப்போது அவள் ஞாபகத்தில்கூட இல்லை. காட்டுப் பிரதேசத்திலே அந்தப் பண்ணையிலே பிறந்து வளர்ந்தவள் மாதிரித்தான் இருக்கிருள் அவள். கிராமத்திற்கு இரண்டொரு தரம் போயிருக்கிருள் — மாதா கோவிலுக்கு. போன வருஷம் அவள் மதச் சடங்கு நடந்தது......அதைத் தவிர வெளியுலகம் தெரியாது அவளுக்கு.

தினசரி வேலைகள் தொடர்ந்து நடைபெறுகின்றன. சிறுசிறு அலுவல்கள். அவசியம் ஆகவேண்டிய காரியங்கள். உதாரணமாக கிராமத்துப் பாதை சரியாக இல்லை. அதைச் செப்பனிட ஸிவெர்ட்டுடன் ஐஸக் போகிருன். பாதையில் தண்ணீர் தேங்குகிறது—அதை வடித்து மேடாக்கவேண்டும்.

இந்த வேலையில் பங்கெடுத்துக் கொள்வதாக ஆக்ஸெல் ஸ்டிராம் சம்மதித்திருக்கிருன். ஆனால் அவனுக்கு நகரில் தவிர்க்கமுடியாத வேலை இருக்கிறது. என்ன அப்படி வேலை என்று அவர்களுக்குத் தெரியாது. ஆனால் தனக்குப் பதிலாகத் தன் சகோதரன் வந்து அவர்களுக்கு உதவுவான் என்று தெரிவித்தான்—இப்போது அந்த சகோதரன்தான் ப்ரேடாப்ளிக்கின் சொந்தக்காரன். இந்த சகோதரனின் பெயர் பிரடிரிக். வாலிபன். புதுசாகக் கல்யாணமானவன். வேடிக்கையாகப் பேசுகிற பையன். ஸிவெர்ட்டும் அவனும் சற்றேறகுறைய ஒரேமாதிரிதான். வழியில் வரும்போது வியாபாரஸ்தலத்தில், ஸ்டார் போர்கில், எட்டிப் பார்த்துவிட்டு வந்தான். ஆரான்ஸென் சொன்னதை எல்லாம் அவன் அவர்களுக்குத் திருப்பிச் சொல்லுகிருன். ஆரம்பித்தது இப்படி. புகையிலை இருக்கிறதா என்று கேட்டுக்கொண்டு போனுன் பிரடிரிக். "புகையிலை வேண்டுமா? உனக்கு வரும்போது தருகிறேன்" என்ருன் ஆரான்ஸென்.

"இல்லையா இப்போது?'

"இல்லை. சமீபத்தில் வரவும் வராது. புகையிலை வாங்க இங்கு யார் இருக்கிறார்கள்? ஒரு சுருட்டு புகையிலை விற்றால் எனக்கு என்ன கிடைக்கும்?"

ஆரான்ஸெனுக்கு அன்று காலையில் பிரமாத கோபம்தான். அந்தச் சுரங்க அதிகாரியிடமும் கம்பெனியிடமும் அளவில்லாத கோபம் அவனுக்கு. அதை நம்பி அவன் கடையை ஆரம்பித்தான், அதை மூடிவிட்டார்கள்.

பிரடிரிக் தன் அண்டை வீட்டுக்காரனைப் பார்த்துச் சிரிக்கிறான். "அந்த நிலத்தை ஒன்றும் செய்யாமல் விட்டிருக்கிறான். குதிரை ஆடு மாடுகளுக்குத் தீனிகூட அவன் பண்ணையில் கிடையாது. காசு கொடுத்து வாங்கினால்தான். உன்னிடம் வைக்கோல் இருக்கிறதா என்று கேட்டான். விற்பதற்கு என்னிடம் வைக்கோல் இல்லை என்றேன். பணம் தேவையில்லையா என்று கேட்டான். பணம் என்றால் எதுவும் நடக்கும் என்று அவனுக்கு ஞாபகம். ஒரு நூறு க்ரோனர் நோட்டை எடுத்து மேஜை மேல் வைத்தான். பணம் என்றான். கையில் காசு என்றான். பணம் வேண்டியதுதான் என்றேன் நான். கையில் காசு என்றான். அது அரைப் பைத்தியம் — அவனுக்கு. அவன் மனைவி கடிகாரம் இல்லாமல் வெளியே வருவதில்லை. நிமிஷம் பிசகாமல் என்ன காரியம் இருக்குமோ அவளுக்கு?"

ஸிவெர்ட் கேட்டான்: "கெய்ஸ்லரைப் பற்றி ஆரான்ஸென் ஏதாவது சொன்னானா?"

"சொன்னான். அவனிடம் இருக்கிற நிலத்தை அவன் விற்க வேண்டும் என்றான். அதுபற்றிப் பிரமாதமாக கோபித்துக் கொண்டான் ஆரான்ஸென். அவன் லென்ஸ்மாண்டாக இருந்து வேலை இழந்தவன். கையில் ஐந்து க்ரோனர்கூட இராது. அயோக்கியப் பயல் அவனைச் சுடவேண்டும் என்றான். விற்றாலும் விற்றுவிடுவான் என்றேன் நான். அப்படி நடக்காது என்றான் ஆரான்ஸென். இது விஷயம் எனக்குத் தெரியும். நான் வியாபாரி. இருபத்தையாயிரமும் இரண்டரை லக்ஷமும் எப்படி சமமாகும். ஆகாது ஆகாது என்றான். நான் இங்கு வந்து மாட்டிக் கொள்ளாதிருந்தேனானால்! உன் கடையை விற்று விடுவதுதானே என்று கேட்டேன் நான். அப்படித்தான் யோசனை என்றான். ஒரு நாளுக்கு ஒரு க்ரோனர்கூட வியாபாரமாகவில்லை—இந்தக் காட்டிலே என்றான்.

ஆரான்ஸெனை எண்ணிச் சிரித்தார்கள் அவர்கள். அவனிடம் சிறிதும் அனுதாபம் தோன்றவில்லை.

"விற்றுவிடுவாரு?" என்று கேட்டான் ஐஸக்.

"அப்படித்தான் சொன்னான் அவன். வேலைக்கிருந்த பையனை அனுப்பிவிட்டான். ஆரான்ஸென் ஒரு தினுசான வேடிக்கையான மனிதன்தான். பையன் இருந்தாலாவது ஏதாவது உருப்படியாக வேலை செய்வான்—வைக்கோல் கொண்டு வருவான் அல்லது வேறு வேலை செய்வான். அவனைப் போகச் சொல்லி விட்டு குமாஸ்தாவை வைத்துக் கொண்டிருக்கிறான். கணக் கெழுதத்தான்—வியாபாரம் ஒன்றும் இல்லையே! எதற்காக குமாஸ்தா? அமர்க்களம்தான்! ஆடம்பரம்தான்! ஹா! ஹா! பைத்தியக்காரன் அவன்."

நண்பகல்வரை உழைக்கிறார்கள் மூவரும். கூடையிலிருந்து உணவு எடுத்து அருந்தினார்கள். சிறிது நேரம் உட்கார்ந்து பேசினார்கள். நிலத்தில் உழைப்பவர்களுக்குப் பேச நல்லதும் கெடுதலுமாக எத்தனையோ விஷயங்கள் இருக்கின்றன. சின்ன விஷயங்களாகப் பிறருக்குத் தோன்றலாம்—அவர்களுக்கு அவை முக்கியமான விஷயங்கள். அவர்கள் தெளிவான சித்தம் படைத் தவர்கள். அவர்கள் எதைக் கண்டும் அஞ்சாதவர்கள். எட்டாத உயரம் பறக்கமாட்டார்கள். இலையுதிர் காலம் இது. சுற்றிலும் மௌனம் குடிகொண்டிருக்கிறது. குன்றுகள் இருக்கின்றன, சூரியன் இருக்கிறது. மாலையில் சந்திரன் தோன்றும்; நக்ஷத் திரங்கள் தோன்றும். எல்லாமே சரிவர நடைபெறுகிறது. அன்னையின் தழுவல் அது. அங்கு ஓய்வு எடுத்துக்கொள்ள அவகாசம் இருக்கிறது. புல் தரையிலே கையை மடித்துத் தலைக்கு வைத்துக்கொண்டு படுத்திருக்கலாம்.

பிரடிரிக் தன் ப்ரேடாப்ளிக் பண்ணையைப் பற்றிப் பேசுகிறான். அவனால் அதிகம் செய்ய இயலவில்லை—ஏதோ கொஞ்சம்தான் ஆகியிருக்கிறது.

"அப்படி ஒன்றும் கொஞ்சமில்லை. அன்று நான் பார்த் தேனே. நீ அதில் வெகுவாகப் பாடுபட்டிருக்கிறாய்" என்றான் ஐஸக்.

அவர்களில் பெரியவன் புகழ்ந்த புகழ் அது. அவன் அங்கு குடியேறிய உழைப்பாளிகளிலேயே உயர்ந்தவன். ஜமீந்தார் என்று பெயர்பெற்றவர். பிரடிரிக்குக்குத் திருப்திதான். அவன் உண்மையி

லேயே கேட்கிறான்: "அப்படியா நீங்கள் நினைத்தீர்கள்? ஆனாலும் இன்னும் வேலை செய்தால் சரிவர ஆகிவிடும் அது. நல்ல பண்ணை தான். வீட்டில் வேலை வேறு குறுக்கிடுகிறது. ஆடுமாடுகளுக்கு அங்கு தங்க இடம் இல்லை. எல்லாம் பார்க்க வேண்டியதாக இருக்கிறதே" என்றான் பிரடிரிக் பெருமையுடனேயே!

"இங்கு சௌகரியமாகத்தானே இருக்கிறாய்?" என்று கேட்கிறான் ஐஸக்.

"உண்மையே சௌகரியமாகத்தான் இருக்கிறேன். என் மனைவியும் சௌக்கியமாகத்தான் இருக்கிறாள். நல்ல இடம் அது. பாதையில் இரண்டு பக்கமும் தெரிகிறது எங்களுக்கு. பார்ப்பதற்கும் நல்ல இடம் அது. வீட்டை ஒட்டியிருக்கிற மரங்கள் அழகாக இருக்கின்றன. இந்தப் பக்கமும் சில மரங்கள் நட்டு விட்டேனானால் இன்னும் அழகாகிவிடும்! தண்ணீர் வடிய ஏற்பாடு செய்தேன். இன்னும் முழுவதும் வடியவில்லை. வடிந்தால் அந்த நிலத்தையும் உழுது பயிரிடலாம். என்ன பயிர்போடலாம் என்பது போட்டுத்தான் தெரியவேண்டும். பார்க்கலாம். ஆனால் இது வரை சௌகரியமாகத்தான் இருக்கிறது. வீடு, நிலம், ஆடுமாடுகள் எல்லாம் எங்களிருவருக்கும் போதும்."

"உங்கள் இருவருக்குமா? எத்தனை நாளுக்கு இருவராகவே இருக்கிற உத்தேசம்" என்று கேட்கிறான் ஸிவெர்ட் விளையாட்டாக.

"அதைப்பற்றி என்ன? காலக்கிரமத்தில் எல்லாம் வரட்டுமே! அப்போது சமாளித்துக் கொள்ளலாம். சௌகர்யமாகத்தான் இருக்கிறது. என் மனைவியின் உடல் இங்கு வந்து தேறியிருக்கிற மாதிரித்தான் எனக்குத் தோன்றுகிறது!" என்றான் பிர்டிரிக்.

மாலை நேரம் வரும்வரையில் வேலையில் ஈடுபட்டிருக்கிறார்கள். நடுநடுவே நிமிர்ந்து முதுகை நிமிர்த்துகிறார்கள். சில வார்த்தைகள் பேசுகிறார்கள்.

"உனக்குப் புகையிலை கிடைக்கவில்லையா?" என்றான் ஸிவெர்ட்.

"இல்லை. கிடைத்தால்தான் என்ன பிரயோசனம்?"

"ஏன்?"

"நான் புகையிலை போடுவதில்லை. ஆரான்ஸெனுடன் பேச்சுக் கொடுப்பதற்காகத்தான் நான் புகையிலை கேட்டேன்." இருவரும் பிரமாதமாகச் சிரித்தார்கள்.

வீடு திரும்பும்போது தகப்பனும் பிள்ளையும் வழக்கப்படி அதிகம் பேசாமலே நடக்கிருர்கள். ஐஸக் ஏதோ சிந்தனையில் ஆழ்ந்திருக்கிருன். கடைசியில் "ஸிவெர்ட்" என்கிருன்.

"என்ன ?"

"உம்......ஒன்றுமில்லை."

மீண்டும் மௌனமாகப் பல நிமிஷங்கள் நடக்கிருர்கள். மீண்டும் ஐஸக் தொடங்குகிருன்: "வியாபாரம் இல்லாவிட்டால் அவன் என்ன பண்ணுவான்? கடையில் எதுவுமே இல்லையா ?"

"இல்லை. எதையும் வாங்கி வைத்து என்ன பண்ணுவது? யார் வந்து என்ன வாங்குவார்கள்" என்ருன் ஸிவெர்ட்.

"அப்படியா? ஆமாம். அவனிடம் யார் என்ன வாங்குவார்கள் ?"

ஸிவெர்ட் சிறிது நேரம் யோசிக்கிருன். சிறிது நேரம் கழித்து அவன் தகப்பன் மீண்டும் சொல்லுகிருன்: "இங்கு இப்போது எட்டுப் பண்ணைகள் இருக்கின்றன. சில நாளில் இன்னும் அதிகம்கூட ஏற்படலாம்......ஆனல்......"

ஸிவெர்ட்டுக்கு ஆச்சரியமாக இருக்கிறது. தன் தகப்பனர் என்ன சொல்ல வந்தார் என்று புரிந்துகொள்ள இயலவில்லை அவனல். வெகு தூரம் மீண்டும் மௌனமாக நடக்கிருர்கள். வீட்டை எட்டிவிட்டார்கள்.

"உம்...அதற்கு என்ன விலை கேட்டான் ஆரான்ஸென்."

"ஓஹோ! இதுவா விஷயம்! வாங்கிவிடலாம் என்று உத்தேசமா ?" என்ருன் ஸிவெர்ட் கேலியாக. ஆனல் அவன் கேலி பாவம் மறைகிறது. விஷயம் விளங்குகிறது. எல்யூஸிஸைப் பற்றி எண்ணி இந்த முடிவுக்கு வந்திருக்கிருன் ஐஸக். அவனை மறந்துவிடவில்லை அவன். ஸெல்லன்ராவுக்கு அருகிலேயே அவனும் தங்கிவிட்டால் நல்லது என்பது அவன் நினைப்பு. பண்ணைக்குப் பண்ணை—கடைக்குக் கடை. ஸெல்லன்ராவுக்கு அருகிலேயே இருந்தது.

"நியாயமான விலைக்குக் கொடுத்துவிடுவான். பார்க்கலாம்" என்கிருன் ஸிவெர்ட். அவன் இதைச் சொன்னதும் தன் மனதில் இருந்ததை அறிந்துகொண்டு விட்டான் என்று புரிந்துகொண்டான் ஐஸக். இவ்வளவு தெளிவாகச் சொல்லிவிட்டது பற்றி அவனுக்கே வெட்கமாக இருக்கிறது. மெதுவாகப் பேச்சை

பாதையைச் செப்பனிடுவதுபற்றித் திருப்புகிறான். அது முடிந்து விட்டது நல்லது என்கிறான்.

அதற்குப்பிறகு இரண்டு நாட்கள் ஸிவெர்ட்டும் அவன் அம்மாவும் ரகசியம் பேசுகிறார்கள். குசுகுசுவென்று பேசுகிறார்கள். ஒரு கடிதம்கூட எழுதுகிறார்கள். சனிக்கிழமையன்று ஸிவெர்ட் திடீரென்று கிராமத்துக்குக் கிளம்புகிறான்.

"மறுபடியும் அதற்குள் எதற்காகக் கிராமத்துக்கு?" என்கிறான் தகப்பன் இஷ்டமில்லாமல். "நல்ல செருப்பு தேய்வதைத் தவிர வேறு என்ன லாபம்?" அசிரத்தையாக கசப்புடன் கேட்கிறான் ஐஸக். அவனுக்குத் தெரியும்—ஸிவெர்ட் தபாலில் கடிதம் சேர்க்கக் கிளம்பியிருந்தான் என்று.

"ஆலயத்துக்குப் போகவேண்டும்". என்றான் ஸிவெர்ட். வேறு எதுவும் சொல்ல சட்டென்று வரவில்லை. "எதற்காக..." என்றான் ஐஸக்.

அப்படி ஆலயத்துக்குப் போவதனால் வண்டியைக்கட்டி ரிபெக்காவையும் அழைத்துப்போ என்றான் ஐஸக். அவளுக்கும் கிராமம் தெரியட்டும். டர்ணிப் பயிரை எவ்வளவு ஜாக்கிறதையாக மாடு தின்றுவிடாமல் பார்த்துக் கொண்டாள் அவள்! சிறுமி அவள். உல்லாசமாகப் போய் வரட்டுமே. வண்டியைக் கட்டினார்கள். ரிபெக்காவைப் பார்த்துக்கொள்ள ஜென்ஸினும்கூட வந்தாள். அதுபற்றியும் ஸிவெர்ட்டுக்கு ஆக்ஷேபம் இல்லை.

அவர்கள் போனபிற்பாடு ஸ்டார் போர்கிலிருந்து ஆரான் ஸெனுடைய குமாஸ்தா ஸெல்லன்ராவுக்கு வருகிறான். அதற்கு என்ன அர்த்தம்? அப்படி ஒன்றும் விசேஷம் இல்லை. அவன் பெயர் ஆண்டெர்ஸன். இந்தப்பக்கம் வந்தான்—அவன் யசமான் அனுப்பியிருந்தான். வேறு ஒன்றுமில்லை. அதுபற்றி ஸெல்லன் ராவில் அதிக உத்ஸாகமில்லை. இப்போது அங்கு புதிதுபுதிதாக யாராவது வந்து போய்க்கொண்டுதான் இருக்கிறார்கள். இங்கர் அவர்களுடன் அதிகமாகப் பேச்சுக்கூட இப்பவெல்லாம் வைத்துக் கொள்வதில்லை. இங்கர் முன்னெல்லாம்போல இல்லை. அவள் அதிகமாகப் பேசுவதில்லை. தன் அறையை விட்டு, வேலை செய்வதைத்தவிர, வெளியே வருவதுகூட இல்லை.

அந்தப் பிரார்த்தனைப் புஸ்தகம் விந்தையான புஸ்தகம்தான். போகும் வழிக்கு உற்ற துணைவன் அது. தோள்மேல் கை போட்டுக்கொண்டு உடன் வருகிற நண்பன். இங்கர் வழிதப்பி

விட்டாள் — பழம்பறிக்கப்போய் வழிதவறி விட்டாள். திரும்புவதற்கு வழிகாட்டியது அந்தப் புஸ்தகம்தான். மிகவும் பணிவுடன் கடவுள் பயத்துடன் நடந்துகொள்கிருள் இப்போது. முன்னெல்லாம் தைக்கும்போது கையில் ஊசி குத்திவிட்டால் கெட்ட வார்த்தை ஒன்று சொல்லுவாள் — நகரில் தன்னுடைய சகிகளிடமிருந்து கற்றுக்கொண்டு வந்த வார்த்தைஅது. இப்பபொழுதெல்லாம் கையில் ஊசிகுத்தி ரத்தம் வந்தால், மௌனமாக ரத்தத்தை உறிஞ்சிவிட்டு மேலே காரியத்தைப் பார்க்கிருள். தன் சுபாவத்தையே மாற்றிக்கொண்டு விட்டாள் — பெரிய வெற்றிதானே அது? அதுமட்டுமல்ல. கூலியாட்கள் எல்லாம் போனபிற்பாடு, ஸெல்லன்ரா மீண்டும் தனிப் பிரதேசமானபிறகு இங்கருக்குச் சோதனைகாலம் தொடங்கிற்று. மிகவும்கஷ்டப்பட்டாள். அழுதாள். தன்னைத்தவிர வேறு யார்மேலும் குற்றமிருந்ததாக அவள் நினைக்கவில்லை — பணிவும் தாழ்மையும் பெற்ருள் அவள். தன் மனசிலிருந்ததை ஐஸக்கிடம் சொல்லி மன்னிப்புக் கேட்டுக்கொண்டிருக்க இயலுமானல்...? ஆனல் ஸெல்லன்ராவில் மனசிலுள்ளதை வெளிப்படையாகச் சொல்லுகிற பழக்கமே கிடையாது. வேறு விதங்களில் அவள் பணிவைக் காட்டினள். சாப்பிடவா என்று உரக்கக் கூவுவதற்குப் பதில் அருகில் போய் அன்பாய் அழைக்கலானுள். அவன் துணி மணிகளைச் சரிபார்த்து, பொத்தான் முதலியன போயிருந்தால் தைத்து வைத்தாள். இன்னும் அதிகமும் செய்தாள். ஒருநாள் இரவு படுக்கையில் கையை ஊன்றிக்கொண்டு எழுந்து "ஐஸக்" என்ருள்.

"என்ன அது?" என்ருன் ஐஸக்.

"விழித்துக் கொண்டிருக்கிருயா?"

"ம்...ம்..."

"ஒன்றுமில்லை" என்ருள் இங்கர். பிறகு "நான் தகுதியுள்ளவளாக நடந்து கொள்ளவில்லை" என்ருள்.

"என்ன?" என்ருன் ஐஸக் அவ்வளவுதான் சொன்னன். அவனும் படுக்கையில் கையை ஊன்றிக் கொண்டு எழுந்தான்.

அப்படியே இருவரும் பேசிக்கொண்டார்கள். இங்கருக்கு ஈடு இணை ஏது. அவள் முழுமனதுடன் சொன்னுள்: நான் "உனக்கு ஏற்றவளாக இல்லை. அது பற்றி எனக்கு ரொம்பவும் வருத்தம்" என்ருள்.

இந்த வார்த்தைகள் அவனுக்கு உணர்ச்சி யூட்டுகின்றன. அவளுக்கு ஆறுதல் சொல்ல விரும்புகிறான். விஷயம் பூராவும் புரியவில்லை அவனுக்கு — ஆனால் இங்கர் தன் மனைவி என்பதில் அவனுக்கு அளவுகடந்த பெருமைதான். "அது பற்றி வருத்தப் படுவானேன்?" என்றான் ஐஸக். "நம்மில் யாரும் தகுதியுள்ள வர்கள் மாதிரி இல்லை."

"உண்மைத்தான்" என்கிறாள் இங்கர் நன்றியுடன். ஐஸக் அற்புதமாக அவளுக்கு ஆறுதல் தந்துவிட்டான். கோணலாகி விட்டதை நிமிர்த்திவிட அவனுக்கு ஒரு நிமிஷம்தான் பிடித்தது. "யாருமே தகுதியற்றவர்கள்தான்" அவன் சொன்னதும் உண்மை தானே! உள்ளத்து அரசன் — அரசனு அவன் அல்லது கடவுளா — நேர் வழி செல்லாமல் குறுக்கு வழிகளிலே செல்லுகிறான். வழிதவறி விடுகிறான் — தப்புவழிகளில் செல்லுகிறான். ஒரு நாள் புஷ்பப் படுக்கையிலே கிடக்கிறான் — மறுநாள் புல் தரையிலே கிடந்து உருண்டு மேனியிலே முள் தைக்கிறது. இதினாலெல்லாம் என்ன ஆகிறது — மனமோ உடலோ ஒடிந்து விடுகிறதா? இல்லை காதல் உண்மையான காதல். உரம் பெருகிறது, வலுப் பெறுகிறது.

இங்கரின் கஷ்டங்களும் தீருகின்றன. மனக்கஷ்டம் ஒரு வழி யாக நீங்கிவிட்டது. ஆனாலும் அவள் கடவுள் வழிபாட்டிலும் பிரார்த்தனைகளிலும் அதிகமாக ஈடுபடுகிறாள். கடினமான வேலைகளைச் செய்துகொண்டு பொறுமையுடன் நல்லவளாக இருக்கிறாள். ஐஸக் மற்ற மனிதர்கள் மாதிரியில்லை என்று உணருகிறாள். அவனிடம் புதுக் காதல் கொள்கிறாள். அவன் பாடகன் அல்ல வாலிபனும் அல்ல. ஆனால் எவ்வளவு நல்லவன். இந்த மாதிரி வாழ்வு, அவன் அரவணைப்பில் வாழும் வாழ்வு. வேறு யாருக்குக் கிட்டும்.

ஸ்டார் போர்கிலிருந்து குமாஸ்தா, ஆண்டெர்ஸன் ஒரு ஞாயிற்றுக்கிழமை யன்று ஸெல்லன்ராவுக்கு வந்தான். அவனைச் சந்திக்க இங்கர் துடிக்கவில்லை. அவனை வரவேற்க அவள் தன் அறையிலிருந்து வரக்கூட இல்லை. லெபல்டினிடம் ஒரு கோப்பை யில் பாலைக் கொடுத்து அனுப்பினாள் — ஜென்ஸின் வீட்டில் இருந் தால் அவள் கொண்டு போய்க் கொடுத்திருப்பாள். அவசியமானால் லெபல்டின் கொண்டு போய்த்தர மாட்டாளா என்ன? பாலை அவனிடம் கொடுத்துவிட்டு "இதோ பால்" என்றாள் லெபல் டின். அவளுக்கு வெட்கமாக இருந்தது. ஞாயிற்றுக்கிழமை யாதலால் அவள் நல்ல ஆடை அணிந்திருந்தாள்.

"நன்றி" என்றான் ஆண்டெர்ஸன். "உனக்கு எதற்கு இவ்வளவு சிரமம்? உன் அப்பா எங்கே?"

"எங்கேயாவது வேலை செய்து கொண்டிருப்பார்."

ஆண்டெர்ஸன் பாலைக் குடித்து விட்டு வாயைத் தன் கைக்குட்டையால் துடைத்துக் கொண்டான். மணி என்ன ஆயிற்று என்று பார்த்தான். பிறகு "இங்கிருந்து சுரங்கத்துக்கு வெகு தூரமா?" என்று கேட்டான்.

"ஒரு மணி நேர நடை—குறைவாகவே இருக்கும்."

"ஆரான்ஸெனுக்காக நான் சுரங்கம்வரை போய்ப் பார்த்து விட்டு வரப் போகிறேன்—நான் அவனுடைய குமாஸ்தா."

"ஓ!"

"உனக்கே என்னைத் தெரிந்திருக்குமே! ஆரான்ஸெனிடம் சாமான்கள் வாங்க வந்தபோது உன்னை நான் பார்த்திருக்கிறேன்."

"அப்படியா?"

ஆண்டெர்ஸன் சொன்னான்: "உன்னை எனக்கு ஞாபகம் இருக்கிறது. அங்கு இரண்டுதரம் வந்திருக்கிறாய் நீ."

"என்னை ஞாபகம் இருக்கிறதா உனக்கு — அது பெரிய விஷயம்தான்" என்றாள் லெபல்டின். அவள் முகம் சிவந்தது. நிமிர்ந்து நிற்கத் தைரியம் இல்லாமல் நாற்காலியைப் பிடித்துக் கொண்டு நின்றாள்.

ஆண்டெர்ஸனுக்குப் பலமும் தைரியமும் நிறையவே இருந்தது. அவன் சொன்னான் "உன்னை எனக்கு ஞாபகமில்லாமல் எப்படிப் போகும்?" பிறகு சொன்னான்: "சுரங்கத்துக்கு நீயும் என்னுடன் வாயேன்."

லெபல்டினுக்குக் கண்களை மறைத்தது. உலகமே சுழலுவது போல இருந்தது. அவன் எங்கிருந்தோ பேசுவதுபோல இருந்தது. "வரமாட்டாயா? வேலை ரொம்ப இருக்கிறதா?" என்று கேட்டான் அவன்.

"ஆமாம். வரமுடியாது இப்போ" என்றாள் அவள்.

அவள் நடை தடுமாறியது. கீழே விழுந்துவிடாமல் அவள் எப்படித்தான் அந்த அறையிலிருந்து வெளியேறினாளோ. அவள் தாயார் அவளைப் பார்த்து என்ன விஷயம் என்று கேட்டாள். "ஒன்றுமில்லை" என்றாள் லெபல்டின்.

ஒன்றுமில்லை, ஒன்றுமில்லை. ஆனால் இப்போது இந்த லெபல்டினின் தருணம். நித்யமான அந்த உருவம் அவனையும் பாதித்தது—காதல் தெய்வம் என்கிற உருவம். காதலுக்கு ஏற்ற உருவம் இருந்தது அவளுக்கு. நன்றாக வளர்ந்திருந்தாள். அழகாக இருந்தாள்—காதலுக்கு மிகவும் உகந்த பலிதான் அவள் அவள் இளம் உள்ளத்திலே ஒரு பறவை சிறகடித்துப் பறக்கத் துடித்துக் கொண்டிருக்கிறது. அவள் கைகளும் அவள் தாயாருடையதைப் போல் இருக்கின்றன—இரக்கமும் அன்பும் பலமும் நிறைந்த கைகள். அவளுக்கு நாட்டியமாட தெரியுமோ? தெரியுமே! எப்படி எங்கே கற்றுக் கொண்டாள் அவள். உலகில் மற்ற இடங்களில் கற்றுக் கொண்டதுபோல ஸெல்லன்ராவிலும் அவர்கள் நாட்டியமாடக் கற்றுக் கொண்டார்கள். ஸிவெர்ட்டும் நாட்டியமாடுவான்; லெபல்டினுடன்தான். அந்தப் பண்ணைக்கே உரித்தான நாட்டியம் அது. நிலத்தை உழுது பண்படுத்துவதே போல உரம் மிகுந்த நாட்டியம் அது! அதற்குப் பெயர் கிடையாது. ஸெல்லன்ரா நாட்டியம் அது. லெபல்டினுக்கு அலங்காரம் செய்து கொள்ளத் தெரியாதா? காதல் புரியத் தெரியாதா? கண்களைத் திறந்துகொண்டே கனவுகள் காணத் தெரியாதா? மற்ற பெண்களுக்குத் தெரிந்தமாதிரி அவளுக்கும் தெரியும். ஆலயத்துக்குப் போனபோது அம்மாவுடைய தங்க மோதிரத்தை வாங்கித் தன் கையில் போட்டுக் கொண்டாள். அதில் தவறு என்ன? ஜமீந்தார் ஸெல்லன்ரா வீட்டுப் பெண்—அவளுக்குத் தங்க மோதிரம் அணியத் தகுதி இல்லையா என்ன?

ஆண்டெர்ஸன் சுரங்கத்துக்குப் போய் விட்டுத் திரும்புகையில் ஐஸக் வீட்டில் இருந்தான். அவனுக்குச் சாப்பாடும் காபியும் தந்தார்கள். இப்போது எல்லோரும் சேர்ந்து இருந்தார்கள். எல்லோருமே அவனுடன் பேசினார்கள். ஆரான்ஸென் அனுப்பினான் என்றான். சுரங்கத்து வேலை மீண்டும் தொடங்குவார்களா என்று அறிய அவனுக்கு ஆவல். தன் குமாஸ்தாவை நிலைமை எப்படியிருக்கிறது என்று பார்த்து விட்டு வரச் சொன்னான். ஆண்டெர்ஸன் பொய் சொன்னானோ என்னவோ—உண்மையிலே அவன் யசமான் அனுபினானா அல்லது வர வேண்டும் என்று ஆசைப்பட்டு அவனாகவே வந்திருந்தானோ? சுரங்கம் பார்த்து விட்டு வருவதாகப் போய் இவ்வளவு சீக்கிரம் வந்து விட்டானே?

"வெளியே பார்த்து என்ன சொல்ல முடியும்?" என்றான் ஐஸக்.

உண்மைதான். ஆனால் ஆரான்ஸென் அனுப்பினால் வர மாட்டேன் என்று சொல்ல அவன் யார். தவிரவும் கடையில் தான் ஒரு வேலையும் இல்லையே!

இங்கர் பொறுமையற்றவளாகக் கேட்டாள்: "அவர்கள் பேசிக்கொள்வது உண்மையா? ஆரான்ஸென் அந்தப் பண்ணையை விற்று விடுவானா?"

"விற்று விடலாமா என்றுதான் யோசித்துக் கொண்டிருக்கிறான். அவனைப் போன்றவன் விற்கலாம், வாங்கலாம் — என்ன பண்ணினால்தான் என்ன? அவனுக் கென்ன — இருக்கிற பணம் குறைந்துவிட போகிறதா?"

"அவ்வளவு பணக்காரனா அவன்?"

"பணக்காரன்தான்!"

இங்கரால் பேசாதிருக்க முடியவில்லை. வாயைத் திறந்தே கேட்டுவிட்டாள்: "ஸ்டார் போர்குக்கு என்ன விலை கேட்டான்?"

ஐஸக் குறுக்கிட்டான். அதை வாங்குகிற உத்தேசம் தனக் கிருப்பதாகக் காட்டிக் கொள்ள அவனுக்கு இஷ்டமில்லை. ஆனால் அவனுக்கும் அதன் விலை என்னவாக இருக்கும் என்று அறிந்து கொள்ள ஆசைதான். இருந்தாலும் "அதன் விலை என்ன வானால் நமக்கென்ன?" என்கிறான். ஆனாலும் ஆண்டெர் ஸனுடைய பதிலை ஆவலுடன் எதிர்பார்க்கிறான்.

"சும்மாத்தான் விலை என்னவாக இருக்கும் என்று கேட்டேன்" என்றாள் இங்கர்.

விலையைப்பற்றி சர்வஜாக்கிரதையாகப் பதில் அளிக்கிறான் ஆண்டெர்ஸன். விற்கிற விலை தெரியாது. வாங்கின விலை தெரியும் என்கிறான்.

"எத்தனை?"

"ஆயிரத்து அறுநூறு க்ரோனர்" என்கிறான் ஆண்டெர்ஸன்.

இங்கர் அவ்வளவா என்று கையைத் தட்டுகிறாள். நிலத்தின் விலை மதிப்பு இதெல்லாம் பற்றிப் பெண்களுக்கு என்ன தெரியும்? ஆயிரத்தறுநூறு என்றதும் கையைத் தட்டுகிறாள் — அதிகம் என்கிறமாதிரி. "அவன் வீடுகளுக்காக அதிகம் செலவழித்து விட்டான். கட்டிடங்களால்தான் இவ்வளவு விலை" என்றான் ஐஸக்.

" ஆமாம். வீடுகளும் கட்டிடங்களும்தான் " என்று ஆமோதித்தான் ஆண்டெர்ஸனும்.

ஆண்டேர்ஸன் கிளம்புகிற சமயத்தில் அவனுடன் கை குலுக்க மனசில்லாமல் லெபல்டின் அறையை விட்டே வெளியே போய்விடுகிருள். மாட்டுக் கொட்டிலில் உள்ள ஜன்னல் வழியாக அவன் போக வேண்டிய வழியைப் பார்த்துக் கொண்டு நிற்கிருள். கழுத்திலே புதிதாக ஒரு நீலப்பட்டு ரிப்பன் சுற்றிக் கொண் டிருக்கிருள் அவள். அதைத் தரித்துக்கொள்ள அவசாசம் எங்கே கிடைத்தது அவளுக்கு! அதோ போகிருன் அவன் — குள்ளமாக தடிமனுக. வேகமாக நடக்கிருன் அவன். எட்டு, பத்து வருஷங்கள் அவளைவிடப் பெரியவன் அவன். பார்க்க நன்ருகத்தான் இருந்தான் என்று எண்ணினுள் லெபல்டின்.

ஞாயிறன்று இரவு கிராமத்துக்குப் போனவர்கள் திரும்பி ஞர்கள். ஒன்றும் அசம்பாவிதமாக நடந்துவிடவில்லை. சிறுமி ரிபெக்கா வீடு வருமுன் தூங்கிவிட்டாள். விழித்துக்கொள்ள வில்லை அவள் — வீட்டில் படுக்கையில் தூக்கிக்கொண்டு போய் விட்ட பிறகும்கூட. கிராமத்தில் பல செய்திகள் ஸிவெர்ட்டின் காதில் விழுந்தன. ஆனல் அவன் அம்மா "என்ன சேதி?" என்று கேட்டதும், அவள் "ஒன்றும் விசேஷமாக இல்லை. ஆக்ஸெல் ஒரு ஏர்க்கலப்பையும் அறுவடை யந்திரமும் வாங்கி யிருக்கிருன்."

"என்ன அது?" என்று கேட்டான் ஐஸக். அதுபற்றி உத்ஸாகத்துடன், "நீ பார்த்தாயா அவற்றை?"

"பார்த்தேன். கப்பலிலிருந்து இறக்கி கடற்கரையில் இருந்தன."

" இதற்காகத்தான் அவசரமாக அவன் போனனே?" என்ருன் ஐஸக்.

இது காரணமில்லை என்று ஸிவெர்ட்டுக்குத் தெரியும். ஆனல் ஒரு வார்த்தையும் வாய்திறந்து சொல்லாமல் உட்கார்ந்திருந்தான். அவன் அம்மாவும் அப்பாவும் ஆக்ஸெல் யந்திரங்கள் வாங்கத்தான் நகருக்குப் போனன் அவசரமாக என்று எண்ணிக்கொண்டால் என்ன? அது உண்மை அல்ல என்று அவர்கள் இருவருக்கும் உள்ளத்தில் தெரியும். வதந்திகள் உலவின. பார்ப்ரோ குழந்தை யைக் கொன்றுவிட்டாள் என்று ஊரெல்லாம் பேசுசுத்தான்.

"படுக்க நேரமாகி விட்டது" என்றான் கடைசியில் ஐஸக்.

ஸிவெர்ட் படுக்கப் போகிறான். ஆக்ஸெலைப் பற்றிய விஷயம் அவனுக்கும் இப்போது தெரியும். பெரிய விஷயம் அது. லென்ஸ் மாண்டும் அவனுடன் போயிருந்தான். லென்ஸ்மாண்டின் மனைவி —இரண்டாவது குழந்தை அவளுக்கு அப்போதுதான் பிறந்திருந்தது—தன் குழந்தையை விட்டுவிட்டு நகருக்குத் தன் கணவனுடன் போயிருந்தாள். கேஸில் அவளும் சில வார்த்தைகள் பேசுவாள் என்று எதிர்பார்த்தார்கள்.

வம்பும் வதந்தியும் நிறைந்திருந்தன கிராமத்தில். அந்தப் பக்கத்திலே பல நாட்களுக்கு முன் நடந்த இதே மாதிரியான ஒரு விஷயம் பலருக்கு ஞாபகம் வந்தது. கும்பலாகக் கூடி அதைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்த மனிதர்கள் ஸிவெர்ட் வந்தால் பேச்சை நிறுத்தி விடுவார்கள். அவனைக் கண்டு முகத்தைக் கூடச் சிலர் திருப்பிக் கொண்டார்கள். ஆனால் ஸிவெர்ட்டை அவமானப் படுத்த யாரும் துணியவில்லை. அவன் பணக்காரப் பண்ணையார் வீட்டுப் பிள்ளை. தவிரவும் அவனே கெட்டிக்காரன், உழைப்பாளி. அவனை எல்லோருக்குமே பிடித்திருந்தது. ஜென்ஸினுக்கு மட்டும் விஷயம் பூராவும் தெரியாமல் இருந்துவிட்டால் தேவலை என்று எண்ணினான் ஸிவெர்ட். தன் விஷயங்களைப்பற்றி யோசிக்கவும் அவனுக்கு நேரம் தேவையாக இருக்கிறது — தன் விஷயம் என்று நினைக்கும்போது அவன் கன்னம் சிவக்கிறது. ஜென்ஸினும் ரிபெக்காவும் ஆலயத்திலிருந்து புறப்படுவதை அவன் பார்த்தான் — ஆனால் நேரே வண்டிக்கு வரவில்லை அவர்கள். சிறிது நேரம் காத்திருந்து விட்டு, அவன் வண்டியை ஓட்டிக் கொண்டு கன்னான் வீட்டுக்குப் போனான்.

சாப்பிட உட்கார்ந்து விட்டார்கள் அவர்கள். அவனையும் சாப்பிடச் சொன்னார்கள். சாப்பிட்டாகி விட்டது என்றான் ஸிவெர்ட். அவன் வருவான் என்று தெரிந்திருந்தும் அவர்கள் அவனுக்காகக் காத்திருக்க வில்லை. ஸெல்லன்ராவில் இப்படி நடக்காது. இங்கு நடந்தது.

"உனக்கேற்ற உணவில்லையோ என்னவோ, இது" என்கிறாள் கன்னானின் மனைவி, ஜென்ஸினின் தாயார்.

"ஆலயத்திலிருந்து என்ன செய்தி?" என்று கேட்டான் கன்னான். அவனும் ஆலயத்திலிருந்துதான் திரும்பி இருந்தான். ஏதாவது பேச்சுக்குத்தானே கேட்டான்.

ஜென்ஸினும் ரிபெக்காவும் வண்டியில் ஏறி உட்கார்ந்து கொண்டார்கள். கன்னுனின் மனேவி வெளியே வந்து தன் பெண்ணிடம் சொன்னுள்: "குட் பை ஜென்ஸின். சீக்கிறமே திரும்பி விடு" அதுபற்றி யோசனே செய்யவேண்டிய அவசியம் ஏற்பட்டது ஸிவெர்ட்டுக்கு. நேரடியாக அவனிடம் ஏதாவது சொல்லியிருந்தால் அவன் தகுந்த பதில் சொல்லியிருப்பான். ஆனல் இப்போது முகத்தைச் சுளித்துக்கொண்டு யோசனேயில் ஆழ்கிருன்.

வீடு நோக்கிக் கிளம்பினுர்கள். ரிபெக்கா ஒருத்திதான் பேசிக் கொண்டிருக்கிருள். ஆலயத்துக்குப் போய்வந்த பெருமை அவளுக்கு. அன்று புதுசு புதுசாக எவ்வளவு காக்ஷிகள் கண்டு விட்டாள் அவள். மதகுரு வெள்ளிச் சிலுவையும் வெள்ளே ஆடையுமாகப் பார்க்க கம்பீரமாக இருந்தார். ஆலய சங்கீதமும் ஆனந்தமாக இருந்தது. எவ்வளவு விளக்குகள் எரிந்தன! "பார்ப்ரோவைப் பற்றி—வெட்கக் கேடுதான்" என்ருள் ஜென்ஸின் கடைசியில்.

"வீட்டுக்குச் சிக்கிரம் வரச் சொன்னுளே உன் அம்மா. அதற்கு என்ன அர்த்தம்?" என்று கேட்டான் ஸிவெர்ட்.

"என்ன அர்த்தமா?"

"ஆம். நீ எங்களேவிட்டுப் போவதாக நினேத்திருக்கிருயா?"

"இல்லே. ஆனல் என் அம்மா வரச் சொன்னுள். அவசிய மானல் போகாமல் என்ன பண்ணுவதாம்?"

"ஓவ்" என்று குதிரையை நிறுத்துகிருன். "இப்பவே திரும்பப் போகிருயா? வண்டியைத் திருப்பி ஓட்டட்டுமா?"

ஜென்ஸின் அவனே நிமிர்ந்து பார்க்கிருள். அவன் முகம் வெளிரிட்டிருந்தது.

"வேண்டாம்" என்று அழத் தொடங்கினுள்.

ரிபெக்கா ஆச்சரியத்துடன் அவர்களிருவரையும் திரும்பித் திரும்பிப் பார்க்கிருள். இந்தப் பிரயாணத்தில் ரிபெக்கா அவர்களுடன் இருந்ததும் நல்லதுதான். அவள் ஜென்ஸினின் கக்ஷி. அவளேக் கட்டி அணேந்து அவள் கண்களேத் துடைத்து சமாதானப் படுத்தினுள் அண்ணுவை அடிக்கக் கழி வேண்டும், எடுத்து வருகிறேன், வண்டியிலிருந்து இறக்கிவிடு என்று ஆர்ப்பாட்டம் பண்ணியபோது, ஸிவெர்ட்டும் சிரித்தான்.

"என்ன அர்த்தத்தில் அப்படிச் சொல்கிறுய்?" என்று கேட்டாள் ஜென்ஸின்.

உடனேயே நேரடியாகப் பதில் தந்தான் ஸிவெர்ட்: "எங்களோடு இருக்க இஷ்டமில்லா விட்டால் போய்விடு. நீ இல்லாமல் காலந்தள்ள வேண்டியதுதான்" என்றுன்.

கொஞ்சநேரம் கழித்து ஜென்ஸின் சொன்னுள்: "லெபல்டின் வளர்ந்து பெரிய பெண்ணுகிவிட்டாள். நான் செய்கிற காரியங்களை அவள் இனிப் பார்த்துக்கொள்வாள்."

ஆமாம். ஸிவெர்ட்டுக்கும் ஜென்ஸினுக்கும் அது துக்கம் தந்த பிரயாணம்தான்! மனக் கஷ்டப்பட்டுக் கொண்டுதான் ஸெல்லன்ரா வந்து சேர்ந்தார்கள்.

7

குன்றுகளைத் தாண்டிக் காடுகளைக் கடந்து நடந்துவருகிறான் ஒரு மனிதன். காற்று; மழை; இலையுதிர் காலத்து மழை கொட்டுகிறது. ஆனால் அவன் அதை லக்ஷியமே செய்யவில்லை. அவன் மனசில் சந்தோஷம் துள்ளுகிறது. அவன் நடையிலேயே அவன் ஆனந்தம் தெரிகிறது, வேறு யாரும் இல்லை—ஆக்ஸெல் ஸ்டிராம் தான் அது. நகரில் கச்சேரியிலிருந்து வருகிறான் அவன். அவனை விட்டு விட்டார்கள் — அவன் பேரில் குற்றம் எதுவுமில்லை என்று ருஜுவாகி விட்டது. ஆனந்தமயமான பண்ணை வாழ்வுக்குத் திரும்புகிறான் அவன் — இப்போது அறுவடை யந்திரமும் ஏர்க் கலப்பையும் கூட வந்து விட்டன. கோர்ட்டிலும் அவன் குற்றவாளியல்ல என்று தீர்ப்பாகிவிட்டது. என்ன கவலை அதற்கு மேல்? நல்லதுதான். அதிருஷ்டம்தான்.

எவ்வளவு கஷ்டப்பட்டு விட்டான் அவன்! சாக்ஷி என்று அவனைக் கூண்டில் ஏற்றிவிட்டார்கள். வயலில் உழைக்கும் குடியானவனான அவனுக்கு அவனுடைய மிகக் கடினமான வேலை அதுதான். அந்த நாட்களைப்பற்றிய ஞாபகம் அவன் மனதை விட்டு அகலவே அகலாது. பார்ப்ரோவின் குற்றத்தை அதிகப்படுத்திச் சொல்வதில் அவனுக்கென்ன லாபம்! அவன் மனசுக்கு மிகவும் கஷ்டமாக இருந்தது. அவசியமானது தவிர வேறு எதற்கும் அவன் வாயைத் திறக்கவில்லை. அவனுக்குத் தெரிந்ததெல்லாவற்றையும் கூடச் சொல்லிவிடவில்லை அவன். ஒவ்வொரு வார்த்தையாகத்தான் அவர்கள் அவன் பதில்களை அவன் வாயிலிருந்து பிடுங்கினார்கள்! ஆமாம், இல்லை என்பதற்கு மேல் அவன் பதிலே தரவில்லை. போதாதா? இருக்கிற கஷ்டத்துக்கு அதிகமாகப் பிறருக்கேயானாலும் செய்வானேன்? பல சமயங்களில் தப்பிக்கமுடியாது என்கிறமாதிரி தோன்றியது. சட்டம் தெரிந்தவர்கள், கருப்புச் சட்டைகள் அணிந்து கொண்டு, தங்கள் இஷ்டத்துக்கு விஷயத்தை நச்சுப்படுத்தித் திருப்பிக் கொண்டிருந்தார்கள். அவனுக்கும் தண்டனை வாங்கித்தர இல்லாத பாடும் பட்டார்கள். ஆனால் அவர்களும் நல்லவர்கள்தான். அவனை அடியோடு அழித்துவிட அவர்கள் முயலவில்லை. தவிரவும் பார்ப்ரோ சார்பில் சக்தியுள்ளவர்கள் பலர் வக்காலத்து வாங்கிக் கொண்டு அவளைத்

தப்புவிக்க வந்தார்கள். பார்ப்ரோவையே விட்டுவிட்டால் அவனை என்ன பண்ண முடியும்? எதைப்பற்றி அவன் இப்படிப் பயந்து கவலைப்பட்டான்?

பார்ப்ரோவே அவனுக்குக் கெடுதி தரும்படியாக எதுவும் சொல்லவில்லை. பழைய எசமான்; பழைய காதலன்; இதுபற்றி விஷயம் பூராவும் அவனுக்குத் தெரியும்; பழையதொரு சமாசாரத்தையும் அவள் அவனிடம் சொல்லியிருந்தாள். பார்ப்ரோ கெட்டிக்காரி. அவனுக்கு எதிராகத் தான் ஏதாவது சொன்னால், கோபத்தில் அவனும் தனக்குக் கெடுதியாக ஏதாவது சொல்லிவிடுவான். ஆக்ஸெல் கக்ஷியை அவளே சொல்லிவிட்டாள். குழந்தை பிறந்ததோ இறந்ததோ அவனுக்குத் தெரியாது. உண்மைதானே! பல விஷயங்களில் அவன் மற்ற மனிதர்களைப் போல இல்லை — ஆனால் அவனுடன்கூட பார்ப்ரோக்கு ஒத்துக் கொள்ளவில்லை. சண்டைக்குப் போகாதவன்; நல்லவன் — அவன் கூட வாழ்வை நிம்மதியாகக் கழித்திருக்கலாம் அவள். அதைத் தோண்டி எடுத்து வேறு குழியில் புதைத்தான் அவன். உண்மை தான். முதலிடத்தில் நீர் ஊறுகிறது என்று அவன் நினைத்தான்.

பார்ப்ரோ குற்றம் பூராவையும் ஏற்றுக் கொண்ட பிறகு ஆக்ஸெல் பயப்படுவானேன்? பார்ப்ரோவை விடுவிக்க எத்தனையோ பேர் பாடுபட்டுக் கொண்டிருந்தனர்.

லென்ஸ்மாண்டு ஹேயர்தாலின் மனைவி அந்தக் கேஸில் பூரணமாகப் பங்கு எடுத்துக்கொண்டாள். பார்ப்ரோவை விடுவிக்க அவள் பூரணமாகப் பாடுபட்டாள். அதில் சம்பந்தப்பட்டவர்களை எல்லாம் போய்ப் பார்த்துவந்தாள். ஒருவரையும் விட்டுவைக்காமல் பார்த்துப் பேசினாள். கோர்ட்டில் அவள் ஒரு பிரசங்கம் செய்தாள். பேசத் தொடங்கியவுடன் நிமிர்ந்து நின்று சீமாட்டிமாதிரி எல்லாருடைய காதிலும் விழும்படியாகக் கணீரென்று பேசினாள். குழந்தைக் கொலை என்கிற விஷயம்பற்றி எல்லா விஷயங்களையும் தெளிவாகச் சொன்னாள். அவளிஷ்டப்படிப் பேசுவதற்கு முன் கூட்டியே அனுமதி வாங்கிவிட்டவள்போலப் பேசினாள். அவளைப் பற்றி வேறு என்ன சொல்லி என்ன? அவளுக்குப் பிரசங்கம் செய்யத் தெரிந்தது. நன்றாகப் பேசினாள். சட்டவிஷயம் ஒன்றும் சமூக விஷயம் ஒன்றும் எடுத்துக்கொண்டு அதைப்பற்றி சந்தேகத் துக்கிடமேயின்றி ஆணித்தரமாகப் பேசினாள். அத்தனை வார்த்தைகள் அவளுக்குத் தெரியும் என்பதே ஆச்சரியமாக இருந்தது! விஷயம் என்று நீதிபதி சில சமயங்களில் குறுக்கிட்டு விஷயத்

திற்கு அப்பால் செல்லாதே என்கிற மாதிரி உஷார்ப்படுத்தினாள். மற்றப்படி குறுக்கிடவில்லை; கடைசியில் இரண்டொரு வாக்கியங்களில் மிகவும் முக்கியமான சில விவரங்களையும் தெரிவித்தாள். கோர்ட்டில் கடைசியில் ஒரு விசித்திரமான சத்தியமும் செய்தாள் அவள்.

சட்ட விஷயங்களை ஒதுக்கிவிட்டு சொன்னால் விஷயம் இதுதான்:

"நாங்கள் ஸ்திரீகள். எங்களை அதிருஷ்ட ஹீனர்களாகவும் தங்களைவிடத் தாழ்ந்தவர்களாகவும் ஆண்கள் கருதுகிறார்கள். சட்டங்கள் செய்பவர்கள் ஆண்கள். அதுபற்றி எங்கள் அபிப்பிராயத்தை யாரும் கேட்பதில்லை. நான் கேட்கிறேன்—ஆண்மகன் எவனாலாவது பிள்ளை பெற முடியுமா? பிள்ளை பெற இருக்கிற ஸ்திரீயின் உணர்ச்சிகளை அவனால் பூரணமாக அறிந்துகொள்ள முடியுமா? அந்தப் பீதியையும், அந்த பயங்கரத்தையும், பிரசவ வேதனையையும் அவன் அறியமுடியுமா? பிரசவத்தின்போது முக்கி முனகிக் கத்துவது எப்படி என்று உணர்ந்திருக்கிறான் ஆண்மகன் எவனாவது? இல்லை.

"இந்த விஷயத்தையே சொல்லுகிறேன். இவள் ஒரு வேலைக்காரி. கர்ப்பமாகிவிட்டாள். பிள்ளையைப் பெற்றுவிட்டாள். கல்யாணமாகாத பெண், ஆகவே கர்ப்பமுற்றிருக்கும்போதெல்லாம் தன் நிலையை மறைக்க முயன்றுகொண்டிருப்பவள்! ஏன் அதை அவள் மறைக்கவேண்டும்? சமூகத்துக்கு பயந்து கல்யாணமாகாமல் பிள்ளை பெற்றுவிடுகிற ஸ்திரீகளை சமூகம் அவமரியாதை செய்கிறது. சமூகம் அப்படிப்பட்டவர்களுக்கு உதவி செய்வதில்லை—அலக்ஷியம் செய்து அவமரியாதை செய்கிறது மட்டுமல்ல; சில சமயம் தொந்திரவும் தருகிறது. இது நியாயமான நிலைமையா? இந்த நிலைமை பற்றிக் கோபங்கொள்ளாதவர்களை மனிதர்கள் என்று கூறுவது எப்படி? அந்த ஸ்திரீ ஒரு குழந்தையைப் பயத்துடன் பெற்றெடுக்க வேண்டியதுமட்டுமல்ல — அதற்காக ஒரு குற்றவாளி போலவும் நடந்துகொள்ளவும் வேண்டுமா? இந்த விஷயத்தில் தவறிப்போய் அவள் ஆற்றில்விழ குழந்தை நீரிலேயே பிறந்து இறந்தது நல்லது என்றுதான் நினைக்கிறேன். அவளுக்கும் நல்லது — குழந்தைக்கும் நல்லது. சமுகத்தில் இப்போதுள்ள கொள்கைகள் ஆட்சி செலுத்துகிறவரையில், கல்யாணமாகாத ஸ்திரீ தனக்கு பிறக்கிற குழந்தையைக் கொல்லுவது கூடக் குற்றமாகாது என்றுதான் நினைக்கிறேன்."

நீதிபதி இங்கு ஏதோ முணுமுணுத்தார்.

"குற்றம் அது என்று சொன்னால்கூட, அதற்குத் தண்டனை பெயரளவில்தான் இருக்கவேண்டும். குழந்தைகளின் உயிரைக் காப்பாற்ற வேண்டும் என்கிற விஷயத்தில் நம் எல்லோருக்குமே ஒரேவிதமான அபிப்பிராயம்தான். குழந்தைகளைக் கொல்வது குற்றம்தான்—ஆனால் இரக்கமுடன் இதைச் சொல்பவர்கள் ஏன் இரக்கத்துடன் அந்தக் குழந்தைகளின் தாய்களின் பிரச்னையைக் கவனிப்பதில்லை? கர்ப்பமுற்றிருக்கும்போது அவள் மனமும் உடலும் எவ்வளவு கஷ்டப்படுகின்றன என்று யோசித்துப் பாருங்கள்—சமூகத்துக்குப் பயந்து பயந்துக் கல்யாணமாகாத கர்ப்பிணி எவ்வளவு கஷ்டங்களை அனுபவிக்க வேண்டியதாக இருக்கிறது. பெற்றெடுத்த குழந்தையுடன் அவள் எங்கே போக முடியும்? தாயும் குழந்தையும் எங்கு செல்லமுடியும்? — இந்த மாதிரி ஒரு நிலையை ஆண்களால் கற்பனை செய்து பார்க்கவே முடிவதில்லை. குழந்தையின் நிலைமையை உத்தேசித்து இரக்கப்பட்டு அதன் தாய் அதைக் கொல்லுகிறாள். வாழ்க்கை என்கிற படுகளத்திலிருந்து தன்னையும் தன் குழந்தையையும் காப்பாற்றிக் கொள்கிற உத்தேசத்துடன்தான் எந்தத்தாயும் தன்குழந்தையைக் கொல்லத் துணிகிறாள். அவமானமும் கஷ்டமும் தாங்கமுடியவில்லை அவளுக்கே—அந்த மென்மையான குழந்தை எப்படித் தாங்கும்? குழந்தை ரகசியத்தில் பிறக்கிறது. அதைப் பெற்றுவிட்டு அவள் ஜன்னி கண்டவள்மாதிரி இருக்கிறாள்—இருபத்திநாலு மணி நேரத்துக்கும் அதிகமாகவே அவளுக்கு நினைவு இருப்பதில்லை; பேச்சு மூச்சு இல்லாதமாதிரி கிடக்கிறாள். அந்தச் சமயத்தில் அவள் என்ன செய்கிறாள் என்பதே அவள் பிரக்ஞையில் உணர்வதேயில்லை. அவள் அந்தக் காரியத்தைச் செய்ததாகச் சொல்லவே முடியாது. ஏனென்றால் அவள் அந்தச் சமயம் புத்தி சுவாதீனத்துடன் இருப்பதாகவே சொல்லிவிட முடியாது. பிரசவத்திற்குப் பிறகு அவள் மனசிலும் உடலிலும் அவஸ்தைப் பட்டுக் கொண்டிருப்பாள். அந்த ஸ்திதியில் குழந்தையைக் கொல்லத் துணிகிறாள் அவள்; கொல்லுவதோடு மட்டுமல்ல—அதன் உடலை மறைத்தாகவேண்டும்! எவ்வளவு பெரிய தீர்மானம் அது? குழந்தைகள் ஒன்றும் இப்படிச் சாகக்கூடாது என்பதுதான் நம் எல்லோருடைய விருப்பமும். இந்தமாதிரிக் குழந்தைகள் இறக்க நேருவதை நாம் எல்லோரும் அருவருக்கத்தான் செய்கிறோம். ஆனால் இது நமது சமுகத்திலுள்ள ஊழலே தவிர

வேறல்ல; சமூகம் என்று சொல்லப்படுவதின் கெடுபிடியால்தான் இப்படி எல்லாம் நேருகிறது என்று சொல்லித் தெரியவேண்டிய விஷயமல்ல. வம்பு பேசுகிறவிஷயமான, விஷமான ஒருசமூகக் கட்டுக்கோப்பின் விளைவு இது. கல்யாணமாகாமலே தாயாகி விடுகிற பெண்களை நசுக்கவே இந்தச் சமூகம் முயலுகிறது. மிகவும் விஷமத்தனமாக, கோரமாகவே முயலுகிறது.

"இந்தமாதிரி அவர்களைச் சமூகம் நெறுக்கி நொறுக்க முயன்றும் துன்புற்ற தாய் மீண்டும்தலை தூக்குகிறாள். இந்த ஒருமாதிரிதவறு செய்து மாட்டிக்கொண்டுவிட்ட ஒரு காரணத்தினுலேயே அவர்களுடைய மற்ற நல்ல குணங்களில் பல வளருகின்றன. இப்படித் தவறு செய்பவர்கள் எப்படித் திருந்துகிறார்கள் என்பதைக் கல்யாணமாகாமலே தாயாகிவிடுகிற பெண்களுக்கென்று அனுதை விடுதிகள் நடத்துகிறவர்களைக் கேட்டுப்பார்த்தால் நன்கு தெரியவரும். இந்தமாதிரிக் குழந்தைகளைக் கொல்லத் துணிந்த தாய்கள்தான் நல்ல தாதிகளாகவும் ஆகின்றனர் என்பது அனுபவ பூர்வமான உண்மை. அதைப் பற்றித் தீவிரமாக எல்லோரும்யோசித்துத்தானேயாக வேண்டும்?

"இந்தப் பிரச்னையில் இன்னொரு அம்சமும் உண்டு. ஆண் பிள்ளை மட்டும் விலக்கப்பட்டுத் தப்பித்துக் கொள்வானேன்? குழந்தையைக் கொன்றுவிட்ட தாயைச் சிறையில் அடைத்துச் சித்திரவதை செய்திறீர்களே — அந்தக் குழந்தைக்குக் காரணமான தகப்பனை மட்டும் ஏன் யாருமே ஒன்றும் செய்வதில்லை? குழந்தை உண்டாவதற்குக் காரணமான அவனும் குற்றவாளி தானே? தாயினுடைய குற்றத்தைவிட அவன் குற்றம் பெரிதல்லவா! அவனில்லாவிடில் அந்தக் குற்றமே நடைபெருதே! அவனை மட்டும் தண்டிக்காது விடுவது நியாயமா, தர்மமா, முறையா? ஏன் இப்படி நடக்கிறது? ஆண்கள் செய்த சட்டம் என்பதனுல் இப்படி நடக்கிறது. அதுதான் விஷயம். இந்த அநியாயமான நிலைமையைக் கடவுள்தான் பார்த்துத் திருத்த வேண்டும். வோட்டுப் போடுவதிலும், சட்டங்கள் செய்வதிலும் எங்களைப் போன்ற ஸ்திரீகளுக்குப் பங்கு கிடைக்கும் வரையில் நிலைமை சீர்படாது என்பது நிச்சயம்.

"குற்றம் செய்த தாய்களுக்கும் இந்தக் கொடுமையான தண்டனை. குற்றம் செய்யாதவர்களையே சந்தேகத்தின் பேரில் தண்டிப்பது என்று வந்துவிட்டால் என்ன பண்ணுவது? சந்தேகித்து விடுதலை செய்கிற பெண்களுக்குச் சமூகம் என்ன

பிரதியுபகாரம் செய்கிறது? ஒன்றுமில்லை. இங்கு குற்றம் சாட்டப் பட்டிருக்கிற பெண்ணை எனக்குத் தெரியும். அவள் குழந்தையாக இருந்ததிலிருந்து தெரியும். அவள் என்னிடம் வேலைக்கிருந் திருக்கிறாள். அவள் தகப்பன் என் கணவனிடம் வேலைபார்த்தவன். ஆண்களின் குற்றச்சாட்டுகளையும் தண்டனைகளையும் ஒதுக்கி விட்டுச் சிந்தித்துப்பார்க்கத் தெம்புள்ளவர்கள் நாங்கள்—ஸ்திரீகள் ஸ்திரீகளுக்கு என்று அபிப்பிராயமும் உண்டு. என்னைக் கேட்டால், என் அபிப்பிராயத்தில், இந்தப் பெண் தவறு செய்யாதவள். இவள் தன் குழந்தையைக் கொன்றுவிட்டாள் என்று சந்தேகப் பட்டுக் கைதாகி சுதந்திரம் இழந்து உங்கள்முன் நிற்கிறாள். குழந்தை பிறந்ததை மறைத்ததாகவும், அதோடுநில்லாமல் அதைக்கொன்ற தாகவும் இவள்மேல் குற்றச்சாட்டு. அவள் இந்த இரண்டு குற்றங்களையும் செய்யவில்லை என்பது என் மனசுக்குத் தெரிகிறது. நீதிபதிக்கும் கோர்ட்டுக்கும் தெரிந்து அவளை விடுதலையே செய்து விடுவார்கள். பிறப்பை மறைப்பதாவது?— அது நண்பகலில் பிறந்தது. ஆமாம், அந்தப் பெண் அப்போது தனியாக இருக்கிறாள். ஆனால் அந்தக் காட்டுப் பிரதேசத்திலே அப்போது அவளோடு யார் இருந்திருக்க முடியும்? அண்டையில் இருந்தவன் ஒரு ஆண்பிள்ளை — இந்தச் சந்தர்ப்பத்தில் அவனை அவள் உதவிக்குக் கூப்பிட்டுக் கொள்ள முடியுமோ? நீங்களும் பெண்களாக இருந்தால் தெரியும்—அவனைக் கூப்பிடமுடியாது என்றதும் அவள் குழந்தையைக் கொன்றுவிட்டதாகவும் குற்றம் சாட்டுகிறீர்கள். ஆனால் குழந்தை தண்ணீரிலே பிறந்தது — வழுக்கி விழுந்து விட்டாள் தாய் — ஆற்றிலே விழுந்து விட்டாள். அவளால் நகர முடியவில்லை. ஆனால் அவள் ஆற்றுப் பக்கத்திலே என்ன செய்து கொண்டிருந்தாள் என்று கேட்கலாம்? அவள் பண்ணையிலே வேலைக்காரி; அடிமை. பூரணகர்ப்பமாக இருந்த காலத்திலும் கூட அவள் வேலையைச் சரிவரச் செய்து வந்தால்தான் கூலியும் உணவும் கிடைக்கும் அவளுக்குத் தினசரி வேலைகளுக்கு ஜூனிபர் விளக்குமாறு தேவையாக இருக்கிறது — ஜூனிபர் குச்சிகள் பொறுக்க ஆற்றைக் கடந்து செல்லுகிறாள் அவள். நடுவிலே விழுந்து விடுகிறாள். நடக்க முடியவில்லை; ஜலத்திலே பிரச வித்து விடுகிறாள். குழந்தை ஜலத்திலே விழுந்து திக்குமுக்காடிப் பிராணனை விடுகிறது.''

ஹேயர்தாலின் மனைவி சற்று ஓய்ந்தாள். கோட்டில் கூடியிருக் கிறவர்களையும் நீதிபதியையும் பார்த்தாள். அவர்கள் முகபாவங்

களில் இருந்து தன் பிரசங்கத்தில் தனக்குப் பிரமாதமான வெற்றி தான் என்று அவளுக்குத் தெரிகிறது. எல்லோரும் மௌனமாக இருக்கிறார்கள் — பார்ப்ரோ கண்களைத் துடைத்துக் கொள்கிறாள். உணர்ச்சி வசப்பட்டவளாக. கடைசியில் பின்வரும் வார்த்தை களுடன் ஹேயர்தாலின் மனைவி தன் பிரசங்கத்தை முடிக்கிறாள்: "ஸ்திரீகளாகிய எங்களுக்கும் உணர்ச்சிகள் இருக்கின்றன — இதயம் இருக்கிறது. என் குழந்தைகளை அன்னியர்கள் வசம் ஒப்பிவித்துவிட்டு இவளுக்கு சாக்ஷி சொல்ல, இந்த துர்ப்பாக்கிய வதிக்கு சாக்ஷி சொல்ல, நான் வந்தேன். ஆண்களின் சட்டங்கள் பற்றிப் பெண்கள் சிந்திக்கக் கூடாது என்று கட்டுப் படுத்த முடியாது. நான் நினைப்பது என்னவென்றால் — இவள் செய்யாத குற்றத்துக்காக இதுவரை இவள் அனுபவித்து விட்ட தண்டனை போதும். அவளை விட்டு விடுங்கள். மேலும் தண்டிக்காதீர்கள். நானே அவளை வேலைக்கு வைத்துக் கொள்கிறேன். என்னிடம் அவள் சிறந்த தாதியாக இருப்பாள்."

ஹேயர்தாலின் மனைவி சாக்ஷிக் கூண்டிலிருந்து இறங்கினாள்.

அப்போது நீதிபதி சொன்னார்: "ஒரு நிமிஷத்திற்கு முன் நீதானே சொன்னாய்—குழந்தைகளைக் கொன்றவர்கள்தான் நல்ல தாதிகளாவார்களென்று........."

இப்படிப் பேச்சுக்குச் சொன்னாரே தவிர நீதிபதிக்கும் இஷ்ட மில்லை—பார்ப்ரோவைக் கடுமையான தண்டனைக்குள்ளாக்க. மத குருவைப்போல மென்மையான சுபாவம் படைத்தவர் அவர். அவருக்கும் இதயம் இருந்தது—அதிலே இரக்கமும் இருந்தது. சர்க்கார் தரப்பு வக்கீல் சாக்ஷியை இரண்டொரு கேள்விகள் கேட்ட போது நீதிபதி அவற்றைச் சரியாகக் கவனிக்கக்கூட இல்லை— ஏதோ குறிப்புகள் எழுதிக்கொண்டு உட்கார்ந்திருந்தார்.

நண்பகலுக்குப் பிறகு அதிக நேரம் நடவடிக்கைகள் நீடிக்க வில்லை. சாக்ஷிகளும் அதிகம் இல்லை. கேஸூம் சுலபமான கேஸ் தான். ஆக்ஸெல் ஸ்டிராம் நல்லதே நடக்கும் என்கிற நம்பிக்கை யுடன் உட்கார்ந்திருந்தான். ஆனால் சர்க்கார் வக்கீலும் ஹேயர் தாலின் மனைவியும் தன்னைக் குற்றவாளியாக்கித் தண்டிக்க முயலு கிறார்கள் என்கிற எண்ணம் அவன் மனசில் இடம் பெற்று— அவனைப் பயமுறுத்தியது. குழந்தை செத்ததை அதிகாரிகளுக்கு அறிவிக்காமல் அதைப் புதைத்ததுபற்றிப் பிரமாதப்படுத்திப் பேசினார்கள் அவர்கள் இருவரும். திருப்பித் திருப்பி இதைப்

பற்றியே குறுக்கு விசாரணை செய்தார்கள். தத்துப் பித்தென்று அவன் உளறியிருப்பான்—ஆனால் அந்த சமயத்தில் கெய்ஸ்ஸலர் கோர்ட்டில் உட்கார்ந்திருப்பது அவன் கண்ணில்பட்டது. ஆமாம்; கெய்ஸ்ஸலரேதான். அவனைப் பார்த்தவுடனேயே தைரியம் வந்து விட்டது ஆக்ஸெலுக்கு. கெய்ஸ்ஸலர் அவனைப் பார்த்து தைரிய மூட்டுவதற்காகத் தலையை ஆட்டினான். சட்டம் தன்னை ஒன்றும் செய்துவிடாது என்கிற தைரியம் பிறந்தது ஆக்ஸெலுக்கு.

ஆம். கெய்ஸ்ஸலர் நகருக்கு வந்திருந்தான். தன்னை சாக்ஷியாக கூப்பிடச் சொல்லவில்லை அவன். இருந்தாலும் வந்திருந்தான். கேஸ் எடுத்துக் கொள்வதற்குமுன் இரண்டு நாள் செலவழித்து எல்லா விஷயங்களையும் பூராவும் விசாரித்து அறிந்துகொண்டான். மேன்லாந்தில் ஆக்ஸெல் தன்னிடம் தெரிவித்த விவரங்களுடன் தெரிந்து கொண்டதை ஒப்பிட்டுப் பார்த்தான். கேஸுக்காகத் தயாரித்திருந்த பேப்பர்கள் பலவும் அவனுக்குத் திருப்தி யளிப்பவையாக இல்லை. லென்ஸ்மாண்டு ஹேயர்தால் குறுகிய மனப்பான்மையுடையவன். ஆக்ஸெலும் சேர்ந்தே இக்குற்றத் தைச் செய்திருந்தான் என்று சொல்லுகிறமாதிரியில் பேப்பர்களைத் தயாரித்திருந்தான். அவனுக்குக் காட்டுப் பிராந்தியத்திலே உழவு செய்து காடு திருத்தி வாழும் குடியானவனின் வாழ்க்கை யைப்பற்றி என்ன தெரியும்? ஆக்ஸெல் அந்தக் குழந்தையை நம்பியிருந்தவன்—அதை அவனா கொன்றிருப்பான்?

கெய்ஸ்ஸலர் சர்க்கார் வக்கீலுடன் பேசினான்—அங்கே பேசிக் குறுக்கிடவேண்டிய அவசியம் இருந்ததாகத் தெரியவில்லை. ஆக்ஸெல் தன் பண்ணைக்குத் திரும்பிப் போகவேண்டும். அதற் குத் தான் உதவவேண்டும் என்று எண்ணினான் கெய்ஸ்ஸலர். ஆனால் அவன் உதவி தேவைப்படாதுபோல இருந்தது. பார்ப் ரோவையே விட்டு விடுவார்கள் போல இருந்தது. அவளையே விட்டு விட்டால் இவனை என்ன செய்ய முடியும்? சாக்ஷிகள் என்ன சொல்லுகிறார்களோ?

சாக்ஷிகளும் அதிகம் இல்லை. ஒலினை யாரும் கூப்பிடவில்லை. லென்ஸ்மாண்டு, இரண்டொரு சட்ட நிபுணர்கள், இரண்டொரு மருத்துவ நிபுணர்கள், கிராமத்திலிருந்து இரண்டு குட்டிகள் இவர்களை மட்டும்தான் சாக்ஷியாக அழைத்திருந்தார்கள். சாக்ஷி களை எல்லாம் விசாரித்தானதும் மத்தியான இடைவேளை வந்து விட்டது. மீண்டும் ஒருதரம் சர்க்கார் வக்கீலிடம் போய்ப் பேச்சுக் கொடுத்தான் கெய்ஸ்ஸலர். பார்ப்ரோவை தண்டிக்கமாட்டார்கள்

என்று அபிப்பிராயப்பட்டான் சர்க்கார் வக்கீலே. லென்ஸ் மாண்டின் மனைவிதான் ஆணித்தரமாகப் பேசிவிட்டாளே! நீதிபதி சொல்வதைப் பொறுத்தது இனி.

"இந்தப் பெண்ணிடம் உனக்கென்ன அனுதாபம்?" என்று கேட்டான் சர்க்கார் வக்கீல்.

"கொஞ்சம் அனுதாபம். ஆனால் என் அனுதாபம் பூராவும் அந்த மனிதனிடன்தான்."

"அவள் உன்னிடம் வேலை பார்த்தாளா?"

"அவள் என்னிடம் வேலை பார்க்கவில்லை."

"நான் அந்தப் பெண்ணைப் பற்றிப் பேசினேன். அவளிடம் தான் கோர்ட்டுக்கு அனுதாபம்!"

"அவனைப் பற்றி எனக்கு அவ்வளவாக அக்கறையில்லை."

"அவளைப் பற்றி என்ன சொல்வது? திருட்டுத்தனமாக அந்தக் குழந்தையின் சடலத்தை எடுத்து அவன் புது இடத்தில் புதைத்தான். அது தவறான காரியம்தானே?" என்றான் சர்க்கார் வக்கீல்.

"முதலில் அதைச் சரிவர புதைக்கவில்லை அவள் — ஆகவே அதை எடுத்துச் சரிவரப் புதைத்தான்" என்றான் கெய்ஸ்ஸலர்.

"சரியானபடி தோண்டிப் புதைக்க ஸ்திரீக்குப் பலம் இல்லை. அதுவும் பிரசவத்துக்குப் பிறகு அவள் மிகவும் பலஹீனமாக இருந்திருப்பாள். தவிரவும் குழந்தையைக் கொல்கிற தாய்களைப் பற்றி இப்போதெல்லாம் அவ்வளவு கடினமாக நடத்துவதில்லை சட்டம். என்னைப் பற்றியவரையில் அவளைக் குற்றவாளி என்றே நான் சொல்ல மாட்டேன். அவளைத் தண்டிக்க வேண்டும் என்று நான் கேட்டுக் கொள்ளப்போவதில்லை" என்றான் சர்க்கார் வக்கீல்.

"சந்தோஷம்!" என்று சொன்னான் கெய்ஸ்ஸலர்.

வக்கீல் தொடர்ந்து சொன்னான்: "தனி மனிதன் என்கிற விதத்தில் என் அபிப்பிராயத்தையும் சொல்கிறேன் — கல்யாண மாகாத தாய் எவளையும் குழந்தையைக் கொன்றதற்காக தண்டிக்க வேண்டும் என்று நான் சொல்லமாட்டேன்."

"ரொம்ப நல்லது. ஹேயர்தாலின் மனைவியின் அபிப்பிராயமே தான் சர்க்கார் தரப்பு வக்கீலின் அபிப்பிராயம் இந்த விஷயத்தில் என்று அறிய எனக்கு மிகவும் சந்தோஷம்தான்" என்றான் கெய்ஸ்ஸலர் கேலியாக.

"ஓ! அந்தப் பெண்மணி!... இருந்தாலும் அவள் சொன்ன திலும் கொஞ்சம் உண்மை இருக்கத்தானே இருக்கிறது. இப்படி இந்த ஸ்திரீகளைத் தண்டித்து என்ன பலன்? கல்யாணமாகாத தாய்கள் முன்கூட்டியே கஷ்டப்பட்டவர்கள். சமுகத்தின் கண்டனத்தால் தலை தொங்கலிட அவமானப்பட்டவர்கள். வேறு தண்டனை எதற்கு?"

கெய்ஸ்ஸலர் எழுந்தான். சொன்னான்: "உண்மைதான். ஆனால் சாகிற குழந்தைகளின் விஷயம் என்ன?"

"உண்மையே! அந்தக் குழந்தைகள் அப்படிச் சாவது பரிதாபகரமான விஷயம்தான். ஆனால் அப்படி அவர்கள் சாவதும் ஒருவிதத்தில் நல்லதுதானே! தகப்பன் பேர் தெரியாத குழந்தைகள் உலகில் சிரமப்படுவார்கள் — அநேகமாக அவர்கள் நல்லபடியாக வாழவே முடியாது" என்றான் சர்க்கார் வக்கீல்.

கெய்ஸ்ஸலருக்கு அந்த சர்க்கார் வக்கீலின் அசட்டுத்தனமான பேச்சு கோபத்தை மூட்டியது. சற்றுக் கிண்டலாகவே சொன்னான்: "எராஸ்மஸுக்குத் தகப்பன்பேர் தெரியாது."

"எந்த எராஸ்மஸ்?"

"ராட்டர்டாம் எராஸ்மஸ்தான்."

"ம்..."

"லியனார்டோகூடக் கலியாணமாகாத தாய்க்குப் பிறந்தவன்?"

"லியனார்டோ டாவின்சியுமா? நிஜமாகவா? அவர்கள் விதிக்கு விலக்கானவர்கள். அவ்வளவுதான். அதற்காக......"

கெய்ஸ்ஸலர் குறுக்கிட்டான்: "மிருகத்துக்கும் பக்ஷிக்கும் சட்டங்கள் இயற்றுகிறோம் நாம் — அவற்றின் வம்சத்தைக் காப்பாற்ற. நம்முடைய குழந்தைகளைப் பற்றிக் கவலைப்பட மட்டும் நமக்குத் தெரியவில்லை."

சர்க்கார் வக்கீல் தன் மேஜைமேலே கிடந்த பத்திரங்கள் எதையோ எடுத்துப் படிக்க ஆரம்பித்தான் — அதாவது இன்னமும் இதுபற்றிப் பேசிக்கொண்டிருக்கத் தனக்கு நேரமில்லை என்கிறமாதிரி "ஆமாம்...ஆமாம்...இல்லை...இல்லை" என்றான் வேறு எங்கேயோ கவனமாக.

கெய்ஸ்ஸலர் வணக்கம் செலுத்திவிட்டுப் போனான். ஆனால் வெளியே போய்விடவில்லை. கோர்ட்டிலேயே உட்கார்ந்து காத்துக் கொண்டிருந்தான். அந்தக் கேஸைத் தன்னிஷ்டத்துக்குத் திருப்ப

அவனுக்குச் சக்தியிருந்தது. அவன் இஷ்டப்பட்டிருந்தானுனல் சில தகவல்களைச் சொல்லி, சர்க்கார் வக்கீலையும் கோர்ட்டையும் பயமுறுத்தலாம். பார்ப்ரோவா தவறு செய்யாதவள்! ஒருவனுடைய ஷர்ட்டைக் கிழித்து ஜுனிபர் ஈர்க்குகள் கொணரத் தயார் செய்தாள் அவள். அது சரி—பெர்கன் ஹார்பரில் கண்டெடுத்த குழந்தை யாருடையது? அவசியமானுல் ஒழிய இந்தத் தகவல்களைக் கொடுப்பதாக கெய்ஸ்ஸலர் தீர்மானிக்கவில்லை. இதெல்லாம் சொல்லாமலே கேஸ் ஆக்ஸெலுக்குச் சாதகமாகவேதான் போய்க் கொண்டிருந்தது. சர்க்கார் வக்கீல்கூட பார்ப்ரோ — கக்ஷியில் தானே இருந்தான்!

மீண்டும் கோர்ட்டில் கூட்டமாகிறது. கேஸ் தொடங்குகிறது.

சிறு நகரில் பார்ப்பதற்கு உல்லாஸ நாடகம் இது. சர்க்கார் வக்கீல் மிகவும் அழுத்தமாகத் தன் கக்ஷியை எடுத்துச் சொல்லுகிருன். பிரதிவாதியின் வக்கீல் அமோகமாகப் பிரசங்கமாரி பொழிகிருன். நீதிபதியும் ஜூரிகளும் அவர்கள் சொல்வதை எல்லாம் கேட்டுக்கொண்டு உட்கார்ந்திருக்கிருர்கள்.

அப்படியும் சுலபத்தில் தீர்மானித்து முடிவு கட்டிவிடுகிற விஷயம் அல்ல அது. சர்க்கார் வக்கீல் பார்ப்பதற்கும் நன்ருக இருந்தான். நன்ருகவும் பேசினுன்—குற்றவாளியிடம் அவனுக்கு அனுதாபமும் இருந்தது. ஆனுல் சமீபத்தில் நடந்த ஏதோ ஒன்று அவனுக்குக் கோபமூட்டுகிறது. தவிரவும் சர்க்கார் சார்பில் அவன் தன் உத்தியோகத்தைக் காப்பாற்றிக் கொள்ளவும் வேண்டாமா? அதற்கேற்றுற்போல் அவன் பேசவேண்டாமா? முன்மாதிரியில்லை அவன்—குற்றவாளியின் குற்றத்தை ருசுப்பிக்க வெகுவாகப் பாடுபட்டான் அவன். குற்றம் பெரிய குற்றம்தான் — சாக்ஷிகள் சொல்லியதிலிருந்து அது தெளிவாகவே தெரிந்தது. நீதிபதிகளும் ஜூரர்களும் தீர்மானிக்கவேண்டிய விஷயம் அது. ஆனுல் இதில் மூன்று விஷயங்கள் கவனிக்க இருந்தன — முதலில், குழந்தையின் பிறப்பு மறைத்து வைக்கப்பட்டது. இதைப்பற்றி சந்தேகத்துக்கு இடமிருந்ததாகத் தெரியவில்லை. இரண்டு பேருடைய நடவடிக்கைகளிலிருந்தும் அது தெளிவாகவே தெரிந்தது. இரண்டாவதாக அந்தச் சிசுவின் உடலைச் சுற்றியிருந்த துணி — அந்தத் துணியை அந்தப் பிரதிவாதி எதற்காக முன்கூட்டியே எடுத்துச் சென்ருள்? இப்படி உபயோகப்படுத்துவது என்று தீர்மானித்து எடுத்துப்போனுளோ? இதைப் பற்றியும் விரிவாகப் பேசினுன். மூன்ருவதாக மதகுருவுக்கோ,

லென்ஸ்மாண்டுக்கோ, தெரிவிக்காமல் அந்தச் சிசுவின் சடலத்தைப் புதைத்ததுதான் பெரிய சந்தேகாஸ்பதமான விஷயம். இது விஷயத்தில் அந்த ஸ்திரீயைவிட அந்த மனிதனுக்கே பொறுப்பு அதிகம். இதுபற்றிச் சரியானமுடிவுக்கு வரவேண்டியது கோர்ட்டின் பொறுப்பு. ஆனால் அவனையும் குற்றவாளியென்று தீர்மானிக்குமுன் பார்ப்ரோ குற்றவாளியா அல்லவா என்பது தீர்மானிக்கப்பட வேண்டும்.

"ம்..." என்று கோர்ட்டில் யாரோ தொண்டையைக் கனித்துக் கொண்டான். தனக்கு ஆபத்து வந்துவிட்டது என்றுதான் தோன்றிற்று ஆக்ஸெல் ஸ்டிராமுக்கு. ஆனால் கெய்ஸ்ஸலர் இப்படி அலக்ஷியமாக தொண்டையைக் கனைத்துக்கொண்டது அவனுக்குத் தைரியமூட்டியது. தவிரவும் சர்க்கார் தரப்பு வக்கீல் தன் பேச்சை இதற்குள் முடித்துவிட்டான் தன் உத்தியோகத் துக்கு ஏற்றவகையில் பேசியாகிவிட்டது என்று தீர்மானித்து நிறுத்திக்கொண்டான். பேச்சிலே ஒரு திருப்பம் திரும்பி, பார்ப்ரோவைத் தண்டிக்கத்தான் வேண்டும் என்றுதான் வற்புறுத்தவில்லை என்று சொல்லி முடித்தான். நல்லதுதான்—விசாரணை முடிந்துவிட்டது என்று எண்ணினான் ஆக்ஸெல்.

பிரதிவாதிகளின் சார்பில் வாதிக்க வக்கீலின் பேச்சு தொடங்கியது. அவன் வாலிபன். இந்தத் திருப்திகரமான கேஸை நடத்த அவன் திருப்திகரமான வக்கில்தான். குற்றம் செய்யாதவர்களுக்கு வக்கீல் எதற்கு என்று கேட்கிற தொனியில் பேசினான் அவன். உண்மையில் அவன் சொல்ல எண்ணியிருந்ததில் முக்கால்வாசி விஷயங்களை ஹேயர்தாலின் மனைவி உருக்கமாகச் சொல்லி முடித்துவிட்டாள். ஆகவே அவள் சொன்னதையே தான் அவன் திருப்பிச் சொல்லவேண்டி யிருந்தது. நீதிபதி கெட்டிக்காரனாக இருந்தால் அவன் பேச்சைப் பாதியிலேயே கத்திரித்திருப்பான். சமூகத்தையும் அதன் இன்றைய தீம்புகளையும் பற்றி அவன் எவ்வளவு உருக்கமாகப் பேசியிருப்பான்? பார்ப்ரோவின் ஜீவிய சரித்திரம் பற்றி உருக்கமாகச் சொன்னான். அவள் நல்லவள் என்று ஹேயர்தாலின் மனைவி—அவள் யசமானியே சொன்னாள்—அதைவிடச் சிறந்த சாக்ஷியம் வேறு என்ன வேண்டும்? அது தவிர பார்ப்ரோவை வேலைக்கு வைத்துக்கொண்ட பெர்கன் நகரத்து வாலிபர்கள் இருவர் தந்திருந்த சர்ட்டிபிகேட்டையும் படித்துக் காண்பித்தான் வக்கீல். பிறகு காட்டுப் பிரதேசத்திலே ஒரு பண்ணையில் வேலைக்கு அமர்ந்தாள் பார்ப்ரோ. தான் கர்ப்பிணி

என்பதை மறைத்து வைத்தாளா அவள்?—இல்லவே இல்லை. அது அங்கு வந்தவர்களுக்கெல்லாம் தெரிந்த விஷயம்தான். பிரசவத்தையும் அவள் மறைக்கவில்லை. அந்த விஷயத்தையும் அவள் மறைக்கவில்லை. அந்தச் சமயம் அங்கு யாருமில்லை. யாரிடம் போய்ச் சொல்லிக்கொள்வாள் அவள்? மறைப்பதா? யாரிடமிருந்து எதை மறைப்பது? அங்கு யார் இருந்தார்கள்?

சரி. குழந்தை பிறந்தது. தண்ணீரில் விழுந்து மூச்சுத்திணறி இறந்துவிட்டது. பிரசவமே தண்ணீரில்தான் ஆயிற்று—அவளால் அதைக் காப்பாற்ற முடியவில்லை. வெகுநேரம் கழித்துத்தான் அவளாலேயே நகர முடிந்தது. வேண்டுமென்றே அதைச் கொன்றாள் அவள் என்று ருஜுப்பிக்க அந்தச் சிறு சடலத்தின்மேல் குறிகள் ஏதாவதிருந்தனவா? இல்லை. தற்செயலாக, விதிவசமாக நேர்ந்துவிட்ட சாவு அது—வேறல்ல. ஏதோ துணி எடுத்துப் போயிருந்தாள் என்பது பற்றி சர்க்கார் தரப்பு வக்கீல் அமர்க்களம் செய்தார். வீட்டு வேலைக்காரி வாறுகோல் செய்யக் குஞ்சி தேடப்போனாள். அதை எப்படிக் கொணருவாள்—துணியில்போட்டுக் கட்டி எடுத்து வரத் துணி எடுத்துப் போனாள். இது மிகவும் சின்ன விஷயம்—தப்பாக அர்த்தம் செய்துகொள்ள வேண்டிய விஷயமே யல்ல.

ஒரு விஷயம் இன்னும் தெளிவாக்க வேண்டியதிருந்தது. அவளுடைய யசமானன் அந்த சந்தர்ப்பத்தில் அவளிடம் பிரியமாக இருந்தானா? கர்ப்பிணிகளைப் பார்த்துக் கொள்ள வேண்டிய அளவு கவனத்துடன் அவளைக் கவனித்துக் கொண்டானா? அந்த மனிதனைப்பற்றித் திருப்திகரமாகவே அவள் சொன்னாள். அதுவே அவளுடைய நல்ல குணத்துக்கு ஒரு சான்று. அந்த மனிதன் ஆக்ஸெல் ஸ்டிராமைப் பற்றித் தவறுதலாக எதுவும் சொல்லவில்லை. அவள் குற்றத்தை மிகைப்படுத்திக்காட்ட அவனும் முயலவில்லை. அவன் செய்தது சரிதான்—நியாயந்தான்—ஏனென்றால் அவள் குற்றவாளி என்றால் அவனும் குற்றவாளிதான்.

எல்லாவற்றையும் கவனித்துப் பார்க்கும்போது, இந்தப் பெண்ணிடம் யாருக்கும் அனுதாபம் தோன்றாமல் இராது. நீதி வழங்குங்கள் என்று சொன்னால் போதும். அவள் குற்றவாளி யல்ல. அந்த மனிதனும் அவளும் கல்யாணம் செய்து கொண்டு விடலாம். வேறு பல காரணங்களால் அது நடைபெறவில்லை. அந்தக் குழந்தையைப் புதைக்க அவன் சட்டையை அவனே

கொடுத்தானே? அப்படிக் கொடுத்திருந்தானுல் அது அவன் குற்றத்தையே சுட்டிக் காட்டும்...

மீண்டும் உரக்க "ஹும்..." என்று கோர்ட்டில் ஒருவன் தொண்டையைக் கனைத்துக் கொண்டான். நீதிபதி முகத்தைச் சுளித்துக் கொண்டார். எல்லோரும் கெய்ஸ்ஸலரைத் திரும்பிப் பார்த்தார்கள். ஆக்ஸெலுக்குப் போன உயிர் திரும்பி வந்த மாதிரி இருந்தது.

வக்கில் தொடர்ந்து பேசினுன். இந்த விஷயத்திலும் சந்தேகத் துக்கிடமில்லாது போய்விட்டது. அவன்தான் துணியைக் கொடுத்தான் என்றுசொல்லி பார்ப்ரோ குற்றத்தை அவன் மேலும் தள்ளியிருக்கலாம். அவள் அப்படிச் செய்யவில்லை. அதுபற்றி அவனுக்குத் தெரியவே தெரியாது என்று ஆரம்பத்திலிருந்தே கூறிவிட்டாள். ஒரு காரணத்துக்காக அவள் அதை எடுத்துப் போனுள் — பெரிய விஷயம் என்ன அது? அப்படி இரக்கமற்ற மனசு படைத்தவளாக இருந்தால், அவள் துணியேயில்லாமல் அதைப் புதைத்திருக்க மாட்டாளா? அல்லது பிறந்த மேனியாக அதை எங்கேயாவது தூக்கி எறிந்திருக்க மாட்டாளா? கையிலிருந்த துணியால் போர்த்திப் புதைத்தாள். இது ஒரு பெரிய குற்றமா? அவளைக் குற்றவாளி என்று தண்டிக்கக் காரணம் எதுவும் இருந்த தாகத் தெரியவில்லை. குழந்தை பிறந்ததை சர்க்கார் அதிகாரிக்குத் தெரிவிக்காதது குற்றமே — ஆனுல் அது அவள் குற்றமல்ல. அவன் குற்றம் அது. அதுகூடத் தெரிந்து செய்த குற்றம் அல்ல. சட்டம் என்று சொல்லி, மனிதனைத் தண்டித்து விடுவது சட்டத்தின் சாரம் அல்ல. மீண்டும் இம்மாதிரித் தவறு நேர்ந்து விடாதபடி பார்த்துக் கொள்வதுதான் சட்டத்தின் அஸ்திவாரம் — அதுதான் நீதி. பெரிய குற்றம் ஒன்றுமில்லை, பிரமாதமாக தண்டித்து சிறையில் போட.

இந்தப் பெண்ணைக் குற்றவாளி என்று தீர்மானிப்பது தவறு. குற்றவாளிகளின் எண்ணிக்கையை அதிகரிப்பதற்காக என்று ஏற்பட்டவை அல்ல சட்டங்களும், கோர்ட்டுகளும். இதெல்லா வற்றையும் உத்தேசித்து நீதிபதியும் ஜூரர்களும் இவளைத் தண்டிக்கமாட்டார்கள் என்று நம்புகிறேன் எனக் கேட்டுக் கொண்டான் வக்கில். சர்க்கார் தரப்பு வக்கில்கூட அவளைத் தண்டிக்க வேண்டும் என்று வற்புறுத்தவில்லை—அதற்கும் நன்றி என்றுன். இதைச் சொல்லிவிட்டுப் பிரதிவாதியின் வக்கில் உட்கார்ந்தான்.

அதற்குப் பிறகு அதிக நேரம் ஆகவில்லை. நீதிபதி முடிவுரையில் இரண்டு வக்கீல்களும் சாக்ஷிகளும் சொன்னதை ஒழுங்கு படுத்திச் சொன்னான். புதிதாக எதுவும் இல்லை. இதற்குள் விளக்கு ஏற்ற வேண்டிய நேரமாகிவிட்டது. ஆகையால் அந்த வெளிச்சம் போதவில்லை. நீதிபதி தன் குறிப்புகளை வாசிக்க மாட்டாமல் திணறினார். ஜூரர்களும் வேறு அறையில் போய் சில பிரச்னைகளை அலசினார்கள். ஐந்து நிமிஷங்களுக்குள் எல்லாக் கேள்விகளுக்கும் "இல்லை. இல்லை" என்று பதில் சொல்லிக் கொண்டு திரும்பிவிட்டார்கள்.

பார்ப்ரோ அந்தக் குழந்தையைக் கொல்லவில்லை.

அதற்குப் பிறகு நீதிபதி சில வார்த்தைகள் சொன்னார். பார்ப்ரோவை விடுதலை செய்தார்கள். நாடகம் முடிந்துவிட்டது. கோர்ட்டும் கலைந்தது.

கெய்ஸ்ஸலர் வந்து ஆக்ஸெலைத் தொட்டான்: "ஒரு வழியாக முடிந்தது."

"ஆமாம்."

"உன் பொழுது காரணமில்லாமல் வீணாயிற்று."

"ஆமாம்." ஆக்ஸெல் அந்த அபாயத்திலிருந்து விடுபட்டு சுபாவமாகப் பேச இவ்வளவு நேரம் ஆயிற்று. "நல்ல வேளை இப்படி முடிந்தது!"

"இப்படி முடியாமல் வேறு எப்படியும் முடிந்திருக்க முடியுமோ?" என்றான் கெய்ஸ்ஸலர். அப்படி முடித்திருந்தார்களானால் அவர்களைச் சும்மாவிட்டிருப்பேனா நான் என்று கேட்கிற தோரணையில் இருந்தது கெய்ஸ்ஸலரின் குரல். ஆனால் இந்தக் கேஸையே பின் நின்று நடத்திவைத்தது கெய்ஸ்ஸலரே தானே?

எதுவானால் என்ன? கெய்ஸ்ஸலர் தன் கக்ஷி என்பதுபற்றி ஆக்ஸெலுக்குச் சந்தேகமேயில்லை. "உனக்கு என் பூரண நன்றி" என்றான்.

"எதற்கு?"

"எல்லாவற்றிற்கும் தான்."

அதைக் காதிலேயே போட்டுக் கொள்ளவில்லை கெய்ஸ்ஸலர். இது என்ன சின்ன விஷயம் என்பதுபோலச் சொன்னான். "நான் எதுவும் செய்யவில்லை. தானாகவே சரியாகிவிட்டது." அப்படியும் அவன் தனக்கு நன்றி செலுத்தியதுபற்றி கெய்ஸ்ஸலருக்குத்

திருப்திதான். "இங்கு நின்று பேசிக் கொண்டிருக்க எனக்கு நேரமில்லை. நாளை திரும்புகிருயா? நல்லது. குட் பை. போய் வருகிறேன்" என்று கிளம்பிவிட்டான் கெய்ஸ்ஸலர்.

திரும்புகிற கப்பலில் ஹேயர்தாலின் மனைவியும் பார்ப்ரோவும் ஆக்ஸெலுடன் வந்தார்கள். அவர்களுடன் சாக்ஷி சொன்ன பெண்கள் இருவரும்கூட வந்தார்கள்.

"எல்லாம் திருப்திகரமாக முடிந்ததுபற்றிச் சந்தோஷம் தானே!" என்று கேட்டாள் ஹேயர்தாலின் மனைவி.

லென்ஸ்மாண்ட் சொன்னன்: "நான் உத்தியோகத்தை ஒப்புக்கொண்டு இது இரண்டாவது கேஸ். முதல் கேஸ்— ஸெல்லன்ரா இங்கர் கேஸ். இப்போது இது. இந்தமாதிரி நடக்கக்கூடாது—நீதி நிர்வாகம் தவறவிடக்கூடாது."

ஆனல் தன் பேச்சு ஆக்ஸெலுக்குத் திருப்தி அளித்திராது என்பது ஹேயர்தாலின் மனைவிக்குத் தெரியாதா என்ன? "நான் நேற்று சொன்னதெல்லாம் அவசியம் என்பதற்காக சொன்னேனே தவிர வேறு அல்ல?"

"ம்......ம்......"

"உனக்கே அது தெரிந்திருக்கும் என்று எண்ணுகிறேன். உன்னைக் கஷ்டப் படுத்தவேண்டும் என்பதற்காகச் சொல்லவில்லை நான். உன்னைப்பற்றி எனக்கு எப்பவுமே நல்ல அபிப்பிராயம்தான்."

"ஓ!" என்முன் ஆக்ஸெல். அவள் பேசியது அவனுக்குத் திருப்தியாகவே இருந்தது.

"ஆம். நான் சொல்வது உண்மைதான். உன்பேரில் அப்படித் திரும்பினல்தான் பார்ப்ரோவை விடுதலை செய்வார்கள் — அவளை விடுதலை செய்தால் உன்னையும் தண்டிக்க முடியாது."

"உங்களுக்கு என் நன்றி."

"நான்தான் ஒவ்வொருவரிடமும் போய்ச் சொன்னேன். உங்கள் இருவருக்கும் உதவி செய்தேன்."

"ஆமாம்."

"நான் உனக்குக் கெடுதி செய்ய எண்ணியதாக நீ நினைத்தாயோ — இல்லையே! உன்னைப்பற்றி எனக்கு எப்பொழுதுமே நல்ல அபிப்பிராயம்தான்."

கோர்ட்டில் நின்று அவமானப் பட்டதற்கெல்லாம் எதிராக இப்படிப்பட்ட பேச்சு ஆக்ஸெலுக்கு ஆனந்தமாக இருந்தது.

அடுத்த தடவை கிராமத்துக்குப் போகும்போது ஹேயர்தாலின் மனைவிக்குப் புது மாமிசம் கொண்டுபோய்த் தரவேண்டும் என்று தீர்மானித்தான்.

ஹேயர்தாலின் மனைவி தான் கொடுத்த வாக்கை நிறைவேற்றினாள். பார்ப்ரோவைத் தன்னிடமே வேலைக்கு வைத்துக் கொண்டாள். கப்பலில்கூட அவளை அவள்தான் கவனித்துக் கொண்டாள். அவள் பட்டினியோ பசியோ கிடக்காமல் பார்த்துக் கொண்டாள். கப்பல் மாலுமிகளுடன் அவள் அசடுவழியாது பார்த்துக்கொண்டதும் அவள்தான். மாலுமியும் அவளும் பேச ஆரம்பித்ததும் முதலில் அவளைக் கூப்பிட்டுப் புத்தி சொன்னாள்: "நடந்ததெல்லாவற்றையும் மறந்துவிட்டு இப்படி..." என்று கடிந்துகொண்டாள்.

"ஒரு விநாடிதான்—அவள் பெர்கன் நகரிலிருந்து வருகிறாள்."

ஆக்ஸெல் அவளுடன் பேசவில்லை. அவள் சற்றே வெளுத்து முன்னைக்கிப்போது பிரகாசமாக இருந்தாள் என்று கவனித்தான். அவள் பற்களும் ஒழுங்காக இருந்தன. அவன் மோதிரங்களை அணிந்துகொண்டிருக்கவில்லை அவள்.

இதோ ஆக்ஸெல் தன் பண்ணையை நோக்கி நடந்துகொண்டிருக்கிறான். மழை, காற்று — எல்லாம் அவனுக்குத் திருப்தியளிக்கிறது. அறுவடை யந்திரமும், ஏர்க்கலப்பையும் அவனுக்காகக் காத்திருந்தன — அதைப் பார்த்துவிட்டான் அவன். ஓ! அந்த கெய்ஸ்ஸலர். அவைபற்றி அவன் ஒரு வார்த்தையும் சொல்லவில்லையே! கெய்ஸ்ஸலரைப் புரிந்துகொள்ளக் கூடியவர் யார்!

# 8

உண்மையில் ஆக்ஸெலுக்கு ஓய்வு எடுத்துக்கொள்ள அதிக நேரம் கிடைக்கவில்லை. இலையுதிர் காலத்துக் காற்று அவனுக்கு அதிகத் தொந்திரவு கொடுத்தது. தானாக ஏற்றுக் கொண்ட வேலைதான் அது. தந்தி மரங்கள் பல சரிந்துவிட்டன. அவற்றைச் சரிப்படுத்த அவனுக்கு வேலை நிறையவே இருந்தது. வேலையை ஒத்துக் கொண்டபோது, அவன் பணத்துக்கு ஆசைப் பட்டு அதை ஏற்றுக் கொண்டுவிட்டான். ஆரம்பத்திலிருந்தே அது தொந்தரவாகத்தான் இருந்தது. தந்தி இலாகாவின் ஆயுதங்களை ப்ரேட் ஓல்ஸனிடமிருந்து வாங்கப் போனபோது அவனை வாயில் வந்தபடி வைதான் ப்ரேட்: "நான்தானே போன மாரிக் காலத்தில் உன் உயிரைக் காப்பாற்றினேன்?"

"ஒலைன் காப்பாற்றினாள் என்னை."

"அப்படியா? என் தோள் மேலேயே வழி நெடுக உன்னைத் தூக்கி வரவில்லையா நான்? கோடைக் காலத்தில் என் வீட்டை வாங்கி மாரியில் என்னை விரட்டவும் வந்துவிட்டாய்!" ப்ரேடுக்கு ரொம்பக் கோபம். அவன் மேலும் சொன்னான்: "நீ தந்தி இலாகா வேலையை என்னிடமிருந்து பிடுங்கிக் கொள்ளலாம். அங்கு கிராமத்தில் போய் நான் ஒரு தொழில் தொடங்கப் போகிறேன்; பாரேன். ஹோட்டல் வைக்கிறேன் — அங்கு பலரும் சாப்பிட வருவார்கள். நாங்கள் சரிவர நடத்துவோம் அதை. என் மனைவி சாப்பிடுவதற்குத் தின்பண்டங்களையும் குடிப்பதற்குக் காபியையும் தயாரித்துத் தருவாள். எனக்கும் ஏதாவதொரு வேலை கிடைத்து விடும். ஆனால் உனக்குச் சிரமம் தருவது என்று நான் தீர்மானித் தால் பல வழிகளில் உனக்குச் சிரமம் தர முடியும். எனக்குத் தந்தி இலாகாவில் தெரியாத ஆசாமி யார்? அதுமட்டுமா? தந்தி மரத்தைச் சாய்த்து கம்பிகளைக்கூட வெட்டிவிடுவேன் — பாதி வேலையிலே நீ பண்ணையைவிட்டு வெளியேற வேண்டிவரும். ஆமாம். ஞாபகம் வைத்துக்கொள்."............

கிராமத்திலிருந்து திரும்பும்போதே அந்த அறுவடை யந்தி ரத்தையும் ஏர்க்கலப்பையையும் அவன் கொண்டுவந்திருக்க வேண்டும். அது திருப்தியாக இருந்திருக்கும். அவனுக்குப் போக

நேரம் இல்லை—என்ன செய்வது? தந்தி இலாகா வேலை வேறு—இப்படி அவன் பணத்துக்கு ஆசைப்பட்டிருக்கக் கூடாதுதான்.

அவன் குன்றின் உச்சியிலே வியாபாரி ஆரான்ஸெனைப் பார்க்கிறான். புயலுக்குள்ளே ஏதோ காக்ஷியைக் கவனிப்பவன் போல இருக்கிறான் அவன். எதற்காக வந்தான் அவன்? அவன் மனதிலே நிம்மதியேயில்லை — சுரங்க வேலை நடந்து கொண்டிருந்ததே அந்தக் காலத்தில்—அந்த இடத்தையாவது பார்க்கலாம் என்று வருகிறான். தன் குடும்பம் சௌகரியமாக இருக்க வேண்டும் என்று செய்த காரியத்தில் தோல்வியடைந்துவிட்டான் அவன். சுரங்க வேலை நடக்காமல் பாலைவனம்மா திரிப் பாழாகக் கிடந்த அந்த இடத்தைப் பார்க்க வந்திருந்தான். பார்க்கவே பிடிக்கத்தான் இல்லை. அங்கும் இங்கும் நோட்டீசுகள் ஒட்டப்பட்டிருந்தன — கம்பெனி சொத்துக்களை யாரும் எப்படியும் வீணாக்கக் கூடாது என்று பல இடங்களில் அறிக்கைகள் ஒட்டப்பட்டிருந்தன.

அந்தப் பைத்தியக்கார வியாபாரியுடன் போவதற்குச் சிறிது நேரம் தாமதிக்கிறான் ஆக்ஸெல். "நீ ஏதாவது பக்ஷி சுடுவதற்காக வந்திருக்கிறாயோ" என்று கேட்டான்.

"சுடுவதா? அந்தப் பக்ஷி என் கண்முன் வந்தால் சுட்டு விடுவேன்" என்றான் ஆரான்ஸென்.

"யார்? எந்தப் பக்ஷி?"

"வேறு யார்? அவன்தான். என்னையும் இந்தக் கிராமத்து வாழ்வையும் குட்டிச் சுவராக்கிக் கொண்டிருக்கிறானே—அவனைத்தான்; அவன் நிலத்தை விற்றால், சுரங்கவேலை மீண்டும் தொடங்கும், ஊரிலே பணமும் வியாபாரமும் பெருகும்."

"யாரு? கெய்ஸ்ஸலரா?"

"அவனேதான்! அவனைச் சுடவேண்டும்."

ஆக்ஸெல் சிரித்தான். "சில நாட்களுக்குமுன் கெய்ஸ்ஸலர் நகரில் இருந்தான். அங்கு சந்தித்து அவனுடன் பேசியிருக்க வேண்டும் நீ. ஆனால் நான் சொல்லலாமானால் சொல்லுகிறேன். அவன் பக்கம் நீ போகாதிருப்பதே நல்லது."

"ஏன்?" என்றான் ஆரான்ஸென் கோபமாக.

"ஏனா? முடிவில் அவன்தான் வெற்றி பெறுவான்."

இதுபற்றி அவர்களிருவரும் சிறிது நேரம் விவாதிக்கிறார்கள். முன்னைவிடக் கோபமாக அது பற்றிப் பேசுகிறான் ஆரான்ஸென்.

கடைசியில் ஆக்ஸெல் விளையாட்டாகச் சொன்னான்: "என்னவோ? கடையை மூடிவிட்டு எங்களை எல்லாம் தவிக்க விட்டுவிட்டுப் போய் விடாதே!"

"இங்கேயே தங்கி என் நாட்களை வீணாக்கிக் கொண்டிருக்க முடியுமா நான். யாராவது விலைக்குக் கேட்டால் என் இடத்தை விற்று விடுவேன்."

"நல்ல மண். உழைத்தால் பலன் தரும்."

"மண்ணில் உழைக்க நான் ஆளில்லை" என்று கூறினான் ஆரான்ஸென்: "அதைவிட நல்ல வேலை என்னால் செய்ய முடியும்?"

வாங்க ஆள் அகப்படும் என்றான் ஆக்ஸெல். ஆனால் யாரிடம் அதற்குப் பணம் இருந்தது என்று கேட்டான் ஆரான்ஸென்.

"இங்கேயே இந்தக் காட்டுப் பிராந்தியத்திலேயே கூட ஆளில்லாமல் போய்விடவில்லை."

"இங்கே என்ன இருக்கிறது — மண்ணும் புழுதியும் தவிர. என் பண்ணையை விலைக்கு வாங்க யாரையேனும் பிடி. கொடுத்து விட்டு நகர்ந்துவிடுகிறேன்." இங்கு யாரிடமும் அவ்வளவு பணம் கிடைக்காது என்கிற நினைப்பில் நகைத்தான் ஆரான்ஸென்.

"அப்படிச் சுலபமாக ஒதுக்கிவிட முடியாது. ஸெல்லன்ரா பண்ணை ஐஸக் நினைத்தானானால் உன் கடையையும் பண்ணையையும் விலைக்கு வாங்கிவிட முடியும்.

"அப்படியா? எனக்கு நம்பிக்கையில்லை" என்றான் ஆரான்ஸென்.

"நீ நம்புவதையும் நம்பாததையும் பற்றி நான் கவலைப்பட வில்லை" என்றான் ஆக்ஸெல். மேலே நடக்க முயன்றான்.

ஆரான்ஸென் அவனைத் தடுத்து நிறுத்தினான்: "ஹேய்! சற்று இரு. என்ன சொல்லுகிறாய் — ஐஸக் வாங்கிக் கொள்ளுவானா இதை?"

"பணம் மட்டும் என்றால் உன் பண்ணையையும் கடையையும் போல ஐந்து பண்ணைகளையும் கடைகளையும் வாங்க ஐஸக்கிடம் பணம் இருக்கிறது. அவனுக்கு அதை வாங்க மனசும் இருக்கவேண்டுமே" என்றான் ஆக்ஸெல்.

வரும்போது ஸெல்லன்ரா பக்கம் திரும்பாமல் வேறு சுற்று வழியாக வந்திருந்தான் ஆரான்ஸென். ஆகவே போகும்போது, அங்கு போய் ஐஸக்கிடம் பேச்சுக் கொடுத்தான். ஆனால்

ஐஸக் நான் அதைப்பற்றிச் சிந்திக்கவில்லை என்றும்; தற்சமயம் அதைப்பற்றி யோசிக்க இயலாது என்றும் சொல்லிவிட்டான்.

ஆனால் அந்தக் கிறிஸ்துமஸின்போது எல்யூஸிஸ் வீடு திரும்பியதும், ஐஸக்கின் மனம் மாறியது. ஸ்டார் போர்கை வாங்குவது பைத்தியக்காரத்தனமென்றும் அந்த மாதிரி சிந்தனை அவன் மனதிலே இருந்ததேயில்லை என்றும் சாதித்தான். ஆனாலும் எல்யூஸிஸ் வேண்டும் என்றால், அதை அவன் நடத்துவதாக அபிப்பிராயப்பட்டால் வாங்கலாம் என்றான்.

எல்யூஸிஸ் ஒரு தீர்மானத்துக்கும் வரமாட்டாமல் தவித்தான். அது வேண்டுமென்று ஆசையாகவும் இல்லை. கைவிட்டுப் போய் விடப் போகிறதே என்று கவலையாகவும் இருந்தது. இங்கு தங்கி விடுவது என்று தீர்மானித்துவிட்டால் அதற்குப் பிறகு நகர வாழ்வு வாழவேண்டும் என்கிற ஆசைக்கு முற்றும் புள்ளி போட்டு விட வேண்டியதுதான். என்ன சொன்னாலும் நகர வாழ்வாகுமா அது? அந்த இலையுதிர் காலத்தில் நகரில் ஒரு கேஸ் நடந்து கொண்டிருக்கும்போது, தன் ஊர்க்காரர்கள் கண்ணில் படாமல் இருக்க எல்யூஸிஸ் வெகுவாக முயன்று அதில் வெற்றியும் பெற்றான். அவர்கள் கிராமத்து மக்கள்—வேறு உலகத்தைச் சேர்ந்தவர்கள் என்ற ஞாபகம் அவனுக்கு. அந்த வேறு உலகத்துக்குத் திரும்பிவிட அவனுக்கு இஷ்டமில்லை.

ஸ்டார் போர்கை வாங்கிவிட வேண்டும் என்று அம்மாவுக்கு ஆசைதான். ஸிவெர்ட்கூட அதுவே சரி என்றான். இருவரும் வற்புறுத்திச் சொல்லவே அவர்கள் இருவருடனும் எல்யூஸிஸ் ஸ்டார் போர்குக்கு ஒரு நாள் போனான். நேரிலேயே பார்த்துத் தீர்மானிப்பது என்று போனார்கள் மூவரும்.

விலை கேட்க வருகிறார்கள் என்றிருந்த பின்னும் ஆரான்ஸென் பழையமாதிரியே இருப்பானா? விரைப்பாகவும் பிகுவாகவும் பேசினான். அப்படி விற்கவேண்டிய அவசியம் இல்லை என்றான். அவன் பேர்னால்கூட பண்ணை அப்படியே இருக்கலாம் — நல்ல நிலம் அது. "கையிலே காசு" இருப்பதுபோன்ற இடம் அல்லவா அது? எப்போழுது வேண்டுமானாலும் விற்றுக் கொள்ளலாம். "தவிரவும் நீங்கள் என் விலை தரமாட்டீர்கள்" என்றான் ஆரான்ஸென்.

வீடுவாசல், நிலம் கடை, சாமான்கள் எல்லாவற்றையும் பார்த்தார்கள். சாமான்கள் அதிகம் இல்லை. வாய் ஹார்

மோனியங்கள் சில, கடிகாரச் சங்கிலிகள், வர்ணப் பேப்பர் பெட்டிகள் பல, அலங்காரம் செய்த விளக்குகள்—அந்தமாதிரி அந்தப் பிராந்தியத்திலே நிலத்தில் உழும் உழவர்களுக்குப் பயன் படாத சாமான்கள்தான் பல இருந்தன. பல பீப்பாய்கள் நிறைய ஆணிகள் இருந்தன—சில நூறு கெஜம் சீட்டித் துணிகள் இருந்தன. அவ்வளவுதான்.

எல்யூஸிஸ் படாடோபமாக ஆடம்பரமாக வார்த்தைகள் சொன்னான். எல்லாம் அறிந்தவன்போல எல்லாவற்றையும் பேசினான். "இந்தக் குப்பைகளினாலெல்லாம் என்ன லாபம்?" என்றான்.

"அப்படியானால் நீ வாங்க வேண்டாமே!"

"இருக்கட்டும். இப்படியே இருக்கிறபடியே ஆயிரத்தைந் நூறு க்ரோனருக்குத் தருவதானால் நான் வாங்கிக் கொள்ளு கிறேன்" என்றான் எல்யூஸிஸ். இதையும் வாங்க அவசரப் படுகிறவன்மாதிரிச் சொல்லவில்லை அவன். ஏதாவது ஆடம்பர மாகப் பதில் சொல்ல வேண்டுமே என்று சொன்னான்.

அவர்கள் வீடு திரும்பினார்கள். பேரம் படியவில்லை. எல்யூஸிஸ் விலையை மிகவும் குறைவாக மதிப்பிட்டான். தனக்கு அவமரியாதை செய்யவே இப்படிச் சிறிய தொகை கூறினான் அவன் என்று ஆரான்ஸெனுக்குக் கோபம் வந்தது. "உன்னைப் பற்றி என்ன சொல்வது என்று எனக்குத் தெரியும். ஆனால் சின்னப் பையன் நீ?" என்றான் ஆரான்ஸென். சின்னப் பையன் என்று எல்யூஸிஸைச் சொன்னான் அவன்.

"என்னைச் சின்னப் பையன் என்று சொல்லாதே" என்று கோபித்துக் கொண்டான் எல்யூஸிஸ். அவர்கள் இருவரும் விரோதிகளாகிவிட்டனர்.

இப்பொழுது விற்கமாட்டேன் என்று கிராக்கி பண்ணிக் கொள்ள எப்படித் தைரியம் வந்தது ஆரான்ஸெனுக்கு? அதற்குக் காரணம் இல்லாமல் இல்லை. ஏதோ ஒரு நம்பிக்கை தோன்றி யிருந்தது புதுசாக அவனுக்கு. வேறு ஒன்றும் இல்லை. நிலைமையைக் கவனிக்கக் கிராமத்தில் ஒரு கூட்டம் போட்டார்கள். கெய்ஸ்ஸலர் தனக்குச் சொந்தமான தென்னண்டைப் பகுதி நிலத்தை விற்கச் சம்மதிக்காதலால் ஏற்பட்ட நிலைமையைச் சமாளிப்பதெப்படி என்று விவாதித்தார்கள். சுரங்க வேலை சரிவர நடைபெற்றால், அந்தக் கிராமம்மட்டுமல்ல, ஜில்லா பூராவுமே சுபிக்ஷம் பெற்றுவிடும்!

சுரங்க வேலை தொடங்குமுன் இருந்தமாதிரியே அதே நிலையிலேயே ஏன் மக்கள் தொடர்ந்து இருந்து வரக்கூடாது! இருக்கலாம். ஆனால் மனசு இடம் தரவில்லை. பணம் புரளும் என்று கண்ட பின்னும் ஏழைகளாகவே இருக்க யாருக்குத்தான் மனசு வரும்! சுரங்க வேலை நடந்த நாட்களில் எவ்வளவோ புதுப் பழக்கவழக்கங்களும் துணிமணிகளும் நகரத்துச் சாமான்களும் நாகரிகங்களும் பார்த்துவிட்டார்கள் அவர்கள். இப்போது சுரங்க வேலையுடன் பணமும் போய்விட்டது. மீன்கள் கடலிலே மறைவதுபோல மறைந்துவிட்டது. என்ன செய்வது?

மாஜி லென்ஸ்மாண்டு கெய்ஸ்ஸலர்தான் இதற்கு மூல காரணம் என்று தீர்மானிக்க அதிக நேரமாகவில்லை கிராமவாசிகளுக்கு. அவன் அந்தக் கிராமவாசிகளின்மேல் இப்படி வஞ்சம் தீர்த்துக் கொள்ள முயன்றதற்குக் காரணம் இல்லாது போய்விடவில்லை. அவர்கள்தான் மேலதிகாரிகளுக்கு அவனைப்பற்றிக் குறை கூறி எழுதி அவன் வேலையைப் பிடுங்கச் செய்தது! அவர்கள் அவனைப்பற்றி எண்ணியது தவறு. அவன் ஓடிப் போய்விடவில்லை. திரும்பிவந்து அவர்களுக்குத் தீங்கிழைக்க முயன்று கொண்டிருந்தான். அதிக விலை கேட்டால் யார் தருவார்கள்? —அந்த நிலமில்லாமல் சுரங்க வேலை தடைப்பட்டு நின்றது. ஜில்லாவின் சுபிஷம் பூராவையும் தீர்த்துக் கட்டி விடுவது என்று அவன் தீர்மானித்திருந்தான். அவன் பலசாலி — திடசாலி—அவனை அசைப்பதென்பது இயலாத காரியம். ஆக்ஸெல் ஸ்டிராம்தான் அவனைக் கடைசியாகப் பார்த்தான்— பணக்காரனாகவும் செல்வாக்குள்ளவனாகவும் இருந்தான் என்று ஆக்ஸெல் சொன்னான். தவிர ஆக்ஸெலுக்கென்று இனாமாக இரண்டு யந்திரங்கள் வேறு அனுப்பியிருந்தான் அவன்.

இந்த மனிதன் கையில் இருந்தது ஜில்லாவின் பொருளாதார விதி. அவனுடன் ஏதாவது சமாதானமாக ஒரு வழி செய்து கொள்ளவேண்டும் அவர்கள். அவன் நிலத்தை என்ன விலைக்கு விற்க ஒப்புக் கொள்வான் அவன்? இதை அறிந்து என்ஜினியர் மூலம் ஸ்வீடன் தேசத்துக் கம்பெனிக்குத் தெரிவிக்கவேண்டும். இருபத்தையாயிரம் போதாது என்றான் கெய்ஸ்ஸலர். மேற் கொண்டு என்ன தேவையோ அவனுக்கு அதை அந்தக் கிராமத் தார்களே சேகரித்துத் தந்தால், மீண்டும் சுரங்கவேலை தொடங்கி விடாதா? ரொம்பவும் அதிகம் கேட்காவிட்டால் சரிதான். ரகசியமாக ஆரான்ஸென் ஒரு தொகையும், கிராமத்து கடைக்

காரன் ஒரு தொகையுமாக தர ஒப்புக்கொண்டார்கள். அதனால் பின்னர் லாபமுண்டு என்று அவர்களுக்குத் தெரியும்.

முடிவில் கெய்ஸ்ஸலரைப் பார்க்க இரண்டு ஆசாமிகளை அனுப்பி வைத்தார்கள் கிராமத்தார்கள். அவர்கள் திரும்பிவரும் நாள் நெருங்கிக் கொண்டிருந்தது. அதனால்தான் தானே தன் கடையை மீண்டும் நடத்தலாம் என்று நம்பிக்கை ஆரா ஸெனுக்கு உதயமாகிக் கொண்டிருந்தது. அவசரப்பட்டு விற்க வேண்டியதில்லை — விற்றாலும் நல்ல விலைக்கு விற்கலாம் என்று யோசனை அவனுக்கு.

தூது போன இருவரும் ஒரு வாரத்திற்குள்ளாகவே திரும்பினார்கள். கெய்ஸ்ஸலர் விற்கவே மறுத்து விட்டான். ப்ரேட் ஓல்ஸனை அந்தத் தூதுகோஷ்டியில் ஒருவனாகத் தேர்ந்தெடுத்தது கிராமத்தார்கள் செய்த முதல் பிசகு. வேலையில்லாதிருந்தவன் அவன் ஒருத்தன்தான் என்று அனுப்பினார்கள். அவனைப் பார்த்தவுடனேயே "நீங்கள் திரும்பலாம்" என்று சொல்லி விட்டான் கெய்ஸ்ஸலர். ஆனால் அவர்கள் திரும்புவதற்குப் பணத்தைக் கொடுத்துத்தனுப்பினான் அவன்.

அப்படியானால் ஜில்லாவின் விதி என்ன ஆவது?

ஆரான்ஸென் முதலில் காச்சுமூச்சென்று கத்தினான். ஆனால் வேறு வழி எதுவும் தோன்றாமல், ஒரு நாள் ஸெல்லன்ரா போய்ப் பேரத்தை முடித்தான். ஆமாம். ஆரான்ஸெனே தான் போனான். எல்யூஸிஸிற்கு அது அவன் கேட்ட விலைக்கே கிடைத்தது — நிலமும், கடையும், வீடுகளும், சாமான்களும், ஆடுகளும் மாடுகளும், ஆயிரத்தைந்நூறு க்ரோனர்களுக்கே கிடைத்தன. உண்மைதான் — பிறகு கணக்குப் பார்த்ததில் சீட்டித் துணியில் முக்கால்வாசியையும் ஆரான்ஸெனுடைய மனைவி தன் சொந்த உபயோகத்துக்கென்று எடுத்துக்கொண்டு விட்டாள். ஆனால் இதெல்லாம் சின்ன விஷயங்கள் என்றான் — எல்யூஸிஸ் கஞ்சத்தனமாக இருப்பது சரிப்படாது என்றான்.

அப்படியும் எல்யூஸிஸிற்குத் திருப்தி ஏற்படவில்லை. அவன் எதிர்காலம் இப்போது நிச்சயப்பட்டு விட்டது. அவன் அந்தப் பிரதேசத்திலே கிடந்து அவிய வேண்டியதுதான். அவனுடைய பெரிய திட்டங்களெல்லாம் பாழாகிவிட்டது. உயர்தர உத்தியோகஸ்தனாகிவிடுவது என்கிற அவன் கனவும் பலிக்கவில்லை. நரகத்தில் வசிப்பது என்கிற ஆசைகூடக் கைகூடிவரவில்லை. தான்

கேட்டவிலைக்கே கடையை வாங்கி விட்டதுபற்றிப் பெருமைப் படுபவன்போலத் தன் தம்பிக்கும் அம்மாவுக்கும் அப்பாவுக்கும் எதிரில் சந்தோஷப்பட்டுக் கொண்டான். அவன் காரியம் அவனுக்குத் தெரியாதா? ஆனால் அது சிறு வெற்றி. ஆண்டெர்ஸனும் கடையுடன் தொடர்ந்து எல்யூஸிஸிடம் வேலைக்கு ஆண்டெர்ஸனை வேலைக்குத் தொடர்ந்து வைத்துக்கொள்வது, வந்துவிட்டா ன்என்று பெருமிதத்துடன் தீர்மானித்தான் எல்யூஸிஸ். தன் சொந்தக் கடை அல்லவா அது?

"இரு, ம்......" என்றான் எல்யூஸிஸ். "எனக்கும் உதவி செய்ய ஆள் தேவைதான். பெர்கன், ட்ராண்ட்யெம் நகரங்களுக்கு நான் போனால் இங்கு கடையைப் பார்த்துக் கொள்ள ஒருத்தன் தேவைதானே!"

தவிரவும் ஆண்டெர்ஸன் இருந்ததும் நல்லதுதான். அவன் சுருசுருப்பாக இருந்தான். நன்றாக வேலை செய்தான். நாணயஸ்தன். ஆடம்பரமாக இருக்க ஆசைப்பட்டான் என்கிற ஒருவிஷயத்தில் தவிர வேறு ஒன்றிலும் அவனைக் குற்றம் சொல்ல முடியாது. அதுகூட ஆரான்ஸென் போன பிற்பாடு மாறிவிட்டது. பனி உருகிய பிறகு நிலத்தில் ஜலத்தை வடித்து வேலை செய்ய ஸிவெர்ட் வந்தான். ஆண்டெர்ஸன் அந்த வேலையில் கூட உதவினான். அவன் முன்பின் அந்த வேலை செய்ததில்லை — அவன் அதைச் செய்திருக்க வேண்டியதும் இல்லை. ஆனால் செய்தான் என்பதுதான் விசேஷம். ஐஸக்கினுடைய யோசனை அது — ஸ்டார் போர்க் நிலத்தையும் உழுது பண்படுத்தி விதை விதைத்து அறுவடை செய்வதென்பது அவன் திட்டம்தான் கடை ஒன்றிருந்தது சரிதான் — அதற்காக நிலத்தை வீண் போக விட்டுவிடுவதா?

ஸிவெர்ட்டும் ஆண்டெர்ஸனும் அங்கு வாய்க்கால்கள்வெட்டிக் கொண்டு நின்றார்கள். ஓய்வு எடுக்கும்போது பேசினார்கள். இரண்டு வாலிபர்களின் வெறும் வெட்டிப்பேச்சு அது. ஆண் டெர்ஸனிடம் ஒரு தங்க நாணயம் இருந்தது — ஒரு இருபது க்ரோனர் நாணயம். அது தனக்கு வேண்டுமென்றான் ஸிவெர்ட். ஆண்டெர்ஸனுக்குக் கொடுக்க இஷ்டமில்லை. அது யாருக்கு என்று மல்யுத்தம் செய்து பார்க்கலாம் என்றான் ஸிவெர்ட். அதற்கு ஆண்டெர்ஸன் சம்மதிக்கவில்லை. அவன் அதைக் கொடுத்தான். ஜலம் பாய வாய்க்கால் வெட்டுகிற வேலை பூராவையும் தானே செய்து விடுவதாக ஸிவெர்ட் சொன்னான்.

செய்துவிட்டு அந்த ஆண்டெர்ஸனுக்கு வேலை தெரிய வில்லை என்று வீட்டில் போய் சொல்லிக் கொள்வாய்!'' என்றுன் ஆண்டெர்ஸன்! கடைசியில் இருபத்தைந்து க்ரோனர் நோட்டு ஒன்று கொடுத்து அந்த இருபது க்ரோனர் காசை வாங்கிக்கொள்வது என்று ஸிவெர்ட் ஒப்புக்கொண்டான். அன்றிரவு அம்மாவைக் கேட்டு வாங்கத் தீர்மானிக்கிறுன்.

வாலிபர்களின் விளையாட்டுப் பேச்சுதான்! இதனுல் ஒரு இரவு பூராவும் தூக்கமில்லை ஸிவெர்ட்டுக்கு—ஸெல்லன்ரா போய் அந்தப் பணத்தை வாங்கி வரவேண்டுமே! மறுநாள் பூராவும் வேலை இருக்கிறது — திடசாலியான வாலிபனுக்கு இது ஒரு பிரமாதம் இல்லை. தங்கக் காசுக்காக இது செய்யக்கூடாதா? ஆண்டெர்ஸன் அவனைக் கேலி செய்கிறுன் இதுபற்றி — இருபத்தைந்து க்ரோனர் தந்து இருபது க்ரோனர் நாணயத்தைவாங்கிக் கொண்டதற்காக! ஆனுல் ஸிவெர்ட் சும்மா இருந்துவிடவில்லை; லெபல்டினைப்பற்றிப் பேசத் தொடங்குகிறுன்: "அடாடா! நான் மறந்துவிட்டேனே! லெபல்டின் உன்னை விசாரித்தாள்......'' உடனே ஆண்டெர்ஸன் செய்துகொண்டிருந்த வேலையை நிறுத்திவிட்டான். அவன் முகம் சிவந்தது.

இன்பமான நாட்கள் இருவருக்கும் — வாய்க்கால் வெட்டி நிலத்தில் தேங்குகிற ஜலத்தை எல்லாம் வடியவைக்கிறுர்கள். வேடிக்கையாக நீண்ட நீண்ட விவாதங்கள் நடத்துகிறுர்கள். சில சமயம் எல்யூஸிஸும் வந்து அவர்களுடன் வேலை செய்வான். ஆனுல் அவன் சிக்கிறமே களைத்துப் போய்விடுவான். மனதிலோ உடலிலோ அதிகத் தெம்பில்லாதவன் அவன். ஆனுல் நல்லவன்.

"இதோ ஒலேன் வருகிறுள். அவளுக்கு நீ ஒரு பாக்கெட் காப்பி பவுடர் விற்றுவிட்டுவா'' என்பான் கோமாளி ஸிவெர்ட். நல்லதாகப் போச்சு என்று எல்யூஸிஸ் கடைக்குப் போய்விடுவான். சிரமப்பட்டு வேலை செய்வதைவிட ஒலேனுக்கு ஏதாவது சின்ன சாமானை எடுத்து விற்பதுதான் சிறந்த வேலையாகப் பட்டது எல்யூஸிஸிக்கு.

பாவம்! ஒலேனுக்குச் சின்ன சாமானுக ஏதாவதுதான் வேண்டியிருக்கும். நிறைய எதுவும் வாங்க அவளிடம் பணம் ஏது? திருடினுளோ, ஆக்ஸெலிடம் கேட்டு வாங்கினுளோ, அல்லது திருட்டுத்தனமாகப் பாலேடைக் கட்டி விற்றுக் கொண்டுவந்தாளோ — அவளிடம் பணம் சொல்பமே இருந்தது.

ஒலீன்கூட முன்னெல்லாம்போல இல்லை. இப்போது அவள் கிழவியாகிவிட்டாள். மேன்லாந்தில் அவளால் சமாளிக்க முடியாத அளவுக்கு வேலை யிருந்தது. முடியவில்லை என்று அவளே ஒப்புக்கொண்டுவிடுவாள். அவளைப் போ என்று சொன்னால் பத்தாயிரம் சொல்லமாட்டாளா அவள். அவளை யாரும் விரட்டியடிக்க முடியாது; அவளை அமுக்கி வைக்கவும் யாராலும் முடியாது. தன் வேலையைச் செய்துவிட்டு அங்கும் இங்கும் ஓடி வாய் நிறைய வம்பும் பேசிவிட்டு வருவாள். ஆக்ஸெல் பேசவேமாட்டான்; அவள் யாருடனவது பேசித்தானேயாக வேண்டும்?

பார்ப்ரோ விஷயமாக அவளை விடுதலை செய்துவிட்டதுபற்றி ஒலீனுக்கு அதிருப்திதான். இரண்டு பேரையும் விட்டு விட்டார்களே! இங்கருக்கு எட்டு வருஷ தண்டனை — இந்த பார்ப்ரோ சிறுக்கிக்குத் தண்டனையே யில்லையா? அது பிடிக்க வில்லை ஒலீனுக்கு. ஆனால் கடவுளின் வழிகள் மனிதனுக்குப் புரியாதவை. பின்னால் ஏதோ நடக்கப்போகிறது என்று அறிந்த வள்மாதிரித் தலையை ஆட்டுகிறாள் ஒலீன். ஆக்ஸெலுடன் சின்ன விஷயங்களைப்பற்றிச் சண்டை வருகிறபோதெல்லாம்கூட இதைச் சொல்லிக் காட்டாமல் விட்டுவிடமாட்டாள் ஒலீன். கசப்பும் கிண்டலுமாக வாயில் வந்தபடியெல்லாம் பேசிவிடுவாள். "சட்டங்கள்கூட கெட்டவர்களுக்கு உதவுகிறமாதிரி மாறி விட்டனவே" என்றாள்.

ஒலீனைக் கண்டால் இப்பவெல்லாம் ஆக்ஸெலுக்குப் பிடிப்பதேயில்லை. தொலைந்துவிட மாட்டாளா என்றிருந்தது. ஆனால் வஸந்தம் வருகிறது — வேலையோ ஏகமாக இருக்கிறது. என்ன செய்வான் அவன்? ப்ரேடாப்ளிக்குச்கு வந்திருந்த அவன் தம்பி மனைவி அவனுக்கு ஏற்ற பெண்ணாக ஹெல்கேலாந்திலிருந்து வரவழைக்க முடியுமா என்று பார்க்கிறான். இதுவரை எதுவும் சரிப்பட்டு வரவில்லை. அப்படி வரவழைத்தால்கூட வருகிற பெண்ணின் வழிச் செலவுக்கு அவன்தான் பணம் தரவேண்டும்.

பார்ப்ரோ தன் குழந்தையைக் கொன்றுவிட்டு அப்படி ஓடிப் போனது தவறுதான். ஒரு கோடையும் இரண்டு மாரிக் காலங் களும் ஒலீன் உதவியுடனேயே கழிந்தது. இன்னும் எத்தனை நாள் அவள் கையை எதிர்பார்க்க வேண்டுமோ அவன் — யார் சொல்ல முடியும்? பார்ப்ரோ, பாவி, அவள் சிறிதும் கவலைப் பட்டதாகவே தெரியவில்லையே. கிராமத்தில் ஒரு நாள் சந்தித்துப்

பேசினுன் ஆக்ஸெல்; ஆனால் இன்னமும் அவள் மனம் கல்லாகத் தான் இருந்தது. அவனைப்பற்றி அவள் கொஞ்சம்கூடக் கவலைப் பட்டதாகத் தெரியவில்லை.

"நான் கொடுத்த மோதிரங்களை என்ன செய்தாய்?"

"மோதிரங்களா?"

"ஆம். நான் உனக்குக் கொடுத்தவை."

"அவை என்னிடமில்லை இப்போது."

"இல்லையா?"

"நம்மிடையேயும் ஒன்றுமில்லை. அதற்குப் பிறகு அவற்றை நான் போட்டுக் கொள்வானேன் என்று கழற்றிவிட்டேன்" என்ருள் பார்ப்ரோ.

"அவற்றை என்ன செய்தாய்?"

"திரும்பப் பெற்றுக் கொள்ள விரும்புவாய் நீ என்று எனக்குத் தெரியாது. தெரிந்திருந்தால் வைத்திருந்திருப்பேன்."

"அவற்றின் விலையைக் கொடுத்துப் பெற்றுக் கொண்டிருப் பேன்." ஒரு நிமிஷம் தயக்கத்திற்குப் பிறகு தெரிவித்தான் ஆக்ஸெல்.

ஆனல் பார்ப்ரோ அவற்றை விற்றுவிட்டாள்—அவனிடமே விற்றிருக்கலாம். போகட்டும். அப்படியும் பார்ப்ரோவிடம் அவ னுக்கு வெறுப்புத் தட்டிவிடவில்லை. பார்ப்பதற்கு நன்ருகத்தான் இருந்தாள்—அழகாகத்தான் பேசினுள். குஞ்சம் கட்டிய மேலாடை யும், கழுத்தில் வெண்பட்டுக் கைக்குட்டையும் அணிந்திருந்தாள். அவள் இன்பமூட்டுபவளாகத்தான் இருந்தாள். கிராமத்திலே வேறு ஒரு காதலன் பிடித்துக்கொண்டு விட்டாள் அவள் என்று வதந்தி. வெறும் பொய்யோ — என்னவோ! ஹேயர்தாலின் மனைவி அவளை வெகு ஜாக்கிறதையாகத்தான் கண்காணித்து வந்தாள். நாட்டியமாடவோ, இஷ்டப்படி வெளியே திரியவோ அவளை அனுப்புவதில்லை. ஹேயர்தாலின் மனைவி அவளை ஜாக்கிறதையாகத்தான் பார்த்துக் கொண்டாள். அவள் அந்த மோதிரங்களைப்பற்றி ஆக்ஸெலுடன் பேசிக் கொண்டிருக்கும் போது ஹேயர்தாலின் மனைவி குறுக்கிட்டு "பார்ப்ரோ, மார்க் கெட்டுக்குப்போ. நேரமாகிறது" என்ருள். பார்ப்ரோ போனதும் ஆக்ஸெலைப் பார்த்து லென்ஸ்மாண்டின் மனைவி கேட்டாள்: "ஏதாவது புது மாமிசம் கொண்டுவந்திருக்கிருயா?"

"ம்......ம்" என்றான் ஆக்ஸெல். பணிவாகத் தன் குல்லாயைத் தொட்டான். அவனைப்பற்றி நல்ல அபிப்பிராயம் உண்டு தனக்கு என்று ஹேயர்தாலின் மனைவி அவனிடமே சொல்லியிருந்தாளே. அதற்குப் பிரதியாக ஏதாவது செய்யலாம் என்று தான் ஆக்ஸெலுக்கும் உத்தேசம். ஒரு கன்றை வெட்டினால் அதில் மாமிசம் தரலாம் என்ற உத்தேசம்தான் அவனுக்கு. ஆனால் நாட்கள் சென்றன. கன்றை வெட்டவில்லை அவன். பிறகு அதைக் கொடுப்பானேன்—கொடுத்தால் தனக்கு நஷ்டம் தானே என்று தோன்றிற்று அவனுக்கு. நல்ல கன்று அதுவும்!

"ஒன்றும் கொண்டு வரவில்லை" என்றான் ஆக்ஸெல்.

ஹேயர்தாலின் மனைவி அவன் சிந்தனைகளை அறிந்தவள், மாதிரிக் கேட்டாள்: "உன்னிடம் வெட்டுவதற்கு ஒரு கன்று இருக்கிறது என்று கேள்விப்பட்டேனே!"

"இருக்கிறது. ஆனால் அதை இப்போது வெட்ட வேண்டாமென்றிருக்கிறேன்."

"அப்படியா? ஆடு ஒன்றும் இல்லையோ?"

"இப்போது ஒன்றும் இல்லை. தவிரவும் என் பண்ணையில் அவசியத்துக்கு அதிகமாக ஒன்றுமேயில்லை. என்ன செய்வது?"

"சரி" என்று போய்விட்டாள் ஹேயர்தாலின் மனைவி.

ஆக்ஸெல் வீடு திரும்பும்போது நடந்தைப் பற்றிச் சிந்தித்துக்கொண்டே திரும்பினான். தான் செய்தது தவறான ஒரு காரியம் என்று தோன்றிற்று. லென்ஸ்மாண்டின் மனைவி அவன் கேஸில் முக்கியமான சாக்ஷி — அவள் அவனுக்காக இல்லாவிட்டாலும் மொத்தத்தில் அதுபற்றி வெகுவாகப் பாடுபட்டாள். அவன் சிரமப்பட்டுவிட்டான் — ஆனால் முடிவைப்பற்றி அவனுக்கும் சந்தோஷமே! என்ன இருந்தாலும் ஹேயர்தாலின் மனைவிக்காக அந்த ஆட்டையாவது கொன்று மாமிசத்தைக் கொடுத்துவிடுவது தான் நல்லது என்று தோன்றிற்று. ஆனால் அடுத்த தடவை அவன் கிராமத்துக்குப் போகும்போது அவன் அந்த ஆட்டை வெட்டி எடுத்துப் போகவில்லை. ஆனால் கடைசி நிமிஷத்தில் ஒரு ஆட்டுக் குட்டியை எடுத்துப் போனான். பெரிய குட்டி — கொழுத்த குட்டி. "அப்படி ஒன்றும் உயர்ந்த மாமிசம் அல்ல. இருந்தாலும் இதை ஏற்றுக்கொள்ள வேண்டும்" என்றான் ஆக்ஸெல்.

ஆனால் அதை இனமாகப் பெற்றுக்கொள்ள மறுத்து விட்டாள் ஹேயர்தாலின் மனைவி. "என்ன விலை?" என்றாள். அதற்குரியதைக் கொடுத்துவிட்டாள். இனமாகப் பெற்றுக் கொள்பவள் அல்ல அவள்.

பார்ப்ரோவை அவன் அந்தத்தடவை சந்திக்கவேயில்லை. அவன் வருவதைப் பார்த்த லென்ஸ்மாண்டின் மனைவி பார்ப்ரோவை வேறு ஏதோ வேலையாகக் கண்காணாமல் அனுப்பி விட்டாள். என்னமோ சௌக்கியமாக இருந்தால் சரிதான் — அவனுக்கு அவள் உதவாவிட்டாலும் போகட்டும்!

# 9

அந்த வஸந்தக்காலத்தில் எதிர்பாராதது ஒன்று நடந்தது —முக்கியமான விஷயம் அது. சுரங்கவேலை மீண்டும் தொடங்கியது. கெய்ஸ்ஸலர் தன் பகுதி நிலத்தை விற்றுவிட்டான். ஆனால் கெய்ஸ்ஸலர் இன்னது செய்வான் இன்னது செய்ய மாட்டான் என்று யார் சொல்லமுடியும்? அவன் இஷ்டம் — தலையை ஆட்டுவான். அதற்குச் சரி என்று அர்த்தமா? இல்லை என்று அர்த்தமா? கிராமத்தைச் சந்தோஷப்படுத்துவது அவனால் நடைபெறக்கூடிய காரியம். மனச்சாக்ஷி உறுத்தியதோ? கிராமப் பொருளாதாரம் தன்னால் க்ஷீணிப்பானேன் என்று தோன்றியதோ அங்கும் சுபிக்ஷம் வரட்டுமே — கஞ்சி காய்ச்சி அருந்தியவர்கள் நல்ல சாப்பாடு சாப்பிடட்டுமே. தனக்குத் தீங்கு செய்தவர்கள்தான். இருந்தாலும் பிழைத்துப் போகட்டும். என்றோ அல்லது அவன் கேட்ட இரண்டரை லக்ஷம்தான் கிடைத்துவிட்டதோ? வேறு அவனுக்கே பணமுடை வந்து இருபத்தையாயிரத்துக்கே விற்று விட்டானோ? இருபத்தையாயிரம் என்பது அலக்ஷியம் செய்யக்கூடிய தொகையா? தகப்பனுக்காக அவனுடைய மூத்த பிள்ளைதான் பேரத்தை முடித்தான் என்று வதந்தி.

அதென்னவாக இருந்தால் என்ன? வேலை மீண்டும் தொடங்கியது. பழைய என்ஜினியரே தன் ஆட்களைக் கூட்டிக் கொண்டு மீண்டும் வந்தான். மறுபடியும் வேலை நடந்தது. பழைய மாதிரியேதான் — ஆனால் சுரங்கம் பின்னோக்கிச் சென்றது. வேலை சரிவர நடந்து கொண்டிருந்தது. சுரங்கக் கம்பெனியின் ஸ்வீடிஷ் சொந்தக்காரர்கள் தங்களுடைய ஆட்களையே உடன் அழைத்து வந்திருந்தார்கள். தங்களுடைய வெடிமருந்தைக் கொண்டுவந்திருந் தார்கள். ஏராளமாகப் பணத்தைக் கொண்டுவந்து செலவழித் தார்கள். இதிலெல்லாம் தவறு என்ன? ஆரான்ஸென்கூடத் திரும்பி வந்துவிட்டான். ஸ்டார் போர்க்கை மீண்டும் திருப்பித் தந்துவிட வேண்டும் என்று அவன் எல்யூஸிஸை அணுகிக் கேட்டான். தான் விற்கத் தயாராக இல்லை என்றான் எல்யூஸிஸ்.

“பணம் நிறையக் கொடுத்தால் விற்றுவிடுவாய். இல்லையா?” என்றான் ஆரான்ஸென்.

“மாட்டேன்.”

ஆமாம். கடையையும் ஸ்டார் போர்க் பண்ணையையும் விற்று விடுவதாக உத்தேசம் இல்லை எல்யூஸிஸுக்கு. உண்மையில் சொல்லப்போனால் அவனுடைய மனம் வெகுவாக மாறி விட்டது. அந்தப் பிராந்தியத்திலேயே பணக்காரப் பண்ணையாரின் மகனாகவும் ஒரு பெரிய வியாபாரியாகவும் இருப்பது மிகவும் திருப்திகரமான விஷயம்தான். அவன் வைத்ததுதான் சட்டம். அவன் வீட்டு வராந்தாவிலே பலவித வர்ணக் கண்ணாடிகள் வைத்த ஜன்னல் இருந்தது. அவசியமான வேலைகளை எல்லாம் செய்ய ஒரு குமாஸ்தா வேறு இருந்தான். முதலாளி எல்யூஸிஸ் தன்னிஷ்டப்படி நாடெல்லாம் சுற்றுப் பிரயாணம் செய்தான். நாட்டின் பணக்காரர்களுக்குப் போட்டியாக அவனும் முதல் வகுப்பில் பிரயாணம் செய்தான். என்றாவது ஒரு நாள் அவன் அமெரிக்கா வரையிலும்கூடப் போய்விடுவான் — அமெரிக்கா போவதுபற்றி அவன் இப்பொழுதெல்லாம் அடிக்கடி சிந்தித்துப் பார்க்கிறான். அது எப்படியானாலும் தெற்கேயுள்ள நகரங்களுக்குப் போவது என்பதே பெரிய ஆனந்த அனுபவமாக இருந்தது. அப்படி ஒன்றும் ஏராளமாகச் செலவு செய்து களிக்கூத்தடித்து விடவில்லை அவன். களிக்கூத்தும் கேளிக்கைகளும் அவனுக்கு அவ்வளவாகப் பிடித்த விஷயங்கள் அல்ல. விந்தையான மனிதன் அந்த எல்யூஸிஸ். அவனுக்குப் பெண்களிடம் இப்போது ஈடுபாடில்லை. வெகு நாட்களுக்கு முன்னரே பெண்களை வெறுத்து விட்டான் அவன். அது எப்படியானால்தான் என்ன? ஸெல்லன்ரா ஜமீன்தாரின் பிள்ளை—முதல் வகுப்பிலேயே நாடெல்லாம் பிரயாணம் செய்தவன். வியாபாரி. நாடெங்கும் ஓடிச் சரக்குகள் வாங்கினான் அவன். ஒவ்வொரு பிரயாணத்துக்குப் பிறகும் புது சிந்தனைகளோடும் நாகரிகமான நடையுடை பாவனைகளுடனும் வந்தான் அவன். நகரத்துப் பழக்கப்படிச் கால்ச் செருப்பில் ஈரம் படாதிருப்பதற்காக இரண்டு ஜோடிச் செருப்புகள் அணியத் தொடங்கினான்.

"ஒரு ஜோடி போதாதா?"

"காலில் ஈரம்பட்டால் சிரமப்படுத்துகிறது" என்கிறான் எல்யூஸிஸ்.

"பாவம்!" என்று எல்லோரும் அவனிடம் அனுதாபப் பட்டார்கள்.

பிரமாதமான நாட்கள்! அவனுக்கு எல்லையில்லாத ஓய்வு இருந்தது. இல்லை. ஸ்டார் போர்க்கை விற்றுவிடுவதாக

அவனுக்கு உத்தேசமில்லை. அதை விற்றுவிட்டு என்னசெய்வது? நகருக்குப் போய் ஒரு கடையிலே மீண்டும் குமாஸ்தாவாகப் போவதா? தானே ஒரு குமாஸ்தாவை வைத்துக் கொண்டிருந்துவிட்டு, மறுபடியும் எடுபிடி ஆளாகப் போக மனசு ஒப்புமா? தவிரவும், அந்த வியாபாரத்தைப் பெருக்கிப் பாதுகாப்பது என்று அவன் தீர்மானித்துவிட்டான். சுரங்க முதலாளிகள் ஏராளமான பணம் கொண்டுவந்திருந்தார்கள்—அந்தப் பணப் புழக்கத்தினல் வியாபாரிக்கு அதிர்ஷ்டம்தானே! இந்தச் சமயத்தில் கடையை விற்க அவன் முட்டாளா என்ன? ஒவ்வொரு தடவையும் மறுவிலைக்குக் கேட்டுப்பார்த்து ஏமாற்றமடைந்து ஆரான்ஸென் திரும்பவேண்டியதாயிற்று. தான் அந்தக் கடையை விற்றது பிசகு என்று தன் புத்தியின்மையை எண்ணி வருத்தப்பட்டான் ஆரான்ஸென்.

ஓ! முடிவில் நடந்தது என்ன தெரியுமா? ஆரான்ஸெனும் வருத்தப்பட்டிருக்க வேண்டியதில்லை. எல்யூஸிஸ் வியாபாரத்தை பெருக்கப் பெரிதாகத் திட்டங்கள் போட்டுக் கனவுகளும் கண்டிருக்க வேண்டியதில்லை. கிராமத்தார்கள் சந்தோஷப்பட்டதும் அதிக நாள் நீடிக்கவில்லை—ஏதோ பணம் ஏராளமாக நடமாடப்போகிறது என்று அவர்கள் பேராவலோடும் உட்கார்ந்திருக்க வேண்டியதில்லை. முடிவில் வரப்போகிற ஏமாற்றம் எப்படி அவர்களுக்குத் தெரியும்? சாதாரண ஏமாற்றமா அது—எவ்வளவு பெரிய ஏமாற்றம்! யார் அதை எதிர்பார்த்திருக்க முடியும்? சுரங்க வேலை தொடங்கியது என்னவோ உண்மைதான்—ஆனல் வேலை தென்னண்டைக் கோடியில், கெய்ஸ்ஸலர் புதிதாக விற்ற நிலத்தில் தொடங்கியது. அது வேறு ஜில்லா, வேறு கிராமம். இந்த ஜில்லாவுக்கும் இந்த கிராமத்துக்கும் அதனல் லாபமே இல்லை. எங்கேயோ தொடங்கி ஐஸக் முதலில் விற்ற நிலத்தில் வந்து சுரங்க வேலை முடிவுறும். அந்தக் கடைசி மாதங்களில்தான் இந்தக் கிராமத்துக்கும் ஜில்லாவுக்கும் சுரங்க வேலையினல் லாபம் வரும். எத்தனை வருஷங்களாகுமோ அது—ஒரு தலைமுறைகூட ஆகிவிடும்!

இந்தச் செய்தி வெடிகுண்டாக கிராமத்து மக்களிடையே வெடித்தது. திக்பிரமை யடைந்தவர்களாக, காதுகளைப் பொத்திக்கொண்டு, அவர்கள் விஷயத்தை அறிந்துகொண்டு அவஸ்தைப்பட்டனர். சிலர் மீண்டும் கெய்ஸ்ஸலரைக் குற்றம் கூறினர். மறுபடியும் அவன்தான் ஏமாற்றிவிட்டான். ஆகவே

கிராமத்தில் கூட்டம்போட்டு சுரங்க என்ஜினியருக்கும் சொந்தக்காரர்களுக்குப் தூதர்களை அனுப்பினார்கள். இந்தத் தூது கோஷ்டியினரால் எதுவும் லாபம் கிடைக்கவில்லை. தென்னண்டைப் பகுதிதான் சமுத்திரத்துக்கு அருகாமையில் இருக்கிறது — கனிப் பொருளைக் கொண்டுபோய்க் கப்பலில் சேர்ப்பதும் சுலபம். செலவுகள் அதனால் ஏகமாகக் குறையும். வேலை அங்குதான் தொடங்கவேண்டும் — வேறு வழியில்லை.

மீண்டும் ஆரான்ஸென் புது வழி கண்டுபிடிக்கிறான். சுரங்க வேலை புதுசாகத் தொடங்குகிற இடத்தில் போய், புது லக்ஷிய பூமியை அடைகிறான். ஆண்டெர்ஸனைக்கூடக் கூப்பிடுகிறான்: "இங்கே இருந்து என்ன லாபம்? காட்டுப் பிரதேசம், நாகரிகமற்ற மக்கள். என்னுடன் வா." ஆனால் ஆண்டெர்ஸன் அந்த இடத்தைவிட்டுக் கிளம்ப மறுக்கிறான். புரியாத விஷயம்தான் அது. அவனை அங்கு நிறுத்திவைக்க என்னதான் இருந்தது. அதென்னவோ — அங்கு அவன் நின்று நிலைத்துவிட்டான். வேரூன்றிவிட்டான். மாறுதல் எதுவானாலும் ஆண்டெர்ஸனிடம் தான் இருக்கவேண்டும் — ஏனென்றால் இடத்திலே துளிக்கூட மாறுதலே இல்லை. அந்த இடமோ ஜனங்களோ மாறவேயில்லை — சுரங்க வேலை எதிர்க்கோடிக்குப் போய்விட்டதுபற்றிப் பண்ணை வைத்திருந்த குடியானவர்கள் கவலைப்பட்டார்களா என்ன? அவர்களுக்குறிய நிலத்தில் நாள் பூராவும் செய்யவேண்டிய வேலைகள் ஆயிரமாயிரம் இருந்தன. பயிர்கள், ஆடுகள், மாடுகள், வீடு, குடிகுடித்தனம் எல்லாம் அவர்கள் நேரத்தைக் கவர்ந்தன. பணம் என்று கணக்குப் பார்த்தால் அவர்களிடம் அதிகம் இராது. ஆனால் வாழ்க்கையின் அத்தியாவசியத் தேவைகள் எல்லாம் அங்கு பூர்த்தி பெற்றிருந்தன. சுரங்க வேலைப் பணம் வேறு எங்கோ செலாவணியாகிறதே என்று எல்யூஸிஸ்கூடக் கவலைப்படவில்லை. ஆனால் அவனும் ஒரு பெரிய தவறு செய்து விட்டான். சுரங்க வேலை இங்குதான் தொடங்கும் என்கிற நம்பிக்கையில் அவன் ஏராளமான சாமான்களை வாங்கி அடுக்கி விட்டான். அவையெல்லாம் என்று விற்பனையாகுமோ? அதனால் என்ன — ஆகிற அன்று ஆகட்டும் — சாமான்கள் இல்லாத கடையும் ஒரு கடையா?

நிலத்தில் வேலை செய்கிறவன் சுலபத்தில் தன் நிதானம் இழந்து விடமாட்டான். காற்று முன் போலவே சுகமான காற்றுத்

தான் — அதை எந்தச் சுரங்கவேலைக்காரர்களும் தங்களுடன் எடுத்துப் போய்விட முடியாது. புதுத் துணிகள் அபூர்வம் — ஆனால் அதைப் பார்த்து ஆனந்திக்க அங்கேயும் ஆளுக்குக் குறைவில்லை. வைரங்கள் தேவையேயில்லை அவர்களுக்கு. அந்தக் குடியானவர்கள் அதிகமாகக் குடிப்பதுகூடக் கிடையாது. தங்களுக்கு எட்டாத விஷயங்கள் பற்றி அவர்கள் கவலைப்படுவதே இல்லை—கலை அரசியல், பத்திரிகைகள், ஆடம்பரப் பொருள்கள்—இவைகளுக்கு எல்லாம் மதிப்பு ஏற்படுகிறது — அவற்றைப் பெரிதாக மதிப்பவர்களிடம் மதிப்பு ஏற்படுகிறது. நிலத்தை உழுது அதில் உழைத்து வளம் பெறச் செய்வது என்பது ஒன்றுதான் அவர்கள் நாடிய பொருள். வாழ்க்கையின் ஆதாரமும் அதுதான். அடிப்படையும் அதுதான் — ஆரம்பமும் அதுதான்; முடிவும் அதுதானே. சொறத்தில்லாத, ஈரமில்லாத வாழ்வா அது? இல்லவே இல்லை! மனிதனுக்குத் தேவையானதெல்லாம் உண்டு அந்த வாழ்விலே — சக்திகள், கனவுகள், குருட்டுநம்பிக்கைகள், காதல்கள் எல்லாம் இருந்தன. ஆற்றோரமாக நடந்துகொண்டிருந்த ஸிவெர்ட்டு ஒரு நாள் மாலை திடீரென்று நிற்கிறான். ஜலத்திலே ஆணும் பெண்ணுமாக இரண்டு வாத்துகள் இருக்கின்றன. அவை அவனைப் பார்த்துவிட்டன. மனிதனைக் கண்டு அவை பயப்படுகின்றன. ஒன்று ஏதோ சொல்கிறது — மற்றதை உஷார்ப் படுத்துகிறது. மூன்று தரம் குரல் தருகிறது. மற்றதும் அதேமாதிரி குரலில் பதில் தருகிறது. திடீரென்று இரண்டும் கிளம்பிப் பறந்து போய் ஆற்று ஜலத்திலேயே சிறிது தூரத்தில் இறங்குகின்றன. பிறகும் அவை இரண்டும் ஒன்றுக்கொன்று பேசிக் கொள்கின்றன. ஆனால் அவற்றின் குரல் முன் மாதிரியில்லை இப்போது—அதில் ஆனந்தம்தொனிக்கிறது. என்ன இசை அது? ஸிவெர்ட் அவற்றைப் பார்த்துக் கொண்டு நிற்கிறான் —கனவு ஒன்று கண்டுகொண்டு நிற்கிறான். அந்த இசை அவனுள்ளே பாய்ந்து ஒரு பயத்தை விளைவித்து விட்டது. ஏதோ முன்பு அறிந்து இப்போது மறந்துவிட்ட ஒரு விஷயம்போல அந்த இசை அவனுக்கு எதையோ ஞாபகப்படுத்துகிறது. அவன் மௌனமாக வீடு திரும்புகிறான் — யாரிடமும் இதுபற்றி ஒரு வார்த்தையும் சொல்லவில்லை. அது சொல்லுக்கு எட்டாத ஒரு விஷயம். ஸெல்லன்ராவிலிருந்து வருகிற ஸிவெர்ட்டுக்கு ஏற்பட்ட ஒரு அற்புதமான அனுபவம் இது! அவன் வாலிபன் — மிகவும் சாதாரணமான உள்ளம் படைத்தவன் — அவனுக்கு நேர்ந்தது இது!

இது ஒன்றுதானு? இதைப்போல இன்னும் எத்தனையோ? வாழ்க்கை மிகவும் சாதாரண வாழ்க்கையல்ல. ஸெல்லன்ராவை விட்டு ஜென்ஸின் போனுள். அதுவும் ஸிவெர்ட்டின் மனசை மிகவும் அதிகமாகக் குழப்பியது. ஆமாம். அவளாகவே போய்விட ஆசைப்பட்டாள். ஓ! அந்த ஜென்ஸின் அவள் லேசுபட்டவள் அல்ல. ஸிவெர்ட்டே ஒருதரம் வண்டியைத் திருப்பி ஓட்டிப் போய் அவளை அவள் வீட்டில் கொண்டுபோய் விட்டுவிடுகிறேன் என்றுன். அப்போது போக மறுத்துவிட்டாள். ஆனுல் அப்படி மறுத்ததுபற்றி அவள் வருத்தப்பட்டாள்; வருத்தப்பட்டதைத் தெரிவித்துக்கொண்டாள். அவள் நோட்டீசு கொடுத்துவிட்டுக் கிளம்பிவிட்டாள். போகிறேன் என்றுல் யார் தடுப்பார்கள்!

ஆனுல் அவள் போனது பற்றி இங்கருக்குத் திருப்திதான்— ஏனென்றுல் அந்த வேலைக்காரி அவளுக்குத் திருப்தியாக வேலை செய்யவில்லை. நேரடியாகச் சொல்லும்படியாக ஒன்றும் இல்லை. அவளைப் பார்த்தாலே கோபம் வந்தது. அவளைக்கண்ட உடனேயே கோபம் வந்துவிடும்! இங்கரின் அப்போதைய மனுநிலை அப்படியிருந்தது. அந்த நாட்களில் அவள் கடவுள் வழிபாட்டில் அதிகமாக ஈடுபட்டிருந்தாள் — வாய் ஓயாமல் பிரார்த்தனைகள் செய்துகொண்டே யிருந்தாள். "போகிருயா? சரி போ" என்று சொல்லிவிட்டாள் இங்கர். தன் பிராத்தனைக்குக் கடவுள் செவி சாய்த்துவிட்டார் என்று தோன்றியது இங்கருக்கு. இரண்டு வயதுவந்த பெண்கள் இருந்த இடத்திலே ஒரு வேலைக்காரிக்கு அவசியம் என்ன? தவிரவும் ஜென்ஸின் வயது வந்தவள் — கலியாண வயசை எட்டிக்கொண்டிருப்பவள் — என்ன வேலை செய்ய லாயக்கு அவள்? எந்த வேலையையும் அவளுக்கு ஒரு தடவைக்குப் பத்துத் தடவையாகச் சொல்லிக் கொடுத்தால்தான் வரும். அந்தக் கலியாண வயசு என்பதுபற்றித்தான் இங்கருக்குக் கோபம் வந்தது. தன் கலியாண வயசு ஞாபகம் வந்தது இங்கருக்கு.

அவளுடைய பிரார்த்தனை மோஹம் மறையவில்லை. அவள் கெட்டவள் அல்ல. ஆனுல் நகர வாழ்விலே அவள் சில சிறுசிறு குற்றங்களைப் புரிந்து அவற்றை ருசித்துப் பார்த்தவள். கிழவி ஆகும்வரையில் கெட்டவளாகவே இருந்துவிடுவது என்கிற உத்தேசமில்லை. அம்மாதிரி வாழ அவள் விரும்பவில்லை. சுரங்கமோ, சுரங்கக் கூலியாட்களோ அங்கில்லை இப்போது. கடவுளின் வழிகளை அறிபவர் யார்? பாவம் செய்யாதிருப்பது

அவசியம் — அதுதான் சரியான வாழ்வு. பாவம் செய்யாமல் வாழ்வதற்கு விரும்பினாள் இங்கர். ஆனால் உலகம் அவ்வளவு நேர்மையானது அல்ல. இதோ — இந்த லெபல்டின் எவ்வளவு சிறுமி, முளைவிட்டிருந்த கொழுந்துச் செடி அது. அவள் உடலிலே பாபகரமானதெம்பு இருந்தது. திடசாலி அவள்! அவள் இடுப்பில் எங்காவது ஆண்மகன் கை பட்டவுடனே அவள் பலமில்லாதவளாகிவிடுவாள். அவள் முகத்திலே பருக்கள் தோன்றின — அதுவே அவளுக்குச் சிற்றின்ப ஆசைகள் தோன்றத் தொடங்கிவிட்டன என்பதற்கு அறிகுறியல்லவோ! அவள் தாய்க்கும் அந்த வயசில் அப்படித்தானே இருந்தது. தன் குழந்தையைக் கேவலம் முகப் பருக்களுக்காகக் குற்றம் சொல்லவில்லை இங்கர். ஆனால் அந்தக் கடைக் குமாஸ்தா ஆண்டெர்ஸன் எதற்காக இப்படி ஞாயிற்றுக் கிழமை தவறாமல் அங்கு வந்துகொண்டிருந்தான்! ஐஸக்குடன் பண்ணை விஷயங்களைப் பற்றிப் பேசவா வந்தான் அவன்? அந்தப் பெண்ணுக்குக் கண்ணில்லை என்று எண்ணினார்களோ இரண்டு ஆண் பிள்ளைகளும். முப்பது நாற்பது வருஷங்களுக்கு முன் சிறுமியர் இருந்தது போலத்தான் இருந்தனர் இன்றையச் சிறுமிகளும்.

"அது இருக்கட்டும்" என்றான் ஐஸக். இதைப்பற்றி இங்கர் அவனிடம் சொன்னபோது: "வஸந்தம் வந்துவிட்டது. ஜென்ஸினையும் அனுப்பிவிட்டாய். வேலைகளை, எல்லாம் பார்ப்பது யார்?"

"லெபல்டினும் நானும் வைக்கோல் சேகரித்து விடுகிறோம்" என்றாள் இங்கர். "அவசியமானால் இரவு பகல் வேலை செய்கிறேன் நான்" என்றாள் அவள் கசப்பாக. அவளுக்கு அழுகையே வந்துவிட்டது.

இப்படி எல்லாம் ஆர்ப்பாட்டம் செய்ய என்ன விசேஷம் இருந்தது என்று ஐஸக்குக்குப் புரியவில்லை. ஆனால் அவளுக்கும் அதெல்லாம் பற்றிச் சிந்தனைகள் இல்லாமல் இல்லை. ஜென்ஸின் எதற்காக அவர்களை விட்டுப் போகவேண்டும்? நன்றாக வேலை செய்தாள். சிறுமி அவள். மண்வெட்டியையும் கோடாலியையும் எடுத்துக்கொண்டு கற்களைப் புரட்டப் போனான் ஐஸக். மிகவும் எளிமையான விஷயங்கள் தவிர வேறு எதுவும் அவனுக்குச் சரிவரப் புரிவதில்லை — அவன் வேலையைத்தவிர அவனுக்கு வேறு எதுவும் தெரியாது. இயற்கையை ஒட்டிய வாழ்க்கை வாழ்வது

ஒன்றுதான் அவனுக்குத் தெரியும். ஆஜானுபாஹுவான மனிதன் அவன் — அவன் மண்ணில் பிறந்து மண்ணில் உழைத்தவன். எதுவும் அவனை அசைக்காது.

இங்கு — எத்தனையோ கற்கள் இருந்தன — அவற்றில் ஒன்றில் வேலையைத் தொடங்கித்தானேயாக வேண்டும். ஐஸக் எதிர்காலத்தை எதிர் நோக்கியிருக்கிறான். தனக்கும் இங்கருக்கும் தனியாக அங்கு ஒரு சிறு வீடு கட்டிக் கொண்டாகவேண்டிய காலம் வரும். அதற்கான இடத்தைத் தயார்செய்வது அவசியம்தானே! ஸிவெர்ட் இங்கு ஸ்டார் போர்க்கில் வேலையாக இருக்கும்போது இந்த வேலையைச் செய்யலாம் — அனுவசியமான கேள்விகளுக்கு இடம் இராது. இன்னும் சில வருஷங்களிலேயே ஸிவெர்ட்டுக்குப் பண்ணையும் வீடுகளும் பூராவும் தேவையாகிவிடும். இங்கர் ஐஸக் என்கிற இரண்டு கிழங்களுக்கும் வேறு சிறு தனிவீடு தேவையாகத்தான் இருக்கும். ஸெல்லன்ராவில் கட்டிட வேலை என்றுமே ஒருவித முடிவுக்கும் வராது. வைக்கோலுக்காகப் புதுப் பரண்கள் கட்டிக் கொண்டிருந்தார்கள்.

இதோ—இருந்தக் கல். மேலே பார்த்தால் அவ்வளவாகப் பெரிதாகத் தெரியவில்லை. அதைச் சுலபத்தில் அசைக்க முடியாது. பெரிய கல்லாகத்தான் இருக்கவேண்டும். அதைச் சுற்றி ஆழமாக வெட்டிவிட்டு கடப்பாரையைக் கொடுத்து நெம்புகிறான். அசையவில்லை. மறுபடியும் அதிக ஆழம் வெட்டிவிட்டு நெம்புகிறான். அப்படியும் அசையவில்லை. வீட்டுக்குத் திரும்பிப் பெரிய மண்வெட்டி கொண்டுவருகிறான். வெட்டுகிறான். கல்லை நெம்பிப் பார்க்கிறான்—அசையவில்லை. பொறுமையிழக்க வில்லை ஐஸக்—கல் பெரிய கல்தான். ரொம்ப நேரம் சுற்றிலும் வெட்டினான் — பூமிக்குள் வெகு ஆழமாகப் பதிந்துகிடந்தது அந்தக் கல். அதை அசைக்கவே முடியவில்லையே! வெடிமருந்து வைத்து அசைத்துவிடலாம். ஆனால் அதற்கு அவசியமில்லாதிருந்தால் நல்லது. சத்தம் கேட்டு ஊரெல்லாம் கூடிவிடாதா? ரகசியமாகச் செய்கிற ஒரு காரியத்தை அம்பலப்படுத்த அவன் விரும்பவில்லை. மீண்டும் வெட்டினான். நீளக் கோல் கொண்டு வந்து கொடுத்து நிமிர்த்திப் பார்த்தான். கல் அசையவேயில்லை. ஐஸக்குக்குக் கோபம் வருவதுபோலிருந்தது. அசட்டுக் கல்— அசையவேமாட்டேன் என்கிறதே! ஒரு கல்லிடம் தோல்வியை ஒப்புக் கொள்வதா? அல்லது வெடிமருந்துச் செலவையும் சத்தத்

தையும் பொறுத்துக்கொள்ள வேண்டியதுதானே? சிரமப்பட்டு ஒரு ஆள் ஆழம் நீளமும் அகலமுமாக தோண்டினன் ஐஸக். கஷ்டமான வேலைதான் என்பதற்காக விட்டுவிடுவானு ஐஸக். மீண்டும் நெம்பினுன் கடப்பாரையைக் கொடுத்து. அதற்கும் கல் அசையவில்லை. அவன் யுக்திகளிலோ வேலையிலோ பிசகில்லை—கல்தான் பூமியில் அதிக ஆழம் பதிந்துகிடந்தது. இதற்முன் இந்தமாதிரிக் கற்களைப் புரட்டியதில்லையா அவன்? அவனுக்குத் தான் வயசு ஆகிக்கொண்டிருந்ததோ! வேடிக்கைதான் — ஹீ! ஹீ! ஹீ! பைத்தியக்காரத்தனம்தான்! உண்மையில் அவன் பலம் குறைந்து கொண்டிருந்தது என்பதை அவன் அதுவரை கவனிக்கவேயில்லையே! வெறும் கற்பனைதான்! மீண்டும் ஒருதரம் அந்தக் கல்லைப் புரட்ட முயலுகிருன்.

ராக்ஷஸன்தான் அவன். ஆனுல் கல் அசையவேயில்லை. அவனைப் பார்த்தால் உலகையே அசைத்து விடுவான்போல இருக்கிறது. ஆனுல் கல் அசையவில்லை. மீண்டும் ஆழமாகக் கல்லைச் சுற்றி வெட்டுகிருன். கடப்பாரையைக் கொடுத்து நெம்புகிருன். வெடிமருந்து தேடிக்கொண்டு போக வேண்டியது தானு? முடியாது. அவனே, வெடிமருந்தின் உதவியில்லாமல் அதைப் பெயர்த்துவிடுவது என்று தீர்மானிக்கிருன். முழு பலத்தையும் உபயோகித்து முயலுகிருன். கல் அசையவில்லை. அசைகிறமாதிரி ஒரு விநாடி தோன்றியது. பிறகு நெம்புகோல் வழுக்கியது—ஐஸக் இடறிக் கீழே விழுந்தான். "சைத்தான்!" என்றுன்—காறியுமிழ்ந்தான்.

அந்தச் சமயம் பார்த்து இங்கர் அங்கு வந்தாள். "வா, ஐஸக். வந்து சாப்பிடு" என்றுள். பிரியமாகவும் பரிவுடனும்.

"வரேன்." அவள் அருகில் வராமல் போய்விடமாட்டாளா என்றிருக்கிறது அவனுக்கு. ஆனுல் இங்கர் நெருங்கி வருகிருள். "என்ன செய்யப் போகிருய்?" என்று ஆச்சரியப்படத் தயாராகக் கேட்கிருள்.

ஆனுல் இன்று இப்போது ஐஸக்குக்குக் கோபம்தான் வருகிறது. "எனக்கே தெரியவில்லை."

இங்கர் அசடு! அவன் மனசு தெரியாமல் அங்கேயே நின்றுப் பேச்சுக் கொடுக்கிருள். "இந்தக் கல்லைப் புரட்டப் போகிருயா?"

"ஆமாம்" என்றான் ஐஸக்.

"நானும் ஏதாவது உதவி செய்யட்டுமா?"

ஐஸக் தலையை ஆட்டுகிறான். அவள் அப்படிச் சொன்னது அவனுக்குத் திருப்தியாக இருக்கிறது. கோபம் அடங்குவது போல இருக்கிறது. "இரு" என்று சொல்லிவிட்டு சுத்தியலும் உளியும் எடுத்து வர வீட்டுக்கு ஓடுகிறான். நெம்புகோலுக்குப் பள்ளம் பண்ணிப் பிடிப்பு ஏற்படுத்திவிட்டால் கல்லைப் புரட்டி விடலாம். உளியை இங்கர் பிடித்துக் கொள்கிறாள் — ஐஸக் சுத்தியலால் அடிக்கிறான், அடிக்கிறான், அடிக்கிறான். ஒரு சிறு துண்டு தெறிக்கிறது. "எனக்காகச் சாப்பாடு காத்திருக்க வேண்டாம். நான் சற்று நேரம் கழித்து வருகிறேன். நீ போ. உன் உதவிக்கு நன்றி."

அப்படியும் இங்கர் போய்விடவில்லை. அவள் அப்படி நின்று தன் வேலை செய்வதைக் கவனிப்பது ஐஸக்குக்குத் திருப்தியாக இருக்கிறது. அடி நாட்களில் கூட அப்படி அவள் நின்று பார்த்திருப்பது அவனுக்குப் பிரியமான காரியம்தான். நெம்புகோலுக்கு இப்போது பிடிப்பிருக்கிறது. கொடுத்துக் கல்லை அசைக்கிறான். கல் அசைகிறது.

"அசைந்தது" என்றாள் இங்கர்.

"ஒன்றும் அசையவில்லை" என்றான் ஐஸக்.

ஆனால் அசைந்தது என்கிறமட்டில் திருப்திதான். கல் சற்றே அசைகிறதே தவிர புரண்டு விடவில்லை. தம்பிடித்து நெம்புகோலால் நெம்புகிறான் — ஊஹூம். இங்கர் வேறு அங்கு நின்று அவனுடைய சக்தியின்மையைப் பார்த்துக் கொண்டிருக்கிறாள். அந்தக் கல்லுக்கும் அவனுக்கும் ஜன்மவிரோதம் போல இருக்கிறது! பார்க்கலாமே — கல் ஜயிக்கிறதா — ஐஸக் ஜயிக்கிறானா பார்க்கலாமே!

சற்றுத் தயக்கத்துடனேயே இங்கர் சொல்லுகிறாள். இந்தக் கடப்பாறையை நானும் பிடித்து அழுத்தட்டுமா?"

"வேண்டாம்" என்றான் ஐஸக் முதலில். பிறகு சொன்னான்: "நீயும் இதை இங்கு பிடித்து நெம்பு, அசையுமா பார்க்கலாம்."

இருவருமாகச் சேர்ந்து அந்தக் கல்லைப் புரட்டி நிமிர்த்தி விடுகிறார்கள். "அப்பாடி!" என்கிறான் ஐஸக்.

ஏன், இவ்வளவு சிரமப்பட்டு அந்தக் கல்லை அசைத்தான் என்பது இப்போதுதான் தெரிகிறது. அந்தக் கல்லின் அடிப் பாகம் பெரியதாகவும் வட்டமாகவும் தட்டையாகவும் இருக்கிறது. ஒரு பெரிய கல்லின் பேற்பாதி அது. அடிப்பாதி வேறு எங்கே யாவது பக்கத்திலோ அல்லது வெகு தூரத்திலோ கிடக்கும். வீட்டு வாசலிலே பதிக்க நல்ல கல். அப்படிப்பட்ட ஒரு கல்தான் அது என்று ஏற்கெனவே அறிந்தவன் போலப் பேசுகிறான் அவன். பை நிறையப் பணம் கொடுத்தால்கூட அவன் அவ்வளவு சந்தோஷப்பட்டிருக்க மாட்டான். பெருமையுடன், "நல்ல கல்" என்றான்.

"இவ்வளவு நல்ல கல் என்று உனக்கு எப்படித் தெரிந்தது?" என்று ஆச்சரியத்துடன் கேட்டாள் இங்கர்.

"தெரியாமலா இவ்வளவு கஷ்டப்பட்டேன்?"

இருவரும் வீட்டுக்குப் போகிறார்கள். தனக்கு ஏற்காத, நியாயமல்லாத ஒரு புகழை ஏற்றுக் கொள்ளுகிறான் ஐஸக். நியாயமோ அல்லவோ, புகழ் என்பது புகழ்தானே! வாசலில் பதிக்க ஒரு கல்தான் தேடிக்கொண்டிருந்தான் — இதுபோன்ற நல்ல கல் வேறு கிடையாது என்று அவனுக்கு எப்படித்தான் தெரிந்ததோ என்று ஆச்சரியப்பட்டாள் இங்கர். மறு பாதியைத் தேட ஸிவெர்ட்டு அவனுக்கு உதவி செய்வான்.

ஆனால் இப்போது விஷயம் இதுதான் — அவனால் ஒண்டியாக ஒரு கல்லைப் புரட்ட முடியாது என்று ஏற்பட்டுவிட்டது. அவன் பலசாலியாக இருந்த நாட்கள் எல்லாம் போய்விட்டன. கிழடு தட்டிக் கொண்டிருந்தது. இன்னாளில் அவன் ஒரு மூலைக்கு ஒதுங்கிவிட வேண்டியதுதான். அந்தக் கல் விஷயமாக அவன ஏற்றுக்கொண்டு ஆனந்தப்பட்ட அந்தப் புகழ் தற்காலிகமானது —அதிக நாள் நீடிக்காதது. அவன் முதுகுகூட இப்போது சற்று வளைந்துவிட்டமாதிரி இருந்தது. சில வருஷங்களுக்கு முன் எந்த வேலை என்றாலும், எந்தக் கல் என்றாலும் அவனுக்கு அலக்ஷியம்தான். அவனோடு போட்டிபோட எவ்வளவு பலசாலியாலும் முடியாது. வடிகால் வெட்டுகிற வேலையில் அவனுக்கீடு அவனேதான். இப்போது அதிலெல்லாம் ஒரு ஆயாசம் தோன்றத் தொடங்கிவிட்டது அவனுக்கு. அட கடவுளே! எவ்வளவு மாறுதல்கள்! அந்த நிலங்களிலேதான் எவ்வளவு மாறுதல்! முன்னெல்லாம் வெறும் காடு—இப்போது காடு பெரும்

பகுதி அழிந்துவிட்டது. உள்ள காடுகளையும் தாண்டி தந்திக் கம்பிகள் ஓடின. கற்பாறைகளைக்கூட வெடிமருந்து வைத்துத் தகர்த்து உருமாற்றிவிட்டார்கள். மனிதர்களும் மாறவேண்டியது தானே! முன்னெல்லாம் ஐஸக்கைப் பார்ப்பவர்கள் வணக்கம் சொல்லமாட்டார்கள்—ஒதுங்கிப் போவார்கள், அல்லது தலையை ஆட்டுவார்கள். இப்போது அந்தப் பக்கத்திலிருந்தவர்கள் எல்லோரும் ஐஸக்குக்கு வணக்கம் சொன்னார்கள். ஸெல்லன் ராவின் சொந்தக்காரன் அல்லவா? இப்போது ஸெல்லன்ரா மிகப் பெரிய பண்ணை—ஜமீன் அது! அந்த நாட்களில் அங்கு ஒரு மண் குடிசை மட்டும்தான் இருந்தது. இப்போது மிராசுதார் ஐஸக் பெரிய பண்ணைக்காரன்—மார்க்ரேவ் என்கிற பட்டத்துக்கு உரியவன்.

மார்க்ரேவ்தான். பெரிய பண்ணைக்காரன்தான். இருந் தாலும் என்ன லாபம்? கிழவனாகிக் கொண்டிருந்தான் அவன் — பலத்தை இழந்து கொண்டிருந்தான். நன்றாகச் சாப்பிடவும் சாப்பிட்டதை ஜீரணிக்கவும் சக்தியிருந்தது அவனுக்கு. ஸிவெர்ட் தான் இப்போது பலசாலி — அவன் பலம் ஐஸக்குக்கும் இருந்தால்...! பாவம்! இப்படியா ஆகவேண்டும் அவன்? ஒரு ராக்ஷஸன்போலச் சுமை தூக்கி மரம்வெட்டி நிலத்தில் வேலை செய்தான் அவன். இப்போது அவன் ஓய்வெடுத்துக்கொள்ள வேண்டிய நாள்போலும்!

ஐஸக் சோர்ந்திருக்கிறான். அவனுக்கு வருத்தமாக இருக் கிறது.

தரையிலே கிடக்கிறது ஒரு தொப்பி—அது மடித்து மண் ணாகிக் கொண்டிருக்கிறது. காற்றிலே அடித்து வந்திருக்கும்— அல்லது பசங்கள் சிறுவர்களாக இருக்கும்போது அங்கே போட்டுவிட்டு மறந்திருப்பார்கள்! அதைக் கவனிப்பாரில்லை— மக்கி மண்ணாகிக் கொண்டிருக்கிறது. அந்தத் தொப்பியைப் புதுசாகக் கடையிலிருந்து வாங்கி வந்த நாள் ஞாபகம் இருக்கிறது ஐஸக்குக்கு.

## 10

ஒரு ஸ்திரீ பாதையோடு நடந்துவருகிருள். கோடை மழை விழுந்து அவளை நனைக்கிறது. அதை அவள் லக்ஷியம் செய்ய வில்லை. அவள் மனசில் வேறு ஏதோ கவலை தேங்கியிருக்கிறது. பார்ப்ரோதான் அது — வேறு யாரும் இல்லை — பார்ப்ரோதான. அவள் கவலை இதுதான் — அவள் போகிற காரியம் எப்படி முடியுமோ என்னவோ? லென்ஸ்மாண்டின் வீட்டையும், கிராமத் தையும் விட்டுக் கிளம்பிவிட்டாள் அவள். வழியிலுள்ள பண்ணைப் பக்கம் போகவில்லை அவள். யாரையும் அவள் சந்திக்க விரும்ப வில்லை. எங்கு போகிருள் அவள்? ஒரு சிறு மூட்டையை எடுத்துக்கொண்டு வருகிருள்—எங்கு? மேன்லாந்துக்குத்தான்— வேறு எங்கே?

லென்ஸ்மாண்டின் வீட்டிலே அவள் பத்து மாதங்கள் தங்கி விட்டாள். நாள் கணக்கில் அதிகமல்லதான். ஆனல் ஏக்கம். ஆசை அடிமைப்பட்டது என்று பார்த்தால் எல்லையற்றது என்று சொல்லத் தோன்றும். ஆரம்பத்தில் ஹேயர்தாலின் மனைவி அவளைச் சரிவரக் கவனித்துக்கொண்டாள் — இரக்கத்துடன். கிராமத்தில் பார்ப்ரோவை அறியாதவர்கள் யார்? ஆனல் ஒரு மாதத்திற்குள்ளாகவே அது சலித்துவிட்டது. ஹேயர்தாலின் மனைவியும் அவளை அடிமைபோல் நடத்தினள். கட்டுக் காவல் அளவு கடந்து போய்விட்டது. சமையற்காரியின் உதவியால் திருட்டுத்தனமாக வெளியே போய்வந்தாள் பார்ப்ரோ. ஒரு இரவு சமையற்காரி வெளியே போவாள் — மறு இரவு பார்ப்ரோ போவாள்.

இது வெளிவரச் சில காலம் பிடித்தது. அப்படி ஒன்றும் கெட்டுப் போனவள் அல்ல அந்த பார்ப்ரோ. வாலிபர்கள் அவளை நாட்டியமாட அழைத்தால் முதலில் மாட்டேன் என்பாள் — இரண்டாந்தரமும் மாட்டேன் என்றுதான் சொல்லுவாள். மூன்றும்தரம்தான் சம்மதிப்பாள். அப்படி ஒன்றும் எல்லா வற்றிற்கும் துணிந்த கட்டையல்ல அவள். வேலைக்காரிதானே அவள்—நாள் பூராவும் வேலை செய்துவிட்டு இரவில் துளி இன்பம் கூட இல்லாமல் காலந் தள்ளுவதுதான் எப்படியாம்?

ஹேயர்தாலின் மனைவிக்கு எப்படித்தான் சந்தேகம் வந்ததோ? ஒரு நாள் காலை மூன்று மணிக்கு பார்ப்ரோவைத் தேடினுள். பார்ப்ரோ இல்லை. சமையற்காரிதான் இருந்தாள்.

"பார்ப்ரோ எங்கே?"

ஏற்கெனவே ஏற்பாடு செய்துகொண்டபடி பார்ப்ரோ தன் தகப்பனின் வீட்டுக்குப் போயிருப்பதாகச் சமையற்காரி சொல்லுகிறுள். இந்த நேரத்திலா? அதுபற்றி லென்ஸ்மாண்டின் மனைவி சொல்ல விரும்புவது நிறையவே இருக்கிறது. காலையில் அமர்க்களப்படுத்துகிறுள். ப்ரேடுக்கு ஆளனுப்பி அழைத்து விசாரிக்கிறுள். ப்ரேடுக்கு விஷயம் தெரியவில்லை — ஆனுல் புரிந்துகொண்டு ஆமாம் என்கிறுன். "ஏதோ அவசரமாகப் பேச விஷயம் இருந்தது — நான்தான் அவளைக் கூப்பிட்டேன்" என்கிறுன்.

இனிமேல் இரவு நேரத்தில் ப்ரேட்கூடத் தன் மகளைக் கூப்பிடக் கூடாது என்கிறுள் லென்ஸ்மாண்டின் மனைவி.

"பகலில் போகலாம் பார்ப்ரோ! இனி இரவில் போகாதே."

ஆனுல் அவளுடைய சந்தேகம் மறைந்துவிடவில்லை. ஒரு வாரம் கழித்து ஒரு நாள் காலையில் ஒரு மணிக்கு பார்ப்ரோவைத் தேடினுள். அன்றிரவு சமையற்காரியின் முறை. பார்ப்ரோ தூங்கி விழித்தெழுந்து வந்தாள். யசமானி ஏதாவது சாக்குச் சொல்ல வேண்டுமே: "உலர்த்திய துணிகளை எடுத்து வைத்தாயோ?" என்று கேட்டாள்.

"வைத்தேன்."

"நல்லது, போய்ப் படு." ஹேயர்தாலின் மனைவிக்கும் இது பெரிய தொந்தரவாகத்தான் இருந்தது. விடியற்காலையில் கணவனை எழுப்பி விஷயத்தைச் சொல்லிவிட்டு அந்த வேலைக்காரச் சிறுக்கியைக் கண்காணிப்பது சிரமமாகத்தான் இருந்தது. போகட்டும் எப்படியாவது என்று விட்டுவிட்டாள். பார்ப்ரோவின் துரதிருஷ்டம்தான் — இல்லாவிட்டால் அந்த வருஷம் பூராவுமே அவள் லென்ஸ்மாண்டின் வீட்டிலேயே தங்கியிருந்திருக்கலாம். சமையற்காரிக்கும் பார்ப்ரோவுக்கும் சண்டை வந்துவிட்டது. சமையற்காரி உண்மையை ஹேயர்தாலின் மனைவியிடம் தெரிவித்துவிட்டாள். ஒன்றுவிட்டு ஒருநாள் இரவு பார்ப்ரோ வெளியே போவதைச் சொல்லிவிட்டாள். ஹேயர்தாலின்

மனைவிக்கு மஹா கோபம். அவளுக்கு சமையற்காரியைப்பற்றி அக்கரையில்லை. பார்ப்ரோவை பற்றி மட்டுமே அவளுக்குக் கவலை. அப்படியும் கூடப் பார்ப்ரோ பேசாதிருந்திருந்தாளானால் ஒன்றும் நடந்திராது. இனிமேல் அப்படியெல்லாம் நடக்காது என்று உத்திரவாதம் தந்திருந்தாளானால் போதும். அது செய்யவில்லை அவள்.

"நான்தானே சிறை செல்லாமல் உன்னைக் காப்பாற்றியது?"

"சிறை போயிருந்தாலே தேவலை."

"உன் நன்றி இதுதானே?" என்றாள் யஜமானி.

பார்ப்ரோ சொன்னாள்: "அதைப்பற்றி யெல்லாம் அதிகம் பேசாதிருப்பதே நல்லது. ஒரு மாதம் இரண்டு மாதம் ஜெயிலில் இருந்துவிட்டு வந்திருப்பேன்."

ஒரு நிமிஷம் யசமானியம்மாளுக்குப் பேசவே முடியவில்லை. திணறிப் போய்விட்டாள். பிறகு அவள் போய் விடுவது நல்லது —இங்கு இனி இருக்கக் கூடாது என்றாள்.

"போகிறேன்" என்று கிளம்பிவிட்டாள் பார்ப்ரோ. சில நாட்கள் தன் பெற்றோர்களுடன் தங்கினாள். ஆனால் ஆயுள் பூராவும் அவர்களுடனே தங்கமுடியுமா? ஆக்ஸெல் ஸ்டிராமைத் தேடிக் கொண்டு ஒரு நாள் கிளம்பினாள். ஆக்ஸெல் அவளை ஏற்றுக் கொள்வானா? அதுதான் கேள்வி.

மழை பெய்கிறது. கீழே ஒரே சகதி. பார்ப்ரோ நடக்கிறாள். மாலை நேரமாகிவிட்டது. ஆனால் இன்னும் இருட்டிவிடவில்லை. பாவம் பார்ப்ரோ! ஒரு குறிக்கோளுடன் நடக்கிறாள் அவள்—அங்கு போய் என்ன போராட்டம் துவங்க வேண்டுமோ. இரவில் மேன் லாந்தை அடைகிறாள் அவள். அங்கு ஒரே அமைதியாக இருக்கிறது. வைக்கோல் போர் போட்டு விட்டான் ஆக்ஸெல். வீட்டண்டையிருந்த புல்லெல்லாம் வெட்டியாகிவிட்டது. சுற்று முற்றும் பார்த்தாள். ஒலென் வீட்டில் படுத்திருப்பாள் — முன்பு தான் படுத்திருந்த இடத்தில் இப்போது ஆக்ஸெல் படுத்திருப் பான் என்று நினைக்கிறாள் பார்ப்ரோ. திருடன் போலச் சந்தடி செய்யாமல் அடிமேல் அடிவைத்து நடந்து போய் "ஆக்ஸெல்" என்கிறாள்.

"யார் அது?" என்கிறான் ஆக்ஸெல்.

"நான்தான்" பார்ப்ரோ என்கிறாள். வைக்கோல் பரணுக்குள் போகிறாள். "ஓரிரவு நான் இங்கே தங்கலாமா?"

ஆக்ஸெல் அவளேயே பார்க்கிருன். விஷயத்தைப் புரிந்து கொள்ள அவனுக்குச் சிறிது நேரமாகிறது. "நீயா? எங்கே போய்க் கொண்டிருக்கிருய்?" என்கிருன்.

"நான் எங்கே போகிறேன் என்பது என்னைப் பொறுத்தது. கோடையில் உனக்கு என் உதவி தேவையா இல்லையா?"

ஆக்ஸெல் யோசிக்கிருன்: "முன் இருந்த இடத்திற்குப் போகப் போவதில்லையா நீ?"

"இல்லை. அதை விட்டு வெளியேறிவிட்டேன்."

"எனக்கு உதவி தேவைதான். நீ திரும்பி இங்கு என்னுடன் வந்து இருக்க ஆசைப்படுகிருயா? எனக்குப் புரியவில்லையே!" என்கிருன் ஆக்ஸெல்.

"என்னைப்பற்றி என்ன?" என்கிருள் பார்ப்ரோ. "நான் போகிறேன். ஸெல்லன்ரா தாண்டி மலைகள் தாண்டிப் போகிறேன். எனக்குப் போக இடம் இருக்கிறது."

"யாரிடமாவது சேருவதாக ஒப்புக் கொண்டிருக்கிருயா?"

"ஆமாம்."

"ஆனல் கோடையில் எனக்கு உன் உதவி தேவைதான்" என்கிருன் ஆக்ஸெல் மறுபடியும்.

பார்ப்ரோவின் ஆடைகள் எல்லாம் நனைந்துவிட்டன. அவள் காத்தில் உலர்ந்த ஆடைகள் இருக்கின்றன. மாற்றிக்கொள்ள வேண்டும். "என்னைப் பற்றி என்ன?" என்று கேட்டுக் கொண்டே ஆக்ஸெல் கதவண்டைபோய் நின்ருன். வெளியே போய்விடவில்லை.

தன்னுடைய ஈரத்துணிகளை ஒன்றன்பின் ஒன்ருகக் களைகிருள் பார்ப்ரோ. இருவரும் பேசிக்கொண்டேயிருக்கிருர்கள். ஆக்ஸெல் திரும்பித் திரும்பி அவளைப் பார்க்கிருன். "வெளியே போயேன்" என்கிருள் பார்ப்ரோ. ஆனல் வெளியே எப்படிப் போவது, மழை கொட்டுகிறது. அவள் ஆடைகள் ஒவ்வொன்ருக நழுவி விழுவதைப் பார்த்துக்கொண்டே நிற்கிருன் ஆக்ஸெல். அவனல் கண்களைத் திருப்பவே முடியவில்லை. பார்ப்ரோவும் அலக்ஷியமாகத் துணிகளைக் களைகிருள். உலர்ந்ததைப் போட்டுக் கொண்டு ஈரத்தைக் களையலாம்—ஆனல் முதலில் ஈரத் துணிகளைக் களைகிருள் அவள். அவள் ஸ்தனங்களை விட்டுக்

கண்களை எடுக்கமாட்டாமல் நிற்கிறான் ஆக்ஸெல். அடுத்தவிநாடி அவள் நிர்வாணமாக நின்றாள் — அசட்டுப் பெண். என்ன அழகு! அழகிதான் அவள்.

சிறிது நேரம் கழித்து இருவரும் பேசிக்கொண்டே படுத்திருக்கிறார்கள். கோடையில் அவனுக்கு உதவி தேவைதான் — சந்தேகமில்லை.

"அப்படித்தான் நான் நினைத்தேன்" என்றாள் பார்ப்ரோ.

அறுவடை தொடங்கிவிட்டான் அவன். மீண்டும் தனியாகத்தான் வயல்களில் வேலை செய்தான் அவன். பார்ப்ரோவுக்குத் தெரியாதா? அவளேதானே அவனை விட்டுவிட்டுப் போனாள்? அவன் அதை எப்படி மறக்கமுடியும்? மோதிரங்களைக்கூட எடுத்துப் போனாளே! அதுமட்டுமா — வருஷ சந்தா கட்டிய பெர்கன் பத்திரிகை தொடர்ந்து வாராவாரம் வந்துகொண்டேயிருந்தது. மறு வருஷத்துக்கும் அவன் அதற்குச் சந்தா கட்டும்படியாகிவிட்டது.

"என்ன அநியாயம்?" என்று அவன் கக்ஷி பேசினாள் பார்ப்ரோ.

இந்தப் புதுப் பார்ப்ரோவைப் பார்த்து ஆக்ஸெலின் மனம் இளகுகிறது. அவள் தகப்பனிடம்வந்து அந்தத் தந்தி இலாகா வேலையைத் தான் பறித்துக்கொண்டு விட்டதுபற்றி அவளுக்கு அவனிடம் கோபம் இருக்கலாம். அது நியாயம்தான். "உன் தகப்பனார் வேண்டுமானால் அதைத் திருப்பி எடுத்துக்கொள்ளட்டும். வீண் பொழுதுபோக்கு அது" என்றான் ஆக்ஸெல்.

"பார்க்கலாம்."

ஆக்ஸெல் சிறிது நேரம் தயங்கினான். பிறகு நேரடியாகவே கேட்டான்: "கோடைக்கு மட்டும் வரப்போகிறாயா அல்லது...?"

"உன்னிஷ்டம்" என்றாள் பார்ப்ரோ.

"நிஜமாகவா?"

"ஆமாம். உன்னிஷ்டம் எதுவோ அதுதான் என்னிஷ்டமும். நீ எப்படிச் சொன்னாலும் திருப்திதான் எனக்கு. என்னைப்பற்றி நீ இனிச் சந்தேகப்படவேண்டாம்."

"ம்...ம்..."

"ஆமாம், இது உண்மை. ஆலயத்தில்கூடச் சொல்லச் சொல்லிவிட்டேன்."

அப்படியா? அப்படியானால் உண்மைதான். வெகுநேரம் அதைப்பற்றி யோசித்தான் ஆக்ஸெல். மறுபடியும் ஏமாற்றி விடுவாளோ அவள்? "எங்கள் பக்கத்திலிருந்து ஒரு ஸ்திரீக்கு எழுதினேன். அவளும் வரச் சம்மதித்தாள். ஆனால் அமெரிக்காவிலிருந்து இங்கு வர அவளுடைய செலவை நான் ஏற்றுக்கொள்ள வேண்டும்."

"ஹோ! அமெரிக்காவிலிருக்கிறாளா அவள்?"

"போனவருஷம் போனாள். வரேன் என்கிறாள்."

"அவளைப்பற்றி என்ன? அவள் வந்தால் நான் என்ன ஆவது?" அழாத குறையாகக் கேட்டாள் பார்ப்ரோ.

"நிச்சயமாக வா என்று இன்னும் எழுதவில்லை நான்."

இவ்வளவுக்குப் பிறகு பதிலுக்குப் பார்ப்ரோவும் ஏதாவது சொல்லவேண்டாமா? பெர்கன் நகரில் பணக்கார வண்டிக்காரன் ஒருவன் அவளுக்காகக் காத்திருந்தான். "எனக்காகப் பெருமூச்சு விட்டுக் கொண்டிருக்கிறான் அவன்" என்று சொல்லிவிட்டுப் பெருமூச்சுவிட்டாள் பார்ப்ரோ. "ஆனால் உன்னைவிட்டுப் போக எனக்கு மனசில்லை ஆக்ஸெல். நீயும் நானும்தான் தோது. உன்னை மறக்க என்னால் முடியவில்லை. நீதான் என்னை மறந்து விடுவாய்."

"நானா? நானா?" என்றான் ஆக்ஸெல். "அதுபற்றி நீ கவலையேபட வேண்டியதில்லை பெண்ணே! உன்னை எப்படி நான் மறப்பேன்?"

"அப்படியா?" பார்ப்ரோவுக்கு இப்போது திருப்திதான். அமெரிக்காவிலிருந்து பணச் செலவு செய்து ஒருத்தியை அழைப்பானேன். "உனக்காக அவள் வரவேண்டியதில்லை என்று எழுதி விடு..." அவசியம் என்ன? பணம் ஏராளமாக ஆகுமே. அவனைச் சந்தோஷப்படுத்த பார்ப்ரோதான் காத்திருந்தாளே!

இரவிலேயே அவர்கள் ஒரு முடிவுக்கு வந்துவிட்டார்கள். ஒருவருக்கொருவர் அந்நியர் அல்லவே! தவிரவும் இதெல்லாம் முன்னரே ஒருதரம் பேசிய விஷயங்கள்தானே! கல்யாணச் சடங்கைக் கூட அந்த ஓலாவின் தினத்தில் முடித்து விடுவதாக முடிவு செய்தார்கள். எவ்வளவு சீக்கிரம் ஆகுமோ அவ்வளவு சீக்கிரம் என்றாள் பார்ப்ரோ. அவள் அப்படி அவசரப்பட்டது ஆக்ஸெலுக்கும் திருப்தியாகத்தான் இருந்தது. அவன் என்ன? குடியானவன். எருமைத்தோல் படைத்தவன். எதையும் அமைதி

வாக ஆய்ந்து ஆய்ந்து பார்க்க அறியாதவன். அவன் செய்ய வேண்டியது எத்தனையோ இருந்தது. எது அவனுக்கு உதவும் என்பதுதான் அவன் கவலை. தவிரவும் இந்த பார்ப்ரோ; அழகி — வாலிபப் பெண். முன்னைவிட அதிகமாக இன்பவெறி யூட்டினாள் அவள். ஆப்பிள்பழம் பழம் அவள் — கடித்துத் தின்ன அவனுக்கென்ன ஆக்ஷேபம். திருமணச்செய்தியை ஆலயத்திலும் சொல்லியாகி விட்டதாம்? பின் என்ன?

இறந்த குழந்தையையோ, விசாரணையையோபற்றி இருவரும் எதுவும் பேசவில்லை. ஆனால் அவர்களிருவரும் ஒலினைப் பற்றிப் பேசத்தான் பேசினார்கள். அவளைப் போகச் சொல்வது எப்படி என்று யோசித்தார்கள். "அவள் போக வேண்டியதுதான். அவளுக்கு நாம் எப்படிக் கடமைப்பட்டவர்கள்! வம்பும் குரோதமும் தான் அவள் சுபாவம்!"

ஒலினை வெளியேற்றுவது அவ்வளவு சுலபமான காரியமாக இல்லை. பார்ப்ரோ அங்கு தோன்றியவுடனேயே ஒலினுக்கு விஷயம் புரிந்துவிட்டது. தான் இனி அங்கு அதிக நாள் தங்க முடியாது என்பது அவளுக்குத் தெரியாதா என்ன? ஆனால் அதை அவள் காட்டிக் கொள்ளவில்லை. நாற்காலியைப் போட்டுக் கொண்டு அதில் உட்கார்ந்துவிட்டாள். மேன்லாந்துப் பண்ணையை ஆக்ஸெலும் ஒலினுமாகத்தான் இதுவரை சமாளித்து வந்தனர். பெரிய கனமான வேலைகளை ஆக்ஸெல் செய்தான். லகுவான வேலைகளை ஒலின் செய்தாள். தன் ஆயுள்பரியந்தம் அங்கு தங்கிவிடலாம் என்றுதான் ஒலின் எண்ணியிருந்தாள். இப்போது அவளை விரட்ட பார்ப்ரோ வந்துவிட்டாளே!

"காப்பி இருந்தால் போட்டுத்தருவேன்" என்றாள் ஒலின் "மேலே போகிறாயோ நீ."

"இல்லை."

"எனக்குச் சம்பந்தம் இல்லை. என்றாலும்..."

"நான் இங்கேதான் இருக்கப்போகிறேன்" என்றாள்பார்ப்ரோ.

"இங்கே தங்கப் போகிறாயா?"

"ஆமாம்."

"அதுவும் நல்லதுதான். என்னால் வேலையெல்லாம் செய்ய முடியவில்லை. சந்தோஷம்" என்றாள் ஒலின்.

"அப்படியா? ஆக்ஸெல் உன்னை ரொம்பவும் கடுமையாக வேலை வாங்கினானா?"

"கடுமையாகவா? அப்படியெல்லாம் ஒன்றும் இல்லை. அவன் என்னைத் தன் சொந்தத் தாயைப் போலத்தான் நடத்தினுன். ஏதாவது நீ சொல்லி எனக்கும் அவனுக்கும் சண்டை மூட்டி விடாதே. ஆனல் நான் தனியாக எவ்வளவு காலம் இங்கிருப்பது? உற்ருர் உறவினரை எல்லாம் விட்டு வந்து..."

இப்படியெல்லாம் சொன்னுளே தவிர ஒலேன் அங்கேதான் தங்கினுள். கல்யாணச் சடங்குகள் முடியுமட்டும் இருக்கிறேன் என்கிறமாதிரிச் சொன்னுள். கிராமத்துக்குப் போய் இரண்டு நாட்களில் சடங்குகளை முடித்துக்கொண்டு திரும்பினுர்கள். அதற்குப் பிறகும் ஒலேன் கிளம்பிவிடவில்லை. கிளம்புவதை ஒவ்வொரு நாளாகத் தள்ளிப் போட்டுக் கொண்டே வந்தாள். ஒரு நாள் உடம்பு சரியாக இல்லை என்ருள். ஒரு நாள் மழை பெய்யும் போல இருக்கிறதே என்ருள். பார்ப்ரோவிடம் நைச்சியமாகப் பேசினுள். மேன்லாந்தின் உணவின் தரம் உயர்ந்துவிட்டது. அடிக்கொரு தரம் பார்ப்ரோவின் அபிப்பிராயத்தைக் கேட்டாள் ஒலேன். முதலில் எந்தப் பசுவைக் கறப்பது என்பாள்.

"உன்னிஷ்டம்."

"சரியான பதில்" என்பாள் ஒலேன். "நீ நகரில் வசித் திருக்கிருய்—சீமாட்டிகளிடையே சீமாட்டியாக. எந்தக் கேள்விக்கு என்ன பதில் தருவது என்று உனக்குத் தெரிகிறது. நான் காட்டுமிராண்டி. நகரத்துப் பழக்கம் சிறிதும் இல்லாதவள்..."

நாள் பூராவும் ஒலேனுக்கு இதுதான் வேலை—பார்ப்ரோவைப் புகழ்வதுதான் வேலை. ப்ரேட் ஓல்ஸன் — பார்ப்ரோவின் தகப்பனும் நானும் எவ்வளவு சிநேகிதம் என்பாள் ஒரு நாள். அவனைப் போல மனிதன் உண்டா என்பாள் — இரக்கமான மனிதன். பணக்காரன், கடுஞ்சொல்லே சொல்லியறியாதவன் என்று அவனைப் புகழுவாள்.

ஆனல் இப்படியே எத்தனை நாளைக்குத்தான் நடக்கும்? ஆக்ஸெலுக்கோ பார்ப்ரோவுக்கோ அந்தக் கிழவியை இன்னமும் அங்கு தங்கவிட இஷ்டமில்லை. வேலைகூட அவளைச் செய்ய விடுவதில்லை பார்ப்ரோ. ஒலேன் முணுமுணுக்கவில்லை. தன் சூழ்ச்சி பலிக்காது என்று கண்டதும் தன் "குரலைச்" சற்றே மாற்றிக் கொண்டாள். "பெரியவர்கள் நீங்கள். அறுவடைக் காலத்தில் ஆக்ஸெல் நகரத்துக்கு விஜயம் செய்தானே! அப்போது நீ அவனைப் பார்த்தாயோ? அறுவடை யந்திரம், ஏர்க்கலப்பை

இரண்டும் கொண்டுவந்தான். ஸெல்லன்ரா ஜனங்கள்கூட உங்களிடம் தோற்றுவிட்டார்கள் போங்கள்!"

அவள் கிண்டலாகப் பேசியதெல்லாம் ஆக்ஸெலுக்கோ பார்ப்ரோவுக்கோ உறைக்கவில்லை. அவள் 'என்ன சொன்னால் என்ன? அவளிடம் அவர்களுக்கென்ன பயம்? அவளை போ என்று நேரடியாகவே ஒரு நாள் ஆக்ஸெல் சொல்லிவிட்டான்.

"போவதா? எங்கே எப்படிப் போவது?" என்றாள் ஒலேன். அவளுக்கு உடம்பே சரியாக இல்லை. வேலையும் ஒன்றும் இல்லாத தால் ஒரு இடத்தில் முடங்கிக் கிடப்பாள். ஆக்ஸெல் அவளை விழித்துப் பார்த்துப் பிரயோசனம் என்ன? நிஜமாகவே உடம்புக்கு வந்துவிட்டது அவளுக்கு. படுத்த படுக்கையாகி விட்டாள். சாவதற்குத் தயாராக இல்லை அவள். தனக்கு உடம்பு சரியாகி விடும். எழுந்து மீண்டும் நடமாடலாம் என்றுதான் நினைத்தாள் அவள். அந்தக் கப்பல் பிரதேசத்திலே அதுவரை நடைபெறாத ஒரு விஷயம் சொன்னாள் அவள் — ஒரு டாக்டரைக் கூப்பிட்டுக் கொண்டு வா என்றாள்.

"டாக்டரா? உனக்குப் பைத்தியம் பிடித்துவிட்டதா?" என்றான் ஆக்ஸெல்.

மெதுவாக "என்ன அது?" என்று விஷயமே தெரியாதவள் மாதிரிக் கேட்டாள் ஒலேன். டாக்டருக்குப் பணம் நானே தருகிறேன்—என்றால் உங்களுக்கு எதற்குச் சிரமம் என்றாள்.

"அப்படியா? உன்னிடம் பணம் இருக்கிறதா?" என்றான் ஆக்ஸெல்.

"என், தரமுடியாதா? ஆடுமாடு சாவதுபோல டாக்டர்கூட இல்லாமல் நான் சாகவிடுவாயா நீ?"

பார்ப்ரோ சொன்னாள்: "ஏன் வீணாகக் கூப்பாடு போடுகிறாய் —உனக்கு என்ன சிரமம். சும்மாப் படுத்துக்கிட. நானே சாப்பாடு முதலியன கொணர்ந்து தருகிறேன். உனக்கென்ன கவலை? காப்பி வேண்டாம்—அது உடம்புக்கு—அதுவும் இந்த நிலையில் —கெடுதல்."

"பார்ப்ரோவா?" என்று கேட்டுக்கொண்டே ஒலேன் கண்களை மட்டும் திருப்பி அவளைப் பார்த்தாள். "ஒரு ஸ்பூன் காப்பி சாப்பிட்டால் அதனால் கெடுதலோ?" என்று கேட்டாள்.

"உன் நிலையில் நான் இருந்தால் காப்பியைப்பற்றி நினைக்க மாட்டேன்."

ஒலேன் சொன்னாள்: "நீ நல்லவள். எனக்குக் கெடுதியையா விரும்புவாய்? அது சரி. நீ மறுபடியும் கர்ப்பமுற்றிருக்கிறாயா, என்ன?"

பார்ப்ரோவுக்குக் கோபம் வருகிறது: "நீயும் உன் வாயும்! படுக்கையோடு உன்னைக் குப்பைத் தொட்டியில் எறிந்துவிட்டால் என்ன என்று தோன்றுகிறது."

ஒரு நிமிஷம் ஆழ்ந்த யோசனையில் மௌனமாக இருக்கிறாள் ஒலேன். அவள் சிரிக்க முயலுவதுபோல இருக்கிறது — ஆனால் சிரிக்கத் தைரியம் வரவில்லை. "நேற்றிரவு யாரோ வந்து கூப்பிடுகிறமாதிரி இருந்தது" என்றாள்.

"அவள் புத்தி தடுமாறிவிட்டது" என்றான் ஆக்ஸெல் மெதுவாக.

"அதெல்லாம் ஒன்றுமில்லை. யாரோ கூப்பிடுகிறமாதிரி இருந்தது. காட்டுப் பக்கத்திலிருந்து — அல்லது அந்த ஆற்றங் கரையிலிருந்தாவது இருக்கலாம். யாரோ குழந்தையின் குரல்... ஏன்? ஏன்? பார்ப்ரோவா வெளியே போனது?" என்றாள் ஒலேன்.

"ஆமாம். உன் பிதற்றலைக் கேட்க மனசில்லாமல் பார்ப்ரோ போய்விட்டாள்."

"பிதற்றலா? நிஜம் அது. அது போகட்டும். நான் சாக நாள் வரவில்லை. மறுபடியும் எழுந்து நடமாடுவேன். டாக்டரை அழைத்து வா" என்றாள் ஒலேன்.

"ம்...ம்..."

"எனக்கு ஒரு பசு தருவதாகச் சொன்னாயே நீ?"

"பசுவா? எது பசு?"

"எனக்குத் தருவதாக,நீ..."

"பைத்தியம்தான் உனக்கு." என்றான் ஆக்ஸெல்.

"நான் உன் உயிரைக் காப்பாற்றின அன்று எனக்கு ஒரு பசு தருவதாகச் சொன்னாயே நீ"

"சொன்னேனா? நிஜமாகவா?"

கைகளைக் கூப்பிக் கொண்டே அவனைப் பார்த்தாள் ஒலேன் ராக்ஷஸி அவள். அழகில்லாதவள், மந்திரக்காரி, சூனியக்காரி மாதிரி இருந்தாள் அவள்.

"தருகிறேன் என்றுசொன்னதை இல்லை என்கிறாயா? அப்படிப் பட்ட மனிதன் நீ! அதுபற்றி நான் இனிப் பேசவில்லை. ஆனால்

எப்படிப்பட்ட மனிதன் நீ என்று தெரிந்து கொண்டதுபற்றி எனக்குச் சந்தோஷம்தான். அந்தப் பசு இல்லாமல் வாழ எனக்குத் தெரியும்'' என்ருள் ஒலீன்.

ஆனல் அவள் அன்றிரவு இறந்துவிட்டாள். எப்பொழுது இறந்தாளோ காலையில் பார்த்தபோது அவள் சவம் ஜில்லிட்டிருந்தது.

ஒலீன்—கிழவி—பிரிந்தாள்—இறந்தாள்............

ஆக்ஸெலுக்கும் பார்ப்ரோவுக்கும் அதுபற்றித் துக்கம் ஒன்றும் இல்லை. அவள் போனது நல்லதுதான். ஒரு தொந்தரவு குறைவு. அவர்கள் அமைதியாக இருக்கலாம். பார்ப்ரோவின் பற்கள் மீண்டும் தொந்திரவு தருகின்றன — மற்றப்படி எல்லாம் சரியாகவேதான் இருக்கிறது. மிகவும் ஜாக்கிறதையாக உணவு அருந்துகிருள்—சாப்பாடு செல்லவில்லை.

"புதுப் பற்கள் வாங்கிக் கொண்டாயே!

"ஆமாம்."

"அவையுமா சரியாக இல்லை?"

தெரியாமல்தான் கேட்டான் ஆக்ஸெல். ஆனல் பார்ப்ரோவுக்குக் கோபம் வந்தது. "உன் பிதற்றலும் நீயும்! நிஜமாகவே விஷயம் புரியவில்லையா உனக்கு?"

என்ன விஷயம்? அவள் சற்று பெருத்திருக்கிறமாதிரி இருக்கிறது. மற்றபடி..........."ஓ! மறுபடியும் கர்ப்பமாக இருக்கிருயா?"

"ஆமாம்."

ஆக்ஸெல் அசட்டுத்தனமாக அவளையே முறைத்துப் பார்க்கிருன். ஒரு வாரம், இரண்டு வாரம், மூன்று வாரம் என்று கணக்குப் பண்ணுகிருள்... "எனக்கு எப்படித் தெரியும்?"

இந்த விவாதம் பார்ப்ரோவுக்குப் பிடிக்கவில்லை. அவள் அழுகிருள்: "என்னையும் புதைத்துவிட்டால்தான் உனக்குத் திருப்தி" என்று கோவென்று கதறுகிருள்.

வேடிக்கைதான்—இதெல்லாம் என்ன பேச்சு!

அவளைப் புதைக்க வேண்டும் என்று ஆக்ஸெல் ஆசைப் பட்டான். உபயோககரமான விஷயங்களைத் தவிர வேறு எதிலும் அவன் சிந்தனை போவதில்லை. அவள் போய்விட்டால் பண்ணை வேலைகள் எப்படி நடக்கும்? மலர் தூவிய பாதையை அவன் மனம் நாடவில்லை.

"கோடையில் உன்னால் வேலை செய்ய முடியாது."

பார்ப்ரோவுக்குப் பயம் பற்றிக்கொண்டது. "வேலை செய்ய முடியாதா?" அழுதது போலவே சட்டென்று சிரித்தாள் பார்ப்ரோ. ஆக்ஸெல் அதுபற்றி அப்படிப் பேசியது அவளுக்குச் சிரிப்பு மூட்டியது. உரக்கச் சொன்னாள்: "பாரேன். இரண்டாள் வேலையை நான் செய்யாவிட்டால் பாரேன். பார் ஆக்ஸெல். நீகூடத் திருப்தி யடையும்படியாக நான் உழைக்கிறேனா இல்லையா என்று பார். எலும்பு தெரிய உருகினாலும் சரி — வேலை செய்யாதிருப்பேனா!"

மீண்டும் கண்ணீர். சிரிப்பு. இன்பம் அதற்குப்பிறகு. காட்டிலே அவர்களிருவம் தனியாக இருக்கிறார்கள். அங்கு அவர்கள் ஏகாந் தத்தில் குறுக்கிட யாரும் இல்லை. கதவுகள் திறந்து கிடக்கின்றன. கோடை உஷ்ணத்திலே ஈக்கள் ரீங்கரிக்கின்றன. பார்ப்ரோ என்கிற பெண் ஆக்ஸெலின் இஷ்டப்படி எல்லாம் வளைந்து கொடுத்தாள். அவன் இஷ்டம்தான் அவள் இஷ்டம்.

சூரியாஸ்தமனத்துக்குப் பிறகு அறுவடை யந்திரத்தில் குதிரையைப் பூட்டுகிறான். நாளைக்காலையில் செய்யவேண்டிய வேலையை இப்போதே தொடங்கி வைக்கலாமே! ஏதோ முக்யமான விஷயம் சொல்ல வருபவள் போல வீட்டுக்குள் இருந்து பார்ப்ரோ வருகிறாள்: "ஆக்ஸெல் — நீ அமெரிக்காவிலிருந்து ஒருத்தியை வரச் சொன்னதாகச் சொன்னாயே! அவள் இப்போது கிளம்பினாலும் கூட மாரிக்காலத்தில் தானே வந்து சேருவாள். கோடை வேலைக்கு அவளால் என்ன உபயோகம்?" அது பற்றிய ஞாபகம் அப்போது தான் வந்தது அவளுக்கு. அதை உடனே ஆக்ஸெலிடம் சொல்லுகிறாள் அவள்.

அப்படி எல்லாம் சிந்திக்கவேண்டிய அவசியமேயில்லை. ஆக்ஸெலுக்குத் தெரியாதா — பார்ப்ரோவை ஏற்றுக்கொண்டு விட்டான். அவள் வருஷம் பூராவும் உதவுவாள் என்பது அவ னுக்குத் தெரியாதா? ஆகாச ஏணியிலே ஊஞ்சலாடுகிற மனிதனா ஆக்ஸெல். அல்ல. அவன் தலை நக்ஷத்திரங்களுக் கிடையேயில்லை. அவன் மண்ணில் உழைப்பவன். அவன் ஞாபகம் எல்லாம்

அவன் வேலையில்தான். பண்ணையைப் பார்த்துக் கொள்ள ஒரு பெண்டாட்டி வந்த பிறகு அவன் தந்தி வேலையையும் பார்த்துக் கொள்வது சுலபம். அதை விட்டுவிடுவதாக இல்லை அவன். வருஷத்தில் இத்தனை என்று பணம் கிடைத்ததே—அதை விடுவானேன்? விற்கவோ தேவைக்கு அதிகமாகவோ எதுவும் அவன் பண்ணையில் இல்லை. மேல்வரும்படி எது வந்தாலும் நல்லதுதானே. சரியானபடியே எல்லாம் நடக்கிறது—எல்லாம் பலனளிக்கிறது. ப்ரேடிடமிருந்து தந்தி இன்ஸ்பெக்டர் உத்தியோக விஷயமாக அவன் பயப்பட வேண்டியதில்லை—ப்ரேடின் மாப்பிள்ளையல்லவா அவன்.

ஆம். ஆக்ஸெல் முன்னேறிக் கொண்டிருக்கிறான். அவன் விஷயங்கள் எல்லாம் திருப்திகரமாகவும் நேர்த்தியாகவும் இருக்கின்றன.

# 11

காலம் செல்லுகிறது. மாரிக் காலம் போய்விட்டது. வஸந்தம் வருகிறது.

ஒரு நாள் ஐஸக் கிராமத்துக்குக் கிளம்புகிறுன். ஏன் கூடாது எதற்காக? "எனக்கே தெரியாது" என்கிறுன் அவன். வண்டியை சரியாகக் கழுவி அதில் ஆசனத்தைப் போட்டுக்கொண்டு, வண்டியிலே ஏராளமான உணவுப் பொருள்களையும் ஏற்றிக் கொண்டு கிளம்புகிறுன். ஏன் கூடாது? ஸ்டோர் போர்க்கி லிருக்கும் எல்யூஸிஸுக்காக அத்தனையும் எடுத்துப் போகிறுன் அவன். வண்டி கட்டினுல் எல்யூஸிஸுக்கு ஸெல்லன்ராவி லிருந்து ஏதோ சாமான் போகிறது என்றுதான் இப்பொழு தெல்லாம் அர்த்தம்.

ஐஸக் வண்டி ஓட்டிவருவதே பெரிய விஷயம்தான். இப்போ தெல்லாம் அநேகமாக அவன் போவதில்லை—அவனுக்குப் பதில் எங்குமே ஸிவெர்ட்தான் போய்விடுவான். பக்கத்துப் பண்ணைகளில் உள்ளவர்கள் நின்று பார்க்கிறுர்கள். "பெரியவன் ஐஸக்கேதான்? இந்தச் சமயம் என்ன விசேஷம்?" என்று தங்களுக்குள் பேசிக் கொள்ளுகின்றனர். மேன்லாந்துப் பண்ணையில் கையில் குழந்தையுடன் கண்ணுடி வைத்த ஜன்னலண்டை நிற்கிறுள் பார்ப்ரோ. "பெரியவன் ஐஸக்கேதான்" என்கிறுள்.

ஸ்டார் போர்கில் "ப்ரோ" என்று வண்டியை நிறுத்துகிறுன் ஐஸக். "எல்யூஸிஸ் இருக்கிறுன்?"

எல்யூஸிஸ் வெளியே வருகிறுன். இருக்கிறுன். ஆனுல் வெளியூருக்குப் பயணம் கிளம்பிக் கொண்டிருக்கிறுன். வஸந் தத்தில் தெற்குப் பிராந்தியத்து நகரங்களுக்கெல்லாம் போய் வருவது என்று கிளம்பிக் கொண்டிருக்கிறுன்.

"உன் அம்மா ஏதோ சாமான்கள் கொடுத்தனுப்பி இருக்கிறுள் என்ன என்று தெரியாது. ஏதோ சில்லறை சாமான்கள்தான்" என்றுன் ஐஸக்.

எல்யூஸிஸ் அவற்றை எடுத்துக் கொண்டு நன்றி கூறுகிறுன் "கடிதம் ஒன்று..."

"இருக்கிறது. ரிபெக்கா எழுதியது என்று சொன்னுர்கள்."

கடிதத்தை வாங்கிக் கொள்கிறான் எல்யூஸிஸ். அதற்காகத் தானே அவன் காத்திருந்தான்? கடிதம் கனமாக இருக்கிறது. "நான் கிளம்ப இன்னும் இரண்டு நாள் ஆகும் என்றாலும் நீ சமயத்துக்கு வந்தது அதிருஷ்டம்தான். இரேன். இருந்தால் கிராமத்துக்கு என் பெட்டியை எடுத்துப் போக வண்டி உதவும்."

ஐஸக்குக்கு ஆக்ஷேபமில்லை. குதிரையைக் கொண்டுபோய்ப் புல்லைப் போட்டுக் கட்டுகிறான். ஸ்டார் போர்க் பண்ணையைப் பார்வையிடுகிறான். ஆண்டெர்ஸன் நிலத்தில் பாடுபட்டிருக்கிறான். ஸிவெர்ட்டும் ஸெல்லன்ரா குதிரைகளும் அவனுக்கு உதவியா யிருக்கின்றன எனினும் அவனும் வெகுவாகப் பாடுபட்டிருக்கிறான். சதுப்பு நிலத்தில் நீர் வடிய வாய்க்கால்கள் வெட்டியிருந்தான். வாய்க்கால்கள் தூர்ந்துவிடாமல் கல் போட அவனே சொந்தச் செலவில் ஏற்பாடு செய்திருந்தான். கால் நடைகளுக்கு ஸ்டார் போர்க் பண்ணையில் தீவனம் தேவையானது இருந்தது. சில நாளில் எல்யூஸிஸே ஒரு குதிரை வைத்துக் கொள்ளலாம். நிலம் எல்யூஸிஸினுடையது என்றாலும் உழைப்பெல்லாம் குள்ளன் ஆண்டெர்ஸனுடையதுதான்.

எல்யூஸிஸினுடைய பெட்டி தயாராகிவிட்டது. அவனும் கிளம்பத் தயாராகிவிட்டான் என்று தோன்றுகிறது. நீல ஸூட்டும் கோட்டும், வெள்ளைக் காலர் எல்லாம் அணிந்திருக் கிறான். கையிலே ஒரு அழகான பிரம்பு. படகு கிளம்ப இன்னும் இரண்டு நாள் இருந்தது. அதனால் என்ன? அந்த இரண்டு நாளும் கிராமத்திலேயே தங்கிவிட்டால் போச்சு. அவன் இங் கிருந்தாலும் ஒன்றுதான்—அங்கிருந்தாலும் ஒன்றுதான்.

அப்பாவும் பிள்ளையும் கிளம்புகிறார்கள். கடை வாசலிலிருந்து ஆண்டெர்ஸன் அவர்கள் கிளம்புவதைப் பார்க்கிறான். சௌக்கிய மாகப் போய் வாருங்கள் என்கிறான். தன் பையனைப்பற்றித்தான் ஐஸக்கின் ஞாபகம் எல்லாம். அவன் சரியாக உட்கார்ந்து ஓட்டட்டும் என்கிறான். ஆனால் எல்யூஸிஸ் அப்பாவே ஓட்டட்டும் என்றான். ப்ரேடாப்ளிக்கை அணுகும்போது எல்யூஸிஸுக்கு ஞாபகம் வருகிறது—அதை மறந்துவிட்டேனே என்கிறான். "ட்ரோ—என்ன அது?" என்று வண்டியை நிறுத்திவிட்டுக் கேட்கிறான் ஐஸக்.

ஓ! அவன் குடையை மறந்துவிட்டான். "பாதகமில்லை. போவோம்" என்கிறான் எல்யூஸிஸ்.

"திரும்புவதானால் திரும்புவோம்."

"வேண்டாம்."

என்ன அசட்டுத்தனம்! எப்படி நேர்ந்தது! அப்பா காத்துக் கொண்டிருக்காரே யென்று அவசரமாகக் கிளம்பியதில் குடையை மறந்துவிட்டான். ட்ராண்ட்யெம் நகரில் புதுக் குடை வாங்கிக் கொள்ள வேண்டியதுதான். ஒரு குடை இருந்தால் என்ன—ஒன்றுக்கு இரண்டாகத்தான் இருக்கட்டுமே! எல்யூஸிஸுக்கு மனசு சரியாக இல்லை. வண்டியிலிருந்து இறங்கி வண்டிக்குப் பின்னால் நடக்கிறான். அதற்குப் பிறகு அப்பனும் பிள்ளையும் அதிகம் பேச முடியாது. ஐஸக் பின்னால் திரும்பிப் பேசவேண்டியதாக இருக்கிறது. "எத்தனை நாளாகும் திரும்ப?" என்று கேட்கிறான் ஐஸக்.

"மூன்று வாரங்கள். ஜாஸ்தியானால் ஒரு மாசம்."

அப்பனுக்கு ஆச்சரியமாக இருக்கிறது. பெரிய நகரங்களில் மனிதனுக்குப் பாதைகள் எப்படித் தெரிகின்றன. நகருக்குப் போகிறவர்கள் மீண்டும் திரும்ப வழியைக் கண்டுகொள்வது எப்படி? நகரில் வசிக்கத் தனக்குப் பழக்கம் என்றான் எல்யூஸிஸ். தனக்கு வழி ஒரு நாள்கூடத் தவறினதில்லை என்றான்.

பிள்ளை நடக்கும்போது தான் வண்டியில் வருவது அப்பனுக்குப் பிடிக்கவில்லை. "நீ உட்கார்ந்து வண்டியை ஓட்டு. நான் சற்றுக் காலாற நடந்து வரேன்" என்றான். அதை அனுமதிக்கத் தயாராக இல்லை எல்யூஸிஸ். மீண்டும் அவனும் வண்டியில் ஏறி அப்பாவுக்குப் பக்கத்தில் உட்கார்ந்துகொண்டான். ஏதாவது சாப்பிடவேண்டும்—பசிக்கிறது. ஐஸக் தின்பண்டங்கள் கொண்டு வந்திருக்கிறான். இருவரும் தின்கிறார்கள். மேலே செல்கிறார்கள்.

கிராமத்தை நெருங்கிக் கொண்டிருக்கிறார்கள். கடைசி இரண்டு பண்ணைகளையும் தாண்டும்போது அந்தப் பண்ணை ஆசாமிகள், "ஐஸக்கேதான்—" என்று சொல்கிறார்கள். அரசியல் தின விழாவுக்காக அவர்கள் வீடுகளின் ஜன்னல்களிலிருந்து கொடிகள் பறக்கின்றன.

எல்யூஸிஸ் தன்னுடைய தொல்லைகளை மறந்துவிட்டுத் தன் தகப்பனை விசாரிக்கிறான்: "கிராமத்திலே உனக்கு ஏதாவது வேலை இருக்கிறதா?"

"ம்......ம்......" என்கிறான் ஐஸக். "ஒன்றும் அதிக வேலை இல்லை." எல்யூஸிஸ் பயணம் கிளம்பிக் கொண்டிருந்தான்—

அவனைப் பார்க்கத்தான் வந்தான். கருமானின் மகள் ஜென்ஸினை அழைத்துப் போக வந்திருந்தான். அவ்வளவுதான் காரியம்.

"எதற்காக நீயே வந்தாய்? ஸிவெர்ட் வந்திருந்தால் போதாதோ" என்கிறுன் எல்யூஸிஸ். அவனுக்கு என்ன தெரியும்? ஜென்ஸினை அழைக்க ஸிவெர்ட்டா போவான்? அதுவும் அவளே ஸெல்லன்ராவை விட்டுப் போக ஆசைப்பட்டுப் போன பிறகு அவளை அழைக்க அவனு போவான்?

போன வருஷம் ஸெல்லன்ராவில் வைக்கோல் தயாரிக்கும் வேலை சரிவர நடைபெறவில்லை. இங்கர் தன்னுலியன்ற அளவு செய்தாள். லெபல்டின் கூடச் செய்தாள். அது தவிர யந்திரமும் இருந்தது அவர்களுக்கு உதவ. வைக்கோல் கனமாகச் சேர்த்துப் போர் போடவேண்டியிருந்தது. சிறு வயல்களும் பெரிய வயல்களு மாக வேலைசெய்து மாளவில்லை. வைக்கோல் தயாரிப்பதுடன் மற்ற வேலைகளும் நிறைய இருந்தன. முக்கியமாகப் பெண்களுக்கு ஏராளமான வேலைகள் இருந்தன. ஆடு மாடுகளைப் பராமரிக்க வேண்டும் — பால் கறந்து பாலேடை செய்யவேண்டும் — சமையல் நடக்கவேண்டும்—ரொட்டி சுடவேண்டும்—துணிமணிகள் துவைத்துப் போடவேண்டும் — தாயும் பெண்ணும் அலுக்காமல் தான் உழைத்தார்கள். இந்தமாதிரி இன்னெரு கோடை இருக்கக் கூடாது—உதவிக்கு ஜென்ஸின் வந்தால் அழைத்து வரேன் என்றுன் ஐஸக். இங்கருக்கு இப்போது புத்தி மாறிவிட்டது— அவள் ஆக்ஷேபிக்கவில்லை. மயங்கிக் கிடந்தவள்போல இருந்த இங்கர் மீண்டும் புத்தித் தெளிவு பெற்றவள்போல இருந்தாள். இங்கரின் ரத்தக் கொதிப்பு அடங்கிவிட்டது. அவள் உஷ்ணம் தணிந்துவிட்டதுபோல இருந்தது. இப்போது தேவையான ஒரு கதகதப்பைத் தவிர அவளிடம் வேறு எவ்வித உஷ்ணமும் இல்லை. அவள் பெருத்துக் கொண்டிருந்தாள் — கம்பீரமான உருவம் பெற்றுக் கொண்டிருந்தாள். பார்க்க எவ்வளவு நேர்த்தியாக இருந்தாள்! அவள் வாடி வதங்கி விடுகிறவள் அல்ல. இதெல்லாம் எப்படி நடக்கின்றன நேருகின்றன என்று யார் சொல்லமுடியும்? அவளுடைய மாறுதல்களுக்கு ஏதாவது ஒரு காரணம்தானு சொல்ல முடியும்? ஒரே காரணத்தினுல் விளைகிற விளைவுகள் மிகக் குறைவு—எதற்குமே பல காரணங்கள் உண்டு. கருமானின் மனைவியும் இங்கரும் தோழர்கள்தானே? அவள் என்ன சொல்ல முடியும் இவளைப்பற்றி இழுக்காக? அவள் மேலுதடு பிளந்திருந்த காரணத்தினுல் அவள் வஸந்தம் சரியாக

இல்லை. கோடையில் ஆறு வருஷங்கள் செயற்கைக் காற்றிலே வளர்ந்துவிட்டாள். இலையுதிர் காலத்திலே அவள் தவறிழைத்தாள் என்பதில் ஆச்சரியம் ஒன்றுமில்லை. கருமானின் மனைவியைவிட அவள் உயர்ந்தவள் — அறிவுள்ளவள் — ஆற்றலுள்ளவள்—நல்லவள். சந்தேகம் என்ன?

அப்பனும் பிள்ளையும் கிராமத்துக்கு வந்து சேருகிறார்கள். ப்ரேட் ஓல்ஸன் நடத்தும் ஹோட்டலை அடைகிறார்கள். குதிரையைக் கொட்டகையில் கட்டிவிட்டு அவர்கள் உள்ளே போகிறார்கள். ப்ரேட் ஓல்ஸன் அந்தக் கட்டிடத்தை வாடகைக்கு எடுத்திருக்கிறான். நல்ல இடம் அது; ஒரு பெரிய மாளிகையின் வெளிக் கட்டிடம் அது. காப்பிப் பிரியர்கள் அங்கு வந்து கூடுகிறார்கள்—வியாபாரம் சுமாராகவே நடக்கிறது. கப்பலில் வருகிற பிரயாணிகளும் மற்றவர்களும் வந்து காபி சாப்பிடுகிறார்கள். அவன் வாழ்க்கையில் முதல் தடவையாக ப்ரேட் ஓல்ஸன் தனக்கு ஏற்ற தொழிலைக் கண்டுபிடித்துவிட்டமாதிரி இருக்கிறது. அதுகூட அவன் கண்டுபிடிக்கவில்லை—அவன் மனைவி கண்டுபிடித்தது தான். காபி ஹோட்டலும் ஒரு லாட்ஜிங் ஹவுஸும் நடத்தலாம் என்று சொன்னது அவன் மனைவிதான். எதையாவது விற்றுப் பணம் சம்பாதிப்பது என்பது திருப்திகரமான விஷயம்தானே. கையில் தினம் சில்லரை புரளுகிறது. இங்கு கிராமத்துக்கு வந்து ஹோட்டல் திறந்ததுமுதல் அவர்கள் காலம் சௌகரியமாகவே கழிகிறது. படுக்க வேறு இடம் இல்லாதவர்கள் பலர் வந்து அங்கு படுத்துறங்குகிறார்கள். பிரயாணிகள் ப்ரேடின் மனைவியை வாழ்த்துகிறார்கள். அவளுடைய பெண் காத்ரீன் அவளுக்கு உதவுகிறாள். தின்பண்டங்கள் எடுத்துத் தருவதிலும், காப்பி கொடுப்பதிலும் அவள் துடி. ஆனால் சில நாட்களுக்குத் தான் அது—சில நாட்களிலேயே காத்ரீனுக்கு வேறு அலுவல்களும் ஆசைகளும் வந்துவிடும். ஆனால் இப்போது வியாபாரம் சுருசுருப்பாக இருக்கிறது. பணம் வருகிறது அதுதானே முக்கியம். ஆரம்பம் சூரத்தனமாகத்தான் இருக்கிறது—ஆனால் காப்பியுடன் தருவதற்குப் போதுமான கேக்குகளும் பிஸ்கோத்துகளும் ஊர்க் கடையில் கிடைக்கவில்லை. போதுமான ஸ்டாக்கு இல்லை கடையில்.

ஹோட்டலில் கிடப்பதைக் கொண்டு ப்ரேடும் அவன் குடும்பமும் வாழ்கிறார்கள். மீதமிருந்த கேக்குகளும் காப்பியும்தான் பாதி நாள் அவர்களுடைய ஆகாரம். அவர்கள் உயிர் போய்

விடாது காப்பாற்றுகிறது அது. அத்துடன் அவர்கள் மெலிந்து வெலுத்து ஒரு நேர்த்தியான பார்வை பெற்றிருக்கிறார்கள் அரைப் பட்டினியால். கிராமத்தார்கள் அவர்களைப் பார்த்து பொறாமைப்பட்டார்கள். காபியுடன் கேக்கும் எல்லோருக்கும் கிடைக்குமா? ப்ரேட் குடும்பம் அதிருஷ்டக்காரக் குடும்பம்தான். ஒரு நாய்கூட வளர்க்கிறார்கள் அவர்கள். அங்கு வந்து சாப்பிடுவோரிடம் வாலையாட்டிப் பிச்சை கேட்டுச் சாப்பிட்டு அந்த நாய் கொழுத்துவிட்டது. கொழுத்த நாயைவிட நல்ல விளம்பரம் ஹோட்டலுக்கு ஏது? குடும்பத் தலைவன் ப்ரேட். அதற்கேற்ற தொழில்களைச் செய்கிறான் அவன். ஒருகாலத்தில் அவன் லென்ஸ் மாண்டின் ஸர்வேயர் குமாஸ்தாவாக வேலை பார்த்தவன். துரதிருஷ்டவசமாக அவன் பெண் பார்ப்ரோ அந்த லென்ஸ் மாண்டின் மனைவியுடன் சண்டை போட்டுக் கொண்டுவிட்டாள். சின்ன விஷயத்தைப் பற்றித்தான் ஒரு பிரமாத சண்டை. அங்கு இப்போது ப்ரேடைக்கூட அனுமதிப்பதில்லை. அதைப்பற்றி ப்ரேட் அவ்வளவாகக் கவலைப்படவில்லை. லென்ஸ்மாண்டைப் பிடிக்காத குடும்பங்கள் ப்ரேடுக்கு அவ்வப்போது வேலை தரு கிறார்கள்—லென்ஸ்மாண்டு கோபித்துக் கொள்வதைப் பொருட் படுத்துவதில்லை யாரும்! டாக்டருக்கு வண்டி ஓட்டுகிறான் ப்ரேட். மதகுரு ஏதாவது வேலையிருந்தால் அவனைத்தான் கூப்பிடுகிறார்.

ஆனால் இப்பவும் சில நாட்கள் ப்ரேட் குடும்பத்துக்கு மிகவும் கஷ்டமாக இருக்கின்றன. நாய் கொழுத்திருக்கிறது; மாறாக ப்ரேடின் குடும்பத்தவர்கள் மெலிந்துதான் இருக்கிறார்கள். கடவுள் புண்ணியம்தான்—ப்ரேட் இதெல்லாம்பற்றி அவ்வளவாக கவலைப்படுவது கிடையாது. "குழந்தைகள் பெரியவர்களாகிக் கொண்டிருக்கின்றனர்" என்கிறான் ப்ரேட். ஆனால் புதுசாகக் குழந்தைகள் பிறந்துகொண்டே இருக்கின்றன. வளர்ந்த குழந்தைகள் சில சமயம் தாய் தகப்பனுக்கு ஏதாவது அனுப்பு வார்கள். மேன்லாந்திலிருந்து பார்ப்ரோவும், ஹெக்கிங் மீன் பண்ணையிலிருந்து ஹெல்கேயும் அடிக்கடி வீட்டுக்குப் பணமோ சாமான்களோ அனுப்புகிறார்கள். ஹோட்டலிலேயே வேலை செய்கிற காதரீன்கூடச் சில சமயம் அப்பாவுக்கு ஐந்து க்ரோனர் நோட்டு ஒன்றைக் கொடுத்து உதவுகிறாள். அவளுக்கு அது எப்படிக் கிடைத்தது என்று விசாரிப்பவனல்ல ப்ரேட். இப்படிப் பட்ட குழந்தைகளைப் பெற்று விட்டவர்களுக்கு கஷ்டம் வராது—வந்தாலும் நீடிக்காது.

பையன் ஹெல்கேயிடம்தான் ப்ரேடுக்கு அவ்வளவாகத் திருப்தியில்லை. குழந்தைகள் தங்கள் பெற்றோர்களுக்குச் செய்ய வேண்டிய கடமைகளைப்பற்றிக் கேட்க ஆசைப்பட்டால் பிரசங்கம் செய்கிறான் ப்ரேட். "ஹெல்கேயைப் பார். அவன் புகை குடிப்பதுபற்றியோ மதுவருந்துவதுபற்றியோ எனக்கு ஆக்ஷேபம் இல்லை. ஆனால் ஒவ்வொரு கடிதத்திலும் எங்களை விசாரித்து விட்டு ஒன்றும் அனுப்பாமலே இருந்துவிடுகிறான். அது தவறு. அவன் அம்மா அழுகிறாள். அவன் செல்கிற பாதை சரியல்ல. முன் காலத்தில் அப்படியல்ல. நல்ல பிள்ளைகள் சம்பாதிக்கத் தொடங்கியவுடன் பெற்றோர்களுக்கென்று ஒரு பகுதியை ஒதுக்கி விடவேண்டும். இல்லையோ? அந்தக் குழந்தைகளை வளர்த்துப் பெரியவர்களாக்க எவ்வளவு பாடுபட்டார்கள் பெற்றோர்கள். அதை எல்லாம் மறந்துவிடுகிற பிள்ளையும் பிள்ளையா?" இந்தப் பிரசங்கத்தை நேரில் கேட்டவன்போல ஹெல்கே அடுத்த கடிதத்துடன் ஐம்பது க்ரோனர் அனுப்பினான். ஐம்பது க்ரோனர், ப்ரேட் குடும்பம் அதைக் கொண்டாடியது. அனுவசியச் செலவுகள் பல செய்தது—மாமிசம் மீன் எல்லாம் வாங்கினார்கள். ஒரு பெரிய விளக்கை ஏற்றி வைத்துக்கொண்டு இரவு வெகு நேரம்வரை அவர்கள் காப்பி சாப்பிட்டார்கள்.

எப்படியோ அவர்கள் காலம் நடந்தது. வேறு என்ன தேவை?

ஐஸக்கும் எல்யூஸிஸும் வந்ததும் "விருந்தாடிகள் பார்" என்று ப்ரேட் அவர்களை வரவேற்றான். விளக்கிருந்த அறைக்குள் அவர்களை உட்கார வைத்தான். "அதிசயம்தான்—நீ எங்கே யாவது வெளியூர் போகிறாயா ஐஸக்!"

"இல்லை. கருமான் வீடுவரை போகிறேன் அவ்வளவுதான்."

"ஹோ! எல்யூஸிஸ்தான் போகிறானா?"

ஹோட்டல்களில் தங்கி எல்யூஸிஸிற்குப் பழக்கம் உண்டு. சட்டையையும் பிரம்பையும் வைத்துவிட்டுக் காப்பி ஆர்டர் பண்ணுகிறான். சாப்பிட அவர்களுக்கு எதுவும் தேவையில்லை. பண்ணையிலிருந்து பல தின்பண்டங்கள் கொண்டுவந்திருக்கிறார்கள். காத்ரீன் காப்பி கொண்டுவந்து தருகிறாள்.

"காசா? காசு வேண்டாம்" என்கிறான் ப்ரேட். "நான் எவ்வளவுதரம் ஸெல்லன்ராவில் சாப்பிட்டிருப்பேன்? எல்யூஸிஸிடம் எத்தனை சாமான்கள் வாங்கியிருக்கிறேன்! காசு

வாங்காதே காத்ரீன்!'' அப்படியும் எல்யூஸிஸ் காசைக் கொடுத்து விடுகிறுன். இருபது ஒரே அதிகமாகக் கொடுக்கிறுன். ஐஸக் கருமான் வீட்டுக்குப் போகிறுன். எல்யூஸிஸ் ஹோட்டலிலே தங்குகிறுன். காத்ரீனிடம் சில வார்த்தைகள் பேசுகிறுன் அவன்—அதிகமாகப் பேசுவதில்லை அவன். அவசியமான வார்த்தைகள் தான் பேசுகிறுன். பெண்களைப்பற்றி எல்யூஸிஸிற்குச் சபலம் கிடையாது. ஒரு காலத்தில் இருந்ததோ என்னவோ—இப்போ தில்லை. காட்டிலே வசிக்க லாயக்கற்றவன் அவன்—கனவான்—நாகரிகமானவன்—அவன் கைகள் எழுத்தாளன் கைகள்மாதிரி மெலிந்திருக்கின்றன. ஆடையுடுத்துவதும் பிரம்பும் அவன் நடையும் ஒரு பெண்ணினுடையதைப்போல இருக்கின்றன. கல்யாணம் செய்து கொள்கிற மனிதன் அல்ல—கல்யாணம் என்றுல் பயந்து ஒதுங்கிவிடுவான் அவன். அவன் மேலுதட்டில் மீசைகூட வேகமாக அரும்பியிருக்கிறதே தவிர நிறைய அடர்த்தியாக இல்லை. நகரத்தவனுக்குப் பெண்களிடம் ஈடுபாடிருக்கக் கூடாதா? அதில்லை. ஆனுல் எல்யூஸிஸின் சுபாவம் அது! அவன் பலஹீனமானவன். அந்தப் பக்கத்து வழிகளை எல்லாம் விட்டு அவன் வெகுதூரம் விலகிவிட்டான். அங்குள்ள மனிதர்களைப்பற்றிப் பொருமைப்படக்கூட அவனுக்குத் தெம்பில்லை.

காத்ரீன் அங்கு காப்பி சாப்பிட வருபவர்களுடன் விளையாட்டாகப் பேசுவாள். உன் காதலியைப் பார்க்கப் போகிறுயா என்று கேட்டாள்.

"காதலரா? அதைவிட முக்யமான பல விஷயங்கள் இருக்கின்றன என் கவனத்தைக் கவர. நான் வியாபார விஷயமாகக் கிளம்பினேன்!''

"அசட்டுப்பிசட்டென்று பேசாதே காத்ரீன்'' என்று தன் பெண்ணை அதட்டுகிறுன் ப்ரேட். எல்யூஸிஸிடம் அவன் மிகவும் மரியாதையாக நடந்துகொள்ளுகிறுன். அது கெட்டிக்காரத்தனம்—ஸ்டார் போர்க் கடைக்கு அவன் பெரிதும் கடன்பட்டிருக்கிறுன். எல்யூஸிஸிற்கு ப்ரேடின் பணிவும் மரியாதையும் திருப்தியளிக்கின்றன. தான் பெரிய மனிதன் என்கிற பாணியில் பேசுகிறுன் அவன். "என்ன ஐயா?'' என்று ப்ரேடைக் கேலி செய்கிறுன் அவன். தன் குடையை மறந்து வீட்டில் வைத்துவிட்டு வந்து விட்டதைச் சொல்லுகிறுன்.

ப்ரேட் கேட்கிறுன்: "மாலையில் மது வேண்டுமா உனக்கு?''

"நான்மட்டுமிருந்தால் பாதகமில்லை. அப்பாவும் இருக்கும் போது வேண்டாம்."

ப்ரேட் அவனுடன் வம்பளக்கிறான்: "அமெரிக்காவிலிருந்து வந்தவன் ஒருவன் நாளைக்கு வருகிறான்."

"அமெரிக்காவிலிருந்தா?"

"இந்தப் பக்கத்தவன்தான். பல வருஷங்கள் அமெரிக்காவிலிருந்துவிட்டு மாரிக்காலத்தில் திரும்பினான். இப்போது மீண்டும் அமெரிக்கா திரும்புகிறானும். அவன் பெட்டி வந்துவிட்டது. அந்தப் பெட்டி எவ்வளவு நேர்த்தியாக இருக்கிறது, தெரியுமோ?" என்கிறான் ப்ரேட்.

"நானே அமெரிக்கா செல்ல உத்தேசித்திருக்கிறேன்."

"நீயா? எதற்காகப் போகவேண்டும் அவ்வளவு தூரம்?"

"அங்கு போய்த் தங்குகிற உத்தேசம் இல்லை. பார்த்துவிட்டு வரலாம் என்று உத்தேசம்" என்றான் எல்யூஸிஸ்.

"அது சரி. ஏன் செய்யக் கூடாது? பணக்கார ஊர் என்று சொல்லுகிறார்கள். நீயும் போய்ப் பார்த்துவிட்டு வாயேன். இதோ இவன் எவ்வளவு பணம் என் கடையிலேயே செலவு செய்கிறான் தெரியுமா. அவன் பெட்டியைப் பார்க்கவேண்டுமா?"

வெளியே போய் அந்தப் பெட்டியைப் பார்த்தார்கள். உலகத்திலேயே மிகவும் பளபளப்பான சாமான் அது—அதன் பூட்டுகளும் பெல்டுகளும் பார்க்க ஆனந்தமாக இருந்தன. தான் சின்னவனாகிவிட்டமாதிரி இருந்தது எல்யூஸிஸிற்கு. பெரிய உத்தியோகஸ்தனைப்போல இந்தமாதிரிப் பயணங்கள் கிளம்பக் கூடியவன் அதிருஷ்டசாலிதான். ப்ரேட் அவனைப் பற்றிப் பிரமாதப்படுத்திக் கொண்டது நியாயம்தானே; தானும் பணக்காரன் என்று காட்டிக்கொள்ள விரும்பினான் எல்யூஸிஸ். காப்பியுடன் தின்ன கேக்குகள் கேட்டான்—அவற்றை நாய்க்குப் போட்டான். அவன் பெட்டி என்ன. தகரப் பெட்டி அமெரிக்காக் காரனுடையதுமாதிரி யாகுமா அது? சின்னப் பெட்டி, புது வர்ணம்கூட மங்கிவிட்டது. பெட்டியா அது? நகரில் பெரிய பெட்டி ஒன்று வாங்குவது என்று தீர்மானிக்கிறான் எல்யூஸிஸ்.

"நாய்க்கு அத்தனை கேக் போடாதே" என்கிறான் ப்ரேட்.

மீண்டும் எல்யூஸிஸிற்கு உத்ஸாகம் பிறக்கிறது. பெரிய மனிதன் அல்லவா அவன். "எப்படிக் கொழுத்திருக்கிறது

இந்த நாய்!" மனசில் ஏதோ தோன்றுகிறது. ப்ரேடுடன் பேசுவதை நிறுத்திவிட்டுக் குதிரையைப் பார்க்கக் கொட்ட கைக்குள் போகிறுன். தன் சட்டையிலிருந்து ஒரு கனமான கடிதத்தை எடுக்கிறுன். அவசரத்தில் அவன் இன்னும் அதைப் பிரித்துப் பார்க்கக்கூட இல்லை. கனமான கடிதம்—உள்ளே வெறும் கடிதம்மட்டும் இருந்தால் இவ்வளவு கனமாக இராது. அம்மா பணமும் அனுப்பியிருப்பாள். பிரிக்கிறுன் கடிதத்தை—பெரிய சாம்பல் நிறக் கடிதத்தில் கொட்டை கொட்டையாக ரிபெக்காவின் எழுத்து இருக்கிறது. வேறு ஒன்றும் இல்லை. அம்மா பணம் அனுப்பவில்லை. அப்பாவை மீண்டும் பணம் கேட்க முடியாது என்று அம்மா எழுதியிருந்தாள். கனிச் சுரங்கம் விற்று வந்த பணம்கூட ஆய்விட்டது—ஸ்டார் போர்க் வாங்கவும், பிறகு கடைக்குச் சாமான்கள் வாங்கவும், எல்யூஸிஸின் பிரயாணங்களுக்காகவும் என்று பணம் பூராவும் ஆகிவிட்டது. அவனுகப் பார்த்துக் கொள்ள வேண்டியதுதான் என்று அம்மா எழுதிவிட்டாள். இருக்கிற பணம் அவன் தங்கைகளுக்கும் தம்பிக்குமே போதுமானதில்லை. உன் பிரிய அம்மா என்று எழுதிவிட்டாள்.

பணம் இல்லை.

பிரயாணச் செலவுக்கு வேண்டிய பணம் எல்யூஸிஸிடம் இல்லை. ஸ்டோர் போர்க் கடையில் பணப் பெட்டியைக் காலி பண்ணிக்கொண்டுதான் வந்திருந்தான். அதிகம் இல்லை. பெர்கன் நகரில் மொத்தவியாபாரிகளுக்குப் பணம் அனுப்பாதிருந்தானுனல் அவன் கையில் போதிய பணம் இருந்திருக்கும்! அதற்கு என்ன அவசரம்! என்னவோ அவசரப்பட்டு அனுப்பிவிட்டான். கிளம்புமுன் கடிதத்தைப் பிரித்துப் பார்த்திருந்தானுனல் கிளம்பியே இருக்கமாட்டான்.

தன் காரியத்தை முடித்துக்கொண்டு ஐஸக் திரும்பினுன். ஜென்ஸின் மறுநாள் அவனுடன் கிளம்புவதாக ஏற்பாடாகியிருந்தது. அவளை அழைத்தவுடனேயே வரேன் என்றுள் அவள். அப்படி ஒன்றும் அசட்டுப் பெண் அல்ல; சாமர்த்தியம் இல்லாதவள் அல்ல. ஸெல்லன்ராவில் அவள் உதவி தேவை—அவள் கிளம்பத் தயாராகவேதான் இருந்தாள். நல்ல பெண்—பிடிவாதக்காரியல்ல. ஐஸக் பேசிக் கொண்டிருக்கும்போது, எல்யூஸிஸ் தன் கவலைகளைப் பட்டுக்கொண்டு உட்கார்ந்திருக்கிறுன். அமெரிக்கப் பெட்டியைத் தன் தகப்பனுக்குக் காட்டுகிறுன். "நானும் அமெரிக்கா போனுல்........." என்கிறுன்.

"பெட்டி நன்றாகத்தானிருக்கிறது." மறுநாள் காலையிலே ஐஸக் கிளம்புகிறான். சாப்பிட்டுவிட்டு வண்டி கட்டிக்கொண்டு கிளம்புகிறான். ஜென்ஸினையும் அவள் பெட்டியையும் ஏற்றிக் கொண்டு வீடு நோக்கித் திரும்புகிறான். அவர்கள் போவதைப் பார்த்துக்கொண்டே நின்றுவிட்டு எல்யூஸிஸும் கிளம்புகிறான். அவர்கள் வண்டி கண்ணுக்கு மறைந்ததும் அவனும் கிளம்பு கிறான். வேறு எங்கே? ஸ்டார் போர்குக்குத்தான். "என் பெட்டி இங்கேயே இருக்கட்டும்" என்று காத்ரீனிடம் சொல்லி விட்டுச் சாப்பாட்டிற்குச் சில்லரை தந்துவிட்டுப் போகிறான். வேறு எங்கே போவது? வீட்டிற்குத்தான் போகவேண்டும். வண்டி கூடவே ஆனால் அப்பா கண்ணிலோ ஜென்ஸின் கண்ணிலோ படாமல் போகிறான் அவன். அந்தப் பண்ணை ஆண்கள் ஒவ் வொருவரையும் பற்றிப் பொறாமையாக இருக்கிறது அவனுக்கு. பாவம்! இப்படி மாறிவிட்டானே எல்யூஸிஸ். பரிதாபம்தான்.

ஸ்டார் போர்க் கடையில் வியாபாரமே இல்லையா என்ன? ஏதோ இருக்கிறது. ஆனால் தாராளமாக இல்லை. கடை வியாபாரத்தில் சொத்து சேர்க்க முடியாது. தவிரவும் எல்யூ ஸிஸின் பிரயாணங்கள் வருகிற பணத்தை எல்லாம் சாப்பிட்டு விடுகின்றன. கடை விஷயமாகத்தான் பிரயாணம் செய்கிறான் அவன். செலவு ஏராளமாகச் செய்து வருகிறான். ஊதாரி அவன். பத்து ஒரே தருகிற இடங்களில் இருபது ஒரே தருகிறான். கஞ்சனாக இருக்கலாமே என்கிறான். போதவில்லை பணம். ஸ்டார் போர்க் பண்ணையிலே உருளைக்கிழங்கு, தானியம், வைக்கோல் இருக்கிறது. மற்ற சாமான்கள் ஸெல்லன்ராவிலிருந்து வர வேண்டும். அதுமட்டுமா? கப்பலில் கடைக்கென்று வருகிற சாமான்களை ஸிவெர்ட் வண்டியில் கூலியில்லாமல் ஏற்றிக் கொண்டுவருகிறான். அத்துடனும் நிற்பதில்லை; அம்மா பணம் அனுப்பவேண்டும் — அப்பா கஷ்டப்பட்டுத் தோள் வலிக்கச் சேர்த்த பணத்தை வாங்கி அனுப்பவேண்டும். அடேயப்பா!

இன்னும் நிலைமை மோசமாகிக் கொண்டிருக்கிறது.

எல்யூஸிஸுக்கு வியாபாரம் செய்யத் தெரியவில்லை. தன்னை வந்து புகழ்கிறவர்களுக்கெல்லாம் கடனுக்குக் கொடுத்துவிடு கிறான் சாமான்களை. அதுகூடப் பாதகமில்லை—சில சமயம் இனமாகவே தந்துவிடுகிறான். கடனுக்கு வாங்கிப் போகிறவர்கள் ஏராளமான பேர்வழிகள், பணம் தருவதில்லை. போகட்டும் சனியன் என்கிறான் எல்யூஸிஸ். கடைக்குப் புதுச் சாமான்கள் வாங்கு

கிறன் — எல்லாவற்றிற்கும் பணம் தேவை. யார் தருவது? ஐஸக்தான் வேறு யார்?

முதலில் எப்போதும் அவன் கட்சி பேசினுள் அம்மா. எல்யூஸிஸ் மூத்தபிள்ளை — கெட்டிக்காரன். அவனுக்கு உதவி செய்வது குடும்பத்தின் கடமை. ஸ்டார்போர்கை எவ்வளவு சுலபமாக மலிவாக விலை பேசி வாங்கிவிட்டான் அவன்! நிலைமை சரிவர இல்லை என்று தெரிந்த பிறகு ஐஸக் கோபித்துக் கொண்டான். அவனுக்குச் சமாதானம் சொன்னதும் அம்மா தான். "இந்தமாதிரி எல்லாம் உன் பிள்ளையை நீயே சொல்லலாமோ?" என்று அடித்துகொண்டாள். இங்கர் சில நாள் நகரில் வசித்தவளில்லையா? அவள் ஐஸக்கைவிட அதிகமாக அறிந்தவள். எல்யூஸிஸ் அங்கு வசிக்க ஒப்புக்கொண்டதே பெரிது. அவன் நாகரிகமானவன்—நகரத்துப் பழக்கவழக்கங்கள் படித்துக் கொண்டவன்; எழுதப்படிக்க அறிந்தவன். அவனுக்கு ஈடானவர்கள் அந்தப்பக்கத்திலே வேறு யார் இருந்தார்கள். கடன் வாங்கிப் போன ஜனங்கள் அயோக்கியர்கள்களாக இருந்தால் அதற்கு அவனு பொறுப்பு! வேண்டுமென்று, அப்பா பணத்தைப் பிடுங்கிக் கொள்ள வேண்டும் என்று செய்தான் எல்யூஸிஸ். ஏழைகளுக்குக் கடன் தந்து உதவினுல் அது தவறு? மனிதத் தன்மையல்லவோ அது! அவன் அந்தப் பக்கத்திலுள்ளவர்கள் மாதிரியா இருந்தான் — வெள்ளைக் கைக்குட்டைகள் உபயோகித் தான் அவன். சலவை செய்யச் செல்வாகும்தான். அதற்காகப் பிறருக்கு உதவி செய்ய முன் வருவது தவறு என்று யார் சொல்லமுடியும்?

இதையெல்லாம் மனசில் வைத்துக் கொண்டு பேசினுள் இங்கர் தன் மகனின் கக்ஷியை. ஆனுல் அவன் தகப்பனுருக்கு இதெல்லாம் புரியவில்லை. ஒரு நாள் விஷயத்தைச் சொன்னுன்: "சுரங்கம் விற்றுவந்த பணத்தில் இதுதான் மிச்சம்?" என்றுன்.

"இவ்வளவுதானு? பாக்கி எல்லாம்?" என்றுள் இங்கர்.

"உன் பிள்ளை எல்யூஸிஸ் செலவு செய்துவிட்டான்."

கையைப் பிசைந்தாள் இங்கர். இனி அவன் தானுகவே. பார்த்துக் கொள்ளட்டும் — எப்படியோ பார்த்துக் கொள்ளட்டும்

பாவம் எல்யூஸிஸ்! அவன் ஊதாரி. கையில் கிடைத்ததை எல்லாம் செலவிட்டுவிட்டான். நிலத்தில் உழைத்து அப்பனுடன் இருந்திருந்தால் சரியாக இருந்திருக்கும். எழுதப்படிக்கக் கற்றுக்

கொண்டு வீணாகிவிட்டான் அவன். வேறு எதுவும் வரவில்லை அவனுக்கு. ஆழமில்லை—ஒரு விடாமுயற்சியில்லை. அப்படி ஒன்றும் அசடனல்ல — பெண்களைக் கண்டு ஏமாந்து விட மாட்டான். அழுத்தமில்லாத ஒருவன் — கெட்டதனங்கள் கூட அதிகமாக ஆழமாக இல்லை அவனிடம். துரதிருஷ்டசாலி அவன் — அவன் தொட்டது துலங்கவில்லை. உள்ளே ஏதோ அழுகிப் போய்விட்டது — எதுவும் நேராக நடக்கவில்லை அவனுக்கு. என்ஜினியர் வந்தானே—அவன் கண்ணில் சிறு வயதில் படாதிருந்து நகருக்கும் அவனுடன் போகாதிருந்தால் நன்றாக இருந்திருக்கும். என்ஜினியர் கெட்டவனல்ல — எல்யூஸிஸின் போக்கை மாற்றிவிட்டான் அவன். எங்கும் நிலைத்து நிற்கமுடியாது போய்விட்டது அவனுக்கு. நிலத்திலேயே இருந்திருந்தானானால்...

எல்யூஸிஸ் நடநடவென்று நடக்கிறான். வண்டி ஸ்டார் போர்க்கைத் தாண்டுகிறது. எல்யூஸிஸும் ஸ்டார் போர்க் பண்ணையைத் தாண்டி, அங்கு யார் கண்ணிலும் படாமல். சுற்றி வளைத்துக் கொண்டு போகிறான். கடையில் என்ன வேலை அவனுக்கு? அஸ்தமிக்கிற சமயத்தில் வண்டி ஸெல்லன்ரா வந்தடைகிறது. எல்யூஸிஸ் அவர்களைத் தொடருகிறான். ஜென்ஸினை வரவேற்க ஸிவெர்ட் வெளியே வருகிறான். இருவரும் சிரித்துக் கொண்டே கைகுலுக்குகிறார்கள். குதிரையை அவிழ்த்து லாயத்தில் கொண்டுபோய்க் கட்டுகிறான் ஸிவெர்ட்.

எல்யூஸிஸ் முன் வருகிறான். குடும்பத்தின் மூத்த பிள்ளை— தயங்கித் தயங்கி வருகிறான். நேராக நடந்து வரத் தைரியம் வர வில்லை அவனுக்கு. ஸிவெர்ட்டை லாயத்தில் அணுகுகிறான்: "நான்தான்" என்கிறான்.

"நீயுமா?" என்கிறான் ஸிவெர்ட் ஆச்சரியத்துடன்.

இரண்டு சகோதரர்களும் பொதுவாகப் பேசத் தொடங்கு கிறார்கள். அம்மாவிடம் பணம் வாங்கிக் கொடு என்கிறான் எல்யூஸிஸ் — கடைசித் தடவை அது. ஒரு நீண்ட பயணம் போக உத்தேசித்திருக்கிறான் எல்யூஸிஸ். இதுமாதிரி வாழ்க்கை நடத்த அவனுக்குப் பிடிக்கவில்லை. அலுத்துவிட்டது. பல நாட்களாக யோசனை அவனுக்கு. முடியுமானால் இரவே கிளம்பிவிட அவன் தயார். அமெரிக்காவுக்கு.

"அமெரிக்காவா?" என்கிறான் ஸிவெர்ட்.

"ஷ்......அதுபற்றி நான் பல நாளாகச் சிந்தித்து முடிவுக்கு வந்திருக்கிறேன். அம்மாவைக் கேட்டு நான் கேட்கிற பணம் வாங்கித் தா. இதுதான் கடைசித் தடவை. நான் போகிறேன்."

"அமெரிக்காவுக்கா! வேண்டாம் அவ்வளவு தூரம்......"

"நான் போகத்தான் போகிறேன்—இன்றிரவே கிளம்புவேன். கப்பல் ஏற இரவே திரும்பவேண்டும்."

"சாப்பிடு முதலில். பிறகு........."

"பசிக்கவில்லை."

"சற்றுப் படுத்து உறங்கு" என்ருன் ஸிவெர்ட்.

"உறக்கம் வராது."

ஸிவெர்ட் அவனுக்கு நல்லது சொல்ல முயலுகிருன். ஆனல் எல்யூஸிஸ் பிடிவாதமாக இருக்கிருன். அவன் ஆயுளில் முதல் தடவையாக ஒரு விஷயம்பற்றி அசைக்கமுடியாத தீர்மானத்துக்கு வந்துவிட்டான் அவன். ஸிவெர்ட்டுக்கே இந்தப் பிடிவாதம் ஆச்சர்யம் தருகிறது. ஜென்ஸினைப் பார்த்தது ஒரு ஆச்சரியம், அண்ணு ஊரைவிட்டே போகிறேன் என்றது இன்னென்று. "ஸ்டார் போர்கை என்ன பண்ணுவது?"

"ஆண்டெர்ஸன் பார்த்துக் கொள்ளட்டும்."

"ஆண்டெர்ஸனு?"

"ஏன் அவனுக்கென்ன? லெபல்டினை அவன்தானே கல்யாணம் செய்து கொள்ளப் போகிருன்."

"அதுபற்றித் தெரியாது — இருக்கலாம்."

வெகு நேரம் இருவரும் பேசிக் கொண்டிருக்கிருர்கள். அப்பா வுடன் பேசுவது நல்லது என்கிருன் ஸிவெர்ட். மாட்டேன் என்கிருன் எல்யூஸிஸ். நிமிர்ந்து நின்று யாருடனும் வாக்குவாதம் நடத்தும் திறமையற்றவன் எல்யூஸிஸ். ஸிவெர்ட்தான் பேசித் தன் காரியத்தைச் சாதித்துத் தரவேண்டும் என்கிருன் எல்யூஸிஸ்.

"அம்மாவுக்குத் தெரிந்து அழுது அமர்க்களம் பண்ணி விடுவாள்."

"ஆமாம். அவளுக்குத் தெரியவேண்டாம்" என்கிருன் எல்யூஸிஸ்.

ஸிவெர்ட் உள்ளே போகிருன். ஒரு நிமிஷத்துக்குப்பிறகு திரும்புகிருன். நிறையப் பணம் கொண்டுவருகிருன். "இந்தா!

அப்பாவிடம் இருந்தது" இவ்வளவுதான். எத்தனை என்று எண்ணிப்பார். அப்பா எண்ணவில்லை.

"அப்பா என்ன சொன்னார்?"

"ஒன்றும் சொல்லவில்லை. சிறிது நேரம் இரு. நானும் ஆடைகளை அணிந்து கொண்டு உன்னோடு வருகிறேன்."

"நீ போய்ப் படு. எதற்காக உனக்குச் சிரமம்."

விளையாட்டாக ஸிவெர்ட் கேட்கிறான்: "என்ன திருட்டுத் தனம் செய்யப் போகிறாயோ நீ!"

ஒரு நிமிஷத்தில் வந்து விடுகிறான் ஸிவெர்ட். உணவு மூட்டை ஒன்றைச் சுமந்து வருகிறான். அவர்கள் கிளம்பும்போது ஐஸக் வெளியே வருகிறான். "அவ்வளவு தூரம் போகப் போகிறாயா?" என்கிறான்.

"ஆம். சீக்கிரமே திரும்புகிறேன்."

"சரி கிளம்பு. நேரமாகிவிட்டது. கடவுள் காப்பாற்றுவார்" என்கிறான் ஐஸக். அவன் குரல் கரகரக்கிறது. முகத்தைத் திருப்பிக்கொண்டு நகர்ந்து விடுகிறான்.

இரண்டு சகோதரர்களும் பாதையோடு நடக்கிறார்கள். பாதி வழியில் உட்கார்ந்து சாப்பிடுகிறார்கள். எல்யூஸிஸிற்கும் பசி. ஏகமாகச் சாப்பிட்டுவிடுகிறான். வஸந்தகால இரவு — ஆனந்த மாக இருக்கிறது. கருப்பு முயல்கள் நிலவில் விளையாடிக் கொண் டிருக்கின்றன. தன் பிடிவாதத்தைத் தளர்த்துகிறான் எல்யூஸிஸ். "இம்மாதிரி இரவு...... நீ திரும்பேன் ஸிவெர்ட்" என்கிறான்.

ஸிவெர்ட் திரும்பவில்லை. "ம்" என்கிறான்.

ஸ்டார் போர்க் ப்ரேடாப்ளிக் முதலிய பண்ணைகளைத் தாண்டு கிறார்கள். காற்றிலே வஸந்தகீதம் எங்கும் மிதக்கிறது. அவர் களையும் துரத்துகிறது. நகரில் உள்ளது போல ராணுவகீதம் அல்ல அது. இனிமைக் குரல் அது—சிருஷ்டிக் குரல். வஸந்தம் வந்துவிட்டது என்ற குரல். பறவை ஒன்று மரத்திலிருந்து கூவுகிறது—வேறு ஒரு பறவை பதில் தருகிறது. அது கீதம் அல்ல—பிரார்த்தனை—நன்றி செலுத்தும் இசை. அமெரிக்கா போகிறவன் மனசு கலங்குகிறது — ஆனால் போகத்தான் போகிறான் அவன். பிறகு மீண்டும் திரும்பலாம்.

"நீ போயேன் ஸிவெர்ட்

"சரி. போகிறேன்."

காட்டின் ஓரத்திலே உட்காருகிறார்கள் இருவரும். கிராமம் அங்கிருந்து தெரிகிறது. கப்பல் காத்திருப்பது தெரிகிறது. ஆள் நடமாட்டம் கூடத் தெரிகிறது.

"இங்கே உட்கார்ந்திருக்கப் பொழுதில்லை" என்று எல்யூஸிஸ் எழுந்திருக்கிறான்.

"எவ்வளவு தூரம் போகப் போகிறாய் நீ!"

எல்யூஸிஸ் பதில் அளிக்கிறான். "திரும்பி வராமலேயே போய்விடுவேனா! வரும்போது அற்புதமான பெட்டி ஒன்று கொண்டு வருகிறேன் பார்."

குட்பை சொல்லும்போது ஸிவெர்ட் அண்ணா கையில் ஒரு பொட்டலத்தைத் தருகிறான். "என்ன இது?"

"அடிக்கடி கடிதம் எழுது" என்கிறான் ஸிவெர்ட். திரும்புகிறான்.

எல்யூஸிஸ் பொட்டலத்தைப் பிரித்துப் பார்க்கிறான். அதில் தங்க நாணயம். அந்த இருபத்தைந்து க்ரோனர் தங்கக் காசு. "இது வேண்டாம் எனக்கு" என்று சொல்லுகிறான் எல்யூஸிஸ்.

ஸிவெர்ட் மேலே நடக்கிறான்.

சிறிது தூரம் நடக்கிறான். பிறகு திரும்பிவந்து கிராமத்தைப் பார்த்துக் கொண்டு உட்காருகிறான். கப்பலண்டையில் ஆள் நடமாட்டம் அதிகமாக இருக்கிறது. பிரயாணிகள் கப்பலில் ஏறிக் கொள்ளுகிறார்கள். எல்யூஸிஸும் போவது தெரிகிறது. கப்பல் கிளம்புகிறது. மெதுவாகப் போகிறது. எல்யூஸிஸ் அமெரிக்கா வுக்குக் கிளம்பிவிட்டான்.

அவன் திரும்பி வரவேயில்லை.

## 12

ஸெல்லன்ராவை நோக்கி ஒரு வேடிக்கையான ஊர்வலம் வருகிறது. பார்ப்பதற்குச் சிரிப்பு மூட்டுகிறமாதிரியில் இருக்கிறது அந்த ஊர்வலம். பார்ப்பதற்குச் சிரிப்பு மூட்டுகிறமாதிரியிருக் கிறதே தவிர அது உண்மையில் ஒரு பெரிய காரியத்தைச் சாதிக்கக் கிளம்பியிருக்கிறது. மூன்று ஆண்கள் முதுகு வளைய மூட்டைகளைத் தூக்கிக் கொண்டு வருகிறார்கள்; காவடிமாதிரி கட்டி ஆளுக்கு இரண்டு மூட்டைகளைத் தூக்கிக் கொண்டு வருகிறார்கள். ஒருவர்பின் ஒருவராக. வேடிக்கையாகப் பேசிக் கொண்டே, தூக்கமாட்டாமல் மூட்டைகளைத் தூக்கிக்கொண்டு வந்தார்கள். ஆண்டெர்ஸன் குள்ளன். ஸ்டார் போர்க் கடையின் தலைமைக் குமாஸ்தா. அந்த ஊர்வலத்தில் தலைமை வகிக்கிறான். உண்மையில் அது அவனுடைய ஊர்வலம்தான். அவனுடைய ஏற்பாடுதான். சாமான்களை எல்லாம் இப்படித் தூக்கிப் போய் விற்கலாம் என்று யுக்தி பண்ணியது அவன்தான். அவனைத் தொடர்ந்து ஸெல்லன்ராவிலிருந்து ஸிவெர்ட்டும் ப்ரேடாப்ளிக்கி லிருந்து பிரடிரிக் ஸ்டிராமும் வருகிறார்கள். ஆண்டெர்ஸன் கெட்டிக்காரன்; தூக்க முடியாத சுமையைத் தூக்கிக்கொண்டு, சட்டை கழுத்தண்டை ஒதுங்க, நடக்கிறான்.

ஸ்டார் போர்கையும், கடையையும் எல்யூஸிஸ் விட்டுவிட்டுப் போய்விட்டான். ஆண்டெர்ஸனிடம் அதை உடனே ஒரேயடியாக வாங்கிவிடப் பணம் கிடையாது. கொஞ்சநாள் காத்திருந்தால் இன்னும் மலிவாகவும் வாங்கிவிடலாம். ஆண்டெர்ஸன் அசட னல்ல; அந்தக் கடையை வாங்கி நடத்துகிறான் அவன். தானே வியாபார்த்தை நடத்துகிறான்.

கடையில் இருந்த சாமான்கள் ஏராளமானவை. அவற்றில் பல விற்பனையாகாதவை. அத்தனை பல் பிரஷ்களும், மேஜை விரிப்புகளும், வைக்கோல் அடைத்த பறவைகளும் என்றுதான் விற்பனையாகும்?—போதாததற்கு ஏராளமான கிறீச் இடுகிற பறவைகளும்—துணிமணிகளும்—இருந்தன.

இவற்றையெல்லாம் மூட்டை கட்டிக்கொண்டுதான் கிளம்பி யிருக்கிறான் ஆண்டெர்ஸன் இப்போது. குன்றுகளுக்கப்பால் அந்தண்டைச் சரிவிலே வேலை செய்துகொண்டிருக்கிற சுரங்கத்

தொழிலாளிகளிடையே அதையெல்லாம் விற்றுவிடுவது என்று கிளம்பியிருக்கிறான் அவன். ஆரான்ஸெனுக்கு உதவியாக இருக்கும்போது அனுபவ பூர்வமாக அவன் அறிந்துகொண்டது இதுதான்—சுரங்கத் தொழிலாளிகள் பையில் பணம் இருக்கும் போது எதைக் கொடுத்தாலும் வாங்கிக் கொண்டு விடுவார்கள். குழந்தைகளுக்கென்று எல்யூஸிஸ் ஆர்டர் தந்து தருவித்திருந்த ஆறு சாய்ந்தாடும் குதிரைகளைக்கூட எடுத்துவர முடியவில்லையே என்று ஆண்டெர்ஸனுக்கு வருத்தம்தான்—பெர்கன் நகரிலிருந்து வந்தது அந்தச் சாய்ந்தாடும் குதிரைகள்.

ஊர்வலம் ஸெல்லன்ராவுக்கு வந்தவுடன் வாசலில் தோளிலிருந்து மூட்டைகளை இறக்கி வைக்கிறது. அங்கு அதிக நேரம் தங்குவதாக இல்லை அவர்கள். ஒரு கோப்பை பால் சாப்பிடுகிறார்கள். ஸெல்லன்ராவிலேயே சாமான்களை விற்க முயலுபவர்களைப்போலப் பாசாங்கு செய்கிறார்கள். பிறகு கிளம்பிவிடுகிறார்கள். வேடிக்கையாகக் கிளம்பவில்லை அவர்கள். காட்டுப் பிரதேசத்திலே தெற்கு நோக்கிக் கனவேகமாக நடக்கிறார்கள் அவர்கள்.

நண்பகல்வரை நடக்கிறார்கள். சாப்பிடுகிறார்கள். மீண்டும் நடக்கிறார்கள். அஸ்தமித்ததும் தங்க இடம் செய்து கொள்கிறார்கள். கணப்புப் போட்டுக்கொள்கிறார்கள். சிறிது நேரம் தூங்குகிறார்கள். மெத்தைஎன்று சொல்லிக்கொண்டே ஒருபாறையின்மேல் படுத்து உறங்குகிறான் ஸிவெர்ட். அந்தப் பாறைமேல் பகல் பூராவும் வெய்யில் காய்ந்திருக்கிறது; அந்த இரவுக் குளிரில் அது கதகதவென்று இருக்கிறது. ஸிவெர்ட்டுக்குத் தெரியாதா? அவன் தோழர்களுக்கு அவன் சொல்லியும் தெரியவில்லை. புல் தரையிலேயே படுத்துத் தூங்குகிறார்கள். நள்ளிரவில் குளிர் நடுங்குகிறது—கும்பலுடன் விழித்துக் கொள்கிறார்கள். காலையில் உணவு அருந்திவிட்டு மீண்டும் ஊர்வலத்தைத் தொடங்குகிறார்கள்.

வெடிதீர்க்கும் சப்தம் கேட்கிறதா என்று கவனிக்கிறார்கள். அன்று சுரங்க வேலை நடக்கிற இடத்துக்கு வந்து விடலாம் என்று எதிர்பார்க்கிறார்கள். சுரங்கவேலை ஆட்கள் எதிர்ப்படுவார்கள் என்று எதிர்பார்க்கிறார்கள். ஸெல்லன்ராவிலிருந்து அவர்கள் வெகுதூரம் வந்துவிட்டார்கள்—இங்குதான் சுரங்க வேலை நடக்கிறது என்று கேள்விப்பட்டிருக்கிறார்கள். ஆனால் எங்கும் வெடிதீர்க்கும் சப்தம் கேட்கவில்லை. அன்று நண்பகல்வரை

தெற்கு நோக்கி நடக்கிறுர்கள் ; யாருமே கண்ணில்படவில்லே. அப்பால் பல பள்ளங்கள் காணப்படுகின்றன—அங்கு சுரங்கம் வேலே தொடங்கலாமா என்று தற்காலிகமாகப் போட்டுப் பார்த்த ஓட்டைகள்மாதிரி இருக்கின்றன அவை எல்லாம். இதற்கு அர்த்தம் என்ன? இங்கு செம்புச் சுரங்கத்தில் செம்புக் கனி போதிய அளவில்லே—அப்பால் நிறைய இருக்கும். அங்கு செய்யப் போயிருப்பார்கள்—அவ்வளவுதான!

மாலே நேரத்தில் பல பெரிய பெரிய வெடி மருந்து தீர்த்த பள்ளங்கள் தென்படுகின்றன. ஆனுல் அங்கெல்லாம் யாரும் மனிதர்களே இல்லே. இருட்டுகிறவரையில் நடக்கிறுர்கள். தூரத்திலே கடல் தெரிகிறது. வழிநெடுக சுரங்க வேலே நடந்திருப்பது தெரிகிறது—அதாவது தொடங்கப்பட்டது தெரிகிறது. தொடங்கியதற்கு மேல் எங்கும் வேலே நடைபெற வில்லே. மனிதன் யாரும் எதிர்ப்படவேயில்லே. அவர்களுக்கு விஷயம் புரியவேயில்லே. என்ன செய்வது. இரவு, முந்திய இரவு போலவே, படுக்கிறுர்கள். தங்களுக்குள் இதுபற்றிப் பேசுகிறுர்கள்: சுரங்க வேலே முழுவதும், பூரணமாக நின்று விட்டதோ! அவர்கள் அப்படியானுல் திரும்ப வேண்டியதுதானு? "கூடாது! கூடாது!" என்கிறுன் ஆண்டெர்ஸன்.

மறுநாள் காலேயில் அவர்கள் இருந்த இடத்தைத் தேடி வருகிறுன் ஒரு மனிதன். வெளுத்த முகமும் களேத்த உடலுமாக வருகிறுன் அவன். அவன் கண்கள் அவர்களேத் தீக்ஷண்யமாகக் கவனிக்கின்றன. "யார் அது, ஆண்டெர்ஸனு?" என்கிறுன் வந்தவன். ஆமாம். வந்தவன் ஆரான்ஸென்தான்—வியாபாரி ஆரான்ஸென்தான். காபி வேண்டுமா என்று கேட்டதற்கு வேண்டாம் என்று சொல்லிவிடவில்லே அவன். சாப்பிடுவதற்கும் அவனுக்கு ஏதோ தருகிறுர்கள். "உங்கள் கணப்பின் புகை தெரிந்தது—யார் என்று பார்க்கலாம் என்று வந்தேன்" என்றுன் ஆரான்ஸென். "சரி. சுரங்கவேலே ஆரம்பித்து விட்டார்களோ என்று மீண்டும் வந்தேன். என்னடா என்றுல் நீங்கள் இருக்கிறீர்கள் இங்கு. என்ன விசேஷம்?"

"இங்கேதான் வந்தோம்."

"என்ன தூக்கி வந்திருக்கிறீர்கள்?"

"வியாபாரத்துக்கு சாமான்கள்."

"வியாபாரத்துக்கு சாமான்களா? சாமான்களா? அவற்றை வாங்குவது யார்? யார் வாங்குவது என்று கேட்கிறேன் நான். இங்கு யார் இருக்கிறார்கள்? சுரங்கத் தொழிலாளிகளெல்லாம் போன சனிக்கிழமையே காலி பண்ணிக்கொண்டு போய் விட்டார்களே!"

"போய்விட்டார்களா?"

"ஒருவர் பாக்கியில்லாமல் போய்விட்டார்கள். என்னிடம் கூட நிறையச் சாமான்கள் இருக்கின்றன. நகரில் ஒரு கடை நிறையச் சாமான் இருக்கின்றன. உங்களுக்கு என்ன தேவையோ வாங்கிக் கொண்டு போங்கள்."

வியாபாரி ஆரான்ஸென் மீண்டும் விற்பனையில்லாது அவஸ்தைப்பட்டுக் கொண்டிருக்கிறான். சுரங்க வேலை இந்தப் பக்கமும் இவ்வளவு சீக்கிரம் முடிவிடும் என்று எப்படி அவன் எதிர் பார்த்திருக்க முடியும்?

அவன் ஆத்திரம் அடங்கும்வரையில் அவனுக்குக் காபி கொடுத்து சமாதானப் படுத்துகிறார்கள். முழு விவரத்தையும் கேட்டுத் தெரிந்து கொள்கிறார்கள் மற்றவர்கள்.

ஆரான்ஸென் தலையைக் கோபமாக ஆட்டுகிறான்: "இது புரிந்துகொள்ளக்கூடிய விஷயமே இல்லை—வார்த்தைகளில் சொல்லமுடியாது" என்கிறான் அவன். எல்லாம் சரிவரவே நடைபெற்று வந்தது. அந்தச் சிறு நகரத்திலே சுரங்கக் கூலிகளின் நடமாட்டம் தொடங்கியவுடனே அவன் கடை வைத்தான். வியாபாரம் சரிவரவே நடந்தது. பணம் வந்து கொட்டியது. எல்லாம் சுபிக்ஷமாக இருந்தது. அந்தச் சிறு நகரத்தில் ஜன நடமாட்டமும் பணப் புழக்கமும் பலமடங்கு பெருகியது. எல்லோரும் நாகரிக உணவு சாப்பிடத் தொடங்கினார்கள். ஊருக்குப் புதுப் பள்ளிக்கூடம் கட்டினார்கள். நகரத்திலிருந்து ஆர்டர் தந்து பூட்ஸுகள்கூடத் தருவித்து அணியத் தொடங்கினார்கள் அந்தக் கிராம மக்கள். திடீரென்று சுரங்க முதலாளிகள் சுரங்கவேலை லாபகரமாக இல்லை என்று தீர்மானித்து வேலையை நிறுத்திவிட்டார்கள். லாபமா? ஏன் லாபமாக இல்லை? லாபமாக இல்லை என்றால் ஏன் எப்படி வேலை தொடங்கினார்கள்? செம்புதான் சுரங்கத்தில் இருந்ததே! ஏதோ பெரும் புரட்டுத்தான் அவ்வளவும்! "என்னைப் போன்ற ஒருவனுக்கு அவர்கள் காரியத்தால் என்ன நஷ்டம் விளையும் என்று அவர்கள்

சிந்தித்தார்களா? அவர்கள் சொல்வது உண்மையாகவே இருக்கும். முன்போலவே இதற்கெல்லாம் காரணம் அந்தக் கெய்ஸ்ஸலர் தான்! வேறு யார்? அவன் வந்தவுடனேயே வேலை நின்றுவிட்டது. எப்படியோ அந்தச் செம்பை அவன் மறையச் செய்துவிட்டான்.''

''கெய்ஸ்ஸலர் வந்திருக்கிருனா இங்கே?''

''அவன் வராமலா? அவனைச் சுட்டுவிடவேண்டும். வேறு என்ன? கப்பலில் வந்தான் ஒருநாள். எஞ்ஜினியரிடம் 'எப்படி இருக்கிறது?' என்று கேட்டான். எல்லாம் சரியாக இருக்கிறது என்ருன் எஞ்ஜினியர். ஆனால் கெய்ஸ்ஸலர் தலையைச் சாய்த்துக் கொண்டு ஓ! எல்லாம் சரியாக இருக்கிறதா? என்று கேட்டான். 'எனக்குத் தெரிந்தவரையில் எல்லாம் சரியாகத்தான் இருக்கிறது' என்கிருன் எஞ்ஜினியர். நான் சொல்வதை நம்பினல் நம்பு—நம்பாவிட்டால் போ. கெய்ஸ்ஸலர் வந்த கப்பலிலேயே எஞ்ஜினியருக்கு உத்தரவும் வந்துவிட்டது—வேலை லாபகரமாக இல்லை—நிறுத்திவிடலாம் என்று.''

மூட்டைகளைச் சுமந்து வந்த மூவரும் திகைப்புண்டவர்களாக ஒருவரையொருவர் பார்த்துக்கொண்டனர். ஆனால் தலைவன் ஆண்டெர்ஸன் தைரியத்தை இழந்துவிடவில்லை.

''நீங்கள் சாமான்களையும் தூக்கிக்கொண்டு திரும்பிவிடுவது நல்லது'' என்று ஆரான்ஸென் புத்திமதி சொல்லுகிருன்.

''நாங்கள் அப்படிச் செய்வதாக இல்லை'' என்ருன் ஆண்டெர்ஸன். காப்பிப் பாத்திரங்களை எடுத்து மூட்டையில் போட்டான்.

தன்னுடைய மாஜி எசமான் சொல்வதைக் காதில் வாங்கி அதன்படிச் செய்யவேண்டிய அவசியம் ஏது ஆண்டெர்ஸனுக்கு? அவனே அவன் கடைக்கும் அவன் சாமான்களுக்கும் யசமானன் அல்லவா?

மூவரையும் மாறிமாறிப் பார்த்தான் ஆரான்ஸென். ''அப்படியானல் உங்களுக்குப் பைத்தியம்தான் பிடித்துவிட்டது'' என்ருன். ''எங்கே போவது நீங்கள்?''

இப்போது திரும்பினல் ஆண்டெர்ஸனின் கௌரவமே குலைந்துவிடாதா? திரும்பிவிடுகிற உத்தேசமில்லை அவனுக்கு. ''எங்கு போகலாம்? அதுதான் தெரியவில்லை!'' என்கிருன் அவன். ஆனாலும் அவன் மனசில் ஒரு யோசனை யில்லாமல் இல்லை. எதிரேயுள்ள கிராமத்திலும் அதிலுள்ள ஜனங்களிடமும் வியாபாரம்

செய்யலாம் ஏதாவது என்கிற சிந்தனையும் அவனுக்கில்லாமல் இல்லை — அந்தப் பிராந்தியத்திலிருந்தவர்களுக்கு மணிகளும் மாலைகளும் பல ரகமான மோதிரங்களும் பிடிக்காதா என்ன? தன் சகாக்களைப் பார்த்து, "கிளம்புங்கள் போகலாம்" என்றான்.

இவ்வளவு தூரம் வந்த ஆரான்ஸென் அன்று இன்னும் அதிக தூரம் போய் அந்த பிரதேசத்தைப் பார்வையிடுவது என்றுதான் உத்தேசித்திருந்தான். ஆனால் மேலே கிராமத்தை நோக்கி நடக்கத் தீர்மானித்த இந்த மூவரையும் பார்த்ததும் அவர்களுடனும் அவனும் திரும்பிவிட்டான். தன்னுடைய பிராந்தியத்துக்குள் அவர்கள் பிரவேசித்து வியாபாரம் செய்வதைத் தடுக்கவேண்டும் என்று அவன் தீர்மானிக்கிறான்— அவர்கள் முன் சென்று இங்கு யாரும் இல்லை யாரும் இல்லை என்று கூவுகிறான்—முஷ்டிகளை மடக்கிக்கொண்டு அவர்களை அடிக்க வருகிறான். சுரங்கக் கூலியாட்கள் தங்கியிருந்த இடத்துக்கு வந்தார்கள்.

குடிசைகள் நிறைந்த ஒரு கிராமம். குடிசைகள் அப்படியே இருக்கின்றன. அவற்றில் ஆட்கள்தான் யாரும் இல்லை... சுரங்க வேலைக்கு உதவுகிற கோடாலிகள், மண்வெட்டிகள், மற்றும் பல விதமான ஆயுதங்கள் எங்கும் இறைபட்டுக் கிடக்கின்றன; கழிகளும், கொம்புகளும், கல்லும் மண்ணும் சிதறிக் கிடக்கிறது. அங்கும் இங்கும் ஒரு கதவின் மேல் "உள்ளே வரக் கூடாது" என்று எழுதியிருக்கிறது.

"நான்தான் சொன்னேனே! இங்கு யாரும் இல்லை" லென்ஸ் மாண்டு அதிகாரியைக் கூப்பிட்டு அவர்களை அவனிடம் ஒப்படைத்துச் சிறையிலிடச் செய்வேன் என்றான். இனி வியாபாரம் என்று ஒரு அடி எடுத்து வைத்தார்களானால்—அவ்வளவுதான். அவர்களுக்கு ஆயுள் தண்டனையே வாங்கித் தந்துவிடுவான் அவன்! ஜாக்கிறதை! ஜாக்கிறதை என்றான்.

திடீரென்று யாரோ ஸிவெர்ட்டைக் கூப்பிடுவது காதில் விழுகிறது. யாரும் இல்லாமல் இல்லை—யாரோ இருக்கிறார்கள். ஒரு குடிசையின் வாயிலிலிருந்து யாரோ ஒருவன் ஸிவெர்ட்டைக் கூப்பிடுகிறான். மூட்டையையும் தூக்கிக்கொண்டு போய்ப் பார்க்கிறான்—அது கெய்ஸ்ஸலர்.

"உன்னை இங்கு சந்திப்பதும் வேடிக்கைதான்" என்றான் கெய்ஸ்ஸலர். அவன் முகம் சிவந்திருக்கிறது; பெருத்து

இருக்கிறது. கண்களில் சூரிய வெளிச்சம்படா திருப்பதற்காகத் தடுப்புக் கண்ணுடிகள் அணிந்திருக்கிருன். அவன் வழக்கம் போலவே அமர்க்களமாகப் பேசுகிருன்: "இதுவும் நல்லதுதான். ஸெல்லன்ராவுக்கு அவ்வளவு தூரம் நடக்க வேண்டுமே என்று பயப்பட்டேன் நான். தவிர எனக்கு வேலேயும் அதிகம் இருக்கிறது. ஆல்மென்னிங் பிரதேசத்திலே எத்தனே பண்ணேயாளர்கள் இருக்கிருர்கள் இப்போது!"

"பத்து."

"புதுப் பண்ணேகள் பத்து. நல்லது. எனக்கு பரம திருப்திதான். உன் தகப்பனுரைப் போல முப்பத்திரண்டாயிரம் பேர்வழிகள் வேண்டும்—நம் நாடு உருப்படவேண்டுமானுல். நான் சொல்வது அதுதான். முப்பத்திரண்டாயிரம் பேர்வழிகள் வேண்டும். நான் கணக்குப் பண்ணிப் பார்த்துவிட்டேன்" என்ருன் கெய்ஸ்ஸலர்.

அவனுடன் வந்தவர்கள் காத்திருக்கிருர்கள். "போகலாமா ஸிவெர்ட்?"

கெய்ஸ்ஸலர் பதில் அளிக்கிருன்: "அவன் வரமாட்டான்."

"நான் பின்னர் வருகிறேன்" என்று ஸிவெர்ட் தன் மூட்டையை இறக்கி வைக்கிருன்.

கெய்ஸ்ஸலரும் ஸிவெர்ட்டும் உட்கார்ந்து பேசுகிருர்கள். கெய்ஸ்ஸலர் பேசுகிற வேகத்தில் இருக்கிருன். ஸிவெர்ட்டைப் பதில் சொல்லக்கூட விடாமல் பேசுகிருன். "ரொம்பவும் திருப்தி கரமான விஷயம். நான் எதிர்பார்த்தபடியே எல்லாம் நடந்தது. ஸெல்லன்ரா வர உத்தேசித்திருந்தேன். உன்னே இங்கு பார்த்தது நல்லதாகிவிட்டது. எல்லோரும் சௌக்கியம்தானே!"

"சௌக்கியம்தான்.

"மாட்டுக் கொட்டிலுக்கு மேல் புதுப் பரண் போட்டாகி விட்டதா?"

"ஆகிவிட்டது."

நல்லது. எனக்குக் கவனிப்பதற்கு ஆயிரம் காரியங்கள் இருக்கின்றன. என்னுல் சமாளிக்க இயலாத அளவு காரியம் இருக்கிறது. இதோ நாம் உட்கார்ந்திருக்கிற இடத்தைப் பார் ஸிவெர்ட். இதைப்பற்றிஎன்ன சொல்லுகிருய் நீ? அழிந்து விட்ட நகரம். மனிதர்கள் எவ்வளவு சிரமப்பட்டு இதை யெல்லாம் நிர்மாணித்தார்கள். உண்மையைச் சொல்லப்போனுல் ஆரம்ப

முதல்நான்செய்த தவறுதல்தான் இது. அதாவது விதி என் மூலம் இந்த நாடகத்தை நடத்தி வைத்தது. உன் அப்பா மலைச் சரிவிலிருந்து சில கற்களைப் பொறுக்கி வந்தார். நீ குழந்தையாக இருக்கும்போது அவற்றை உனக்கு விளையாடத்தந்தார். அப்படித் தொடங்கியது இந்த நாடகம். மனிதர்கள் அதற்கு வைத்த மதிப்பைப் பொறுத்தது அந்தக் கனிச் சுரங்கத்தின் விலை என்பது எனக்குத் தெரியும். அதன் மதிப்பை நானே உயர்த்தினேன். வாங்கினேன். விற்றேன். அந்தக் கனிச் சுரங்கம் பல கைகள் மாறிற்று. அழிவு தேடியது அது. காலம் சென்றது. சில நாட்களுக்குமுன் நான் இங்கு வந்தேன். எதற்காக வந்தேன், தெரியுமா?'' சுரங்கத்தை மீண்டும் விலைக்கு வாங்கிக் கொள்ள வந்தேன்.

பேச்சைச் சற்று நிறுத்தினான் கெய்ஸ்ஸலர். ஸிவெர்ட்டைப் பார்த்தான். மூட்டையைப் பார்த்தான். மூட்டையில் என்ன தூக்கிக் கொண்டு போகிறான் என்று விசாரித்தான்.

"சாமான்கள் கிராமத்தில் விற்க எடுத்துப் போகிறோம்.''

அதில் கவனம் இல்லை கெய்ஸ்ஸலருக்கு. காதில் போட்டுக் கொண்டானோ என்னவோ. அவன் மேலே சொல்லுகிறான்:

"திருப்பி வாங்க வந்தேன். ஆமாம். என் மகன் போன தடவை விற்றான். உன் வயசுதான் இருக்கும் அவனுக்கும். அவன் என் குடும்பத்தில் மின்னல்—நான் மூடுபனி. எது செய்வது நல்லது என்று எனக்குத் தெரியும். ஆனால் நான் அதைச் செய் வதில்லை. அவன் மின்னல்—தொழில் உலகில் பிரவேசித் திருக்கிறான் அவன். அவன் விற்றான் இதை எனக்காக. நான் ஒரு தினுசு; அவன் ஒரு தினுசு. புதுமாதிரியானவன் அவன் வெட்டொன்று—துண்டிரண்டுதான். ஆனால் மின்னலால் லாபம் என்ன? ஸெல்லன்ராவிலேயே பாரேன். வீடும் வயலும் ஆறும் மலையும்தான். இதில் புதுமை என்ன? பூமியும் வானமும் அங்கு சேர்ந்து தவழ்ந்து விளையாடுகின்றன. அதை ஒட்டின வாழ்வு உங்கள் வாழ்வு. இரண்டையும் அறிந்தவர்கள் நீங்கள் உங்கள் கையில் போர்வாள் இல்லை. தலையில் ஒன்றுமில்லாமல், கையிலும் ஒன்றுமில்லாமல் வாழுகிறீர்கள் நீங்கள். இயற்கை அன்னை உங்களுக்கு அள்ளித் தருகிறாள். சளைக்காமல் தருகிறாள் மனிதன் இயற்கையோடு ஒட்டி வாழ்கிறான். ஸெல்லன்ராவில். போராடவில்லை. உங்கள் ஐசுவரியத்துக்கும் அளவுண்டோ—அளவு கோல்கள்தான் உண்டோ? வானத்து நக்ஷத்திரங்கள் போலக்

கணக்கற்றவை உங்கள் நலன்கள். இதோபார் ஸிவெர்ட். நீபோது மென்ற மனசுடன் இரு. இயற்கை அன்னை தருவாள் என்றிரு. வாழ்க்கைக்கு உன் விஷயத்தில் அர்த்தமிருக்கிறது. உன்னைப் போன்றவர்கள் தான் இன்று மனிதகுலத்தின் தேவை. வாழ்க்கை நடப்பது உன் போன்றவர்களால்தான். தலைமுறைக்குப் பின் தலைமுறையாக புத்திரர்கள் உற்பத்தி செய்கிறீர்கள். புது ரத்தம் ஊறுகிறது. நீ இறந்துவிட்டாலும் கூட உன் வாழ்வு தொடர்கிறது. அதுதான் வாழ்க்கையின் அர்த்தம் — இந்தத் தொடர்பும் வளர்ச்சியும், எல்லோருக்கும் உதவுகிற, தீங்கிழைக்காத, வாழ்க்கை. மனிதகுலத்துக்கே அவசியமானவன் நீ! உனக்கு இதிலென்ன லாபம்? ஸெல்லன்ராவில் இருக்கிற வரையில் உன்னை அடிமைப் படுத்த யாராலும் முடியாது. இயற்கையின் பரிவும், அமைதியும், தனிமையும் உன்னைச் சூழ்ந்திருக்கின்றன. அதுதான் உனக்குக் கிடைக்கிற பரிசு அதில்லாமல் மனிதன் வாழ்வானேன். வாழ்ந்து லாபம் என்ன? உன் அப்பா—முப்பத்திரண்டாயிரம் மனிதர்களில் ஒருவன் அவன். மற்றவர்களைப்பற்றி அது சொல்ல முடியாதே! நான்—நான் மூடுபனி—பனிமேகம் ஒட்டாமல் திரிந்து கொண் டிருப்பவன். காய்ந்த தரையில் பெய்கிற மழைமாதிரித்தான், மற்றவர்களைப்பற்றி என்ன சொல்ல? என் மகன்—அவன் மின்னல் —பயன்தராத மின்னல். அவனால் சுருசுருப்பாக இருக்க முடியும்— இருக்கின்றான். நம் காலத்துப் பிள்ளை அவ்ன். அவன் படித்துப் பல விஷயங்களை அறிந்தவன் யூதனும் அமெரிக்கனும் கற்றுத் தந்ததையெல்லாம் மனப்பாடமாக அறிந்திருக்கிறான் அவன். எனக்கு இதில் நம்பிக்கையில்லை. ஆனால் நான் பௌராணிகனா என்ன? என் குடும்பத்தவர் என்னை மூடுபனியாக ஏற்றுக் கொள்ளுகிறார்கள். காரியங்கள் செய்வேன். செய்து விட்டு வருந்துவேன் நான். உண்மை அதுதான். அந்த வருத்தப்படுகிற காரியம் இல்லாவிட்டால் நானும் மின்னல் தான். நான் இப்போது மூடுபனி.''

திடீரென்று ஏதோ ஞாபகம் வருகிறது கெய்ஸ்ஸலருக்கு. ''அந்தப் பரண் போட்டாகிவிட்டதா?''

''உம்...பரண் போட்டாகிவிட்டது. புது வீடு கட்டி யிருக்கிறார் அப்பா.''

''புது வீடா?''

''ஆமாம். யாராவது வந்தால் தங்குவதற்கு. கெய்ஸ்ஸலர் வரலாம் என்று அப்பாவுக்கு நம்பிக்கை.''

கெய்ஸ்ஸலர் இதுபற்றிச் சிந்திக்கிறான். ஒரு தீர்மானத்துக்கு வருகிறான். "அப்படியானால் நான் வருகிறேன். அவசியம் வருகிறேன். அப்பாவிடம் சொல்லு. ஆனால் எனக்கு நிறைய வேலை இருக்கிறது. இந்த என்ஜினியரிடம் சொல்லியனுப்பி இருக்கிறேன்—இந்தச் சுரங்கத்தை நான் திரும்பவும் வாங்கிக்கொண்டு விடுவதாக. என்ன நடக்கிறது பார்க்கலாம்! எனக்கு ஒன்றும் அவசரமில்லை. அந்த என்ஜினியரை நீ பார்த்திருக்கவேண்டுமே! மனிதர்களும் குதிரைகளும் பணமும் எவ்வளவு புழங்கியிருந்தது இங்கே! எல்லாம் சரிப்பட்டுவிடும் என்று ஞாபகம் அவனுக்கு. பாவம்! கற்களைப் பணமாக்கிவிடுவது என்று தீர்மானம் அவனுக்கு. நாடே இதனால் செழிக்கும் என்று அவன் நினைப்பு. பணம் வந்தால்மட்டும் போதுமா? பணத்துக்கென்ன குறைச்சல் இங்கே? உன் அப்பனைப் போன்ற மனிதர்களைத்தான் காணமுடியவில்லை. சாதனத்தையே லக்ஷியமாகக் கொண்டு வாழ்பவர்களுக்குத்தான் பஞ்சம் இங்கு. மற்ற எதற்கும் பஞ்சம் கிடையாது. குடிக்கத் தெரியும் என்ஜினியருக்கும் அவன் ஆட்களுக்கும் — உழைக்கத் தெரியுமா? எதற்காகப் பாடுபடுகிறார்கள்? அசட்டுத்தனமான தைரியம் என்றுகூட அதைச் சொல்லமுடியாது. வாழ்க்கை ஓடிவிடப் போகிறதே என்று அதைத் துரத்துகிறார்கள்; இயற்கையோடு ஒட்டி வாழத் தெரியாதவர்கள். வேகம்! வேகம்! வேகம்! எதற்கெடுத்தாலும் வேகம்தான்! என்ன அவசரமோ இது! வாழ்க்கையை அனுபவிக்கத் தெரியாதவர்கள் வாழ்கையைப்பற்றிக் கசந்து கொண்டு என்ன லாபம்? இவர்களை இயற்கை நசுக்கிவிடுகிறது. எவ்வளவு சூதாடிகள் இருக்கிறார்கள் நம்மிடையே!"

மீண்டும் எதையோ ஞாபகப்படுத்திக் கொள்கிறான். "அதிருக்கட்டும்." அவன் பேசியே களைத்துப்போய்விட்டான். சிறுமூச்சும் பெருமூச்சுமாக விடுகிறான். "நீ கீழே கிராமத்துக்குப் போகிறாயா?"

"ஆம்."

"அவசரம் ஒன்றுமில்லையே. என்னுடன் நீ இன்னும் சற்று நேரம் இரு. தவிரவும் ஒருநாள் என்னுடன் நீ வராமல் ஸெல்லன்ராவில் தங்கினாய் — அந்த நடையை இப்போது நடந்து விடுவோமா? எனக்கு ஒரு ஞாபகம் வருகிறது. எனக்கு வயசு அப்போது ஒண்ணரை. கார்போ பாலத்தில் நின்றேன் — ஒரு வாசனை என் நாசியைத் துளைத்தது. அந்த வாசனை எனக்கு இன்று வீசுகிறது போலத் தெரிகிறது. அது போகட்டும். அந்த

மூட்டையில்லாவிட்டால் நீயும் நானும் இப்போது நடக்கத் தொடங்கிவிடலாம். சாக்கில் என்ன இருக்கிறது?"

"சாமான்கள் — ஆண்டெர்ஸன் விற்கக் கொண்டுவந்தான்."

"அது சரி. எது செய்தால் சரி என்று எனக்குத் தெரியும். ஆனால் அதைச் செய்யவில்லை. நான் மூடுபனிதானே! ஒரு நாள் இந்தக் சுரங்கத்தை நான் மீண்டும் வாங்கிவிடுவேன். முடியாத காரியமா என்ன அது? நான் சூதாடியல்ல. ஆகாச ரெயில் என்றோ தென் அமெரிக்கா என்றோ பிதற்றமாட்டேன். இது முடிந்துவிடும் என்று எனக்குத் தெரியும்—அதனால் என்னைச் சைத்தான் என்கிறார்கள் ஜனங்கள். அதில் ஒன்றும் ரகசியம் இல்லை. நம் விலையைவிடக் குறைந்த விலையில் தென் அமெரிக்கர்களுக்குச் செம்பு கிடைக்கிறது—வட அமெரிக்கர்கள் தருகிறார்கள். அதுதான் விஷயம். தென் அமெரிக்காவை நம்பி இங்கு சுரங்கம் வைக்க முடியாது. என் மகன் மின்னல்—அவன் சொன்னதைக் கேட்டு வந்தேன் இங்கு. அவ்வளவுதான்—ரகசியம் இல்லை. குட்டிச்சாத்தான் வேலையல்ல இது."

மீண்டும் அதைப்பற்றிப் பேசிப் பெருமூச்சுடன் ஓய்கிறான் கெய்ஸ்ஸலர். "போகலாமா, கிளம்பு!"

இருவரும் சேர்ந்து கிராமத்தை நோக்கிக் கிளம்புகிறார்கள். கெய்ஸ்ஸலர் மிகவும் களைத்திருக்கிறான்; அவனால் நிமிர்ந்து நடக்க முடியவில்லை. பிரடிரிக் ஸ்டிராமும் ஆண்டெர்ஸனும் கடலோரமாகத் தங்கியிருந்தார்கள். பிரடிரிக் தங்களுடன் வந்து தொந்திரவு கொடுத்த ஆரான்ஸெனைக் கேலி செய்கிறான்: "புகையிலை இருக்கா?" என்கிறான்.

"புகையிலையா வேண்டும் உனக்கு?" என்று அடிக்க வருகிறான் ஆரான்ஸென்,

பிரடிரிக் சிரிக்கிறான். "இதோ நொடியில் எங்கள் சாமான்களை விற்றுவிட்டு நாங்கள் திரும்பிவிடுகிறோம். உன் கண் முன்னாடியே விற்றுவிடுவோம் பார்."

"வாயை அலம்பு" என்கிறான் ஆரான்ஸென் கோபமாக.

"ஹா! ஹா! உனக்கு நாட்டியம்கூட ஆடத் தெரியுமா?"

கெய்ஸ்ஸலருக்கு ஒரே அலுப்பாக இருக்கிறது. ஒரே அலுப்பு. "குட்பை ஸிவெர்ட். இந்தத் தடவை ஸெல்லன்ரா போக என்னால் முடியாதுபோலிருக்கிறது. அப்பாவிடம் சொல்லு.

நான் கவனிக்கவேண்டிய காரியங்கள் பல இருக்கின்றன. நான் பின்னர் வருகிறேன். வரட்டுமா?........."

அவன் பின்னால் ஆரான்ஸென் காறியுமிழ்கிறான். "அவனைச் சுடவேண்டும்" என்கிறான்.

மூன்று நாட்கள் அங்கு தங்கிக் கொண்டு வந்திருந்த சாமான்களையெல்லாம் விற்றார்கள் மூவரும். நல்ல விலைக்குத்தான் விற்றார்கள். சுரங்கம் போய்விட்டதே தவிர, சுரங்கமிருந்த நாளில் வந்த பணம் இன்னும் புழக்கத்தில் இருந்தது. என்னத்தையெல்லாமோ வாங்கினார்கள். பேப்பர் அறுக்கும் கத்திகள். ஸ்பிரிங் வைத்த கத்தும் பறவைகள், இத்தியாதிகளை வாங்கினார்கள். ஆரான்ஸெனுக்குக் கோபம் கோபமாக வந்தது, "என் கடையில் இத்தனை சாமான்களும் இருக்கின்றனவே" என்று கிராமவாசிகளிடம் கத்தினான்.

ஆரான்ஸென் சிரமப்பட்டான். நாள் பூராவும் இந்தப் புது வியாபாரிகளுடன் இருந்து அவர்கள் விற்பனையைக் கண்காணிக்க விரும்பினான் அவன். மூவரும் மூன்று பக்கமாகப் போனார்கள்— அங்கும் இங்கும் ஓடினான் ஆரான்ஸென். பிரடிரிக் அவனைக் கேலி செய்து அவமானப்படுத்தினான். அவனைத் தொடருவதை நிறுத்தினான் ஆரான்ஸென். ஸிவெர்ட் ஒரு வார்த்தையும் பேசுவதில்லை என்பதற்காக அவனைப் பின் தொடருவதையும் நிறுத்திவிட்டான். தன்னுடைய பழைய குமாஸ்தாவையே தொடர்ந்தான் கடைசியில். ஆனால் ஆண்டெர்ஸனுக்குத் தன் எஜமானனைத் தெரியாதா?

"இங்கிலீஷ் நூல் விற்பது சட்டவிரோதமானது அல்லவா?"

"ஆமாம். என்னிடம் இங்கிலீஷ் நூல் ஒரு துண்டுகூட இல்லையே! நீயே பாரேன்."

"எது விற்கலாம், எது விற்கக்கூடாது என்று எனக்குத் தெரியாதா?" என்றான் ஆரான்ஸென்.

ஒருநாள் பூராவும் அவனுடன் வாதாடினான் ஆண்டெர்ஸன். பிறகு ஆரான்ஸெனுக்கு அலுத்துவிட்டது; வீடு திரும்பி விட்டான். அதற்குப் பிறகு வியாபாரம் அமர்க்களமாக நடந்தது. அந்த நாட்களில் பெண்கள் சவுரிகள் உடயோகித்தனர் — நிறையச் சவுரிகள் கொண்டுவந்திருந்தான் ஆண்டெர்ஸன். நன்றாகப் பேசிக்

கொண்டே வியாபாரம் செய்தான். மூன்று வாலிபர்களும் மாலையில் சந்தித்துத் தங்கள் தங்கள் பேரங்களைப்பற்றிப் பேசுவார்கள். தங்களிடம் விற்றுவிட்டதை மற்றவர்களிடம் வாங்கிக்கொள்வார்கள். ஜெர்மனியில் செய்தது என்று ஒரு ஊதலில் இருக்கும் — ராவிவிடுவான் ஆண்டெர்ஸன். பேனு, பென்சில்களில் பேர் போட்டிருப்பதை அழித்துவிடுவான். ஆண்டெர்ஸன் இந்தமாதிரி விஷயங்களில் மஹா கெட்டிக்காரன்.

ஸிவெர்ட் வியாபாரியாகப் பிரகாசிக்கவில்லை. கெட்டிக்காரன் தான் அவனும். ஆனுல் அவனுக்கு அழகாகப் பேச வராது. ஆயினும் அதிகமாக விற்பனை அவன் கையில்தான் ஆயிற்று.

"லொட லொடவென்று பேசவேண்டும்" என்றுன் ஆண்டெர்ஸன்.

ஸிவெர்ட்டுக்குப் பேச்சுத்தான் சுலபமாக வராது. அவன் வயலில் உழைப்பவன். அமைதியாகத்தான் பேசுவான். அதிகமாகப் பேசுவானேன்? அதனுல் லாபம் என்ன? வயலில் வேலை காத்திருந்தது. அவனுக்குத் திரும்ப அவசரம்.

"ஜென்ஸன் கூப்பிடுகிறுன்" என்று கேலி செய்தான் பிரடிரிக். பிரடிரிக்குக்கும் அவன் பண்ணையில் வேலை இருக்கிறது. அப்படியும் அவன் கடைசி நாளன்று ஆரான் ஸெனைத் தேடிக்கொண்டு போகிறுன். அவனுடன் விவாதிக்கிறுன். மீதிச் சரக்குகளை அவனிடம் விற்றுவிடலாம் என்று போனுன். அவன் மட்டும்தான் உள்ளே போனுன். மற்ற இருவரும் வெளியே காத்திருந்தார்கள். உள்ளிருந்து இருவர் குரலும் கேட்டது. பிரடிரிக்கின் சிரிப்பொலி கேட்டது. ஆரான்ஸெனின் கோபக் குரல் கேட்டது. வெளியே போ என்று கத்தினுன் ஆரான்ஸென். ஆனுல் பிரடிரிக் வந்துவிடவில்லை. ஆரான்ஸெனுக்கு ஆடும் குதிரைகள் ஒரு டஜன் தேவையா என்று விசாரித்துக் கொண்டிருந்தான் பிரடிரிக்.

மூவரும் வீடு திரும்பினுர்கள். உத்ஸாகமாகவும், உல்லாசமாகவும், நடந்தார்கள். பாடினுர்கள். குதித்தார்கள். திறந்த வெளியில் படுத்துத் தூங்கினுர்கள். திங்கள் அன்று ஸெல்லன்ரா அடைந்தார்கள். ஐஸக் விதை விதைக்கத் தொடங்கிவிட்டான். அதற்குரிய காலம் வந்துவிட்டது. காற்றிலே ஈரம் இருந்தது. சூரியனும் சற்றே காய்ந்தது. வானவில் வானிலே வளைந்திருந்தது.

நண்பர்கள் பிரிந்தார்கள் — வணக்கம், வணக்கம்.

ஐஸக் விதை விதைக்கிறான். மரக்கட்டை மாதிரியான மனிதன். பார்க்க மனிதன்மாதிரி இருக்கிறான் அவன். வீட்டில் நூற்று நெய்த துணிதான் அணிந்திருக்கிறான். கம்பளிச் சட்டை கூட அவன் ஆட்டு ரோமத்திலிருந்து நெய்ததுதான். காலில் அவன் அணிந்திருந்த பூட்ஸ் அவன் மாட்டுத் தோல்தான். தலையில் எதுவும் அணியாமல் நடக்கிறான் — விதை விதைக்கிறான். உச்சியிலே அவன் தலையில் சொட்டை விழுந்திருக்கிறது. அவன் உடம்பெல்லாம் ஒரே மயிராக இருக்கிறது. அவன் தாடி விசிரி மாதிரி விரிந்து பறக்கிறது. மார்க்கிரேவ் ஐஸக் அவன். ஆம்.

அது என்ன கிழமை என்ன தேதி என்று அவனுக்குத் தெரியாது. அதற்கு என்ன அவசியம்? இந்தத் தேதியில் யாருக்காவது, ஏதாதது பணம் தர வேண்டும் அவன் என்ற அவசியம்உண்டா? அவன் யாருக்கும் எதுவும் தரவேண்டியதில்லை. பஞ்சாங்கத்தில் அவன் குறியிட்டிருக்கிறதெல்லாம் நாள், கிழமை என்றல்ல — பசு இன்று ஈனும் — ஆடு இன்று ஈனும் என்கிற கணக்குத்தான். இலையுதிர் காலத்தில் சந்த ஒலாவின் தினம் தெரியும் அவனுக்கு — அந்தத் தினத்துக்கு முன் வைக்கோல் போர் போட்டாகிவிட வேண்டும். வஸந்தத்தில் காண்டில்மஸ் தினம் தெரியும். அதற்கு மூன்று வாரங்களுக்குப் பிறகுதான் உறங்குமிடத்திலிருந்து கரடிகள் வெளியே வந்துலாவும். அதற்குள் விதை விதைத்தாகிவிட வேண்டும். அவசியமானது எல்லாம் அறிந்தவன் அவன்.

உடல், உள்ளம் எல்லாம் நிலத்தில்தான் அவனுக்கு. நிலத்தில் இடைவிடாது உழைப்பவன் அவன். பழமையின் களம் அவன்—எதிர்காலத்துக்கு ஒரு ஆதர்ச புருஷன்—அங்கு நிலம் வளம்பெறத் தொடங்கிய காலத்துக்கு முந்திய காலத்தவன் — அந்த நில வளத்துக்குக் காரண பூதமானவன் அவன்தான். காட்டிலே வந்து தங்கியவன் அவன். இன்று நேற்றைய மனிதன் அல்ல—தொள்ளாயிரம் வருஷங்களுக்கு முற்பட்டவன். ஆனால் இன்று உயிருள்ள மனிதனேதான்!

இப்போது செம்புச் சுரங்கம் என்கிற மாசு அந்த நிலத்திலே இல்லை. அந்தப் பணமும் ஐசுவரியமும்கூட அவனிடம் தங்கவில்லை. சுரங்க வேலை நின்றவுடனேயே அதனால் பணக்காரர்களாக நினைத்தவர்களெல்லாம் ஏழையாகிவிட்டார்கள். ஆனால் ஆல்மென்னிங் நிலங்கள் அப்படியே இருந்தன. அழியாமல் இருந்தன.

வளமாக இருந்தன. புதிதாகப் பண்ணைகள் பத்து ஏற்பட்டி இருக்கின்றன.

அங்கு என்ன விளையாதிருந்தது? எல்லாம் இருந்தது. மனிதர்கள், கால் நடைகள், நிலத்தில் விளைவது எல்லாம் இருந்தது. விதையை நிலத்திலே விசுறுகிறுன். கையிலிருந்து தங்க அருவியாக நிலத்திலே பாய்கிறது அது. ஸிவெர்ட் மண்ணைப் புரட்டுகிறுன். ரோலரை ஓட்டுகிறுன் — பிறகு களைக்கொட்டால் மண்ணை மீண்டும் புரட்டுகிறுன். காடும் வயலும் பார்க்கின்றன. என்ன கம்பீரம்? என்ன சக்தி! காரணமும் காரியமும் பின்னிக் கிடக்கிறது அதிலே. லக்ஷிய பூமி அது.

க்ளிங்...க்ளிங்— என்று மலைச் சரிவிலிருந்து மாட்டு மணிகள் சப்திக்கின்றன. சப்தம் அருகில் நகருகிறது. மாடுகள் வீடு திரும்பிக் கொண்டிருக்கின்றன. பதினைந்து மாடுகள், நாற்பத் தைத்து ஆடுகள் மற்றும் செம்மறியாடுகள் முதலியன. அறுபது எழுபது பிராணிகள். பால் கறக்க பெண்கள் கையில் வாளிக ளுடன் வருகிறுர்கள்—லெபல்டின், ஜென்ஸின், ரிபெக்கா மூவரும். காலில் எதுவும் அணியவில்லை. மார்கரேவின் மனைவி இங்கர் அவர்களுடன் வரவில்லை. அவள் சமைத்துக் கொண் டிருக்கிறுள். உயரமாகவும் கம்பீரமாகவும் இருக்கிறுள் அவள் அவள் வீடு அது. கடவுளின் கன்னி அவள். இங்கர் வாழ்க்கையில் புயல் வீசியது. சிலநாள் அவள் நகரத்தில் இருந்து நாகரிகமடைந்தாள். உண்மைதான். ஆனல் இப்போது அவள் தன் வீட்டிலிருக்கிறுள். உலகம் பறந்து கிடக்கிறது. அதில் எவ்வளவோ சிறு சிறு புள்ளிகள் இங்கர் அந்தப் புள்ளிகளில் ஒன்று. உலகிலே அவள் ஒரு புள்ளி.

மாலை வருகிறது; இருட்டுகிறது.

**முற்றும்**







# அன்னை

**நோபல் பரிசு பெற்ற இத்தாலிய நாவல்**

| ஆசிரியை: | மொழி பெயர்ப்பு: |
| --- | --- |
| **கிரேஸியா டெலடா** | **தி. ஜானகிராமன்** |

(சுருக்கப்படாத அப்பட்டமான மொழி பெயர்ப்பு)

அன்னை என்னும் அதி அற்புதமான சித்திரம்; உலகிலேயே ஈடு இணையற்ற நாவல். காதல் வயப்பட்டு மத விஷயங்களைத் தியாகம் செய்துவிடலாமா என்று எண்ணி ஏங்கித் தயங்கும் உத்தமகுணம் படைத்த ஒரு மதகுருதான் முக்கிய பாத்திரம். காதலையும், மத உணர்ச்சியையும் வைத்து ஒரு திவ்யமான சோக நாடகத்தை—நாவலை இந்த நவீனத்தில் சிருஷ்டித்து இருக்கிறாள். **இத்தாலிய ஆசிரியை கிரேஸியா டெல்டா.**

ஒவ்வொரு தேச பாஷையிலும் தாய் என்ற மகுடங்களுடன்—நாவல்கள் வெளிவந்திருக்கின்றன. ஆனால் அவைகளெல்லாம் வெறும் பிரசார நாவல்கள் என்று கருதப்பட்டது.

இத்தாலிய நாவலான அன்னைக்கு இலக்கிய மதிப்பிற்குரிய பீடம் அளிக்கட்டு 1926-ல் நோபல் பரிசையும் அளித்தார்கள்.

தான் பெற்ற மகனை, மதகுருவாக, ஏன்? போப் ஆண்டவர் பீடத்தில் அமர்த்திப் பார்க்கவேண்டும் என்ற பெற்ற மனத்தின் ஆசையைத் தவிடு பொடியாக்கி விடுகிறது மற்றொரு பெண்ணின் சிற்றின்ப ஆசை. மகனின் மானத்தைக் காப்பாற்றத் தன் உயிரையே அர்ப்பணிக்கும் அன்னையின் சோகமயமான சம்பவம் என்றென்றும் நம் நெஞ்சைவிட்டு அகலாது. உலகத்தின் இறவாத புகழுடைய நூல்களின் சிகரம் போன்றது அன்னை.

காலிகோ பவுண்டு; பிரமைதட்டும் முகப்புத் தோற்றம்

விலை ரூ. 3—0—0

# பா ர தி

மூல ஆசிரியர் :
**சரத் சந்திரர்**

மொழி பெயர்ப்பு :
**அ. கி. ஜயராமன்**

(சுருக்கப்படாத அப்பட்டமான மொழி பெயர்ப்பு)

வங்க சர்க்காராலும், இந்திய சர்க்காராலும், இரு முறை தடை செய்யப்பட்ட இந்த நாவல் இப்பொழுது முதன் முதலாகத் தமிழில் வெளி வருகிறது.

காந்திஜியின் அகிம்ஸை மக்களின் உள்ளத்தில் வேரூன்ருத காலத்தில் நாட்டின் விடுதலைக்காக ஒரு புரட்சிக் கூட்டம் தங்கள் உயிரையே தேசத்தின் பலி பீடத்தில் பணயமாக வைத்துத் தன் போரைத் துவக்கியது.

வழி உரிமை சமிதியை நிறுவிய டாக்டர் **ஸவ்யஸாசியும்** அவரைத் தன் உள்ளக் கோயிலில் வைத்து பூஜிக்கும் **சுமித்ராவும்** நாம் மறக்க முடியாத பாத்திரங்கள். புரட்சிக் கூட்டத்தின் இதர அங்கத்தினர்களான **ராமதாஸ் தளவர்கர், கிருஷ்ணய்யர், ஹீராசிங், வீரஜேந்திரன்** முதலியவர்களின் **பயங்கரத்** திட்டங்களைப் படிக்கும்போது மயிர் கூச்செரியும்.

இந்தப் புரட்சிக் கூட்டத்தின் நடுவே இளங்காதலர்களான **பாரதியும், அபூர்வனும்** புயலில் சிக்கிய தளிர்போல் அலைபடுகிருர்கள். இன்னும் **புரட்சி மணம் செய்துகொள்ளும்** நயன **தாரா, டிக்கட் இல்லாமல் பிரயாணம் செய்யும் கவிஞன் சசி** முதலிய அபூர்வ மனிதர்களையும் இந்த நாவலில் காணலாம்.

காலிகோ பவுண்டு மூவர்ண முகப்பு

கிரவுன் அளவில் 600 பக்கங்கள்

புரட்சிகரமான நாவல் விலை ரூ. 6—0—0

பிரஞ்சு நாவல்கள்

# ரத்த விடுதி

மூலம் :

**எமிலிஜோலா, பால்ஜாக், மாப்பஸான்.**

தமிழில் :

**வாணிசரணன், ப. திருமலை, ரா. ஆறுமுகம்**

காலிகோ பவுண்டு, கலர் முகப்பு. விலை ரூ 2—0—0.

மூன்று பிரசித்தி பெற்ற பிரஞ்சு ஆசிரியர்கள் எழுதிய மூன்று பிரஞ்சு நாவல்களின் தொகுதியாகும் ரத்த விடுதி.

நம் இந்திய நாட்டுப் பண்டைய இலக்கியங்களைப் போலவே, பிரஞ்சு ஆசிரியர்களின் இன்றைய நாவல்களும், கதைகளும், மனித உள்ளத்தில் அடித் தடத்தைத் தொடுகின்றன. ரஷ்யாவுடன் இலக்கியத்திலே போட்டி போடக்கூடிய ஒரு தேசம் பிரான்ஸ்தான். பிரஞ்சு ஆசிரியர்களும் அவர்களது இலக்கியமும் மற்ற கலைகளும் கடவுளின் வழிவிட்டு விலகவில்லை என்பதே அவர்களுடைய கலை மேன்மைகளின் அடிப்படை. பிரான்ஸ் தேசத்தின் ஜீவநாடிகளாக விளங்கிய முதற் கலைஞர்கள் தான் இப் புத்தகத்தின் மூல ஆசிரியர்கள். மாப்பஸானின் விபரீத விளையாட்டு, ஜோலாவின் எள்ளி நகையாடும் சிரிப்பு, பால்ஜாக்கின் உள்ளமுருக்கும் சம்பவம் எல்லாமாகச் சேர்ந்து ரஸிகர்களை மெய் மறக்கச் செய்யும்.

" இறவாத புகழுடைய நூல்களில் " இதுவும் ஒன்று.

வங்க நாவல்

# தாயும் மகளும்

ஆசிரியர் : மொழி பெயர்ப்பு :

**சரத்சந்திரர்** **அ. கி. ஜயராமன்**

உலக அரங்கில் நடக்கும் சதுரங்க ஆட்டத்திலே தோல்வியையே கண்டறியாத கிழவர் சாகுந்தருவாயில் பச்சிளங் குழந்தையின் கையில் தமது வெற்றியின் சின்னமான வஜீரைக் கொடுத்து ஆசீர்வாதம் செய்யும் சோக உருவத்தையும், தாய்க்கு ஏற்பட்ட களங்கத்தினால் மகளின் வாழ்க்கையில்கூட கற்பு நெறி தவறி விட்டதாகக் கதைக்கும் சுற்றத்தாரின் மத்தியில், கள்ளங் கபட மற்ற யுவதியைக் கர்ப்பிணியாக விரட்டிவிட்டுத் தனியனாகி மனம் புழுங்கி, பின் தவறை உணர்ந்த கணவனின் கதையை விவரிக்கும் நாவல்.

காலிகோ பவுண்டு வர்ண முகப்பு. விலை ரூ. 2—0—0

# அவமானச் சின்னம்

அமெரிக்க நாவல்

மூலம் :
**நத்தோனியல்ஹாத்தார்ன்**

தமிழாக்கியவர் :
**ரா. ஆறுமுகம்**

மனதை உருக்கும் ஒரு சோகக் கதை. ஒரு பெண்ணின் வாழ்வைக் குலைத்து, அவளுக்குச் சாசுவதமான களங்கத்தை உண்டு பண்ணிய ஒரு இளம் பாதிரியார் தாம் செய்த தவரை நினைத்து நினைத்து உள்ளம் நொந்து, கடைசியில், எல்லோருக்கும் முன்பாகத் தாம் செய்த தவறைச் சொல்லிவிட்டு, அப்படியே தம் காதலியின் மடிமீது விழுந்து பிராணனை விடுகிறார். அந்தப் பெண்ணின் சகிப்புத் தன்மைதான் என்ன! எவ்வளவோ வற்புறுத்தியும் பலவந்தப் படுத்தியும்கூடத் தன் காதலனைக் காட்டிக் கொடுக்க மறுத்து, கடைசிவரை மௌனம் பூண்ட அவளுடைய திடசித்தம்தான் என்ன!

காலிகோ பவுண்டு விலை ரூ. 5-0-0

# பலி பீடம் (யாமா)

மூல ஆசிரியர் :
**அலக்ஸாண்டர்குப்ரின்**

மொழி பெயர்ப்பாளர்கள் :
**புதுமைப்பித்தன்**
**&**
**க. நா. சுப்ரமண்யம்**

யாரும் கண்ணை மூடிக்கொண்டுவிட்டால் உலகம் அஸ்தமித்துவிடாது. சில விஷயங்களை மறைத்தும், மறைவில் பேசியும் பெரிது பண்ணியும் அருவருத்தும் வந்திருக்கிறது உலகம். அத்தனை மறைவான விஷயங்களுக்கும், அருவருப்புக்கும் சிகரம் போன்றது விபசாரம். உலகில் மனிதன் தோன்றியது முதற்கொண்டு காமத்தை விலை பேசி வாங்கும் கயவர்கள் இருந்துதான் வந்திருக்கிறார்கள். காமத்தை விலைக்கு விற்பவர்கள் கயவர்களா? அதை வாங்குபவர்கள் கயவர்களா? என்பதில் பிரச்னை ஏதுமில்லை இருவரும் கயவர்கள்தாம்.

இது நீதி போதிக்கும் நூல் அல்ல. உள்ளதை உள்ளபடி சொல்லி அதில் வாசகர்களுக்கு அருவருப்பு ஏற்படும்படி எழுதப்பட்ட நாவல் இது. யாமா என்கிற இந்த நூல் தனிப் பெருமை வாய்ந்தது. விபசாரிகளைக் கதாநாயகிகளாக வைத்து எழுதப்பட்ட பல நாவல்கள் இருக்கலாம். ஆனால் சதை வியாபாரத்தையே விஷயமாக வைத்து தாசிக்குப் பதில் தாசித் தொழிலையே கதையின் மையமாக வைத்து எழுதப்பட்ட இந்த நூலில் ரஷ்யாவில் மட்டுமல்ல உலகத்தில் உள்ள பலிபீடங்கள் எல்லாவற்றிற்குமே நிரந்தரமான உருவம் கொடுத்திருக்கிறார் குப்ரின் என்பதுதான் இந்த நூலின் தனிச் சிறப்பு.

காலிகோ பவுண்டு. விலை ரூ. 3—0—0

ருஷ்யக் கதைகள்

# கார்க்கியின் கதைகள்

மூலம் : | தமிழில் :
---|---
**மாக்ஸிம் கார்க்கி.** | **எஸ். சங்கரன்.**

சோவியத் பூமியை தமது எழுத்தின்மூலம் திருத்திப் பண்படுத்திய எழுத்தாளர்களில் ஒருவர் கார்க்கி. மகான் டால்ஸ்டாயின் வழியைப் பின்பற்றி அவரது எண்ணங்களைப் பொன்னாக்கியவர். வாழ்க்கையில் தோல்வியின்மேல் தோல்வியாக மனம் உடைந்தவர். சமூகத்தையே மாற்றி அமைத்தாலன்றி மனிதன் மனிதனாக வாழமுடியாது என்று முடிவுக்கு வந்தவர். அதற்காகவே எழுதினார். சிறுகதை, நெடுங்கதை, கட்டுரை, சுயசரிதம், தினக் குறிப்பு இப்படிப் பலவிதங்களில் எழுத்தோவியங்களைத் தீட்டி மக்களின் மனதைப் புதுப் பாதையில் செல்லத் தைரிய மூட்டிவிட்டார். மக்கள் கார்க்கியின் இலக்கியத்தைப் புரிந்து கொண்டு விட்டபின் அவரது பேனா செங்கோலாக மாறிவிட்டது. கற்பனை உலகம், கனவு இவைகளில் மூழ்கி மயங்கி கயறு திரிக்காமல்; தமது மேதையின் எடுத்துக்காட்டாகப் பல உன்னதமான நாவல்களைச் சமைத்தார். வெளிவந்தவுடன் உலகமே புகழ்ந்தது. பிறகு சமூகத்தின் தூண்களான பெரிய மனிதர்கள் முதல், தெருவில் நடமாடும் ஜிப்ஸிப் பெண்வரை, சந்தித்துப் பழகி வாழ்க்கையின் சீர்கேட்டைப் பறை சாற்றினார். கார்க்கி தமது சிறு கதைகளின்மூலம், ருஷ்ய மக்களையே சிந்திக்கச் செய்துவிட்டார். முப்பது வருஷங்களில் கார்க்கியின் நூல் பற்பல பாஷைகளில் மொழி பெயர்க்கப்பட்டது. ஐந்தரைக் கோடி பிரதிகள் உலகம் பூராவும் விற்பனையாகி இருக்கிறது. இன்று தமிழில் கார்க்கியின் இலக்கியத்தைப் பழைய ருஷ்ய மக்கள் வாழ்க்கை பிரதிபிம்பத்தை எழுத்தோவியத்தில் காண்போம்.

**முழு காலிகோ பவுண்டு, வெண்மையான கிளேஸ் காகிதம்,**

**சுமார் 400 பக்கங்கள், நான்கு வர்ண முகப்பு ஜாக்கட்.**

**வாசகசாலைப் பதிப்பு :: விலை ரூ. 5—0—0**

விற்பனை உரிமை :

நாவல்

# சொப்பன வாழ்க்கை

ஆசிரியர் :

"ஆர்வி"

தனி மனிதனின் நெறி ஒரு முறையாக உருவாக வில்லை. வாழ்வே தன்னிச்சையாகக் காணும் சொப்பனத்தைப்போலக் காரண காரியமின்றியும், சிந்தனை—செய்வினையின்றியும், லக்ஷியமே இல்லாமல், இயற்கை நியதியைப் புரிந்து கொள்ளாமல், மனம் போனபடி வாழ்க்கை வாழ்வதற்கே என்ற முறட்டுத் தனமான எண்ணத்தைக் கொண்டதாகவும் ஆகி விட்டது.

இந்த நாவல் அத்தகைய சொப்பன வாழ்க்கையைத்தான் சித்தரிக்கிறது. நாவலைப் படியுங்கள். இன்று நம் கண் முன்னே இதில் வரும் கதாநாயகன் விசுவம், பழமையில் பற்றின்றியும், புதுமையைப் புரிந்து கொள்ளாமலும் இரண்டுங் கெட்டான் நிலையிலுள்ள பானுமதியும், மரணம் ஒன்றுதான் சாந்தியளிக்கும் என்று கணவனை உதறிவிட்டு ஊருக்குத் திரும்பிவந்த சுசீலாவையும், தூய அன்பினுல் மட்டும் கலங்கும் சுவாமியும் 'காதல்; காதல்' என்று கற்பனையான ஒன்றைத் தேடும் குமாரையும், அழகாக நம் கண்முன் கொண்டுவந்து நிறுத்தி, ஒரு கனவு உலகத்தையே சிருஷ்டி செய்து, நம்மைப் புற உணர்வின்றி 'சொப்பன வாழ்க்கையில்' ஈடுபடச் செய்துவிடுகிருர் ஆசிரியர் ஆர்வி.

சுமார் நானூறு பக்கங்கள்.

**காலிகோ பவுண்டு அழகான மூவர்ணத் தோற்றம்.**

**விலை ரூ. 4—8—0**

# வாழ்ந்தவர் கெட்டால்

ஆசிரியர்: க. நா. சுப்ரமண்யம், B. A.

ஆடம்பரமாகப் பெரிய மனிதர்கள் மாதிரி வாழப் பழகிவிட்டவர்கள் அப் பழக்கத்தை மறப்பதோ, அதிலிருந்து மீளுவதோ சிரமம். அதுவும் சிறு வயதில் பணக்காரர்களாக இருந்துவிட்டு, வாலிபப் பருவத்தில் திடீரென்று ஒரு நாள் ஏழைகளாகிவிட்டால் சமாளித்துக்கொள்வது சிரமமான காரியந்தான். ஓரிருவர் சமாளித்துக் கொண்டாலும் அவர்களால் சாதாரணமனிதர்களாக வாழ்வதென்பது இயலாத காரியம். வாழ முயன்றாலும் முடியாது. யார் கண்ணிலும் படாமல், ஏதோ குற்றம் செய்துவிட்டுப் பகல் வெளிச்சத்தில் சகோதர மனிதர்கள் கண்ணில் படாமல் பதுங்கிப் பதுங்கி இரவில் நடமாடுபவர்கள்மாதிரி ஒரு பயத்துடன் வாழத் தொடங்கிவிடுவார்கள். அப்படிப்பட்ட பரிதாபகரமான நிலைமையை, மையமாக வைத்துத்தான் ஆசிரியர் க. நா. சுப்ரமண்யம் இந்த நாவலை எழுதியுள்ளார். மறக்க முடியாத சம்பவங்கள். மனக்கண்முன் தோன்றும் கதா பாத்திரங்கள். ரஸிகர்கள் இதை அவசியம் படிக்க வேண்டும்.

காலிகோ பவுண்டு — விலை ரூ. 2 0 0

# இதய நாதம்

ஆசிரியர்: **சிதம்பர ஸுப்ரமண்யம்**

ஒரு ஸங்கீதக் கலைவாணனின் ஜீவ கதையிது. கலைகளையும் கலைஞர்களையும் கற்பனைக் கண்ணுல் நோக்கிப் பிறரும் காணும்படி செய்யும் ஆற்றல் அரிது. பிரபல பிரஞ்சு ஆசிரியரான ரோமன் ரோலந்து தன்னுடைய ஜீன் கிருஸ்தோபர் என்ற கியாதிவாய்ந்த நவீனத்தில் முதல் முதலாக ஒரு வாக்கேயகாரரின் வாழ்க்கையைச் சித்தரிக்கும் முயற்சியில் ஈடுபட்டு வெற்றி பெற்றிருப்பது ரஸிகர்கள் அறிந்த விஷயம்.

இதயநாதம் எழுதிய ஆசிரியரின் முயற்சி அதற்கொப்பாக வெற்றி பெற்றுவிட்டது. தெய்வத்தன்மை வாய்ந்த கலையை ஆத்ம ஸாக்ஷாத்காரத்திற்குச் சாதனமாக உபயோகிக்கத் துணிந்த தீரனுக்கு வாழ்க்கை செய்யும் துன்பங்களும் இன்பமாகவே திகழ்கின்றன என்பதை உலக ரீதிக்கு ஒட்டியும் மிகைப்படுத்தாமலும் காட்டுவதே ஆசிரியர் கருத்து. இந்தக் கருத்து வெற்றியடைந்திருக்கிறது என்பதே என் கருத்து. ஸ்ரீ சிதம்பர சுப்ரமண்யம் அவர்கள் பாரதீய ஸம்ஸ்கிருதி என்று தலைமுறை தத்துவமாக வழங்கிவரும் இந்தியப் பண்பாட்டிற்குத் தன் உள்ளத்தைப் பறிகொடுத்தவராகவே இங்கு விளங்குகிறார். அவருடைய நடை அமைதியும், இனிமை கலந்த ஹாஸ்யச் சுவையும், 'ஸ்வாபாவோக்தி' என்று 'ஆலங்காரிகர்கள்' கொண்டாடும் அழகும் பொருந்தி இருக்கிறது. இந்த நவீனத்தைப் படிப்பவர்கள் தாம் ஒரு சிறந்த அனுபவம் பெற்றதாகவே எண்ணுவார்கள் என்று தமது முகவுரையில் கூறுகிறார். ஹிந்து ஆசிரியர் ஸ்ரீ என். ரகுநாதன் அவர்கள்.

**மூவர்ண முகப்பு வெண்மையான காகிதம் விலை ரூ. 4 0 0**

# ஆட் கொல்லி

ஆசிரியர் :

**க. நா. சுப்ரமண்யம், B. A.** (புதிய நாவல்)

லைலா, லைலா என்று பிதற்றித் திரிந்த காதல் பைத்தியத்தைக் கதா நாயகனாக வைத்துக் கவிகள் காவியங்கள் இயற்றிவிட்டார்கள். ஆனால், இன்று நம் மிடையே, பணம், பணம் என்று வாய் ஓயாமல் ஜபித்துக் கொண்டு திரியும் ஆசாமிகள் ஆயிரக்கணக்கில் இருக் கிறார்கள், இந்த ஆயிரக் கணக்கானவர்களில் ஒருவனான சிவசங்கரன் அவர்களில் ஒருவனானன். சந்தர்ப்ப வசதிகளாலும், ஜாதக விசேஷத்தாலும், ஓரளவு சொந்த சாமர்த்தியத்தாலும் சிவசங்கரன் தன் லக்ஷியத்தை அடைந்துவிடுகிறான்; ஏராளமான பணத்துக்கு அதிபதியாகி விடுகிறான்.

பணம் சேர்க்கிற வேகத்திலே, யோக லயத்திலே, சிவசங்கரன் தன் சுற்று வட்டத்தையும் சூழ்நிலையையும் பல நாள் கவனிக்கவேயில்லை. முப்பது வருஷங்களுக்குப் பிறகு ஒரு நாள் கவனிக்க நேரிடுகிறது. அவசியம் ஏற்படுகிறது. தன்னைச் சுற்றிலும் பாலைவனமாகிவிட்டது என்பதை உணர்ந்து அவன் திடுக்கிடுகிறான். குழந்தைகளும் குட்டிகளுமாக, வாலிபர்களும் யுவதிகளுமாக, கிழங்களும் கட்டைகளுமாகக் கலகலவென்றிருந்த குடும்பத்திலே பிறந்து வளர்ந்த சிவசங்கரன் தனக்கு இனி உற்றாரில்லை, உறவினரில்லை, நண்பரில்லை என்று அறிந்து அலறுகிறான்.

க. நா. சுப்ரமண்யத்தின் நாவல்களில் சிறந்ததொன்று என்று இந்த நாவலைச் சொல்லவேண்டும். சற்றேறக் குறைய ஒரு அறுபது புது நண்பர்களை இந்த நாவலில் வாசகர்கள் சந்திக்கிறார்கள்; அத்தனை பேரும் உயிருள்ள, நம்மிடையே நடமாடும் ஆசாமிகள்தான். ரஸமான கதையாக, பரிபூரணமான ஒரு அனுபவமாக இந்த நாவல் அமைந்திருக்கிறது.

(அச்சில்)

# 1001 இரவுகள்

மொழிபெயர்ப்பு எஸ். எஸ். மாரிசாமி

திரு. எஸ். எஸ். மாரிசாமியைத் தமிழுலகம் நன்கு அறியும். ஒரு தனி மனிதன் பெயருக்குப் பத்திரிகை அல்லது புத்தகங்கள் விற்பனை ஆகிறது என்று கூற வந்தால்; அந்தப் புகழுக் குரியவர். இமயம்; பேரிகை ஆசிரியர் எஸ். எஸ். மாரிசாமிதான். இன்று தமக்கென பல ஆயிரக் கணக்கான வாசகர்களை உடையவர் அவர். காலத்துக்கேற்றவாறு, தேசத்தின் பெருமைக்கு எடுத்துக் காட்டாக; அவர் அவ்வப்பொழுது எழுதியும் மொழி பெயர்த்தும் வெளியிட்ட நூல்களைக் கவனித்தால் அது தெரியும். நிறவெறியாட்டத்தின் விளைவுகள் நிகழ்ந்து கொண்டிருக்கும் போது தென்னுப்ரிக்க இந்தியர் போரா டம். அகதிகளின் துன்பங்களையும் துயரங்களையும் தெரிந் கொள்ளத் துன்பக்கேணி, (ஜெர்மன் நாவல்) சொர்க் லோகத்திற் கெடுத்துகாட்டாக அமெரிக்காவையும் பார தேசத்தின் பண்புகளை நினைவுறுத்தும் கட்டுரை. கன களையும், ஆடம்பர வாழ்க்கை; ஜமீந்தார்களின் காதல்-கொலை வழக்குகளையும், தமது காண்டிபத்தின் (பேனு மூலம் பேரிகை கொட்டி இமயம் வரை தமிழின் புகழைப் பரப்ப எண்ணம் கொண்டவர். தமிழ் இலக்கியத்தி நிலைத்து விடவேண்டும் என்பதற்காகச் சில உயர்ந்த அம காவியங்களை மொழி பெயர்த்து வருகிறார். அவற்று 1001 ஆயிரத்தோறு இரவுக் கதைகள் தலை சிறந்தது. 10 இரவுகளின் தொடர்ச்சிகளை நாங்கள் எங்கள் தமிழ்ச்ச நிலைய வெளியீடுகளாகப் புத்தகமாக்குகிறோம். ஒவ்வொ வால்யூம்களும் விலை ரூபாய் மூன்றுதான். தங்கள் பெயை பதிவு செய்து கொண்டால் அவ்வப்பொழுது வெளிவ நூல்களைப்பற்றியும், இறவாத புகழுடைய நூல்கள் தனிக் குறிப்படங்கிய விவரப் பட்டியிலும் அனுப்புகிறோ

காலிகோ பண்டு, மூவர்ணமுகப்பு, விலை 3 0